# 52ஆம் ஆண்டு
# அமுதசுரபி - தீபாவளி மலர் '99

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே — பாரதியார்

## மலரை அலங்கரித்த கட்டுரையாளர்கள்



## மலரை அலங்கரித்த சிறுகதையாளர்கள்




ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் — பதிப்பாளர் : ஏ.வி.எஸ். ராஜா
மேலட்டை வண்ண ஓவியம் : கோபுலு (விளக்கம் பக்க எண் : 367) — மலர் ஆப்செட் அமைப்பு : சிவகுமார்

## மலரை அலங்கரித்த கவிஞர்கள்



மலரை அலங்கரித்த ஓவியர்கள்: அமரர் வர்மா, அமரர் சில்பி, கோபுலு, ஸுபா, ஜி.கே. மூர்த்தி, ஜெயராஜ், மாயா, மாருதி, ராமு, மணியம் செல்வன், அரஸ், கரோ, ஸ்யாம், சசி, ஸி.ஏ. ராமச்சந்திரன், வேதா, சிவா, சுதர்ஸன், பிரபாகர், கலைமதி, ரமணன்

பத்மாவதி தாயார் மற்றும் வைஷ்ணவத் தாயார்கள் வண்ணப்போட்டோக்கள் : டி.ஆர். சீனிவாசன்

திருவிடைமருதூர் மூகாம்பிகை வண்ண ஓவியம் : அமரர் சில்பி

ஸ்ரீ வரத எத்திராஜ ஜீயர் வண்ணப் போட்டோ : யோகா

மலரில் வெளிவந்துள்ள கதைகளில் வரும் பெயர்கள் - சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே! யாரையும் சுட்டுவன அல்ல!

# தேவா நீ வருவதென்று?

விழுப்புரத்தில் பிறப்பெடுத்த
வேதக் கருப்பொருளே!
அழுக்ககற்றி மன்பதையை
ஆட்சிகொள்ள அவதரித்தாய்.

ஆதி மத்யம் அந்தமில்லா
அத்வைத ஒரு வனிந்த
மேதினியைக் கலியகற்றி
மீட்கவந்த துன்வடிவில்

அஞ்சலென்று கரமுயர்த்தி
அருள்ததும்ப எமை நோக்கி
நெஞ்சில் ஓர் ஓவியமாய்
நின்று நடந்து கிடந்து

பலவிதமாம் கோலத்தில்
பரமன்நீ காட்சி தந்தாய்;
கலிமாய்த்த யுகபுருஷா!
காஞ்சிமுனி புங்கவனே!

மதி முகத்தைத் தரிசிக்க
மதுரக் குரல்கேட்க
இதயம் விழைகிறது;
எங்கெங்கும் நீக்கமற

நிறைந்திருக்கும் பரம்பொருள்நீ
நித்தியமாம் சத்தியமாம்
இறைவன் நீ என்றறிவோம்;
என்றாலும் பாமரர்யாம்

ஒரு தாபம் உள்ளத்தில்
உறைந்து தவிக்கின்றோம்
திருவருளால் மறுபடியும்
தேவா நீ வருவதென்று?



போட்டோ : 'க்ளிக்' ரவி

டி.வி. சுவாமிநாதன்

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீஜயேந்திர ஸரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# உயர்வான இந்தியப் பண்பு

உலகில் பல சமயங்கள் இருக்கின்றன. பல மதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மதத்திற்கும் வழிபாட்டு முறைகளும், கலாச்சார முறைகளும் வேறுபட்டே இருக்கின்றன. வரலாற்றாசிரியர்கள் எல்லாம் வரலாறு எழுதும்பொழுது கி.மு.கி.பி. அதாவது கிறிஸ்து பிறப்பதற்கு முன், கிறிஸ்து பிறந்தபின் என்றே எழுதுகிறார்கள். இதனால் கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே மதம், கலாசாரம் எல்லாம் இருந்திருக்கிறன என்று தெரிகிறது. அந்தக் கலாசாரம் தான் இன்னும் இருந்து கொண்டிருக்கிறது இந்தியாவில். உலகம் முழுவதும் இருந்திருக்கிறது. இன்றும் இருக்கிறது. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னும் இருந்திருக்கிறது. பின்பும் இருக்கிறது.

இந்தியக் கலாசாரம்தான் உலகத்திலுள்ள அனைத்து மக்களுக்கும் அமைதியையும் சாந்தியையும் அளிக்கிறது. இந்தியக் கலாசாரத்தினால்தான் மக்களுடைய ஒழுக்கமும், பண்பாடும், வியாபாரமும் கூட சிறப்பாக நடைபெறுகிறது. ஒரு கோயில் என்று எடுத்துக் கொண்டால், அந்தக் கோயிலிலே விக்ரஹம் இருக்கின்றது. அந்த விக்ரஹங்கள் செய்யக்கூடிய ஆட்களுக்கு வேலை கிடைக்கிறது. விமானங்கள், கோபுரங்கள் போன்றவற்றிலே பொம்மைகள், சுதை வேலைகள் இருக்கின்றன. அதனால் பல பேருக்கு வேலை வாய்ப்பு கிடைக்கிறது. மரவேலைப்பாடுகள் கொண்ட பலவிதமான கதவுகள் இருக்கின்றன. அவற்றின் மூலமாகப் பலருக்கு வேலை கிடைக்கிறது. ஸ்வாமிக்கு தங்கம், வெள்ளியில் ஆபரணங்கள் செய்யப்படுகின்றன. அதைச் சார்ந்தவர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படுகிறது. நாதஸ்வரம் வாத்யம் போன்றவை இசைக்கப்படுகின்றன. அந்தக் கலைஞர்களுக்கு இதனால் வேலைவாய்ப்பு கிடைக்கிறது. பகவான் உருவ வடிவத்தில் இருப்பதனால் அதற்கு அபிஷேகம், அலங்காரம், அர்ச்சனையெல்லாம் செய்யப்படுகின்றன. இதனால் மளிகை சாமான் வியாபாரி, பூ கட்டுபவர்; தேங்காய், பழம் விற்பவர் அனைவருக்கும் மக்கள் மூலமாக வியாபாரம் நடைபெறுகிறது.







விசேஷ தினங்களில் ஊர்வலம் நடைபெறும். அன்றைய தினத்தில் ஊர் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி பகவானை தரிசனம் செய்வார்கள். அதனால் மக்களின் ஒற்றுமைக்கும் கோயில்கள் உதவியாய் இருக்கின்றன. இந்தியக் கலாசாரப்படி உடை அணிதல், உணவு அருந்துதல் இவையெல்லாம் கூட எளிமையான மக்களுடைய வாழ்க்கைக்கு உதவுகிறது. ஆண்டுதோறும் இவற்றின் பலவிதமான பண்டிகைகள், விரதங்கள் வருகின்றன. இவற்றின் மூலம், எல்லாருக்குமே விசேஷ உடை அணிவதற்கும், விசேஷ உணவு அருந்துவதற்கும், உற்சாகமாக சந்தோஷமாக இருப்பதற்கும் பண்டிகைகள் உதவுகின்றன. ஏகாதசி, சஷ்டி, நவராத்ரி, சிவராத்ரி போன்ற விரதங்கள் மூலமாக உணவு கட்டுப்பாடு ஏற்பட்டு உடல் நலம் காக்கப்படுகின்றது. நதிகளில் அநேக விசேஷ நிகழ்ச்சிகள் நடைபெறுகிறதால் பல லட்சக்கணக்கான மக்கள் வந்து ஸ்நானம் செய்து தங்களுடைய பாபங்களைப் போக்கிக் கொண்டு புனிதத்தைப் பெறுகிறார்கள்.

குடும்பத்திலும் தாத்தா, பாட்டி, அப்பா, அம்மா, பிள்ளை, பேரன், பேத்தி முதலிய பாரம்பரியத்தின் மூலம் பரஸ்பரம் பிரியமும் அன்பும் ஒத்துழைப்பும் ஒற்றுமையும் இந்தியக் கலாசாரத்தில் தான் இருக்கிறது. பிறந்தது முதல் இறக்கும் வரை ஜாதக கர்மா, பெயர் வைப்பது, அன்னப்பிராசனம், முடிவைப்பது, உபநயனம், கல்யாணம் மற்றும் வீட்டில் நடக்கும் எல்லாவிதப் பிறப்பு, இறப்பு சடங்குகள் அனைத்திற்கும் அக்னி சாட்சியாகவே காரியங்கள்

கி. சிங்கார வடிவேல்



பாரதி...!!
தமிழ்ச் சொற்களால் தாய்நாட்டை
நிர்மாணித்த தமிழ்ச் சுடரே!

ஐம்பது ஆண்டுக் கால
விடுதலைப் பயிரின்
அறுவடையைப் பார்!

நீ விதைத்த சொற்கள்
வீரியம் உள்ளவைதான்...!
விதைத்த இடம்தான்
கட்டாந்தரை...!

## இரண்டாவது போகம்...

சுதந்திர அறுவடை
பார்க்கும் முன்பே
மண்ணை உயிர்ப்பிக்க
மரணத்தை எதிர்கொண்டவன் நீ...

மண்ணுக்குள் தவமிருந்து
மறுபடியும் வருவாயென
இறந்தபோது கூட
எவரும் வரவில்லை
இறுதி யாத்திரைக்கு...

எட்டயபுரத்து மண்ணுக்குள்ளிருந்து
எழுந்து வா பாரதி!
புதிய நூற்றாண்டில்
எங்களின்
எண்ண வயல்களில்
உன் சொற்களை
மீண்டும் விதைத்துப் பார்
இது இரண்டாவது போகம்...
ஏதாவது விளையும்...!

நடத்துவது இந்தியக் கலாசாரத்தின் ஒரு முக்கிய அம்சம். கடவுளை வழிபாடு செய்யும் வகையிலும், எங்கும் நிறைந்துள்ளவராகவும் உருவம் உள்ளவராகவும், அவதாரம் உள்ளவராகவும், எல்லா உயர்ந்த வஸ்து களிலேயும் உயர்ந்தோர்களிடமும் இருப்பவராகவும் காணக்கூடிய செயல், வணங்கக்கூடிய செயல், தியானிக்கக்கூடிய செயல் இந்தியக் கலாசாரத்தில் மாத்திரமே இருக்கிறது. ஏழைகளுக்கு உணவளிப்பது, உயிரினங்களைக் காப்பது, தெய்வங்களுக்கு அன்னம் படைப்பது எனப் பலவகை களிலும் உணவைக்கூட சமுதாயப்பணி கூட, சமயப் பணியாக, ஆன்மிகப்பணியாக காட்டிக் கொடுப்பது இந்தியக் கலாசாரம். கல்வி பயில்வதும் வெறும் எழுத்தறிவுள்ளதாக மாத்திரம் அல்லாமல் 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு' என்று கல்வியின் மூலமாக ஆன்மிகத்தையும், நல்லொழுக் கத்தையும் வளர்க்கிறது இந்தியக் கலாசாரக் கல்வி.

தான் மாத்திரம் நன்றாக வாழவேண்டும் என்ற நினைப்பைத் தவிர்த்து 'எல்லாரும் இன்புற்றிருப்பது தவிர வேறொன்று அறியேன் பராபரமே' என்பது இந்தியக் கலாசாரம். மொழிவேறு, உணவு வேறு, உடை வேறாக இருந்தாலும் தாங்கள் செய்யும் பணிகள் எல்லாம் ஒன்றாகவே உணர்த்திக் காட்டி, இராமேஸ்வரம் முதல் காசிவரை, கன்னியாகுமரி முதல் காஷ்மீர் வரை ஆன்மிக ஒற்றுமையைப் போற்றுவது இந்தியக் கலாசாரம்.

இந்தியாவில் பலவிதமான பண்டிகைகள் நடை பெற்றாலும் ஒவ்வொரு பண்டிகைக்கும் ஒவ்வொரு மாநிலத்தில் விசேஷம் உண்டு. ஓணம் பண்டிகை கேரளத்திலும், பொங்கல் பண்டிகை தமிழ்நாட்டிலும், யுகாதி பண்டிகை ஆந்திரம், கர்நாடகம், மகாராஷ்டிரத்திலும் ஹோலி பண்டிகை வடநாட்டிலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. ஆனால் தீபாவளி பண்டிகை இந்தியா முழுவதும் பலவகைகளிலும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. குபேர பூஜையாகவும் கொண்டாடு கிறார்கள் பலர். புதுக் கணக்கு எழுதி பலர் கொண்டாடுகிறார்கள். புது உடைகள் உடுத்திக் கொண்டாடுகிறார்கள். கங்கா ஸ்நானத்திற்கு முக்கியத் துவம் கொடுத்து 'கங்கா ஸ்நானம் ஆயிற்றா?' என்று ஒருவருக்கொருவர் கேட்டுக் கொண்டாடுவார்கள். இப்படி இந்தியக் கலாசாரத்திற்கு எடுத்துக்காட்டாக உள்ளது தீபாவளித் திருநாள்.

இந்த நாளில் அசுர குணங் கொண்ட தீயசக்தியான நரகாசுரனை அழித்து, தெய்வசக்தியை மலரச் செய்தார் கிருஷ்ணபரமாத்மா. நாமும் இந்நன்னாளில் பரமாத்வைத் தியானித்து, நம்மிடமுள்ள தீய சக்திகளையும் குணங் களையும் விலக்கி, தெய்வ சக்தியான ஆன்மிக ஜோதியை நம்முடைய வாழ்வில் பெறப் பிரார்த்திப்போமாக!

# அன்பு எனும் ஒளியை ஏற்றுங்கள்

ஸ்ரீபெரும்புதூர் - ஸ்ரீ வரத எதிராஜ ஜீயர்

பாரத தேசத்தில் நம் தென்னிந்தியா போற்றத்தக்கது. காரணம், நம் தென்னிந்தியா நாகரிகத்திற்கும் வேத வேதாந்தத்திற்கும் அடிப்படையான விஞ்ஞானமாகும். இப்படிப்பட்ட தேசத்தில் இன்று தீபாவளி வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

தீபாவளி என்பது தீபமும் ஒளியும் ஆகும். தீபம் என்றால் விளக்கு. விளக்கு என்றால் சொல்வதைப் புரியும்படியாகச் சொல்வது என்றும் அர்த்தம் கொள்ளலாம். இருளைப் போக்கக்கூடிய ஒளியைத் தருவது என்றும் அர்த்தம் கொள்ளலாம்.

இன்று நாட்டில் இருளைவிடப் பயங்கரமான தொல்லைகள், ஆபத்துகள் இருக்கின்றன. ஜாதிக் கலவரங்கள், மதச் சண்டைகள், வன்முறைகள் பெருகிவிட்டன. ஆகவே இந்தத் தீபாவளி நன்னாளில் இப்படிப்பட்ட இருளை ஒழிக்கக்கூடிய ஒளியை நாம் ஏற்ற வேண்டும்.

இந்த ஒளி, தீபாவளியன்று மட்டும் ஏற்றக்கூடியதன்று. தீபாவளியன்று ஏற்றும் ஒளி வளர்ந்து கொண்டே இருக்கவேண்டும். அதன் ஜுவாலை, பிரகாசம், சுடர் விட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

இன்று வன்முறைகளுக்கும், ஜாதிக் கலவரங்களுக்கும் காரணம் என்ன? ஒவ்வொருவரும் தாம் மட்டும் சௌக்யமாக இருக்க வேண்டும் என்று நினைப்பதுதான். எவ்வளவுக்கெவ்வளவு வசதிகள் பெருகுகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு துன்பங்களும், துயரங்களும் பெருகிக்கொண்டே போகின்றன.

இவற்றை எப்படிப் போக்குவது?

அன்பு எனும் விளக்கையும் சேர்த்து ஏற்ற வேண்டும். அன்பு என்றால் என்ன? பக்தி! அன்பு எல்லாருக்கும் இருக்கக் கூடியது. முக்கியமாக தாய் அன்பு இல்லாதவர்கள் இவ்வுலகில் இல்லை. அந்தத் தாய் அன்பே, பக்தி எனலாம். அப்படிப்பட்ட அன்புடன் கூடிய ஞானச்சுடர் விளக்கை இந்தத் தீபாவளித் திருநாளில் ஏற்ற வேண்டும். அப்போதுதான் இருள் அகன்று பிரகாசமான ஒளி நம் அனைவருக்கும் கிடைக்கும்.

இந்த நன்னாளில் எல்லா மதத்தினருக்கும், எல்லா சமயத்தினருக்கும், எல்லா நாட்டினருக்கும் இந்தத் துறவி, ஜீயர் வேண்டிக்கொள்வது, எல்லாரும் சுபிட்சமாக இருக்க வேண்டும் என்பதேயாகும்.



# கோவிலூர் ஆதீனம் — குன்றக்குடி பெரியபெருமாள்

உய்யும் வழி உணர்த்தும் தவத்திரு உகந்த லிங்ககுரு சுவாமிகளிடம், இளைஞர் முத்துராமலிங்கம், வேதாந்த சாத்திரங்கள் பதினாறையும் கசடறக் கற்றார். பதினாறாவது ஞான நூலின் பெயர் வாசிட்டம். வாசிட்டம் படிப்பது, வேதாந்தத்தை முழுமையாகப் படித்துத் தெளிந்து, உணர்ந்து கொண்டதற்கு ஓர் அறிகுறி. எனவே வாசிட்டம் படித்ததும், மாணவர் தன் குருவுக்குப் பணிவோடும், நன்றிக் கனிவோடும் 'வாசிட்ட சமாப்தி' என்னும் ஆராதனை நிகழ்ச்சியை அமைத்து, காணிக்கை செலுத்துவது மரபு.

முத்துராமலிங்கம் தமது தந்தை யாரிடம், ''அப்பச்சி! சுவாமிகளிடம் வாசிட்டம் படித்துக் கொண்டிருக் கிறேன். வேதாந்த சாத்திரங்களைப் பயின்று நிறைவு செய்ததும், குரு வுக்குக் காணிக்கை செலுத்துவது வழக்கம். 'வாசிட்ட சமாப்தி' அமைத்து, சுவாமிகளை ஆராதித்து, காணிக்கை அளிக்கவேண்டும். அதற்குக் கொஞ்சம் பணம் வேண்டும்'' என்றார்.

தந்தையார் ஒன்றும் பேசாது உட்கார்ந்திருந்தார்.

''அப்பச்சி! உங்களைத்தான். பதிலே சொல்லாமல் இருக்கக் காரணந்தான் என்ன?'' என்றார் முத்துராமலிங்கம்.

அப்போதும் வாய் திறவாமலே அமர்ந்திருந்தார் தந்தை.

''நான் சொல்வது, கேட்பது ஒன்றும் காதில் விழவில்லையா?'' என்றார் மீண்டும் முத்துராமலிங்கம்.

பேசாமலே அமர்ந்திருந்தார் தந்தை.

சற்றே சினம் பொங்க, ''காது செவிடாகிப் போய்விட்டதா?... போகட்டும்...'' – முத்துராமலிங்கம் சொல்லி முடித்ததும், அந்த நொடியி லேயே தந்தையாரின் செவிகள் கேட்கும் ஆற்றலை இழந்தன. உடனே தந்தையார் உகந்தலிங்க குருவிடம் ஓடி, நடந்ததைக் கூற, முத்துராம லிங்கத்தை சுவாமிகள் அழைத்து, ''உன் பிதாவுக்கு ஏற்பட்ட வருத்தம் தீர, திருநீறு கொடு'' என்றார். கொடுத்தார் முத்துராமலிங்கம்; குறை, தந்தையாரை விட்டு நீங்கியது.

பின்னர் சொல்லவும் வேண்டுமா? வாசிட்ட சமாப்தி நிகழ்ச்சி ஜாம் ஜாம் என நடைபெற்று நிறைவு பெற்றது.

பண்பாட்டுணர்விலும், பக்தி நெறி யிலும் தமிழ்நாட்டின் தலைசிறந்த சமூகமாகப் போற்றப் பெறும் புகழார்ந்த நகரத்தார் சமூகத்தில் பிறந்தவர் முத்துராமலிங்கம். அப்பெருமகனாரைப் பெற்றுப் பெரும் பேறு கொண்டவர்கள் காரைக்குடியில் வாழ்ந்த மெய்யப்ப செட்டியார் – வள்ளியம்மை ஆச்சி தம்பதி ஆவார்கள்.

மெய்யப்ப செட்டியார் தஞ்சை மாவட்டம் சிக்கல் என்னும் ஊரில் தொழில் செய்து வந்தபோதுதான் அவரது புதல்வர் முத்துராமலிங்கம் அருகிலுள்ள பொருள் வைத்த சேரியில் வாழ்ந்த தவத்திரு உகந்தலிங்க சுவாமி களிடம் வேதாந்த சாத்திரங்களை வேகத்துடனும், தாகத்துடனும் பயின் றார். ஒருமுறை உகந்தலிங்கரின் மனைவியார், மயில் குஞ்சுகள் வேண்டு மென்றும், காரைக்குடிப் பகுதியில் உள்ள காடுகளில் மயில்கள் மிகுதி எனக் கேள்விப்பட்டிருப்பதாகவும் முத்துராமலிங்கத்திடம் கூறினார். அவ் வேண்டுகோளை நிறைவேற்ற, காரைக்குடிக்கு வந்து, இன்றையக் கோவிலூர் அமைந்துள்ள காட்டுப் பகுதிக்கு முத்துராமலிங்கம் ஒரு நண்பருடன் சென்றார். அந்தக் காட்டுப் பகுதியில் கூரைக் கொட்டகைக்குள்,





சித்திரங்கள்: ஜெ.பிரபாகர்



செம்பூரான் கல்லாலான திருநெல்லை நாயகி அன்னையாருடன் கொற்றவாள் ஈசுவரர் கோயில் இருப்பதைக் கண்டார் முத்துராமலிங்கம். அந்த நாள் முதல், அங்கே எழுந்தருளியிருந்த திரு நெல்லை அன்னையும், கொற்றவாள் பெருமானும் முத்துராமலிங்கத்தை ஆட்கொண்டனர். அடிக்கடி அத்திருக் கோயிலுக்குச் சென்று, வழிபாடு செய்து, அன்னையை – பெருமானைத் – தன்னை மறந்து தரிசித்து மகிழ்ந்த முத்துராமலிங்கம், அத்திருக்கோயி லைக் கல் திருப்பணியாக உருவாக்க வேண்டுமென உறுதி பூண்டார். வட நாட்டிலிருந்து, இராமேச்சுவரத்திற்கு யாத்திரை வந்த ஒரு யோகி, முத்துராம லிங்கத்தைப் பார்த்தபோது, "இவர் அவதார புருஷர்! உலகுக்கு உப தேசிக்க வந்த ஆண்டவர்!" எனக் கரம் கூப்பி வணங்கினார். அன்று முதல் நகரத்தார் முத்துராமலிங்கத்தை 'ஆண்டவர்' என்றே அழைத்து மகிழ்ந்தனர்.

ஆண்டவரின் அருளாற்றல் பல அற்புதங்களை நிகழ்த்தி, மக்களின் மதிப்பை, மரியாதையை உருவாக்கம் கொள்ள வைத்தது, காரைக்குடியில் திருக்கோயில் கொண்டுள்ள மிகு பழைமை கொண்ட கிராம தேவதை கொப்புடைய அம்மன், ஆண்டவரின் விருப்பங்களை வெகு விரைவில் நிறைவேற்றி, நினைக்கும்போதெல்லாம் நேராகத் தோன்றி அருள் பாலிப்ப தாய்க் கூறுவர்.

ஆண்டவரின் மாணாக்கருள் ஒருவ ரான காரைக்குடி அண்ணாமலை ஐயாவிற்கு மரபு தழைக்கவில்லை. ஆம், மகப்பேறு வாய்க்கவில்லை. எனவே சுவீகாரம் செய்துகொள்ள முயன்ற போது "நானே உனக்குப் பிள்ளையாகி றேன்!" என்றார் ஆண்டவர். மிக மகிழ்ந்து போனார் அண்ணாமலை ஐயா. எனவே அண்ணாமலை ஐயா தேடி வைத்திருந்த திரளான செல்வம் அனைத்தும் ஆண்டவருக்கு உரிமை யாயின. உரிமையான செல்வத்தைக் கொண்டும், நகரத்தார் அளித்த நன்கொடைகளை வைத்தும், ஆண் டவர் தமது உள்ளத்துள் ஆத்மார்த்த மூர்த்திகளாகத் திகழ்ந்த திருநெல்லை நாயகி உடனாய கொற்றவாள் ஈசுவரர் திருக்கோயிலை, உறுதி கொண்ட வண்ணம், கல் திருப்பணியாகக் கலைச் செறிவுடன் கட்டுவித்தார்.

சம்ஸ்கிருத மொழியில் பண்டித ராகவும், தமிழ் மொழியில் புலவராகவும் விளங்கிய ஆண்டவர் பெருமான், ஞானபரம்பரையை உருவாக்க, கோவி லூரில் சிருங்கேரி ஆதி சங்கராச் சாரியாரின் மரபில் வந்த அருளாளர் களின் கொள்கைகளையும், கோட்பாடு களையும் பின்பற்றி, வேதாந்த மடத்தை நிறுவி அருளினார். வேதாந்த வட மொழி நூல்கள் அனைத்தையும், தமிழ் மொழியில் மாற்றம் செய்து, அனைவரும் – தமிழறிந்த எல்லாரும் – எளிமை யாகக் கற்றுத் தெளிய வேண்டுமெனக் கருதிய ஆண்டவர், "ஞான வழியில் ஈடுபாடு கொள்ள, மனப்பக்குவமே தகுதிக்கு உரியது. வேதாந்தத்தைப் பயிலவும், பயின்று பக்தி நெறியில் ஈடுபடவும் குலமோ, சாதியோ, சம்பிர தாயங்களோ தடையாக இருப்ப தில்லை" என மொழிந்து, வேதாந்தத் தைப் பொதுமையாக்கிய புதுமைச் சித்தராவார்.

கோவிலூர் ஆதீனத் திருமடா லயத்தை 1847இல் உருவாக்கிய ஆதி முதல்வரும், அருட்செல்வருமாகிய ஆண்டவர் பெருமான் முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகள், ஆதீனத்தை நாளும் பொழுதும் ஞான வேள்வி நடத்தும் நல்லறிவுக் கூடமாக வளர்த்து, ஞான வேட்கை மிக்க அடியவர்களும், அன்பர்களும் நாடி வந்து, கற்றுத் தெளியும் வேதாந்தக் கல்வி வித்தகக் குருபீடமாக விளங்க வைத்தார். நகரத்தார்களின் பேராதர வாலும், பெருங்கொடையாலும் ஆதீனத் திருமடாலயத்தைத் தனித்தன்மை கொள்ள வைத்த ஆண்டவர், கோவி லூர் கொற்றவாள் ஈசுவரர் திருக் கோயிலை அனைவரும் கண்டு

மகிழவும், பக்தி கொண்டு போற்றவு மான 'தனிப்புகழ்' பெற்றிடச் செய்தார்.

தமிழகத்திலுள்ள திருத்தலங்கள் பலவற்றிற்குத் திருப்பணிகள் செய் வித்து, சத்திரம், பாடசாலை, திருக் குளம், நந்தவனம், தண்ணீர்ப் பந்தல் அமைத்து, பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகம் நிறுவி நகரத்தார் சமூகம் பெருங்கீர்த்தி பெறுவதற்கும், இந்திய நாட்டின் புண்ணியத் திருத் தலங்களில் எல்லாம் செய்வித்துள்ள அறப்பணிகளால் பெரும்புகழ் அடை வதற்கும், வணிகம் கருதிக் குடியேறிய அயல் நாடுகளிலெல்லாம் ஆற்றியுள்ள அறச்செயல்களால் தனிப்பெருமை கொள்வதற்கும் ஆண்டவர் பெருமான் முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகள், நகரத்தார் சமூகத்திற்கு அருளிய ஊக்கமும், உற்சாகமும், உரிய வழி காட்டலுமே காரணங்களாக அமைந்தன என்பது வியந்து போற்றத் தக்கது; நயந்து பாராட்டத்தக்கது.

திருவருள் விளங்க, ஞானப் பேரொளியாய்த் திகழ்ந்த ஆண்டவர் பெருமானை அடைக்கலமாக அடைந்து, குருபரன் குற்றேவல் செய்து, ஞான அநுபூதி பெற்ற அடியார்கள் பலர், ஆங்காங்கு தமக்குற்ற திருத்தலங் களில் திருமடம் அமைத்து, கோவிலூர் மரபினை விளங்கச் செய்து வருகின் றனர். கோவிலூர் மரபினை ஒளி வீசச் செய்யும் உயர் திருமடங்கள், தமிழகத் திலும், அருகிலுள்ள மாநிலங்களிலும் ஏறத்தாழ அறுபது உள்ளன.

வடமொழி தெரியாதவர்கள், வேதாந்தம் படிப்பதற்கு வழி வகை கண்ட திருமடம் என்ற தனிப்பெருமை பெற்ற கோவிலூர் ஆதீனம், வேதாந்த தத்துவ வரலாற்றில் தனி ஓர் அத்தி யாயம் பெற்றுச் சிறந்துள்ளது. கலயத்தில் கஞ்சியுடன் கோவிலூ ருக்கு வந்து மாணாக்கர் பலர், வேதாந்தம் படித்தனரென்ற செய்தி, படித்தவர்களுடைய ஆர்வத்தையும், படிப்பித்தவர்களின் சிறப்பையும் அறிய வைக்கிறது. 'கோவிலூர் மண்டலி' எனத் துறவிகள் வடநாட்டு யாத் திரை செல்கிறபோது சென்ற இடமெல் லாம் சிறப்பாக வரவேற்று, மரியாதை செய்வது மரபு.

தவத்திரு ஆண்டவர் பெருமான் முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமி களால் தொடங்கி வைக்கப் பெற்ற கோவிலூர் திருநெல்லை அம்பாள் சமேத கொற்றவாளீசுவரர் ஆலயத் திருப்பணி, பின்னே ஆதீனத்தில் அருளாட்சி செய்த கோவிலூர் திருமடாலயத் தலைவர்கள் சிலரால், திருக்குளம், மைய மண்டபம், நுழை வாயில் ரதக் கூடங்கள், வளைவுடன் கூடிய ரத மேருகள், திருத்தேர், திருவாபரணங்கள் எனப் பல்வேறு சிறப்புகளுடன் 'கோவிலூர்' என்னும் திருப்பெயரின் பொருள் முழுதுந் திகழப் பெரும் பணியாற்றி நிறைவு செய்யப் பெற்றது. ஆதீனத்தில் மூன் றாவதாகப் பட்டமேற்று அருளாட்சி மேற்கொண்ட தவத்திரு கருணாநிதி சுவாமிகள் அழகான மைய மண்டபத் துடன் திருக்குளம் அமைத்ததும், ஐந்தாவதாகப் பட்டமேற்ற 'திருக்களர் ஆண்டவர்' என்னும் தவத்திரு வீரசேகர ஞான தேசிக சுவாமிகள், மடாலயத்தைப் பிரமிக்கத் தக்க கட்டட அமைப்பாகப் பெருமை பெறச் செய்வித் ததும், ஆலயத்தை அழகொளிரும் கலை நுட்பக் களஞ்சியமாக உரு வாக்கி, திருக்குட நீராட்டை நடத் தியதும் நினைக்கத் தக்கவை; என்றென்றும் நெஞ்சாரப் போற்றத் தக்கவை.

எட்டாவது பட்டமாக அருளாட்சி மேற்கொண்ட தவத்திரு சோமசுந்தர ஞான தேசிக சுவாமிகள், உயர் நீதிமன்றம் சென்று கோவிலூர் ஆதீனத்தை இந்து சமய அறநிலையத் துறையின் கட்டுப்பாட்டிலிருந்து, விலக்களிக்க ஆவன செய்ததும், தமிழ் எழுத்தாளர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த ஒன்பதாவது பட்டம் தவத்திரு இராமநாத ஞான தேசிக சுவாமிகள், கோவிலூர் கொற்றவாளீசுவரர் ஆலயத்தைப் பழுது பார்த்துத் திருப்பணிகளாற்றி எழுபதாண்டுகளுக்குப் பின்னர் திருக்குடமுழுக்குச் செய்வித்ததும், 'ஆண்டவர் மன்றம்' அமைத்ததும் எடுத்து இயம்பத் தக்கவை; எண்ணி மகிழத்தக்கவை.

**கோ**விலூர் திருமடாலயத்தின் பன்னிரண்டாவது ஆதீனகர்த்தராக எழுந்தருளியுள்ள தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள் 'கோவிலூர் ஆண்டவர்' என வழங்கப்பெற்ற தவத் திரு முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் மகன் வழி ஆறாவது தலைமுறையைச் சார்ந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்க சிறப்புச் செய்தி. ஏனெனில் இதுவரை கோவி லூர் ஆதீனத்தில் அருளாட்சி செய்







தவர்கள் எவரும், ஆதி குரு முதல்வர் ஆண்டவரின் மரபைச் சார்ந்தவர்கள் அல்லர். தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகளுக்கே அத்தகைய நல்வாய்ப்பு, நற்பேறாகக் கிட்டியுள்ளது.

பாரத நாட்டின் பண்பாட்டு உணர்வை, கலாச்சார மேம்பாட்டை உலகளாவிய அளவில் உன்னதப் படுத்தும் உயர் பணியில் தன்னை அர்ப்பணித்துத் தொண்டாற்றிய அன்னை ருக்மணி அருண்டேலின் அணுக்க அலுவலராகப் பல்லாண்டு கள் பணியாற்றிச் சென்னை 'கலா க்ஷேத்திரா'வோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த 'நாச்சியப்பன்' என அழைக்கப் பெற்ற நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள், உலகம் அறிந்த நிழற்படக் கலைஞர் பன்னிருவருள் ஒருவராகப் புகழப் பெற்றவர். ஐம்ப தாண்டுகள் அனுபவம் செறிந்த அச்சுக்கலை வல்லுநராகப் பெருமை அடைந்தவர். நாட்டிய, நாடகங் களுக்குச் சீரிய வகையில் ஒளியூட்டிச் சிறந்த கீர்த்தி ஈட்டியவர். கலாக்ஷேத் திரா மாணவராக, பணியாளராக, கலைஞராக, அச்சக உரிமையாளராக அன்னை ருக்மணி அருண்டேல் அறக்கட்டளைச் செயலாளராக, ஏறத்தாழ அறுபதாண்டுகள் தொடர்பு கொண்டிருந்த சுவாமிகள், தமது எழுபத்திரண்டாம் வயதில் (1995) காவி உடுத்தித் துறவு பூண்டு, கோவிலூர் ஆதீனகர்த்தராக எழுந்தருளியபோது இருபதாண்டுகளுக்கு முன்னர் காஞ்சி மகாசுவாமிகள் பெரிய பெரியவர் மொழிந்த அருட்சொற்கள், சுவாமி களின் நினைவில் நின்று, நெகிழ்ச்சி யூட்டி மகிழ்ச்சியளித்துச் சிலிர்க்கச் செய்தனவாம்.

ஆன்மிகச் செல்வர் டி.எஸ்.பால கிருஷ்ண சாஸ்திரிகள் 1975ஆம் ஆண்டு, காஞ்சி மகாசுவாமிகளிடம் நாச்சியப்பனை அறிமுகப்படுத்திய போது, "நகரத்தாரில்லையோ? கோவி லூர் மடத்தோட சம்பந்தம் வெச் சுக்கோ!" என்றாராம் காஞ்சிப் பெரிய பெரியவர். மறைச்சொற்கள் அல்லவா? குறை சிறிதுமின்றி நிறை வேறிவிட்டன!

"பூரண ஞானம் பொலிந்த நன்னாடு" என்பான் மகாகவி பாரதி. அத்தகைய பூரணத்தைப் பெற்றிட நமது பண்டைய கலாசாரங்களை, மங்கிப் போகாமல், மறைந்து போகாமல், வளர்த்துப் பொலிவூட்டுவது காலத்தின் கட்டாயம் என இயம்பும் சுவாமிகள், அந்தக் கட்டாயத்தைச் செயற்படுத்த, தாகத்துடனும், வேகத்துடனும் செய லாற்றி வருகின்ற அருமை–கோவிலூர் ஆதீனம் பெறப் போகும் தனிப்பெருமை!

குழந்தைகளைப் பயிற்றுவிப்பதிலே தனிக்கவனம் கொள்ள வேண்டு மெனக் கருத்துக் கொண்டுள்ள தவத்திரு நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள், கோவிலூரில் அருளாட்சி மேற்கொண்ட அதே நாளில், ஆதீனச் சார்பில் மழலையர் பள்ளி ஒன்றைத் தொடங்கி மனம் மகிழ்ந்தார். வேதா கமப் பாடசாலை, திருமுறைக் கல்லூரி, நாதஸ்வர, தவில் கல்லூரி, திருவா பரணக் கல்லூரி, ஆலய அலங்காரக் கலைப் பொருள் கல்லூரி எனத் திருக்கோயில் கலாசாரம் ஓங்கவும், உயரவுமான பயில்விப்பும், பயிற்சியும் கொண்ட அமைப்புகளை உருவாக்கி யுள்ளார். இவையனைத்தையும் ஒருங் கிணைத்து நிகர் நிலைப் பல்கலைக் கழகமாக (DEEMED UNIVERSITY) வடிவமைக்க, பூர்வாங்கப் பணிகள் நடைபெற்றுக் கொண்டுள்ளன. செங்கல்பட்டு அருகில் 450 ஏக்கர் நிலப்பரப்பிலும், அதன் தலைமைப் பதியாக கோவிலூரில் 40 ஏக்கர் நிலப் பரப்பிலும், 'சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழகம்' உருவாக்கம் பெற, உரிய வேலைகள், சுவாமிகளின் பேரார்வத்தோடு நடந்து வருகின்றன. தொன்மைக் காலம் முதலே தொடர்ந்து வருகின்ற என்றும் நிலைக்கத் தக்க நன்னடத்தையும், சீலமும், பண்பாடும் செறிந்த வாழ்க்கை முறையே சனாதன தர்மம் என எடுத்துரைக்கும் கோவிலூர் ஆதீன கர்த்தர், "இந்தியப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம்" (INDIAN INSTITUTE OF INDOLOGY) ஒன்றைத் தொடங்கிட முனைந்திருக்கிறார்.

சுவாமிகள் கடந்த ஜூன் மாதத்தில், வட அமெரிக்கச் சுற்றுப் பயணம் மேற்கொண்டபோது, அங்குள்ள மக்கள் ஒன்று குழுமி உரையாடவும், இறை யுணர்வோடு நமது புராதனக் கலா சாரங்களை மறந்து விடாமல் வளர்த்துச் செழிக்கச் செய்யவும், நியூயார்க் பெருநகரிலிருந்து 65 கி.மீ தொலைவிலுள்ள 'வார்த்விக்' என்னு மிடத்தில் 40 ஏக்கர் நிலத்தை வாங்கியுள்ளார். கோவிலூர் ஆதீனக் கிளை மடம் ஒன்று அங்கே தோன்று வதற்கு ஆவன அருளியுள்ளார் அருள் ஞானி நாச்சியப்ப சுவாமிகள்.

சென்னை மேற்கு மாம்பலம், குப்பைய செட்டித் தெருவில் கோவி லூர் கிளை மடமாக மூன்று மாடிக் கட்டடம் ஒன்று உருவாக்கம் பெற் றுள்ளது. அண்மையில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், இளைய பீடாதிபதி சங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆகிய இரு பெரும் அருளாளர்களும் திறப்பு விழாவில் பங்கேற்றனர்.

கோவிலூர் ஆண்டவர் அறக் கட்டளை, கோவிலூர் மடாலய அறக்கட்டளை, சனாதன தர்ம உலகப் பல்கலைக் கழகம், இந்தியப் பண்பாட்டு ஆய்வு நிறுவனம் ஆகிய அமைப்புகளின் பணிகளோடு, கலாக்ஷேத்திரா பதிப்பக வெளியீட்டு வேலைகளிலும் கவனம் செலுத்தி வருகின்ற தவத்திரு நாச்சி யப்ப ஞான தேசிக சுவாமிகளுக்கு, நாள் ஒன்றுக்குரிய இருபத்து நான்கு மணி நேரம் போதவே போதாது. எனவே, நாளுக்குக் குறைந்தது முப்பது மணி நேரமாக நீடித்து, சுவாமிகளுக்கு வழங்கியருள வேண்டுமாய்க் கோவி லூர் திருநெல்லை நாயகி உடனாய கொற்றவாளீசுவரரைப் பிரார்த்திக் கிறோம்.

ஜீ

## ஆதிசங்கரர் அருளிய மாத்ரு பஞ்சகம் என்னும்

## ஏக ஸ்லோக மாத்ரு ஸ்துதி

தமிழாக்கம்:
பாரதிகாவலர்
கே. ராமமூர்த்தி



கருத்தரித்த நாள்முதலாய் உள்ளிருந்து
கணந்தோறும் காத்தருள்
புரிந்து புரிந்து
உருவெடுக்கும் என்னுயிரால் உருசியிழந்து
உணவுகுன்றி மசக்கையெழ
மெலிந்து மெலிந்து

வருத்துகிற கவலை எழும் வேளைகளில்
வளர்கின்ற பிள்ளைச்சுமை
சுமந்து சுமந்து

பெருத்தவலி சூழ்ந்துற்ற காலைதனில்
பிரசவத்தின் சூல்வலிக்கு
இரங்கி இரங்கி

திருத்தமொடு பூமிதனில் தவழவிட்டு
சிம்மாசன மடியேற்றி
மகிழ்ந்து மகிழ்ந்து
பொறுத்தனை, மலமயம் செய்த காலை
புன்னகை பூத்துமுகம்
மலர்ந்து மலர்ந்து

கருத்தோடு நலம் கோடி தந்தனையம்மா!
கடன்சுமை என்னிடத்தே
மிகுந்து மிகுந்து
உறுத்துகிற பான்மைதீரப் பதிலெதுவோ
ஒன்றினுக்கு ஒன்றேனும்
உவந்து உவந்து

பொருத்தமொடு தீர்த்திட முடிந்திடுமோ
பொற்பாத மலரடிகள்
நினைந்து நினைந்து
உருக்கமொடு திருவடிகள் தொழுவதல்லால்
ஒன்றறியேன் அம்மா, அம்மா
பணிந்து பணிந்து

மண்ணில் மெய்ப்படவே
வணங்குகின்றேனம்மா

## சிக்கனக் கேள்வி

இளசை அருணா

நாக்குக்குத் தீனி
நாசிக்கு வாசம்
காதுக்கு ஓசை
வாய்க்குத்தான் பேச்சு
மனசுக்கு மட்டும் ஏன் காதல்...?
நெஞ்சுக்குத் துடிப்பு...
நீள் கரங்கள் அசைப்பு
நெடுந்தோளில் வீரம்
நிறைவயிற்றுத் தாகம்
மனசுக்கு மட்டும் ஏன் ஏக்கம்?
இருவிழியின் பார்வை
இயங்கிவரும் கால்கள்
விரல் பத்தின் அசைவு
வெறுமையிலாக் கனவு
மனசுக்கு மட்டும் ஏன் சோகம்..?
பாதத்தில் மென்மை
நகமெல்லாம் கூர்மை





படர்முகத்து நாணம்
இதழ்கூட ஏழிசையின் சான்று-அட
மனம் இங்கே முரண்படுதல் ஏனாம்?
மனத்தின் சொல் ஆணை
மானுடனே கேட்க
மனம் கொஞ்சம் மாறுதலின் சின்னம்
மனம் வெல்ல வழிஎன்ன கூறேன்...?
கொஞ்சம்-
மனம் வெல்ல வழிஎன்ன கூறேன்....?

# தெய்வ சக்தியின் விசுவரூப தரிசனம்!

**- வித்வான் வே. லட்சுமணன்**

1998-ல் ஏப்ரல் மாதத்துக் கடைசி ஞாயிற்றுக் கிழமையன்று சென்னையில் மயிலாப்பூரில் உள்ள பாரதீய வித்யாபவனுக்கு நான் என் மனைவியுடன் சென்றேன். அன்று, அங்கே நான் கண்ட தெய்வீக சாந்நித்தியம் என் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது.

மகான் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமி மிஷன் டிரஸ்டு நடத்திய கூட்டு வழிபாட்டு நிகழ்ச்சி அது.

நெல்லையைச் சார்ந்த என் இனிய நண்பர், புனிதசீலர், தொழிலதிபர் திரு. நெல்லையப்பன் அவர்களும் தெய்வீகப் பொலிவுமிக்க அவருடைய மனைவியார் திருமதி ஜானகி அவர்களுமே இந்தக் கூட்டு வழிபாட்டு நிகழ்ச்சி பற்றி எங்களுக்குத் தெரிவித்து, அழைத்துச் சென்றவர் ஆவார்கள்.

மாலை 5 மணியிலிருந்து 6.30 மணி வரையிலும் ஓர் அற்புதமான தெய்வீக உலகத்தில் இருந்த அனுபவத்தை நாங்கள் பெற்றோம்.

ஆனந்த பரவசத்தை அடைந்தோம் என்றும் சொல்ல வேண்டும்.

விநாயகருக்கு அர்ச்சனை, அர்ச்சனை மந்திரங்களை எல்லோரும் கூட்டாகச் சேர்ந்து உச்சரிக்கின்ற காட்சி, நலிவுற்றவர்கள் நலம் பெறுவதற்கான பிரார்த்தனை, தொடர்ந்து ஆரத்தி, அதைத் தொடர்ந்து கந்தர்வ ஸ்திரீகள் போல ஒளிவீசும் பெண்களின் கானமழை, அவர்கள் நாவிலிருந்து ஒலித்த ஒவ்வொரு பாசுரத்திலும் தேனிலும் இனிய சுவையான நாதம் இன்னும் வருணித்துக் கொண்டே போகின்ற அளவுக்குத் தெய்வீகத்தின் சாந்நித்தியத்தை அங்கே பெற்றேன்.

திருவாளர் நெல்லையப்பன் அவர்களிடம் சொன்னேன், 'ஆகா, ஆகா, எப்பேர்ப்பட்ட திருஅருட்பேறு!' என்று.

அப்போது அவர் சொன்னார், "இங்கு மட்டுமில்லை, சென்னையிலும், கோவையிலும், நெல்லையிலும் இன்னும் கொழும்புவிலும் இந்தப் புனித வழிபாட்டு நிகழ்ச்சி பல்லாண்டுகளாக நடந்து வருகிறது" என்று.

"அப்படியா?" என்று நான் வியந்தேன்.

மேலும் சில விவரங்கள் தெரிந்து கொண்டேன்.

ஆத்மாவை இறைச்சக்தியுடன் இணைக்கின்ற கூட்டு வழிபாட்டு நிகழ்ச்சியை வழங்குகின்ற அந்தப் புனிதப் பணிக்கு மூலகர்த்தா யார் என்பதைக் கேட்டபோது, அவர், 'ஒரு நீண்ட வரலாறே உள்ளது' என்று கூறினார்.

'சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்களே இந்தத் தெய்வீக நிகழ்ச்சிகளை நடத்துகின்ற அவதார நங்கை' என்றார்.

"மகான் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமி அவர்களின் பரிபூரண அனுக்கிரகம் பெற்றவர் சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்கள்" என்றும் சொன்னார்.

ஸ்ரீமுத்துக்கிருஷ்ணசுவாமி மிஷன் டிரஸ்டின் தலைவியாக, அறப் பணிகளையும் தெய்வீகப் பணிகளையும் பதினாறு வயதிலிருந்து தொடர்ந்து அவர் செய்து வருகிறார் என்றும் எல்லோரும் நலம் பெற்றிருக்க வேண்டும் என்பதே சுவாமி அவர்களின் இலட்சியம் என்றும், கூட்டு வழிபாட்டு முறைதான் அதற்கேற்றது என்று சுவாமி அவர்கள் தொடர்ந்து நடத்தி வருகிறார் என்றும் தெரிந்து கொண்டேன்.

பகவான் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமி அவர்கள் 179 ஆண்டுகள் இந்த உலகத்தில் வாழ்ந்திருக்கின்றார்.



**சுவாமி வித்தக விநாயக வடிவு அம்மா அவர்கள்**

நெல்லைக்கு அடுத்த வள்ளியூரில் 1913-ஆம் ஆண்டு ஜீவ சமாதி அடைந்தவர் ஆவார் அவர்.

அங்கே பொத்தை மலை என்ற புனித மலை இருக்கிறது. செங்குத்தான அந்த மலைமீது தாமே ஏறிச் சென்று, மகான் அவர்கள் ஞான தீபத்தை ஏற்றுவார்.

மலைமீது தீபம் ஏற்றினால் அந்தத் தெய்வீக ஜோதியின் கிரணங்கள் நெடுந்தொலைவுக்குப் பரவுமென்றும், அதனால் அனைத்து ஜீவன்களின் பாபங்களும் அகலுமென்றும் எண்ணி, இந்த அருட் சோதியை விளங்கச் செய்தாராம் மகான்.

தான் ஜீவசமாதி அடைவதற்கு முன்பு எத்தனை எத்தனையோ அற்புதங்களை ஆற்றியிருக்கிறார் இவர்.

சிறுபிள்ளைகள் மலைமீது ஏற விரும்புவார்கள். கண்ணை மூடிக் கொள்ளச் சொல்லித் திரும்பத் திறக்கச் சொல்லுவார் மகான். பிள்ளைகளும் மகானும் மலைமேல் காணப்படுவார்கள்.

'அகத்தியரின் அம்சம்' என்று கபிலர் நாடி விளக்கம் தந்திருக்கிறது. நித்தியமான சத்தியத்தில் ஒளிர்கின்ற நித்திலம்போல் ஒளிவீசிய பகவான் இவர் ஆவார்.

பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அகத்திய மாமுனிவர் தம் தவ வலிமையால் சத்தியத்தை நிலைநிறுத்திய முனிபுங்கவர் அல்லவா?

ரிஷி வாக்கிய ஏடுகள் அந்த அகத்தியரின் அவதாரமே ஸ்ரீமுத்துக்கிருஷ்ணசுவாமிகள் என்று போற்றியுள்ளன என்பதை நான் அறிந்தபோது, வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

முதன்முதலாகப் பாரதீய வித்யா பவனில் நடைபெற்ற வழிபாட்டு விழாவில், மகான் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமியை அகத்தியராகத்தான் நான் கண்டேன்.

தமது பதினாறாவது வயதில் ஸ்ரீமுத்துக் கிருஷ்ண சுவாமியாக ஒளிவீசத் தொடங்கியிருக்கிறார் சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்கள். அவரைத் தரிசிக்க வேண்டுமென்ற என் ஆர்வத்தைத் திரு. நெல்லை யப்பன் அவர்களிடம் நான் தெரிவிக்க, அவர் கொழும்புவுக்கு என்னை அழைத்துச் சென்றார்.

ஜீவசமாதி அடைந்த மகான் முத்துக்கிருஷ்ணசுவாமி அவர்கள் சுவாமி வித்தகவிநாயக வடிவு அம்மா அவர்களின் ஆத்மாவோடு இணைந்த விவரத்தை அப்போது கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

1969-ஆம் ஆண்டில்தான் அந்த அற்புத நிகழ்ச்சி நடந்திருக்கிறது.

மதுரை மடாதிபதியான ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரனார் அவர்கள் கொழும்புவில் ஒரு விழாவில் பேசியபோது, "இறந்தவர் என்று நாம் நினைப்பவர்கள் உண்மையில் இறப்பதில்லை. சூட்சுமமான முறையில் வாழ்ந்து வருவார்கள். அவர்களோடு பேசவும் செய்யலாம்!" என்று இந்தக் கருத்தின் அடிப்படையில் பேசிய பேச்சின் உட்பொருளே ஒரு பெரிய உண்மையை எல்லோருக்கும் உணர்த்திற்று என்று சொல்ல வேண்டும்.

திருப்புகழ் வழங்கிய அருணகிரிநாதர் கிளியாக மாறிக் கந்தரனு பூதியைத் தந்தார் என்று நாம் கேள்விப்பட்டதில்லையா?

எவ்வாறு தெய்வம் அவதார புருஷராகவோ, அவதார நங்கையாகவோ வடிவெடுத்து, சக பயணியாக நம்முடன் வாழ்கின்ற நிலை காலாகாலமாக நிகழ்ந்து வருகிறதோ, அவ்வாறு மாபெரும் மகான்களும் வேறொருவர் ஆன்மாவில் கலந்து, அருள் ஒளியைப் பரப்புகின்ற சம்பவம் நிகழ்வதுண்டு என்கிற செய்தி சத்தியமானது.

இந்தச் செய்தியைக் கேட்ட சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்களின் தந்தை ஞானப் பெருந்தகையான மாணிக்கவாசகம் அவர்களும் மூத்த சகோதரரும் அறிவுச் செம்மலும் ஆன முத்துக் கிருஷ்ணன் அவர்களும் மடாதிபதியின் பேச்சைச் சிந்திக்க லானார்கள்.

இந்தச் சிந்தனையின் விளைவுதான் உண்மையின் வெளிப்பாடு!

தந்தை மாணிக்கவாசனார் அவர்கள் தம்முடைய மக்கட் செல்வங்களில் ஒரு தனித்தன்மையுடன், விசேடமான காந்த சக்தியுடன், தெய்வீகப் பொலிவுடன் தோற்றம் தந்த தவச்செல்வியை யார் என்று அடையாளம் கண்டுகொண்டார்.

1913-ல் சமாதி அடைந்த மகான் முத்துக்கிருஷ்ண சுவாமி அவர்கள் 1969-லே தன்னுடைய தவப்புதல்வி யின் வடிவில் மீண்டும் தோன்றி, அருள் வாசகங்களைப் பொழிகிறார் என்றும் அவர் அகத்தியரைப் பிரதிபலிப்பது போல், இந்த ஞானப் பெண்மணியும் அந்த மகானைப் பிரதிபலிக்கிற நிலை உருவாகியிருக்க வேண்டும் என்றும் உணர்ந்த, அருட்செல்வர் மாணிக்க வாசகம் அவர்கள் மகள் என்று நினைக்காமல், முத்துக் கிருஷ்ணசுவாமியாகவே நினைத்து, தன் மகளைச் சுவாமி வித்தக விநாயக வடிவு என்று எல்லோர் முன்னிலையிலும் எடுத்துரைத்து, மகளின் திருவடி களில் விழுந்து, வணங்கவும் செய்தார் என்றால், ஆகா! அது எப்பேர்ப்பட்ட அபூர்வமான விஷயம் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

அவ்வாறே தன் இளைய சகோதரி என்று பாராமல் மூத்த சகோதரரும் முதிர்ந்த ஞானவானுமான முத்துக்கிருஷ்ணன் அவர்களும் சகோதரியின் திருவடிகளில் விழுந்து வணங்கலானார்.

குடும்பத்தார் அனைவருமே வணங்கத் தொடங்கினார்கள்.

பதினாறே வயதான தெய்வீகப் பெண்மணியின் திருமுகத்தில் தேவியின் சௌந்தரிய இலட்சணம் முகிழ்ப்பதைக் கண்டார்கள். அங்கயற்கண்ணிபோல் அந்தப் பெண்ணின் இரு கண்களும் ஒளிவீசிய காட்சியைக் கண்டார்கள்.

சந்திரனுக்கு நிகர் இவரது முகம் என்று சொல்வதற்கு மாறாக, இவருடைய முகத்தின் காந்தியைச் சந்திரனால் மிஞ்ச முடியுமோ என்று சொல்லத்தக்க வகையில் பட்டொளி வீசிய சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்களின் பொன் வதனத்திலும் அருட்பார்வையிலும் இதழ்ப் புன்னகையிலும் தெய்வீகப் பொலிவிலும் அருட்சிரிப்பிலும் ஒரு தனி ஈர்ப்புச் சக்தி இருப்பதைச் சின்னஞ்சிறு வயதிலேயே கண்டவர்கள் அவர்கள்.

இவருக்கு, "வித்தக விநாயக வடிவு" என்று பெயர் சூட்டியதே ஒரு தனித்தன்மை வாய்ந்ததாகும்.

நவராத்திரி நேரத்தில் பிறந்தவர் இவர். வித்தகம் என்றால் 'சரசுவதி' என்று அர்த்தம் உண்டு. மேலும் குழந்தையின் முகத்தில் ஒளி தவழ்ந்ததைக் கண்டபோது, 'வித்தக' என்ற சொல் முழுதும் பொருந்துமென முடிவு செய்து கொண்டார்.

எப்போதுமே திரு மாணிக்கவாசகம் அவர்கள் விநாயகர் விக்கிரகம் வைத்து, விநாயகர் அகவலைப் பாராயணம் செய்வார். அந்த அகவல் செய்யுளில் **'வித்தக விநாயக விரை கழல் சரணே!'** எனக் கடைசி அடி வரும். இந்த வித்தக, விநாயக என்ற சொற்களோடு வடிவு என்ற அழகான சொல்லையும் இணைத்துப் பெயரைச் சூட்டினார் தந்தை.

16 வயது வரை தந்தையிட்ட பெயருடன் வளர்ந்து வந்த இந்த ஞானப் பெண்மணி, அதன்பிறகு மகான் முத்துக்கிருஷ்ண சுவாமி என வழிபடத் தொடங்கப்பட்டார் எனச் சொல்ல வேண்டும்.

ஏற்கனவே முத்துக்கிருஷ்ணசுவாமி மிஷன் டிரஸ்டு செயற்பட்டுக் கொண்டிருந்தது. அதற்கு சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்களே தலைவர் ஆனார். இந்த மிஷன் டிரஸ்டு என்னவெல்லாம் செய்யத் தொடங்கிச் செய்து வருகிறது என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

இலவச மருத்துவமனை, இலவச உணவு விநியோகம், தாகத்திற்குத் தண்ணீர் வழங்குதல், குறைகள் தீரக் கூட்டு வழிபாடு நடத்துதல், இசை, நாடகம், நாட்டியம் முதலிய புனிதக் கலைகள் மூலம் இறைச்சக்தியைப் பரப்புதல், மனித இனத்தில் வேறுபாடு இல்லாமல் செய்தல், தம்மை அண்டினோர் அனைவரின் குறைகளையும் அருட் சக்தியால் அகற்றுதல், குறிப்பாகப் பிணி போக்குதல், துயரத்தை நீக்குதல், இன்னும் உலக சுபிட்சத்திற்கான அடிப்படைத் தத்துவங்களையெல்லாம் எடுத்துரைத்தல், அருளாட்சி நிலவுவதற்கான ஆதார சக்திகளைப் பரப்புதல் இப்படி எண்ணற்ற குறிக்கோள்கள் மிஷன் டிரஸ்டு மூலம் சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்கள் செய்யத் தொடங்கி, அன்றிலிருந்து செய்து கொண்டிருக்கின்றார்.

திரு. நெல்லையப்பன் அவர்கள் மூலமாக இவருடைய அருஞ் சக்திகள் தெரிவிக்கப்பட்டன என்று சொன்னேன் அல்லவா? ஆனால் ஓர் உண்மையை இங்கு நான் குறிப்பிட வேண்டும்.

அவர் சொல்வதற்கு முன்னதாகவே அவரால் என்னிடம் தரப்பட்ட இவருடைய ஜாதகத்திலிருந்தே, இந்த ஜாதகர் ஒரு தெய்வீகப் பெண்மணி என்று அவரிடம் நான் உரைத்தேன் என்றால் அது நூற்றுக்கு நூறு உண்மை மட்டுமல்லாமல், ஜோதிட விஞ்ஞானத்தின் அற்புத மகிமை என்றும் சொல்ல வேண்டும்.

அந்த ஜாதகத்திலிருந்து ஒரே ஒரு குறிப்பைச் சொல்லப் போகிறேன்.

இவருடைய ஜன்ம லக்னம் மிதுனம். லக்னத்தில் குரு. மற்ற கிரகங்கள் எல்லோரும் கேதுவிலிருந்து தொடங்கி, ராகுவுக்குள் அடங்கியிருக்கிறார்கள்.

தெய்வாம்சம் மிகுந்த, தெய்வ சக்திக்கு வித்தான, தெய்வ சக்தியே வடிவான, குரு பகவான் சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்களின் ஜனன லக்னத்தில் இருக்கிறார். அதுவும் தனித்து இருக்கிறார் என்றால் என்ன பொருள்...!

மகான் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமி அவர்கள் சுவாமி வித்தக விநாயக வடிவு அம்மா அவர்களின் ஆன்மாவில் இரண்டறக் கலந்திருக்கிறார் என்பதுதானே பொருள்!

பாரமார்த்திகத்தைக் குறிக்கும் பரம்பொருள் தனித்து ஆன்மாவில் இருக்க, லௌகீக மார்க்கத்தில் சஞ்சரிக்கும் இதர கிரகங்கள் எல்லாம் கேது, ராகு கிரகங்களுக்குள் அடங்கியிருக்கும் நிலை ஓர் அதிசயமான அமைப்பு அல்லவா?

அதனால்தான் சுவாமி அம்மா அவர்களைத் தரிசிக்க வேண்டுமென்று திருவாளர் நெல்லையப்பன் அவர் களோடும் மற்றும் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமி மிஷன் டிரஸ்டு நடத்துகின்ற தெய்வீக வழிபாட்டைச் சுவாமி அவர்களின் விருப்பப்படி நடத்துகின்ற பொறுப்பை ஏற்றுள்ள புனிதர் திரு. ராமகிருஷ்ணன் அவர்களோடும் கொழும்புவுக்குச் சென்றேன்.

நான் இங்கிருந்து புறப்படும்போது மகான் ஸ்ரீமுத்துக் கிருஷ்ண சுவாமி எனும் ஞானத்தவ முனிவரின் அருளாட்சி ஒரு தெய்வ நங்கையின் ரூபத்தில் நடந்து வருகிறது என்றும் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்து இருக்கின்ற அந்த அருளாளரைத் தரிசிக்கப் போகிறோம் என்றும்தான் நினைத்துச் சென்றேன்.

வடகோடி இமயம் முதல் தென்கோடிக் குமரி வரையிலும் என் வாழ்நாட்களில் அபூர்வமான தபஸ்விகளையும், சித்தர்களையும் தரிசிக்கின்ற பேறு பெற்றிருக்கின்றேன். ஆனால் பரத கண்டத்தோடும் குறிப்பாகத் தமிழகத்தோடும் இரண்டறக் கலந்த இலங்கையின் தலைநகரமாம் கொழும்பு மாநகரத்தில் மகான் ஸ்ரீமுத்துக்கிருஷ்ண சுவாமியின் ஜீவாத்மாவாக ஒளி வீசுகின்ற சுவாமி வித்தக விநாயக வடிவு அம்மா அவர்களை மகான் முத்துக்கிருஷ்ண சுவாமியாக மட்டுமல்லாமல் ஜகத்ஜனனீயாகவும், கன்னிகா பரமேஸ்வரி யாகவும் அகிலாண்டேசுவரியாகவும் பரிபூரணத்துவமிக்க பராசக்தியாகவும் காணப்போகிறேன் என்கிற ஓர் உணர்வு என் உள்ளத்தில் இருந்தாலும் கூட, அது நிதர்சனமாகப் பிரதி பலிக்குமோ என்கிற ஓர் ஐயப்பாட்டுடன்தான் இருந்தேன்.

ஜாதகக் கிரக அமைப்புப்படி அவ்வாறு நான் எதிர்பார்த்தும் கூட, முழுமையாக ஒரு முற்றுப்புள்ளியுடன் அழுத்தமாகத் தீர்மானிக்க முடியாமல் இருந்ததற்குக் காரணம் சாதாரணமாக ஜோதிடத் துறையில் மாமேதைகளுக்கிடையில் நான் ஒரு சாமானியன்தானே! ஜாதகத்தைப் பார்த்து, 'தேவி தரிசனம் எனக்குக் கிடைத்து விடும்' என்று நான் கிடைப்பதற்கு முன்னாலேயே வருணிப்பேனானால், அது ஒரு கற்பனையாகப் போனாலும் போகக் கூடுமோ என்கிற ஒரு 'சிந்தனைத் தடை' என்னுள் இருந்தது உண்மைதான்.

ஆனால், சுவாமி அவர்களைப் பார்த்ததும் மெய்ஞ் ஞானத்தின் அருட்சோதி வடிவத்தைக் காண்பதாக என் உள்ளம் உணர்ந்தது.

அவருடைய சொற்களைக் கேட்கும்போது அமுதத்தைப் பருகுவது போன்ற ஓர் ஆனந்த உணர்வு மேலிட்டது.

இப்படியெல்லாம் எனக்குள் அனுபவம் ஏற்பட்டதே தவிர, தேவி தரிசனம் கிடைப்பதற்கு இன்னும் சிறிது நேரம் ஆகுமென்ற நிலையே இருந்தது என்றே சொல்ல வேண்டும்.

சுவாமி அவர்களின் இல்லத்தைத் தேவியின் திருக் கோயிலாகக் கண்டேன்.

சுவாமி அவர்களைப் பார்த்ததிலிருந்து என்னை அறியாத ஒரு தெய்வீக நிலையில் ஆழ்த்தப்பட்டேன் என்றும் சொல்ல வேண்டும். அதனால் சாதாரணமாக என்னைப் பற்றிய சில குறிப்புகளை அரைகுறையாகச் சொல்லி, பரவச நிலையிலேயே இல்லத்து முன் அறையில் அன்பர்களுடன் சுவாமி அவர்களின் முன்னிலையில் சிறிது நேரம் இருந்தேன் என்று சொல்ல வேண்டும்.

குறிப்பிட்ட நேரம் வந்ததும் சுவாமி அவர்கள் மற்றும் ஓர் அறைக்குள் சென்றார்கள். திருவாளர் நெல்லையப்பன் அவர்களையும், திரு. ராமகிருஷ்ணன் அவர்களையும் என்னை அந்த அறைக்குள் அழைத்து வரச் சொன்னார்கள். ஏற்கனவே தேவி தரிசனத்திற்காகக் காத்துக் கொண்டிருக்கிற இந்த உள்ளம், ஞானப் பீடத்தில் அமர்ந்திருக்கின்ற நிலையில் சுவாமியை அந்த அறையில் கண்டதும் அடியோடு தன்னை மறந்தது.

"வாருங்கள்" என்று கனிவோடு கூடிய ஒரு குரல் கேட்டது மட்டும்தான் தெரியும்.

அன்பர்களே, உண்மையைச் சொல்லுகிறேன். **'கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்'** என்று சொல்லுவார்கள். அந்த இலக்கணத்தை நான் மாற்றுகிறேன் என்று எண்ணாதீர்கள். அடியேன் கண்டதைத்தான் சொல்லுகிறேன். என் உள்ளத்தில் உணர்ந்ததைத் தான் சொல்லுகிறேன். என் முன்னால் படர்ந்த தெய்வீக சாந்தித்தியத்தைத்தான் சொல்லுகிறேன். சௌந்தரிய ஜோதிப் பிழம்பாகத் தோற்றம் தந்து கொண்டிருந்தார் சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்கள். அந்த ஞான ஒளிப்பிழம்பு என் புறக் கண்களைக் கடந்து, உள்ளத்திற்குள் வியாபிக்கத் தொடங்கிற்று. சற்றைக்கெல்லாம் என் புறக் கண்கள் அந்த ஒளிப் பிழம்பைப் பார்க்காமல் என் அகக் கண்ணே பார்க்கத் தொடங்கிற்று.

பூமியின் அடிப் பாகத்திலிருந்து வானத்து நட்சத்திர மண்டலம் வரையிலும் சுவாமி வித்தக விநாயக வடிவு அவர்கள், தேவி மகா திரிபுரசுந்தரியின் விசுவரூப தரிசனத்தைத் தருகின்ற அந்தத் திருக் கோலத்தைக் கண்டேன்.

ஆம். கண்டேன்! அகண்டமான - ஆனந்த - பரிபூரணமான தெய்வசக்தியை! கை குவித்தேன். கண்ணில் ஆனந்த நீர் வடித்தேன். இந்த உயிரும் உள்ளமும் உடலும், சகலமும் ஓர் அணுவாகி, தெய்வ சக்தியோடு பின்னிப் பிணைந்து ஐக்கிய லயத்தைப் பெற்றன.

பிரபஞ்சத்தின் மூல சக்தியாகிய அந்தப் பராசக்திதான் சாதாரணமாக நம்முடன் சக பயணியாக மனித ரூபத்தில் உலவுகின்ற அவதார நங்கை என்றும், அவர் அந்த மாபெரும் சக்தியினுடைய வெளிப்பாடுதான் என்றும் புறக் கண்கள் காண முடியாததை அகக்கண் அப்போது கண்டது என்றும் உள்ளதை உள்ளபடி உங்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இப்போது நான் உங்களிடம் சொல்லுவது கூட நான் அடைந்த அனுபவத்தில் ஒரு சதவிகிதம்தான் என்று சொல்ல வேண்டும். நூற்றுக்கு நூறு எடுத்துச் சொல்லக்கூடிய பக்குவம் எனக்கில்லை.

வேடன் கண்ணப்பனுக்கு, கண்ணை அப்பியவனுக்கு எப்பேர்ப்பட்ட அனுபவம் ஏற்பட்டது என்பதைப் புராண வரலாறுகள் கூறுகின்றன அல்லவா? கண்ணப்பருக்கு நிகராக இப்போது என்னைச் சொல்லிக் கொள்ளவில்லை. அதில், அந்தப் பக்தியில் ஓர் அணு அம்சம் கூட அடையப் பெறாதவன் நான். ஆனால் சுவாமி அவர்களைப் பற்றி நான் என் உள்ளத்திற்குள் பெற்றிருந்த உணர்வு அந்த நேரத்தில் அப்பேர்ப்பட்ட மேலான அனுபவத்தைப் பெறச் செய்தது எனச் சொல்வது நிச்சயமாகப் பொருந்தும்.

பக்தியுடன் புனிதத் தொண்டு செய்யும் முழு மனம் உள்ள ஜீவனுக்கு வேறு எந்தத் தகுதியும் தேவையில்லை. இறைக் காட்சி கிடைத்தே தீரும் என்கிற வாக்கியத்தை நான் அழுத்தந்திருத்தமாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

எதிலும் அழுத்தமான பிடிப்பு வேண்டும். தெய்வ சாட்சாத் காரம் பெற்ற ஞானியர்களின். வரலாற்றைப் பார்த்தால் எத்தனையோ தத்துவங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். அவற்றை நான் படித்திருக்கிறேன். ஆனால் 'அந்த மகான்களின் பாதச் சுவடு பதிந்த புனித மண்ணைக் கூடத் தொடாதவன் நான். ஆனாலும் முன்வினையின் காரண மாகவோ, இப்பிறப்பில் என்னுடைய வரம்புக்குள் இருந்து கொண்டு முடிந்த அளவு தெய்வீகத் தொண்டு செய்து வருகிற பின்வினையின் காரணத்தாலோ, தெய்வ சக்தியின் விசுவரூப தரிசனம் கிடைக்கப் பெற்றேன்.

அன்றைய தினம் அந்தக் கண நேரத்தில் கிடைத்த தரிசனத்தை நினைத்து நினைத்துப் பூரித்துக் கொண்டிருக்கிறேன். தொடர்ந்து சுவாமி அவர்களின் வழிபாட்டு நிகழ்ச்சிகளைச் சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறேன். என்னைப் போல் இன்னும் ஆயிரக்கணக்கான மெய்யன்பர்கள் சுவாமி அவர்களின் அவதார ரகசியத்தைப் புரிந்து கொண்டு அவருடைய புனித நெறிமுறைகளைப் பின் தொடர்ந்து. தங்களை அவர்களது திருவடிக்கு அர்ப்பணம் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லி, அவர்களில் அடியேனும் ஒருவன் என்பதையும் சொல்லி மெய்யன்பர்கள் அனைவருக்கும் சுவாமி அவர்கள் என்றென்றும் அருள்பாலிப்பார்கள் என்றும் உரைத்து, கடல்போல் விரித்துரைக்கப்பட வேண்டிய அத்தனைச் சம்பவங்களுக்கும் இது ஒரு இரத்தினச் சுருக்கமே என்று கூறி, நிறைவு செய்கிறேன்.

❄ ❄ ❄ ❄ ❄ ❄ ❄ ❄

# 'கலைகள் தரும் சுக்கிரன்'

சுக்கிர கிரகமே அசுரர் குருவே!
சுடர்மிகு ஞானம் கொண்ட திருவே!
தக்க மந்திரம் அறிந்த உருவே!
தரமிகு கலைகள் அளிக்கும் கருவே!

நின் ஆட்சி இராசி ரிஷப துலாமே!
நின்னருள் ஜாதகத்தில் இருந்தால் உயர்வே!
உன்தெசை தன்னில் சுகமது மின்னவே!
உயர்வாழ்வு இருபது வருடம் தொடர்கவே!

உயிர்விட்ட வருக்கு உயிர்தரும் ராஜாவே!
உயிரை முக்தியில் சேர்க்கும் துணிவே!
கயிலைமலை சிவனிடம் வரம்பெற்ற அறிவே!
களத்திர காரகன் என்னும் நிறைவே!

நின்னை வணங்கினால் காட்டுவாய் பரிவே!
நிம்மதியும் பொருளும் அதனால் பெருகவே!
வெண்பட்டு உடுத்தி ஜொலிக்கும் தேவே!
வெள்ளை மனமும் உறுதியும் தருகவே!

நித்தியா

# எனக்கோ அழிவில்லை!

பூங்கோவன்



மண்ணில் மறைந்துள பொருள்களெல்லாம்
மலர்ந்தே வெளிப்படும் நிலையைப்போல்
என்னில் பூத்திடும் கவிதைப்பூக்கள்
எழிலைச் சிந்தியே மணம்பரப்பும்!
கண்ணிலே காணும் காட்சியெலாம்
கவிதை யாக்கி மிளிரவைப்பேன்!
எண்ணம் யாவும் வண்ணமாக
எழுதிப் படைப்பேன் மேன்மையாக!

வானக் கூரையின் கீழ்வாழும்
வளமிலா மக்களின் நிலைதனையும்
ஞான மின்றி வாழ்வோர்க்கு
நன்மை தீமை எதுவென்றும்
ஈனத் தொழில்கள் புரிவோரை
இடித்துத் திருத்தும் வழிகளையும்
ஊன மின்றி எடுத்துரைப்பேன்:
ஊருக்கு நல்லதைச் செய்வேனே!

மக்கள் தொகைதொண் ணூறுகோடி
மலரும் பாரதம் புதுமைநாடி
சிக்க லகற்ற வழியைத்தேடி
சிறந்திடக் காவியம் பாடிடுவேன்
செக்கச் சிவந்த வானத்தை
சித்திர வண்ண ஓவியத்தை
சொக்கும் வண்ணம் படைத்தவனை
சுவைக்கும் வண்ணம் எடுத்துரைப்பேன்!

கோலக் குமரியின் உள்ளத்தைக்
குளிர வைத்திடும் என்கவிதை
ஞாலம் முழுவதும் புகழ்பரவும்
நலிவு என்பதே எனக்கில்லை!
மூலப் பொருளை உணர்ந்தவன்நான்.
மூன்று காலமும் கணித்திடுவேன்.
காலம் காலமாய் வாழ்ந்திடுவேன்.
கவிஞன் எனக்கோ அழிவில்லை!



# காட்டுப் பூக்கள்

## டாக்டர் ஆறு. அழகப்பன்

நாட்டுப்புறப் பாடலை நாடோடிப்பாட்டு, நாட்டார் பாடல், பாமரர் பாடல், நாட்டுப் பாடல், கிராமியப் பாடல் முதலிய பல பெயர்களில் அழைத்து வருகிறார்கள். கவித்துவமாக அப்பாடல்களைக் காட்டுப்பூ என்றும் அழைக்கலாம். புலவர்களால் படைக்கப்படும் இலக்கிய மலர்கள் வீட்டுத் தோட்டத்து மலர்களாகும். காட்டு நிலா போல, கானகத்தில் உள்ள மலர்கள் போல விளங்குவன நாட்டுப்புறப் பாடல்களாகும்.

ஐம்பதாண்டுகளுக்கு முன்னர் நாட்டுப்புறப்பாடல் களுக்கு இன்றைக்குள்ள மரியாதையில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றில் இலக்கண ஆசிரியர்களும், இலக்கிய ஆசிரியர்களும், சமய ஆசிரியர்களும், புலவர்களும் நாட்டுப்புறப் பாடல்களைத் தங்கள் படைப்புகளில் தொட்டுக் காட்டியும், எடுத்துக்காட்டியும் சிறப்பித் துள்ளனர். நாட்டுப்புறப் பாடல்களுக்குச் சரியான ஒரு அங்கீகாரம் கிடைத்தது இக்காலமே. வானொலி, தொலைக்காட்சி, பல்கலைக்கழகங்கள், திரைப்படங்கள் முதலிய அமைப்பு களில் நாட்டுப்புறப் பாடல்கள் பெற்றுள்ள இடம் பேரிடம் என்றே சொல்ல வேண்டும். பட்டய வகுப்பு, சான்று வகுப்பு, பட்ட வகுப்பு முதலிய பட்டங்கள் பெற நாட்டுப்புறப் பாடல்களும் பாடமாக வைக்கப்பட்டுள்ளன. எம்.லிட், எம்.பில், பிஎச்.டி முதலிய பட்டங்களைப் பெற எண்ணற்ற ஆய்வாளர்கள் நாட்டுப்புறப் பாடல்களை எடுத்து, ஆய்வு செய்கின்றனர். சில திரைப்படங்கள் நாட்டுப்புறப் பாடல்களுக்குத் தனிச் சிறப்பு கொடுத்து வெளிவந்துள்ளன. தமிழக அரசின் இயல், இசை, நாடக மன்றம், நாட்டுப்புறக் கலைஞர்களுக்கு ஊக்கத் தொகை யையும் ஓய்வு ஊதியத்தையும், கலைமாமணி பட்டத்தையும் கொடுத்து வருகிறது. எனவே நாட்டுப்புறப் பாடல்களின் பொற்காலம் இக்காலம் எனலாம். காட்டுப்பூவின் மணம் என இங்கு குறிப்பிடுகின்றபோது இங்கு அப்பாடல்களில் வரும் உவமை மட்டும் குறிப்பிட்டுச் சொல்லப்படுகிறது. உவமை என்பது கவிதைக் கன்னிக்கு வேண்டிய கண்களாகும். உவமைகளற்ற கவிதையை, கண்களற்ற கன்னி எனலாம்.

திருவள்ளுவர் திருக்குறளில் ஏழு சொற்களில் உவமையைக் கூறிப் புரிய வைப்பவர். கம்பராமாயணத்தில் ஒவ்வொரு படலத்திலும் கம்பர் உவமைச் சக்ரவர்த்தி யாகவே இருக்கிறார். சிற்றூர் வாழ்க்கையில் அன்றாடம் உரையாடும்போது உவமை என்று தெரியாமலே பேச்சு வழக்கில் உவமைகளைப் பயன்படுத்துவதுண்டு. 'பூப்போல இட்லி' 'தும்பைப்பூ போல வேட்டி' என்று கூறுவார்கள். 'இவன் நதிபோல குணமுள்ளவன்' என்றும் கூறுவார்கள். 'சகுனிபோல, கூனிபோல இவன்' என்றும் சொல்வதுண்டு. இவ்வகையில் நாட்டுப்புறப் பாடல்களில் உவமைகள் அடுக்கடுக்காக வருகின்றன.

விதவைகளை பாரதிதாசன் 'வேர்ப்பலா' என்று உவமையாகக் கூறுகிறார். 'நாட்டுப்புறப் பாடல்களில், விதவைகளை, பூவாக இருந்தாலும் மங்களத்திற்குப் பயன்படாத 'வாழைப்பூ' என்ற உவமையாய் எடுத்துச் சொல்கிறார்.

ஒரு பெண்ணினுடைய நீண்ட தலைமுடியை 'ஆலம் விழுது போல அந்தப்பிள்ளைத் தலைமயிர்' என்று சிறப்பான உவமையால் எடுத்து நாட்டுப்புறப்பாடல் தெரிவிக்கிறது.

நிலவினை, "சோளப்பொரி நடுவே சுட்டுவைத்த தோசை போல" என்று ஒரு நாட்டுப்புறப் பாடல் சித்திரிக்கிறது. நட்சத்திரங்களுக்கு நடுவே நிலவு இருப்பதனை இவ்வாறு பாடல் சிறப்பான உவமையால் எடுத்தியம்புகிறது.

மாப்பிள்ளையையும் பெண்ணையும் பார்த்து இணைப் பொருத்தத்தை 'ரதியும் மன்மதனும் போல' என்ற உவமையால் புரியவைப்பர். பெண்ணின் இடுப்பிற்கு உடுக்கையைத்தான் உவமையாகக் கூறினர். ஆணின் இடுப்பிற்கு 'இஞ்சி இடுப்பழகா' என்று புதுமையாக உவமைகூறும் நாட்டுப்புறப்பாடலும் உண்டு. கறுப்பான தன் காதலியை நாவற்பழம் என்றழைக்கும் நாட்டுப்புறக் காதலனும் உண்டு.

சிலப்பதிகாரத்தில் கண்ணகியை வர்ணிக்கின்றபோது மாசறு பொன், வலம்புரி முத்து, காசறு விரை, கரும்பு, தேன் என்றெல்லாம் கோவலன் அடுக்குவான். ஆனால் நாட்டுப்புறத்தலைவன் ஏலம், கிராம்பு, பூசும் சந்தனம் என்று சொல்லி மகிழ்வான். இத்தகைய சிறப்புகள் அடங்கிய நாட்டுப்புறப்பாடல்க்ள் தோட்டத்து மலராகவும் போற்றப்பட வேண்டும். ஆனால் மக்களால் மிகவும் அறியப்படாத காட்டுப் பூக்களாகவே உள்ளன.



# பிரளயம் காத்த விநாயகர்



வரலாற்றில் திருப்புமுனையாக இருந்த திருப்புறம்பயத்தைக் காண வேண்டும் என்ற ஆவல் பல ஆண்டுகளாக இருந்தது. மற்றொரு சிறப்பு என்னவென்றால் திரு.தி.நா.சுப்பிரமணியம் அந்த ஊர்க்காரர். ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு.டி.வி.சதாசிவ பண்டாரத்தார் அந்த ஊரில் பிறந்தார்.

திருப்புறம்பயம் கோயில் மண்ணியாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. சோழ நாட்டில் பல கோயில்கள் செங்கற்களால் கட்டப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் கருங்கற் கோயிலாக மாற்றவேண்டும் என்று ஆதித்தன் முடிவு செய்தான். தனக்குப் பெரும் வெற்றியையும் சோழ நாட்டிற்குப் புது வாழ்வையும் அளித்த திருப்புறம்பயத்தை அவனால் மறக்கமுடியுமா? திருப்புறம்பயத்தில் வீற்றிருக்கும் சாட்சி நாதரின் பெருங்கருணையை அவனால் மறக்க முடியுமா? திருப்புறம்பயம் கோயிலைச் சிற்பத்திறன் மிகுந்த ஆலயமாக எழுப்பினான்.

அழகிய சிற்றூர். வட எல்லையாக கொள்ளிடம் கிழக்கு நோக்கிச் செல்கிறது. மண்ணியாறு இந்த ஊர் அருகே வடக்கு நோக்கித் திருப்பிப் பாய்கிறது.

புராணக் கதைகளிலும் இந்த ஊருக்குப் பெருமைதரும் வரலாறுகள் கூறப்பட்டுள்ளன. கிருதயுக முடிவுக் காலக் கட்டத்திற்குக் கதை செல்கிறது.

• ஸ்ரீ அஷ்டபுஜ துர்க்கை



• ஸ்ரீ தட்சிணாமூர்த்தி



• நந்தி மண்டபம், த்வஜஸ்தம்பத்துடன் ஆலயத் தோற்றம்

போட்டோ : ஏ.ஆர். சக்திதேவன், கும்பகோணம்

கலைமாமணி விக்கிரமன்

திருப்புறம்பயத்தில் பிரளயம் காத்த விநாயகர் மிகவும் புகழ்பெற்றவர். இப்பெருமானுக்கு அபிஷேகம் செய்வதில்லை. விநாயக சதுர்த்தி அன்று தேனால் அபிஷேகம் செய்து அதுவும் பஞ்சால் தொட்டு விநாயகர் திருமேனியில் ஒத்தி எடுக்கிறார்கள். பஞ்சால் ஒத்தப்படும் தேனை திருமேனியால் நொடியில் உறிஞ்சப்படுகிறது. தேன் அபிஷேகத்தின்போது பொதுவாக சந்தன நிறத்துடன் தோன்றும் திருமேனி பிறகு செம்பவள நிறத்துடன் காட்சி தருகிறார்.

• ஸ்ரீ பிரளயம் காத்த விநாயகர்

பிரளயங்காத்த விநாயகர் என்று போற்றப்படும் இந்த விநாயகரை, விநாயக சதுர்த்தி அன்று பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் தேனாபிஷேகம் செய்து வழிபடுகிறார்கள்.

இங்குள்ள இறைவர் பெயர் சாட்சி நாதர். அம்பிகையின் பெயர் கரும்பொடு சொல்லம்மை. கரும்பைப் போல் இனிய சுவையான சொல்லையுடையவள் என்று பொருள்.

சாட்சி சொன்ன கதை திருவிளையாடல் புராணத்தில் வருகிறது.

கோயிலில் உட்பிராகாரத்தில் உள்ள துர்க்கை சக்தி வாய்ந்தவள். அவளுடைய அருள் பார்வையை இன்றெல்லாம் கண்டு ஆனந்திக்கலாம்.

குகாம்பிகை என்ற பெயரில் முருகப்பெருமானைக் குழந்தையாக இடையில் ஏந்தியதுபோன்ற சிறப்பு உருவை வேறெங்கும் காணமுடியாது. திருமணத்தடை உள்ளவர்கள் தடை நீங்கவும், கர்ப்பிணிகள் சுகப்பிரசவத்திற்கும் இந்த அம்பிகையை வேண்டினால் வேண்டியது பெறலாம். இந்த அம்பாளுக்கும் அபிஷேகம் செய்வதில்லை. சாம்பிராணியை மட்டுமே சாத்துகிறார்கள். ஸ்ரீசாட்சிநாத சுவாமி ஆலய கோபுரம் ஐந்து நிலைகளையுடையது. ஆலயத்திற்கு 231 ஏக்கர் நிலம் இருப்பதாகச் சொல்கிறார்கள். மதுரை ஆதினத்தில் ஆளுகைக்குட்பட்ட இந்தக் கோயிலில் உள்ள வசதியைக் கொண்டு இந்தக் கோயிலைத் தூய்மையாக வைத்துள்ளார்கள்.



இந்தக் கோயிலை நாம் கண்டு வணங்கவேண்டும் என்று விடாப்பிடியாக திரு. பாரியுடன் நம்மை அழைத்த குருமூர்த்தி கோயிலைப் பற்றி நாம் கேட்ட செய்தியெல்லாம் சளைக்காமற் கூறினார். போட்டோ எடுத்த சக்தி கிருஷ்ணனிடமும் அறங்காவலரிடமும் கோயில் நிர்வாக அதிகாரியிடமும் பிரியா விடை பெற்றுப் புறப்பட்ட போது சமயக் குரவர்களும், மாணிக்கவாசகரும் வந்து துதித்துப் பாடிய இத்தலத்தை நாம் இவ்வளவு நாள் கழித்தாவது காணும் பேறு பெற்றோமே என்றெண்ணிப் புறப்பட்டோம். •



# ஜப்பான் - ஒரு தொழிலதிபர் பார்வையில்...

'எழுத்துச் செம்மல்'

"ஜப்பான் நாட்டை நினைக்கும் போது, அங்கே காணப்பெறும் சுத்தம் – அதனால் மனத்திற்கு ஏற்படும் இதம், அங்கே பேணப்பெறும் கட்டுப்பாடு – அதனால் தோன்றும் வியப்பு, அங்கே மக்கள் காட்டும் உழைப்பார்வம் – அதனால் ஏற்படும் மகிழ்ச்சி, நாட்டின் வளர்ச்சி ஆகியவை மறக்கமுடியா தவை! மனத்தைவிட்டு நீங்காதவை" எனச் சொன்னார் தமிழ்நாட்டின் பிரபல தொழில் குழுமமாகிய 'ராம்கோ' சேர்மன் பி.ஆர்.ராம சுப்பிரமணிய ராஜா.

உலக அரங்கின் தொழில் துறையில், வணிகத் துறையில் உன்னதப் புகழ் பெற்றுள்ள ஜப்பான் நாட்டின் மிட்சுபிசி கார்ப்பரேஷன் (MITSUBISI CORPORATION) நிறு வனத்துடன், தொழில் உறவு கொண் டுள்ள இராஜபாளையம் 'ராம்கோ' நிறுவனம், கடந்த பத்தாண்டுகளுக்கு மேல், அதி நுட்பத் தயாரிப்பில் உருவாக்கம் பெறும் பருத்தி நூலைக் கணிசமான அளவில், ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்து வருகிறது. அது சம்பந்தமான பணிகளின் நிமித்தம், ஜப்பான் நாட்டுக்கு ஏறத்தாழ பன்னி ரண்டு முறை பயணம் சென்று திரும்பியுள்ளார். 'பி.ஆர்.ஆர்' என அன்பாகவும், மரியாதையாகவும் குறிப்பிடப்பெறும் தொழிலதிபர் பி.ஆர்.ராமசுப்பிரமணிய ராஜா. அண்மையில் பி.ஆர்.ஆர். ஜப்பா னுக்குச் சென்று வந்ததையறிந்து, அப்பெருமகனாரை அணுகிச் சில செய்திகளை, ஆம், பயனுள்ள – சொல்லப் போனால் படிப்பினை நல்கும் – செய்தி களை அறிந்தோம்.

இருபதாம் நூற்றாண்டின் முற் பாதியில், ஜப்பானில் நிலையற்ற ஆட்சிகள் ஆண்டுதோறும் ஏற்பட்டன. இராணுவ பலம் மிக்கவர், ஒவ்வோர் ஆண்டும் ஜப்பானை ஆட்சி செய்து, நிர்வாகத்தை இராணுவத்தின் கட்டுப் பாட்டில் 1937 வரை வைத்திருந்தனர். இரண்டாம் உலகப்போர் முடிவுக்கு வந்த 1945ஆம் ஆண்டில் அமெரிக்கா, ஜப்பான் நாட்டின் ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய நகரங்களின்மீது அணுகுண்டுகளை வீசி, ஜப்பானைப் பேரழிவுக்கு உட்படுத்தியது. அழிவின் ஆழத்தில் அமிழ்த்தப்பட்ட ஜப்பான், இன்று ஆக்கத்தின் சிகரத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் அபரி மிதமான வளர்ச்சி, உலகத்தில் அனை வரையும் பிரமிப்புக் கொள்ள வைத் துள்ளது. ஓர் ஐம்பதாண்டுக் காலத் தில், ஜப்பானின் வளர்முக வளர்ச்சிக்கு, அடிப்படையாக அமைந்தவை எவை என்பதையறிந்து கொள்ளும் ஆர்வத் தில், பன்முறை ஜப்பானுக்குச் சென்று வந்துள்ள தொழிலதிபர் பி.ஆர்.ஆரை வினவியபோது, நினைவில் நின்றதை, நெஞ்சுள் பதிந்ததை எடுத்துக் கூறினார்.

*"ஜப்பான் நாட்டு 'மிட்சுபிசி' நிறுவனத்தோடு, உங்கள் 'ராம்கோ' நிறுவனம் கொண்டுள்ள தொடர்பைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்"*

"கொஞ்சமென்ன? முழுமையாகவே தெரிந்து கொள்ளுங்கள். 'மிட்சுபிசி' நிறுவனம் பற்றி அறிந்திருப்பீர்களென நினைக்கிறேன். உலகளாவிய முறை யில் அந்த நிறுவனம் ஆண்டுதோறும் ஈட்டி வருகின்ற வருமானம் பற்றி ஒரு குறிப்புச் சொல்கிறேன்.நமது இந்திய அரசாங்கத்திற்கு வரவாகும் தொகை யைவிட, மூன்று நான்கு மடங்கு அதிகமாகவே அதன் வருமானம் அமையுமென்றால், மிட்சுபிசியின் தகுதியை ஒருவாறு நீங்கள் அறிந்து கொள்ளலாம்"

*"அப்படியா? ஆச்சரியமாக இருக் கிறதே!"*



“பல்வேறு தொழில் துறையிலும், வணிகத் துறையிலும் ஈடுபட்டு ஜப்பானின் பொருளாதார வளர்ச்சிக்குப் பெரும் துணையாக இருக்கும் ‘மிட்சுபிசி’ நிறுவனம், டெக்ஸ்டைல் துறையிலும் பிரபலமானது. அந்த நிறுவனத்தோடு பத்தாண்டுகளுக்கு முன் தொழில் உறவு கொண்ட எங்கள் ‘ராம்கோ’ தொடர்ந்து உறவைப் பலப்படுத்தி, ஆண்டுக்கு ஆண்டு ஏற்றுமதி அளவைப் பெருக்கி வருகிறது. ‘காட்டன் யார்ன்’ அதாவது பருத்தி நூல் இங்கிருந்து ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்கிறோம். முதன் முதலாக இராஜபாளையத்தில் தென் மாநிலங்களிலேயே இடம் பெறாத நவீன நூற்பாலைகள் ‘ஸ்ரீராம்கோ ஸ்பின்னர்ஸ்’ ‘இராஜபாளையம் ஸ்பின்டெக்ஸ்ட்’ என்னும் இரண்டையும் உருவாக்கி, மிட்சுபிசியின் தொழில் நுட்ப உதவியுடன் அதிநுட்ப நவீன இயந்திரங்களின் வழியே தயாரிக்கப் பெறும், உயர்ரகத் தரமுள்ள (Best Quality) பருத்தி நூலை அனுப்பி வருகிறோம்”.

---

*“தயாராகும் அதாவது அந்த இரண்டு ஆலைகளிலும் உற்பத்தியாகும் நூலில் எத்தனை சத விகிதம் ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்கிறீர்கள்?”*

---

சற்றே புன்னகை புரிந்த ராமசுப்பிரமணிய ராஜா,“உற்பத்தியாகும் நூல் முழுக்க முழுக்க அதாவது நூறு சதவிகிதம், ஜப்பானுக்குத்தான் ஏற்றுமதி செய்தாகவேண்டும், உள்நாட்டில் விற்பனை செய்யக்கூடாது, என்பது போன்ற விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டே ஆகவேண்டும். சிக்கலான கட்டுப்பாடுகளுக்கு உள்ளாவதால், அரசாங்கம் சில சலுகைகளை வழங்குகிறது. ஏற்றுமதி வரியில்லை; வருமான வரியுமில்லை”

---

*“முழுவதுமாக ஜப்பானுக்கு ஏற்றுமதியாகிறதென்றால், அங்கேயுள்ள ‘மிட்சுபிசி’ நிறுவனத் திற்கு மட்டுமா? அல்லது....”*

---

“மிட்சுபிசி வல்லுநர்களின் தொழில் நுட்ப உதவியுடன்தான், ‘ராம்கோ’வில் தரமான உற்பத்திக்கு வழிவகை செய்யப் பெற்றுள்ளது. அவர்களின் பரிந்துரைகளை வைத்தே, அதிநுட்ப நவீன இயந்திரங்கள் பொருத்தப் பெற்றுள்ளன. தரமான தயாரிப்பும், தொழில் நாணயமும், நீண்ட நெடு நோக்குடன் வருமானத்தை ஈட்டுகிற போக்கும், எதிர்பார்ப்புகளை ஈடேற்றும் பான்மையும் இருந்தால்தான் தொழில் உறவு கொள்வதில் ‘மிட்சுபிசி’ ஆர்வம் காட்டும்; விருப்பமும் கொள்ளும். அவர்களுடைய கணிப்பில் – ‘ராம்கோ’ நிறுவனம் அத்தகைய அவர்களின் எதிர்பார்ப்புகளுக்கு உரிய வகையில் செயலாற்றுமென நம்பிக்கை கொண்டதால், நம்மோடு தொழில் உறவு கொண்டார்கள். எனவே உற்பத்தியாகும் நூல்கள் அனைத்தையும் ‘மிட்சுபிசி’ நிறுவனத்திற்கே அனுப்புகிறோம். அவர்களுடைய நம்பிக்கைகளை, உற்பத்தியில் தொடர்ந்து கவனம் செலுத்தி நிறைவேற்றி வரினும், ஜப்பானிலிருந்து ஆண்டுக்கு மூன்று முறை இராஜபாளையத்திற்கு வருகை தரும் ‘மிட்சுபிசி’ வல்லுநர்கள், நேராகப் பஞ்சின் தரத்தை, நூல் தயாரிப்பின் விதத்தைக் கண்டறிகின்றனர். செட்டிங்ஸ், ஸ்பீடு ஆகிய இயந்திர இயக்கத்தைப் பார்த்தறிந்து செல்கின்றனர்”

---

*“நீங்களும் அடிக்கடி ஜப்பான் சென்று வருகிறீர்கள் அல்லவா?”*

---

“அடிக்கடி இல்லை. ஆண்டுக்கு ஒருமுறையேனும் ஜப்பான் சென்று வருவதைப் பழக்கமாக்கிக் கொண்டுள்ளேன். தொழிலுக்கு அப்பால், உறவில் நெருக்கம் எற்படவேண்டும். உறவு நீடித்த தன்மை பெற வேண்டுமென்ற நோக்கத்தில்தான் நான் சென்று வருகிறேன். நான் சென்று வருவதால் ‘ராம்கோ’ நிறுவனத்திற்கு மட்டும் நன்மையளிக்கும் என்பதன்று. நம் நாட்டிற்கே பொருளாதார வளர்ச்சிக்கு அது உதவியாக அமையுமெனக் கருதுகிறேன். ஏனெனில் வருஷத்திற்கு ஏறத்தாழ அறுபது கோடிக்கு ‘காட்டன் யார்ன்’ நாங்கள் ஏற்றுமதி செய்கிறோம்!”

---

*“ஜப்பானுக்குச் சென்றால் எங்கு தங்குவீர்கள்?”*

---

“தமிழ்நாட்டில் கோயம்புத்தூரை ‘டெக்ஸ்டைல் நகரம்’ எனச் சொல்லும் வழக்கம் உண்டல்லவா? ஜப்பானில் தலைநகர் டோக்கியோவுக்கு அடுத்த பெரிய நகரம் ஒசாகா (Osaka). அந்த நகரத்தை ‘டெக்ஸ்டைல் சிட்டி’ என்றே அழைக்கலாம். அங்கேதான் மிட்சுபிசி கார்ப்பரேஷன் கான்சாய் கிளை (Kansai Branch) உள்ளது. ஒசாகா பெருநகரில் உள்ள ஹோட்டல்களில் இந்திய உணவு கிடைக்கும். எனவே நான் ஒசாகாவில்தான் தங்குவேன்”

---

*‘பத்தாண்டுகளாக ஜப்பானுக்குச் சென்று வருகிறீர்கள். ஜப்பான் நாட்டின் பொருளாதார வளர்ச்சி, ஜப்பானியர்களின் வாழ்க்கை உங்களது பார்வையில் வளர்முகம் கண்டுள்ளனவா?’*

---

“பொதுவாக நாட்டின் பொருளாதார வளர்ச்சியில், அவ்வளவாகத் தேய்மானம் இருப்பதாகத் தெரியவில்லை. உழைப்பார்வம் மிகுதியாக இருப்பதால், உற்பத்திப் பெருக்கம் ஒரு சிக்கல்தான். அமெரிக்கக் கலாசாரம் கொஞ்சம் கொஞ்சமாக ஜப்பானுக்குள் நுழைந்து வருவதாலும், டி.வி.போன்ற சாதனங்களாலும் மக்களின் வாழ்க்கையில் ஒழுக்கம் நலிவடைந்து வருவதாகக் கருதப்படுகிறது. சின்னஞ் சிறிய வீடுகளில் வாழ்வதையே அங்குள்ள மக்கள் விரும்புவதாகத் தெரிகிறது. பெரும்பான்மையும் ஆயிரம் சதுர அடிகளுக்குள்ளேதான் வீடுகள் கட்டப்பட்டுள்ளன. நம் நாட்டைப் போலவே அங்கும் வெயில் அதிகம். பத்தாண்டுகளுக்கு முன்பிருந்த மகிழ்ச்சியை, மக்கள் மத்தியில் காண முடியவில்லை. உற்பத்திப் பெருக்கம் (Over-Production) பொருளாதாரத்தைக் கீழ்நோக்கி இழுத்துச் சென்று

விடுமோ என்ற கவலையை உணர முடிகிறது. ஒசாகாவில் தங்கியிருந்த போதுகூட, அதிகாலைப் பழக்கமான 'வாக்கிங்' செல்வதை நான் தவிர்ப்பதில்லை. அப்படி 'வாக்கிங்' சென்ற போது, பார்க்குகளில் சிலர் அட்டைகளை விரித்து, அதன்மேல் படுத்திருப்பதைக் கண்டு வியந்து போனேன். ஜப்பானிய நண்பர்களிடம் அது சம்பந்தமாக விசாரித்தபோது, பார்க்குகளில் படுத்திருப்போர் வீடு இல்லாதவர்கள் எனக் கூறினார்கள். சரி, வீடு இல்லாதவர்கள், உணவிற்கு என்ன செய்வார்களெனக் கேட்டபோது, ஓட்டல்களில் மிஞ்சும் பதார்த்தங்களைக் கெஞ்சிக் கேட்டு, தங்களது பசியை ஆற்றிக் கொள்வார்களாம்! அவர்கள் தெரிவித்தவை என் மனத்தை வெகுவாக வருந்த வைத்தன.



"ராம்கோ' தயாரிப்பில் ஏற்றுமதியாகும் பருத்தி நூல்கள், பயன்படுத்துவோரின் மனத்தில் எத்தகைய கருத்தைப் பெற்றுள்ளதென்பதை அறிந்து கொள்வதற்கும் ஜப்பான் பயணத்தை நான் பயன்படுத்துவது வழக்கம். 'ராம்கோ' தயாரிப்பை, உற்பத்தியை நன்றாக இனம் கண்டு, பயன்படுத்துவோர் தொடர்ந்து பாராட்டிக் கொண்டிருப்பதை அறிய மிகுந்த சந்தோஷமாக இருக்கும்"

*"இருக்காதா பின்னே? தொடர்ந்து வரும் பாராட்டு 'ராம்கோ' நிறுவனத்தின் தயாரிப்பு நேர்த்தியில்தானே அடங்கியுள்ளது?*

"ஆம். நிச்சயமாக! எங்களுக்கு ஆலைத் தொழிலில் அறுபதாண்டுகளுக்கு மேலான அனுபவம் உண்டு. என் தந்தை பி.ஏ.சி.ராமசாமி ராஜா 1938ஆம் ஆண்டிலேயே 'ராஜபாளையம் மில்ஸ்' என்ற ஓர் ஆலையைத் தொடங்கிவிட்டார்கள். தொடக்க நிலையிலிருந்தே தரத்தைப் பேணுவதில், என் தந்தையார் அதிகக் கவனம் செலுத்தி வந்தார்கள்.. தந்தையார் அவர்களின் வழிகாட்டலில் உருவாக்கம் கொண்ட 'ராம்கோ' தொழில் நிறுவனங்கள் தரத்தையே உயிர்நாடியாகக் கொண்டுள்ளன. எனவேதான் அனுபவமும், தரத்தைப் பேணும் நோக்கமும் கொண்ட எங்கள் நிறுவனத் திற்கு உலகப் புகழ் கொண்ட 'மிட்சுபிசி' நிறுவனம், ஏற்றுமதியில் 'பெரும் பான்மை'நிலையை வழங்கியுள்ளது. ஆம்.ஜப்பானுக்கு இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் பருத்தி நூலில் 'ராம்கோ' நிறுவனம் முதலிடம் வகிக்கிறது" என்றார் தொழிலதிபர் 'குருபக்தமணி' பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா.

## தினமும் தீபாவளி

விந்தைபல புரிகின்ற விஞ்ஞா னத்தின்
விளக்கங்கள் விரிகின்ற காலந் தன்னில்
எந்தமதக் கொள்கைகளும் இந்த நாட்டின்
எழிலான மானுடத்தின் தீபம் என்பேன்!

திகழ்கின்ற மதச்சடங்கு வேறா னாலும்
தினமிரங்கி மக்கட்குத் தொண்டு செய்தல்
அகழ்கின்ற உள்ளத்தால் அன்பு காட்டல்
அத்தனையும் மானுடத்தின் பொதுமை யன்றோ?

ஆதலினால் மானுடமாம் அகல்வி ளக்கில்
ஆன்றமத நல்லிணக்க நெய்யை ஊற்றிக்
காதலினால் மனிதநேயத் திரியை ஏற்றக்
கண்டிடுவோம் அனுதினமும் தீபா வளியே!




தமிழர்கரர்
தெ.முருகசாமி

## மகரவித்தை – சுவாதிஸ்டானம்



தவத்திரு சுவாமி ஓங்காரநந்தா

சுவ என்ற சொல்லுக்குப் பரலிங்கம் என்று பொருளாகும். அதற்கு அப்பாற்பட்ட வேறொரு லிங்கம் கிடையாது. ஆகவே இந்த இரண்டாவது சக்கரம் சுவாதிஸ்டானம் என்று சொல்லப்படுகிறது. இது ஆறு இதழ்களைக் கொண்டுள்ளது. ஆரஞ்சு வண்ணம் உடையது. ஒவ்வொரு இதழிலும் ஒவ்வொரு மந்த்ர எழுத்தைச் சக்தியாகக் கொண்டுள்ளது. அவை முறையே ப, ப்ப, ம, ய, ர, ல என்பன. இவையாவும் ஒளி பொருந்தியனவாகும். மின்னல் அடிப்பதைப் போன்ற வண்ணமுடையது. இந்த சக்கரம் நீர்த்தத்துவத்தைக் காட்டுகிறது. வர்ண தேவதை சக்தி இங்குள்ளது. இது மூலாதாரத்தில் இருந்து 4 விரல் இடைவெளிக்கு மேலே உள்ளது.

மேலே சொன்ன ஆறு இதழுக்குள்ளே ஒரு பெரிய வட்டம் உள்ளது. அந்த வட்டத்துக்குள்ளே எட்டு இதழ்கள் உள்ளன. அதன் நடுவில் சந்திரனின் அரைப்பகுதி உள்ளது. இது வெண்மை நிறைந்ததாகும். இதனுடைய பீஜ மந்த்ரம் வருண பீஜம் "வம்" என்பதாகும். இது மகரத்தின் மீதுள்ளது.

கருடன் மீது விஷ்ணு சக்தி உள்ளது. அதற்கு நான்கு கைகள் உண்டு. கைகளில் சங்கு, சக்கரம், தாமரை உள்ளன. அது இருக்கும் பகுதி ஜல பகுதியாகும். மஞ்சள் ஆடை உடுத்தப்பட்டுள்ளது. கழுத்தைச் சுற்றி நீண்ட நவரத்தின மாலை உள்ளது. இளமையின் தோற்றமாகும். இங்கே சக்தி ராகினி உள்ளாள். ஸ்யாம வர்ண நிலையில் இருக்கிறாள். நான்கு கைகளைப் பெற்றிருக்கிறாள். கையில் திரிசூலத்தை ஏந்தியுள்ளாள். மத்தளம், கோடரி போன்றவைகள் வைத்திருக்கிறாள். மூன்று கண்கள் உடையவள். பயங்கரப் பார்வை கொண்டுள்ளாள். பச்சை அரிசி அவளுக்குப் பிடிக்கும். மூக்கிலிருந்து தொடர்ந்து இரத்த வெள்ளம் பாய்ந்து கொண்டிருக்கிறது.

இந்தச் சக்கரத்தின் பணி மனிதனிடம் உள்ள ஆறு தீய குணங்களை நீக்குவதாகும். அகங்காரம் சம்பந்தப்பட்ட குணங்கள் முற்றிலும் நீக்கப்படுகின்றன. அறியாமை என்ற இருள் முழுவதுமாக நீக்கப்படுகிறது. காமம், குரோதம், கோபம், மதம், ஆச்சரியம், மமகாராம், மாயை, மோகம் போன்ற தீய குணங்கள் சுவாதிஸ்டான சக்கரத்தின் பணியினால் நீக்கப்படுகின்றன.

சக்தி ராகினி மேலே சொன்ன தீய குணங்களைத் தன்னுடைய ஆயுதங்களால் வெட்டி வீழ்த்துகின்றாள். தன்னுடைய கொடிய பார்வையினால் தீய குணங்களை நிர்மூலம் ஆக்குகின்றாள்.

மகாவிஷ்ணு தன்னுடைய அருட்சக்தியால் சாதகனைப் புனிதமாக்கி மாயா உலகத்திலிருந்து அவனை மீட்டுக் கொண்டு வந்து ஞான உலகத்தில் சேர்க்கிறார். 'வம்' என்ற பீஜ மந்த்ரம் அகங்காரத்தை நாசமாக்கக் கூடியது.

மூலாதாரத்திலிருந்து வருகின்ற சூட்சும நாடி சுவாதிஸ்டானத்தில் நுழைந்து மேலே செல்கிறது. குண்டலினி சுவாதிஸ்டானத்தில் நுழைந்ததும் ஆறு இதழ்கள் உள்ள மந்த்ர பூஜங்கள் முழுமையாகப் பணி செய்யத் தொடங்குகின்றன. அமுதம் பெருக்கெடுத்து ஓடுவதற்கு இது காரணமாக அமைகிறது.

சந்தோஷம்

## தூரிகை எங்கே?

கவிஞர் பிரபாகர்பாபு

ஆசைகள் சுமந்து தாரகை பறிக்கப்
பறக்கிற வேகம் இது.
ஆழ்கடல் மூழ்கிப் பவளம் திரட்டத்
துடிக்கிற தாகம் இது.

இரவுச்சூரியன் கிழக்கினைக் கீறி
எழுகிற கோலம் இது.
இறுகிய இமைகளை வைகறை விழிகள்
திறக்கிற வேளை இது.

சாதனை ஏட்டில் இரண்டோர் அங்குலம்
பதித்திடும் வேட்கை இது.



சாதக வயல்களில் தானியக் கதிர்விடக்
குதித்திடும் யாக்கை இது.

ஓவியமாகிடத் தூரிகை தேடி
சிதறிய வண்ணம் இது.
ஓலங்கள் தீரும் வேளையில் கனிகள்
அடைகிற எண்ணம் இது.

நானிலம் யாவும் நன்னிலமெங்கும்
நிலைபெறும் மாட்சி இது.
நானெனும் ஓர் அகம்பாவத்திலிருந்து
நலம்பெறும் மீட்சி இது.

தூரப்பார்வை மிகுந்தவர் ஊடே
துல்லியப் பார்வை இது.
யார்எப்போதினி எழக்கரம் தருவார்
எனும் மனத் தேவை இது.

அகிலம் வியக்கும் அறிவியல் சாதனை;
அனைத்து இனமும் ஏற்கும் போதனை!
அகிலம் தேக்கும் இயற்கையின் போக்கும்
அறிவியல் உத்தியால் நர்த்தனம் ஆடும்!

இறந்தோர் ஆவிகள் என்பது பழைமை;
இனிமேல் இறந்தவர் எழுந்தே நடப்பார்!

# எல்லாம் மானிடச் சாதனை



ஓவியக் கவிஞர்
வண்ணப்பூங்கா வாசன்

சிறப்பாய்ச் சொன்னால் 'குளோனிங்" முறையால்
சிலரைப் போலவே படைத்தே முடிப்பார்!

மாதா, பிதா சேர் களவியல் இன்றி
மலரென "டெஸ்ட் டியூப் பேபி" பிறக்கும்!
போதாக் குறைக்குக் கிழவியும் குழந்தை
புவியில் ஈந்திடக் கதவுகள் திறக்கும்!

"சந்திர மண்டலம்" கண்டதில் ஒன்று;
சாகசக் காலைப் பதித்தார் இன்று!
விந்தைகள் புரிய இயற்கையை வென்றார்!
விரிந்த அறிவியல் நன்மைகள் என்றார்!

உடுக்கள் உயரம், நீளம், அகலம்
உதய சூரியனை விடவும் பெரிதாம்!
கடுக்காய் அளவும், கணக்கிட முடியா
காதம் பலவும் நட்சத்திர வெளியாம்!

கடலைக் குடைந்து சாலைகள் அமைக்கவும்,
"கருப்பைக் குழந்தை"யை வெளியார் காணவும்
மடல்மலர் கண்ணை "லென்சால்" பேணவும்
மண்ணில் கண்கவர் காட்சிகள் என்னே...!

இயற்கை, செயற்கை எதுவாய் ஆயினும்
இனம், மதம், ஜாதி என்ற பிரிவால்
வியர்த்துக் கொட்டி, விழிநீர் பெருக்கி
விதியென நம்பி அழிவது நன்றா?...

கண்கள், கைகால் மதியுள மாந்தரே;
கண்டதும் அறியும் பண்டிதப் பதரே;
எண்ணுக ஓர் இனம்; பண்ணுக ஒற்றுமை!
எல்லாம் அறிவியல்; மானிடச் சாதனை!

# மாயம் என்ன மாயம்

திரும்பும் திசையெங்கும் திகட்டா இன்பமாய்
திக்கில்லா தலைபவர்க்கும் தீரா நிம்மதியாய்
அரும்பும் ஆனந்த மயமான வாழ்வாய்
அல்லலெல்லாம் களைந்துவிடும் அற்புதமாய்
விரும்பிப் பெருகும் தூயதோர் அன்பாய்
வாராது வந்ததென்ன மாயம்தானோ!

அரிதெலாம் உனக்கெளிது அனைத்துமே உன்சித்தம்
ஆவதெல்லாம் உன்னருளால் அகிலமே உன்நிமித்தம்
ஈரேழு உலகெங்கும் காண்கின்ற திசை தோறும்
இருக்கின்றோர் கவலை தீர்ப்பதுவே உன்வேலை
பாராள வந்திருக்கும் பகவானே உனக்கிணை
பார்த்ததுண்டோ பார்க்காதார் கூற்றும்தான் ஏற்பதுண்டோ?



பாலசாண்டில்யன்

# கைத்தடி

'கைத்தடி' இதில்தான் எத்தனை தத்துவம்?
பிய்த்துச் சொன்னால் பெரிய மகத்துவம்!




ஒருவன்கை 'தடி' என்றால் உணர்வீர் ரவுடிஎன;
ஒரு வாழ்வில் 'கைத்த அடி' எனில் கசப்(பு) அனுபவம்!

இன்பத் தமிழ்ச் சொல்லில்தான் எத்தனை அர்த்தங்கள்!
இன்பத் திருமணத்திலும் கைத்தடி இல்லாவிடில்.

காசியாத்திரையே களைகட்டாது போகுமய்யா!
நாசி விடைக்கத் கத்துவரே கைத்தடி

ஒன்றை. ஞாபகமாய் உணர்ந்து வாங்காவிடில்!
பின்புலத்தில். சீர்வரிசை. பேய்போல் பிடுங்கியபின்

காசியாத்திரை என்றோர் கனஜோர் பித்தலாட்டம்!
காசிக்கு 'நிஜமாவே' காணாமல் நான் போனால்?

என்றெண்ணும் பெண்ணின் அப்பா ஏராளம் உளர் இங்கே.
பொன்போல் பளபளத்த கைத்தடி பற்றியே

மாப்பிள்ளை சிறுதூரம் மனம்இன்றிப் போவதற்குள்
ஆப்படித்த ஒன்றுபோல் அப்பாவி மாமனார்

மந்திரங்கள் முனுமுனுத்தே மணப்பெண்ணை ஒப்படைப்பார்!
தந்திர மாப்பிள்ளையும் தாரத்தோ(டு) ஊஞ்சலிலே!

விலைகொடுத்த கைத்தடியோ வீட்டு மூலையிலே!
சிலநாள் கழித்து அதுவே தூங்கிடும் பரண்மேலே!

மாப்பிள்ளை கிழடுதட்டி. மனைவியினைப் படுத்தியதால்.
மூப்பு என்னும் தண்டனையாய் கைமுனைக்கு அது இறங்கும்!

கீதையைத் துணையாய் நீர் பற்றி நிமிர்ந்திராவிடில்.
உபாதையாய் 'கைத்தடி' உமது கை பற்றுமையா!

## ஆசையும் சபதமும்

ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன்

ஆசைகளின் அதிகரிப்பைச் சபதமாக
அன்றாடம் பலர்கருதிக் கொள்கிறார்கள்.
வேஷத்தைக் கலைக்காமல் வசனம் பேசி
வாழ்வதையே சபதமாக நினைக்கின்றார்கள்.
பூசைகளைச் செய்வோர்கள் பத்தியாலே
பிதற்றுவதைச் சபதமாக எண்ணு வார்கள்
ஆசைகளோ வேறாகும் சபதம் வேறு!
ஆசையெனும் சுயநலங்கள் சபதம் இல்லை!

வேதனையில் துடிக்கின்ற பெண்களிங்கே
வந்தவனை வாய்கிழியப் பேசுவார்கள்.
போதுமடா சாமி இனி புருஷன் வேண்டாம்.
பக்கத்தில் வரட்டுமந்தப் பாவி யென்பாள்.
ஆதலினால் இது சபதம் என்று சொன்னால்
அர்த்தமில்லை இதுவனையும் சபதம்; பின்னர்
காதலிலே பெண்ணிவளோ சிரிப்பாள்; பாவி
கைப்பிடித்த காளைமீண்டும் அப்பனாவான்.

யாருக்குச் சபதங்கள் வேண்டு மென்றால்
இளைஞருக்கு என்பதுதான் பொருத்த மாகும்.
ஊருக்குள் நாட்டுக்குள் இவரே நீடு
உயிர்வாழ வாய்ப்புண்டு என்பதாலே,
வீறுகொண்டு எழுகின்ற வேகம் இந்த
வயதுக்கு உண்டென்ற உண்மை யாலே!
பாருக்குள் சபதங்கள் செய்வதற்குப்
பொருத்தமெனில் இளைஞரைத்தான் சொல்ல வேண்டும்.

எதிர்காலம் இப்போது இளைஞர் கையில்
இவராலே இருள்விலகி வெளிச்சம் வேண்டும்.
புதிரில்லை; புலர்காலைப் பொழுதில் கேட்கும்
பூபாளம் இளைஞர்களே; முதியோ ரல்லர்.
புதியவர்க்கு அனுபவங்கள் உண்டோ என்பீர்
புதுப்பெண்ணின் அனுபவத்தில் பெருமை உண்டா?
இதுவரைக்கும் எப்படியோ, இனிமே லேனும்
இளைஞர்களைச் சபதமேற்க அனுமதிப்போம்.

# ஆலோலம் கேட்கும் அற்புத மலை

முல்லை அரசு

அது ஒரு தெய்விகக் காதல் தளம். குன்றில் அமர்ந்து குவலயத்தாரின் குறைகளைத் தீர்க்கும் குமரக் கடவுளாம் முருகக் கடவுள், தினைப் புனம் காக்க 'ஆலோலம்' பாடிய வள்ளியை வளைத்த தலம்.

விஷ்ணுவின் மகள்கள் இருவர். ஒருத்தி வள்ளி. இன்னொருத்தி தெய்வானை. இருவரும் வயதுக்கு வந்தவுடன் சினமே கொள்ளாத ஆணைத் திருமணம் செய்ய முனைப்புடன் தவமியற்றினர். முன் தோன்றிய முருகனிடம் தங்களைத் திரு மணம் செய்து கொள்ள வரம் வழங்குமாறு வேண்டினர்.

வேடுவனின் மகளாய் வள்ளியும், இந்திரனின் மகளாய் தெய்வானையும் பிறந்தால்தான் திருமணம் என்றார் விரும்பும் வரம் வழங்கும் வேலவன்.

இந்திரலோகம் அசுரர்களின் தலையீட்டால் அழிந்துபடும் நிலை மையைக் கண்டு, அசுரர்களை அழித்து இந்திரலோகத்தை மீட்டுத் தருகிறார் முருகன். நன்றிக் கடனாகத் தம் மகள் தெய்வானையை முருகனுக்குத் திருமணம் செய்விக்கிறார் இந்திரன்.

வேடுவனின் மகளான வள்ளி தினைப் புனம் காத்த காலங்களில் பல லீலைகளைப் புரிகிறார் முருகன். பின் அவளை மணக்கிறார்.

அது முதல் –

வள்ளிமலையில் அருள்மிகு சுப்பிர மணிய சுவாமி திருக்கோயிலின் கருவறையில் வள்ளி தெய்வானை யுடன் காட்சி அளிக்கிறார் முருகன்.



• மலை உச்சியிலுள்ள முருகன் கோயில்



• வள்ளி மலையிலுள்ள அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

படங்கள் : விடிவெள்ளி ஆறுமுகம்

• சமணர் குகைச் சிற்பங்கள்



• குகைக்குள் சமணர்ப் படுக்கைகள்



• வள்ளி மஞ்சள் அரைத்துக் குளித்த சுனை அமைந்த இடம்



கோயிலின் பின்புறம் சீரமைக்கப் பட்ட சரவணப் பொய்கை. அதற்கருகி லேயே வள்ளிக்குச் சிறு கோயில் ஒன்று.

வள்ளிமலை அடிவாரத்தில் வள்ளி காவல் காத்த தினைப்புனம் இன்றும் இருக்கிறது.

தினைதான் இல்லை. பதிலாக அதே மாதிரி 'லண்டானா' எனும் ஒரு வகையான புல்வனம் தான் உள்ளது.

ஆனால் –

எங்கோ தூரத்து 'ஆலோலம்' மட்டும் இன்றும் பரவசத்துடன் தரிசிக்கச் செல்லும் பக்தர்களின் காதுகளில் சன்னமாய் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது.

444 படிக்கட்டுகளைக் கடந்தால் மலை மீதும் ஒரு முருகன் கோயில், ஒரே பாறையால் குடையப்பட்டுள்ளது.

கருவறையினுள் –

'எல்லார்க்கும் எல்லாமுமாய் இங்கு நான் எப்போதும் இருக்கிறேன்'' என்றமர்ந்து அருள் வழங்குகிறார் முருகன்.

அங்கங்கே படிக்கட்டுகளின் நடுவில் இளைப்பாறும் மண்டபங்கள் பட்டுப்போல் சுத்தமாய்ப் பொலிவாய் உள்ளன. எட்டுக் கால் மண்டபம் மட்டும் விலக்கு. சிதிலங்கள் சீர்படுத்தப் படவில்லை.

பல ஆண்டுகளுக்கு முன்னர் புதுப்பிக்க முயன்றபோது ஓர் அதிர்ச்சியான அதிசயம் புலப்பட்டது. மண்டபத்தின் ஒரு பெரிய கல் பெயர்க்கப்பட்டு உள்ளே பார்த்தபோது, அமர்ந்த நிலையில் தவமியற்றிக் கொண்டிருந்தனர் முனிவர்கள்.

பார்த்த திருமுருக கிருபானந்த வாரியார், ஏ.எஸ். அருணாசலம் பிள்ளை, அப்பாதுரை ஆகிய மூவரும் மயக்கமுற்றனர். சிறு பொழுது கழிந்து தெளிந்தனர். அதன் பின்னர் அக்

கல்லை மூடிப் புதுப்பிக்கும் பணியைக் கைவிட்டனர்.

இன்றும் அம்மண்டபத்தில் செய்யும் தியானத்திற்குப் பலன்கள் பலப்பல.

மலை உச்சியின் வலப்பக்கம் பசுமையான பகுதியில் ஒரு குகை ஓடிப்போய்க் காணத் தூண்டுகிறது.

வெகுகாலம் அக்குகையில் ஒரு மௌன முனிவர் இருந்தாராம்.

அதே குகையைப் போல் பல குகைகள். ஒவ்வொன்றிலும் ஒவ் வொரு தவக்கோல முனிவர் இருந்து உலக நலத்திற்காகப் பிரார்த்தித்தார் களாம்.

சுனைகளோடு கூடிய கருங்கற் களாலான குகைகளில் பல சமணர்ப் படுக்கைகள் உள்ளன. சமணர்களின் சிலைகள் குகைப் பாறைகளிலேயே செதுக்கப்பட்டுள்ளன. இம்மலைக் கோயிலின் அருகில் திருப்புகழ் ஆசிரமத்தின மேற்குப் பகுதியில் 'சூரியன் காணாச் சுனை' எனப் படும் குமரித் தீர்த்தம் வெள்ளியாய் மின்னுகிறது.

இவ்விடத்தில்தான் முதுமைப் பருவத்தினராய் வந்த முருகன், வள்ளியின் மென்கரங்களால் தேனும் தினைமாவும் வாங்கி உண்டார்.

அவ்வாறு உண்டபோது திடீரென்று 'விக்கல்' ஏற்பட்டதன் பேரில் அதைப் போக்கத் தண்ணீர் தேவைப்பட்டது.

உடனே, 'சூரிய வெளிச்சமும், சந்திர ஒளியும் படாத தண்ணீர்தான் விக்கலுக்கு வேண்டும்'' என்றார் முருகன்.

அப்போது 'சூரியன் காணாச் சுனை'யிலிருந்து தண்ணீர் எடுத்து வந்து முருகனின் விக்கலைத் தீர்த் தாள் வள்ளி.

இத்தீர்த்தம் இதுவரை வற்றியதே இல்லை.

இத்தீர்த்தத்தைத் திருமணமாகாத ஆண்களும், பெண்களும் தலையில் தெளித்துக் கொள்கின்றனர். 'பொங்கி' என்றும் அழைக்கப்படும் வள்ளியும் அவர்களுக்கு மாங்கல்யப் பாக்கியத்தை அளித்துக் களிக்கிறாள்.

வள்ளி திருமணத்திற்குதவிய யானை வடிவ விநாயகர் இங்கு 'கணேசகிரி' எனும் பெயரில் வருவோரை வரவேற்கிறார்.

மலை உச்சியிலுள்ள பர்வதராசன் குன்று பிரபலமானது. இங்குள்ள 'ஆயல்' ஓட்டும் மண்டபத்தின் அடியில் 'திருமால் கிரிஷ்வரர்' சிவலிங்க வடிவில் உள்ளார். பிரசாதம் தந்து சடாரியால் பக்தர்கள் ஆசீர்வதிக்கப்படுகின்றனர். இங்கு சிவ விஷ்ணு கலப்பு கவனத்தைக் கவர்கிறது.

எண்ணற்ற சித்தர் பெருமக்கள் சஞ்சரித்த இம்மலையில் வள்ளி மஞ்சள் அரைத்துக் குளித்த இடத்திற்கு இன்றும் மகிமை உள்ளது.

அறுபடை முருகன் சந்நிதிகளைக் கொண்டு, மனிதப் பிறவியில் முருகப் பெருமானை மறக்காமல் தரிசிக்க நினைப்பூட்டுகின்ற இன்னொன்று 'வள்ளி தவப்பீடம்'.

வள்ளிமலை, கள்ள மனங்களைக் கூட நல்ல மனங்களாக்கும் ஆன்மிகப் புள்ளிமலை; மேயாத புள்ளிமான் உலாவிய வள்ளிமலை. ●

## சிரிப்'பூ'

### இலந்தை சு. இராமசாமி



திருமுகத்தில் பூக்கும்பூ, மகிழ்ச்சி என்னும்
தேவதையைக் காட்டும்பூ, அமைதி கொஞ்ச
வருமுகத்தில் வளரும்பூ, தாவும் சேயின்
மதிமுகத்தில் மலரும்பூ, நாணம் வாங்கித்
தருமுகத்தில் ஒளிரும்பூ, காந்தித் தாத்தா
தனிமுகத்தில் தவழும்பூ, காதல் ஏறும்
ஒருமுகத்தில் நெளியும்பூ, உற்சாகப்பூ
உயர்வான சிரிப்புப் பூ, இணையில் யாப்பூ

ஆடிவரும் சிறுகுழந்தை அமுத எச்சில்
அளையவரும், பூமுகத்தின் சிரிப்பில் துன்பம்
ஓடிவிடும், அப்பப்பா, மங்கை கண்ணின்
ஓரத்தின் சிரிப்பினிலே நரம்பு வீணை
பாடிவரும், பரவசத்தில அங்கமெங்கும்
பளபளக்கும், ஒளிசிரிக்கும், மின்னல் பாயும்
கூடிவரும் குதூகலத்தில் அணுக்களெல்லாம்
கூத்தாடும், உட்சிரிக்கும், புளகங் காட்டும்.

மணங்கவரும் கவிமணியின் நாஞ்சில் நாட்டு
மருமக்கள் மான்மியத்தைப் படித்த துண்டா?
இனப் பெருமை வானரத்துக் கெடுத்துக் கூறி
ஏற்றமிகு குயில்பாட்டில் பறவை பேசும்
தனிச்சிரிப்பு நகைச்சுவையை ரசித்த துண்டா?
தனிப்பாடல் சிரிப்புகளைச் சுவைத்த துண்டா?
இனிமைநகை இழையோடும் இலக்கியத்தை
இனியேனும் சுவையுங்கள், இளமை தோன்றும்!



ஸ்ரீ மூகாம்பிகை கோவில்: இடது கோடியில், காசி விச்வநாதர் கோவிலின் கோபுரம் போல் இருப்பது இதன் கோபுரம். பக்கத்தில் தெரியும் பெரிய கோபுரம், ஸ்ரீ பிருகத்சுந்தர குசாம்பாள் ஸந்நிதிக்குப் போகும் வழியில் இருப்பது.

# திரு இடைமருதூர் மூகாம்பிகை

திருஞானசம்பந்தப் பெருமான் சீர்காழிக் குளக் கரையில், இறைவனை, "பிரமாபுர மேவிய பெம்மான் இவன்," என்று அண்மைச் சுட்டில் குறிப்பிட்டுக் காட்டினார்.

அவர், மதுரையம்பதிக்கு அருகில் வந்தபொழுது "ஆலவாய் ஆவதும் இதுவே," என அண்மைச் சுட்டில் குறிப்பிட்டார்.

அவ்வாறே, சோழநாட்டுத் திருத்தலங்களில் சிறப்பு மிக்க திருஇடைமருதூரை, "இடை மருது ஈதே," என்று அண்மைச் சுட்டில் குறிப்பிட்டுள்ளார்.

மருத மரங்கள் நிறைந்த சோலையின் நடுவே அமைநத தலத்தை, 'இடை மருதூர்' என்று அழைத்தனர். 'இடை மருது ஈசன்', உரோமேச முனிவருக்கு மருதமரச் சோலை நடுவே ஜோதிர் லிங்கமாகக் காட்சியளித்தார்.

வீரசோழன் காடுகளை வெட்டி, இங்கு ஈசன் திருக்கோயில் திருப்பணிகள் செய்ததனால் இவ்வூரை, 'வீரசோழபுரம்' என்றும் அழைத்தனர். அவன் பெயரால் ஓடும் வீரசோழன் ஆறு (காவிரியின் கிளை நதி) இவ்வூரை அடுத்து ஓடுகிறது. கும்பகோணத்துக்கு வடகிழக்கே ஆறு மைல் தொலைவில் உள்ளது 'திருஇடைமருதூர்'.

வடமொழியில் இத்தலத்தை 'மத்யார்ஜுனம்' என்பர். இடைமருது ஈசன், 'மகாலிங்கப் பெருமான்'. 'ப்ருஹத் சுந்தர குசாம்பிகை' (பெருமுலை நாயகி) என்ற பெயர் கொண்ட அம்பிகையுடன் எழுந்தருளியுள்ளான்.

டாக்டர் ஹேமா சந்தானராமன்



ஸ்ரீ ஜ்யோதிர் மகாலிங்க ஸ்வாமிக்கு எதிரேயுள்ள பிரம்மாண்டமான நந்தி.
நடுவே தெரிவது ஸ்ரீ மூகாம்பிகை அம்மன் ஸந்நதி.

'மூகாம்பிகை' என்றால் நமக்கு, 'கொல்லூர் மூகாம்பிகை' தான் நினைவுக்கு வருவாள். ஆனால் இந்த, 'திரு இடை மருதூர்' திருத்தலத்தில் மூகாம்பிகை எழுந்தருளியிருப்பது பலருக்கும் தெரிந்திருக்காது. ஆம்! சோழநாட்டிலும் 'மூகாம்பிகை'சந்நிதி உண்டு. 'மகாலிங்கப் பெருமானையும்', 'பெருமுலை நாயகியையும்' தரிசித்து வெளியே வந்தால் நாம் 'மூகாம்பிகை' சந்நிதியைக் காணலாம். இங்கு, 'மூகாம்பிகை' தவக்கோலத்தில் எழுந்தருளியிருக்கிறாள்.

இங்கு, அகத்தியர் தவம் செய்து அம்பிகையின் தரிசனம் பெற்றார். பின்னர், இறைவியும் தவமியற்றினாள். இருவருக்கும் இறைவன் ஏகநாயகனாகக் காட்சி கொடுத்தான். வைகாசி உத்திரத்தில் இங்கு, இறைவன், அம்பிகையைத் திருமணமும் செய்து கொண்டான் என்பது வரலாறு.

திரு இடை மருதூர் மூகாம்பிகை மிகவும் சக்தி வாய்ந்த வரப்பிரசாதி. இவள், தீராத நோய்களைத் தீர்த்து வைப்பவள் என்பது பலரது அநுபவபூர்வமான கருத்து.

இவளுடைய பேராற்றலுக்குக் காரணம் அம்பிகையின் அருகிலுள்ள மேரு வடிவத்தில் உள்ள ஸ்ரீசக்கரமாகும். ஸ்ரீசக்கரம் என்பது அம்பிகைக்குரிய யந்திரம். இது வரைபடமாக அமைந்தது. இதனையே பிம்பமாகச் செய்தால் 'மேரு' என்று பெயர் பெறும். வெகுசில சந்நிதிகளில் மட்டுமே 'மேரு' பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. அவ்வகையில் இந்த 'மூகாம்பிகை' மிகவும் சிறப்புப் பெற்ற தெய்வமாக விளங்குகிறாள். இவள் ஏன் 'மூகாம்பிகை' என்று பெயர் பெற்றாள்?

பேச முடியாமல் மூகனாக (ஊமை) இருந்த ஒரு புலவருக்கு அருள் செய்ததால், இவளுக்கு 'மூகாம்பிகை' என்ற பெயர் ஏற்பட்டுள்ளது என்பது ஐதீகம். அந்தப் புலவர் வேறெவருமிலர். மகாகவி காளிதாசனின் மறுபிறவி தான்!

அம்பிகையின் பூரண அருளுக்குப் பாத்திரமான காளிதாசனுக்கு மறுபிறவியா? என்ற கேள்வி எழுவது இயல்புதான்.

பராசக்தியையே காளிதாசன் கடுஞ்சொற்களால் திட்டிவிட்டானாம்!

எப்போது?

கவிகளில் சிறந்தவர் தண்டியா? காளிதாசனா? என்ற வினா, அன்னையிடம் கேட்கப்பட்டபோது, அவள், "தண்டியே கவி" என்று கூறிவிட்டாள் அல்லவா? அதனால் கோபம் கொண்ட காளிதாசன் காளிதேவியை வன்சொற்களால் திட்டினான்.

மகா காவியங்களைப் படைக்கும் அருட்கவியின் வாயில் வன்சொற்கள் வரலாமா? வந்ததன் விளைவு தான் மூகப்பிறவி.

"தண்டியே கவி. ஆனால் நீ நானேதான்!" (த்வமேவாஹம்) என்று காளிதாசனை மிகவும் உயர்த்திக் கூறத்தான் காளி எண்ணியிருந்தாள். ஆனால் காளிதாசன் அவசரப்பட்டு, அவளை வசைபாடினான்.

கவிஞர்களுக்குப் பொறுமையும், இன்சொற்களும் இன்றியமையாதன என்பதை உணர்த்துவதே இவ் வரலாற்றின் உட்கருத்து.

பேச்சாற்றல் இல்லாது பிறந்துவிட்ட பெரும்புலவனின் வாயில், தனது தாம்பூலத்தை உமிழ்ந்து, மீண்டும் கவிபாடச் செய்தவள் திருஇடை மருதூர் மூகாம்பிகையே என்பது இப்பகுதியில் வழங்கிவரும் செய்தி. அப்போது (மூககவியாக இருந்த) காளிதாசன் பாடியதே, "மூகபஞ்சசதி". மூகனாக இருந்த புலவர் பாடிய ஐந்நூறு பாடல்களைக் கொண்டிருப்பதால் அது மூகபஞ்ச சதி என்று அழைக்கப் பட்டது.

மூககவிக்கு அருளியவள் காஞ்சி காமாட்சியே என்ற கருத்தும் உண்டு.

தெய்வங்களின் மூலத்திருவுருவங்களைத் தமது கைவண்ணத்தில் வழங்கிய அமரர் 'சில்பி', மூகாம்பிகை ஓவியத்தை (மேருவுடன்) வரைந்துள்ளார்.

## ஒன்றில்லாவிடில் மற்றொன்று உண்டோ?

இருளும் வந்ததால், ஒளியும் வந்ததோ?
இருளும் இல்லையேல் ஒளியும் இல்லையோ?
அருவம் வந்ததால் உருவம் வந்ததோ?
அருவம் இல்லையேல் உருவமும் இல்லையோ?
வறுமை வந்ததால், வளமும் வந்ததோ?
வறுமையும் இல்லையேல் வளமையும் இல்லையோ?
கருமை வந்ததால் வெண்மை வந்ததோ?
கருமையும் இல்லையேல் வெண்மையும் இல்லையோ?

மாலை வந்ததால், காலை வந்ததோ?
மாலையும் இல்லையேல் காலையும் இல்லையோ?
பாலை வந்ததால் சோலை வந்ததோ?
பாலையும் இல்லையேல் சோலையும் இல்லையோ?
இளமை வந்ததால் முதுமை வந்ததோ?
இளமையும் இல்லையேல் முதுமையும் இல்லையோ?
பழமை வந்ததால் புதுமை வந்ததோ?
பழமையும் இல்லையேல் புதுமையும் இல்லையோ?

இரவு வந்ததால் பகலும் வந்ததோ?
இரவும் இல்லையேல் பகலும் இல்லையோ?
இறப்பு வந்ததால் பிறப்பு வந்ததோ?
இறப்பும் இல்லையேல் பிறப்பும் இல்லையோ?
துறவு வந்ததால் பற்று வந்ததோ?
துறவும் இல்லையேல் பற்றும் இல்லையோ?
இரட்டையாய் எதிர்புதிர் எழுந்ததும் ஒன்றிலா?
இரண்டுமே எண்ணத்தில் எழுந்தஒரு மாயையோ?



சொ.பொ. சொக்கலிங்கம்

# பொழுது புலர்ந்தது

*பொழுது புலர்ந்தது*
*யாம் செய்த தவத்தால்*

என்ற பாரதியின் வரிகளைப் படித்து அப்படியே என் சிந்தனையை ஓடவிட்டேன்.

பொழுது புலர்ந்ததும் எத்தனை காட்சிகளை, கவிஞன் காண்கிறான்! பாரதியே மேலும் சொல்கிறான்:

*காலை இளவெயிலின் காட்சி – அவள்*
*கண்ணொளி காட்டுகின்ற மாட்சி;*
*நீல விசும்பினிடை இரவில் – சுடர்*
*நேமி அனைத்தும் அவள் ஆட்சி.*

ஆனால் எல்லாரும் இப்படி களிப்போடு அனுபவிக்க முடிவதில்லை. ஏன்? சிலருக்கு, பொழுது விடிகின்றதே என்ற அச்சம். சிலருக்கு பொழுது விடிய வேண்டுமே என்ற ஏக்கம். சிலருக்கு, பொழுதே விடியாமல் இரவே நீடித்திருக்கக் கூடாதா என்ற வேண்டுகோள். சிலருக்கு, பொழுது விடிந்து விட்டதே என்ற வேதனை.

சிறையிலே ஒரு கைதி. அவன் தான் வேலு. அவன் வாழ்க்கையில் 3½ ஆண்டு காலம் கவலையோடு இழையோடியிருந்தது. ஆம். வேலு ஆத்திரத்தில் அறிவிழந்து அடாத காரியத்தைச் செய்து விட்டான்.

பக்கத்து வயல்காரன் பழனியும் வேலுவும் அண்ணன் தம்பிபோல் பழகி வந்தனர். அவரவர் நிலத்தில் உழுது பயிர் செய்து இயற்கை பொய்க்காத போது – நல்ல மழை மாரி பெய்த போது – மண்ணும் குளிர்ந்தது. அவர்கள் மனங்களும் குளிர்ந்தன. நிலமும் விளைந்தது, அவர்கள் நட்பைப் போல. ஆனால் சேர்ந்தாற்போல் இரண்டாண்டுகள் மழை எங்கோ மறைந்து விட்டது. நிலம் எல்லாம் ஒரே வறட்சி. கிணற்றிலே தண்ணீர் வற்றி, குடிப்பதற்கே தண்ணீர் இல்லாமல் பெரும் பாடாக இருந்தது. அந்த நேரத்தில் தான் வாய்க்கால் வழியாக வாரம் ஒரு முறை தண்ணீர் விடப்படும் என்று அரசு அறிவித்திருந்தது.



வாடிய பயிருக்குச் சிறிதாவது தண்ணீர் விடலாமே, ஓரளவாவது பயிரைக் காப்பாற்றலாமே, கிடைத்த வரை ஆதாயம் என்ற நினைப்போடு விடியற்காலையிலே நிலத்திற்குச் சென்றான் வேலு. ஆனால் கருக்கலில் எழுந்து பழனி வாய்க்கால் வழியாக வந்த தண்ணீர் முழுவதையும் தன் நிலத்திற்குத் திருப்பிக் கொண்டிருந் தான். நீர் முழுவதும் திசை மாறிப் போகின்றதே என்று திடுக்கிட்டான். பழனி நட்பை மறந்து திசை மாறிப் போகிறானோ என்ற ஆத்திரத்தில் அவனைத் திட்டினான். வார்த்தைகள் முற்றின. அதன் நடுவிலேதான் பழனி கத்தினான். "அதிகமாய்ப் பேசாதே. எனக்கு மிகுந்த கோபம் வரும்." இதற்குப் பதிலாக அவன் சொன்னான் "செய்வதையும் செய்து விட்டு உனக்குக் கோபம் கூட வருமோ? அயோக்கிய நாயே!"

"யாருடா நாய்? உன் நிலத்திற்குத் தண்ணீர் வேண்டு மென்றால் உன் பெண்சாதியை ஒரு ராத்திரிக்கு எனக்கு அனுப்பி வை!" இந்த வார்த்தைகள் ஆயிரம் வேல்கள் நெஞ்சில் தைத்தது போல் பாய்ந்தன. ஆத்திரமடைந்த வேலு தன்னை மறந்து கத்தியுடன் கையை ஓங்கினான். ஒரே வெட்டில் பழனி மரம் போல் சாய்ந்தான். இந்தக் கொலைக் குற்றத்திற்காக வேலுவுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. அதை உயர்நீதி மன்றமும் உறுதிப்படுத்தியது. உச்ச நீதி மன்றம் மேல் முறையீட்டைத் தள்ளுபடி செய்தது. கவர்னருக்குப் போட்ட கருணை மனு அதே கதியை அடைந்தது. இந்த நிலையில் தான் 3½ ஆண்டுகள் சிறையிலே கண்ணீர் விட்டுக் கொண்டு கவலையுடன் இருந்தான், வேலு.

பாதி வேண்டுமானால் சொல்லலாம்:

*"கவலைப் படுதலே கடுநரகு அம்மா!*
*கவலையற்று இருத்தலே முக்தி"*

ஆம். இவனுக்கு முக்தி வரப் போகிறது. பொழுது விடியும் பொழுது அதிகாலையில் தூக்குத் தண்டனை நிறைவேற்றப் போகிறார்கள் . இந்தக்கவலையிலே யிருந்து விடுதலை. முக்திக்கு ஒரு குறுக்கு வழி தானோ? பொழுது விடியப் போகிறதே என்ற அச்சம் மனத்தைக் கவ்வியிருந்தாலும் இருள் சூழ்ந்திருந்தாலும் விடிவு வரப் போகின்றதே என்கின்ற சிறு வெளிச்சம். ஆத்திரம் கண்ணை மூடியதே என்ற அழுகை. தனக்குப் பின் மனைவி, மக்கள் தவிப்பார்களே என்ற ஆழ்ந்த துடிப்பு. இவற்றின் நடுவே பொழுது விடிந்தது. காலம் யாருக்காகத் தான் காத்திருக்கும்? தண்டனைக்கு உள்ளானான் வேலு.

★ ★ ★

ஏக்கத்தின் எல்லைக்குத் தள்ளப்பட்ட பொழுது மனம் எப்படியெல்லாம் தவிக்கிறது?

"டாக்டர்! அவருடைய நிலை எப்படி இருக்கிறது? மூச்சு விடவே திணறுகிறாரே? என்னுடைய வாழ்க்கை இருண்டு விடுமா? அவர் போவதற்கு முன்னால் நான் இறந்து விடுவேன் என்று தான் நினைத்தேன்" என்று கதறி அழுதாள் மீனாட்சி. மீளாத் துயரில் துவண்டு போயிருந்தாள்.

டாக்டர் எதையும் மறைக்க விரும்பவில்லை. கையைப் பிசைந்து கொண்டே சொன்னார்: "அம்மா! நான் எப்படி உறுதியாகச் சொல்ல முடியும்? விடிந்தால் தான் ஓரளவு அவர் உயிருக்கு உத்தரவாதம் கொடுக்க முடியும். அதுவரை கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். ஏனென்றால் மனித முயற்சிகள் அனைத்தும் செய்து விட்டோம். இனி தெய்வம் விட்ட வழி!" என்றார்.

மீனாட்சியின் கணவர் இராமு மயங்கிய நிலையிலே மருத்துவ மனையில் படுத்திருந்தார். உலகச் சூழ்நிலை பற்றித் தெரிய முடியாத உறக்கம் அவரை இறுக அணைத்துக் கொண்டிருந்தது. இதய நோயால் அவர் துடித்த பொழுது மருத்துவமனைக்குக் கொண்டு வரப்பட்டார். தன்னுடைய அலுவலகத்தில் 10 இலட்ச ரூபாயை யாரோ திருடியதற்காக அவர் மீது குற்றம் சாட்டப்பட்டது. அந்தக் குற்றத்தைக் கேட்ட பொழுது கூனிக் குறுகினார். அந்த வேதனையின் எதிரொலி இதயத்தையே பலமாகப் பாதித்து மயங்கி விழுந்ததுதான் தெரியும். பின்னர் மருத்துவமனை.

அமெரிக்காவிலிருக்கும் இரு மகன்களை உடனடியாக வரவழைக்க முடியவில்லை மீனாட்சியால். தன்னந் தனியாகக் கண்ணீர் கசிந்து கொண்டே "முருகா சரணம்" "முருகா சரணம்" என்று எழுதிக் கொண்டிருந்தாள். எவ்வளவு நேரம் எழுதினாளோ? தெரியாது. அப்படியே அயர்ந்து தூங்கி விட்டாள், உடலும் உள்ளமும் சோர்வடைந்த நிலையில். விடியற்காலை ஒரு செவிலித்தாய் அவளை எழுப்பினாள். அப்பொழுது ஐந்து மணி இருக்கும். "அம்மா! ஐயா உங்களைக் கூப்பிடுகிறார்" என்று சொன்னாள். விருட்டென்று எழுந்தாள். கட்டில் அருகே சென்றாள். கண்திறந்த கணவனைப் பார்த்து, கனிவோடு கேட்டாள்: "எப்படி இருக்கீங்க?" கணவனால் பதில் கூற முடியவில்லை. கையை அசைத்து இரு கரங்களையும் கூப்பி மேலே காட்டினான். அப்பொழுது மருத்துவர் வேகமாக உள்ளே வந்தார். அவரைச் சோதித்துப் பார்த்துச் சொன்னார்: "அம்மா! இனி பயமில்லை. நிம்மதியாக இருங்கள்."

பெருமூச்சு விட்டாள் மீனாட்சி. பொழுது விடிந்து தன்னுடைய வாழ்க்கையும் விடிந்து விட்டது. கடவுளின் கருணைக்கு கண்ணீரால் நன்றி சொன்னாள். 'முருகன் என்னைக் கைவிடவில்லை' என்று தன்னையே தேற்றிக் கொண்டு வேகமாக வெளியே இருந்த கோயிலுக்குச்

சென்று கற்பூரத்தை ஏற்றினாள். சூரியன் உதயத்தில் சிவக்கும் வானத்தைப் போல் தீபத்தின் ஒளியைக் கண்டாள். காலைப் பொழுதுக்கு நன்றி சொன்னாள்.



**ரே**வதியும் ரகுவும் இளமையின் துடிப்பால் காதல் வயப்பட்டனர். அந்தக் காதல் நிறைவேறாததற்குக் காரணம் சாதி. இந்தச் சமுதாயமே சாதி வெறிக்கு அடிமைப் பட்டது தானே? அந்தச் சாக்கடையில் மூழ்கிச் சீரழிந்து போவது தானே?

திருவாசகம் வேண்டுமானால் சொல்லியிருக்கலாம்:

***"சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதமிலி நாயேனை"*** – என்று.

பாரதி வேண்டுமானால் அறைகூவியிருக்கலாம்,

***"சாதிகள் இல்லையடி பாப்பா! – குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்!"*** – என்று.

ஆனால் இந்த அறிவுரைகளைக் கேட்டு அதன்படி நடக்கும் அறிவேது இந்தச் சமுதாயத்திற்கு?

ரேவதி ரகுவின் காதலுக்கு எழுந்த கண்டிப்புகளும் கண்டனங்களும் மிகுதி. ஆறுமாதமாக ஒருவரை ஒருவர் பார்க்க முடியாத நிலை. இருவர் மனமும் ஒன்றிப் போயிருந்தாலும் ஊர் ஏற்றுக் கொள்ளவில்லையே! இரு உள்ளங்களும் ஏங்கி ஏங்கித் துடித்தன. துன்பக் கேணியில் உழன்றன.

ஒரு நாள் இந்தக் கட்டுப்பாடுகளை யெல்லாம் மீறி ஊர் உறங்கிய பின், நிலவு விடுமுறை எடுத்துக் கொண்டு சென்ற அமாவாசையில் சந்தித்தனர், முன்னேற் பாட்டின்படி. இருண்ட இரவில் இறுக அணைத்துக் கொண்டார்கள். தனிப் பாடல் ஒன்றில் வருகின்ற வரிபோல "அமாவாசை (அம்மா ஆசை) வெட்கமறியாதா?" அவ்வரியின் இரட்டைப் பொருள் ஆசை வருகின்ற பொழுது வெட்கம் ஓடி மறைந்து விடும். அதல்லாமல் அமாவாசைக்குத் தெரியாத வெட்கம் (மேகம்) உண்டா?

இந்த நிலையில்தான், இளம் காதலர்கள் வேண்டி நின்றார்கள். 'இரவு மறையவே கூடாது. நெடுங்கதையாக வளர வேண்டும். பொழுதே விடியாமல் இருக்கக் கூடாதா? எங்களைப் பிரிக்க காலை எனும் காலன் ஏன் புலர வேண்டும்?'



**வி**தியின் விளையாட்டால் கமலா தன் கற்பை இழந்தாள். தன்னுடைய தாய் புற்றுநோயால் புழுவாய்த்

## காலையில் பார்த்தேன்!

கவிஞர் செல்லகணபதி




பொழுது புலர்ந்தது பூக்களைப் பார்த்தேன்
புதிய உற்சாகம்!

கிளைகளில் இருந்து பறவைகள் பறந்தன
கிடைத்தது புதுவேகம்!

மாடுகள் கன்றுகள் மேய்ச்சலைத் தேடியே
வயல்வெளி புல்வெளியில்

ஆடுகள் மந்தையாய் ஓடின ஓடின
அதில் ஒரு செயல்வேகம்!

ஆலையில் சங்குகள் ஊதின ஊதின
அதில் ஒரு புதுராகம்!

சோலையில் வண்டுகள் பறந்தன பறந்தன
சுகம்தரும் ரீங்காரம்!

காலையில் இயற்கையின் காட்சிகள் பார்ப்பது
கண்களின் பயனாகும்!

மாலையில் மலரும் பூக்களைப் பார்ப்பதும்
மனதுக்கு இதமாகும்!

துடித்தபோது அவளைக் காப்பாற்றப் பணமில்லை என்று பரிதவித்தாள். தான் பிறந்தவுடன் அவளுடைய தந்தை இறந்து விட்டார். அந்த விதவைத் தாய்க்குத் தான் ஒரே மகளாக இருந்து என்ன பயன்? தன்னை, பாலூட்டி தாலாட்டி வளர்த்த அன்னைக்கு, தான் எப்படி நன்றிக் கடன் செலுத்துவது? தன் உயிரினும் இனிய அன்னை வலியால் வாடிக் கொண்டிருக்கிறாள். அப்பொழுதுதான் அவளுக்கு ஓர் எண்ணம் ஏற்பட்டது. அடுத்த வீட்டுக்காரரிடம் உதவி கேட்டால் செய்யத் தயங்க மாட்டார். அவரும் தன் தந்தையின் வயதையொத்தவர். கேட்டால் தவறாக இருக்காது என்று நினைத்து அவரை அணுகினாள். ஆனால் பக்கத்து வீட்டுக்காரர் அவளைத் தமது பக்கத் துணையாக இருக்கச் சொன்னார், பணத்தைக் காட்டி. விலை மதிக்க முடியாத கற்பை இழந்தாள். ஆனால் கை நிறையப் பணம் கிடைத்தது. அன்னையின் புற்று நோய்க்கு இந்தப் பணம் மருந்தாகும் என்று மனத்தைத் தேற்றித் கொண்டாள். அன்னைக்காகச் செய்த தியாகம் என்றெண்ணினாள். ஆனால் அந்தத் தியாகம் கூடப் பயனற்றுப் போய் விட்டது. பணம் கரைந்தது. இயற்கை, அன்னையைப் பறித்துக் கொண்டது.

பின்னர்தான் இன்னல்கள் தொடர்கதையாயின. பட்ட காலிலே படும் என்பது போன்று மீண்டும் மீண்டும் அவள் இன்மை பலருக்கு விருந்தாகியது. அவள் வாழ்க்கை அப்படியே அமைந்து விட்டது. இருண்ட வாழ்க்கையில் இனிமேல் விடிவு ஏது? அந்த இருட்டிலிருந்து வெளியேற வழி ஏது? இளமை இருக்கிற வரைதானே இந்த இருளும் தொடரும்? இனிமேல் அழுதுதான் என்ன பயன்? இந்த வாழ்க்கை நெறியிலே ஈட்டிய பணத்தைக் கொண்டு அன்னையின் பெயரால் அநாதைப் பெண்களுக்கு உதவி செய்ய அறக்கட்டளை நிறுவத் தீர்மானித்தாள். அதனால் தான் தன்னுடைய மரத்துப் போன உள்ளத்தையும், உடல் வலியையும் பொருட்படுத்தாமல் அனைவருக்கும் இன்பவல்லியாக இருந்தாள். இன்னும் சில நாள்களில் அவளை நாடி ஒருவருமே வரமாட்டார்கள். அப்பொழுது தனக்குள்ளே சிரித்துக் கொள்வாள். ஆனால் அதே நேரத்தில் வருத்தப்படுவாள், தன்னுடைய லட்சியத்திற்கு அறக்கட்டளைக்கு இன்னும் பணம் சேர வேண்டுமே என்று.

சில நேரங்களில் இரண்டு மூன்று பேர் கூட அவளுடன் இரவைக் கழிப்பார்கள். அப்பொழுதெல்லாம் 'விடிந்தால் என்னுடைய லட்சியத்தை அடையமுடியாதே? எனவே இரவே நீண்டு கொண்டே இரு. என்னுடைய "இன்பப் (துன்பப்?) பயணம் தொடர்ந்து கொண்டே இருக்கட்டும். பொழுதே விடியாதே" என்று சபித்துக் கொண்டே இருப்பாள். அவளைக் கேட்டா பொழுது விடிகிறது? விடிந்த பொழுதுதான் அவளுக்கு எவ்வளவு வேதனை?

இத்துணை துன்பங்களும் இடர்களும் எதிர்வந்தாலும் கூட, ஒரு நம்பிக்கைச் சுடர் பட்டொளி வீசுவது தெரிகிறது. எங்கும் சூழ்ந்துள்ள இருள் மறைந்து இனிய ஒளி, இன்ப நல்லொளி, பரவும் என்ற நம்பிக்கை நெஞ்சினுள் உதய மாவதைத் தான் பாரதி, நாம் முதல் வரியில் கண்ட வரிக்கு அடுத்த வரியாகப் பாடுகிறான்.

*'புன்மை இருட்கணம் போயின யாவும்'*
ஆம்: பொழுது புலரட்டும்!
தீய இருள் அகலட்டும். தூய ஒளி பரவட்டும்!



# மாதவ மேகம்!

பார்வைத் தெளிவிலே பாசக் குழைவிலே
பக்கம் இழுத்துவிட்டான்-நம்
சோர்வைப் பழித்துமே தூய்மை நிறைத்துமே
சொந்தம் இழைத்துவிட்டான்-இந்தத்
தேர்வை எதிர்கொளும் தெம்பை அளித்தனன்
தேவை அழித்துவிட்டான்-துளபத்
தார்வைத்த மேனியில் சங்கமம் ஆக்கியோன்
சந்திர சேகரனாம்!

சந்திர சேகர மாமுனி யின்திருத்
தாளினைச் சேர்ந்துவிட்டால்-இங்கே
இந்திர போகமும் ஈடில்லா யோகமும்
எள்ளள வாகிவிடும்-அந்தச்
சுந்தர னின்ஒளி சிந்திய சிந்தனை
சோகத்தைச் சுட்டெரிக்கும்-அவன்
செந்தூர வண்ணத் தினில்மலர் உள்ளங்கை
செல்வங்கள் கொட்டிவைக்கும்!

கேட்டுக் கொடுப்பவன் கேள்வியின் நாயகன்
கேளா தருள்பவனோ-எங்கள்
வாட்ட மெலாந்தீர்த்து வானமாய் நிற்பவன்
மாதவ மேகமவன்-உயிர்
ஊட்டும் அவன் பெயர் ஓம்ஜெய சங்கர
ஓம்ஹர சங்கரமே!-அவன்
காட்டும் வழியொன்றே நாட்டமாய்க் கொண்டுநாம்
காலத்தை வென்று நிற்போம்!

அமுதசுரபி - தீபாவளி மலர் - 1999



மதிஒளி

# வள்ளுவம்

சுடர்

வாழ்க்கைக்குக் காவல்
வள்ளுவம்!

வள்ளுவம்
சொல்வதற்கு மட்டுமன்று.,
வாழ்வதற்கு!

வள்ளுவம் பார்ப்பதற்கா...
கேட்பதற்கா...
நுகர்வதற்கா...
இல்லை; இல்லை
வாழ்வதறகே!

அறம், பொருள், இன்பம்
ஒன்றான வள்ளுவம்!
அறவழியில் மனம் நிற்க
வழிகாட்டும் வள்ளுவம்!

வெள்ளம் உயரப்
பூ உயரும்.
வள்ளுவத்தின் ஓவியம்!
உள்ளம் உயர
வாழ்வுயரும்.
வள்ளுவத்தின் காவியம்!

வானம் எட்டும்
எண்ணங்களால்
வாழ்வாங்கு வாழ்கிறான்!
காணுமட்டும்

நாடுகளின் எல்லைகள்!
மொழிகளின் நெறிகள்!
இனங்களின் எண்ணங்கள்!...
கடந்து செல்லும் வள்ளுவம்!

செய்யும் வினையில்
சிறுமைகள்...
செய்யும் வினையில்
பெருமைகள்...
செய்வதறிந்து செய்கையில்
சேரும் என்னும் வள்ளுவம்!

முயற்சியால் சேரும் பொருள்
முறையான செலவு
உயர்வுக்கு வழி ஊக்கம்...
சொல்லுவது வள்ளுவம்!

மனக்கவலைக்கொரு
மாமருந்து!
மாசில்லா மனம்...
வள்ளுவத்தின் மருத்துவம்!

மனக்குழப்பம்
மயக்கங்கள்
ஐயப்பாடுகள்
விடுதலைச் சுடரே வள்ளுவம்!

# கி.வா.ஜ.வோடு மோத வைத்த வேலவனார்

(உலகமே அறிந்திராத வேலவரை, நன்கு அறிந்தவர் கலைமாமணி விக்கிரமன் அவர்கள். மறைவாகப் புதைந்து கிடந்த அந்தத் தமிழ்ப் புதையலை அகழ்ந்து எடுத்துத் தருமாறு என்னைப் பணித்தார் டாக்டர் விக்கிரமன் அவர்கள். மறைக்கப்பட்டவர்களிடையே மறக்கப்படாத வராக வேலவரை அச்சில் அழுந்தப் பதிக்கும் வாய்ப்பினை வழங்கிய 'அமுதசுரபி' ஆசிரியர் அவர்களுக்கு, வேலவர் எனக்குப் பிச்சையாகப் போட்ட தமிழ், தலை வணங்குகிறது – வாசவன்)

பணமும் படாடோபமும் கொட்டிக் கிடந்த ஒரு சர்வாதிகாரப் பண்ணையாரின் குடும்பத்திலிருந்து, என்னை லாகவமாகத் தட்டிப் பறித்துக் கொண்டு போனவர் பன்மொழி அறிஞர் வேலவனார்.

அலைகள் பொங்கும்.

மலைகள் தங்கும்.

வேலவனார் தங்கியிருந்தது தமிழ் மலை. அந்த மலைக்குச் சிகரங்களாக சம்ஸ்கிருதம், ஆங்கிலம், இந்தி, தெலுங்கு, கன்னடம் போன்ற பல மொழிகள்.

அவர் அறிவில் ஓங்கியிருந்தாலும், ஆன்மிகத்தில் தங்கியிருக்கவே விரும்பினார். அவர் தன் ஆற்றல்களுக் கெல்லாம் அழுத்தமாக ஒரு முகவரியை எழுத விரும்பியதே இல்லை. பிறவிக்குச் சலவைக் குறி போட விரும்பாத மாமனிதர் அவர். தன்னிலிருந்து தன்னை விலக்கி, எதையும் சாட்சியாக இருந்து மட்டுமே பார்க்கத் தெரிந்த நீரில் ஒட்டாத எண்ணெயாக வாழ்ந்தார். ஆனால் அவரை நீர் விடுவதாக இல்லை. கங்கையும் காவிரியும் யமுனையும் கூட அவரைத் தேடி வந்தன.

அவர் ரமண மகரிஷிகளால் பெரிதும் மதிக்கப்பெற்ற வேத விற்பன்ன சாம்ராட்களான ஸ்ரீமான்கள் ஜகதீச சாஸ்திரிகள், சி.வி. சாமி அய்யர் போன்ற பேரறிஞர் களுடன் சேர்ந்து சம்ஸ்கிருத சாகரத்தில் மூழ்கி, அரிய ஆய்வு முத்துகளை அள்ளி எடுத்துக் கொண்டு வந்து தந்த அமிர்த வாரியார்; வேத யோகீஸ்வரர் தேதியூர் சுப்ரமணியரின் பாராட்டைப் பெற்றவர்.

அவர் இருபத்து நான்கு மணி நேரமும் இடையறாது நடந்த பல யக்ஞங்களுக்குத் தலைமை தாங்கி நடத்தியவர். வேலவர் அந்தணர் குலத்தில் பிறக்காத காரணத்தால், சாஸ்திரங்கள் அவரை நேரிடையாக யக்ஞங்களைச் செய்ய அனுமதிக்கவில்லை. அதனால் அவர் சற்றே விலகி இருந்து கொண்டு, கிரமங்களையும், கிரந்தங்களையும் சொல்லச் சொல்ல, பிராமணோத்தமர்கள் யக்ஞங்களைச் செய்வார்கள். மகாகுரு ஸ்ரீ சுப்ரமணிய அய்யர் அவர்களும், பிரம்மஸ்ரீ மாங்குடி எம்.ஆர்.துரைராஜய்யர் அவர்களும், 'வேத சாகரம்' பூஜ்ய ஸ்ரீ அம்ருதானந்த யோகி அவர்களும் அவரை அந்த மகோந்நத பீடத்தில் இருத்தி வைத்து மகிழ்ந்த புண்ணியப் பெருந்தகைகள்.

சம்ஸ்கிருத பூஷணங்களான நான்கு வேதங்களையும் ஆறு சாஸ்திரங்களையும், தர்க்க சாஸ்திரங்களையும் பழுதறக் கற்ற தமிழர் வேலவர். 'மறைமலை அடிகளார் வேதங்களின் நுண்மாண் நுழைபுலங்களுள் நீந்தி வந்தவரா?' என்ற கேள்விக்கு எனக்கு இதுவரை பதில் கிடைக்கவில்லை.

'கல்கண்டு' ஆசிரியர் திரு.தமிழ்வாணன், வேலவரிடம் பயின்ற இன்னோர் ஆன்மிக மாணவர்.

கவிஞர் கண்ணதாசனும், நானும் ஒரே சமயத்தில் செட்டிநாட்டிலிருந்து பறந்து வந்த செந்தமிழ்ப் பறவைகள். அப்பொழுதெல்லாம் எங்களுக்கு இறக்கைகள் இருந் தனவே தவிர, இருக்கைகள் இல்லை. தேடலும், வாடலும் எங்களை இறுகப் பிணைத்தன. வேலவர் எனக்கு 'அத்தான்' என்பதால், கண்ணதாசனுக்கும் அவரே அத்தான்!

வேலவர் கடைத் தெருவுக்கு வராத கர்பக் கிரஹத்துக் கவிஞர். அவர், ''ஜீவன் அழுக்குத் துணி, சேரும் உவர் மண் பிறப்பாம். பூவுலக வாழ்க்கை என்னும் பொல்லாச் சொறிக் கல்லினிலே, மோதி அடிக்கையிலே, முற்றும் கசக்கையிலே...'' என்று தொடங்கும் ஒரு பாடலை எழுதினார்.

அந்தப் பாடலைக் கேட்ட கண்ணதாசன், 'ஆஹா, ஓஹோ!' என்று பரவசக் கூச்சல் போட்டதோடு, அந்தப் பாடலையும் வரி வரியாக எழுதிக் கொண்டார்.

நான் 1950ஆம் ஆண்டு வாக்கில் பல சோதனை நெருப்புகளில் வெந்து, விழுப்புண்களோடு பத்திரிகை உலகத்தின் உச்சியைத் தொட்டு நின்றேன்.

அதே போல கதாசிரியராக வாழ்க்கையைத் தொடங்கி, கவிஞராக மாறி, திரையுலகில் கொடி கட்டிப் பறந்தார் கண்ணதாசன்.

அதற்குள் பத்து வருடங்கள் பறந்தோடி விட்டன. ஆனால் கண்ணதாசன் வேலவனாரின் பாடலை மறக்க

*கலைமாமணி வாசவன்*

# இருளகற்றுவோம்

இதமாய்ப் பிறருடன் இணக்கமாய் நடந்து
பண்பாய் ஒழுகிப் பாழ்தரு சினத்தை
நாளும் ஒதுக்கி நயமுறப் பேசிச்
சிந்தை தெளிந்து செம்மையாய் வாழ்வில்
மங்கா வொளிபெற மனவிரு ளகற்றுவோம்.

என்று தோன்றியதோ சமுதாயம்: அன்று
தோன்றியதே சாதியும் சமயமும். அதனால்.
ஏற்றமும் தாழ்வும் இருநில மீதில்
தோற்றிட எண்ணிலா மக்கள் இடரொழிய
சாதிமத பேதமெனும் இருளினை யகற்றுவோம்.

முன்னைப் பெரியோர் மூதறிஞர் பலரும்
பன்னெடுங் காலமாய்ப் பகர்ந்த மொழியில்
முனிவர்கள் சித்தர்கள் முனைந்து கண்ட
முதலும் முடிவு மில்லாச் சோதியாம்
அருளினை உள்ளத்தில் ஆழமாய்த் தேக்கியே
அருட்பெருஞ் சோதியைக் காணப் பெற்று
இழிவெனும் ஆன்ம விருளினை யகற்றுவோம்.

**நெய்தற்கிழான்**

வில்லை. ஏ.பி.நாகராஜனின் 'திருவருட்செல்வர்' படத்திலே வேலவனாரின் 'ஜீவன் அழுக்குத் துணி'ப் பாடலை, கொஞ்சம் அப்படி இப்படி மாற்றி 'வெளுத்துக் கட்டி'யிருந்தார் கண்ணதாசன்.

வேலவர் சுக பிரம்மம்.. நானோ துர்வாசன். நான் ஓடிப் போய் கண்ணதாசனைக் 'கன்னா, பின்னா' என்று திட்டினேன்.

கண்ணதாசனோ எனக்கு மேல் துள்ளிக் குதித்து, 'வாசவா! வேலவர் உனக்கு மட்டும் தானாடா அத்தான்? எனக்கும் அத்தான் தானடா! என் அத்தானின் பாட்டை நான் என்ன வேண்டுமானாலும் செய்வேன். அதைக் கேட்க நீ யார்?'' என்று கூச்சலிட, நான் கப், சிப்!

கண்ணதாசனும், நானும் 'டா' போடாமல் பேசியதே இல்லை. அந்த 'டா' எங்கள் அன்பினுள் விட்ட அடிவேர்.

வேலவர் எதையுமே தேடிப் போனதில்லை. ஆனால் அவரைப் படவுலகம் வீடு தேடி வந்து அழைத்துக் கொண்டு போயிற்று. ஜூபிடருக்காக கிருஷ்ண விஜயம், ஹரிதாஸை எடுத்த ராயல் டாக்கீஸுக்காக சுதர்சன், ஹரிதாஸின் டைரக்டர் சுந்தர் ராவ் நட்கர்னிக்காக கோடீஸ்வரன், அன்றையப் பிரபல ஒளிப்பதிவாளர் கே.ராம்நாத்தின் விடுதலை, பட்சிராஜா ஸ்டுடியோவின் சிவாஜி கணேசன் நடித்த கல்யாணியின் கணவன், மாடர்ன் தியேட்டர்ஸின் ஆரவல்லி போன்ற பல படங்களுக்குக் கதை, வசனம் எழுதினார். திரையுலகத்தை ஏனோ அவருக்குப் பிடிக்கவில்லை. அதை விட்டு நிரந்தரமாகக் கழன்று விட்டார்.

நான் அவரை ஓயாமல் பிடுங்கி எடுத்ததற்காக என் பதிப்பகத்துக்குப் பல நூல்களை எழுதினார். 'வானதி' திருநாவுக்கரசும், தமிழ்வாணனும் கேட்டுக் கொண்டதற் காகச் சில நூல்களை எழுதினார். அந்தத் துறையிலும் பிரபலமாகிவிடக் கூடாது என்பதில் மிகுந்த எச்சரிக்கை யாக இருந்தார் அவர்.

உலகம் நேசிக்கிற புகழின் ஆதாயங்கள் எல்லாம், அவருக்குக் கால் தூசி, ஒட்டுக்குள் ஒட்டாத புளியம்பழம் அவர்.

அவருக்கு என்னதான் தெரியாது? சங்கீதத்தின் சூட்சுமம், அவரிடம் அக்ஷரம் கற்றுக் கொள்ளும். மாங்குடி இராமநாத பாகவதர், சூலமங்கலம் வைத்தியநாத பாகவதர், மகாராஜபுரம் விஸ்வநாதய்யர், செருகளத்தூர் சாமா போன்ற சங்கீத மேதைகளை 'நான்கு பேருக்கு'த் தெரியாத அளவுக்கு அந்தரங்கமாகச் சந்தித்து, இராகங்களின் புதிய பரிணாமங்களைப் பற்றிப் பேசுவார். அவர் காட்டிய கற்பனை வானில் பிருகா சஞ்சாரம் செய்வார்கள் அந்தச் சங்கீத மேதைகள்.

ஆனால், அவர் ஒரு மேடையில் கூடப் பாடியதில்லை. 'எதிலும் பெயர் எடுத்துவிடக் கூடாது' என்பதில் மிக மிக விழிப்பாக இருந்த சித்தர் அவர்.

ஜோதிடத்தில் அவர் அரிய பெரிய ஆராய்ச்சி களையெல்லாம் செய்திருந்தார். அது எங்களைப் போன்ற அணுக்கமானவர்களுக்கு மட்டுமே தெரிந்த ரகஸ்யம். அது எப்படியோ பிரபல கை ரேகை நிபுணரும், பெரிய கோடீஸ்வரருமான பி.டி.சுந்தரத்துக்குத் தெரிந்துவிட்டது. இந்திரா காந்தி முதல் இந்தியப் பெரும் கோடீஸ்வரர்கள் வரை, சுந்தரத்தின் ஒரு சொல்லுக்காகக் காத்திருந்த நேரம் அது. ஆனால் சுந்தரமோ வேலவர் வாழ்ந்த சின்னஞ்சிறு இல்லத்திற்கு வந்து, "நீங்கள்தான் என்னைத் தூக்கிவிட வேண்டும்'' என்று அவர் காலில் வீழ்ந்தார்.

"சுந்தரம்! நீங்கள் இப்போதே வானைத் தொட்டு நிற்கிறீர்கள். உங்களை இன்னும் கொஞ்சம் தூக்கி விட்டால், வானத்தையும் இன்னும் மேலே கொஞ்சம் தூக்கிவிட வேண்டுமே! அதற்கு எனக்கு ஏது சக்தி?'' என்று சிரித்தார்.

"அப்படியில்லை. என் சொல்லுக்குக் கொஞ்சம் சக்தி குறைந்து வருகிறது. நான் இந்திரா காந்திக்குச் சொன்னது பலிக்கவில்லை. அவர் தோற்றுவிட்டார். அதனால் அவர் என்மீது அதிருப்தி அடைந்திருக்கிறார். ரேகையை விடத் துல்லியமானது ஜோதிடம். எனக்கு ஜோதிடம் தெரியாது. நீங்கள் கருணை கூர்ந்து இந்திரா காந்தியின் ஜாதகத்தை ஸ்புடம் செய்து பலன் சொல்ல வேண்டும்!" என்று கண்ணீருடன் வேண்டினார் சுந்தரம்.

வேலவர் குணத்தில் மெழுகு. அவர் சுந்தரத்தின் கண்ணீரில் அப்படியே உருகிப் போனார். இந்திரா காந்தியின் ஜாதகத்தை வாங்கினார்.

'ஸ்புடம்' என்பது அபிராமி பட்டர் நெருப்பு உறியின் மீது நின்று அந்தாதி பாடியதைப் போன்றது. ஒருவரின் ஜாதகத்தில் கணத்துக்குக் கணம் பலன் எழுதுவதற்குப் பெயர்தான் ஸ்புடம். கணம் தவறினால் ஜாதகமே ரணமாகி விடும்.

வேலவர் பத்து நாள்கள் உட்கார்ந்து இந்திரா காந்தியின் ஜாதகத்தை ஸ்புடம் செய்து, ஆங்கிலத்தில் 640 பக்கங்களில் பலன் எழுதினார்.

பதினோராவது நாள் பி.டி. சுந்தரம் வேலவரிடம் பலனை எதிர்பார்த்து வந்தார். எதிர்பார்த்தது அவருக்குக் கிடைத்தது. "அடுத்த தேர்தலில் இந்திரா காந்தி பெரும் மெஜாரிட்டியுடன் ஆட்சியைப் பிடிப்பார்!" என்று ஸ்புடத்தின் நிறைவு வாசகங்கள் கூற, சுந்தரம் தானே ஆட்சியைப் பிடிக்கப் போவதைப் போல மகிழ்ந்து வேலவரின் காலில் விழுந்து, ஜாதகத்தை வாங்கிக் கொண்டு போனார்.

போனவர் போனவர்தான். பிறகு திரும்பி வரவே யில்லை.

வேலவரின் கணிப்பு அப்படியே பலித்தது. அடுத்த தேர்தலில் இந்திரா காந்தி 350 எம். பிக்களின் பலத்துடன் ஆட்சியை அமைத்தார்.

"உங்கள் வாக்கு நூற்றுக்கு நூறு பலித்து விட்டது" என்று சுந்தரத்தைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடினார் இந்திரா காந்தி.

அதற்குக் காரணமான வேலவர் சுந்தரத்தால் அடையாளம் கூடக் காட்டப்படவில்லை.

இப்படி எதிலுமே அடையாளம் தெரியாமல் போனவர் வேலவர்.

காற்றைப் போல அடையாளம் தெரியாமல் வாழ நினைத்த வேலவர், இறுதி வரை அந்த உறுதி பிறழாமல் வாழ்ந்தார். அதனால் தானோ என்னவோ, தன் குலத்தை அடையாளம் காட்ட ஒரு குழந்தைச் செல்வத்தைக் கூடப் பெற்றுப் போட்டுவிட்டுப் போகவில்லை அவர். என்றாலும், என்னை இந்த உலகுக்கு அடையாளம் காட்டுவதற்காக, என்னை என் குடும்பத்திலிருந்து தட்டிப் பறித்துக் கொண்டு வந்த கதையைச் சொல்லாவிட்டால், இந்தக் கட்டுரை நிறைவு பெறாது.

இன்னும் கொஞ்சம் வேலவரைப் பற்றிச் சொல்லிவிட்டு, பிறகு நான் என்னிடம் வருகிறேன்.

வேலவரின் இயற்பெயர் வேலுப் பிள்ளை. எங்கள் உறவினர்களுள் சொந்தக் கார் வைத்திருந்த அரண்மனைப்பட்டி சுந்தரம் பிள்ளையின் ஒரே மகன், அந்த வட்டாரத்திலேயே முதன் முதலில் ஆங்கிலம் பயின்ற எங்கள் மண்ணின் மைந்தர். என்னுடைய ஒரே அக்காள் பொன்னம்மாளின் அன்புக் கணவர்.

## மனச் சுவர்

மனம் என்பது காற்றாகும்; தென்றல்
மகிழ்ச்சியாகும்; புயலாலே துன்பம்
சினமாகும்; சுழல்காற்றால் இன்பம்
சிதைந்தோடும்; வறுமைதான் மிஞ்சும்.
மனத்திலொரு மயிரிழை போல் சாதி
மனச்சுவராய் தடையாகி இங்கே
தினந்தோறும் புறவாழ்வில் சேர்ந்தே
திளைத்தாலும் வேறுபட்டே நின்றோம்.

காற்றுகூட சுழன்றடிக்கும் போது
கனிந்துருகி படுத்தோடி மாறும்
போற்றுகின்ற மனிதனே மாற்றம்
பொறுப்போடு சிந்தித்தால் மாறும்
வேற்றுமையா கர்ப்பப்பைத் தோற்றம்
வெவ்வேறு இடம்பிறந்தோம்; அந்த
வேற்றுமையே இன, மதங்க ளாகி
வெறித்தனமாய்ச் சண்டையிட்டுச் செத்தோம்

தனதென்ற உணர்ச்சிமனம் கூடி
தன்மனத்தை ஆதிக்கம் செய்து
தனதெதிர்ப்பை வன்முறையில் காட்டி
தன்நாட்டு மக்களையே கொன்றால்...
தனதென்ற மனச்சுவரு டைத்து
சமத்துவம்தான் இன, மதங்கள் என்ற
தனித்தன்மை நல்லிணக்கம் பெற்றால்
தன்னாலே அமைதியாகும் நாடே!

கவிமாமணி பாளை இளமாறன்

ஒரு ஜமீன்தாருக்கு இணையாக வாழ்ந்த சுந்தரம்பிள்ளை, தன் பிள்ளைக்குப் பன்மொழிகளையும் பயிற்றுவிக்க, ஓர் அறிஞர் குழாமையே அரண் போல அமைத்திருந்தார்.

அந்த அரணுக்குள் வேலுப் பிள்ளை பன்மொழி களால் நிர்மாணிக்கப்பட்ட மாபெரும் அரண்மனையாக உருவெடுத்து நின்றார்.

இந்தக் காலக்கட்டத்தில்தான் நான் வருகிறேன். நானாகவா வந்தேன்? இல்லை; நான் கடத்திக் கொண்டு வரப்பட்டேன்.

நான் ஆறு வயது வரை ஊரில் அம்மண ஊர்வலம் செய்தேன். என் தாயாரை அதட்டி உட்கார வைத்துப் பால் குடித்தேன். எத்தனை பெரிய ஆளையும் எட்டி உதைத்தேன். உதைத்த என் காலுக்கு முத்தம் கொடுக்காவிட்டால், எங்கள் வீட்டு முரட்டு எடுபிடிகள், அவர்களைப் பின்னிப் பிரியைக் கட்டி விடுவார்கள்.

ஒரு முறை எங்கள் ஊருக்கு வந்த அத்தான் வேலவர், 'அரக்கர் குல திலக'மாக வளர்ந்து வரும் என்னைப் பார்த்துக் கதி கலங்கிப் போய், ஒரு முடிவுக்கு வந்தார். பிறகு என்னை ஒரே கொத்தாகக் கொத்திக் கொண்டு போய்த் தமிழில் போட்டு விட்டார்.

வேலவர் என்னைப் போட்ட இடம் தெரியாமல் இருக்க, என் பெற்றோரிடம் ஒரு தந்திரம் செய்தார். "இலுப்பைக்குடியிலே பள்ளி இல்லை. நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்யாசாலையில் குருகுல சம்பிரதாயத் தோடு கல்வி கற்றுத் தருகிறார்கள். சீனிவாசன் (என் இயற்பெயர்) முரடனாக இருக்கிறான். அவனை அந்தப் பள்ளியில் போட்டு 'வதக்கி' எடுத்தால்தான் உருப்படுவான்!" என்றார்.

என் பெற்றோர் அவரை நம்பி என்னை அனுப்பி வைத்தார்கள். அவர்கள் நம்புவதற்காக என்னை திருநாவுக்கரசு வித்யா சாலைக்கும் அனுப்பினார் வேலவர். ஆனால் என்னை 'வதக்கி' எடுத்தது பள்ளி இல்லை; அவர்தான்.

'நின்றால் அடி, குனிந்தால் குத்து' என்று தன் முதல் பயிற்சியைத் தொடங்கினார் அவர். இரும்பை உருக்க நெருப்பில் போடுகிற மாதிரி, கடுமையான ஓர் உலைக்களம் அது. அந்த நெருப்பில் என் நெஞ்சில் இருந்த இரும்புக் குணம் எல்லாம் உருகிக் காணாமல் போய் விட்டது. இரும்பை உருக்கினால் இதயம் கிடைக்குமோ?

என்னைப் பக்குவம் செய்த பிறகு, பயிர் செய்யத் தொடங்கினார் வேலவர்.

சூடாமணி நிகண்டின் பதினோராவது பெயர்த் தொகை அகராதியை என் கையில் கொடுத்து, "நீ தினசரி பள்ளிக்குச் செல்வதற்கு முன்னால், இதில் இரண்டு செய்யுட்களை மனப்பாடம் செய்து என்னிடம் ஒப்பிக்க வேண்டும்!" என்று உத்தரவிட்டார்.

நான் அழுது கொண்டே நிகண்டைப் படிக்கத் தொடங்கினேன்.

அப்படித்தான் தமிழ் எனக்குள் அழுது கொண்டே பிறந்தது.

குழந்தை அழுது கொண்டுதானே பிறக்கிறது?

## மீண்டும் மகாத்மா

கடனில்லா பாரதத்தினைச் சுதந்தரமாய<br>
வாங்கித் தந்தார் ஒரு மகாத்மா<br>
பிறகு ஆண்ட மன்னர்களோ<br>
ஆடம்பரத் தேரோட்டம் நடத்தி<br>
அரசியல் சூதாடி கடனில் நீராடி<br>
அண்டை தேசத்தார்க்கு<br>
அடமானம் பேசும் அவலநிலை!

ஆணும், பெண்ணும் இருசாதி என்று கூறிப்<br>
பல சாதிகளைக் கொண்டு<br>
ஆட்சிக்கு வந்த அரக்கர்கள்<br>
ஏழையின் முதுகில் ஏறிநின்று<br>
ஏர்முனை போல் நாக்கை விரித்து<br>
முச்சந்தியில் மேடை கட்டி<br>
மூச்சுப் பிடிக்கப் பேசும்<br>
மூர்க்கர்களோ ஏராளம்.<br>
அன்றாட வாழ்க்கையோ அவல நிலை.<br>
குனிந்த முதுகினை நிமிர்ந்து<br>
பார்க்க முடியாமல்<br>
குனிந்து குனிந்து செல்வதே<br>
அவன் பழக்கம்.

இந்தியக் குடிமக்களின்<br>
அயல்நாட்டு வங்கியில்<br>
உறங்கும் பணமிருந்தால்<br>
பாரதத்தின் கடனைப் போக்கிப்<br>
பணக்கார நாடுகளோடு<br>
தோள்கொடுத்து நிற்கலாம்.<br>
அதற்காக மீண்டும் பிறக்க வேண்டும்<br>
ஒரு மகாத்மா.

**வேலூர் ராதாகிருஷ்ணன்**




கவிமாமணி மயன்

கறுப்புக் கோட்டுக் கச்ச மணிந்த
கற்பனை யுலகின் அரசன் நீ!
நெருப்புச் சுவையில் கவிதை எழுதிய
நெஞ்சக் கனலின் தீச்சுடர் நீ!
விருப்பம் மிகுந்த கண்ணன் பாட்டை
வேண்டிப் படைத்த பக்தன் நீ!
கருப்பஞ் சாறாய், கற்கண்டாய் சுவைக்
கவிதை படைத்த மாகவி நீ!

வீசும் புயலாய் எரியும் கனலாய்
வெள்ளம் நிகர்த்த சொல்வீச்சு!
மாசு படாத வீரம் செறிந்த
தேசம் போற்றும் கவிப் பாய்ச்சல்!
நேசத் தமிழின் பாசம் மிகுந்த
கவிதை உன்றன் உயிர்மூச்சு!
வாசக் கொழுந்தே வரகவி பாரதி
வாழிய என்றும் உன் பேச்சு!

சொந்த நாட்டைச் சுரண்டும் பறங்கியர்
சூதுகள் எல்லாம் கவி வெல்லும்!
இந்திய நாட்டின் இனிக்கும் சுதந்தரம்
ஏற்பதன் முன்உன் கவிசொல்லும்!
அந்த மில்லாத மாகவியே உன்
ஆற்றல் வசனம் அணி செய்யும்.
சிந்தை மகிழ்ந்து வைர வரிகளின்
சிறப்பினைப் போற்றிப் பணிந்திடுவோம்.

அழுது கொண்டே பிறந்தால் தானே குழந்தை உயிரோடு இருப்பதற்கு அடையாளம்?

அன்று நான் அழுது கொண்டே படித்ததால்தான் என்னுடைய தமிழ் உயிரோடு இருக்கிறது.

நிகண்டைப் படித்து முடித்தேன். எனக்குள் ஒரு தமிழ் அகராதி அச்சாகி விட்டது.

முதலில் அழத் தொடங்கிய நான், பிறகு தமிழைத் தொழத் தொடங்கி விட்டேன். அதனால், இந்த உவர் மண் நிலத்தை உழுது பயிர் செய்த வேலவருக்கு மிகுந்த உற்சாகம்.

அவர் இரண்டு பண்டிதர்கள் கொள்ள வேண்டிய அனைத்துந் தமிழ் எல்லைகளையும் எனக்குள் நிறைத்தார். அடுத்து வடமொழி (சம்ஸ்கிருதம்) என்ற மாற்றுப் பயிரை, என்னில் பயிர் செய்தார். அவர் விதைத்ததையெல்லாம் வீண் போகாமல் விளைவித்துக் காட்டினேன் நான்.

வேலவரிடமிருந்த தமிழை மட்டும் எடுத்துக் கொண்டு, அவருடைய ஒடுக்கத்திலிருந்து நான் வேறுபட்டேன். அலைகளை அள்ளி விழுங்கும் ஆவேசத்தோடு, நான் எழுத்துலகில் ஆயுத வீரனாகக் களம் புகுந்தேன். கூர் மழுங்காத அந்தத் தமிழ் ஆயுதத்தை என் கையில் எடுத்துக் கொடுத்தவர் வேலவர்.

ஒரு காலத்தில் 'கலைமகள்' ஆசிரியர் கி.வா.ஜ. அவர்கள், 'தமிழில் பிழையில்லாமல் எழுதுவது எப்படி?' என்ற துணுக்குத் தொடரை, கலைமகளில் எழுதி வந்தார். அதில் 'சொருகுதல்' என்று எழுதுதல் பிழை. "செருகுதல் என்றே எழுத வேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தார். அது மிகப் பெரிய பிழை.

கி.வா.ஜ.அவர்கள் என் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் காரணமாக இருந்தவர். என் பெருமதிப்புக்கு உரியவர். 'பிழை இல்லாமல் எழுத வேண்டும்' என்று கூறிக்கொண்டே பிழை செய்தால் எப்படிப் பொறுப்பது? நான் என்றோ படித்த நிகண்டு போர் ஆயுதமாக மாற, நான் அவர் முன்னால் போய் ஒரு வீரனாக நின்றேன். "சார்! நீங்கள் எழுதியதுதான் பிழை. 'சொருகுதல் செருகுதல் பேர்' என்கிறது நிகண்டின் பெயர்த் தொகை அகராதி!" என்றேன் நான்.

கி.வா.ஜ. அவர்கள் வாய் திறக்கவில்லை. அவர் முகத்தில் எப்போதும் நீங்காதிருக்கும் 'வித்யா கர்வம்' அப்போது மழையில் நனைந்த கோலமாகிப் போனதை அருகே இருந்த கா. ஸ்ரீ. ஸ்ரீ. தி. ஜ. ர. த. நா. சேனாபதி முதலான எழுத்து ஜாம்பவான்கள், பார்த்தும் பார்க்காதவர்களைப் போல முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். கி.வா.ஜ.பெருந்தகையாளர். "ஆமாம். நீ சொல்வது சரிதான்" என்று என்னைப் பாராட்டினார்.

அந்த மிகப் பெரிய தமிழ் அறிஞரை, இந்தச் சிற்றுளி சிறுகச் செதுக்கியதற்குக் காரணமான வேலவர், என்னைப் பெற்றெடுத்த தமிழ்த் தாய்.

இன்று என் தாய் இல்லை. ஆனால் அவர் என்னுள் விட்டுச் சென்ற தமிழ் இருக்கிறது. என்றும் உள்ள தென் தமிழில் நின்று வாழ்ந்து கொண்டிருப்பார் என் மூலவரான வேலவர். ●

# அழகுக்கு அழகு சேர்க்கும் நிலையங்கள்

'கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்' – இது பக்தர்களின் பழைய மொழி. 'பியூட்டி பார்லர் இல்லாத ஊரில் இருக்கவே வேண்டாம்' – இது நாகரிகப் பெண்களின் இன்றைய புது மொழி.

இந்த அளவுக்கு அழகு நிலையங்களின் ஆதிக்கம் ஊருக்கு ஊர், தெருவுக்குத் தெரு தற்போது அதிகமாகி வருகிறது.

பத்து வயதுச் சிறுமி முதல் முதுமை நிலை அடைந்த பெண்கள் வரை அழகு நிலையத்துக்குச் செல்லும் ஆசை வந்து விட்டதே என்று பழைமை பேசுபவர்கள் பேசினாலும் நாகரிக வளர்ச்சியின் நல்ல அடையாளமே இந்த அழகு நிலையங்கள் என்று அனைவரும் ஒப்புக் கொள்ளும் காலம் வந்து விட்டது.

சுமாரான அழகுள்ள பெண்களைக் கூட 'அழகு தேவதை' யாக்கும் அற்புத வித்தையை இந்த அழகு நிலையங்கள் அறிந்து வைத்திருப்பதால் பாவையரின் கூட்டம் பியூட்டி பார்லர்களை நோக்கிப் படையெடுத்து வருகிறது.

ஆனால் முழுமையான, முறையான அழகுக் கலைப் பயிற்சி பெற்ற பெண்கள் நடத்தும் பியூட்டி பார்லர்களே, மற்ற அழகு நிலையங்களை விடப் புகழ் பெற்று முன்னணியில் இருந்து வருகின்றன. அப்படி முதல் தரத்தில் இருக்கும் சில பியூட்டி பார்லர்களுக்குச் சென்று அவர்கள் சேவையை அறிய விரும்பினோம்.

ஆர். பட்டம்மாள்

மதுரை கோச்சடை டோக்நகர் எஸ்.பி.ஓ.ஏ. காலனியில் 40, ஸ்ரீநி என்ற முகவரியில் மூன்றாண்டுகளாக முழுமையான அழகுக் கலை மற்றும் உடற்பயிற்சிகளைப் பெண்களுக்கு அளித்து வரும் 'கல்யாணி பியூட்டி கிளினிக்' மற்றும் 'தேவராஜ் ஸ்லிம் சென்டர்' அதிபர் திருமதி விஜயா தேவராஜ் அவர்களைச் சந்தித்துப் பேசினோம்.

"நான் அடிப்படையில் ஒரு விளையாட்டு வீராங்கனை. எட்டு வயது முதலே ஓட்டப் பந்தயம், லாங் ஜம்ப், ஹை ஜம்ப் போன்ற பல விளையாட்டுப் போட்டிகளில் பங்கு பெற்று பள்ளி, கல்லூரியில் படிக்கும்போது பல வெற்றிக் கோப்பைகளைப் பெற்றவள். இந்திய ஆக்கி டீமில் விளையாடி இருக்கிறேன்.

1975ஆம் ஆண்டில் அழகுக் கலையைப் பம்பாயில் படித்தேன். (இகாபனா) 'IKA BANA' என்ற முறைப்படி வீடுகளில் பூக்கள் அலங்காரம் செய்யும் கலையையும் கற்றேன்.

1996இல் கல்யாணி பியூட்டி கிளினிக் தொடங்கினேன். மறைந்த என் கணவர் நினைவாக 1998இல் தேவராஜ் ஸ்லிம் சென்டரைத் தொடங்கினேன். இப்போது இவை இரண்டும் இணைந்து என் இல்லம் 'ஹவுஸ் ஆஃப் பியூட்டி அண்டு ஹெல்த்' ஆகத் திகழ்கிறது.

வி.ஐ.பி., நடுத்தர, சாதாரணக் குடும்பப் பெண்கள் என் வாடிக்கையாளர்களாக என்னைச் சகோதரியாக நினைத்து அன்புடன் இங்கே வருகிறார்கள். என் 'கல்யாணி பியூட்டி "கிளினிக்" கில் புதிதாக அறிமுகமாகும் அனைத்து அழகு சிகிச்சைகளையும் தரத்துடன் பெண்களுக்கு அளித்து வருகிறேன். மெடிக்யூர், பெடிக்யூர், த்ரெட்டிங், வாக்ஸிங், டை அனைத்து வகை



★ அழகுக் கலைப் பயிற்சி



★ அதி நவீன உடற்பயிற்சிக் கூடம்

வேதியல்கள், SHANAAZ GOLD / FACIAL மணப்பெண் அலங்காரம், மெகந்தி, ஹேர்கட்டிங், விதவிதமான கூந்தல் அலங்காரங்கள் ஆகிய வற்றைச் செய்து வருகிறோம்.

'அரோமாதெரபி' எனும் இயற்கைச் சிகிச்சை அளித்து சரும வியாதிகளைக் குணப்படுத்தியும் வருகிறேன். எல்லா அழகு சாதனங்களையும் 'ஸ்டெரி லைஸ்' செய்து சுகாதாரமாக வைத் துள்ளேன். வெளிநாட்டிலிருந்து நல்ல க்ரீம்களைத் தருவித்து உபயோகித்து வருகிறேன்.

எனது தேவராஜ் ஸ்லிம் சென்டரில் பல்வேறு சாதனங்களின் உதவியுடன் பெண்களுக்குச் சிறந்த உடற்பயிற்சி களை அளித்து வருகிறேன். உடல் பருமனைக் குறைத்தல், இடுப்பு சதை களைக் குறைத்தல், தொந்தியைக் குறைத்தல், தொடைச் சதைப் பகுதி யைச் சீர்படுத்தல் போன்ற பல்வேறு உடல் ஆரோக்கியப் பயிற்சிகளை சைக்ளிங், ஸ்டப்பர், ட்விஸ்டர், ஸ்பாட் ரிடக்ஷன் மெஷின், பென்ஜ், வைப் ரேட்டர், வாக்கர் போன்ற சாதனங் களின் மூலம் தருகிறேன்.

பெண்களுக்கு யோகாசனப் பயிற்சிகளையும் சிறந்த முறையில் சொல்லித் தருகிறேன். அழகுக் கலை யைக் கற்றுச் சுயமாகச் சம்பாதிக்கப் பெண்களுக்கு அழகுக் கலைப் பயிற்சி வகுப்புகளும் நடத்தி வருகிறேன்.

பெண்கள் உடல் எடையை விரை வாகக் குறைக்கும் சிங்கப்பூரின் 'சீலிட்பாடி ரேப்' முறையை முதன் முதலாக அறிமுகம் செய்ய இருக்கி றேன். பெண்கள் எனக்கு 601927 (எஸ்.டி.டி. 0452) நம்பருக்கு போன் செய்து அப்பாயிண்ட்மெண்ட் பெற்று வந்து அழகு சிகிச்சை, உடற்பயிற்சி பெறலாம். இது பற்றிய சந்தேகங் களையும் என்னிடம் கேட்டுத் தெளிவு பெறலாம்.''

அடுத்தபடியாக –

ஈரோடு நகரில் முதன்முதலாகத் தொடங்கப்பட்ட 'நான்ஸி லேடீஸ்



★ கூந்தல் சிகிச்சை



★ இலங்கைப் போட்டியில்...



★ யோகாசனப் பயிற்சி



★ கோல்டு பேஷியல்

பியூட்டி பார்லர்' அதிபர் திருமதி பூர்ணிமா டன்னாவைச் சந்தித்தோம்.

நம்மிடம் பேசத் தொடங்கினார், "1984ஆம் ஆண்டில் இந்த பியூட்டி பார்லரைத் தொடங்கி, பதினைந்து ஆண்டுகளாகப் பரிபூரணமான அழகு சிகிச்சைகள் அனைத்தையும் பாவையர் பாராட்டும்படி நடத்தி வருகிறேன்.

நான் அழகுக் கலையைப் பிரபல அழகுக் கலை நிபுணர் சேனாஸ் உசைனிடமும், பிரபல மரியம் சவேரியிடமும் கற்றேன். ஹாங்காங் போன்ற பல வெளிநாடுகளுக்குச் சென்று அதி நவீன அழகு சிகிச்சை முறைகளைக் கற்று வந்தேன். எனது பல வருட அனுபவத்தை வைத்து, பெண்களுக்கு அழகுக் கலைப் பயிற்சி அளித்தும் வருகிறேன்.

நாங்கள் பிளோடிராயிங், ஹேர் வீலிங், ஹேர் ஸ்டைலிங், பிக்மெண்ட் இம்பேண்டிங், எலக்ட்ரோலைசிங், கேல்வானிக் ட்ரீட்மெண்ட், நெயில் கல்ச்சர், பயோலிப்டிங், பேஸ் லிப்டிங், அட்வான்ஸ்டு பியூட்டி ட்ரீட்மெண்ட், காஸ்மெடாலஜி, மணப்பெண் அலங்காரம், மெகந்தி போன்ற பல அழகு சிகிச்சை அளிப்பதில் ஸ்பெஷலிஸ்ட்டாகத் திகழ்கிறோம்.

முகச் சுருக்கம் அகற்ற ஸ்பெஷல் சிகிச்சை அளிக்கிறோம். எங்களின் கூந்தல் அலங்காரம் எவரையும் அசர வைத்து விடும். வலி இல்லாமல், காது, மூக்கு குத்தி விடுகிறோம். அரோமா தெரபி சிகிச்சை அளித்து ஆஸ்துமா, நீரிழிவு வியாதி, தலைமுடி உதிர்தல், பேன், பொடுகு, செம்பட்டை முடிக்குத் தீர்வு போன்றவற்றை அளித்து வருகிறோம்.

வழுக்கைத் தலையில் தலைமுடி உண்டாக்கும் 'ஹேர் வீலிங்' பயிற்சியை எங்களிடம் பெண்கள் கற்று வருகின்றனர். 'கோல்டு பேஷியல்' அளிக்கிறோம்.

எங்கள் அழகு நிலையத்தில் காது கேளாத, வாய் பேச முடியாத பெண்களுக்கு இலவசமாக அழகுக் கலைப் பயிற்சி அளித்து வருகிறோம். அதனைப் பலரும் பாராட்டி மகிழ்கிறார்கள். அழகுச் சிகிச்சைக்கும், ஊனமுற்றோர் இலவச அழகுப் பயிற்சி பெறவும் எனக்கு, திருமதி பூர்ணிமா டன்னா, நான்ஸி பியூட்டி பார்லர், 2,3, கோவிந்தராஜ் நகர், ஈரோடு – 638 001 என்ற முகவரிக்கோ, தொலைபேசி: 259043, 254121 என்ற எண்ணுடனோ தொடர்பு கொள்ளலாம்'' என்றார்.

மதுரை, ஈரோடு நகருக்குப் பிறகு மூன்றாவதாக –

திருப்பூர் நகரில் 'அஞ்சலி பெண்கள் அழகு நிலையம்' அமைத்து எட்டே ஆண்டுகளில் அற்புதமாக நல்ல பெயரை எட்டிப்பிடித்து விட்ட சுமித்ரா – லதா சகோதரிகளைச் சந்தித்தோம்.







★ மெகந்தி



★ கண்கவரும் பார்லர்

சுமித்ரா நமக்கு விளக்கம் தந்தார், "பனியனுக்குப் புகழ்பெற்ற திருப்பூரில் பாவையருக்குத் தேவைப்படும் எல்லா விதமான அழகுச் சிகிச்சைகளையும் அளிப்பதில் முன்னணியில் இருக்கி றோம். மணப்பெண் அலங்காரத்தில் மல்லிகைப் பூவை பிளாஸ்டிக் பூ போல அமைப்பதில் தனித்திறமை பெற்ற வர்கள் நாங்கள்.

குறிப்பாக எங்கள் 'அஞ்சலி கம்ப்யூட்டர் மெகந்தி கோன்' மிகவும் புகழ் பெற்றது. மற்ற மெகந்தியை கைகளில் இட்டால் நான்கு மணி நேரம் காத்திருக்க வேண்டும். எங்கள் மெகந்திக்கு நாற்பது நிமிடமே போதும். வீடியோ, போட்டோ எடுக்கும்போது எங்கள் மெகந்தி கலர் வேறெதிலும் வராது. மருதாணியை விட அழகான கலர் இதில் கிடைக்கும். கோனை எளிதாக உபயோகிக்க முடியும்.

எங்கள் அஞ்சலி கம்ப்யூட்டர் மெகந்தி கோனை மொத்தமாக வாங்கி விற்பனை செய்து குடும்பப் பெண்கள் வீட்டில் இருந்தபடியே சம்பாதிக்கலாம். வெளியூர்களிலிருந்து டீலர்களும் அணுகலாம். எங்கள் முகவரி: திருமதி சுமித்ரா – திருமதி லதா, 'அஞ்சலி அழகு நிலையம்', கோதை மேன்ஷன், மூன்றாவது தளம், பார்க் ரோடு, பின்னி காம்ப்ளக்ஸ், திருப்பூர் – 641601. தொலைபேசி: 747822, 700589 எஸ்.டி.டி 0421."

அழகு நிலையம் மூலம் மற்ற பெண்கள் சம்பாதிக்கவும் முடியும் என்பதை அஞ்சலி அழகு நிலையம் மூலம் அறிந்து கொண்டோம்.

நான்காவதாக –

**பொ**ள்ளாச்சியில் பிருந்தா செல்வகுமார் பிரமாதமாக நடத்தி வரும் 'வேதாஸ் பியூட்டி கிளினிக்'குக்குச் சென்றோம்.

பிருந்தாவனம் போல் பிருந்தா அமைத்திருந்த அவரது பியூட்டி பார்லர் நம் கண்களைக் கவரும் அளவில் மிக அழகாக ஜொலித்தது. இதனால் பியூட்டி பார்லர் உள்ளே நுழைந்ததுமே பெண்களுக்குத்தாங்கள் அழகாக இருப்பது மேலும் மெருகேறுவது போன்ற எண்ணம் ஏற்பட்டு விடுகிறது.

அதி நவீன சாதனங்களுடன் அத்தனை அழகுச் சிகிச்சைகளும் அங்கே பெண்களுக்கு அளிக்கப்படு வதைக் காண முடிந்தது. குறிப்பாக 'வேதாஸ் பியூட்டி கல்ச்சர் அண்ட் ஹேர் டிரஸ்ஸிங் இன்ஸ்டிட்யூட்' மூலம் பிருந்தா செல்வகுமார் மிகச் சிறப்பாக பெண்களுக்கு அழகுக் கலைப் பயிற்சி, கூந்தல் சிகிச்சைப் பயிற்சி ஆகிய இரண்டையும் பூரணமாக பிராக்டிகல் மற்றும் தியரி அறிவுத்திறனுடன் அளித்து வருகிறார். இதன் தனிச்



★ கூந்தல் அலங்காரம்



★ அழகு சிகிச்சை

★ வெற்றிக் கோப்பைகளுடன் திருமதி விஜயா தேவராஜ்

சிறப்பை அறிந்து வெளியூர்களிலிருந்தும் பெண்கள் பயிற்சி பெற வருகிறார்கள்.

அழகு சிகிச்சையுடன் பயிற்சியும் தருவது பெண்களுக்குப் பயனுள்ளது என்று பொள்ளாச்சி வேதாஸ் பியூட்டி பார்லர் நமக்கு உணர்த்தியது. கடை எண். 20, கல்யாணி காம்ப்ளக்ஸ், 7, போலீஸ் ஸ்டேஷன் ரோடு, பொள்ளாச்சி – 642 001 என்ற முகவரியில் இயங்கிய இந்த நிலையத்தின் வரவேற்பு சிறப்பாக இருக்கிறது.

நான்கு பெரிய நகரங்களில் உள்ள பியூட்டி பார்லர்களுக்கும் நாம் சென்று வந்த பிறகு நமக்கு விளங்கிய விஷயங்கள் இவை தாம்.

அனைத்து அழகு நிலையங்களும் அபாரமான வளர்ச்சியைப் பெற்று வருகின்றன. வீதிக்கு வீதி பல அழகு நிலையங்கள் (பார்லர்கள்) வந்த போதிலும் எல்லாமே லாபகரமாகச் செயல்படுகின்றன. திருமண முகூர்த்த நேரங்களில் அனைத்து பியூட்டி பார்லர் அதிபர்களும் மிக பிஸியாகி விடுகின்றனர். நிறையச் சம்பாதிக்கவும் செய்கின்றனர். பெண்கள் சம்பந்தமான வேலை என்பதால் பெண்களுக்குப் பிரச்னை ஏதும் வருவதில்லை. பணமும், பாராட்டும் ஒன்று சேரக் கிடைக்கும் உன்னதத் தொழிலாக இது திகழ்கிறது. பெண்கள் சொந்தக் காலில் சுய தொழில் செய்ய இதனால் முடிகிறது.

குறை என்று பார்த்தால் சரியான அனுபவம், முறையான பயிற்சி பெறாமல் பியூட்டி பார்லரைத் தொடங்கும் சிலரால் தொடர்ந்து பிரகாசிக்க முடியாமல் போய்விடுகிறது. பியூட்டி பார்லர் பணிக்கு, திறமையுள்ள பெண்களைத் தேடி அலைய வேண்டியுள்ளது. இருப்பினும் சமுதாயம் மதிக்கும் நல்லதொரு கௌரவமான தொழிலாகவே பெண்கள் அழகு நிலையங்கள் பெயர் பெற்று வருகின்றன.

•



# கால ஓடை



## அடியார்க்கு நல்லான்



கோலமிடும் கற்பனையில்
 கூடவரும் சொப்பனமும்
காலமகள் செய்த வலையே

ஆலமர மானயுகம்
 ஆடிவிழுந்தோடிவிடும்
காலமெனும் ஓடையதிலே

தத்தைசுக மேனியதில்
 சித்துவிளை யாடுவதும்
சத்துவரு கின்ற வரைதான்

நித்தம்புது முத்தமிடும்
 பத்தினியர் கொஞ்சுவதும்
சொத்துசுக முள்ள வரைதான்

ஆடுமணி யோடுதுகில்
 ஆடுமிளங் கொங்கையது
கோடுவிழக் குன்றி விடுமே

காடுவய லோடுமனை
 தேடுமொரு காமசுகம்
ஆடுமுடல் ஆடும் வரையே

கூடுவிழும் போது உடல்
 கூடியழும் கோதைசுடு
காடுவரை வருவ தில்லையே

ஆவிவிடப் போகும் உடல்
 ஏகும்சிதை வேகும்வரை
பாவிமகன் நிற்ப தில்லையே

வாசமொடு பேசுமொரு
 தாயவளின் பாசமதும்
காசபணம் உள்ள வரைதான்

சூதர்மனை யேறிவிலை
 மாதுதரும் போதைஎம
தூதர்வரும் போது கலையும்

ஏலமதில் வந்தமனை
 ஏறுமுக மானபுகழ்
காலநொடிப் போதில் மறையும்

வேறுவிதி யாகநிதி
 போகுமொரு நேரம்வர
சேருகிற நண்ப ரில்லையே

யானைதடு மாறிவிழும்
 போலதொரு காலம்வர
பூனைநரியாகும் உறவே

மூடுபனி யூடுகதிர்
 போலவொரு ஞானமெனை
ஊடுருவச் செய்த உமையே

மூடமதி யாளனெனை
 பாடுகவி யாகமொழி
ஏடுவரச் செய்த வரமே

காலவடி வானதொரு
 காளியெனும் பேரழகை
கோலமுடன் பாடு தினமே

காலமொரு ஓடை வரு
 ஞானமொரு தோணியதில்
சீலமுடன் ஏறு மனமே

மாயவடி வானதொரு
 பேயவளின் தூயமடி
சேயெனவே தூங்கு தினமே

*'மாயூரன்'*

ஸ்ரீலலிதா சகஸ்ரநாமம் வேதத்திற்குச் சமமாகக் கருதப்படுகிறது. வேதாந்தத்திற்கு பகவத்கீதை இரத்தினச் சுருக்கமாகவும் ஒப்புயர்வற்றதாகவும் விளங்குவதுபோல மந்திர சாஸ்திரத்தில் ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமம் ஒப்புயர்வற்றதாகப் போற்றப்படுகிறது. அம்பிகையின் அருள் பெற்ற ஸ்ரீ பாஸ்கர ராயர் லலிதா சகஸ்ரநாமத்திற்கு எழுதிய உரையான 'சௌபாக்கிய பாஸ்கர'த்தைப் படித்தாலே அருள் ஞானமும் சகலவித செல்வங்களும் கிடைக்கும் என்பார்கள். வெள்ளிக்கிழமை மற்றும் பௌர்ணமி தினங்களில் லலிதா சகஸ்ரநாமம் சொல்லி அம்பாளை வழிபட்டால் புத்திரப்பேறு, விவாகம், நோய் நொடி தொல்லைகளிலிருந்து விடுதலை, உயர்கல்வி, குடும்பத்தில் மகிழ்ச்சி, உயர்ந்த ஞானம் போன்றவை கிட்டும் என்பது வழிவழி வந்த நம்பிக்கை. ஸ்ரீவித்யா உபாசகர்களுள் முக்கியமானவர் அகத்திய முனிவர் ஸ்ரீஹயக்ரீவரிடமிருந்து உபதேசம் பெற்றவர். ஸ்ரீலலிதா சகஸ்ரநாம மகிமையை அறிந்த அகத்திய முனிவர் ஸ்ரீலலிதா பரமேஸ்வரியை எங்கு தரிசிக்கலாம் என்று கேட்கிறார். "அருணனும் சூரியனும் பூஜை செய்த திருத்தலம் மீயச்சூர். அங்கு சென்று லலிதாம்பிகையைத் தரிசித்தால் ஸ்ரீலலிதா சகஸ்ரநாமம் பாராயணம் செய்யும் பயனைப் பெறலாம்" என்கிறார் ஹயக்ரீவர். அதன்படி திருமீயச்சூர் வந்து அன்னை லலிதாம்பிகையை வழிபட்டு, "மாதா ஜய ஓம் லலிதாம்பிகையே' என்ற ஈற்றடிகள் கொண்ட பிரசித்தமான ஸ்ரீலலிதா நவரத்தின மாலையை அகத்திய முனிவர் இத்தலத்தில் இயற்றியதாக வரலாறு கூறுகிறது.

மயிலாடுதுறை-திருவாரூர் ரயில் மார்க்கத்தில் பேரளம் ரயில் நிலையம் உள்ளது. பேரளத்திலிருந்து மேற்கே ஒரு கி. மீ. தூரத்தில் இருக்கிறது திருமீயச்சூர் திருத்தலம். மயிலாடுதுறையிலிருந்து சாலைவழியாக (சுமார் 16 கி. மீ.) மினி பஸ் வசதியும் உள்ளது. தமிழ்நாட்டில் உள்ள கோயில்கள் பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக் கோயில், இளங்கோயில், மணிக்கோயில், மாடக்கோயில், ஆலயக்கோயில் என்று பல பெயர்களில் வகைப் படுத்தப்படுகின்றன. இவற்றில் ஒரு கோயிலினுள்ளே இன்னொரு கோயில் இருக்கும் திருமீயச்சூர் கோயிலானது திருமீயச்சூர் இளங்கோயில் என்ற சிறப்புடன் திகழ்கிறது. இறைவன் அருள்மிகு மிகுரா அருணேஸ்வர் (மேகநாதசுவாமி) கோயில் விமானம் யானையின் பின்புறம்போல் கஜப்ருஷ்ட விமான அமைப்புடன் திகழ்கிறது. இறைவி அருள்மிகு லலிதாம்பிகையின் சந்நிதி இராஜதர்பார் நடக்கும் கொலு மண்டபம் போல கம்பீரமாகக் காண்போரை ஈர்த்து அன்னையின் பேரழகில் அப்படியே லயித்துவிடச் செய்யும் சக்தியுடையதாகத் திகழ்கிறது. தேவாரப் பாடல் பெற்ற திருத்தலம்.

## தல புராணம்

அருணன், சூரியனின் சாரதி. அங்கஹீனன். ஆனால் சிறந்த சிவபக்தன். கயிலை சென்று இறைவனை நேரில் காண விழைகிறான். ஆனால் சூரியனால் வஞ்சிக்கப் படுகிறான். அதனால் இறைவன் கோபமடைந்து சூரியனுக்குச் சாபம் கொடுத்து விடுகிறார். உலகில் இருள் சூழ்கிறது. தேவர்கள் இறைவனிடம் வேண்டுகிறார்கள். சூரியனும் தவற்றுக்கு வருந்தி சாப விமோசனம் கோருகிறான். அருணனின் தவ வலிமையால் உலகம் பிரகாசமடையும் என்றும் சூரியன் ஏழுமாத காலம் தம்மைப் பூஜித்து சாப விமோசனம் அடையலாம் என்றும் இறைவன் அருள் பாலிக்கிறார்.

**மாதா ஜய ஓம் லலிதாம்பிகையே....**

அதன்படி சூரியன் மீயச்சூர் வந்து சூரிய புஷ்கரணி என்னும் தீர்த்தத்தை உருவாக்கி தலையில் எருக்கு இலை, அருகம்புல் வைத்து சங்கல்ப ஸ்நானம் செய்து இறைவனுக்கு விசேஷ பூஜை செய்தான். உத்தராயனத்தில் தை அமாவாசைக்குப் பிறகு வரும் சப்தமி திதியான இந்நாள் இன்றும் ரத சப்தமியாக அனுஷ்டிக்கப்படுகிறது. சூரியனின் கணக்குப்படி ஏழுமாதம் முடிந்தும் கூட கருநிறம் மாறவில்லை. சூரியன் பெரிதும் வருந்தி 'ஹே மிகுரா' என்று கதறுகிறான். அப்போது தங்கள் ஏகாந்தத்தில் குறுக்கிட்டதற்காக தேவி கோபம் கொண்டு சூரியனைத் தண்டிக்க முற்படுகிறாள். உடனே ஈசுவரன் அம்பாளைத் தடுத்து, ஒரு கையால் தேவியின் முகவாயைப் பிடித்து, "சாப விமோசனத்திற்காகச் சூரியன் இங்கு வந்திருக்கிறான். நீ வேறு சாபம் கொடுத்தால் உலகம் இருண்டுவிடும். எனவே நீ பரம சாந்தையாய் உலகம் பிரகாசிக்க அருள் செய்யவேண்டும்" என்று கேட்டுக் கொள்கிறார். அம்பாளும் கோபம் தணிந்து சாந்தமடைகிறாள். அம்பாளுக்குச் சாந்தநாயகி என்ற பெயரும் ஏற்படுகிறது. சாந்தமடைந்த அன்னை பராசக்தியின் திருவாயிலிருந்து வசினி என்ற வாக் தேவதைகள் தோன்றி அவர்கள் திருவாய் மலர்ந்தருளியதே லலிதா சகஸ்ரநாமம் என்ற தோத்திரமாகும். சூரியன் சாபம் நீங்கும் வரை அருணன் பிரகாசித்ததால் இப்போதும் சூரிய உதயத்திற்கு முன் தோன்றும் பிரகாசத்தை அருணோதயம் என்று அழைப்பது வழக்கமாக இருக்கிறது. இறைவன் தேவியின் முகவாயைப் பிடித்து சாந்தமடையும்படி வேண்டும் அற்புதத் திருக்கோலம் இக்கோயில் பிராகாரத்தில் உள்ளது.

ஆண்டுதோறும் சித்திரை மாதம் 21ஆம் தேதி முதல் 27ஆம் தேதி வரை இக்கோயிலில் சூரிய பூஜை சிறப்பாக நடைபெறுகிறது. அப்போது சூரிய உதயகாலத்தில் சூரியனின் கிரணங்கள் இராஜகோபுர வாசலிலிருந்து படர்ந்து கருவறையிலுள்ள சிவலிங்கத்தின் மீது படர்வது அற்புதக் காட்சியாகும்.

சூரிய பகவானுக்கு யமதர்மராஜனும், சனீசுவரனும் புத்திரர்களாக அவதரித்த திருத்தலம் திருமீயச்சூர். தாமரை இலையில் சங்கு புஷ்பம் வைத்து தாம் சிவபெருமானைப் பூஜித்த முறையையும் ரகசியத்தையும் யமதர்மராஜன் நசிகேதனுக்கு உபதேசித்ததாகவும், அந்த முறைப்படி இப்போது அவரவர் ஜன்ம நக்ஷத்திர தினங்களில் ஆயுஷ் ஹோமம், சஷ்டியப்த பூர்த்தி, சதாபிஷேகம் போன்றவை இவ்வாலயத்தில் நடத்தப்படுகின்றன. யமலோகத்தின் தல விருட்சமான பிரண்டை கலந்த அன்னத்தைத் தானம் செய்வது இங்கு விசேஷமாகக் கருதப்படுகிறது.

அகத்தியர் வழிபட்ட பஞ்சலிங்கங்கள், காசியப முனிவரின் பத்தினியான கத்துரு பிரதிஷ்டை செய்து வழிபட்ட பன்னிரண்டு நாகங்கள், அஷ்ட புஜ துர்க்கை ஆகியவற்றுக்குத் தனிச்சந்நிதிகள் உள்ளன.

மிகப் பெருமை வாய்ந்ததும், புராதனமானதுமான இக்கோயிலில் திருப்பணி வேலைகள் தொடங்கியுள்ளன. ஸ்ரீலலிதாம்பிகா சேவா சங்கம், சந்நிதித்தெரு, திருமீயச்சூர்-609405 என்ற அமைப்பின் கீழ் இவ்வூர் அன்பர்கள் திருப்பணி வேலை கும்பாபிஷேகம் நடத்தத் தீர்மானித்து செயல்பட்டு வருகிறார்கள். இப்புனிதத் திருப்பணியில் இறை அன்பர்கள் அனைவரும் பங்குகொள்ள வேண்டும்; அழகுப் பிரவாகம் பெருக்கெடுத்தோடும் கருணை மழை பொழியும் அன்னை லலிதாம்பிகையை நேரில் தரிசித்துப் பேரருள் பெறவேண்டும் என்பதே நம் பிரார்த்தனை. ●

## விழுப்புண்கள்

வாழ்வென்றால் என்னவெனத் தெரிய வைக்கும்
வழிகளினைத் தேடுதற்கு முனைந்தி டாமல்
வாழ்வதற்கு வழியில்லை என்றே வீட்டு
வாயிலினைக் கடக்காமல் முடங்க லாமா?
வீழ்ச்சியிலே வீழாமல் உயரு தற்கு
வினையாற்றல் கடமையென முனைந்தி டாமல்
தாழ்வுமனப் பான்மையிலே செய்வ தற்குத்
தயங்கிவிரல் விரிக்காமல் முடங்கலாமா?
மலையுச்சி கண்களுக்குத் தெரிந்த போதும்
மண்டியுள்ள முட்புதர்க்கே அஞ்சி நின்றால்
மலைமுடியை அடைதற்கே முடிந்தி டாது!
மனத்துள்ளே முன்னேற்றக் கனவு கண்டும்
நிலைகுலைக்கும் தடைகளென்றே அஞ்சி நின்றால்
நிலையான வெற்றிபெற முடிந்திடாது!
விலையாக நாம் நம்மைக் கொடுத்தா லன்றி
விரிமணமாய்ப் புகழ்மலர்கள் விளைந்தி டாது!




பாவலர். கருமலைத்தமிழாழன்

# தெய்வக் குழந்தையின் சிலப்பதிகாரம்

## ரா. கணபதி

அவர் தெய்விக அனுபவத்தில் மிகப் பெரியவர். அப்படிப்பட்ட பெரியார்களுக்கே உரிய 'மஹான்' என்ற பெயரைப் பெற்றவர். அருள் புரிவதிலோ மிக மிகப் பெரியவர் என்று அவ்வருள் வண்மைக்குப் பாத்திரமானவர் ஸத்திய ஸாக்ஷி பகர்வார்கள். பல்துறை அறிவிலும் பெரியவர். 1918இல் அவதரித்த அவர் வயதிலும் எண்பது கடந்த பெரியவர்.

ஆயினும் இப்படிப் பல விதங்களிலும் பெரியவராக விளங்கும் அந்த யோகிப் பிரானார், திருவருணை பூஜ்ய ஸ்ரீயோகி ராம்ஸுரத்குமார் ஸ்வாமிகள் 'தெய்வக்குழந்தை' என்றே போற்றப்படுகிறார். தெய்வத் தாயின் பிரிய மதலையாகக் குழந்தையானந்த ஸ்வாமிகள் என்றே ஒரு மஹாபுருஷர் இருந்ததுபோல், தமது தெய்வப்பிதாவையே எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கும் அவனது செல்லக் குழந்தையாக இந்த யோகிப் பிரானாரைப் பக்தருலகு புரிந்துகொண்டே இவ்வாறு அழைக்கிறது.



அவருக்குப் பிரஸித்தமானது வெடித்து வரும் 'அவுட்' சிரிப்பு. குழந்தையின் வெண்மை, உண்மை, வெள்ளையுள்ளம், வெண்ணெயின்பம் அந்தச் சிரிப்பில் சிலிர்த்து வரும்.

அவரது கண்ணொளியில் பல சாயல்கள்: பக்திக் கனல் பறப்பது, அருட்சுடர் தெறிப்பது, அறிவொளி பாய்ச்சுவது என்றிப்படி. அவற்றோடு குழந்தையின் குறும்பு விஷமக் குறுகுறுப்பு அவரது கண்பார்வையில் மின்வெட்டுவதும் அழகோ அழகு!

குழந்தையின் இரு பேரழகுகள் அதன் வெள்ளை உள்ளமும், விஷமமும். இவை ஒன்றுக்கு மற்றது மறு துருவம் போலவே தோன்றுகிறது. ஏனெனில் விஷமம் என்கையில் அதில் கபடு சூதுகளும் வந்துவிடுகிறதே! ஆயினும் இதுதான் குழந்தைத்தன்மை என்ற தெய்விகப் பண்டத்தின் அதிசயம்: மாறுபட்டாற்போன்ற இரு துருவங்களும் அங்கே இயல்பாக ஒருங்கிணைந்து விடுகின்றன!

கள்ளக் கண்ணனின் விஷமக் குறும்பும் பெரியோரில் பெரியாரான யோகிப் பிரானிடம் அவருக்கே உரித்தான தனி முத்திரையுடன் உண்டு!

மறு துருவம் போல் சொன்ன வெள்ளை உள்ளக் குழந்தையையும் அவரிடம் அபரிமிதமாகத் தரிசனம் செய்யலாம். அதற்கு உதாரணம் காட்டவே இக்கட்டுரை.

யோகிப் பிரானின் பரம பக்தரும், அவரது அருட்கொடையை அளவறப் பெற்றவரும், நல்ல ஞாபக சக்தியுடன் நடந்தது நடந்தபடி சொல்ல வல்லவருமான நண்பரொருவர் சில மாதங்களுக்கு முன்னால் கண்டு வந்து கூறிய நிகழ்ச்சி.

அன்று ரிஷிகேசத்துப் பூஜ்யஸ்ரீசிவானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகளின் வழியில் யோகம் பயிலும் அமெரிக்க ஸாதகர் சிலர் நமது யோகியாரின் ஆசிரமத்திற்கு வந்திருந்தனர். பிற மஹான்கள் யாவரையும் போற்றிப் புகழ்வதிலும், அவர்களது மார்க்கங்களில் செல்வோரை ஊக்கி உற்சாகப்படுத்துவதிலும் நமது யோகியாரைப் போல் இன்னொருவர் இருக்கமுடியுமா என்பது சந்தேகம். இன்றும் அவ்வாறே அந்த அமெரிக்கர்களை அன்புடன் வரவேற்று உரையாடிக் கொண்டிருந்தார்.

இந்நிகழ்ச்சியைத் தெரிவித்த நண்பரிடம் அப்போது அவர் கூறிய ஒரு விஷயத்தில் அவரது குழந்தை வெண்மை வெளியாகிறது.

ஆதிநாளில், சாசுவதமாக நிலைத்து நிற்கும் திவ்யாநுபூதிக்காக மாளாத தாகம் கொண்டு நமது யோகிப் பிரானார் உபகண்டமாக விரிந்து பரவிய நமது தேசமெங்கிலும் சுற்றி அலைந்திருக்கிறார். அப்போது பல ஆசிரமங்களுக்குச் சென்றிருக்கிறார். அவ்வாறு தாம் ஸ்ரீசிவானந்தாசிரமம் சென்றதைப் பற்றி நமது நண்பரிடம் யோகிப்பிரான் கூறினார். "ஸ்வாமி சிவானந்தரின் ஆசிரமத்தில் இந்தப் பிச்சைக்காரன் இரண்டு மாதம் இருந்தான். அதன்பின் ஒரு நாள் அவன் ஸ்வாமி சிவானந்தரிடமிருந்து சில அடிகள் தள்ளி உட்கார்ந் திருந்தான். அப்போது இந்தப் பிச்சைக்காரன் அங்கே இருப்பதைத் தாம் விரும்பவில்லை என்று அவர் திட்டவட்டமாகக் குறிப்புக் காட்டினார். உடனே பிச்சைக்காரன் அங்கிருந்து புறப்பட்டுவிட்டான்".

குழந்தைபோல ஒரு விஷயத்தைத் திரும்பத் திரும்பக் கூறுவது யோகிப் பிரானின் வழக்கம். அதே போல மேற்சொன்ன விஷயத்தையும் பலமுறை கூறினாராம்.

நாமானால் நமக்கு நல்வரவேற்பு தரப்பட்டால்தான் அதைப் பற்றிச் சொல்லிக்கொள்வோம்.

ஆனால் தெய்வாவதாரமாக இன்று பெயர் கொண்டுவிட்ட யோகிப் பிரானோ தாம் இருப்பதை ஓர் ஆசிரமத் தலைவர் விரும்பவில்லை என்பதைப் பன்முறை விளக்கிக் கூறியிருக்கிறார்! நமக்குப் பிடித்தபடி கலர் பூசாமல் ஒரு குழந்தை உள்ளதை உள்ளபடி சொல்லும் முறையில் பேசியிருக்கிறார்.

ஆயினும் இந்தக் குழந்தைத்தன்மையில் ஒரு வித்தியாசமும் உண்டு. ஒரு குழந்தை எதையும் உணர்ச்சி மயமாகவே தெரிவிக்கும். வெளியிலே கலர் பூசத் தெரியாவிட்டாலும், எந்த ஒன்றை அது சொன்னாலும் தன்னுடைய உள்ளத்து உணர்ச்சிகளைக் கொட்டிக் கலந்தே சொல்லும்.

ஆனால் யோகிப் பிரான் தம்முடைய சிவாநந்தாசிரமத்து அநுபவத்தைக் கூறும்போதோ அடியோடு ஒருவித உணர்ச்சியும் கலவாது முற்றிலும் 'matter of fact' என்பார்களே, அப்படித்தான் பேசினாராம். இவ்வாறு தம்மிடமிருந்தே தம்மை விலக்கிக் கொள்கிற பான்மையால்தான் இத்தெய்வக் குழந்தையை 'யோகி' என்கிறோம்.

இமயச் சாரலில் வாழ்ந்த சிவானந்தர் கருணையிலும், பொறுமையிலும், தயா தாக்ஷிண்யத்திலும் இமயமாகவே உயர்ந்து விளங்கியவர். தம்மைக் கொலை செய்ய எண்ணியவனிடமும் அன்பு மழையே பொழிந்தவர். அப்படிப்பட்டவர் ஏன் ஆன்ம தாகத்தில் தவித்த நமது அந்நாளைய யோகிப் பிரானுக்குத் தமது ஆசிரமத்தில் இடம் தருவதற்கில்லை எனக் கருதினார்? சாச்வத ஸாக்ஷாத்காரம் பெற்றிராத அக்காலத்து யோகியாரின் கர்மாவை அகற்றி, அவரது குறிக்கோளுக்கு வழி திறந்துவிட இதுபோன்ற எதிர்மறை நிகழ்ச்சிகளும் உதவும் என்பதாலேயே இருக்குமோ?

இன்று பூஜ்யஸ்ரீ யோகி ராம்ஸுரத்குமார் ஸ்வாமிகள் சாச்வத ஸாக்ஷாத்காரத்தில் நிலை பெற்றுவிட்ட தெய்வ புருஷர். அத்தெய்வம் 'நான்' என்ற மானுட உணர்வையே வெளியேற்றிவிட்டது. 'நான்' வெளியேறிய போதே மானாவமான அபிமானங்களும் ஓடிவிட்டன. அதனால்தான் தானே வெளியேற்றிய அந்த நானை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு வேறொருவர் வெளியேற்றியதை எவ்வித உணர்ச்சிக் கலப்புமின்றி அவரால் திரும்பத் திரும்பக் கூற முடிகிறது.

வந்திருந்த அமெரிக்க கோஷ்டியிடம், சிவா நந்தரிடமிருந்து தீக்ஷை பெற்ற அமெரிக்க ஸ்வாமிஜிகள் தற்போது எவ்வளவு பேர் உள்ளனர்?' என்று யோகிப் பிரான் அக்கறையுடன் விசாரித்தார். அந்த ஸ்வாமிமார்களது பெயர்களையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டார். கோஷ்டியினர் அப்பெயர்களைச் சொல்லச் சொல்ல, யோகியார் விரல்களை மடக்கிக்கொண்டு ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணலானார். அதிலோரு குழந்தைக் குதூகலம்!

கோஷ்டியைச் சேர்ந்த பெண்மணிகளில் ஒருவர் இடக் காலில் கொலுசு அணிந்திருந்தார். அதைக் கவனித்த யோகிப்பிரான் அது தமக்கு மிகவும் பிடித்திருப்பதாகச் சொன்னார். "பிச்சைக்காரன் அந்த மாதிரி ஒன்று போட்டுக்கொள்ள ஆசைப்படுகிறான்" என்றார். குழந்தையேதான்! எண்பது பிராயத்துக் கிழவனாருக்குக் கொலுசு போட்டுக்கொள்ள ஆசை; அதை ஒளிக்காமல் வெள்ளையாகச் சொல்கிறார் என்றால் எண்பதாண்டுக் கிழத்தனம் ஓர் இரண்டரை வயசுக் குழந்தைக்கு இடமொதுக்கிக் கொடுத்து ஓடியேவிட்டது என்றுதானே அர்த்தம்?

அவர் அப்படிச் சொன்னவுடன், அந்த அமெரிக்கப் பெண்மணி, தன் கொலுசை யோகிப்பிரானுக்கு அர்ப்பணிப்பதற்காகக் கழற்றத் தொடங்கினார்.

உடனே யோகியார் பரபரப்புற்று அவரைத் தடுத்தார். "கொலுசு அந்தப் புனிதப் பாதத்திலேயே இருக்கட்டும். பிச்சைக்காரனுக்காக அதைக் கழற்றவேண்டாம்!"

வருகிற பிச்சையை வேண்டாமென்று ஒதுக்குகிற விந்தையான பிச்சைக்காரன்!

அவரது தீர்மானமான வாக்கைக் கேட்டதும் அமெரிக்க மாது கொலுசை மீண்டும் பூட்டிக்கொண்டார்.

கோஷ்டியிலேயே இன்னொரு பெண்மணி. அவரிடம் தாம் பூண்டிருந்ததற்கும் அதிகப்படியாக 'ஸ்பேர்'கொலுசு இருந்தது. அதை பக்தி புஞ்சிதமாக எடுத்து வந்து யோகியாருக்கு நிவேதித்தார்.

தெய்வக் குழந்தை அதை மகிழ்ச்சி மலர்ச்சியுடன் ஏற்றுக் கொண்டது. தனது இடப்பாதத்தில் அணிந்தும் கொண்டது. ஆஹா, எத்தனை அழகு?

அண்ணாமலையார் அர்த்தநாரீச்வர ஸ்வரூபமே. அரனாரின் திருமேனியில் அம்பிகை பாதி பாகம் பெற்றது அருணாசலமாக அவர் நின்றபோதுதான். அதற்கிசையவே அருணை யோகியார் நூபுரத்தை இடப்பாதத்தில் இசைத்துக் கொண்டுவிட்டார்.

நினைத்துப் பார்க்கவே எத்தனை மதுரமான நிகழ்ச்சி. வாரியார் ஸ்வாமிகள் சொல்வதுபோல் நமது பாதக மலம் போக்கும் பாத கமலத்தில் சிலம்பு!

நனவில் நடவாததும் நம்முடைய நினைவுச் சித்திரத்தில் விரிகிறது. நடராஜன் போலவும், நிருத்ய கணநாதன் போலவும், காளிய நர்த்தனன் போலவும் நமது யோகிப் பிரானார் சிலம்புப் பாதம் தூக்கி ஆடுவதாகக் கற்பனைக் கண் கவிதைக் காட்சி காண்கிறது.

கொலுசு அணிந்த குழந்தை அதை ஐந்து நிமிஷ நேரம் பார்த்துப் பார்த்து முகமெல்லாம் நகையாக மகிழ்கிறது; பெருமைப்படுகிறது!

ஐந்து நிமிஷமானதும் ஆசை தீர்ந்து விடுகிறது. குழந்தையுள் ஆசையகன்று யோகி ஆவிர்ப்பவித்து விடுகிறார். அப்படியும் அந்த யோகிக்குள்ளிருந்து குழந்தைமை ஆவிர்ப்பவித்துக் கொண்டேதான் இருக்கிறது.

கொலுசை அவிழ்க்கிறார் யோகிப்பிரான்

அதைத் தூக்கிக்காட்டி "இது யாருடையது?" என்று கேட்கிறார்.

கொலுசு அளித்த அம்மாள் எழுந்திருந்து நிற்கிறார்.

யோகியும் குழந்தையுமான திவ்விய வியக்தி எங்கும் தெய்வத்தைக் காண்கிறது. அந்த அம்மாளிலும் காண்கிறது. காற்சிலம்பிலும் காண்கிறது.

கொலுசைப் பக்தியுடன் தமது கண்களில் ஒற்றிக்கொண்டு அந்த அம்மாளிடம் திருப்பித் தருகிறார் யோகிப்பிரான்.

காலில் கொலுசு அணிந்தே தம்முடைய தெய்விகக் குழந்தைமையின் சிரஸில் மகுடம் புனைந்து முடிசூட்டுவிழா நடத்திக் கொண்டுவிட்டவர்!



# நம் கண்மணிகளே! உருவங்களும் சமுதாயம்!

தேர்தல் சமயத்தில் பத்திரிகை நிருபர் ஒருவர் கிராமத்திற்குச் சென்றார். "அம்மா! நீங்கள் யாருக்கு ஓட்டுப் போடப் போகிறீர்கள்?" என்று கேட்டார். "அந்தப் பொம்பளைக்கா? நான் போட மாட்டேங்க. ரொம்ப மோசமான பொம்பிளை" என்றார்.

"பின் யாருக்குப் போடப் போகிறீர்கள்?" என்று மீண்டும் கேட்டார் நிருபர்.

"ஏன்? இரட்டை இலைக்குத்தான்" என்றார் அந்த மூதாட்டி.

இரட்டை இலை ஒரு சின்னம். அது எம்.ஜி.ஆரை நினைவுபடுத்தும் சின்னம். அவர் தொப்பி வைத்துக் கொண்டு காரில் வந்து ஓட்டு கேட்டதும், அதன் பின்னால் இருந்த இரட்டை இலையும் அவருடன் ஐக்கியமாகிவிட்டன.

இப்படிப்பட்ட மக்கள், அடிமட்டத்தில் இருக்கிறார்கள். அடையாளம் என்பது நம்பிக்கையாய் ஊறிப் போயிருக்கிறது.

இராஜபாளையம் பகுதிக்குச் சென்றால், "நான் காங்கிரசுக்குத்தான் ஓட்டு போடுவேன்! கதர் சட்டை



எம். எஸ். உதயமூர்த்தி

போட்ட தியாகிகளுக்குத்தான் என் ஓட்டு" என்கிற மனோபாவத்தில் – பழைய நம்பிக்கையில்–ஊறிப் போயிருக்கிறார்கள்.

நாவிதர் கடையில் தலைமுடி வெட்டிக்கொள்ளச் செல்வோமென்றால் அங்கே பல இடங்களில் எப்படி கவர்ச்சிப் பெண்களின் படம் காட்சி அளிக்கிறதோ, அதே போல சுறுசுறுப்பாக கத்திரிக்கோலை இரண்டு வெட்டு வெட்டிக்கொண்டே, "என் ஓட்டு தி.மு.கவுக்குத்தான்" என்பார்கள்.

ஆழ்ந்த நம்பிக்கைகளை உடைத்தெறிவது எளிதன்று. பலரும் பழைய நம்பிக்கைகளிலே வாழவே பிரியப்படு கிறார்கள். காரணம் விசுவாசம். 'நான் மாறுவதில்லை. நான் என்றும் கதர்ச்சட்டைக்கு விசுவாசமாக இருப்பேன்' என்கிற நெறி தன் மதிப்பாக, சுயகௌரவமாக மனிதனைத் தனக்குத் தானே உயர்த்திக் காட்டுகிறது.

ஆழ்ந்த நம்பிக்கைகளை உடைத்தெறிவது என்பது பிறரால் செய்யப்படுகின்ற காரியமன்று. அது அவர்களே செய்ய வேண்டிய காரியம். அதாவது அவர்களுக்குத் திறந்த மனம் இருக்கவேண்டும்.

மனிதன் ஆகாயத்தில் பறப்பதென்றால் ஆண்டவன் இறக்கையைக் கொடுத்திருக்க மாட்டானா என்று கேட்டவன் விமானத்தைக் கண்டுபிடிக்கவில்லை, கண்டுபிடிக்கப் போவதில்லை. அவன் மனக்கதவை அடைத்துவிட்டான். அவனுக்குத் தெரியும். ஆண்டவன் இறக்கையைக் கொடுக்கவில்லை என்பதும், முடியாது என்பதும். ஒரு காரியம் முடியாது என்பதற்கு விளக்கம் சொல்பவர்கள் எதையும் சாதித்ததில்லை "ஏன் முடியாது?" என்று கேட்டவர்கள் தான் உயர்ந்திருக் கிறார்கள். அப்படிக் கேட்டவர்களால்தான் உலகம் உயர்ந்திருக்கிறது. எனவே அவர்கள் மனத்தைத் திறக்க அவர்களுக்குப் புரியும்படி பக்குவமாக, மாறிவரும் காலத்தைப் பற்றியும் ஜனநாயகம் எப்படி இயங்குகிறது நமக்கு எப்படி நன்மை செய்யமுடியும் என்பதையும், நல்லவர் அல்லாதவர்கள் செய்யும் சுயநலத்தையும் அடையும் சுயலாபங்களையும் மக்கள் இதை உணர்வதால் எப்படி நாடு உயரும் என்பதைப் பற்றியும் தெளிவாகக் கூறவேண்டும். விவாதிக்கவேண்டும். அவர்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லவேண்டும். நாம் சொல்வதில் உள்ள உண்மைகளைப் புரிந்து கொள்ள வைக்கவேண்டும்.

இது ஒரு நாளில், சில மாதங்களில் செய்து விடக்கூடிய காரியமன்று. சில ஆண்டுகள் தேவை. ஒரு நாட்டின் மொத்த மக்களும் புதிய சிந்தனைகளை ஏற்பதைத் தான் புரட்சி என்கிறோம்.

இந்தப் புரட்சிகள் மக்களின் மனத்தில் ஏற்படும் மனமாற்றத்திலிருந்து தான் எழுகின்றன. அதற்குக் காலம் பிடிக்கிறது.

பெரியார் செய்த சாதி ஒழிப்பாகட்டும், டாக்டர் இராமதாஸ் இன்று ஏற்படுத்தியிருக்கும் கட்சியான சாதி ஓட்டு என்ற மறைமுக அணுகுமுறை ஆகட்டும் வருவதற்கு நாளாயின. சில தொகுதிகளில் அவர் கட்சி வெற்றி பெறுகிறது என்றால் அது அமைச்சர் பதவிக்கு வந்த இராமசாமிப் படையாச்சி காலத்தில் தொடங்கியது என்று சொல்லலாம்.

திராவிடக் கொள்கைகளும் அப்படித்தான். பெரியார், அண்ணா என்று வரிசையாக 20 – 25 ஆண்டுகளுக்கு மேலாயின. இங்கிலாந்தில் கிளெமெண்ட் அட்லி பிரதமராவதற்கு முன்பே தொழிலாளர் கட்சி என்று எதுவும் பதவியைப் பிடிக்கவில்லை. பெர்னாட்ஷா சுமார் இருபதாண்டுகள் சோஷலிச தத்துவத்தை வைத்து நாடகங்கள் எழுதியதன் காரணமாகவும், நிறைய அரசு அதிகாரிகள் அப்படி ஓர் அமைப்பை ஏற்படுத்தியதாலும் சுமார் இருபதாண்டுகளுக்குப் பின் ஓர் அட்லி பதவிக்கு வந்தார். இந்தியாவின் நியாயத்தை உணர்ந்தார். அவர் காலத்தில் இந்தியா சுதந்தரம் பெற்றது.

விழிப்புணர்வு, திறந்தமனம், ஒரு கொள்கையையும் மற்றொரு கொள்கையையும் சீர்தூக்கிப் பார்க்கும் திறனும் மக்களுக்கு வேண்டும். இங்கிலாந்து போன்ற படித்த மக்கள் அதிகமாக உள்ள நாட்டிலேயே இப்படிப்பட்ட மாற்றத்தை உண்டுபண்ண அதிககாலம் ஆயிற்றென்றால், இந்தியா போன்ற 40 சதவிகித மக்கள் படிக்காத கிராம ஏழைகளாக இருக்கிற நாட்டில் மாற்றம் ஏற்பட எவ்வளவு காலமாகும்?

அதனால்தான் நாம் முதலில் அரசியல் சாசனத்தில் கூறியிருக்கிறபடி படிப்பில் கல்வியில் கவனத்தைச் செலுத்தியிருக்க வேண்டும்; செலுத்தவில்லை. பல தலைவர்கள் இன்றும், "படிப்பு வேண்டாம் அப்படியே இருக்கட்டும். அதுதான் நல்லது" என்று சொல்லி வருகிறார்கள் என்பதுதான் உண்மை.

வெளிநாட்டு அறிஞர்கள் நம் நாட்டுத்தலைவர் களைப் பற்றிக்கூறுவது போல நம் தலைவர்களுக்கு மன உறுதி இல்லையா? நல்லெண்ணம், தேசபக்தி, பொதுநலம் இல்லையா? என்று கேட்டால் பின்னையது தான் உண்மை என்பதை யாரும் புரிந்துகொள்ள முடியும்.

"தத்துவஞானிகள் நாட்டை ஆளவேண்டும்" என்று சொன்னார் சாக்ரடீஸ். ஜனக சக்ரவர்த்தியை ராஜரிஷி என்பார்கள். "அவர் பற்றற்ற ரிஷி – துறவி – ஞானி. ஆனால் அரசபதவியை மேற்கொண்ட ஞானி" என்பர்.

அப்படிப்பட்ட உயர் நோக்கங்களில் நம் நாடு இருக்கவேண்டும் என்றெண்ணி அங்கே தத்துவஞானி

பேராசிரியர் இராதாகிருஷ்ணனை ஜனாதிபதி பதவியில் அமர்த்தினார் பண்டித ஜவஹர்லால் நேரு. இந்தத் தொடக்கம் ஒரு வழிகாட்டியாக இருக்கவேண்டும் என்ற நம்பிக்கையில். நாமோ இன்று மதரீதியாக, சாதி வாரியாக, பிராந்திய பிரதிநிதித்துவ ரீதியாக ஜனாதிபதி பதவியை நம்புகிறோம். என்ன இல்லை? கொள்கை இல்லை!

சமயோசிதம், சந்தர்ப்ப வாதம், தொலைநோக்கின்றி அன்றன்று நடக்கும் சம்பவங்களுக்கு ஈடுகொடுத்து அன்றாடம் சம்பாதித்து வாழ்க்கை நடத்தும் அன்றாடங்காய்ச்சி இருக்கிறானே, அவர்களாகப் போய்விட்டார்கள் நம் தலைவர்கள், பிரதிநிதிகள்.

சுட்டிக் காட்டுபவர்களைவிட 'ஜால்ரா'க்கள் அதிகமாகிவிட்டனர். சுட்டிக் காட்டுவோர் இருந்தாலும் அவர்களுக்கு வலிமையில்லை.

ஏனெனில் சுட்டிக்காட்டுவோர் அனைவரும் நல்லவர்களுக்கு வாக்களித்துவிட்டால் நல்லவர் தேர்தலில் வெற்றி பெற்றுவிடமுடியுமா? முடியாது. தேர்தலுக்கு வேண்டியது 40 சதவிகிதமாக இருக்கும் படிக்காத ஏழைகளின் வாக்குகள்!

என்ன செய்யலாம்?

ஏழைக்கு இனாம் கொடுத்தால் போதும். அவர் களுக்கு வேட்டி இனாம், நிலம் இனாம், வீடு இனாம், படிப்பு இனாம் என்று கொடுத்துவிட்டால் போதும் என்று எண்ணி ஆள்வோர் நிரந்தரமாகச் சார்ந்து நிற்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்குகிறார்கள்; உருவாக்கி இருக்கிறார்கள். இவர்கள் தான் திருவள்ளுவருக்கு 133 அடி சிலை வைப்பவர்கள்! சொன்னார் வள்ளுவர்.

*"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகு இயற்றியான்"*

என்று, 'ஒருவன் தன்மானமிழந்து சுயகௌரவத்தை விட்டு விட்டுக் கை நீட்டி யாசகம் வாங்கித்தான் பிழைக்க வேண்டுமென்றால் இந்த உலகைப் படைத்த ஆண்டவன் கெட்டொழியட்டும். பரந்து ஒழியட்டும்' என்கிறார் வள்ளுவர். நாம் வள்ளுவரின் வாரிசுகள்.

என்ன கோஷத்தை வைத்து பெரியார் நம் நிலையை நமக்கே தெளிவுபடுத்தினார்? சுயமரியாதை, தன்மானம்!

கொஞ்சம் யோசியுங்கள்! இந்த நாற்பது சதவிகித ஏழை மக்களின் தன்மானத்திலடித்து அரசாங்க அதிகாரி களையும் அரசாங்கத் தலைவர், தலைவிகளையும் அமைச்சர்களையும் கொடை வள்ளல்களாக (ஊரான் காசில்) ஆக்குவதா தன்மானம், சுயமரியாதை?

இது நாளை நமக்கேற்பட்டால் எப்படி இருக்கும்?

...... செய்யலாமா இப்படி?

தென்னாப்பிரிக்காவில் நடந்து கொண்டிருந்த இன ஏற்றத்தாழ்வைப் பார்த்த மகாத்மா காந்தி சொன்ன தாகவும், அந்த வாசகம்தான் மகாத்மா காந்தியின் திரைப்படத்தை எடுக்கத் தன்னைத் தூண்டியதாகவும் எழுதுகிறார் இங்கிலாந்தின் புகழ்பெற்ற – காந்தி படத்தை எடுத்த–ஆட்டன்பரோ.

காந்தி, அப்படிச் சொன்ன வாசகம் தான் என்ன?

"ஒரு மனிதனைத் தாழ்த்துவதன் மூலம் எப்படி மற்றொரு மனிதன் உயர்ந்தவனாக (நன்மை செய்பவனாக) ஆகமுடியும்?" என்று கேட்டார். நாம் தாழ்த்தலாமா பிச்சைக்காரர்களாக, நமது கிராம மக்களை?

கம்பர் சொல்கிறார். "வண்மையில்லையோர் வறுமை இன்மையால்" என்று வரிசையாகப் பாடுகிறார். கொடை வள்ளல்களே அந்த நாட்டில் இல்லையாம்! ஏன், எல்லாரும் கஞ்சப் பிரபுக்களாக ஆகிவிட்டார்களா? என்று கேட்கிறோம். இல்லை, இரந்து கேட்கும் ஏழைகள் இல்லாததால் இனாம் கொடுப்பவனுக்கு வேலை இல்லை. எனவே அந்த நாட்டில் வள்ளல்களே இல்லை•

அப்படிப்பட்ட நாட்டை இன்றில்லாவிட்டாலும் நாளை உருவாக்கவேண்டும் என்பதல்லவா நம் நாட்டின் லட்சியமாக இருக்கவேண்டும்?

அதற்கேற்ற சூழ்நிலைகளை அல்லவா கொண்டு வரவேண்டும்? படிப்பு, வேலைவாய்ப்பு, கிராமங்களில் சிறுதொழில்கள், கிராம விவசாயிகளுக்கு விவசாயம் செய்யத் தண்ணீர்.

–இவற்றைக் கொடுத்துவிட்டால் கிராமமே பணக்கார ஊராக இந்தியாவே பணக்கார நாடாக மாறிவிடாதா? இதை அல்லவா செய்யவேண்டும்?

பெருந்தொழில்களுக்கு சாலை, நீர், மின்சாரம், டெலிபோன் போன்ற உள்ளமைப்புகள் எல்லாம் (INFRA STRUCTURE) எவ்வளவு முக்கியமோ அதைவிட முக்கியம் கிராமங்களுக்கு இன்று தேவைப்படும் உள்ளமைப்பு (INFRA STRUCTURE) அப்போதுதான் – அவன் சுயகௌரவமும், தன் காலில் நிற்கும் பெருமையும் அவனிடம் ஏற்படும்போதுதான் – அவன் தன் சுதந்தரத்தை உணர்வான். யாரையும் சட்டை செய்ய மாட்டான். திறந்த மனத்துடன் வளர்ந்த மனிதனாக வாக்களிப்பான்.

இது நாட்பட்ட காரியம் ஆனாலும் இன்று தொடங்கினால் நிச்சயமாகச் சில ஆண்டுகளில் இந்த மாற்றம் ஏற்படும். உலகிற்கே வழிகாட்டக்கூடிய இந்தியாவின் ஆன்மிக வெளிச்சத்தை உலகம் அறியும். இன்று அந்த வெளிச்சம் இந்தியாவைச் சூழ்ந்திருக்கும் அறியாமை இருளால், கிராம மக்களைச் சூழ்ந்திருக்கும் படிப்பின்மை இருளால், உள்ளமைப்பு இல்லாததன்

இருளால் சூழ்ந்திருக்கிறது. நாம்தான் இருளை அகற்றி வெளிச்சத்தைக் கொண்டு வரவேண்டும்.

நம் நாட்டிலே நிலவும் கட்சிகளின் – அதன் தலைவர்களின் – பிரதிநிதிகளின் – பண்பாடு, ஒழுக்கம், வாழ்க்கை முறைகள் எல்லாம் வளர்ந்த படித்த மக்களின் பண்பாடாக இல்லை.

தமிழ்நாட்டில் இன்று அதிகமாகக் கட்சிகளைப் பற்றிப் பேசப்படும் வார்த்தை 'கட்டுக்கோப்பான கட்சி' என்ற பெருமை தரும் சொல்!

தமிழ்நாட்டில் இரண்டு திராவிடக் கட்சிகள் மாறி மாறிப் பதவிக்கு வந்திருக்கின்றன. இந்த இரண்டு கட்சிகளும் கட்டுக்கோப்பான கட்சிகள் என்று பொதுவாக வருணிக்கப்படுகின்றன.

எப்படி கட்சி கட்டுக்கோப்புடையதாகிறது? கட்சியின் கடைசித் தொண்டன் இருக்கிறானே, அவன் கட் அவுட் வைப்பதற்கும், தலைவர் படம் போட்ட தட்டி வைப்பதற்கும், கொடி கட்டவும், தோரண வாயில் அமைக்கவும் அவனுக்குப் பணம் கிடைக்க வழி செய்கிறது கட்சி. அரசாங்கப் பணத்தில் ஏற்படும் எல்லாத் திட்டங்களுக்கும் நல்ல சாராயத்திலிருந்து கள்ளச்சாராயம் வரை உள்ளூர் கட்சித் தலைவர் களுக்குப் பங்குண்டு. இதுதான் கடந்த 30 ஆண்டு களாக இந்தக் கட்சிகளின் கட்டுக்கோப்பைக் காப்பாற்றுகிறது. இப்போது இவர்களே சிலர் அடியாட்களாக, சொந்த சாம்ராஜ்யம் நடத்துவது கட்சியின் மேல்தட்டு பிரமுகர்களால் ஆதரிக்கப் படுகிறது. அதாவது ஊழல். பாழாய்ப் போகும் வரிப்பணம். இதன்மூலம் கட்சியின் கோட்டை கட்டப்படுகிறது.

இப்படிப்பட்ட கட்சித் தொண்டன் கட்சியைச் சார்ந்து நிற்கிறான். சார்ந்த சமுதாயத்தின் பிரதிநிதியாய் விளங்குகிறான். ஆனாலும் கூட அவனுக்கு சுய கௌரவம் உண்டு. அதிகாரம் உண்டு. தன்மானம் உண்டு. ஏனெனில் அவனிடம் பணம் இருக்கிறது. ஆனால் பரிதாபமாக ஒரு நெறிகளற்ற அடிப்படை மனிதனை உருவாக்கி அதை நியாயப்படுத்துகிறார்கள். ஒரு பக்கம் சுயமரியாதை இழந்த ஏழை; மற்றொரு பக்கம் நெறிகளற்ற கட்சித் தொண்டர் படை. இப்படிப்பட்ட தொண்டன், கிராமங்களையே தேர்தல் காலத்தில் குத்தகை பேசி அந்த ஏழைகளையும் நெறிகளற்றவர் களாக ஆக்குகிறான்.

வாழ்க கட்டுக்கோப்பான கட்சிகள்!

இதுதான் இன்றைய நிதர்சனம்; உண்மை.

"நாடு இப்படியே போய்க் கொண்டிருக்கட்டும். வேறென்ன செய்யமுடியும்?" என்பது படித்த நடுத்தர வர்க்கத்தின் கையாலாகாத்தனமானால், நாம் சொல் வதற்கு அடுத்த வார்த்தை இல்லை.

"இல்லை. நிலைமை இன்று மோசமாயிருக்கலாம். இது மாறத்தான் வேண்டும்; மாற்றத்தான் போகிறேன்" என்பது இன்றைய இளைஞர்களின் குரலாக, நடுத்தர வர்க்கத்தின் செயலாக எழுமானால் – நாம் எங்கு போகவேண்டும் என்பதை முன் வைத்து அங்கங்கே அமைப்புகளை சங்கங்களை அமைத்து வாரந்தோறும் கூடி விவாதித்து நடவடிக்கை எடுப்போமானால் நாடு மாறும். தன்மானத்தோடும் நெறிகளோடும், கல்வி ஞானத்தோடும், திறந்த மனத்தோடும் வாழும் ஓர் உயர் சமுதாயத்தை நம்மால் உருவாக்க முடியும். நம்புங்கள் நம்மால் முடியும். ●

## சத்திய பூமி

ஜெ. கமலநாதன்

முத்துப் புன்னகை சூடிய அன்னை
ஊர்வலம் வருகின்றாள்!
செக்கச் சிவந்த சூரியக் கதிர்போல்
தரிசனம் தருகின்றாள்!

ஒளி பிறக்குது; பிறக்குது; பிறக்குது!
உயிர் துடிக்குது; துடிக்குது; துடிக்குது!
மலர் சிரிக்குது; சிரிக்குது; சிரிக்குது!
மனம் தவிக்குது; தவிக்குது; தவிக்குது!

சத்திய தத்துவம் விளைகின்ற பூமி
சரித்திரம் படைக்கின்றது!
இத்தரை மீதினில் நிகரில்லை என்றொரு
பெருமை கிடைக்கின்றது!

கலை மலருது; மலருது; மலருது!
இசை வளருது; வளருது; வளருது!
நிலை உயருது; உயருது; உயருது!
பகை விலகுது; விலகுது; விலகுது!



வளரும் தலைமுறை பாரதக் கொடியை
உயர்த்திப் பிடிக்கின்றது!
வாடிய அன்னையின் கைகளில் வெற்றிக்
கனியைக் கொடுக்கின்றது!

துயர் தொலையுது; தொலையுது; தொலையுது!
சுடர் எரியுது; எரியுது; எரியுது!
படை பெருகுது; பெருகுது; பெருகுது!
பலம் நிறையுது; நிறையுது; நிறையுது!



# சிவகாமியின் சபதத்தில் தேவாரம்

கட்டுரையில் இடம் பெற்றுள்ள ஓவியங்கள்
'கல்கி'யில் 'சிவகாமியின் சபதம்' தொடருக்காக
ஓவியர் வர்மா வரைந்தவை.

டாக்டர் பூவண்ணன்

இருபதாம் நூற்றாண்டின் தன்னிகரற்ற தமிழ் எழுத்தாளர்கள் மூன்று பேரைத் தேர்ந்தெடுங்கள் என்று சொன்னால் நாம் இருவரை உடனே தேர்ந்தெடுக்கலாம். தயங்காமல் தேர்ந்தெடுக்கலாம். இருவரில் ஒருவர் கவிஞர் பாரதியார்; அடுத்தவர் கதாசிரியர் கல்கி.

கல்கி என்னும் பெயரை நினைத்ததும் நம் நினைவில் தோன்றுவது வரலாற்று நாவலே! தமிழில் முதல் வரலாற்று நாவலை எழுதியவர் யார் என்று கேளுங்கள். கல்கி என்னும் விடையே விரைந்துவரும்.

உண்மையில் முதல் வரலாற்று நாவலை எழுதியவர் கல்கி அல்லர். அவருக்கு முன்பே சிலர் வரலாற்று நாவலை வரைந்து பெருமை பெற்றுள்ளனர். தி.த.சரவண முத்துப்பிள்ளை (1895) எஸ்.கூடலிங்கம் பிள்ளை (1903) சி.வை.சின்னப்பப்பிள்ளை (1905) ஆர்.பி.குழந்தைசாமிப் பிள்ளை (1910) ஆகியோர் பெயர்களுக்குப் பின்னே உள்ள ஆண்டு, அவர்கள் நாவல் எழுதிய ஆண்டு. அவர்கள் எழுதிய வரலாற்று நாவல்கள் முறையே, மோகனாம்பாள், மங்கம்மாள், வீரசிங்கன் அல்லது சன்மார்க்க விஜயம், சத்தியவல்லி ஆகியன. கல்கிக்கு முன்னே வரலாற்று நாவல்கள் எழுதியிருக்கிறார்கள் என்றாலும் கல்கி சரித்திர நாவலின் தந்தை என்கிறார்கள். காரணம் சரித்திர நாவல் எழுதும் ஆற்றலில் மற்றவர்கள் 'பிள்ளைகள்' இவரே தந்தை, தன்னிகரற்ற தலைவர்; முதல் வரலாற்று நாவல் தந்த

உயர்வுக்கு உரியவர் என்று கூறுகின்றனர். 'நின் மரபினோர் புகழையெல்லாம் உன் புகழ் ஆக்கிக் கொண்டாய்' என்று பரதனைக் குகன் பாராட்டுவது போலவே, தமிழ் மக்கள், கல்கியின் முன்னே பலர் வரலாற்று நாவல் எழுதியிருந்தும், அவர்கள் புகழை இவருக்கு ஏற்றி, இவரே வரலாற்று நாவலின் முதல்வர் என்கின்றனர்.

ஆம்! அந்த அளவு ஆற்றலும் ஆளுமையும் பெற்றவர் கல்கி. மேல் நாட்டிலும் சர் வால்டர் ஸ்காட்டுக்கு முன்பே பலர் வரலாற்று நாவல்கள் எழுதியிருந்தும், ஸ்காட்டையே வரலாற்று நாவல்களின் தந்தை, முன்னோடி என்று கூறுவது போன்றதே, வரலாற்று நாவலில் கல்கிக்குத் தரும் முதல் மரியாதையுமாகும்.

கல்கி முத்தான மூன்று வரலாற்று நாவல்களைத் தந்தார். அவை, பார்த்திபன் கனவு (1941) சிவகாமியின் சபதம் (1944), பொன்னியின் செல்வன் (1950) இம்மூன்றிலும் நடுவண் நிற்கும் சிவகாமியின் சபதமே. மற்ற இரண்டினும் உயர்ந்து சிகரமாக நிமிர்கிறது.

எழுத்தாளர்கள் தாம் எழுதும் நாவல்களில் ஆங்காங்கே தம் பாடல்களையோ, சான்றோர் பாடல்களையோ புகுத்திவிடுவது வழக்கம். அதிலும் வரலாற்று நாவலாசிரியர்கள் இப்படிக் கவிதைகளைக் கலந்துவிடுவதை ஓர் இலக்கணம் போலவே கையாளுகிறார்கள். சரவணமுத்துப்பிள்ளை தம் 'மோகனாங்கி'யில் இப்படி ஏராளமான பாடல்களைப் புகுத்தியுள்ளார். அவர் வழியில் வந்த கல்கியும் தம் வரலாற்று நாவல்களில் சில அருமையான பாடல்களைத் தருகிறார். இந்தக் கட்டுரையில் சிவகாமியின் சபதத்தில் தேவாரப் பாடல்களைச் சேர்த்திருக்கும் திறனைப் பார்ப்போம்.

நாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவர்தம் பாடல்களையும் 'தேவாரம்' என்னும் ஒரு சொல்லால் குறிக்கும் வழக்கம் உண்டு. உண்மையில் திருநாவுக்கரசர் பாடிய பாடல்களுக்கே உரிய பெயர் தேவாரம். சம்பந்தர் பாடல்களைத் திருக்கடைக்காப்பு என்றும், சுந்தரர் பாடல்களைத் திருப்பாட்டு என்றும் வழங்கவேண்டும். அதனால் இக்கட்டுரையில் சிவகாமியின் சபதத்தில் தேவாரம் இடம்பெறும்– அதாவது திருநாவுக்கரசரின் பாடல் இடம் பெறும்– சிறப்பை மட்டும் பார்ப்போம்.

வரலாற்று நூல்களைப் புரட்டிப் பாருங்கள். அதன் முடிவில், அக்காலத்துச் சமயநிலை, கலைநிலை முதலியன தனியே கூறப்படும். வரலாற்று நாவலில் கல்கி, இப்படித் தம் கதை நடந்த காலத்தின் சமய நிலையைத் தனியே கூறாமல் பாலோடு தேன் கலந்த கலப்புப் போலக் கதையோடு கலந்து கொடுத்துவிடுகிறார்.

'சிவகாமியின் சபதம்'கதையின் காலம், மகேந்திர வர்மனின் காலம் (கி.பி.ஏழாம் நூற்றாண்டு) மகேந்திரவர்மன் என்றதும் நமக்கு நாவுக்கரசரின் நினைவு தப்பாமல் தோன்றும். மகேந்திரன் சமணனாக இருந்தபோது தருமசேனராக இருந்த நாவுக்கரசர் சைவராகிவிடுகிறார். அவருக்குக் கொடுமைகள் பல செய்து சமண சமயத்துக்கு மீட்கும் முயற்சியில் தோல்வியுற்று, மகேந்திரன் தானே சைவனாகி விடுகிறான். 'நாணில் அமண் பாதகருடன் ஒன்றிய மன்னவன் சூழ்ச்சி திருத்தொண்டின் உறைப்பாலே வென்றவரான' தருமசேனர், இறைவன் தந்த திருப்பெயராம் திருநாவுக்கரசர் என்னும் புதுப்பெயர் பெற்று, சைவசமயத் தொண்டு செய்கிறார்.

இத்தகைய ஆன்மிகப் பெரியவர், அவரைக் கொடுமைப்படுத்தி, பின்பு அவர் வழியை ஏற்றுக் கொண்ட மகேந்திரன் முதன்மை மாந்தரில் ஒருவராகத் திகழும் நாவலில் தோன்றாமல் இருப்பாரா? தோன்றுகின்றார். ஆயிரம் பக்கங்களுக்கு மேலே கொண்ட இந்த நாவலின் கால் பகுதிக்குள்ளே (183ஆம் பக்கத்தில்) கால் பதிக்கிறார்.

"திருநாவுக்கரசு அடிகளுக்கு அப்போது ஏறக்குறைய ஐம்பத்தைந்து பிராயமிருக்கலாம்" என்று கல்கி வயது குறிப்பிட்டு அறிமுகப்படுத்துகிறார்.

ஒரு முதன்மைக் கதைமாந்தரை நாவலில் அறிமுகப்படுத்தும்போது அவரது குணத்தைச் சொல்வது போல வடிவத்தை வர்ணிப்பதும் முறை. இதோ கல்கி நாவுக்கரசரைப் படம் பிடிக்கிறார்.

"அப்பெருமானுடைய வண்ணத்திருமேனி முழுவதும் தூய வெண்ணீறு பூசியிருந்தது. அவருடைய கழுத்தையும் மார்பையும் ருத்திராட்ச கண்டிகைகளும் தாழ்வடங்களும் அலங்கரித்தன. சிரசிலும் கரங்களிலும் அவ்வாறே ருத்திராட்சங்கள் பொலிந்தன. காதுகளிலும் ருத்திராட்ச குண்டலங்கள் இயங்கின. இடையில் தூய வெண்துகில் உடுத்தியிருந்தார். அவருடைய திருமுகத்தில் ஞான ஒளி வீசிற்று. இறைவனை நினைந்து இடையறாது கண்ணீர் விட்ட அவருடைய கண்களில் பேரருள் ததும்பிற்று. கோயில் பிராகாரங்களில் புல் செதுக்குவதற்கான உழவாரப்படை அந்தத் தொண்டர் சிகாமணியின் திருத்தோளில் சாத்தப்பட்டிருந்தது."

(பக்கம் 184)

அப்பர் பெருமானை இப்படி அற்புதமாக வர்ணிக்க எங்கே கற்றுக்கொண்டார் கல்கி? அப்பெருமானின் முழு விவரங்கள் வழங்கும் பெரிய புராணத்தில், சேக்கிழார் இப்படி வர்ணிக்கிறார்:



"செல்வியைப் பாகங்கொண்டார்
சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணியோடு
மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியிற் கரை யிலாத
காஞ்சிமா நகர்தன் னுள்ளார்
எல்லியல் விளங்க நின்றார்
இலங்குமேற் றளிய னாரே"

காஞ்சிபுரத்தில் இன்றுள்ள பிள்ளையார்பாளையம் என்னும் பகுதியில் உள்ள திருத்தலமே திருமேற்றளி. இது திருக்கச்சி மேற்றளி என வழங்கப்படுகிறது. இப்பாடலில்



*தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும்*
*தாழ்வடமும்,*
*நாயகன் சேவடி தைவரும் சிந்தையும்*
*நைந்துருகிப்*
*பாய்வது போல் அன்பு நீர்பொழி கண்ணும்*
*பதிகச் செஞ்சொல்*
*மேய செவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே!*

(பெரியபுராணம் 1405ஆம் பாடல்)

இந்தச் செய்யுளின் திரண்ட கருத்தை–ஒரு சிறு சொல்லையும் விட்டுவிடாமல், – மிக மிக எளிமையாகக் கொடுத்திருக்கிறார், கல்கி. அவர் பெரியபுராணத்தை ஆழ்ந்து படித்துள்ளார் என்பதும் இதனால் தெளிவாகிறது.

திருநாவுக்கரசர் திருமடத்தில் ஆயனரும் சிவகாமியும் மாமல்லரும் கூடியிருக்கும் சமயம் அது. அந்தத் திருமடமே கல்வி கற்றுத்தரும் பள்ளியாகவும் பல்கலைக் கழகமாகவும் இருந்தது. அது "நகரின் மத்தியில் இருப்பதால் கல்வி பயிலும் மாணாக்கர்களுக்கு உகந்ததாயில்லை" என்று பெருமானே கூறுவதாகக் கல்கி குறிப்பிடுகிறார் (பக்கம் 187) அந்த இடத்தில் காஞ்சியின் கல்விச் சிறப்பை நாவுக்கரசர் போற்றிப் புகழ்ந்திருக்கும் தேவாரப் பாடலை அறிமுகப்படுத்த வேண்டும் என்று கல்கி விரும்பியிருக்கிறார் என்பது தெரிகிறது. அதனால் "பெருமானே! திருமேற்றளி இறைவன் மீது பாடல் ஏதாவது பாடப்பெற்றதா?" என்று ஆயனர் கேட்க, ஒரு சீடர் அப்பாடலைப் பாடுவதாகக் காட்டுகிறார் கல்கி.

இடியேறு களிற்றுரிவைப்
போர்வை தோன்றும்!
எழில் திகழும் திருமுடியும்
இலங்கித் தோன்றும்!
பொடியேறு திருமேனி
பொலிந்து தோன்றும்!
பொழில்திகழும் பூவணத்தெம்
புனிதனார்க்கே!

(அப்பர் தேவாரம் 179ஆம் பாடல்)





வரும், "கல்வியில் கரையிலாத காஞ்சி மாநகர்" என்னும் ஒப்பற்ற தொடரை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தவே இத்தேவாரத்தைக் கொடுத்துள்ளார் கல்கி.

இதே காட்சியில் சிவகாமி, நாவுக்கரசர் முன்னிலையில் நடனம் ஆடுகிறாள். பெருமானின் திருத்தாண்டகத்தை அவளே பாடிக்கொண்டு, அபிநயம் பிடித்தாள். இதை 'இரண்டாவது அரங்கேற்றம்' என்று கல்கி குறிப்பிடுகிறார்.

வடியேறு திரிசூலம்
தோன்றும்! தோன்றும்!
வளர்சடைமேல் இளமதியம்
தோன்றும்! தோன்றும்!
கடியேறு கமழ்கொன்றைக்
கண் தோன்றும்!
காதில்வெண் குழைதோடு
கலந்து தோன்றும்!

சிவனடியாரின் திருத்தாண்டகச் சிறப்பையும், சிவகாமியின் திருத்தாண்டவச் சிறப்பையும் ஒருசேரக் காட்டவேண்டும் என்றே கல்கி இப்பாடலைத் தேர்ந்தெடுத்துள்ளார் என்று தோன்றுகிறது.

"சிவகாமி, அதன் பொருளுக்கேற்ப அங்கங்களின் சைகைகளினாலும் முகபாவத்தினாலும். அபிநயம் பிடித்தாள். பாடலில் ஒவ்வொரு வரியிலும் 'தோன்றும், தோன்றும்' என்று வந்தபோது, சிவகாமியின் பாதசரங்கள் 'ஜல் ஜல்' என்று தாளத்துக்கிசைய ஒலித்தன" என்கிறார் கல்கி. இப்பகுதியைப் படித்து விட்டு, இப்போது மீண்டும் பாடலைப் படியுங்கள். 'தோன்றும், தோன்றும்' என்று வரும்போதெல்லாம் 'ஜல் ஜல்' என்னும் சலங்கை ஒலி உங்கள் செவியில் கேட்கும். அவ்வளவுதானா? ஓவியத்தின்மூலம் நமக்கறிமுகமாகி யிருக்கும் சிவகாமியின் பாதமும், அதைப் பற்றியிருக்கும் சலங்கையும்கூட நம் கண்ணில் தெரியும்.

ஒரு நாவலில் பாடலைத் தந்தால் அதன் பொருளையும் தரவேண்டாமா? இது வெறும் பாடல் மட்டுமன்று. ஆடல் பாடல்! அதனால் கல்கி இதன் பொருளைக் கண்முன்னே காட்டுகிறார். காட்சியாகக் காட்டி, காட்சியை மனத்தில் நிலைநாட்டுகிறார்.

"அவர்கள் (அங்கு கூடியிருந்தோர்) கண்முன்னால் பாடி ஆடி அபிநயம் பிடித்துக் கொண்டிருந்த சிவகாமியைக்கூட அவர்கள் பார்க்கவில்லை.

பின் அவர்கள் யாரைப் பார்த்தார்கள்?

சாக்ஷாத் சிவபெருமானையே தங்கள் கண்முன்னால் தத்ருபமாக நேருக்கு நேரே பார்த்தார்கள்.

அவருடைய கரத்தில் தோன்றிய திரிசூலத்தையும் அவருடைய வளர்சடைமேல் இயங்கும் இளமதியையும் பார்த்தார்கள்.

அவருடைய திருமிடற்றில் கொன்றைமாலையைப் பார்த்தார்கள். அதிலே வெண் குழையைப் பார்த்தார்கள்.

திருநீறு பொழியும் திருமேனி முழுவதையும் பார்த்தார்கள்.

அந்தத் தெய்விகக் காட்சியில் தங்களை மறந் தார்கள்; இப்பூவுலகையே மறந்தார்கள். பூவுலகிலிருந்து கைலாசத்துக்கு அவர்கள் போய்விட்டார்கள்.

(சிவகாமியின் சபதம் – பக்கம்: 191 – 192)

கல்கி இங்கே பாடலின் பொருளை மட்டுமா தந்துள்ளார்? பாடலினால் கிடைத்த அருளையும் தந்துள்ளார்.

ஆயனர் அடுத்து ஓர் அகத்துறைப் பாடலுக்கு அபிநயம் பிடிக்கச் சொல்கிறார்.

சிவகாமி ஆடச் சித்தமானாள்.

அவள் ஆடினாளா?

இல்லை.

முதலில் பாடலைப் பாடினாளாம்.

பாடலை ஒரு முறை முழுவதையும் பாடிவிட்டு மீண்டும், தொடக்கத்திலிருந்து அபிநயம் பிடிக்கத் தொடங்கினாள் என்கிறார் கல்கி.

நாம் இன்னும் அந்தப் பாடலைப் பார்க்கவில்லையே! இதோ அந்தப் பாடல்:

*முன்னம் அவனுடைய*
*நாமம் கேட்டாள்*
*மூர்த்தி அவனிருக்கும்*
*வண்ணம் கேட்டாள்*
*பின்னை அவனுடைய*
*ஆரூர் கேட்டாள்*
*பெம்மான் அவனுக்கே*
*பிச்சி யானாள்*
*அன்னையையும் அத்தனையும்*
*அன்றே நீத்தாள்*
*அகன்றாள், அகலிடத்தார்*
*ஆசா ரத்தை.*
*தன்னை மறந்தாள்தன்*
*நாமம் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை*
*தலைவன் தாளே!*

நாவுக்கரசர் பாடலில் மிகச்சிறந்தவற்றை மட்டும் தேர்ந்தெடுக்கவேண்டும் என்னும் ஆணைக்கு அடங்கி ஆராயும் எவரும், விட்டுவிடாமல் தேர்ந்தெடுக்கும் காதல் பாடல் – கடவுள் பாடல் – இது.

இதன் பொருள் என்ன? உட்பொருள் என்ன? விளக்கம் என்ன? விரிவுரை என்ன?

இவை அனைத்தையும் கல்கியின் எழுதுகோல் ஏதோ ஒரு மந்திரக்கோல் போல–தெய்வத் தந்திரக்கோல் போல – எழுதிக் காட்டுகிறது.

"முதன் முதலில் ஓர் இளம் கன்னியின் இதயத்தில் காதல் உதயமாகும்போது அதனுடன் பிறக்கும் நாணங் கலந்த இன்பப் பெருக்கை அவர்கள் (ஆடல் பார்ப்போர்) கண் முன்னால் பார்த்தார்கள். காதல் வளர்ந்து வரும் ஆரம்ப தினங்களில் காதலனுடைய பெயரைக் கேட்டபோதும் அவனுடைய குணாதிசயங்கள் வர்ணிக்கப் படும்போதும் பெண் இதயத்தில் பொங்கித் ததும்பும் ஆனந்த

குதூகலத்தையும், அதனால் அவளுடைய மேனியில் ஏற்படும் அதிசயமான மாறுதல்களையும் பிரத்தியட்சமாகப் பார்த்தார்கள்.... பெற்று வளர்த்த அன்னையையும் அப்பனையும் விட்டுவிட்டுக் காதலனோடு புறப்படவும், காதலுக்குத் தடையாக நிற்கும் சமூக ஆசாரங்களையும் புறக்கணித்து ஒதுக்கவும், ஊராரின் நிந்தனைகளை யெல்லாம் பொறுத்துக்கொள்ளவும் எவ்வாறு அந்தப் பெண் மனந்துணிகிறாள் என்பதையும் நேருக்கு நேரே பார்த்தார்கள்.... சோகக் கடலிலே மூழ்கிய காதலி வெளியுலகை அடியோடு மறந்துவிடுகிறாள். தன்னையும் மறந்து விடுகிறாள். தன் பெயரைக் கூட மறந்து விடுகிறாள். தெய்வக் காதலன் அவள் முன்னால் தோன்றும்போது காதலியானவள் தான் செய்யாத குற்றங்களுக்காகத் தன்னை மன்னித்துவிடும்படி கோரி அவனுடைய திருப்பாதங்களில் பணிகிறாள்.''

அரும்பத உரை, பதவுரை, பொழிப்புரை, ஆழ்ந்தவுரை, அகன்றவுரை, விளக்கவுரை, விருத்தியுரை என்று உரைகளைப் பலவகையாய் அடுக்கிக் கூறுகிறார்களே அந்த வரிசையில் கல்கியின் இந்த உரையை ஆடல் உரை – ஆடல் மூலமாக விளக்கும் அற்புத உரை – என்று கொள்ளலாம்.

மண்டகப்பட்டுக் கிராமத்தில் இதுவரை கல்கி காட்டாத ஒரு பாடலுக்கு அபிநயம் பிடிக்கிறாளாம் சிவகாமி!

*வெள்ளநீர்ச் சடையனார்தாம்*
*வினவுவார் போலவந்தென்*
*உள்ளமே புகுந்து நின்றார்க்கு*
*உறங்குநான் புடைகள் போந்து*
*கள்ளரோ புகுந்தீர் என்னக்*
*கலந்துதான் நோக்கி நக்கு*
*வெள்ளரோம் என்று நின்றார்.*
*விளங்கிளம் பிறையனாரே.*

இப்பாடலுக்குக் கல்கி வழங்கும் ஆடல் உரையை– அற்புத உரையைக் – காண்போம்.

"ஓர் அறியாப் பெண்ணின் உள்ளமாகிய இல்லத்தி னுள்ளே, வெள்ளநீர்ச் சடையராகிய சிவபெருமான் ஏதோ விசாரிக்க வருகிறவர் போல வந்து பிரவேசிக்கிறார். தூங்கிக் கொண்டிருந்த பெண் திடுக்கிட்டு எழுந்திருக் கிறாள். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்க்கிறாள். யாரோ முன்பின் அறியாதவர் எதிரில் நிற்பதைக் கண்டு, "ஐயோ! இப்படிச் சொல்லாமல் கொள்ளாமல் என் உள்ளத்திலே புகுந்த நீர் யார்? கள்ளரா?'' என்று வினவுகிறாள். அப்போது வந்தவர் கண்ணோடு கண் கலக்கும்படி அந்தப் பெண்ணை உற்றுப் பார்க்கிறார். பார்த்துவிட்டு நகை செய்கிறார். அந்த நகைப்போடு கலந்து 'நானா கள்ளன்? கள்ளத்தனமென்பதே அறியாத வெள்ளை மனத்தவனாயிற்றே! அதற்கு



அறிகுறியாக என் மேலேயும் வெண்ணீறு பூசியிருக் கிறேனே தெரியவில்லையா?' என்கிறார். வானத்திலே விளங்கிய இளம் பிறையைத் திருடித் தம் சிரசிலே அணிந்துகொண்ட பெருமான்தான், இப்படி ஒன்றும் தெரியாதவர் போல நடித்தார். ஆகா! அந்த இளம்பிறையின் அழகைச் சொல்வேனா? அவருடைய கள்ளத்தனத்தைச் சொல்வேனா? அல்லது கள்ளமற்றவர் போல அவர் நடித்த நடிப்பைச் சொல்வேனா?''

இது கல்கி உரை!

கம்பச் சூத்திரம் என்கிறார்களே, அதுபோல இது 'கல்கி சித்திரம்'

மகேந்திரர் அவையில் அவரும், புலிகேசியும் வீற்றிருக்க சிவகாமி ஆடுகிறாள். அப்போது நாவுக்கரசர், மன்னன் மகேந்திரவர்மன் அனுப்பிய ஆணைக்கு அடிபணிய மறுத்துப் பாடிய 'நாமார்க்கும் குடியல்லோம்' என்னும் பாடலைப் பாடி சிவகாமி அபிநயம் பிடிக்கிறாள்.

*நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்*
*நரகத்திலிடர்ப்படோம் நடலை இல்லோம்*
*ஏமாப்போம் பிணியறியோம், பணிவோம் அல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை.*
*நாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான*
*சங்கரன் நற்சங்கவெண் குழையோர் காதில்*
*கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க்*
*கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே*



இந்தப் பாடலுக்குக் கல்கி அளித்த ஆடல் உரையை– கல்கி சித்திரத்தைப் படிக்க விரும்புகிறீர்கள் இல்லையா? யாரை நோக்கி அப்பர் பெருமான் "நாமார்க்கும் குடியல்லோம்" என்று பாடினாரோ, அந்த மகேந்திர வர்மன் முன்னிலையில் சிவகாமி இப்பாடலுக்கு எப்படி அபிநயம் பிடித்தாள்? அப்போது மகேந்திரன் நிலை என்ன? இதையாவது நீங்களே சிவகாமியின் சபதம் நூலை எடுத்துப் படித்துப் பார்த்துப் பேரின்பம் பெறுங்கள் (சி.சபதம் பக்கம்:561–563)

இனி நூலின் இறுதிப் பகுதிக்கு வருவோம் "தன் காதலன் மாமல்லன் தன்னைக் கைவிட்டுவிட்டான். அவனுக்குத் திருமணமாகிவிட்டது. மனைவியும் மக்களுமாக வாழ்கிறான் என்பதை அறிகிறாள் சிவகாமி. அதனால் கலங்கிக் கண்ணீர் வடிப்பதற்குப் பதில் கடவுளிடம் சரணடையத் துணிகிறாள். "அப்பா! ஏகாம்பரநாதரையே என் பதியாக ஏற்றுக் கொண்டேன்" என்று ஆயனரிடம் கூறுகிறாள். நாவுக்கரசரும் அவள் முடிவை ஆதரிக்கிறார். அதன்படி ஒரு நல்ல நாளில் ஏகாம்பரநாதன் முன்னே, அவரைக் கணவனாக ஏற்றுக் கொண்டதற்கு அறிகுறியாக திருமாங்கல்யத்தைத் தன் கழுத்தில் அணிந்து கொள்கிறாள். பின் இறைவனின் முன்னே நின்று ஆடுகிறாள். 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்னும் திருநாவுக்கரசரின் தேவாரத்தைப் பாடி ஆடுகிறாள். அப்போது மாமல்லச் சக்கரவர்த்தி அங்கே வருகிறார். அவருடைய விசால நயனங்களில் நீர் பெருக அங்கிருந்து நழுவிச் செல்கிறார். கோயிலின் வாயிலைத் தாண்டிக் கொண்டிருக்கும்போது,

"தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" என்னும் நாவுக்கரசர் பாடலின் கடைசி வரி, சிவகாமியின் உணர்ச்சி நிறைந்த இனிய குரலில் கேட்டுக் கொண்டிருந்தது"

காலத்தைக் கடந்து நிற்கும் சிவகாமியின் சபதம் நாவலை இப்படி முடிக்கிறார் கல்கி.

சிவகாமியின் சபதம் நாவலை ஆவலோடு படித்து அனுபவித்தவர்கள் யாராயிருந்தாலும் சிவகாமி என்னும் பேரைக் கேட்டாலே அவர்கள் மனத்தில் 'தலைப்பட்டாள்



நங்கை தலைவன் தாளே' என்னும் பாடல் சிவகாமியின் இனிய குரலில் கேட்டுக்கொண்டே இருக்கும்.

சிவகாமியின் சபதம் நாவலில் நாவுக்கரசருக்கும், அவருடைய தேவாரப் பாடல் சிலவற்றுக்கும் அதிலும் குறிப்பாக 'தலைப்பட்டாள் நங்கை—தலைவன் தாளே' என்னும் வரிக்கும், முக்கியமான இடம் இருக்கிறது.

கல்கி இந்த நாவலுக்கு எழுதிய ஆசிரியன் முன்னுரையில் "இந்தக் கதையில் வரும் நிகழ்ச்சிகளில் சில முக்கியமான நிகழ்ச்சிகள் சரித்திர ஆதார முடையவை" என்று குறிப்பிட்டு, அவற்றில் முக்கிய மானவை என்று எட்டு நிகழ்ச்சிகளைத் தருகிறார். எட்டில் முதலாவதாக நிற்பது இது. "மகேந்திர பல்லவர் முதலில் சமணராயிருந்து பின்னர் அப்பர் சுவாமிகளின் உபதேசம் பெற்றுச் சைவர் ஆனது"

நாவலின் கதை, மகேந்திரர் சைவரான பல ஆண்டுகளுக்குப் பின்பே தொடங்குகிறது என்றாலும் அப்பர் பெருமானின் பெயரை முதலாம் ஆதாரமாகக் குறிப்பிடுவது ஏன்?

ஏனென்றால், நாவலுக்கு அப்பர் பெருமான் முக்கியம். அவரைவிட அவருடைய தேவாரம், அதிலும் 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்னும் பாடல் முக்கியம். அதிலும் 'தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்னும் இறுதிவரி மிக மிக முக்கியம். இதுவே இந்த



நாவலின் இன்றியமையாத வரி: நாவலை முடிக்கும் வரி. நாவலின் முத்தாய்ப்பாக அமையும் வரி. அதனால் அந்த வரியை – அந்தப் பாடலை — நாவலின் அந்தப் பாடலைத் தந்தவரான அப்பர் பெருமானின் பெயரை முதல் ஆதாரமாகக் கூறுகிறார்.

இவ்வாறு கூறுவதற்கு மற்றொரு காரணம் உண்டு.

கல்கி மாமல்லபுரக் கடற்கரையோரத்தில் நில வொளியில் ஒருநாள் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்திருந்தபோதுதான் சிவகாமியின் சபதம் நாவல்— நாவலின் கோட்டுருவம் – அவர் மனத்தில் உருவானது. அதுமட்டுமா? கதையின் முக்கிய மாந்தர்கள்கூட உருக்காட்டி முகம் காட்டினராம்.

அப்படி உருவும் முகமும் காட்டியவர்கள் யார்? பதினான்கு மாந்தரைக் குறிப்பிடுகிறார் கல்கி. சிவகாமியின் சபதம், பார்த்திபன் கனவு ஆகிய இரு நாவலுக்கும் சேர்த்தே குறிப்பிடுகிறார். இந்தப் பதினான்கு பேரில் வரலாற்று மாந்தரும் உள்ளனர்; கற்பனை மாந்தரும் உள்ளனர். கல்கி தரும் பட்டியலில் முதலில் இடம் பெறுபவர்கள். "ஆயனரும் சிவகாமியும்" ஆகிய கற்பனை மாந்தர்கள். பிறகுதான் வரலாற்று மாந்தரான மகேந்திரரும் மாமல்லரும் வருகின்றனர்.

எனவே கல்கியின் கற்பனை உதயமானபோதே சிற்பி ஆயனர் வருகிறார். அவர் மகள் நடனநாயகி சிவகாமி வருகிறாள். அப்போதே 'சிவகாமி மாமல்லனைக் காதலிப்பாள். அவனால் கைவிடப்படுவாள். அதனால் கடவுளையே தன் கணவனாக ஏற்று அவன்தாள் பணிவாள்' என்னும் கதைச் சுருக்கமும் அவர் மனத்தே தோன்றியிருக்க வேண்டும். இதை எண்ணும்போதே அவர் மனத்தில் "தலைப்பட்டாள் நங்கை, தலைவன் தாளே" என்னும் தேவார வரியும் தோன்றியிருக்க வேண்டும்.

ஆம்! கல்கிக்கு இக்கதை உதயமானபோதே இதை எப்படி தொடங்குவது என்று தெரியாமல் இருக்கலாம். ஆனால் எப்படி முடிப்பது என்று – சிவகாமி காதலனைவிட்டுக் கடவுளின் பாதமடைகிறாள் என்று முடிப்பது என்று – அப்போது 'தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்று முடிப்பது என்று முடிவு செய்திருப்பார் என்று கொள்வது தவறாகாது.

அதனால்தான் அவர் காட்டும் ஆதாரங்களில் முதலில் அப்பர் வருகிறார். அவர் மனத்தில் உருக் காட்டிய கதைமாந்தரில் இரண்டாவதாக சிவகாமி வருகிறாள்.

ஆம்! "முன்னம் அவனுடைய நாமம்" என்னும் தேவாரம் சிவகாமியின் சபதத்துக்கு ஆதாரமாகலாம் என்பதும் ஏற்கத்தக்க உண்மை. ●

# சிறுவர் பகுதி:

# திறமைக்குப் பரிசு

## ருக்மணி சேஷசாயி



பட்டாசுகளை வெயிலில் காய வைத்துக் கொண்டிருந்த சிவா யாரையோ ஆவலாய் எதிர்பார்த்த வண்ணம் இருந்தான். அன்று விடுமுறை தினமாதலால் மிகவும் சாவகாசமாக எழுந்து குளித்து சாப்பிட்டுவிட்டு வாசலில் வந்து நின்று கொண்டான். வெயில் வருவதைப் பார்த்த உடனே தீபாவளிக்காக வாங்கியிருக்கும் பட்டாசுகளைக் காயவைத்தால் நன்றாக வெடிக்குமே என்று தோன்றியது. தீபாவளிக்கு இன்னும் மூன்று தினங்களே இருந்தன. நாளை ஒரு நாள்தான் பள்ளி உண்டு. பின்னர் இரண்டு நாள்கள் தீபாவளிக் காக விடுமுறை. மும்பையிலிருக்கும் அவன் மாமா தீபாவளிக்கு வருவ தாகக் கடிதம் எழுதியிருந்தார். அவரைத் தான் எதிர்பார்த்துக் கொண்டு வெளியே பார்த்தவாறு நின்றிருந்தான்.

தெருமுனையிலேயே வாடகைக் காரைக் கண்டு சிவா உற்சாக மிகுதியினால் கத்தினான். "அம்மா! மாமா வந்தாச்சு. டாக்ஸி வருது. நம்ம வீட்டுக்குத்தான் வருதும்மா"

அம்மாவும் ஆவலோடு கையைப் புடைவைத் தலைப்பில் துடைத்தவாறே வெளியே வந்தாள். "வாங்க! வாங்க!" எனக் கூறி இன்முகத்துடன் வரவேற்றாள் அம்மா. காரிலிருந்து மாமா இறங்கும் முன்பாகவே அவரது பைகளையும் பெட்டியையும் எடுத்துக் கொண்டான் சிவா. "டேடேய் சிவா, கனமாயிருக்கும். இரு இரு" என்றவர், அவனைப் பார்த்துச் சிரித்தவாறே உள்ளே நுழைந்தார். அவருடன் அவர் மனைவியும் மகனும் இறங்கி உள்ளே நுழைந்தனர். மாமியுடன் பேசியவாறே அம்மா உள்ளே சென்றாள். அதற்குள் பைகளை உள்ளே வைத்துவிட்டு வெளியே வந்த சிவா, மாமாவின் மகன் குணாவைப் பார்த்து அவன் தோளில் கை வைத்தான். நாகரிகமாக உடையணிந்திருந்த அவன் தன் தந்தையைப் பார்த்து "டாடி! இந்தக் கிராமத்தில் எத்தனை நாள்கள் தங்கியிருக்கணும்?" என்று ஆங்கிலத்தில் கேட்டான்.

பட்டணம் அதுவும் மும்பையில் படிக்கும் குணாவுக்கு பட்டிக்காடு அறவே பிடிக்கவேயில்லை.

அன்று முழுவதும் பேசிக் களித்தனர். மாலையில் சிவா தன் மாமா மகனுக்கு ஊரைச் சுற்றிக் காண



பித்தான். அவனுடன் செல்வதைப் பெருமையாக நினைத்து நண்பர்களுக் கெல்லாம் அறிமுகப் படுத்தி அவர்கள் மதிப்பில் உயர்ந்து விட்டதாக சிவா நினைத்தான். ஆனால் குணாவோ ஆங்கிலச் சொற்களை அள்ளி வீசி அவர்கள் திகைப்பதை ரசித்தான்.

மறுநாள் பள்ளி விட்டவுடன் சிவா மகிழ்ச்சியுடன் ஓடிவந்தான். மாலை யிலிருந்தே பட்டாசு மத்தாப்பு வெடிக்கச் சொல்லியிருக்கிறாரே மாமா! வீட்டுக்குள் ஓடி கைகால் அலம்பியவன் வாசலுக்கு ஓடிவந்தான். அங்கே குணா பட்டாசுக் கட்டைக் கையில் வைத்துக் கொண்டு கொளுத் தாமல் சிந்தனை வயப்பட்டு நின்றிருந் தான். சிவாவைக் கண்ட மாமா "வா சிவா. ரொம்ப நேரமா பட்டாசு வெடிக்க முடியாம குணா நிற்கிறான். உனக்காவது முடியுமா பாரு" என்றார்.

"ஏன் குணா? என்னாச்சு?"

"பட்டாசுல நெருப்பு வைக்காமே வெடிக்கணும் அப்படிங்கறாரு அப்பா. எப்படி முடியும்?"

"அதானே, எப்படி முடியும்?"

"அப்பா முடியும்னு சொல்றாரே."

"அப்படியா? அப்போ ஏதாவது வழி இருக்கும். யோசி."

"ரொம்ப நேரமாக யோசிக்கிறேன் ஒண்ணும் புரியலை."

திடீரென்று "மாமா! என்ன சொன்னீங்க? பட்டாசுல நெருப்பு வைக்காம வெடிக்கணும்னுதானே சொன்னீங்க" என்றவன் பட்டாசுக் கட்டை நெருப்பிலே காட்டித் தூர எறிந்தான். படபடவென வெடித்துச் சிதறின பட்டாசுகள்.

"சரியா மாமா?" மாமா சிரித்தார்.

"என்ன டாடி சிரிக்கிறீங்க? என்னை பட்டாசுல நெருப்பு வைக்கக் கூடாதுன்னு சொல்லிட்டு இப்ப சிவா செஞ்சதுக்குச் சரின்னு சொல்றீங்களே."

"குணா! அப்பா என்ன சொன்னாரு? பட்டாசுல நெருப்பு வைக்கக்கூடாதுன்னுதானே? நான் தான் அப்படி வைக்கலையே. நெருப்புல தானே பட்டாசை வைச்சேன்?" குணாவுக்குப் பொறி தட்டியது. அவமானத்தில் முகம் சிவந்து தூர அமர்ந்தவனைக் கண்டுகொள்ளாமல் மாமா சிவாவிடம், "நீ இந்தப் பட்டாசு முழுக்க வெடிச்சுட்டு உள்ளே வா" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றுவிட்டார்.

சற்று நேரம் சிவா வெடிப்பதைப் பார்த்துக் கொண்டேயிருந்த குணாவை உற்சாகம் பற்றிக் கொள்ள, தானும் அவனுடன் சேர்ந்து வெடிக்க முனைந்தான். உற்சாகத்துடன் வெடித்து முடித்து மகிழ்ச்சி ததும்பும் முகத்துடன் இருவரும் உள்ளே நுழைந்தனர்.

தீபாவளியன்று காலை எல்லாரும் பலகாரம் சாப்பிட்டுக் கொண்டிருந் தனர். அப்போது அம்மா கழுத்திலணிந் திருந்த முத்துமாலை அறுந்து முத்துகள் சிதறி ஓடின. அதை அள்ளப் போனான் குணா. அவனைத் தடுத்தார் அவன் அப்பா.

"குணா! இந்த முத்துகளை கை படாமல் இரண்டு நிமிஷத்திலே எடுத்து இந்தக் கிண்ணத்தில் போடணும். சிவா! உன்னால் முடியுமா?" என்றார். குணா யோசித்துக் கொண்டிருக்கும் நேரத்தில் சிவா தன் கையில் வைத் திருந்த பால்கோவாவால் முத்துகளை ஒற்றி எடுத்துக் கிண்ணத்தில் போட்டான்.

குணா திடுக்கிட்டான். தனக்கு இது தோன்றவில்லையே என வருந்தினான்.

## கல்



ஏ! கல்லே!

நீ கற்கால மனிதன் பயன்படுத்திய ஆயுதமோ?

நீ பிற்கால மனிதன் வீடுகட்டிய கல்லோ?

நீ கரிகாலனின் கல்லணையினின்று தப்பி வந்தனையோ?

நீ சேரன் கங்கையினின்று கொண்டு வந்த கல்லோ?

நீ பல்லவன் வடித்து வைத்த சிற்பக் கல்லோ?

நீ சோழன் நட்டு வைத்த நடுகல்லோ?

இன்று நீ காலடியில் மிதிபட சாலையில் இருக்கிறாயோ?

அல்லது நீ நியாயவிலைக் கடைகளின் அரிசியில் இருக்கிறாயோ?

இல்லை! இல்லை!

நீ இக்கால மனிதனின் இதயத்தில் இருக்கிறாய்.

இரா. கோகுலவாச நவநீதன்

"சபாஷ் சிவா! கெட்டிக்காரன் நீ" என்று அவனைத் தட்டிக் கொடுத்து விட்டுச் சென்றார். குணாவின் கண்களில் அவமானத்தால் நீர் நிறைந்தது. அம்மா அவனை அணைத்துச் சமாதானம் செய்தாள்.

ஒரு வழியாக பட்டாசு மத்தாப்பு கொளுத்தியும் நண்பர்களுடன் பேசியும், பலகாரங்களும் விருந்தும் சாப்பிட்டு மகிழ்ச்சியாக தீபாவளிப் பண்டிகை சிறப்பாகக் கழிந்தது. இரவு பெரிய சமுக்காளத்தை விரித்தார் மாமா. அதில் படுப்பதற்காக வந்த குணா, சிவா இருவரையும் தடுத்து நிறுத்தினார். "குணா! சமுக்காளம் ஆறடி நீளம் இருக்கு. அந்தப் பக்கத்தில் உயர்ந்த கைக்கடிகாரமும் ரூபாய் ஆயிரமும் வைத்திருக்கிறேன். இந்த சமுக்காளத்தை மிதிக்காமல் அதை



எடுக்க வேண்டும். எடுத்தவர்க்கே அந்தப் பரிசு உரியது" என்றார்.

"என்னப்பா இது? ஆறடி நீளம் எப்படித் தாண்டுவது? நான் என்ன அனுமாரா?" என்றான் குணா.

"மாமா! எங்களை ரொம்பச் சோதிக்கிறீங்க" என்று சிரித்தான் சிவா.

"அப்பா பரிசு கொடுக்காம இருக்க வழி பண்றாருடா" என்றான் குணா, சோகமாக.

"இல்லவேயில்லை. மூளையை உபயோகித்து வெற்றியடைய முயற்சி செய்யுங்கள். பத்து நிமிடங்கள்தான் நேரம்" என்று சொல்லிவிட்டு புத்தகத்துடன் அமர்ந்துவிட்டார் மாமா.

சிவா சிந்தித்தான். இரண்டே நிமிடங்களில் அவன் முகம் பிரகாசமடைந்தது. கையால் சமுக்காளத்தை சுருட்டிக்கொண்டு வந்து கடைசியில் அரையடியைத் தாண்டி அந்தக் கடிகாரத்தையும் பணத்தையும் எடுத்துக் கொண்டான். கடகடவென்று சிரித்தார் மாமா.

"சபாஷ் சிவா! சபாஷ். காலால் மிதிக்கக்கூடாதுன்னு தான் சொன்னேன். கையால் தொடக் கூடாதுன்னு நான் சொல்லவில்லையே. அதைப் புரிந்து கொண்டு வெற்றியடைந்த உனக்கு என் பாராட்டு" சிவாவின் முதுகில் தட்டிக் கொடுத்தார். சிவா பெருமையுடன் சிரித்தான். மாமா குணாவைப் பார்த்துச் சொன்னார்.

"குணா! உயர்ந்த கான்வென்ட் படிப்பாலேயோ ஆங்கிலத்தில் பேசுவதாலேயோ அறிவாளியாகிவிட முடியாது. வாழ்க்கையிலே வெற்றியடையணும்னா திறமையும், கெட்டிக்காரத்தனமும் இருக்கணும். ஆங்கிலம் தெரியலை பட்டிக்காட்டுப் பசங்கன்னு நினைச்சியே, அந்த சிவா உன்னை ஒவ்வொரு முறையும் ஜெயிச்சுகிட்டே வர்றதைக் கவனிச்சியா? அதனால கிராமத்திலே இருக்கிறவங்களும் அறிவாளிகளா ஆற்றல் வாய்ந்தவங்களா இருக்காங்க. இதைப் புரிஞ்சுகிட்டு அவங்களை மதிக்கக் கத்துக்கோ. நாளைக்கு ஊருக்குப் புறப்படணும். படுத்துக்கோ"

"சிவா! என்னை மன்னிச்சிடடா. இனிமே கிராமத்திலே படிக்கிறவங்களைக் குறைவா மதிப்பிட மாட்டேன்டா" என்று அவன் கைகளைப் பற்றிக் கொண்டான் குணா. 'இந்த தீபாவளியிலே எனக்கு ஒரு நல்ல நண்பன் கிடைச்சிருக்கான்' என மனசுக்குள் மகிழ்ந்தான் சிவா. ●

## சூரியனாய் இரு

எம். பாரதி



மலர்ந்த மலராய் இராதே – வாடி விடுவாய்
திறந்த புத்தகமாய் இராதே – மூடிவிடுவாய்
குவிந்த மேகமாய் இராதே – கரைந்து விடுவாய்
முழு நிலவாய் இராதே – தேய்ந்து விடுவாய்
ஓடும் நீராய் இராதே – ஓய்ந்து விடுவாய்
பொக்கிஷப் புதையலாய் இராதே – புதைந்து விடுவாய்
என்றும் மாறாச் சூரியனாய் இரு
எதையும் வென்று விடுவாய்.

கைக்குட்டைகளில் வர்ணமிடுதல்



குழந்தைகளின் சட்டைகளில் வர்ணமிடுதல்





வாழ்த்து மடலில் வர்ணமிடுதல்

ஓவியம் :
ரமணி ரங்கநாதன்

## கண்டுபிடியுங்கள் கவிஞர்களை:

சிறப்புப் பெயர்களால் மட்டுமே அறியப்படுகின்ற அறிஞர்கள் பலர் உண்டு நம் தமிழ்மொழியில்! அப்படிப்பட்ட சிறப்பு அடைமொழிகள் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றுக்குரிய கவிஞர்கள் யார் யார் எனக் கண்டுபிடியுங்கள், பார்க்கலாம்.

1. தேசியக் கவிஞர் 2. புரட்சிக் கவிஞர்
3. நாமக்கல் கவிஞர் 4. குழந்தைக் கவிஞர்
5. மக்கள் கவிஞர்

## சென்னை 'புதிர்'

தமிழ்நாட்டின் தலைநகரமான சென்னையில் உள்ள பல்வேறு இடங்கள் பற்றிய செய்திகளையும் நுணுக்கமாக அறிந்து வைத்துள்ளவரா நீங்கள்?

அப்படியானால் பின்வரும் புதிர்களுக்கு விடையளிக்க உடனே முயற்சி செய்யுங்கள் பார்க்கலாம்.

1. 'இசைக்'கருவி ஒன்றைத் தன்னிடம் வைத்துள்ள இடம் எது?
2. 'கிணறு' நிறைந்த பகுதி எது?
3. 'வலிமை'யோடு உள்ள இடம் எது?
4. மிகவும் 'பிரகாசமான' பகுதி எது?
5. அதிகக் 'குளிர்ச்சியாக' இருக்கும் இடம் எது?



6. 'சோலைகள்' நிறைந்த இடம் எது?
7. மிகவும் 'உயர்ந்த' இடம் எது?
8. 'சங்கீதம்' நிறைந்த இடம் எது?
9. 'பசுமை' உள்ள பகுதி எது?
10. மிகவும் 'நம்பிக்கையான' இடம் எது?
11. 'தூசிகள்' நிறைந்துள்ள இடம் எது?
12. அதிக 'ஆசாரமான' இடம் எது?

தொகுப்பு: திரு நின்றவூர் வெ. பாண்டுரங்கன்

### விடைகள் : சென்னை புதிர்

1. ஒர 'கடம்' 2. திருவல்லிக்'கேணி' 3. மாம்'பலம்'
4. 'ஆயிரம் விளக்கு' 5. 'ஐஸ்' ஹவுஸ்
6. பூங்கா நகர் 7. பெரிய 'மேடு'
8. 'கச்சேரி' சாலை 9. 'கிரீன்வேஸ் சாலை'
10. 'டிரஸ்ட்'புரம்
11. 'புழுதி'வாக்கம் 12. 'மடி'ப்பாக்கம்

### கண்டுபிடியுங்கள் கவிஞர்களை:- விடைகள்

1. மகாகவி சுப்ரமண்ய பாரதியார்
2. பாரதிதாசன்
3. வெ. இராமலிங்கம்பிள்ளை
4. அழ. வள்ளியப்பா
5. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்



## நிச்சயம் நடக்கும்

எம். மத்வேஷ்

மனிதன் பிறந்தால் மரணம் நிச்சயம்
தீமை செய்தால் தண்டனை நிச்சயம்
பாடு பட்டால் பலன் நிச்சயம்
ஊனமுற்றாலும் முயன்றால் சாதனை நிச்சயம்

# ஏழுமலையானே!

டாக்டர் கிருஷ்ணா ஸ்ரீநிவாஸ்



ஆடையின்றி
வைரம் இன்றி
கவசம் இன்றி
ஏழுமலை மேலே
நிமிர்ந்து நிற்கும் நெடுமாலே!

என் உள்ளம் உருக
உன்னை அணைத்து.
நீ தந்த என் உயிர்
உன் உயிராய்
உன் மேனியில் மறைய
மதி மயங்கி விட்டேன்
உலகை உதறி விட்டேன்
பற்றை வீசி எறிந்து விட்டேன்.

ஏழுமலை தாண்டி
உன் பொன்னடி ஜ்வலிப்பில்
நான் விழுந்து மறைந்து
நானே நீயாகி
நீயே நானாகி
அமரர் மகிழ ஒன்றிடுவோம்.

அமுதசுரபி - தீபாவளி மலர் - 1999

# எங்கே போகிறது நம் உயர்கல்வி?



டாக்டர். கி. வேங்கடசுப்பிரமணியன்

'அறிவு அற்றம காக்கும் கருவி' என்பது வள்ளுவன் வாக்கு. அறிவை ஒரு கருவியாக, அற்றம் காக்கும் மாபெரும் ஆயுதமாகப் பார்த்த ஒரே சிந்தனையாளன் வள்ளுவன்தான். 'அறிவுடையார் எல்லாமுடையார்' என்று முதன்முதல் அறை கூவியவனும் அவனே.

ஆனால் வள்ளுவனை ஈந்து வான் புகழ் கொண்ட தமிழகத்தின் கல்வி நிலை என்ன? எங்கு பார்க்கினும் ஒரு கலக்கம்; மயக்கம். தொடக்கப் பள்ளியில் இலவச மதிய உணவு (முட்டையுடன்) இலவசப் புத்தகம், சீருடை; இவ்வளவும் இருந்தும் நல்ல தேர்ச்சி இல்லை. உயர் பள்ளிக் கல்வியிலும் ஒரு மந்த நிலை. கல்லூரிக் கல்வி பற்றியோ கேட்கவே வேண்டாம்.

இந்தியா முழுமைக்கும் சேர்த்துப் பார்த்தால் 1951இல் 20ஆக இருந்த பல்கலைக்கழகங்கள் இன்று 180க்கு மேல். அன்று 420 கல்லூரிகள், இன்று 5000; படித்த மாணவர் எண்ணிக்கை அன்று 2 லட்சம், இன்றோ 60 லட்சத்துக்கும் மேல்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பாரதம் கல்விக்காக 150 கோடி ரூபாயைச் செலவு செய்தது. ஆனால் ஆறாவது திட்டத்திலே ரூபாய் 2500 கோடியைத் தாண்டி விட்டோம். இன்று 3000 கோடிக்குமேல்.

இவ்வளவு இருந்தும் மனத்துக்கு ஆறுதல் அளிக்கும் முன்னேற்றம் இருக்கிறதா? இல்லை, இல்லை இல்லை என்பதே நம் பதில். தொடக்கப் பள்ளியில், எல்லாம் (தேர்வு உட்பட சில வகுப்புகளில்) இலவசமாகக் கொடுத்தும் இன்னும் 20/30 சதவிகித மாணவர்கள் பள்ளியை விட்டுக் காணாமல் போய் விடுகிறார்கள். உயர்நிலைப் பள்ளியில் நம் தீந்தமிழகத்தில் வரவேண்டிய பிள்ளைகளில் பாதிப்பேர்தான் வருகிறார்கள். உதாரணமாக, பத்து லட்சம் பேர் ஒன்றாம் வகுப்பில் சேர்ந்தால், ஐந்தாம் வகுப்பு வருவதற்குள் 6 லட்சம் பேர் தான் காணப்படுகிறார்கள். 8ஆம் வகுப்பில் 4 லட்சம். சுமார் 3 லட்சம் பேர் 10ஆம் வகுப்புத் தேர்வெழுதுகிறார்கள். இதில் பாதி கரையேறி பிளஸ்டு; அதில் பாதி ஆண்டவன் அருளினால் கல்லூரி செல்கிறார்கள். கடைசியாக நாம் 'கடைந்தெடுப்பது' சுமார் 50,000 பட்டதாரிகள். 10 லட்சம் 50,000 ஆகத் தேய்ந்துவிடுகிறது. ஏதோ தேய்ந்து கட்டெறும்பான கதை.

பல்கலைக்கழகங்களின் பணி எப்படி? ஆண்டுதோறும் "கவைக்குதவாத" பலரை வெளியேற்றுகின்றனர். இன்றைய சிக்கல் **Unemployment** அல்லது **Unemployability** தான் என்பது கல்வியாளர் கூற்று.

ஆங்கில இலக்கிய மேதை டாக்டர் ஜான்சன் கூறினார். **"University is a place of knowledge, because pupils enter with some and leave with none"** என்று. இக்கூற்று நம் நாட்டுப் பல்கலைக்கழகங்களைப் பொறுத்தவரையில் மிகவும் உண்மையானது என இன்று பலர் நம்பத் தொடங்கியுள்ளனர்.

அண்மையில் நடந்த பல்கலைக்கழக மானியக் குழுவின் அகில இந்தியத் தேர்வில் நம் பல்கலைக்கழகங்கள் மிகவும் பின்னால் இருந்தன. பெயர் போன ஒரு பல்கலைக்கழகத்தில் தேர்வெழுதிய மாணவர்களில் ஒருவர் கூடத் தேர்ச்சி பெறவில்லை.

ஆயினும் தென்னிந்தியாவிலிருந்து மேலை நாடுகளுக்குச் செல்லும் மாணாக்கர்கள் பலரும் மிகச் சிறந்த தேர்ச்சி பெறுகின்றனர். இங்கு பின்னால் இருக்கும் மாணவன் அமெரிக்காவில் முன்னால் நிற்கிறான். காரணம் பயிற்றுவிக்கும்

முறை அங்கு வேறு; இங்கு வேறு. நமது தோல்விக்குக் காரணம் பல்கலைக்கழகங்களின் நடைமுறையில் உள்ள கோளாறுதான் என்பது தெளிவாகிறது.

இன்றைக்குப் பொறியியற் கல்லூரிகளில் நுழைவதற்குத் தேவையான மதிப்பெண்கள் 97 சதவிகிதம் 98 சதவிகிதம் என உள்ளது. இருப்பினும் இந்தியா பொறியியல் துறையில் மிகப் பெரிய சாதனைகளைப் புரிந்துள்ளது என்று கூற இயலாது. இதன் காரணம் என்ன? பாரதி சொன்னான்.

*“பயிற்றுப் பலகல்வி தந்து இப்*
*பாரை உயர்த்திடல் வேண்டும்”* என்று.

நாம் பல கல்வி தருவதில்லை. நாம் செக்குமாடுபோல் சென்றவழியிலேயே மீண்டும் மீண்டும் செல்லும் ஒரே கல்வியையே தருகிறோம். நம் பயிற்சி முறை, பயிற்றுவிக்கும் பாடங்கள் அனைத்தும் மாற்றப்படல்வேண்டும். பட்டங்களுக்கும் நாட்டின் வேலைகளுக்கும் இருக்கும் சம்பந்தத்தைத் துண்டிக்க வேண்டும். (De-linking degrees from jobs). ஓர் எழுத்தர் வேலைக்கு எம்.ஏ.ஏன்? மறைந்த மேதை எல்.கே.ஜா அவர்கள் ஒருமுறை கூறினார்; “வெறும் தலையாட்டிப் பொம்மைகளாக உள்ள ஐ.ஏ.எஸ்.வேலைக்கு பிளஸ் டூ படிப்புப் போதாதா? ஏன் எம்.ஏ. எம்.எஸ்ஸி, தேவை என்கிறார்கள்?” என எள்ளி நகையாடினார் எல்.கே.ஜா. தவிர இன்னொரு குறைபாடு. மாணவர்கள் எடுத்துக் கொள்ள வாய்ப்புகள் இருக்கவேண்டும். அதாவது மேலை நாடுகளில் சொல்லப்படும் முறையை நாம் பின்பற்றவேண்டும். இதுகாறும் நாம் கடைப்பிடித்து வரும் பாடத்திட்டம் மாணாக்கர்களுக்கு எந்தவிதமான தெரிந்தெடுக்கும் வாய்ப்பினையும் அளிக்கவில்லை. இந்த வாய்ப்பு உண்டாக்கப்படவேண்டும். Music, Sanskrit, Algebra என்று லண்டனில் எடுத்துக் கொள்கிறார்கள். நமக்கு Physics, Chemistry, Maths விட்டால் வேறு போக்கிடமில்லை.

'Distance Education' என்ற பெயரால் நடத்தப்படும் 'அஞ்சல் வழித் தொடர்பு' படிப்பு முறைகள் பெரிதும் கேடு விளைவிக்கின்றன. இது நல்ல முறைதான். ஆனால் நாம் இவற்றைக் கையாளும் வழிகளில் 'Education becoming distant' என்றாகிவிடுகிறது. இது தவிர்க்கப்பட்டு அஞ்சல் வழிக்கல்வி முறைகள் மிகச் சிறந்த கண்காணிப்புக்குள்ளாக்கப்பட்டு முறைப்படுத்தவேண்டும்.

Self-financing Institutions எனப்படும் சுயநிதிக் கல்லூரிகள் பட்டப்படிப்பையும், பட்ட மேற்படிப்பையும், பொறியியல் படிப்பையும் ஒரு கேவலமான வியாபாரமாகவே ஆக்கிவிட்டன. இதனால் ஏற்படும் விளைவுகள் மிகவும் கவலையைத் தருகின்றன. பட்டப்படிப்பிற்கு மிகவும் வேண்டிய தகுதி கல்வித் தகுதியாக இல்லாமல் பணத் தகுதியாகிவிடுகிறது. இதனால் தகுதியற்றோர் பட்டங்களை எப்படியோ பெற்று பொறுப்புகளில் அமர்ந்து நாட்டையும் சமுதாயத்தையும் ஆபத்துக்குள்ளாக்குகிறார்கள். இம்முறை மாறிடல் வேண்டும்.

கடைசியாக, பல்கலைக்கழகக் கல்வியை அரசியல் பிடித்து ஆட்டுகிறது. ஆட்சிக்குழுக்களில் அரசின் அதிகாரிகள் பெரும்பான்மையினர். உண்மைப் பேராசிரியர்கட்கு இடமில்லை. பேருக்கு ஆசிரியராக இருப்போர் இங்கு அதிகம். தவிர அரசின் அனுமதியின்றி எதுவும் செய்யமுடியாத நிலை. பல்கலைக் கழகங்களைப் பொறுத்த வரையில் மாநில முதல்வர் பெரியவரா? கவர்னர் பெரியவரா என்ற ஆராய்ச்சி. ஒரு மாநிலத்தில் இனி வேந்தர் (Chancellor) மாநில முதலமைச்சர் தான் என்ற சட்டம் இயற்றும் முயற்சிக்கிடையில் மாட்டிக்கொண்டு விழிப்பது பல்கலைக்கல்வி. இந்நிலைக்கு விமோசனம், விடிவு காலம் உண்டா? நிச்சயம் உண்டு. மேலை நாடுகள் போல் அரசியல் கலப்பற்ற பல்கலைக்கழகங்கள் உருவாவதுதான். நான் படித்த கொலம்பியாப் பல்கலைக்கழகம் மேலும், கார்னல், யார்க், பிரண்ஸ்டன், ஸ்டான்போர்ட், லண்டன் போன்ற பல்கலைக் கழகங்களில் அரசியல் வாடை துளிகூட இல்லை. கல்லூரிப் பேராசிரியர்கள் கூடித்தான் துணைவேந்தர் ஒருவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். நன்றாகக் கவனியுங்கள் துணைவேந்தர் தேர்வு அரசு நியமனமன்று. அரசுக்கும் இதற்கும் ஸ்நானப்பிராப்தி கூடக் கிடையாது

துணைவேந்தரும் பேராசிரியர்களும் ஒன்றாக இணைந்து பல்கலைக்கழகங்களைச் செவ்வனே நடத்துகிறார்கள். பேராசிரியர் கூறுவதே வேதவாக்கு. நம் நாட்டில் உள்ளதுபோல் எந்தத் துணைவேந்தரும் அங்கு “மாண்புமிகுக்களின்” மேலான ஆணைக்காகத் தவம் கிடப்பதில்லை.

இந்நிலை என்று இங்கு வருமோ, அன்றே உயர்கல்விக்கு ஒரு விமோசனம் பிறக்கும்.

இன்று நம் உயர்கல்வி எங்கே போகிறது என்று தெரியவில்லை

**சுகமான நினைவுகள்!**

இதழோடு இதழ்சேருமே - மலர்
இதழ்களில் தேனூறுமே

கழலாட ஒலிகேட்குமே கயல்விழிகள் எனையழைக்குமே
கவிபாட இசைதோன்றுமே கைவளையும் துதிபாடுமே
குழலோசை மதிமயக்குமே குறுநகையில் நிலைபுரியுமே
குதித்தாடும் காலிரண்டும் நாட்டியக் கலைபயிலுமே

தோகை விரித்தாட தேன்தமிழ் இசைபாட
வாகை எனைச்சூட வான்மதி உனைத்தேட
பாய்கின்ற நதியாலே பயிர்கள் வளர்ப்பு
பருவம் என்றாலே நினைவுக்கு இனிப்பு

கவிஞர் ஆற்றலரசு

வில்லிபுட் உலகம்
விஸ்வரூபம் எடுத்தது

அவளோடு உறங்கிய
மரப்பாச்சி, பார்பி,
கரடிக் குட்டியெல்லாம்
காணாமல் போயின.

புத்தகப்பை போகியாய் எரிந்தது
'ஏண்டீ அழறே?
படிச்சு-கூலிக்கு மாரடிக்கவா?
ராசாத்தியா இருக்கப் போற...
பெரிய மனுஷங்கள்லாம்
உன் காலடில
கன்னி கழிக்க
அச்சாரம் குடுத்திருக்கான் மிராசு..."

அல்லிகள் ராஜ்ஜியத்தில்
புதிய பள்ளியறை.
படுக்கைதான் பலிபீடம்
கல்யாண மாலை கிடையாது.
'காண்டம்' மாலைதான்
அறுக்கும் கத்தி-தினசரி மாறும்
மன இறப்பு நிதம் உண்டு

பதிமூனு வயசில்
அப்பா மடியில்
முகம் புதைக்காமல்-
அப்பன் வயசுக்காரனை
மடியில் புதைத்து.....

யார் கண்டது?
இவனே
அப்பனாகவும் இருந்திருக்கலாம்.
வாரிசு ஆட்சிதானே....

இவளின்
எதிர்கால வாரிசுக்கு-
ஆங்கில எழுத்து
இருபத்தாறும் போதாது
இனிஷியலுக்கு.

இருட்டு ராஜ்ஜியத்தின்
குருட்டு இயக்கத்துக்கு
முகம், பெயர் தேவையில்லை
நட்பு இல்லை.
உறவு இல்லை.

கல்லறைத் தனிமை.
சில்லறை இனிமை
புணர்தல் உலகத்தில்
உணர்தல் இழந்தாள்
மௌன முயக்கத்தில்
மொழி இழந்தாள்.

உச்சிமுதல் பாதம்வரை
தானம்;
மனசு மட்டும் அவளுக்கு...

பூக்காமலே
இருந்திருக்கக்கூடாதா?

# மனசு மட்டும் அவளுக்கு...

அமுதசுரபி - தீபாவளி மலர் - 1999



# தேடல் என்பது...

தேடல் ஞானம் தெளிதல் அறிவு
தேடித் தெளிதல் சிந்தனை மூலம்!
தேடித் தெளிந்த ஞானம் பெறுவது
வாழ்வில் உன்னத யோகம் ஆகும்.

பொன்னைப் பொருளைத் தேடிப் பெறுவது
உண்மை அறிவை நாடி உணர்வது
எதுவா னாலும் தேடல் என்பது
அறிவைக் கூர்மை செய்யும் ஆயுதம்

தேடிய ஞானம் தெளிந்த அறிவு
வாடிய பயிர்க்கு வான்மழை போன்றது
தேடல் அற்றுப் போனவர் வாழ்க்கை
தேங்கிய குட்டை நீர்போல் ஆகும்.

தேடல் அறிவில் தெளிவைக் கூட்டும்!
தேடல் மனத்தில் தெம்பை ஊட்டும்!
தேடல் முயற்சி மனித வாழ்வில்
தீப விளக்கு ஒளியாய்த் திகழும்.

தேடிக் கொண்டே இருப்பது வாழ்வில்
எதை யாவது எதற் காவது
தேடிக் கொண்டே இருப்பது என்பது
அறிவை வளர்க்கும் ஆன்மப் பயிற்சி.

ஞா. மாணிக்கவாசகன்





இராம வீரப்பன்

# திருஞானசம்பந்தர்



மொழி மதத்தை வளர்த்ததா? அல்லது மதம் மொழியை வளர்த்ததா? என்று இனம்பிரித்து அறியமுடியாத ஓர் இக்கட்டான நிலை, உலகின் மற்ற நாடுகளை விட இந்தியாவில் அதிகம். குறிப்பாக தமிழகத்தில் அதிகம்.

பவுத்த மத மூல நூல்கள் பாலி மொழியில் அமைந்தவை. கிறிஸ்தவ வேதமான 'விவிலியம்' 'அரமிக்' எனும் யூத மொழியில் பிறந்தது. இஸ்லாமியரின் 'திருக்குர்ஆன்' அரபு மொழியில் வெளிப்பட்டது.

இந்த வேதங்களும், இவற்றை மூலாதாரமாகக் கொண்ட மதங்களும், அவை தோன்றிய மொழி களுக்கும். அவற்றின் வளத்திற்கும், வளர்ச்சிக்கும் – அவ்வளவு பெருந்துணை புரிந்ததாய்க் கூறுவதற் கில்லை. இன்னும் கூறப்போனால் பவுத்த, சமண மொழியான பாலி மொழியோ, கிறிஸ்தவ மூல மொழியான அரமிக் மொழியோ இன்று பெரும் பான்மை மக்களின் வழக்கிலேயே இல்லை.

ஆனால் இந்திய மதங்களுக்கும், அவற்றின் 'தாய்மொழி'களுக்கும் இடையேயுள்ள பந்தபாசமும், பரஸ்பர உறவுகளும், மிகவும் நெருக்கமானவை யாகவும், நிகரற்ற ஆதார சக்திகளாகவும் விளங்கு கின்றன.

இந்தியாவின் மிகத் தொன்மையான இரண்டு மொழிகள், ஒன்று வடமொழி எனப்படும் சம்ஸ்கிருதம். இரண்டாவது தென்மொழியெனும் செந்தமிழ்.

இந்தியாவின் தொன்மையான மதம் இந்து மதம் என்று கூறப்பட்டாலும், தென்னகத்தின் தொன்மையான இரு சமயங்கள் சைவமும், வைணவமும் தாம். இவை இரண்டும் இந்து மதத்தின் மூலக்கூறுகளைக் கருவாகக் கொண்டவை என்று சொல்லப்பட்டாலும், இவை இரண்டும், நெறியிலும், வடிவத்திலும், வழக்கு முறையிலும் மிக நுட்பமான அடிப்படை மாறுபாடுகள் கொண்டவை.

நால்வகை வேதங்கள், உபநிடதங்கள் என்ற வடமொழியிலுள்ள தத்துவ, அனுபவ வெளிப்பாடு களைக் கருவாகவும், உருவாகவும் பெற்றது இந்து மதம். ஆனால், தமிழகத்தில் தனித்துவம் பூண்டு தனியாட்சி நடத்தும் சைவமும், வைணவமுமோ முற்றிலும் தமிழால் வளர்ந்தவை. திருப்பாசுரங்களால், திருமுறை களால் அவற்றை வழங்கிய தமிழ்ச் சான்றோர்களால் வளர்க்கப்பட்டவை. சமூக வேறுபாடுகளை ஒழித்து சமத்துவம் கண்டவை.

தமிழகத்தைப் பொருத்தவரை "நம் சைவ, வைணவச் சமயங்கள் தமிழால் வளர்ந்தனவா அல்லது அவற்றால் தமிழ் வளர்ந்ததா" என்று கேட்பது, "முட்டையிலிருந்து கோழியா அல்லது கோழியி லிருந்து முட்டையா" என்று கேட்பது போல்தான்! ஏனெனில் தமிழும், சமயமும் இனம் காண முடியாமல் இணைந்துள்ளவை; பிரிக்கமுடியாதவை...

இந்தப் பின்னணியில், நான் இப்போது 'தேவார முதல்வர்' திருஞான சம்பந்தரைப் பற்றிச் சிந்திப்பதால் சைவ சமயத்தை மட்டும் எடுத்துக் கொள்கிறேன்.

சம்பந்தர் அவதரித்த கி.பி. ஏழாம் நூற்றாண்டிலும், அதற்கு முன்பும் தமிழகத்தில் நிலவிய அரசியல், சமயச் சூழ்நிலைகள் எப்படிப்பட்டவை?

சம்பந்தர் வருகைக்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழகத்தில் பவுத்த மதம் தழைத் தோங்கி நின்றது. பின் அதனுடைய வேகம் சற்றே தணிந்தபோது சமண மதம் தன் முரட்டுக் கரங்களால் தமிழகத்தைச் சுற்றி வளைத்துவிட்டது.

வடக்கே பல்லவப் பேரரசு... அது சமண மாமன்னர்களால் ஆளப்பட்டது. தமிழகத்தின் தெற்கிலோ பாண்டிய மன்னன், கூன் பாண்டியன் என்பது அவனது முதற்பெயர். அவன் மெல்ல மெல்லச் சமண மதத்தின் செல்வாக்கிற்கு அடிமைப்பட்டான்.

சமணம், பவுத்தம் என்ற இந்த இரண்டு மதங்களுமே பாலி மொழியை 'மூல முதலாக'க் கொண்டவை. குறிப்பிட்ட அந்த மதங்கள் நாட்டை ஆள்பவர்களின் மதங்களாக ஆகும்போது, அந்த மதங்களைச் சார்ந்த மொழியும் ஆதிக்க மொழியாய் ஆவது தவிர்க்க முடியாத ஒரு சரித்திர விளைவு – அல்லது விபத்து தானே? அப்படி ஓர் ஆபத்தில் சிக்கித்தான் தமிழ்நாட்டில் அந்தக் காலகட்டத்தில் தமிழ் போராடிக் கொண்டிருந்தது.

இந்த நிலையில் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், 'பிரம்மாபுரம்' என்று வைதீகப் பெயர் வைக்கப் பெற்ற தஞ்சை மாவட்டம் – சீர்காழியில் பிறந்த திருஞான சம்பந்தர் மிகுசைவத்துறை தழைத்தோங்கப் பாடுபடவருகிறார். ஆனால் அவர் சமயத் தலைவராக மட்டும் விளங்கவில்லை. தமிழ் வளர்த்த ஞானசம்பந்தனாகத் திகழ்கிறார். அதனால் தான்,

*'சண்பை நாடுடைய பிள்ளை*
*தமிழ்மொழித் தலைவர்"*

எனச் சேக்கிழார் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

திருஞான சம்பந்தர் தோன்றிய சிறப்பினாலேயே உலகில் தென்திசை ஏற்றம் பெற்றது எனவும், உலகமொழிகளில் நம் செந்தமிழ்மொழி முதன்மை பெற்றது எனவும் பெருமிதத்துடன் பாடி மகிழ்கின்றார் சேக்கிழார்.

*'திசை அனைத்தின் பெருமை எலாம்*
*தென்திசையே வென்றேற*
*மிசை உலகும் பிறவுலகும்*
*மேதினியே தனி வெல்ல*
*அசைவில் செழுந் தமிழ்வழக்கே*
*அயல்வழக்கின் துறை வெல்ல*
*இசை முழுதும் மெய்யறிவும்*
*இடங்கொள்ளும் நிலை பெருக"*

என்ற பாடலால் திருஞானசம்பந்தர் தோற்றத்தால் தமிழும், தமிழிசையும், தமிழ்ஞானமும் ஏற்றம் பெற்றது என்பதை இறுதியிட்டு உறுதிபடச் சேக்கிழார் கூறி அத்தகைய திருஞானசம்பந்தர் தம் பாதமலர் தலைக் கொண்டு திருத்தொண்டு போற்ற வேண்டுவது நம் தமிழ் மக்களின் கடமை என்று வலியுறுத்தியிருப் பதையும் காணுகின்றோம்.

சைவத் திருமுறைகளைத் தொகுத்து வழங்கிய பெருமைக்கு உரியவரான நம்பியாண்டார் நம்பிகளும்,

*"முத்தமிழின்*
*செஞ்சொற் பொருள் பயந்த சிங்கம்"*

எனத் திருஞானசம்பந்தர் ஆற்றிய அருந்தமிழ்ப் பணியைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

திருஞானசம்பந்தர் என வழங்கும் பெயரைவிடவும், "தமிழ்ஞான சம்பந்தன்" எனும் பெயரே அவருக்கு மிக உவப்பானது என்பதற்கு, அவரே தம்மைத் தமிழோடு இணைத்துச் சிறப்பித்துக் கொண்டுள்ள பின்வரும் திருமுறைத் தொடர்களைக் காணலாம்.

*"தமிழ்ஞான சம்பந்தன் துளங்கில் தமிழ்"*
*"தமிழ்ஞானம் மிகுபந்தன் குன்றாத்தமிழ்"*
*"தமிழ் ஞானசம்பந்தன் ஒண்மாலை"*
*"தமிழ்நாதன் ஞானசம்பந்தன்"*
*"நற்றமிழ் ஞானசம்பந்தன் தகைமலி தண்டமிழ்"*
*"நற்றமிழ்க்கின்துணை ஞானசம்பந்தன்"*
*"தமிழ்விரகன் தான் சொன்ன தமிழ்"*
*"பெருகிய தமிழ் விரகினன்"*
*"செந்தமிழ் விரகன்"*
*"முத்தமிழ் விரகன்"*

எனவரும் பற்பல தொடர்கள் தமிழன்னையின் புகழ் தழைக்கப் பாடுபட்ட தலைமகன் தமிழ்ஞான சம்பந்தனே என்பதையும் காணுகின்றோம்.

திருஞான சம்பந்தருக்கு முன் தோன்றி அழியாப் புகழ்மிக்க தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களை அளித்தருளிய தமிழ்ப்புலவர் பெருமக்களில் ஒருவர் கூட, தன்னுடைய பெயர்களைத் தமிழுடன் இணைத்து அழைத்துக் கொண்டதில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

தாய்மொழியான தமிழுக்கு முதலிடம் தருவதிலும், 'சொற் கடந்து சொற் கடந்து சொற் கடந்த ஜோதி' யாய் நிற்கும் பரம்பொருளோடு ஒன்றிக் கலந்த உன்னத நிலையில் திளைக்கும் பரவசத் தருணங்களில் கூடத் தமிழை, தமிழ் உணர்வை, தமிழ் மீதுள்ள பாசத்தை மறக்காதவர், துறக்காதவர் ஞானசம்பந்தர்.

தாம் பாடிய பதிகம்தோறும், பதிகத்தின் முடிவில் தமிழுணர்வை நம்மக்களிடம் தோற்றுவிப்பதற்கென்றே "திருக்கடைக் காப்பு" பாடியருளினார். அத்திருக்கடைக் காப்புப் பாடலில் தமிழ்மொழியின் சிறப்பினை நம் மக்கள் உணரும் வகையில்,

*"அருள்மாலைத் தமிழ்"*
*"ஆரா அருந்தமிழ்"*
*"இன்தமிழ்"*
*"இசைமலிதமிழ்"*
*"ஏரார்தமிழ்"*
*"ஒண்தமிழ்"*
*"குன்றாத் தமிழ்"*
*"குற்றமில் செந்தமிழ்"*
*"சங்கமலி தமிழ்"*
*"சந்தமாலை தமிழ்"*
*"ஞானத்தமிழ்"*
*"ஞாலமல்கும் தமிழ்"*
*"தண்டமிழ்"*
*"திருநெறிய தமிழ்"*
*"துளங்கில் தமிழ்"*
*"நலங்கொள் தமிழ்"*
*"நிகரில்லன தமிழ்"*
*"பண்ணுலாந் தமிழ்"*
*"பலமிகு தமிழ்"*
*"பழுதில் இறை எழுது மொழி தமிழ்"*
*"புகழ்நின்ற தமிழ்"*
*"பேசுந்தமிழ்"*

என அடைமொழிகள் பலவற்றைப் படைத்துச் சிறப்புச் சேர்த்தார் தமிழ் ஞானசம்பந்தர்.

தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் தம்மையொத்த தமிழுணர்வு பெற்றாலன்றிப் பிறமொழி ஆதிக்கத்தி லிருந்து தமிழ் மொழியின் வாழ்வையும், தமிழர் வாழ்வையும் மீட்க இயலாது என்றெண்ணிப் போராடியவர். 'எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்! என்றும் தமிழ்!' என்ற இன்றைய சங்கநாதத்தை அன்றே முழங்கியவர் திருஞானசம்பந்தர்.

"ஒரு நாட்டின் மக்களை அவர்கள் பேசும் தாய்மொழியின் வாயிலாகவே உணர்ச்சியும், ஆர்வமும் மூட்டிக் கிளர்ந்தெழச் செய்து முன்னேற்றி உய்விக்க முடியும்" என்பது மொழியியல் ஆய்வறிஞர்கள் அறிவிக்கும் கருத்தாகும். இக்கருத்தினை அடி யொற்றியே இருண்டகாலம் கொண்டு இன்னலுற்றிருந்த நம் இன்தமிழ் மொழியினை மீட்சி செய்து மாட்சி கொள்ளவைத்தார் ஞானசம்பந்தப் பெருமான்.

"பிறந்தோர் உறுவது பெருகிய இன்பம்" என்று இவ்வுலக வாழ்வை வெறுத்தொதுக்கப் பிறசமயங்கள் வற்புறுத்தி வந்த அந்நாளில், இவ்வுலக வாழ்க்கை இன்பமயமானது என்று தெளிவுறுத்தி,

*"மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவில்லை"*

என்று தெளிவுறுத்திச் சமுதாய நலம் பெருக்கியவர் திருஞானசம்பந்தர்.

ஆடலும், பாடலுமான கலைகளை வெறுத்

தொதுக்குதல் வேண்டும் எனப் புறச்சமயங்கள் கலைகளைப் புறக்கணித்தபோது கலைகள் கடவுளின் வடிவமே என்று தெளிவுறுத்தியவர் திருஞானசம்பந்தர்.

தமிழின் பெருமை பேசப்படும் இடமும், தமிழிசை முழங்கும் இடமும் இறைவன் இருக்கும் இடமே என்று அறிவுறுத்தினார். இறைவனும், இசையும் வேறுவேறு அல்ல என்று தெளிவுபடுத்தினார்.

*"தமிழின் நீர்மை பேசித்*
*தாளம் வீணை பண்ணி நல்ல*
*முழுவமொந்தை மல்கு*
*பாடல் செய்கைஇடம் ஓவார்"*
*"பண்ணும் பதம் ஏழும்*
*பலவோசைத் தமிழவையும்*
*உள்நின்றதோர் சுவையும்*
*உறுதாளத்து ஒலிபலவும் ஆனான்"*

என்பன திருஞானசம்பந்தரின் பாடல்வரிகளாகும்.

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற சகோதர நெறியே நம்தமிழர் நெறி ஆவதைத் தம் வாழ்வில் கடைப்பிடித்துக் காட்டியதன் வாயிலாக நம் தமிழ்மக்கள் யாவரும் சகோதர உணர்வோடு ஒன்றுபட்டு வாழ்தல் வேண்டும் என்று உணர்த்தியவர் திருஞானசம்பந்தர்.

தாம் வேதியர் குலத்தில் உதித்தவராய் இருந்தும், திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தம் உற்றதோழராய்க் கொண்டு அன்றே தீண்டாமை ஒழிப்பினை வற்புறுத்திய சமூக சீர்திருத்தப் புரட்சியாளராகவும் விளங்கினார்.

மேலும், கோளறு பதிகத்தில் ஒரு பாடலில்,

*ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி*
*சனி பாம்பிரண்டும் உடனே*
*ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல*
*அடியார் அவர்க்கு மிகவே"*

எனப்பாடியதன் மூலம் நல்ல நாள், கெட்ட நாள் பார்க்கும் பழக்கத்தை அன்றே புறக்கணித்த புரட்சிக்காரர் ஞானசம்பந்தர்.

"பெண்ணின் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே" என்று பாடி, அவனியில் ஆணும், பெண்ணும் சமம் என்றும் அறிவுறுத்தினார்.

பெரியபுராணம் முழுமையும் உள்ள பாடல்கள் 4286. அதில் திருஞானசம்பந்தருக்கு மட்டும் சேக்கிழார் பாடியுள்ள பாடல்கள் 1256. ஆகவேதான் பெரிய புராணத்தையே "பிள்ளைபாதி புராணம் பாதி" என்று நம் தமிழுலகம் சிறப்பித்துக் கூறக் காணுகின்றோம்.

"நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்" என்று இவரைத் தம் திருவாக்கினில் வைத்துப் போற்றியுள்ளார் சுந்தரர்.

இத்தகைய தலைமகனாகி நின்ற தமிழ் ஞான சம்பந்தனைத் தமிழுலகம் போற்றிக் கொண்டாடும் நாளே நம் தமிழ்மக்கள் உய்யும் திருநாள் என்பதில் ஐயமில்லை.

இந்த நூற்றாண்டில் அரசியல் மற்றும் சமுதாயக் காரணங்களால் வீறுகொண்டு எழுந்த தமிழ் உணர்வுக்கும், தமிழ்ப் பற்றுக்கும், தமிழ் ஆவேசத் திற்கும் ஒரு பலமான ஆன்மிகத்தளம் அமைத்த சான்றோர்களில் தமிழ்ஞான சம்பந்தரே முதன்மை யானவர். அவர்தாம் முன்னோடி. ஏன் – அவர்தான் வழிகாட்டி!

இடைவெளியற்று அவரது இதயத்திலும், வாழ்விலும் முழுமையாய் நிறைந்திருந்த இறைவனுக்கு இணையாக, அவரது தமிழ்ப் பாசம் ஒளிச்சுடராய் இன்றும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

நமக்கு வழி காட்ட! நம்மை வழி நடத்த!, ஆனால்

பயணம் செய்வது நம் கையிலிருக்கிறது.

## நட்சத்திரப்பூ!

முத்து முத்து முல்லைப்பூ!
முளைவிடாத முல்லைப்பூ!
கொத்துக் கொத்தாய் எங்கெங்கும்
கொட்டி வைத்த எல்லைப்பூ!

பட்டுப் பட்டுப் படிகப்பூ!
பரந்து மின்னும் படிகப்பூ!
திட்டுத் திட்டாய் வான் எலாம்
தீவு போன்ற வடிவப்பூ!

சின்னச் சின்ன மின்னற்பூ!
சிதறி விட்ட மின்னற்பூ!
இன்னும் இன்னும் இரவெலாம்
இறைத்து விட்ட பின்னற்பூ!

வண்ண வண்ண வயிரப்பூ!
வரிசை கொண்ட வயிரப்பூ!
எண்ண எண்ண அளவில்லை;
எதிர்வான் எல்லாம் உயரப்பூ!



நல்ல நல்ல வெள்ளிப்பூ!
நட்சத்திர வெள்ளிப்பூ!
இல்லை இல்லை; கண்களாய்
இரவு பார்க்கும் கள்ளிப்பூ!

சந்தக்
கவிமாமணி
தமிழழகன்

# சிரிக்கும் கவிஞன்!

நேற்றுக் கவலை
நாளைக் கவலை
ஏதுமில்லை யென்கிறார்
சோற்றுக் குறையு
மில்லை யென்று
தொப்பை நிறையத் தின்கிறார்!

கையிரண்டும்
மேலுயர்த்திக்
கலகலென்று சிரிக்கிறார்
மெய்யாய்த் துயர
மில்லை யென்று
கையிரண்டும் விரிக்கிறார்!

பிறை நிலாப் போல்
கீற்றுச் சிரிப்பு
பெரிய மேனி தூக்கியே
நிறையும் வாழ்வு
வாழ்க என்பார்
நெஞ்சில் இன்பந் தேக்கியே

காதில் வளையம்
அசையுங் கோலம்
கண்ணுக்குத்தான் அழகுங்க!
சேதியொன்று
நீங்களுந்தான்
சிரித்திருக்கப் பழகுங்க!

சிரித்துக் கொண்டே
உழைப்பவர்க்குச்
சேமநிதியம் சிறக்குமே
அரிக்கும் வருத்தம்
தொலைந்து வாழ்வில்
அமைதியின்பம் பிறக்குமே!

அமுதசுரபி - தீபாவளி மலர் - 1999

மின்னூர் சீனிவாசன்



# ஓய்வு பெற்றவனின் வேலை

நித்தம் நித்தம் குருவி
சத்தங்கள் போடும்
ஞாயிறு தோன்றும் காலை – மரத்தின்
புத்தம் புதிதான
இலைகளைத் தவிரப் – பழையன
பூமியில் குவியும் வேளை – நான்
நித்திரை நீங்கி எழுந்ததைப் பார்ப்பது
நாளும் எனக்கு வேலை!

'உப்போ உப்பு' என்று
விற்பவன் குரல்கேட்டு
வாங்குவோர் விழிக்கும் காலை – தினமும்
தப்பாது செய்தித்தாள்
தருபவன் குரல் கேட்டு – மனைவி
தாழ்ப்பாளைத் திறக்கும் வேளை – செய்தியை
அப்போதே சுடச்சுட அருந்துதல் போலவே
படிப்பது எனக்கு வேலை!

முத்து முத்துப் போன்று
மரஞ்செடி இலைகள்மேல்
பனித்துளி தோன்றும் காலை – சிறகில்
சித்திரங் கொண்டதோர்
வண்ணத்துப் பூச்சி – பூக்களைச்
சுவைத்திடப் பறக்கும் வேளை – பிள்ளைக்குப்
புத்தகங் கொண்டு பள்ளிக்குச் சென்று
வருவது எனக்கு வேலை!

காலங் காலந்தோறும்
கன்றின்றிப் பசுமாட்டைக்
கறப்பவன் காணும்காலை – அலுவல்
வேலைக்குச் செல்ல
வீட்டிலே உள்ளோர்கள் – சமையல்
வகையறா முடிக்கும் வேளை – பணிக்
காலம் முடிந்தபின் ஓய்வாக இருக்கும்நான்
காப்பது எனக்கு வேலை – வீட்டைக்
காப்பது எனக்கு வேலை!

முத்து எத்திராசன்

# ஆர். சூடாமணி

அப்பாவின் காரியங்கள் முடிந்துவிட்டன. இனிக் கிளம்ப வேண்டியதுதான்.

"நான் நாளைக்குக் காஞ்சிபுரம் திரும்பிப் போறேன்" என்றாள் தாரிணி.

மூவரும் தோட்டத்தில் மகிழ மரத்தடியில் பிளாஸ்டிக் ஒயர் நாற்காலிகளில் அமர்ந்திருந்தார்கள். உப்புமா சாப்பிட்டு முடித்த காலி டிபன் தட்டுகள் அங்கங்கு ஒரு கடுகுத் தெறிப்புடன் எதிரே சின்ன மேஜை மேல் கிடந்தன.

"என்ன அவசரம் அக்கா?" சேகரின் வாயிலிருந்து கேள்வி தானாக வருவதுபோல் வந்தது. அவன் மன்ம் இங்கே இல்லை.

"பதிமூணு நாள் ஆயிடுத்தேடா? சுப ஸ்வீகாரமும் இன்னிக்கு முடிஞ்சாச்சு. இனிமே நான் போகலாம்னு நினைக்கறேன். இந்தத் துக்கம் குறைய அங்கே போய் தியானம் பண்ணாத்தான் ஆறுதலாயிருக்கும்".

'போயேண்டி!' நான் இரு இருன்னு கெஞ்சினபோது பிடிவாதமாப் போனே. 'இப்போ நீ இங்கே இல்லைன்னு யார் அழுதா? போ போ'.

அப்பாவின் குரலா? இந்தக் காம்பவுண்டுச் சுவர்களிலிருந்து, இந்தத் தோட்டத்துக் குரோட்டன் செடிகளிலிருந்து, இங்கே வீசும் காற்றிலிருந்து, அவர் மிகவும் நேசித்த இந்த மகிழ மரத்தின் ஒவ்வொரு மணங்கமழும் சிறிய பூவிலிருந்து அவர் குரல்தான் கோபமாய் ஒலிக்கிறதா? அது கோபம், வேதனை, இயலாமை, புற்றுநோயின் வலி....

"தாரிணி, போகாதேம்மா!"

நோயால் நலிந்து சிதைந்து போன உருவம். அப்பாவின் நடுத்தர உயரம் மேலும் குள்ளமாகிவிட்டது போன்ற குறுகல். அந்த உருவத்தில் எஞ்சியிருந்ததெல்லாம் கண்களில் பிதுங்கும் பயம், குரலை நடுக்குகிற கெஞ்சல்.

"நான் போய்த்தானாகணும் அப்பா! இந்த அழைப்பைக் கேட்டவர்கள் மறு பேச்சில்லாம பின்தொடர்ந்து போறதைத் தவிர வேறு வழியில்லை"

"உன் வயசுக்கு இது தேவையில்லை தாரிணி! ஆன்மிகத்தைத் தேடிப் போக இன்னும் வயசாகணும்."

"ஏதோ ஒரு சக்தி என்னை இழுக்கறதேப்பா! மனசு அதன்பின்னால ஓடறபோது வயசாவது இன்னொன்னாவது! நான் போகணும். போய்ட்டு வான்னு என்னை அனுப்பி வையுங்கோ"

"போகாதே தாரிணி! நான் நாளை எண்ணிண்டிருக்கேன். என் உயிர் இருக்கிற வரைக்குமாவது போகாதே",

"நான் நிற்கமுடியாது"

நின்றிருந்தால்? அப்போது ஒரு வேளை....? என்னாலா அப்பா இப்படி....?

அன்று சில்லிட்டுக் கிடந்த உடலின் கால் மாட்டில் அமர்ந்து மனசுக்குள்ளேயே அழுத அழுகை, அப்பாவின் இறப்புக்காகவா அல்லது தன் மன உறுத்தலுக்காகவா என்ற எண்ணம் தாக்கியபோது, துயரம்கூட ஒரு நபர் தன்னையே முக்கியமாக்கி உணரப்படுவதாக இருக்கமுடியுமா என்ற வியப்பில் துயரத்தில் முகமே ஒரு கணம் மாறிப் போயிற்று.

நெஞ்சில் ஒரு கேவல் மௌனமாய் வெடித்தது. இது 'அப்பா!' என்று அழுது தீர்த்துக் கொள்ளும் துக்கமனறு.



எண்ணி எண்ணி ஆயுளெல்லாம் அழுந்தப் போகும் குற்றச் சுமை.

உடம்பை உதறிக்கொண்டாள். இயல்பாய் இருக்க முயன்றாள். "உப்புமா ரொம்ப நன்னாயிருக்கு" என்றாள் எதிரிலிருந்த ஹேமாவைப் பார்த்து.

சேதுவும் ஒரு பிரயாசையுடன் சிரித்தான். "உனக்கு உப்புமாவே பிடிக்காதே அக்கா! அதைப் போய்ப் பாராட்டறியே!"

"பிடிக்காததையே பாராட்டற மாதிரி பண்ணினா அது தனித்திறமையில்லையா?"

"நீ உப்புமாவைப் பாராட்டறது ஓர் அதிசயம்னா, நாத்தனார் தம்பி பொண்டாட்டியைப் பாராட்டறது இன்னோர் அதிசயம்."

நிஜமாகவே அக்காவும் ஹேமாவும் நல்ல சிநேகிதிகளாய்த்தான் இருந்து வந்தார்கள் இல்லையா? ஆமாம். அப்படித்தான். அப்படித்தான்.... சேது தனக்குள் பதைத்தான்.

"அப்பா ஞாபகம் ரொம்ப வருது அக்கா! இனிமே அப்பா இல்லாம இந்த வீட்ல இருக்கப்போறோம்னு நினைச்சா தாங்கவே முடியலை."

"புரியறது சேது எனக்கும்... நானும்..." தாரிணி மௌனமானாள்.

ஹேமா சட்டென்று எழுந்து கொண்டாள். "நான் போய் டீ போட்டு எடுத்துண்டு வரேன்" காலி டிபன் தட்டுகளை எடுத்துக் கொண்டு அடுக்களையுள் மறைந்தாள்.

அந்தி நேர மெல்லிய ஒளி இதமாயிருந்தது. குளிர்ந்த சூரியன். மகிழம்பூ மணம் காற்றின் சிறு சலனத்தில் புகுந்து வந்து நாசியைத் தழுவியபோது தாரிணி மூச்சை ஆழமாய் உள்ளிழுத்தாள். என்ன சுகம் என்ன சுகம்! மகிழ்விப்பதால் மகிழம்பூவா? 'மகிழ் இனிது சுந்தம்' என்ற அவ்வையார் வரி நினைவுக்கு வந்தது. எழுந்து சென்று மகிழ மரத்தடியில் மண்டியிட்டு, கீழே உதிர்ந்திருந்த சின்னஞ்சிறு வட்டவடிவ வெண்பழுப்புப் பூக்களில் சிலவற்றைக் கைகளில் அள்ளிக்கொண்டு வந்தாள். பூக்களை ஒருமுறை ஆழ மோந்துவிட்டு, "என்ன அருமையான வாசனைடா சேது! சின்னக் குழந்தை கையால் வருடறமாதிரி மென்மையான வாசனை" என்று பூக்களை மேஜைமேல் வைத்தாள்.

சேது ஒரு பூவைக் கையில் எடுத்தபடி "ஆமாம்" என்றான் யந்திரம் போல.

"அப்பாவோட ஃபேவரிட் பூ"

"ஆமாம்."

"அப்பா"...

"அப்பா ராத்திரி போய்ட்டார். நீ உடனே கிளம்பி வா" என்றுதான் இவன் பதின்மூன்று நாள் முன்பு விடியற்காலை மூன்று மணிக்கு காஞ்சிபுரத்துக்கு எஸ்டிடிபோட்டுச் செய்தி சொன்னான். விவரம் ஏதும் சொல்லவில்லை. கான்ஸரால் இறந்துவிட்டதாகத்தான் அவள் எண்ணினாள். என்றோ ஒருநாள் ஆகும் என்று அறிந்திருந்த முடிவு. அவள் அதிகம் அலண்டு போகவில்லை. துக்கம்தான். எனினும் அழுது ஆற்றிக்கொள்ளக்கூடியது.

ஆனால் இங்கு வந்தபின் விவரமறிந்தபோது...

சேது முகத்தில் வேதனை தளும்பத் தனிமையில் அவளிடம் திக்கித் திணறிக் கூறினான்.

"அப்பாவுக்கு ஒரு லேசான துர்க்கந்தம் கூடப் பிடிக்காதே அக்கா!.... இரண்டு தெரு தள்ளி டிரெய்னேஜ் சுத்தம் பண்ணிண்டிருந்தா.... இங்கே மூக்கைப் பொத்திப்பாரே! அவர் எப்படி... எப்படி....முட்டைப் பூச்சி மருந்து ரொம்ப நாற்றமடிக்கும். இல்லையாக்கா?"

அவள் நெஞ்சில் இடி இறங்கியது.

உயிர் பிரிந்தால் மரணம் என்று சுலபமாய் எண்ணியிருந்தது எத்தகைய பேதைமை! எல்லா உயிர் பிரிதலுமே ஆயுள் முடிந்தது என்று சாதாரண மரணமாய் ஏற்றுக் கொண்டு 'நீரினில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே' என்று முடித்து மறந்துவிடக் கூடியதுதானா?

இதை அப்படி மறக்கமுடியுமா? நெஞ்சு ஆறுமா? மரணத்துக்கு மரணம் எத்தனை வித்தியாசம்!

குடும்ப டாக்டர் சேதுவிடம் சொன்னாராம்.

"இரண்டு மாசமாவே உங்கப்பா என்கிட்ட 'வலி தாங்கமுடியலை டாக்டர்! ஏதானும் பண்ணி என் கதையை முடிச்சிடுங்கன்னு அடிக்கடி கேட்டுகிட்டிருந்தார். நான் அவர்கிட்ட 'டாக்டருங்க கடமை உயிரைக் காப்பாத்தறதுதான். உயிரை எடுக்கறதில்லை' அப்படின்னு சொல்லி 'கான்ஸர் சிகிச்சைக்குப் புதுப்புது மருந்துங்க வந்திருக்கு. கவலைப்படாதீங்க. எல்லாம் சரியாயிடும்'னு ஆறுதல் சொல்வேன். அப்படியும் கடைசில அவர் தானாகவே இப்படி வழி தேடிகிட்டாரே! என்ன பரிதாபம்!"

அப்பா தேடிக்கொண்ட வழி, நோவு தாளாமல் தானா? அல்லது....

நான் நின்றிருந்தால் ஒருவேளை இன்று அவர் உயிரோடு...

மகளின் பணிவிடையும் உடனிருப்பும் முடிந்துபோய் மருமகளின் தயவில் வாழும் நிலைக்கு ஒரு நோயாளியை-வலியில் துடிக்கும் ஒரு கிழவனை-பெற்ற தகப்பனை-ஆளாக்கிவிட்டுப் போகிறாளே என்று மனமொடிந்துதான் ஒருவேளை இப்படி....

சிறிது காலமாகவே தாரிணிக்கு இன்னதென்று சொல்லத் தெரியாமல் வாழ்வில் ஒரு சலிப்பு ஏற்பட்டிருந்தது.

நாவல்களிலிருந்து கவனம் திரும்பி பழந்தமிழ்க் கவிதை, பக்தி இலக்கியம், ரமணர், இராமகிருஷ்ணர் என்று படிக்கத் தொடங்கியிருந்தாள். அந்த மனநிலை தீவிரமாகிக் கொண்டிருந்தபோது வீனஸ் காலனியில் துவராடை தரிக்காத ஒரு துறவியின் சொற்பொழிவைக் கேட்க நேர்ந்தது.

புராணக் கதைகளில் வேதாந்த உருவகம் என்ற பொருள் பற்றி ஒரு மணிநேரம் தேன் மழையாய்ப் பொழிந்தார். காஞ்சிபுரத்தில் கோயிலுக்கு வடக்கே சற்றுத் தொலைவில் சிறு அளவிலான ஓர் ஆசிரமம் அமைத்துக் கொண்டு அவரும் அவர் போன்ற மனப்போக்குள்ள ஏனைய சிலரும் வாழ்வதாய்த் தெரிய வந்தது. தியானம், யோகம், இறைவழிபாடு, வேதாந்தக் கல்வி, தத்துவ விசாரம் போன்ற ஈடுபாடுகளுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட ஆண் பெண்கள் உள்ளிட்ட ஒரு தூய அமைப்பாக அந்த ஆசிரமம் விளங்குகிறதாம்.

தாரிணி கிளர்ச்சியுற்றாள். காஞ்சிபுரம்! பஞ்ச லிங்கங்களில் பிருதிவி லிங்கத்தலம்! 'கச்சி ஒருமாவின் கீழ் நின்று ஓது'மாறு பக்தர் புகழ்ந்த இடம்! ஆதிசங்கரர் நிறுவிய ஆறு சமயங்களில் மூன்றின் அதிதேவதைகளாய் காமாட்சியம்மனும் ஏகாம்பரேசுவரரும் வரதராஜப் பெருமாளும் ஒருங்கே கோயில் கொண்டுள்ள புண்ணிய பூமி! காமகோடி பீடம், காஞ்சிப் பெரியவர் என பிரபைகள் படிந்த மண்!

ஆன்மிகம் தன்னை அங்கிருந்து அழைப்பதாக அவள் உணர்ந்தாள். தன் முப்பத்துநான்கு ஆண்டுகளுக்கு அர்த்தம் கொடுக்கும் குரல் அது என்று நம்பினாள். அந்த ஆசிரமத்தில் உடனே சேர்ந்துவிட வேண்டுமென்றும் இனி அதுதான் தன் வீடு என்றும் முடிவு செய்தாள்.

"அப்பா! நான் போறேன்"

"போகாதே தாரிணி! எனக்காக இரு...."

"நான் நிற்கமுடியாது."

என் சுயநலம் கருதி அவரைக் கைவிட்டுவிட்டேனா? நோயுற்ற தந்தையைக் கவனித்துக்கொள்வதைவிடவா ஆன்மிகம் முக்கியம்? என் செயலின் விளைவா அவர் எடுத்த முடிவு?

அநிச்சையாய்க் கேவல் வெடித்தது. சேது நிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

"என்னக்கா இது? அன்னிக்கு சடலத்தைப் பார்த்துண்டு உக்காந்திருந்தபோது கூட உன் கண்ணில் தண்ணி வரலை. தைரியமாயிருந்தே. இப்ப என்னடான்னா...."



"அது தைரியமில்லைடா சேது. அதிர்ச்சி. இப்போ...." உடைந்துபோய் விம்மினாள். "தாங்கலைடா. தாங்கலை...."

"எனக்கும் தாங்கலைக்கா!"

ஆனால் நான் ஆண்பிள்ளை. இப்படி வெளிப்படையாய் அழுது புலம்பமுடியாது. மனித உணர்ச்சிக்குக் கலாசாரத் தடை.

தாரிணி மெல்லச் சமாளித்துக் கொண்டாள். கண்களைத் துடைத்துக் கொண்டாள். "ஐம் ஆல்ரைட். எல்லாரும் ஒருநாள போகவேண்டியதுதானே?" மூக்கை உறிஞ்சிவிட்டு வெளிறிய புன்னகை காட்டினாள். நிர்மலமாயிருந்த வானத்தை அண்ணாந்து பார்த்தாள்.

"இன்னிக்கு இத்தனை நாழிக்கும்கூட இருட்ட ஆரம்பிக்கலை. கிளைமேட நன்னாயிருக்கு. நல்ல காற்று."

"நீ இன்னும் நாலு நாள் இருந்துட்டுப் போயேன் அக்கா!"

"இல்லை சேது! அந்த ஆசிரமத்தில்தான் எனக்கு சாந்தி கிடைக்கிறது. அதுவும் இப்போ... மனசுக்கு அது ரொம்பவும் தேவை."

"என் மனசு மட்டும் கஷ்டப்படலையா? ஏதோ. எல்லாரும் நாலு நாள் ஒண்ணாயிருந்தா அப்பாவைப் பத்திப் பேசிண்டு ஒருத்தருக்கொருத்தர் ஆறுதல் சொல்லிக்கலாமேன்னுதான்."

தாரிணி எழுந்து வந்து அவன் தோளைப் பரிவாய்ப் பற்றித் தட்டிக் கொடுத்தாள். "ஆகட்டும், பார்க்கலாம். நான் கொஞ்சம் உள்ளே போய் ஹேமாவுக்கு ஏதானும் ஹெல்ப் வேணுமான்னு பார்த்துட்டு வரேன்."

அவள் போனபிறகு சேது நாற்காலியில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டான். வேதனைக் கோடுகள் முகத்தை வரியிட்டன.

அப்பா... அப்பா...

குடும்ப டாக்டர் 'தற்கொலை' என்ற களங்கம் பெரியவர் மீது படியாவண்ணம் "வியாதி முற்றி மரணம்" என்று கௌரவமாய் மரணச் சான்றிதழ் கொடுத்துவிட்டார்.

துக்கம் விசாரிக்க வந்தவர்களிடமும் அவன் பதில் அதேதான்.

"என்னப்பா சேது! கடைசில அப்பா காலம் முடிஞ்சுட்டுதா? என்ன ஆச்சு?"

"வியாதி முத்திடுத்து மாமா!"

"வியாதியாவது புடலங்காயாவது! ஒவ்வொருத்தரும் பூமிக்கு வரபோது இத்தனை மூச்சுன்னு நம்ம பங்கை எண்ணி வாங்கிண்டு வரோம். கடைசி மூச்சு விட்டுக் கணக்குத் தீர்ந்ததும் திரை இறங்கிடுது. அவ்வளவுதான். இதுக்கு கான்ஸர் ஒரு வியாஜம்" என்று தத்துவம் பேசினார் ஒருவர். சடலத்தைப் பார்த்துக் கை கூப்பி "போய்ட்டீரா சுப்பு?" என்று கண்கலங்கினார்.

இன்னொருவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

"சுப்ரமணியனுக்கு ஒண்ணும் குறைவில்லை. பெண்டாட்டி காலமாய்ட்டாலும்கூட அன்பா வச்சு அரவணைக்கிற பிள்ளை. அவனாகப் பார்த்துக் கட்டிண்ட மனைவிதான். ஆனா மாமனார்கிட்ட அந்தப் பெண்ணுக்குத்தான் எத்தனை மரியாதை! பணம், காசு, வீடுவாசல் எதுக்கும் குறைச்சலில்லை. என்ன, பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணலையேன்னு ஒரு குறை இருந்திருக்கும். தோஷ ஜாதகம்னா யாரென்ன செய்யமுடியும்?! ஆனா அவள்கூட அப்புறம் மேலான வழிக்குத்தானே போயிருக்கா! இந்தப் பொல்லாத வியாதி ஒண்ணு வயத்தில் எமனாய் வந்தில்லைன்னா சுப்புணியைப் பிடிக்க முடியாது."

வேறொருவர் "சுப்ரமணியன் நல்ல மனுஷன் பாவம், கான்ஸரில் கஷ்டப்பட்டுப் போயிருக்க வேணாம்" என்று பெருமூச்செறிந்தார்.

"இல்லை, கான்ஸரிலேயே போயிருக்கலாம்" என்று குரலெடுத்துக் கதறவேண்டும்போல் இருந்தது சேதுவுக்கு அப்போது.

இப்போதும்தான். நள்ளிரவில் அந்த அரற்றலும் கைகால்களை உதைத்துக்கொண்டு துடித்த அவலக் காட்சியும் ஆயுசுக்கும் மறக்காது.

அரற்றல் ஒலிகள் கேட்டு அடுத்த அறையிலிருந்து அவனும் ஹேமாவும் ஓடி வந்திருந்தார்கள்.

கட்டிலில் அப்பாவின் உடல் துடித்துக் கொண்டிருந் தாலும் அவர் முழு நினைவில் இல்லை. வாந்தி எடுத்திருந்தார். பக்கத்தில் மேஜைமேல் அந்தச் சிறிய பழுப்புநிற பாட்டில். அதன்மூடி கீழே தரையில் உருண்டிருந்தது.

குடும்ப டாக்டரைத் தொலைபேசியில் அவசரமாய் அழைத்தான். அவர் வருவதற்குள் அப்பாவின் உயிர் அடங்கிவிட்டது.

அப்போதுதான் டாக்டர், அப்பா தம்மிடம் அடிக்கடி செய்திருந்த கோரிக்கையையும் தாம் அதை மறுத்திருந் ததையும் தெரிவித்துவிட்டு "அப்படியும் கடைசில அவர் தானாகவே இப்படி வழி தேடிகிட்டாரே!" என்று கூறி வருந்தியிருந்தார்.

டாக்டர் சொன்னதுபோல, வலி தாங்காமல் தான் அப்பா அந்த முடிவுக்கு வந்திருப்பாரா? அல்லது.... ஒருவேளை...

அவர் மாமாவின் பேத்தியை நான் மணந்துகொள்ள வில்லை என்ற கோபத்திலும் வெறுப்பிலும்....

"என்னடா சேது! இப்படித் திடீர்னு தலையில கல்லைத்

தூக்கிப் போடறே? புஷ்பா உனக்காகவே பிறந்து வளர்ந்தவள்டா!"

"அப்படிப் புஷ்பாவும் நினைக்கலை. நானும் நினைக்கலைப்பா. அவள் தனக்குப் பிடிச்ச ஒருவனைச் செய்துக்கட்டும். நான் எனக்குப் பிடிச்ச பெண்ணைச் செய்துக்கிறேன்"

"எவளோ ஆபீஸ்ல டைப்பிஸ்டாம், சாதாரணக் குடும்பமாம்... புத்தி கெட்டுப் போச்சா உனக்கு? புஷ்பா நல்ல பெண்ணுடா! நமக்குத் தெரிஞ்ச பெண். சொந்த ரத்தம் நம்மோட ஒட்டிண்டு உனக்கு நல்ல பெண்டாட்டியாய், எனக்கு இதமான நாட்டுப் பெண்ணாய் இருப்பா."

"ஹேமாவும் நல்ல பெண்தான் அப்பா! உங்ககிட்ட இதமாய், மரியாதையாப் பழகுவா."

"தாரிணிக்கு உன்னையும் என்னையும் தவிர வேறு நாதி கிடையாது சேது! தெரியுமோன்னோ? என் காலத்துக்கப் புறம் நீயும் உன் பெண்டாட்டியும் தான் அவளுக்குத் துணை. அவள்கிட்ட பிரியமாய் நடந்துக்கற மருமகள் எனக்கு முக்கியம். புஷ்பா அப்படி இருப்பா...."

"ஹேமாவும் இருப்பா. அக்கா நமக்கு எத்தனை அருமையானவள்னு பார்த்தப்புறம் ஹேமாவும் அவள் கிட்ட கட்டாயம் அன்பாய்த்தான் இருப்பா."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ புஷ்பாவைத்தான் கல்யாணம் பண்ணிக்கணும்."

"மன்னிச்சிடுங்கோப்பா. நான் ஹேமாவைத்தான் பண்ணிக்கப்போறேன். அவள் ஒருத்தியோடுதான் என்னால சந்தோஷமாய் வாழமுடியும். எங்களை ஆசிர்வாதம் பண்ணுங்கோ."

அப்பாவின் முகம் அப்போது எப்படிக் கறுத்துப் போயிற்று! மனசில் ரத்தம் தெறிக்க அடி விழுந்துவிட்டதா?

"என் பேச்சை நீ மீறினா... மீறினா... சீ போடா அந்தண்டை" முகத்தை மூடிக்கொண்டார்.

மீறினால்? மீறியதன் விளைவா இது?

அவர் விருப்பம்போல் நான் நடந்திருந்தால் ஒருவேளை இன்று அவர் உயிரோடு....

அக்காவிடம் ஹேமா நல்லமுறையில் தானே நடந்துவந்தாள்? இன்றளவும் சிநேகிதிகளாய்த்தானே பழகுகிறார்கள்? ஒருவேளை நானறியாமல் அவர்களிடை ஏதேனும் மனக்கசப்பு...? திடீரென்று அக்கா ஆன்மிகத்தில் நாட்டம் என்று கிளம்பிப் போய்விட்டது அதனால்தானா? அப்பா அதை அறிந்திருந்தாரா? அதனால் மனம் உடைந்துதான் இந்த முடிவுக்கு வந்தாரா?

இதற்கெல்லாம் காரணம் நானா?

காற்றின் வீச்சில் அதிர்ந்தாற்போல் நிமிர்ந்து உட்கார்ந்தான். வானம் சற்று இருண்டிருந்தது. இந்த அக்காவும் ஹேமாவும் இன்னும் திரும்பி வராமல் என்ன செய்கிறார்கள்?

தாரிணி சமையலறைக்குச் சென்றபோது ஹேமா ஒரு ஸ்டூல்மீது உட்கார்ந்து பிரமை பிடித்தவள்போல் தரையை வெறித்துக் கொண்டிருந்தாள். தேநீருக்காக அடுப்பில் வைத்திருந்த பால் பொங்கிச் சுண்டிப் போயிருந்தது.

"அடடா, என்ன ஹேமா இது? பால் சுண்டிப் போயிடுத்தே! பாலை அடுப்பில் ஏத்திட்டு எந்த உலகத்துக்குப் போயிட்டே?"

சுய உணர்வு பெற்ற ஹேமா பதற்றமாய் எழுந்து நின்றாள்.

"என்னமோ தெரியலை, தலை சுத்தறாப்போல இருந்தது, உட்கார்ந்தேன்... ஸாரி அக்கா."

"தலை சுத்தலா? ஏதானும் விசேஷமா? அப்பா திரும்பி வரப்போறாரா?" தாரிணி காஸ் அடுப்பை அணைத்து இடுக்கியால் பால் பாத்திரத்தை இறக்கினாள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. பதினஞ்சு நாளுக்கு முன்னாலதான் குளிச்சேன்... பால் ஒரேயடியா குறைஞ்சு போயிடுத்தே."

"ப்ரிஜ்ஜில் இன்னும் பால் இருக்கா?"

"தயிர் தோய்க்கத்தான் இருக்கும்"

"பரவாயில்லை. பவுடர் பால் கரைச்சுக்கறேன். நீ போய் கொஞ்சம் ரெஸ்ட் எடு ஹேமா! ஒரு காரணமும் இல்லாம தலை சுத்தல்னா களைப்புத்தான். இந்தப் பதிமூணு நாளா உனக்கு இடுப்பு ஒடியற வேலை."

"டிக்குத் தண்ணி வைக்கட்டுமா?"

"எல்லாம் நான் பார்த்துக்கறேன். நீ கொஞ்ச நேரம் ஒய்வா உக்காரு."

ஒய்வா? எனக்கா? உடம்பு ஒய்வாய் உட்கார்ந்தாலும் என் மனம் ஒய்வுற அமைதி கிடைக்குமா இனி?

நான் அவரை அப்படிப் பேசியிருக்கக்கூடாதோ? ஆனால் அவர் மட்டும் என்னைப் பேசலாமா?

கொடூரமான நோய்தான். என்ன செய்வது? சேது முகம் சுளிக்காமல் வைத்தியம் செய்வித்தார். கீமோதெரப்பி, ரேடியேஷன் என்று சிகிச்சைக்கான நாள்களில் தவறாது அவரை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனார். நானும் அவருக்கு எந்தப் பணிவிடையிலும் குறை வைக்கவில்லை. அவர் மகள் செய்ததைப் போலவே செய்தேன். காலையில் வேலைக்குக் கிளம்புமுன் அவருடைய மருந்து, ஆகாரம் யாவையும் கவனித்தேன். பகலில் சாப்பிட வேண்டியவற்றை வசதியாய் அவர் பக்கத்தில் எடுத்து வைத்து விட்டுத்தான் போவேன். எடுத்துத் தர வீட்டில் வேலையாளும் உண்டு.

அப்படியும் ஒருநாள் ஹார்லிக்ஸ் கொண்டு வரப் பத்து நிமிஷம் தாமதமாகிவிட்டதென்று என்ன பேச்சு பேசிவிட்டார்!

"தரித்திரப் பண்டாரத்தை வீட்டில் சேர்த்தா இப்படித்தான். காணாததைக் கண்டமாதிரி, தான் திங்கறதிலேயே குறியாய் இருக்குமே தவிர மத்தவாளைப் பத்தி யோசனை வராது."

சுருக்கென்று என்னுள் அம்பு தைத்தது. என்ன அநியாயப் பேச்சு! கோபமும் துக்கமுமாய் என் கண்கள் பொங்கிவந்த போதே தன்னிச்சையாய் வாய் கொட்டிவிட்டது

"தரித்திரமோ பண்டாரமோ. இன்னிக்கு நான்தான் இந்த வீட்டு எஜமானி. நான் போடறதுதான் உங்களுக்கு சோறு."

அப்படியே கூசித் துடித்துப் போய்விட்டார். நிச்சயம் அது கான்ஸரை மிஞ்சிய வலி.

ஹேமாவின் உடம்பு நடுங்கியது. தேநீர் கொதிக்கும் இனிய நறுமணம் மோப்புணர்வில் பதிந்தது.

வலிய சிரிப்பை வரவழைத்துக்கொண்டு "நீங்க போடற டீ எத்தனை மணமாயிருக்கு அக்கா! நானும் இதே டீதான் போடறேன். ஆனா என் கையில் இந்த மணம் இல்லை" என்றாள்.

"நீயா நினைச்சுக்கறதுதான். எனக்கு நிறைய அவகாசமிருக்கு. நீ வேலைக்குப் போறவ. இந்த அளவு நீ எல்லாம் செய்யறதே பெரிசு"

தேநீர் டிகாக்ஷன் இறக்கி, வெந்நீரில் கரைத்து வைத்திருந்த பவுடர் பாலை அதில் ஊற்றி சர்க்கரை போட்டுக் கலந்தாள் தாரிணி.

"ஏலம் சேர்த்து இஞ்சி டீ போடலாமான்னு பார்த்தேன். சேதுவுக்கும் எனக்கும் பிடிக்கும். உனக்குப் பிடிக்குமோ என்னமோன்னு போடலை. பிடிக்குமா?"

"ம்"

அதன்பிறகு அவர் என்னிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. அவர் அறையிலிருந்து சில சமயம் முனகல்கள் கேட்கும். அரற்றலாய் சில சமயம் வார்த்தைகள் கேட்கும். தாரிணி. கடவுளே. புஷ்பா. புஷ்பாவா புஷ்பமா?

"தாரிணி கடவுளின் புஷ்பம்" என்று சொல்வதாய் அர்த்தமா? வார்த்தைகள் சரியாய் விளங்குவதில்லை. முனகல்கள். அரற்றல்கள்.

என்னை "மன்னிச்சிடுங்கோப்பா" என்றோ காலில் விழுந்து நான் கெஞ்சியதையோ அவர் லட்சியமே செய்யவில்லை.

நான் தொடர்ந்து அவரைக் கவனித்துக் கொண்டே தான் என்றாலும் அவர் முகத்து வேதனை என்னை அச்சுறுத்தியது. நான் பேசியது போன்றதை அவர் என்றுமே கேட்டிருக்கமாட்டார். "நான் ஏன் இதையெல்லாம் கேட்டுக்கொண்டு உயிரோடு இருக்கணும்?" என்று எண்ணியிருப்பாரோ? பல நாள்கள் மனசோடு போராடி இந்த முடிவுக்கு வந்திருப்பாரோ?

நான் ஏன் அப்படிப் பேசினேன்? ஏன் ஒரு நோயாளிக் கிழவரின் மனசை நோகடித்தேன்?

சேதுவிடம் சொல்லப் பயமாயிருந்தது. இனிச் சொல்லித்தான் என்ன பயன்? வலி தாங்காமல்தான் அப்படிச் செய்துகொண்டாரா அல்லது நான் காரணமா? நான் அப்படிப் பேசியிருக்காவிட்டால் ஒருவேளை இன்று அவர் உயிரோடு...

"ட்ரேயை எடுத்துண்டு தோட்டத்துக்குப் போ. நான் பாலைத் தோய்ச்சுட்டு வரேன்" என்று தாரணியின் குரல் உசுப்பியபோது தன்னிலை அடைந்தாள். எதிரே பூப்போட்ட தட்டில் மூன்று பீங்கான் கோப்பைகளில் ஆவி பறக்கும் தேநீர். ஹேமா தட்டை எடுத்துப் போய் தோட்டத்தில் சேதுவின் எதிரே மேஜைமேல் வைத்துவிட்டு அமர்ந்தாள். சிறிது நேரத்தில் தாரிணியும் வந்து சேர்ந்து கொண்டாள்.

ஆளுக்கொரு கோப்பை எடுத்துக் கொண்டார்கள்.. மெல்லப் பருகி முடித்தபின்பும் பேச்சில்லை. மூவரிடை அப்பா மௌனமாய்க் கலந்து மூச்சுமுட்டச் செய்திருந்தார்.

தாரிணியின் நெஞ்சில் பிரார்த்தனை துடித்தது. 'தெய்வமே! எனக்கு அமைதி கொடு. நீயே துணை.' 'அழுக்கு மனத்தடியேன் உடையாய் உன் அடைக்கலமே.. அருள் புரிவாய் உடையாய் அடியேன் உன் அடைக்கலமே...'

இது என்னால் நேர்ந்ததென்றால் தெய்வம் என்னை மன்னிக்கட்டும். வேண்டுமென்று செய்யவில்லை. இப்படி ஆகும் என்று நினைத்திருக்கவில்லை.

முகத்தை சேலைத்தலைப்பால் துடைத்து விசிறிக் கொண்டாள்.

"நாலு நாள் இருந்துட்டுப் போ அக்கா"

சேது ஒருவிதமாய் சமாளித்துக்கொண்டு பேசினான். அக்கா இருந்தால் நன்றாக இருக்கும். தன் உணர்ச்சிகளுடன் தனியாய் இருப்பதைச் சற்றுத் தள்ளிப் போடலாம்.

"ஆமாங்கக்கா. இருங்கோ" என்றாள் ஹேமாவும்.

தாரிணி இருவரையும் பார்த்தாள். அரை இருட்டில் இரண்டு பயந்த குழந்தைகள்போல் தெரிந்தார்கள்.

அவள் இதழ்க்கடையின் நெளிவில் பரிவு புன்னகையாயிற்று.

"நாலு நாள் இரண்டு பேருக்கும் நான் இஞ்சி டீ போட்டுத் தரப்போறேன்" என்றாள், தாரிணி பரிவாக.



● கற்பக விநாயகர் திருக்கோயில்

# பெருநலம் பெருகும் பிள்ளையார்பட்டி

'ஓம்' எனும் பிரணவ நாதத்திற்குரிய வரி வடிவத்தை, கண்ணில் தோன்றிடச் செய்யப் பிள்ளைப் பெருமானின் யானைத் தலையே ஏற்றதாக உள்ளது. பிள்ளையாரின் திருவுருவில், வலப்புறத் தந்தம் ஒடிந்ததான ஒழுங்கில் காட்டப் பெறுவதால் 'ஓ' என்ற எழுத்தின் தொடக்கச் சுழி உருவாகி விடுகிறது. அங்கிருந்து மேல் நோக்கி, வலம் சுழித்து இடக்காது வரை சென்று, வளைந்த இடத் தந்தத்தின் வழியாகக் கீழ் நோக்கித் துதிக்கையின் நுனி வரை கோடிட்டு நோக்கினால் 'ஓ' என்ற வரிவடிவம் உருவாகிக் காட்சி தருவதைக் காணலாம். பெருமானின் கையிலுள்ள மோதகம் 'ம்' எனும் வரி வடிவத்தைக் குறிக்க உள்ளது. அனைத்திற்கும் முதலாய்த் தோன்றியது நாதமே என்பதை, மெய்ஞானச் செல்வர்கள் உணர்ந்தது போலவே, இன்றைய விஞ்ஞானச் செம்மல்களும் அறிந்து அறிவுறுத்துகின்றனர்.

மூலத்தின் மூலமாய் உள்ள ஓங்காரத்தை, கோலத்தின் கோலமாய்க் கொண்ட பிள்ளையார் திருவுருவம் - அறிவியல் நுட்பத்தையும், ஆன்மிக நுட்பத்தையும் அறிவுறுத்த அமைந்த தெய்விகத் திருவுருவம்!

இத்தெய்வத் திருவுருவம், தமிழ்நாட்டின் சில இடங்களில் அருட்சிறப்பாலும், அற்புத வரலாற்றுக் குறிப்பாலும் புகழ் பூத்துப் புண்ணியத் திருத்தலமாகப் போற்றப் பெற்று, அருள் மணம் கமழ்ந்து, மக்களின் மனத்தை ஈர்த்து வருகிறது. இத்தகைய உள்ளங்கவர் பிள்ளைப் பெருமானின் திருத்தலங்களுள், நாடி வருவோர்க்கெல்லாம் நலம் கூட்டி வைக்கும் பிள்ளையார்பட்டி, அன்றாடம் ஆயிரக்கணக்கான

குன்றக்குடி பெரியபெருமாள்



அருள்மிகு கற்பக விநாயகர்



ஸ்ரீ நாராயண ஆசிரமம்

பக்தர்கள் வருகை தரும் புகழார்ந்த அருட்தலமாய்த் திகழ்கிறது.

குடைவரைக் கோயிலில் புடைச் சிற்பமாக எழுந்தருளியுள்ள பிள்ளையார்பட்டி கற்பக விநாயகப் பெருமானின் துதிக்கை வலம் சுழித்ததாக, இரண்டு கரங்களை மட்டுமே பெற்றதாக, அங்குச பாசங்கள் ஏற்காது, அன்புத் திருவுருவாய்க் காட்சியளிக்கிறது. தமிழகத்தின் மற்ற பிள்ளையார் திருவுருவங்களிலிருந்து மாறுபட்டு, எழுந்தருளியுள்ள கற்பக விநாயகர் திருமூர்த்தம், பிள்ளையார் வழிபாடு தமிழகத்தில் தோன்றிய காலத்தி லேயே உருவாக்கம் கொண்டுள்ள தென்பதை இங்கிருக்கும் கல் வெட்டுச் சான்றுகள் உறுதியளிக் கின்றன. பிள்ளையார்பட்டி, பாண்டியர் திருப்பணி என்றுதான் கொள்ள வேண்டுமெனக் கூறியுள் ளார் கல்வெட்டாய்வாளராகத் திகழ்ந்த 'கம்பனடிப்பொடி' அமரர் சா.கணேசன்.

ஆயிரத்து அறுநாறு ஆண்டு களுக்கு முன் தோன்றியதாகக் கருதப் பெறுகின்ற இப்பழம் பெரும்பதி, பன்னிரண்டாம் நூற் றாண்டின் பிற்பகுதியில், தமிழ் மொழிக்கும், சைவநெறிக்கும் நலம் சேர்த்து வருகின்ற நகரத்தார் சமூகத்திற்கு உரிமையாகியுள்ளது.

சேர்த்தும், சேமித்தும், பேணிக் காத்தும் நிர்வகித்து வரும் நகரத்தார் சமூகம், இத்திருக்கோயிலின் நித்திய, நைமித்திக வழிபாடுகளைச் செய்து வருகின்ற நெறிமுறைகள் விழியால் அனுபவித்து நன்மொழியால் போற்றத்தக்கவை.

பிள்ளையார்பட்டிப் பெருமானிடம் உள்ளன்பு கொண்டோர், உரிய பக்தி செலுத்துவோர் அற்புதக் கீர்த்தி பெறுவதோடு, ஆனந்த வாழ்வும் பெறுவதாக உறுதியளிக்கிறார் கவியரசர் கண்ணதாசன். "பொற் பதம் பணிந்து பாரீர், பொய்யிலை கண்ட உண்மை!" என்பது கவியரசரின் அனுபவ, ஆன்மிகத் திருவாக்கு.

பிள்ளையார்பட்டி 'தேசி விநாயகப் பிள்ளையார்' என்னும் கற்பக விநாயக மூர்த்தியை நினைத்



ஆசிரம நான்காவது சுவாமி கோவிந்தானந்தா

தாலே மனக் கவலை நில்லாது மறைகிறது. தொழுதாலோ, பிறவிப் பெருங்கடல் நீந்தும் பேராண்மை தோன்றுகிறது. பெருமானின் திரு வுருவப் படம் இருக்கும் இடமெல்லாம் கூட, பொருள் பெருகும் செல்வக் களஞ்சியமாகிறது.

கற்பக விநாயகப் பெருமான், கண் கண்ட தெய்வமாய், கலி கண்ட அற்புதமாய்க் காட்சி தந்து, நற்பெரும் நலங்களை, வணங்கும் அன்பர்க்கு நாளும் வழங்கி வரும் பிள்ளையார் பட்டித் திருத்தலத்தில், செயற் கரியலை செய்து வரும் ஸ்ரீநாராயண



சிவநெறிக் கழகப் போதனாச்சாரியார்கள்



• பயிற்சி பெறும் அர்ச்சகர்கள்

• சுவாமி அச்சுதானந்தா



• சுவாமி பத்மநாபர்



• டாக்டர் கே. பிச்சை சிவாச்சாரியார்



ஆசிரமப் பணியும், சீரோங்கும் பக்தி நெறிக்கு உரிய துணையாகி அரிய சேவை ஆற்றிவரும் சிவநெறிக் கழகத்தின் தொண்டும் தெரியத் தக்கவை; அரியத் தக்க அற்புதம் கொண்டவை.

சிவகங்கை மாவட்டம் செட்டி நாட்டுத் திருநகராகிய காரைக்குடியி லிருந்து திருப்பத்தூர் செல்லும் தேசிய சாலையில், பன்னிரண்டு கி.மீ.தொலைவில் உள்ள பிள்ளை யார்பட்டிக்கு இருபதாம் நூற்றாண் டின் உதய காலத்தில், கேரள மாநிலத்தின் வற்களை ஞானி ஸ்ரீநாராயண குருவின் சீடர் சுவாமி கோவிந்தானந்தா யாத்திரையாக வருகை புரிந்தார். திருக்கோயி லுக்குச் சென்று, கண்மூடி நின்று, கற்பக விநாயகப் பெருமானைக்



• சுவாமி கோவிந்தானந்தா

கைகூப்பித் தொழுது, தம்மை மறந்து நின்ற சுவாமிகளை, பசுமடம் சோமசுந்தரம் செட்டியார் பணி வோடும், பக்திக் கனிவோடும் பாதத்தில் விழுந்து வணங்கினார்.

"மகனே! எழுந்திரு! உன் மனக்கவலை அறிந்தோம். மனைவி யின் நோயை நீக்குவோம்" எனச் சுவாமி கோவிந்தானந்தா மலையாள மொழில் உரைப்பினும், செட்டி யாருக்கு அவையனைத்தும் மதுரத் தமிழாகவே மனத்தில் தெளிவாகியது.

பசுமடம் சோமசுந்தரம் செட்டியார், தாம் தங்கியிருந்த தமது விடுதிக்கு, சுவாமி கோவிந்தானந்தாவை அழைத்துச் சென்று, அன்புமீதூர அன்னம் படைத்து அகம் மகிழ்ந்தார். வெளியே சொல்லவும் வெட்கப்படும்



படியான வெண் குஷ்ட நோய், தமது மனைவிக்குக் கொஞ்ச நாள்களாக வளர்ந்து வருவதை எண்ணி வருந்திக் கொண்டிருப்பதை, தம்மைக் கண்டவுடனேயே கண்டுகொண்ட சுவாமிகளின் அருளாற்றலை நினைத்துச் செட்டியார் மிகுந்த வியப்படைந்தார். வியப்பிற்கு மேல் வியப்பாக, சுவாமிகள் வழங்கிய தைலத்தை, மனைவிக்குக் கொடுத்து நோய் பரவி வருகிற தேகப் பரப்பில் மூன்று நாள்கள் தொடர்ந்து தேய்த்துக் குளித்தபோது, இருந்த இடம் தெரியாத அளவிற்கு, செட்டியாரின் மனைவியைப் பீடித்திருந்த வெண்குஷ்ட வியாதி நீங்கிப் போய்விட்டது.

வியந்து போன செட்டியார், சுவாமிகளிடம் நயந்து ஒரு வேண்டுகோளை வைத்தார். முதலில் வேண்டுகோளுக்கு உடன்படாத சுவாமிகள், மீண்டும் மீண்டும் செட்டியார் அன்போடு வேண்ட வேண்ட, பிள்ளையார்பட்டியிலேயே தங்கி, அந்தப் பகுதி மக்களுக்கு மருத்துவத் தொண்டாற்ற இசைவளித்தார்.

ஆயுர்வேத மருத்துவ ஆன்மிக ஆசிரமம் 1903ஆம் ஆண்டில், பிள்ளையார்பட்டியில் 'ஸ்ரீநாராயண ஆசிரமம்' என்ற திருப்பெயரில் உருவாக்கம் கொண்டது. ஆசிரமத்தை அந்த வட்டார மக்கள், நோய் நீக்கும் தாய்வீடாகக் கருதினர். மனமுவந்து ஆசிரமத்திற்கு நஞ்சை, புஞ்சைகளை நன்கொடையாக வழங்கினர். மக்களைத் தழுவிய மருத்துவ அமைப்பாகவும், மருத்துவ அமைப்பைத் தழுவிய மக்களாகவும் சுவாமி கோவிந்தானந்தா நிறுவிய 'ஸ்ரீநாராயண ஆசிரமம்' நாளொரு நலமும், பொழுதொரு வளமும் பெற்று வளர்ந்தது.

எண்பது வகை வாத நோய்களுக்கும், மூக்கடைப்பு, ஓயாத் தும்மல் போன்ற பீநிச வியாதிகளுக்கும், ரத்த அழுத்தம், ரத்தக் கொதிப்பு, வலிப்பு, உதிரப் போக்கு, மாரடைப்பு ஆகிய மனிதனுக்கு வருகின்ற அனைத்துப் பிணிகளையும், சித்த, ஆயுர்வேத சிகிச்சை முறையில், நிலையாக நீக்கம் செய்யும் அரிய வைத்தியசாலையாகப் பிள்ளையார்பட்டி ஆசிரமம் பெரும் புகழ் ஈட்டத் தொடங்கியது.

ஆசிரமத்தை உருவாக்கிய சுவாமி கோவிந்தானந்தா பரிபூரணம் பெற்ற பின்னர், அப்பெருமானுக்குத் துணையாக இருந்த பிரகாசானந்த சரஸ்வதி சுவாமிகள் என்ற பத்மநாப சுவாமிகள் ஆசிரமப் பொறுப்பை ஏற்று, நோய்களை நீக்கக்கூடிய வல்லாண்மை பெற்ற ஒருவகைத் தைலத்தை, தமது தேர்ந்த மருத்துவ ஞானத்தாலும், ஆழ்ந்த இறையுணர்வாலும் உருவாக்கினார். அது 'பிள்ளையார்பட்டி தைலம்' எனப் பிரபலமாகியது. தைலம், களிம்பு, நெய், மாத்திரை, கஷாயம் ஆகிய ஐவகைச் சிகிச்சைகளால் மக்களுக்கு நோய் நீக்கம் செய்து வந்த பத்மநாப சுவாமிகள், ஆறாவது வகையாகத் தமது ஆத்ம சக்தியையும் பயன்படுத்தி வந்தார். சுவாமிகளின் பணிகளில் இளமைக் காலம் முதலாகவே தம்மைக் கரைத்துக் கொண்டிருந்த 'அச்சுதானந்தா' என்னும் அருளாளர், சுவாமிகளின் மறைவிற்குப் பின் ஆசிரம அதிபர் ஆனார். இப்பெருமகனார் ஆசிரமத்தின் புகழ்க் கொடியைச் சேவைக் குன்றின் சிகரத்தில் பறக்கவிட்டு, செட்டிநாட்டு மக்களின் பேரன்பைப் பெற்றார். நெகிழ்விக்கும் தோழமை, தவத்திரு குன்றக்குடி அடிகளாருக்கும், சுவாமி அச்சுதானந்தாவிற்கும் இடையே தோன்றி இருவரையும் மகிழ்வித்தது.

ஏறத்தாழ இருபத்தைந்தாண்டுகள் ஆசிரமப் பொறுப்பிலிருந்த அச்சுதானந்தா, ஆசிரமத்தின் மருத்துவப் பணியை வெகு பிரபலமாக்கி மிகு புகழ் அடைந்தார். ஆசிரமப் பணியாள் ஒருவரின் அழகிய ஆண் குழந்தையின் அழகிலும், புத்திக் கூர்மையிலும் மனம் வைத்து, அக்குழந்தை பள்ளிப் படிப்பையும், மருத்துவத்தில் பட்டப்படிப்பையும் பெற்றுக்கொள்ள உதவியதோடு,

தமக்குத் துணையாக ஆசிரமப் பணிகளை உவந்து ஆற்றிடவும் உரியவை செய்தார்.

ஆசிரமத்தின் கீர்த்தி பரவி வருகிற வேளையில், எதிர்பாராத நிலையில் அச்சுதானந்தா பூதவுடல் நீங்கிப் புகழுடல் பெற்றார். ஆசிரமத்தில் வளர்ந்து அச்சுதானந்தாவின் அன்பைப் பெற்று, ஆயுர்வேத சிகிச்சையை அனுபவ முறையாலும், சித்த ஹோமியோபதி மருத்துவத்தில் பாடம் கற்றுப் பட்டம் பெற்ற நிலையாலும், மருத்துவ நுட்பங்களைத் தெளிவாக அறிந்திருந்த இளைஞரை, தவத்திரு அடிகளார் ஆசிரமப் பொறுப்பை ஏற்குமாறு செய்வித்து, ஆசிரமத்தின் நிறுவனரை நினைவூட்டும் வகையில் 'கோவிந்தானந்தா' என்னும் திருநாமத்தைச் சூட்டி மகிழ்ந்தார்.

ஆசிரமத்தின் நான்காவது அதிபராகப் பொறுப்பேற்றுள்ள சுவாமி கோவிந்தானந்தா மரபு வழியாகப் பேணப் பெற்ற சிகிச்சை முறைகளான -'பிழிச்சல்' (மானுட உடலைத் தொடர்ந்து சில மணி நேரம் 14 நாள்கள் தைலத்தில் வைத்திருப்பது. இதனைச் செய்து கொண்டோரை, எந்த நோயும் ஐந்தாண்டுகளுக்கு அண்டி வராது) 'தாரை' (மூளைக் குளிர்வுக்குச் சிரசில் தைலம் கட்டுவது) 'நவரை' (சூம்பிப்போன உடல் உறுப்புகளை, இயல்பாகச் செயற்பட வைப்பது) 'உரோவஸ்தி' (மாரடைப்பு ஏற்படாதிருக்க இருதயத்தைப் பலப்படுத்துவது) மாவு ஒத்தடம் (உடல் உறுப்புகளை உயிர்ப்புடன் இயங்க வைப்பது) ஆகியவற்றை வெற்றிகரமாக, சிகிச்சை பெற வேண்டியவர்களுக்குச் செய்து வருவதோடு அண்மையில் உலகத்தை அச்சுறுத்தி வரும் 'எய்ட்ஸ்'நோயைக் குணப்படுத்தும் புதியதொரு சிகிச்சையை அளித்து, நோயாளரைக் காப்பாற்றிய அருமை, சுவாமி கோவிந்தானந்தா பெற்றுள்ள தனிப்பெருமை!

"ஆயுர்வேத, சித்த மருத்துவத்தில் பட்டம் பெற்றவர்களுக்கு தனியாகச் சொந்தத்தில் மருத்துவமனைகளைத் தொடங்கி நடத்திட தைரியம் வருவதில்லை. அத்தகைய தைரியத்தை, ஊக்கத்தை அளிக்க, ஒரு நூற்றாண்டுக் காலமாக ஆசிரமத்தில் கண்டுள்ள அனுபவச் சிகிச்சை முறைகளைக் கற்றுக் கொடுக்க ஆசிரமம் ஒரு திட்டம் வகுத்துள்ளது. அந்தத் திட்டத்தை நடைமுறைப் படுத்த ஒரு கல்லூரியை ஆசிரமம் தொடங்க உள்ளது. இதன் அவசியத்தையுணர்ந்து அரசாங்கம் அங்கீகாரம் வழங்கினால் பட்டம் பெற்ற சித்த மருத்துவர்களுக்கும், பல்லாயிரக்கணக்கான மக்களுக்கும் மிகுந்த பயன் ஏற்படும். பிளஸ் டூ படித்தவர்களுக்கு, மருந்து தயாரிக்கும் முறைகளைப் பயிற்றுவித்து, சான்றிதழ் (Diploma) வழங்கும் ஓர் அமைப்பையும் தொடங்க ஆசிரமம் திட்டமிட்டு வருகிறது" எனக் கூறுகிறார் சுவாமி கோவிந்தானந்தா. ஆசிரமம் அண்மைக் காலத்தில் கல்விப் பணியிலும் காலடி எடுத்து வைத்துள்ளது. ஸ்ரீ அச்சுதானந்தா மழலையர் & தொடக்கப்பள்ளி ஒன்றை ஐந்தாண்டுகளுக்கு முன்னர் தொடங்கி, குறிப்பாகக் கிராமப்புறத்துக் குழந்தைகள், கல்வியறிவிலும் ஒழுக்க சீலத்திலும், அறிவியல் துறையிலும் மேம்பட, ஆசிரமப் பணியை விரிவுபடுத்தியுள்ளார் சுவாமி கோவிந்தானந்தா.

பன்னூறு திருக்கோயில்களைக் கொண்டுள்ள தமிழ்நாட்டிலும், உலகத்தின் பல்வேறு நாடுகளில் உருவாக்கம் கொண்டுள்ள இந்து ஆலயங்களிலும் வழிபாட்டுக்குரிய – வழிபாட்டை நடத்தி வைக்கக்கூடிய; அருச்சகர்களை முறையாகத் தகுதி உடையவர்களாக உருவாக்கும் வேதாகமப் பயிற்சிக் களங்கள் மிக மிகக் குறைவாகவே இருந்து வருகின்றன. சமீப காலத்தில் தொடங்கிய பாடசாலைகளையும் கணக்கில் கொண்டால் இவ்வகையில் பதின்மூன்று பயிற்சிக் களங்களே உள்ளனவாகத் தெரிகின்றன. பிள்ளையார்பட்டியைத் தவிர்த்து, மற்ற பயிற்சிக் களங்களில் பயிற்சி பெறும் மாணவர்கள் அதாவது எதிர்காலத்து அருச்சகர்கள் ஐம்பதே எண்ணிக்கைக்குள் அடங்குவர்!

இறை வழிபாட்டை 'ஆத்மார்த்தம்' என்றும் 'பரார்த்தம்' என்றும் இருபிரிவாகக் கொள்வது நமது மரபு. தனி வழிபாடாகிய ஆன்மப் பிரார்த்தனையை ஆத்மார்த்தம் என்பர். பிறருக்காக இறைவனை எழுந்தருளச் செய்வித்து, வழிபாடு நிகழ்த்துவதை 'பரார்த்தம்' எனக் குறிப்பிடுவர். சீலமும், இறையுணர்வுச் சித்தமும், வேதாகம நெறியில் வித்தகமும் கொண்டோர், பெருமானின் அருகிருந்து, பிறருக்காக அர்ச்சித்துப் போற்றி வழிபடும் பரார்த்தமுறை, மிகப் பழங்காலத்திலிருந்தே இறை வழிபாட்டில் பின்பற்றப்பட்டு வந்துள்ளது.

திருக்கோயில்களில் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை, அருச்சகர்களாக அருட்பணியேற்றுத் தொண்டாற்றிய பெருமக்களில் பெரும்பான்மையினர், உரிய வேதாகமங்களைப் பரம்பரையாகத் தந்தையிடமிருந்து மகன் கற்றுத் தெளியும் பாங்கினையே பழக்கமாக்கிக் கொண்டிருந்து வந்தனர். வேதங்களையும், சாஸ்திரங்களையும் இலக்கணங்களையும் ஆகம நெறிகளையும் அனுஷ்டானங்களையும் அர்ச்சகருக்குரிய அனைத்து அருளாக்கங்களையும் முறையாகப் பயில்விக்கும் பயிற்சி அமைப்புகள் தோன்றவில்லை.

இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியினுடைய உதய காலத்தில், வேதாகமப் பாடசாலை ஒன்றை, தருமபுரம் ஆதீனம் உருவாக்கம் செய்தது. தருமபுரத்தைத் தொடர்ந்து காஞ்சி காமகோடி பீடத்தின் ஆதரவில் திருச்சி மாவட்டம் அல்லூரில் ஒரு பயிற்சிக் களம்

உருவாகி, உரிய கல்வியும், பயிற்சியும் அளித்து வருகிறது. தொடர்ந்து பழனி தேவஸ்தானம், திருப்புகலூர் அக்கினீஸ்வரர் சுவாமி தேவஸ் தானம், நகரத்தார் சமூகம் நிர்வகித்து வரும் பிள்ளையார்பட்டி திருக் கோயில், கௌமார மடாலயம், திருப்பரங்குன்றம் தேவஸ்தானம் ஆகிய அருளமைப்புகளின் ஆதர விலும், வழுவூர், கோவிலூர், திருவண்ணாமலை, குன்றக்குடி, மயிலாடுதுறை, காரைக்கால் ஆகிய திருத்தலங்களிலும் அர்ச்சகர் பயிற்சிக் களங்கள் உருவாக்கம் பெற்றுள்ளன.

பிள்ளையார்பட்டித் திருக்கோயில் சார்பாகத் தொடங்கப் பெற்ற வேதாகமப் பாடசாலை, 1985ஆம் ஆண்டு, கற்பக விநாயகர் திருக் கோயில் முதன்மை அர்ச்சகர் (CHIEF PRIEST) அருள்நெறிச் செம்மல் கி.பிச்சை சிவாச்சாரியாரின் வழிகாட்டலில் 'சிவநெறிக் கழகம்' என விரிவாக்கம் பெற்றது.

வேத சிவாகம வளர்ச்சிக்கு ஆவன செய்தல், தீட்சை வழங்கல், ஆகம சைவ சித்தாந்தத் திருமுறை நூல்கள் வெளியிடல், வேத சிவாகம திருமுறைக் கருத்தரங்குகள் அமைத் தல், வல்லுநர்களைக் கொண்டு அருச்சகருக்கு உரிய பாடத் திட்டங் களை உருவாக்குதல், நான்காண்டு களில் கற்றுத் தெளியுமாறு பயிற்று வித்தல், அத்தகைய நெறி முறையில் பயின்றவர்களுக்கு 'சைவாச்சாரி யார்' 'சிவாகம ரத்தினம்' என்னும் பட்டங்களை வழங்கல், ஆண்டு தோறும் மெய் கண்டார் விழா நடத்தி, சீரிய பணியாற்றும் சிவாச்சாரியார் ஒருவருக்கு சிவநெறிச் செம்மல் என விருதளித்துச் சிறப்பித்தல் ஆகிய அரிய நோக்கங்களைச் செயற் படுத்தும் உரிய அமைப்பாக 'சிவநெறிக் கழகம்' 'கோயில் பணிச் செல்வர்' டாக்டர் கி.பிச்சை சிவாச்சாரியாரால் ஆர்வத்துடன் நிறுவப் பெற்றது.

பயிற்சி பெற்ற அறுநூறுக்கும் மேற்பட்ட அருச்சகர்களுக்கு 'சைவாச்சாரியார்' 'சிவாகம ரத்தினம்' ஆகிய சான்றிதழ்ப் பட்டங் களை வழங்கியுள்ள சிவநெறிக் கழகம், சமய உலகில் சாதனை நிறுவி, ஒரு சரித்திரம் படைத்துள்ளது. திருக்கோயில்கள் உள்ள எல்லா நாடுகளிலும் பிள்ளையார்பட்டி சிவநெறிக் கழகத்தில் பயிற்சி பெற்றோர் அருச்சகர்களாகத் தெய்வப் பணியாற்றி வருகின்றனர். எந்த ஆண்டும் நூற்றுக்குக் குறைவா னோர் பயிற்சி பெற்றதில்லை. இந்த ஆண்டு 216 மாணவர்கள் பயிற்சியில் உள்ளனர்.

தமிழகத்திலும், அயல் நாடு களிலும் டாக்டர் பிச்சை சிவாச் சாரியார் பட்டங்கள் வழங்கியும் விருதுகள், பொற்கிழிகள் அளித்தும் பாராட்டிப் போற்றப் பெற்றுள்ளார். எனினும் அப்பெருமகனாரின் நினைவில் நிற்கும் நெகிழ்ச்சியுடன் கூடிய மகிழ்ச்சி ஒன்று! அது அருப்புக்கோட்டை, பெரியகுளம், மானாமதுரை, பட்டுக்கோட்டை, துளாவூர் என ஃபிரஞ்சு இன்ஸ் டிட்யூட் ஆப்ஃ இண்டாலஜி (FRENCH INSTITUTE OF INDOLOGY) சம்ஸ் கிருதத் துறைத் தலைவர் என்.ஆர்.பட் (N.R.Bhat) என்பவருடன் ஊர் ஊராக அலைந்து தேடி, ஆகமச் சுவடிகளைக் கண்டுபிடித்துக் கொடுத்து, அவை நூலாக்கம் பெற்றுள்ளமையே!

அன்புள்ளமும், ஆன்மிக நெறியில் ஆழ்ந்த பற்றுதலும் கொண்டு உலகளாவிய சைவ சமய நிகழ்ச்சி களில் பங்கேற்று வருபவரும், உன்னதங்களையே செயலாக்க மாகக் கொண்டவருமாகிய சிவ நெறிக் கழக நிறுவனர் பிச்சை சிவாச்சாரியார், கற்பகப் பிள்ளை யின் கருணையால் பெருநலம் பெருகும் பிள்ளையார்பட்டிக்குப் பெருமை சேர்ப்பவர் மட்டுமல்லர்; 'பிறவாப் பெம்மான்' பேரருளை மூலமாகக் கொண்ட சீலமிக்க சைவநெறிக்கு அருள் சேர்ப்பவரும் ஆவார். படங்கள்: சுந்தரம் சுப்பு

## எப்பொழுதும் ...



காற்றில்
நடுங்கிக் கொண்டிருக்கின்றன
கமலப் பூக்கள்

கதிரவன்
முளைத்து வருவதற்காக
காத்திருக்கின்றன

ஒரு
சிறு வாவி
அவற்றின் உலகம்

தாமரைப்பூக்கள் முழுசாக
பூத்திருக்கும் பொழுது
பார்த்திருக்கிறீர்களா நீங்கள்?

பாவம்
அறியாதவை
தாமரைப்பூக்கள்

மென்மையான
இதழ்கள் உள்ளவை
பறித்தால் வாடிவிடுபவை

அந்தந்தக் குளத்திலேயே
இருக்க முடியாதா
அந்தந்தத் தாமரைப்பூக்கள்?

தாமரைப்பூக்களைப்
பறிக்காதீர்கள்;
ஒரு மகாகவியைக்
கண்டு கொள்ளாது
இருக்காதீர்கள்!

- விக்ரமாதித்யன்

நீலவன்



★ அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில் ராஜகோபுரம்

படங்கள்: விடிவெள்ளி ஆறுமுகம்

# காங்கீஸ்வரர் களிப்பூட்டுகிறார்

முருகப் பெருமான் தளிகளில் ஒன்று இறைவன் காங்கீஸ்வரர் பெயரால் வழங்கும் காங்கேய நல்லூர்.

காங்கேயம் என்றால் பொன்.

இங்கு அருள் வழங்கும் சிவசுப்பிர மணிய சுவாமி பொன் வண்ண மேனியன்.

வசிட்டர் –

ஒரு வளர்பிறை சஷ்டியில் இங்கு தங்கி முருகனை வழிபட்டதாய்ச் செய்தி.

நாரதர் பலகாலம் இங்கிருந்து முருகனைத் தொழுததால் நாரதாஸ்ரமம் என்ற நூதனப் பெயரையும் இவ்வூர் பெற்றிருந்தது.

தங்கரூபன் என்று அருணகிரியார் வயலூர்த் திருப்புகழில் வாய்நிறைய விளிக்கும் முருகப்பெருமான் உறையும் இக்கோயில், வென்று மண் கொண்ட சம்புவராயர் (1322–1339) காலத்தில் கட்டப்பட்டதாம்; இது இன்னொரு செய்தி.

சிவசுப்ரமணிய சுவாமி கோயிலின் ராஜ கோபுரம் திருமுருக கிருபானந்தவாரியாரின் தந்தை சிவத்திரு மல்லையப்பதாச பாகவதரால் புதுப்பிக்கப்பட்டபோது –

பாகவதரின் மகன் ஸ்ரீசைலவாசன் சிற்பக் கலைஞர்களுக்கு நாள்தோறும்

❖ வேலூரிலிருந்து வடகிழக்குத் திசையில் சுமார் 6 கி.மீ.தூரத்தில் உள்ளது காங்கேய நல்லூர்

★ வெண்கல சிலையாய் வாரியார் சுவாமிகள்





★ வாரியாரின் இளவல் திருப்புகழ் மணி

★ வாரியார் சுவாமிகள் முத்துவிழா நினைவு மண்டபம்

சிற்றுண்டி எடுத்துச் செல்வதை வாடிக்கையாய்க் கொண்டிருந்தான்.

ஒரு நாள் –

இராஜகோபுரத் திருப்பணிச் சாரத்தின் உச்சியிலிருந்து ஸ்ரீசைல வாசன் தவறி விழுந்துவிட்டான்.

அதிசயம்!

சிவசுப்ரமணிய சுவாமியின் கடைவிழிப் பார்வையில் சிறு காயமுமின்றி உயிர் பிழைத்தான்.

அத்தகைய அற்புத தெய்விகக் கோயிலின் –

திருச்சுற்றில் கவின்நிறை கருங்கல் மண்டபம், வடக்குச் சுற்றில் கந்த புராணத்தை உணர்த்தும் கதைச் சிற்பங்கள், வடக்குக் கோபுரம் எல்லாம் வாரியாரின் வள்ளன்மைச் சின்னங்கள். அவருடைய நேரடிப் பார்வையில் நிறைவேறிய திருப்பணிகள்.

பள்ளியறை, பரிவாரத் தேவதைகள், வாகன மண்டபம், பளிரிடும் பளிங்குக் கற்களின் பரப்பு–

மற்றும் பிறப்பால், வளர்ப்பால், சொல்லால், செயலால், சைவராய், சிவப்பழமாய், வெண்கலக் குரலில் விவேகிகளும் விரும்பிக் கேட்கும் விளக்கவுரைகளை முழக்கும் வேத வித்தகராய்ப் பின்னாளில் விளங்கிய வாரியாரின் சிலை வைக்கப்பட்டுள்ள 'வாரியார் சந்நிதி'.... ஒவ்வொன்றும் சிவசுப்பிரமணிய சுவாமி கோயிலுக்குக் கீர்த்தி சேர்க்கும் கோலங்கள்.

திருப்புகழுக்கு அரிய, எளிய உரை கண்ட அறிஞர், ஒரு நாளும் ஒய்வில்லாமல், "முருகப்பெருமானே... முருகப் பெருமானே" என்ற மந்திரத்தில் மன்பதையின் 'மன, மெய், வாக்கு' மலர்ச்சியைக் காண விழைந்த வாரியாரின் முத்துவிழா நினைவு மண்டபத்தினுள்ளிருக்கும் முழு உருவ வெண்கலச்சிலை இன்றும் வாரியார் வாழ்கிறார் என்று சொல்லாமல் சொல்கிறது.

மூச்செல்லாம் முருகனைக் கொண்டிருந்த முத்தமிழ் வித்தகர், பேச்சைக் கலையாக்கிய பெருமகனாரின் நிழலாய், காங்கேய நல்லூரில் ஆன்மிக உணர்வை, அறநெறியை, அருந்தமிழ்ப் பண்பை, தள்ளாத வயதிலும் தளராமல் காத்து வருகிறார் அவருடைய இளவல் 'திருப்புகழ்மணி'.

இலட்சதீப விழா மாசி விசாகத்தில் நடக்கிறது. இலட்சோப இலட்சம் பக்தர்களை அப்போது இவ்வூர் தன்னுள் அட்க்குகிறது.

கந்த சஷ்டியின் போது தொடர்ந்து ஆறு நாள்கள் இலட்சார்ச்சனை இனிதே நடைபெறுகிறது.

சிவசுப்ரமணிய சுவாமி இங்கு அழகிய காட்சி தந்து அருளாசி அளிப்பதாலோ, அல்லது 'பேசா நாள் பிறவா நாள்' என்பதற்கு எடுத்துக் காட்டாய் நீங்காத் துயில் கொள்ளும் வாரியார் சுவாமிகளின் நினைவுகள் இங்கே நீங்காது நிழலாடிக் கொண்டிருப்பதாலோ –

காங்கேய நல்லூர் காலத்தை வென்ற கனக புரியாய்ப் பக்தர்களைக் களிக்கச் செய்கிறது. ●

# சாதகம்

பாடப்பாட ராகம் என்பார்கள். எந்த ஒரு கலையானாலும் எத்தனை வயதானாலும், எவ்வளவு புகழ் உச்சியில் இருந்தாலும் அவர்கள் அக் கலையைத் தினசரி நடைமுறையில் வைத்திருந்தால் தான் பொலிவுறும். அதுவும் இசைத்துறையில் இது மிகவும் அவசியம். சாதகம் என்பது ஒரு யோகப் பயிற்சி மாதிரி. தினசரி சாதகம் செய்வது அவர்களது உடலையும், மனத்தையும்கூட ஆரோக்கிய நிலையில் வைத்துக் கொள்ள உதவுகிறது.

நமது இசை வல்லுனர்கள் தனிப்பட்ட முறையில் கடவுளை நினைத்து தியானம் என்கிற பெயரில் கண்மூடி உட்கார வேண்டிய அவசியம் இல்லை. இவர்களது சாதகமே தியானம்தான். இசை. மனசை ஒருமுகப்படுத்தும். ஆன்மாவை மேல்நோக்கிச் செலுத்தும். இசை-அன்றாட உணவு மாதிரி. பசிக்கு உணவு எத்தனை அவசியமோ அதுபோல் ருசிக்கும் இந்த உணவு அவ்வப்போது உதவுகிறது. இசைப் பயிற்சி என்பது, ஒரு கலைஞனின் அன்றாட ஞானப்பசிக்குத் தீனியாக அமைவது மட்டுமின்றி அவ்வப்போது அவனுள் கிளைத்தெழும் புதுப்புதுக் கற்பனைகள் மெட்டுகள், உத்திகள் எல்லாம் சேர்ந்து இசைப் பசிக்குக் கிடைத்த ஆகாரத்தை ருசிமிகுந்ததாகவும் ஆக்குகிறது. இதுதான் அந்தக் கலைஞனின் ஆலாபனைத் திறனை வளர்த்து, சொந்தமாய், கற்பனை ஸ்வரங்களைச் சேர்க்க உதவுகிறது.

இப்பேர்ப்பட்ட சாதகம் இசை ஜாம்பவான்களின் வாழ்க்கையில் எப்படி இன்றளவும் தொடர்ந்து நடைமுறையில் இருக்கிறது என்பதை அறிய-பாட்டு, வீணை, வயலின், நாட்டியம், கடம், மிருதங்கம், புல்லாங்குழல் ஆகியவற்றில் கொடிகட்டிப் பறக்கும் சில மேதைகளிடம் ஒரு வட்டம் அடித்தபோது கிடைத்த சாதகத் தகவல்கள்.



'பத்மவிபூஷண்' டி.கே.பட்டம்மாள்: "பத்து வயதில் இருந்தே பாடறேன். விடிகாலை நாலுமணிக்கே எழுந்து சாதகம், ஏன்னா-தூங்கி எழுந்ததும் மனசு ரொம்ப நிர்மலமா இருக்கும். தம்புராவோடு கூடவே ஒரு டம்ளரில் கொஞ்சம் தண்ணீரும் வெச்சிருப்பேன். தூக்கம் வர்றச்சே விரல்லே தண்ணீரைத் தொட்டு கண்ணுல ஒத்திப்பேன். இன்னைக்கு ஒரு வர்ணம், நாளைக்கு ஒரு வர்ணம்னு-எந்த ஒரு வர்ணத்தையும் எடுத்துக் கொண்டு இரண்டு காலம் பாடுவேன். அதேபோல் கீர்த்தனைகள் இன்னின்னைக்கு இது இது 'ப்ராக்டிஸ்' பண்ணனும்னு ஐந்தாறு கீர்த்தனைகளை மனசுக்குள்ளே ஒரு 'லிஸ்ட்' போட்டு வைத்துக் கொள்வேன். அப்படி ஒவ்வொரு கீர்த்தனையையும் நாலைந்து முறை பாடறது என் வழக்கம். சரளி வரிசை எல்லாம் சாதகம் பண்ணுவதாக மத்தவங்க சொல்வாங்க. ஆனா நான் அதைப் பண்றது இல்லை. சாயந்தர வேளையைவிட அதிகாலைதான் விசேஷம். கார்த்தால சொல்றதுக்குன்னே சில சுலோகங்கள் உண்டு. அது சொன்னா தொண்டைக்கும் ரொம்ப இதமா இருக்கும். எனக்கு இப்போ எண்பது வயசாகிறது.. இன்னமும் இசை கத்துக்கற ஒரு மாணவியாகத்தான் நான் என்னை பாவிச்சுக்கறேன்."

'கலைமாமணி' ஈ.காயத்ரி: "வீணையில் என் தாயாரே எனக்கு முதல் குருவாக அமைந்துவிட்டதால் குட்டிப் பெண்ணா நான் இருந்தபோதே சாதகம் ஆரம்பித்தாயிற்று. அதுவும் அதிகாலையில் மூனு மணிக்கே என்னை எழுப்பி கையில் வீணையைக் கொடுத்து உட்கார வைத்துவிடுவார் என் தகப்பனார். ஏழு மணி வரைக்கும் தினசரி பயிற்சி. எட்டாவது வயதில் என் முதல் கச்சேரி. சிரமம் பாராமல் நாம் எதைச் செய்தாலும் அதன் பலனே தனி என்பதை அப்போதே உணர்ந்தேன். சாதகமானாலும் சரி, பூஜை ஆனாலும் சரி. சூர்யகிரகணம், சந்திரகிரகணம் சமயங்களில் செய்தால் சாதகபலனோ, பூஜா பலனோ அது பத்து மடங்காகக் கிடைக்கும். பண்ணுகிற சாதகத்தை நல்லா ஆக்ரோஷத்தோட பண்ணினால்-சாரீரத்தில் பேசுகிற அத்தனை சங்கதிகளையும், வீணையில் பேச வைக்கலாம்.

சர்ச்சில் பாண்டியன்



அந்த அளவுக்கு நம்மை நாம் வளர்த்துக் கொள்ளமுடியும் பாடியபடியே வாசிப்பது ஏனோ எனக்குப் பிடிப்பதில்லை

வீட்டில் எல்லாரும் தூங்கியபின் அந்த ஒரு நிசப்தமான ஏகாந்தத்தில் பிராக்டீஸ் பண்ணுவது எனக்கு மிகவும் பிடிக்கும். தூக்கம் வராவிட்டால் கூட வீணையை எடுத்து படுக்கையில் வைத்துக்கொண்டு வாசிப்பேன். வாசிப்பேன் என்றால் நல்லா வியர்வை வரும் அளவிற்கு 'Fan' கூட போட்டுக்காமல் வாசிப்பேன். அப்படி 'தீவிரமாகப்' பண்ணினால்தான் 'பயிற்சியின் உண்மையான முழு உணர்வு' எனக்குக் கிடைத்தமாதிரி இருக்கும். கச்சேரியில் அதை வாசிக்கிறபோது 'முயற்சியில்லாததாகவே' எனக்கே தெரியும். உடலாலும், மனத்தாலும் என்னை ஒரு ஸ்டெ.ஃபி கிராப்பாக எனக்கு நானே நினைத்துக் கொள்வேன். அது டென்னிஸ் கோர்ட்: இது மியூசிக்.

**டாக்டர்.என்.ரமணி:** திருவாரூரில் கல்வி பயின்றபோது எட்டுவயதில் எனக்கு அரங்கேற்றம். பள்ளி விடுமுறைக் காலங்களில் சென்னைக்கு வந்து 'புல்லாங்குழல் மேதை' மாலி அவர்களின் சிஷ்யனாகி மேலும் பயிற்சி. 1950, 1960 வாக்கில் ஐந்துமணிக்கே அவருடன் நானும் சேர்ந்து கொண்டு மெரினா கடற்கரைக்குக் கிளம்பிப்போய் விடுவோம். அப்போதெல்லாம் கடற்கரையில் இப்போ மாதிரி கூட்டம் இராது. இப்போ வீட்டைச் சுற்றிலும் நெருக்கமா 'அடுக்குமாடி வீடுகள்' அடுத்தடுத்து வந்தாச்சு.. எல்லா இடைஞ்சல்களையும் தாண்டி மனத்தை ஒருமுகப்படுத்தி சாதகம் இன்னமும் தவறாது தொடர்கிறது.

ஸ்ருதி சுத்தம், லயக்கட்டுப்பாடு, மனோதர்மம் ஆகிய எல்லாமே வாசிக்க வாசிக்கத்தான் மெருகேறும். நாம் நினைப்பது வாத்யத்தில் வரணும்னா-சாதகத்தில் மட்டுமே அது சாத்தியம். இல்லாட்டி வாத்யம் நம்மை எங்கோ இழுத்துப் போகும். நாதஸ்வரத்துக்கு நல்லா மூச்சை அழுத்திப் பிடிச்சு வாசிக்கணும். ஆனால் புல்லாங்குழலை சிரத்தையோடு பெண்கள் சாதகம் செய்தால்கூட நல்லா பதப்படும்.நான் அறியாமல் தானாகவே மெருகேறிவிடும்.



**'பத்மஸ்ரீ' உமையாள்புரம் கே.சிவராமன்:** என்னோட ஐந்து வயதில் பள்ளிப்பாடம் எனக்குத் தொடங்கியது. கூடவே ஒரு பதினைந்து வருஷம் என் மிருதங்க குருகுலவாசம். இதற்கிடையில் எனது பத்தாவது வயதில் அரங்கேற்றம். பாலக்காடு மணி அய்யர், தஞ்சை வைத்தியநாதய்யர், ஆருபாதி நடேசய்யர், கும்பகோணம் ரங்கு அய்யங்கார் என நான்கு மிகப்பெரிய குருமார்கள் எனக்கு. பள்ளி நேரம் தவிர மற்ற நேரங்களில் எட்டு மணி நேரம் சாதகம். 1955இல் சென்னைக்கு இடம் பெயர்ந்ததும் 1955இல் இருந்து 1965 வரையிலும் அப்படியே நீண்ட சாதகம் தொடர்ந்தது. அந்தக் காலகட்டத்தில் பி.ஏ.,பி.எல்.,எம்.எல்., எல்லாம் படித்து முடித்து பட்டம் பெற்றேன். ஐ.ஏ.எஸ். எழுதக்கூட தயார் ஆனேன். ஆனால் இசைதான் என் முழுத் தொழில் என்றானது அந்த இறைவனின் விருப்பமாகிவிட்டது.

கலையை உயிர் மூச்சாகவும், சாதகத்தை உடலாகவும் அவை இரண்டும் சேரும்போது அக்கலைஞன், கலை உலகில் ஒரு தனிச்சிறப்பு பெறுகிறான். கலைகள்



பயில்வதற்கும், பாடம் படிப்பதற்கும், எந்த விதத்திலும் முரண்பாடு இல்லை என்பது நான் அனுபவித்து அறிந்த ஒரு சித்தாந்தம். பெற்றோர்-தங்கள் குழந்தைகளுக்கு எதில் அதிக ஆர்வம் என்பதை நன்கு கண்டறிந்து, தகுந்த குருமார்களிடம் தங்கள் குழந்தைகளை ஒப்படைக்க வேண்டும். 50 ஆண்டு சுதந்தர இந்தியாவில், கல்வியோடு நல்ல பல நுண்கலைகளையும் கற்றுக் கொள்ளச் செய்து-ரொம்ப ஆச்சர்யமான, ஆரோக்கியமான இளைய தலைமுறை ஒன்றை உருவாக்கிக் கொண்டிருப்பதைக் காண்கையில்-உண்மையிலேயே எனக்கு அது அதிக சந்தோஷத்தைக் கொடுக்கிறது.

'கலைமாமணி கன்யாகுமரி': எல்லா வாத்தியக் கருவிகளுமே கடினமானவை தான். அதுவும் வயலின்-ரொம்பவே கஷ்டம். ஒருநாள் கூட விட்டுவிடாமல் சாதகம் செய்தால்தான் சொன்னதைக் கேட்கும். அப்படி பிராக்டிஸ் பண்ணாமல் போனால் நமக்கே அது கச்சேரி பண்ற போது தெரியும். முதலில் சரளி வரிசை, அலங்கார வரிசை என எடுத்துப் பாடணும். வர்ணங்களும் மூணு காலம் தவறாமல் பண்ணணும். குரு எப்பவுமே கூடவே இருந்து சொல்லித்தருவது என்பதெல்லாம் சாத்தியமில்லை. எனவே குரு சொல்லித் தருவதைக் கவனமாக மனத்தில் வாங்கிக்கொண்டு, அதை கரெக்டா, தவறில்லாமல் பிராக்டிஸ் பண்ணணும். அதோடு சாகித்யத்தோடு கூடிய பாட்டும் அவசியம் தெரிஞ்சிருக்கணும். கீர்த்தனைகள் எல்லாம் அத்துப்படியாக் கத்துக்கணும். அப்போதான் பாடறமாதிரியே வாசிக்கவும் முடியும்.

மெயின் ஆர்டிஸ்ட் எப்போ எதைப் பாடப் போறாங்கறதே சில சமயம் தெரியாது. அதனால் ஷார்ப்பா, பக்கவாத்தியம் எப்பவும் தயார் நிலையில் துறுதுறுன்னு இருக்கணும். சுறுசுறுப்பா இருந்தால் தான் 'ஒத்துழைப்பு கொடுக்க' முடியும். எடுத்த எடுப்பிலேயே கச்சேரி பண்ண



அவசரமே படக்கூடாது. திறமையை நல்லா வளர்த்துட்டா 'மேடைப் பக்குவம்' பின்னாடி தானா அது நம்மைத் தேடி வரும். இந்த நிமிஷம் வரை, சாதகம் செய்துட்டுத்தான் சாப்பாடு என்பதை நான் ஒவ்வொரு நாளும், வேளையும் கடைப்பிடிக்கிறேன்.

'பத்மஸ்ரீ' அலர்மேலுவள்ளி: அன்றாடம் நாம் சாப்பிடுவதும் தூங்குவதும் மாதிரிதான் எனக்கு 'சாதகம்' என்பதும், விடாமல் தொடர்ந்து ஆர்வத்தோடு அதைச் செய்துகொண்டே இருக்கணும். பயிற்சிக்குப் பயிற்சி; அதோடு உடம்பும் வள்ளிக் கொடியாகவே இருக்கும். வீட்டில் 'புதுப்பிக்கிற' வேலை மும்முரமாக ஒரு பக்கம் நடந்து கொண்டிருந்தாலும், நானும் அங்கே ஒரு பக்கமாக சாதகம் செய்துக்கிட்டுத்தான் இருப்பேன். அதுமாதிரி வெளியூர் போனாலும் சரி, அல்லது நடன நிகழ்ச்சிகளுக்காக வெளிநாடுகளுக்குப் பயணமானாலும் சரி-அங்கேயும் அனுதினமும் 'பிராக்டிஸ்' நிச்சயம் உண்டு.

சின்னவயதில் நான் சர்ச் பார்க் கான்வென்டில் படித்துக் கொண்டிருந்தபோது -தினசரி வீட்டிற்கு வந்து கற்றுத்தர நடன ஆசிரியர் வருவார். ஸ்கூலுக்கு லேட் ஆவது கூடத் தெரியாமல் தனியா அதுபாட்டுக்கு தினசரி பயிற்சி போயிட்டிருக்கும். அதுபோல் என் ஒடிஸி அரங்கேற்றத்தின் போது-குரு கேலுசரண் மகாபத்ரா தன்





பரிவாரங்களோடு எங்கள் வீட்டிற்கே வந்து அங்கே இங்கே என்னை நகரவிடாமல் இரவு 12, 1 மணி என்று கூடப் பாராமல் மாதக்கணக்கில் என்னை அவர் தயார்படுத்திய அனுபவம் மறக்கமுடியாத ஒன்று. எவ்வளவு நேரம் சாதகம் செய்கிறோம் என்பதைவிட செய்கிற நோத்தில் அதில் முழு ஈடுபாட்டுடன் செய்வது தான் முக்கியம். என்னைப் பொறுத்த வரையில் சாதகம்-ஒரு தவம்!

---

**டி.எச்.விக்கு விநாயக்ராம்:** சிறுவயதில் எனக்கு என் தகப்பனார் என்னை நாலு, நாலரைக்கே எழுப்பி, பழைய சாதத்தையும், கடத்தையும் எடுத்து என் கையில் கொடுத்துவிடுவார். சாப்பிட்டதெல்லாம் ஜீரணித்து விடுமளவிற்கு அடிச்சு அடிச்சு கை வலித்து-வியர்க்க வியர்க்க தினசரி எட்டு மணி நேரம் கட்டாய சாதகம் செய்வேன். மாலை வேளையிலும் அதே போன்ற கடுமையான பயிற்சி. அதுதான் இன்னிக்கு வரைக்கும் என்னைக் காப்பாத்திட்டு வர்றது. இப்போதும் 'நிகழ்ச்சி' தான், எனக்குப் பயிற்சி என்றாகிவிட்டது.

இன்றைக்குள்ள குழந்தைகளை அந்தக்காலம் மாதிரி கட்டாயப்படுத்தினால் அதுங்களுக்கே சலிப்பு வந்து விடும் . தினசரி 'வீட்டுப் பாடம்' பண்ற மாதிரி-நாம் தான் அவர்களை ஆசையோடு பண்ண வைக்கணும். ஐந்து வயதில் சாதகம் தொடங்கலாம்.-முதலில் ஒரு காலம் வாசித்து. பின் கொஞ்சம் கொஞ்சமாக வேகத்தைக் கொண்டு போகலாம். மனசுல வேகம் வந்துட்டா-கைகளுக்கும் தானாவே 'வேகம்' வந்துடும். மெருகு ஏற ஏற நாதம் வரும். கை படியப்படியத்தான் தைரியமா வாசிக்க முடியும். ஒரு சொல்லை எடுத்து வாசித்து அது திருப்தியாக வந்தபின் அடுத்தடுத்து எடுத்துச் செய்தால்-குழந்தைகள் மனத்தில் ஆணித்தரமாய் படிவதோடு, கூடவே அவர்களது ஒரிஜினாலிடியும் அதில் கிடைக்கும். ●

## தமிழா!?

புலவர் ந.சு. மணியன்



தமிழனுக்குத் தன்வீட்டில் தமிழினிலே பெயரில்லை.
    தமிழ்இதழில் தமிழ்க்கொலைக்கு அளவே யில்லை.
தமிழ்வழியாம் தொலைக்காட்சி நிகழ்ச்சி மற்றும்
    தமிழ்ப்படத்தில் வானொலியில் தமிழ்வேண் டாமோ?
தமிழ்நாட்டுத் தமிழிசைக் குழுக்களிலே தமிழுண்டோ?
    தமிழிசைக்கு வழிவகுக்கும் தலைவர் உண்டோ?
தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழ்க்கடவுள் பெயர்வைப்பில்
    தமிழுண்டா? தமிழ்வழி பாடுதானு முண்டோ?

பரந்த மேடிட்ட நெற்றி வியர் வையில் நீறு பதிந்து, ஆன்மிக அருட்பிரகாசம் சிறுகண்களில் ஒளிர்ந்து, அலர்ந்த அல்லியின் வசீகரம் முகம் முழுதும் மிளிர்ந்து, கருமையில் வெண்மை மீசை, தாடியில் லேசாய்ப் பொதிந்து, புன்முறுவல் முகிழ்த்து, வலப்பக்கத் தோள்பட்டையிலிருந்து பக்கவாட்டில் மார்பை முடிய காவி யாடை மீது கருநாகமாய்க் கொப்பூழ் வரை தலைமுடிக் கற்றை புரண்டு, இடையில் காவிவேட்டி கணுக்கால்கள் வரை பாந்தமாய்க் கவிந்து –

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் யதார்த்தத்தின் சான்றாய் ஓங்காரச் சிரிப்பில் சித்தத்தை, சுத்தத்தை, அன்பை, சேவையை அர்த்தமுள்ளவையாக்கிக் கொண் டிருக்கிறார் ஞான சூரியனான சுவாமி சச்சிதானந்தா.

காஞ்சி காமகோடி 66ஆம் பீடாதிபதி பரமேஷ்டி குரு, 67ஆம் பீடாதிபதி பரமகுரு ஆகியோரின் அதிட்டானங்கள் கொண்ட பிருந்தா வனம் அமைந்த ஆர்க்காட்டிலிருந்து செய்யாறு செல்லும் சாலையில் 25 கி.மீ. தூரத்திலுள்ள கலவையில் தான் சுவாமிகள் கமலக்கண்ணி ஆலய வளாகத்தில் ஆசிரம வாசியாய் ஆன்மாக்களுக்காக அனவரதமும் அர்ச்சிக்கிறார்.

கையில் ஒரு காசுமின்றி உடுத்திய உடையோடு கல்லூரி வாழ்க்கையை முறித்து ஆன்மிகக் கரை நாடி அடர்காடுகளிலும் வெறுங்கால்களால் பாரதத்தின் அடிமுதல் முடிவரை பயணம் செய்தவர் சுவாமிகள்.

புண்ணியத் தலங்களையெல்லாம் மிதித்து –

புடமாகிய புண்ணியராய், பூதலத்துப் பொய்ம்மைகளிலிருந்து மக்களை விடுவிக்க, ஆன்ம நேய ஒருமையைத் தம் அன்றாட இறையருள் வேட்டலில் நினைவு கூர்ந்து ஆகம வேத சாஸ்திர விதிகளைக் காத்து வருகிறார்.

தொடக்கங்களில் –

சித்து செய்வதில் சித்தராய்த் தம்மை வெளிப்படுத்திய சுவாமிகள், சித்து ஒன்றின் வாயிலாக மட்டுமே சித்தத்தினுள்ளே சிரிக்கும் மனிதத் தின் மலர்ச்சியில் இடறும் மேடு பள்ளங்களை இட்டு நிரப்ப இயலாது என்பதை உணர்த்த வேண்டி கமலக் கண்ணியின் காலடியில் வீற்றிருந்து, காணவருவோரிடம் தம் கருணைப் பார்வையாலேயே சமாதானம், சகிப்புத் தன்மை, ஒழுக்கம், உண்மை, உழைப்பு போன்றவற்றின் ஆழ்பொருளை அகழ்ந்தளிப்பதில் ஆர்வமுற்றிருக் கிறார்.

தற்போது தம் பொன்விழா அகவையைத் தொட்டிருக்கும் சுவாமி சச்சிதானந்தா –

பதினாறு மாதங்களுக்கு முன்னர் கமலக் கண்ணி அம்மனின் வளா கத்தில் மாடியில் மகாலட்சுமிக்கு ஆலயம் எழுப்பினார்.

2500 சதுர அடிப்பரப்பில், 57 அடி உயரக் கோபுரத் திரிதளத்தில் தசாவதாரக் காட்சிகள். அஷ்ட லட்சுமி போன்றவர்களின் அலங்காரங்கள் வண்ணங்களாய் எண்ணங்களை ஈர்க்க, 10' X 25' பரப்பில் விஸ்தாரமாயுள்ள சலவைக் கற்கள் பதிக்கப்பட்ட கருவறையின் உள்ளே காலடிகளை வைக்கும் முன்னேயே மறுமுறை எப்போது வருவோம் என்று கணக்கிடுகிறது மனம்.

நாற்பத்திரண்டு இலட்ச ரூபாய் செலவில் உருவாகியிருக்கும் இந்த ஆலயத்தைப் போல –

# அன்றாடம் ஆன்ம ஒளி



ஆலய விமானம்



சுவாமி சச்சிதானந்தா



மகாலட்சுமி

பெருமாட்டி மகாலட்சுமிக்கு, தொண்டை மண்டலத்தில் ஓர் ஆலயம் இல்லை. இதுதான் முதல் ஆலயம்.

மூன்றே முக்கால் அடியில் மகாலட்சுமியைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார். அற்புத அம்சங்களோடு பொற்சிலையன்ன வடிவில் அமர்ந்த கோலத்தில் மகாலட்சுமியைத் தரிசித்து மகிழக் கண்கோடி வேண்டும்.

வைகானச ஆகமப்படி நித்திய பூசை நடைபெறும் வேளைகளில் பக்தர்கள் மகாலட்சுமியின் மகத்துவங்களில் திளைக்க மனங்கள் திறந்து பன்றாடுகிறார்கள்.

தம் தலைவலிமையைத் தம் ஒவ்வோர் அசைவிலும் வெளிப்படுத்தி காலங்களும் பலன் அளிக்கக்கூடிய அருளாசி மாணிக்கங்களை மக்களின் மனங்களில் புதைத்து உளைச்சல்களுக்கு விடுதலை தருகிறார், நித்திய பூசைகளின்போது சுவாமிகள்.

பளபளவென்ற மார்பிள் படிக்கட்டுகளில் ஏறி ஆலயத்தின் முதல் தளத்தில் நின்றாலே இதமான குளிர்காற்றின் தழுவல். அங்கும் மார்பிள். எங்கும் மார்பிள்.

கலவைக் கிராமமே கண்முன் ஒளிர்கிறது.

மகாலட்சுமியை வணங்கத் திரும்பும் எங்கும் மார்பிள் அசத்துகிறது. ஒவ்வொரு மார்பிளிலும் மேனியெலாம் மின்ன மோனப் புன்னகையில் பொற்காசு மழை பொழியும் மகாலட்சுமியே பிரசன்னமாகிறாள்.

மகாலட்சுமியின் கவசம், கண்களில் கவின்கலையைப் புலப்படுத்தி உள்ளத்தை ஈர்க்கிறது.

இடப் புறத்தில் அமைந்த அறையில் –

சுவாமி சச்சிதானந்தா மகாலட்சுமியின் பக்தர்கள் முறையிடும் குறைகளுக்கு, அவர்களின் முகக் குறிப்புகளறிந்து தெரிந்து, புரிந்து மகாலட்சுமியின் மானசீக அருளின் அர்த்தங்களை அருமையாய் அறிவித்து ஆசுவாசப்படுத்துகிறார்.

இன்னோர் அறை –

சுவாமி சச்சிதானந்தாவின் தியான அறை.

யாருக்கும் அனுமதி இல்லாத அந்த அறை, உறைகின்ற மக்களில் உறைகின்ற குறைகளுக்கு நிறைகளின் தேடல் நிகழும் அறை.

சுமைகளின் பல்லக்குத் தூக்கியாய், மாடிவீட்டு மகாலட்சுமியிடம் யாசிக்கச் சென்ற மனம்–

திரும்புகையில் கனமே இல்லாமற் போய், கணங்கள் தோறும் மகாலட்சுமியையே நினைக்கத் தொடங்குகிறது.

இறைவியின் தூதரான –

மறைஞானவாரி சுவாமி சச்சிதானந்தாவின் ஆன்ம ஒளி வீச்சும் அதனுள்ளே அடங்குகிறது. ●

போட்டோ : விஸ்வா ஸ்டில்ஸ்

### என்ன வரும்?

இரண்டு கை தட்டினால்
ஓசை வரும்.

இதயம் திறந்து பேசினால்
ஆசை வரும்.

கடுமை யாக உழைத்தால்
காசு வரும்.

வலியச் சண்டை போட்டால்
வம்பு வரும்.

துளியும் அஞ்சா திருந்தால்
துணிவு வரும்.

பண்பாய் என்றும் நடந்தால்
பணிவு வரும்.

என்ன வரும் என்றே
எண்ண வேண்டாமே!

எண்ணம் தூய்மை ஆனால்
எல்லாம் வருமே!

மழலைக் கவிஞர் பி.வி.கிரி

★ மாணிக்கவாசகர் இறையருள் பெற்ற குருந்தமரம்

"ஸ்ரீரங்கம் ஸ்ரீதரன்"



# மாணிக்கவாசகரும் திருப்பெருந்துறையும்

சைவ சமயம் போற்றும் அடியார்களில் மாணிக்கவாசகரும் ஒருவர். நால்வரில் ஒருவராகப் போற்றப்படும் மாணிக்கவாசகர் பக்தி நெறியில் பலவகை அநுபவங் களையும் மெய்ப்பாடுகளையும் மிகச் சிறப்பாகத் தன்பாடல்களில் விளக்கியிருப்பதே தனிச்சிறப்பாகக் கருதப்படுகிறது. மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகமும், திருச் சிற்றம்பலக் கோவையாரும் எல்லா ராலும் மிகச்சிறப்பாகப் போற்றப் படுகின்றன. இது மட்டுமல்லாமல் திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத் தும்பி, திருத்தெள்ளேணம், திருச் சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோள் நோக்கம், திருப்பொன் னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து, திருத்தசாங்கம் போன்ற பாடல் களையும் சிவபெருமானைப் போற்றி அருளியுள்ளார்.



★ ஆவுடையார் கோயில் கோபுரம்

## திருவாதவூரன்

மதுரைக்கு அருகே உள்ள திருவாதவூரிலே இவர் அவதரித்தார். சிவஞானவதி அம்மையாருக்கும், சம்பு பாதாசாரியாருக்கும் மகவாக அவதரித்த இவர், வாதவூரன் என்னும் பெயரிட்டு அழைக்கப் பட்டார். கல்வி, கேள்விகளில் சிறந்திருந்த இவர் வரகுணபாண்டி யனிடம் அமைச்சராகப் பணியாற்றி



★ மாணிக்கவாசகர் சிவபெருமானின் அருள்பெறும் காட்சி ஓவியம்

னார். கீழக் கடற்கரையில் வந்துள்ள குதிரைகளை வாங்கி வரும்படி ஏராளமான பொன்னையும் பொருளையும் கொடுத்து பாண்டிய மன்னன் வாதவூரரை அனுப்பினான். வழியில் திருப்பெருந்துறை என்னும் தலத்தை வாதவூரர் அடைந்தார். சிவபெருமான் இவரை ஆட்கொண்டருள, குருந்த மரத்தின் கீழ் சிவயோகி வடிவம் கொண்டு எழுந்தருளியிருந்தார். தாம் வந்த கடமையை மறந்து சிவபெருமானைப் பணிந்து அடிமையானார். சிவபெருமானின் அருளைப் பெற்றார்.

### மாணிக்கவாசகர்

சிவபெருமானின் அருளைப் பெற்ற வாதவூரர் கல்மனமும் கரைந்துருகும்படி திருவாசகத்தைப் பாடி அருளினார். ஒவ்வொரு வாசகமும் 'மாணிக்கம்' போல அமைந்தது. அதனால் 'மாணிக்கவாசகர்' என்று இறைவன் பெயர் சூட்டியருளினார். 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' எனச் சிறப்பித்துப் போற்றப்படுகிறது. வடலூர் இராமலிங்க அடிகளாரும், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும் திருவாசகத்தின் சிறப்பினைப் போற்றுகின்றனர்.

### நரி, பரியானது

மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் பெருங்கோயில் அமைத்துப் பணி செய்தார். தாம் வந்த வேலையை மறந்துவிடவே பாண்டிய மன்னன் அவரை, தாம் வாங்கிய குதிரைகளுடன் வந்து சேரும்படி ஓலை அனுப்பினான். மாணிக்கவாசகர் பால் கொண்டிருந்த கருணை

★ கொடுங்கை அழகு காணப்படும் பஞ்சாட்சர மண்டபம் - ஆவுடையார் கோயில்



★ மர வேலைப்பாடு போல் காட்சி அளிக்கும் கொடுங்கை பஞ்சாட்சர மண்டபம் - ஆவுடையார் கோயில்



யால் நரியைப் பரியாக்கி, திருவிளையாடல் செய்தான் இறைவன். வைகைக் கரையை அடைக்க இறைவனே பிட்டுக்காக மண் சுமந்து பிரம்படி பெற்று மாணிக்கவாசகரின் பெருமையை உலகுக்கு உணர்த்தினார்.

### மாணிக்கவாசகரும் தில்லையும்

வாதவூரர் அமைச்சர் பதவியைத் துறந்து திருஉத்திரகோசமங்கை, திருவிடைமருதூர், திருவண்ணாமலை, திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம் முதலிய தலங்களுக்குச் சென்று இறுதியாக சிதம்பரம் சென்றடைந்தார். இறைவனே வேண்டிக் கொண்டதன்படி 'திருச்சிற்றம்பலக் கோவையார்' என்னும் ஞான நூலைப் பாடி அருளினார் திருவாசகம், திருக்கோவையார் இரண்டையும் இறைவன் தமது திருக்கைகளால் எழுதிக் கொண்டு 'அழகிய திருச்சிற்றம்பலமுடையான்' என்று கையெழுத்திட்டு தில்லையில் திருவைந்தெழுத்துப்படியில் வைத்து மறைந்தார். தில்லை வாழ் அந்தணர்கள் அவற்றை எடுத்து மாணிக்கவாசகரிடம் சென்று பணிந்து வணங்கி அவற்றுக்குப் பொருள் விளக்கும்படி வேண்டினர். அதற்கு மாணிக்கவாசகர் பெருமான் தில்லைக்கூத்தனைக் காண்பித்து 'இவனே பொருள்' என அவர்களுக்குக் கூறி ஆனி மகத்திரு நாளில் தில்லை ஆடவல்லானோடு கலந்தார்.

### செப்புத் திருமேனிகள்

மாணிக்கவாசகரின் செப்புத் திருமேனி திருக்கோயில்களில் ஆடவல்லான் திருமேனியோடு வைத்து வழிபடுவதைக் காணலாம். வலக்கை ஞானம் போதிக்கின்ற சின்



★ பஞ்சாட்சர மண்டபத்தின் சிற்ப வேலைப்பாடு

முத்திரை) நிலையிலும், இடக்கை சுவடியை ஏந்திய நிலையிலும் மாணிக்கவாசகர் திருமேனி அமைந்திருக்கும். இடக்கையில் ஏந்தியுள்ள சுவடியில் 'திருச்சிற்றம் பலம்' எனவும் 'நமச்சிவாய' எனவும் பொறிக்கப்பட்டுள்ளதைச் சில திருமேனிகளில் காணலாம்.

### கல்வெட்டுகளில்....

மாணிக்கவாசகர் இயற்றிய திருவெம்பாவை. திருப்பள்ளி யெழுச்சி போன்ற பாடல்களை, திருவொற்றியூர். திருக்கோவிலூர், வழுவூர். நாங்குனேரி போன்ற கோயில்களில் மார்கழி மாதத்தில் பாடுவதற்காக தானம் அளிக்கப் பெற்ற செய்திகள் கல்வெட்டுகளால் உணர முடிகிறது. மயிலாடுதுறை அருகில் உள்ள வழுவூர் கோயிலில் உள்ள கல்வெட்டு மாணிக்கவாச கரை 'திருவாதவூரளி நாயனார்' என்றே குறிப்பிடுவது சிறப்பாகும்.



★ பிட்டுக்கு மண் சுமந்த கதை - ஓவியம், (ஆவுடையார்கோயில்)

### ஓவியங்களில் . . .

மாணிக்கவாசகர் வரலாற்றை ஓவியங்களாகவும் காணமுடிகிறது. சிதம்பரம் கோயில் சிவகாமி அம்மன் ஆலய முன் மண்டபத்தில் காணப்படும் ஓவியங்களில் மாணிக்கவாசகர் குழந்தையாகப் பிறந்தது. குழந்தையை நீராட்டுவது. திருப்பெருந்துறையில் உபதேசம் பெற்றது. நரியைப் பரியாக்கிய படலம் ஆகிய காட்சிகள் காணப் படுகின்றன. திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோயிலிலும் மாணிக்கவாசகர் வரலாறு ஓவிய மாகத் தீட்டப்பட்டுள்ளதைக் கண்டு மகிழலாம்.



★ மாணிக்கவாசகர் சந்நிதி பிராகார விதானத்தில் காணப்படும் ஓவியத்தின் அழகுத் தோற்றம். (ஆவுடையார்கோயில்)

### மாணிக்கவாசகரும் திருப்பெருந்துறையும்

மாணிக்கவாசகரின் வரலாற்றில் முக்கிய இடம் பெற்று விளங்கும்

திருப்பெருந்துறைக் கோயிலைக் காண்போமா? இக்கோயில் ஆவுடையார் கோயில் என அழைக் கப்படுகிறது. புதுக்கோட்டை மாவட் டத்தில் அறந்தாங்கியிலிருந்து 12 கி.மீ. தொலைவில் அமைந் துள்ளது இத்தலம். இங்கு கோயில் கொண்டு விளங்கும் இறைவனைத் தில்லைவாழ் கூத்தா, சிவபுரத்தரசே, திருப்பெருந்துறையுறை சிவனே எனப் போற்றுகிறார், மாணிக்க வாசகர்.

அறபுத சிற்ப, ஓவிய, கலைப் படைப்புகளாலும் வழிபாட்டு முறை யாலும் ஆவுடையார் கோயில் தனித்தன்மை பெறுகிறது. இக் கோயில் மாணிக்கவாசகர் பெரு மானாலேயே அமைக்கப் பட்டதாகும். பின்னர் பாண்டிய மன்னர்கள், இராமநாதபுரம் சேதுபதி மன்னர்கள், புதுக்கோட்டை தொண் டைமான் மன்னர்கள் ஆகியோர் கோயிலின் பல பகுதிகளைக் கட்டியும், விரிவுபடுத்தியும் திருப் பணி செய்துள்ளனர்.

பொதுவாக சிவன் கோயில்கள் கிழக்கு அல்லது மேற்கு முகத்தை நோக்கி இருக்கும். இக்கோயில் தெற்கு முகத்தை நோக்கி உள்ளது. இக்கோயிலில் உருவ வழிபா டில்லை. கருவறையில் ஆவுடையார் மட்டுமே உள்ளது. நந்தி, கொடிமரம் ஆகியவையும் இல்லை. அம்மன் சந்நிதியிலும் உருவம் ஏதுமில்லை. தீப வழிபாடு மட்டும் தான்! மாணிக்கவாசகர் ஜோதியில் கலந் திருப்பதால் தீப ஆராதனையைப் பக்தர்கள் தொட்டு வணங்க அனுமதிக்கப்படவில்லை.

இறைவன் சந்நிதிக்கு முன்னர் படையலுக்கென்று ஒரு பெரிய கற்பலகை உள்ளது. இதில் படையல் அமுதைக் கொட்டிவைக்கிறார்கள். அமுதிலிருந்து வரும் ஆவி



★ மாணிக்கவாசகர்
பிற்காலச் சோழர்
செப்புத் திருமேனி

★ மாணிக்கவாசகர்
13ஆம் நூற்றாண்டு

மட்டுமே ஆண்டவனுக்குப் படைக் கப்படுகிறது. புழுங்கல் அரிசியில் அன்னம் செய்து, பாகற்காயும் கீரையும் சேர்த்து இறைவனுக்குப் படைக்கும் பழக்கமும் இருந்து வருகிறது.

ஆவுடையார் கோயில், கட்டடக் கலைக்கும், சிற்பக் கலைக்கும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கு கிறது. இக்கோயிலில் உள்ள மண்டபங்கள் ஆனந்த சபை, கனக சபை, சிற்சபை, நடனசபை பஞ்சாட்சரம் எனச் சிறப்பாக அழைக்கப்படுகின்றன. திருக்கோ யிலின் வாயிலின் அருகில் உள்ள மண்டபத்தில் வீரபத்திரர், அகோர வீரபத்திரர், காளி, ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி, பிட்சாடனர், சங்கர நாராயணர், இடபாருடர்

ஆகிய தெய்வ வடிவங்கள் தூண் களில் இடம் பெற்று விளங்கு கின்றன. ஒரே கல்லில் ஆன தூண்களில் இச்சிற்பங்கள் கலையழ குடன் காட்சி தருகின்றன.

இதனை அடுத்துள்ள பஞ்சாட்சர மண்டபத்தில் குதிரை மீது இறைவன் வரும் காட்சி அற்புதமாக வடிக்கப் பட்டுள்ளது. அர்ச்சனனுக்கு பாசு பதம் கொடுக்கும் புராணவரலாறும் அழகிய சிற்பமாக விளங்குகிறது. இங்கே மாணிக்கவாசகரை அமைச் சராகவும், ஞானமே வடிவாக விளங்கும் சிவ பக்தராக காட்சி அளிக்கும் தோற்றத்தையும் அற்புத இரு தோற்றங்களையும் கண்டு வழிபடலாம்.

மாணிக்கவாசகருக்கென்று தனிச் சந்நிதி உள்ளது. எல்லாக் கோயில் களிலும் உற்சவ மூர்த்தியாக இறைவனே இருப்பார். ஆனால் இக்கோயிலில் மாணிக்கவாசகரே உற்சவ மூர்த்தியாக இருப்பது குறிப்பிடத்தக்கது. இக்கோயில் திருச் சுற்றில் உள்ள தியாகராஜ மண்டப விதானத்தில் 12 இராசிகளும், அதன் அருகே காணப்படும் கல் சங்கிலி வளையங்கள் அற்புத வேலைப் பாட்டுடன் காட்சி அளிக்கின்றன.



★ மாணிக்கவாசகர்

திருமேனி – சிதம்பரம்

**ஆவுடையார் கோயில் கொடுங்கை**

இக்கோயில் மண்டபங்களின் 'கொடுங்கை' அமைப்பு உலகப்புகழ் பெற்றது. பண்டைக் காலத்தில் சிற்பிகள் ஒரு கோயிலைக் கட்டு வதற்கு முன்னர் "ஆவுடையார் கோயில் கொடுங்கை நீங்கலாக" என ஒப்பந்தத்தில் எழுதித் தருவார் களாம். ஏனெனில் ஆவுடையார் கோயில் கொடுங்கையின் சிற்ப வேலை அமைப்பு அத்தகைய சிறப்பு வாய்ந்தது. கொடுங்கையின் கீழ்ப்பகுதியில் மரச்சட்டங்களைப் போல கருங்கல்லை இழைத்து, அதனிடையே குறுக்காக நான்கு பட்டை, ஆறுபட்டை, உருண்டைக் கம்பிகளை இணைத்து, மரச்சட்டங் களில் குமிழ் உள்ள ஆணிகளை அடித்தது போல சிற்ப வேலைப்பாடு உள்ளது. கல்லிலே, மர வேலைப் பாடு போன்று செய்துள்ள சிற்பி களின் கைத்திறனை எவ்வளவு போற்றினாலும் தகும்! மண்டபத்தில் கொடுங்கை தொடங்கும் இடத்தில் கனமாகவும், வர வர முடியும் இடத்தில் ஓர் அங்குல கனமாக சன்னமாகவும் செதுக்கி அமைக் கப்பட்டுள்ளது. மரத்திலே கூட இவ்வளவு சிறப்பாகச் செய்ய முடியுமா என்று எண்ணத் தோன்றும்!

வழிபாட்டு முறையிலும், கலைச் சிறப்பிலும் தனிப்பெருங்கோயிலாக ஆவுடையார் கோயில் விளங்கு கிறது.

*"சாதி குலம் பிறப்பு என்னும்*
*சுழிப்பட்டுத் தடுமாறும்*
*ஆதமிலி நாயேனை*
*அல்லலறுத்து ஆட்கொண்டு*
*பேதை குணம் பிறர் உருவம்*
*யான் எனது என் உரை*
*மாய்த்துக்*
*கோது இல் அமுது ஆனானைக்*
*குலாவுதில்லை கண்டேனே"*

என்று மாணிக்கவாசகப் பெருமான் போற்றும் திருப்பெருந்துறைக் கோயிலுக்குச் சென்று வழிபடுவோம்! நலமடைவோம்! ●





# அரங்கனை ஆராதிப்போம்

நீலவன்

ஒரு காலத்தில் –

சமணம், பௌத்தம் சல்லி வேர்களாயிருந்து, அவை பட்டுப்போய்ப் பின்னர் வைணவம் ஆணிவேராய் ஊன்றிய ஊர்.

சுற்றிலும் கருங்கல் திருமதில் சுவர்களின் பாதுகாப்பில் ஆன்மிகம் தழைத்த, தென்னகத்தின் வெகு புராதனப் பெருமை வாய்ந்த வைணவம் காத்த ஊர்.

மூன்றாம் நந்திவர்மன் (874 – 906) காலத்தில் இது 'வித்தூர்'

அவனது மகன் கம்பவர்மன் (958 – 963) காலத்தில் இது 'நந்தி கம்ப சதுர்வேதி மங்கலம்'

குலசேகர சம்புவராயர் (1306 – 1330) காலத்தில் 'விச்சூர்', 'கீழை விச்சூர்'.

பின்னர் 'பள்ளி கொண்டை' திரிந்ததால் இப்போது 'பள்ளி கொண்டா'

இங்கே மூலவர் –

பள்ளிகொண்ட பெருமாள்; உத்தர அரங்கநாத சுவாமி.

குலசேகர சம்புவராயரின் வரலாறு கூறும் பதினைந்து கல்வெட்டுகளில் எட்டு கல்வெட்டுகள் இவ்வாலயத்திலேயே உள்ளன.

எட்டுக் கல்வெட்டுகள் –

அவர்தான் இவ்வாலயத்தைப் புதுப்பித்தவர் என்பதை அறுதியிடுகின்றன.

திருமால் இங்கு பள்ளி கொண்டது ஒரு சுவையான வரலாறு.

அம்பரீஷர் ஒரு ராஜரிஷி.

அவர் ஸ்ரீமந்நாராயணனை நேரில் தரிசிக்க பத்மினியாற்றின் தெற்கேயுள்ள பீஜாசலம் எனும் மலையில் கடுந்தவம் புரிந்தார். தரிசனம் கிடைக்கவில்லை. யாகம் செய்தார். அதன் பயன் பத்மினியாற்றில் பால் பெருகியோடிற்று.

அப்பாலைக் கொண்டு யாகத்தில் பாயசம் முதலான செய்யப்பட்டன. அன்றுமுதல் பத்மினியாறு பாலாறானது.

யாகத்தின் முடிவில் அசரீரி ஒலிக்கிறது "சத்ய விரத க்ஷேத்திரத்தில் (காஞ்சியில்) பிரமன் அசுவமேத யாகம் செய்யவிருக்கிறான். அப்போது சரசுவதி சினமுற்று நதியாய் உருவெடுத்து அந்த யாகத்தைக் குலைக்க பெருவெள்ளமாய்ப் பாலாற்றில் புரண்டு வருவாள்...

★ பள்ளிகொண்டா அருள்மிகு அரங்கநாதசுவாமி ஆலயக் கோபுரத் தோற்றம்.

நுழைவாயிலுக்குள் பள்ளி கொள்ளும் அரங்கநாத சுவாமி

★ வேலூர் - பெங்களூர் நெடுஞ்சாலையில் வேலூரிலிருந்து 23 ஆவது கி.மீ. தூரத்தில் 'பள்ளி கொண்டா' உள்ளது.

"அவ்வெள்ளத்தைத் தடுக்க பாலாற்றின் குறுக்கே திருமால் படுத்துத் தடுப்பார். அப்போது நீர் அவரைத் தரிசிப்பீர்"

அவ்வாறே தரிசித்த அம்பரீஷர் --

பெருமானை இங்கேயே தங்கி எல்லார்க்கும் அருள்புரியுமாறு வேண்டினார். ஜடாயுவின் தமையன் சம்பாதி பீஜாசலத்தில் தவமிருந்த போது பட்சித் திருக்குளத்தில் ஒரு பொற்றாமரை மலரில் தோன்றிய வளான செங்கமலவல்லி எனும் செண்பகவல்லியை வளர்த்தார்.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாளைப் போல் 'மானிடருக்கு என்று பேச்சுபடில் வாழ்கிலேன்' என்று ஒருமித்த சிந்தையோடு பெருமான் மீது காதலுள்ள செண்பகவல்லியை, பங்குனி உத்திரத்தன்று பெருமா ளுக்கு மணம் முடித்து வைத்தார் சம்பாதி.

கஜேந்திர நதியும், கௌண்டன்ய நதியும், க்ஷீரநதி எனப்படும் பாலாறும் கூடுமிடமான திரிவேணி சங்கமம் பள்ளி கொண்டா.

எண்பத்தைந்து சென்ட் நிலப் பரப்பில் கிழக்கு நோக்கி அமைந்த இவ்வாலயத்தில் ஐந்து நிலைகள், ஏழு கலசங்கள் கொண்ட ராஜகோபுரமும், கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்குப் பிராகாரங்களும் ராஜகோபுரத்தின் வடகிழக்கில் நடுமண்டபத்துடன் வியாச புஷ்கரணி எனும் திருக் குளமும் உள்ளன.

இவ்வாலயக் கருவறையின் உட் புறம் நீள் வட்ட வடிவமானது. நடுவே செவ்வக வடிவ அதிட்டானத்தின் மேல் பாம்பணைமேல் பள்ளிகொண்ட பெருமாள், தம் திருவடியை வடக்கில் நீட்டி, தெற்கில் ஐந்து தலைப் பாம்பின்மேல் அணைத்து எழிலார்ந்த முகம் சற்றே வலப்புறம் திரும்பிய நிலையில் மேல் நோக்கியவாறு, வலத் திருவடியை வலப்புறம் சாய்த்தும்,



★ குலசேகர சம்புவராயர் காலத் துக் கல்வெட்டு

இடத் திருவடியை மேல் நோக்கியும் மானிட வடிவில் வலக் கரத்தை வளைத்து அரவணையில் சாய்த்தும், இடக் கரத்தை நீட்டியும் --

சென்னியில் நீள் கிரீடமும், காதுகளில் மகரகுண்டலங்களும், அகன்ற மார்பில் மணிச்சரமும், சரப்பளியும், கைகளில் வளைகளும், நெற்றியில் முத்துப்பட்டமும், இடத் தோள் தொடங்கிக் கீழ்வயிறு வரை புரிநூலும், மேல் வயிறு சுற்றி உதர பந்தக் கச்சையும், இடையிலிருந்து முழங்காலுக்குக் கீழ் வரை பீதாம் பரமும், இடையில் முடிச்சுகள் செறிந்த ஆடையும், திருப்பாதங்களில் பாதச் சரமும்... கொண்டு 'வைகானச நாகமிசைத் தேவ பெருமானாய்' சயனத்திருத் தோற்றமளிக்கிறார்.

பெருமாளின் கொப்பூழில், வளைந்து கிடக்கும் ஆதிசேடனின் மேல், பிரம்மா தாமரை இருக்கையில் பத்மாசனத்திலிருக்கிறார். பிரம்மாவின் வலப்புறத்தில் ஸ்ரீதேவி நாச்சியார் அமர்ந்தும், இடப்புறத்தில் அவரது திருவடிகளைப் பற்றியும் ஸ்ரீபூதேவி நாச்சியார் கோலாகலத்தை அள்ளித் தெளிக்கின்றனர்.

அரங்கனைத் தரிசித்து வெளிப் பட்டதும் கண்களில் களிப்பைக் கூட்டு பவர், இசுலாமியர்ப் படையெடுப்பின் போது மூலவர் ஸ்ரீஅரங்கநாதரைக் காப்பாற்றிய பெருமைக்குரியவரான உருதுச் சொல்லிற்கேற்பச் சிறிய மூர்த்தியாய் ஆதிசேடன்மேல் சய னிக்கும் 'சோட்டா அரங்கநாதர்'

கருவறையின் தெற்கில் கோஷ்ட பஞ்சரத்தின் கிரீவ கோஷ்டத்தில்--

அழகுத் தலைக்கோலமும், இடையில் எளிய ஆடையும் கொண்டு பக்தி ததும்பும் பணிவில் தோய்ந்து நிற்கும் 9.5 செ.மீ. உயர, 4.5 செ.மீ. அகல உருவம் 'குலசேகர சம்புவராயர்' என்றும் அத்தூணை நிர்மாணித்த 'கொடையாளி' என்றும் கருத்துகள் நிலவுகின்றன.

இவ்வாலயத்தில் --

இராமானுஜர் சந்நிதி, மணவாள முனிவர் சந்நிதி, அரங்கநாயகி சந்நிதி, ஸ்ரீராமர் சந்நிதி, கண்ணன் சந்நிதி, ஆண்டாள் சந்நிதி, ஆஞ்சநேயர் சந்நிதி, கருடாழ்வார் சந்நிதி, ஆழ்வார் சந்நிதி என்று சந்நிதிகள்...

ஆலய வடக்குப் பிராகாரத்தில் தீர்த்தக் கிணறு. தெற்குப் பிராகா ரத்தில் மடப்பள்ளி, பள்ளியறை....

செண்பகவல்லியைச் செங்கண் மால் மணமுடித்ததால் மணநாள்களி லெல்லாம் மணங்கள், நிறையவே நடைபெறுகின்றன.

இல்லாமற்போன கருங்கல் மதிற் சுவர்கள் இருந்திருந்தால் இன்றும் பேரழகு பூண்ட பேராலயமாய் 'பள்ளிகொண்டா' மூச்சுக்கு முச்சு பேசப்பட்டிருக்கும். இது பேருண்மை.

படங்கள்: விடிவெள்ளி ஆறுமுகம்



# ஆன்மாவை மலர வைக்கும் வாழ்க்கை

கர்மயோகி

விதை முளைத்து செடியாகி, மரமாகி, தழைத்து, கிளை கிளையாக வியாபித்து, பலன் தரும் முன் மரம் மலர்கிறது. வளர்ச்சியின் முடிவு பலன்-பழம். முடிவுக்கு முந்தைய நிலை மலர்ச்சி. மலர்ந்தால் பலன் தொடரும். வளர்ச்சி முதல் நிலை, மலர்ச்சி முடிவான நிலையின் முதற்பகுதி.

ஆன்மாவுக்கு விழிப்பு, வளர்ச்சி விடுதலையுண்டு. மனிதன் ஆன்ம விழிப்பற்றவன். தான் செயல்படுவதாக அறிவது விழிப்பற்ற நிலை. இறைவன் செயல்படுவதாக அறிவது ஆன்ம விழிப்புற்ற நிலை. விழிப்பு வளர்ந்தால் தவம் பலிக்கும். தவம் பலித்தால் மோட்சம் கிடைக்கும். இந்திய யோக மரபில் ஆன்ம விடுதலையே இலட்சியம். ஆன்மா மலருதல் என்ற கருத்து நம் நாட்டுக்குப் புதியது. உலகுக்கே புதியது. அதுவே ஸ்ரீ அரவிந்தம். விழித்து, வளர்ந்த ஆன்மா, விடுதலையை நாடாவிட்டால், அது மலர்ந்து கனியும் வாய்ப்புண்டு. ஆன்மிக மலர்ச்சி, மனத்தில் அல்லது வாழ்வில் அல்லது உடலில் ஏற்பட வேண்டும். வாழ்வை எப்படி வாழ்ந்தால் அது ஆன்மாவை மலர வைக்கும் என்பது தலைப்பு.

வாழ்வின் நோக்கம் உயிரோடிருப்பது (Survival). உயிரோடிருக்க உடலும், மனமும் வளர்வதவசியம். மனம் வளர்ந்தால் வாழ்வு மலரும். ஆன்மா விழிப்புற்றாலும் வாழ்வு மலரும். உடலைப் பேணி வளர்ப்பவன், Muscle man தடியன், முரடன், பயில்வானாவான். உடல் வளர்ந்து வாழ்வு மலர உறுதுணையாக இருக்க உடல் வலிமையை நாடுவதைவிட, ஆரோக்கியத்தை நாடவேண்டும். உடல் தன் சக்தியை வாழ்வு சிறக்க அளிப்பதோ, அறிவு உயர நல்குவதோ உடலுக்குரிய உயர்ந்த முறை. அதேபோல் வாழ்வு சக்தியால் திளைத்தால் இன்பம் நுகரலாம். அதற்கு சிற்றின்பம் எனப் பெயர். சுவையான உணவு, ஆடம்பரமான வாழ்வமைப்பு, அதிகாரமான செல்வாக்கு, அளவு கடந்து அனுபவிக்கும் சந்தர்ப்பம் வாழ்வை அதன் போக்கில் வளர உதவும். தன் இச்சையாக வளரும் வாழ்வு வரவுக்கு மீறிய செலவை மேற்கொள்வதால்

உடலுக்கு ஊறு செய்யும். மனம் சிந்தனையினின்று விலகி உணர்ச்சியால் செயல்படும் நிலை ஏற்படும்.

கட்டுப்பாடான வாழ்வு உடலுக்கு உறுதியும், மனத்திற்குத் தெளிவையும், திண்மையையும் கொடுக்கும். கட்டுப்பாடான வாழ்வு விரதமான வாழ்வு. இவ்வாழ்வு ஆன்ம விழிப்புக்கு வழி செய்யும். தொடர்ந்தால் தவமாகி, மோட்சம் கிட்டும். கட்டுப்பாடான வாழ்வு ஆன்ம விடுதலைக்கு அடிக்கல்லாகும். ஆன்மா மலர அது மனத்தில் ஜோதியாக உணர்வில் வீரமாக, உடலில் சித்தியாக வெளிப்படவேண்டும். மனம் வளரும். தானே மலரக் கூடியதன்று. மனத்தின் ஆன்மா விழித் தெழுந்தால், மனம் மலரும். மனத்தில் ஆன்மா ஜோதியாக எழுந்தால் மேதை பிறப்பான். உணர்வில் ஆன்ம விழிப்பேற்பட்டால், வீரன் எழுவான். உடலில் ஆன்மா ஜனித்தால், மனிதன் தெய்வமாக மாறுவான். அவை ஆன்மிக மலர்ச்சியின் பல உருவங்களாகும்.

சிறு குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்புதல் சிரமம். அழாமல் போகும் குழந்தைகள் குறைவு, இல்லை எனலாம். படிப்பை விளையாட்டாகவே கற்கும் முறையில் குழந்தைகள் சாப்பிடுவதைவிட, விளையாடுவதைவிட, படிக்க விரும்புகின்றனர் என்று கண்டனர். இம்முறையில் குழந்தைகள் படிப்பைத் தாமே நாடுகின்றனர். விரும்புகின்றனர். இம்முறையால் குழந்தைகள் மனம் வளர்ச்சி அடைவதுடன் மலரவும் செய்யும்.

அசுத்தமான வீட்டைச் சுத்தமாக மாற்றினால் அது வீட்டிலுள்ளவர்களுக்கு வளர்ச்சி. வீட்டிற்கு நல்ல மாற்றம். அது நாகரிகமடைவது என்று அறிகிறோம். நமக்குத் தெரிந்த அசுத்தமான வீட்டை நினைத்துப் பார்த்தால், வீட்டில் நுழையும்பொழுது திண்ணையில் குப்பையிருக்கும். கதவைத் திறக்க அதன் மீது கை வைத்தால் கையில் பலவிதமான அழுக்கு ஒட்டுவது தெரியும். கதவைத் தாண்டினால், பழைய பேப்பர், கிழிந்த சாக்கு, உடைந்த பொம்மை, நேற்று பெருக்கிய குப்பையை மூலையில் குவித்து வைத்தது நமக்கு வரவேற்பு தரும். அதைத்தாண்டி உள்ளே நுழைந்தால், அழுக்குத் துணி கொடி நிறைய பல நாள்களாக சேர்ந்து தொங்குவதும், அழுக்கு வாடை வருவதும் தெரியும். பொருள்கள் அலங்கோலமாக இருக்கும். வீட்டிலுள்ள சிலர் தலை பரட்டையாக இருக்கும். மேஜைமீது தூசு நிறையப் படிந்திருக்கும். பாத்திரங்கள் சுத்தமாக இருக்காது. இந்த வீட்டை மற்ற வீடுகள்போல் சுத்தமாக, அழகாக மாற்றினால் ஒரு புரட்சி. வீட்டிலுள்ளவர்க்கு நாகரிக வளர்ச்சி. இதற்கடுத்த கட்டம் மலர்ச்சி.

மனம் மலர்ந்து, மனிதர்களை ஆன்மாவாகவும், பொருள்களைப் பிரம்மமாகவும், தானியத்தை லக்ஷ்மியாகவும், தரையைப் பூமாதேவியாகவும் கருதி சுத்தம் செய்யும்பொழுது, தரை சுத்தமாக இருப்பதைவிட தரை சுத்தத்தால் சந்தோஷப்படவேண்டும். பொருள்களை வரிசையாக, சுத்தமாக வைத்தால் அவை ஆனந்தம் பெறும் என்ற நோக்கோடு செய்தால் நம் ஆன்மா மலரும். அவ்வாழ்க்கை நமது ஆன்மாவை மலரச் செய்யும்.

முனிவர், சாமியார் என்றால் பொதுமக்கள் அவரை அணுகத் தயங்குவார்கள். சக்தியுள்ளவரானால் பயப்படுவார்கள். ஏனெனில் அவர் கோபப்பட்டால் யார்மீது கோபப்படுகிறாரோ அவருக்கு ஆபத்து. முனிவர் எனில் சபிப்பார் என மக்கள் நம்புகிறார்கள். அது பெரும்பாலும் உண்மை. கடுமையான தவம், நெடுநாளைய உண்ணாவிரதம், நியம நிஷ்டை முனிவருக்கு தெய்வ சக்தியை அபரிமிதமாக அளித்தபோதிலும், அவர் கோபத்தைக் குறைப்பதில்லை. சில சமயம் வலுப்படுத்தும். ஆன்மிக வளர்ச்சி, குணக்குறைகளிலிருந்து ஒருவரை விடுதலை செய்வதில்லை. இதற்கு மாறான முனிவர்கள் உண்டு. அவர்களை சாது என நாம் சொல்வோம். இனிமை நிறைந்தவராகவும், கருணை வடிவமாகவும், பொறுமையின் இருப்பிடமாகவும் உள்ளவர்கள் இவர்கள். இவர்கள் ஆன்மா வளர்ச்சியடைந்ததுடன், மலர்ச்சியும் அடைந்ததால், பொறுமையும், கருணையும் பூத்துள்ளன. ஆன்ம வளர்ச்சி இனிமை பயக்குமானால் அதைத் தரும் வாழ்வு ஆன்மிக மலர்ச்சிக்குதவும்.

வாழ்வின் செயல்களை நாம் ஆராய்ந்து இதுபோல் அமைக்க முடியும். முனிவருக்கு சக்தி வந்தபின் அது கடுமையாக வெளிப்படுவது அவருடைய குணக் குறைகளால். குறைகளை நீக்கினால் சக்தி சுத்தமாக வெளிப்படும். கெட்ட குணத்தை விட்டு, நல்ல குணத்திற்கு வருதல் அவசியம். ஆனால் நம்மைப் பொறுத்தவரை இது வளர்ச்சியாகுமே தவிர, மலர்ச்சிக்குதவாது.

### நல்ல குணத்தையும் விட முடிந்தால்தான் மலர்ச்சியுண்டு

நல்ல குணத்தை விடுவதெனில் என்ன? தவறு என்பதும், தவறாகக் காண்பதும் வேறு. திருடனைத் தண்டிப்பது, அடிப்பது, தவறு எனப்பட்டாலும் தவறன்று. திருடனையும் நான் அடிக்க மாட்டேன். என்னால் எவரையும் அடிக்க முடியாது என்பவர் நல்லவர். உத்தம குணம் உடையவர். அந்த உத்தம குணத்தைவிட்டு, திருடனைத் தண்டிக்கும் கடமையை ஏற்க முடிய வேண்டும். அதுவே நல்ல குணத்தை விடுவதாகும். கெட்டதற்கு அடிமைப்படுதல் கெட்டது. நல்லதற்கு அடிமைப்படுவது நல்லதன்று. ஏனெனில் அடிமைப்

படுதல் நல்லதன்று. இறைவன் அளித்த பூரண சுதந்தரம் அதனால் சுருங்கும்.

பெரிய சம்பாத்தியம் இருந்தவர் ஏதோ காரணத்தால் அதை இழந்தால், மீண்டும் பெறுவது. அவர் அதை மீண்டும் பெற உதவுவது வளர்ச்சி. எந்தக் குறையால் அவர் அதை இழந்தாரோ அக்குறையை அழிப்பது வளர்ச்சியைவிட நல்லது. அக்குறையை, நிறைவாக மாற்றுவது மலர்ச்சி. வாழ்வு அதற்குதவுமானால், நாம் விரும்பும் வாழ்வாகும் அது.

ரேஸுக்குப் போவதால், ஒருவன் செல்வம் அழிந்து விட்டதென்றால், இனி அவன் ரேஸை மறப்பது சிறப்பு பெற்ற செல்வத்தை இழந்தது போக, இழந்ததைப் பெறுவது நல்லது. பெற்ற பின்னும் ரேஸுக்குப் போகும் ஆசை மனத்திலிருக்கும். அது மறைந்திருக்கும். அந்த ஆசை தவறென அறிவது அடுத்த கட்டம். அது அழிவது உயர்ந்தது. இவற்றை வாழ்வில் காண்பதரிது. நாம் விரும்பும் வாழ்வு அதுவன்று. ரேஸுக்குப் போகும் ஆசையை மறப்பதோ, அழிப்பதோ, வேறு வகையில் திருப்புவதோ வாழ்வுக்குப் பெரும் பயன் தரும் என்றும். அவை ஆன்மா மலர உதவாது. மனிதனுடைய சக்தி ஆசை மூலம் வெளிப்பட்டால் வளர்வது ஆசை, உணர்வு, பிராணன் எனப்படுபவை. இந்த ஆசை என் வாழ்வை வளப்படுத்துகிறது என்று நினைத்து அதைப் பூர்த்தி செய்பவனுடைய அறிவு "வாழ்வு வாழப்பட வேண்டியது. அனுபவித்தற்குரியது" என்பதாகும். அது மாறி, அறிவு, 'வாழ்வு முறையாக இருந்தால் தான் நீடிக்கும். ஆசை வாழ்வை அழிக்கும்' என்று ஏற்பட்டால் அம்மனமாற்றம் அறிவு வளர உதவும். ஆன்மா வளர, மலர ரேஸுக்குப் போகும் ஆசையை என்ன செய்வது? ரேஸுக்குப் போவதில் தீவிரம் உள்ளது. அது விரும்பத்தக்கது என்ற அறிவுள்ளது. அது விரும்பத்தக்க தன்று என்ற புது அறிவு வந்து உயர்ந்து, நிதானம் தரும் வாழ்வு நீடிக்கும். ரேஸுக்குப் போகும் வாழ்வு நீடிக்காது என்றால் ரேஸுக்குப் போகும் தீவிரம், நிதானத்தை வளர்க்கும்படி மாறவேண்டும். தீவிரம் நல்லது. ரேஸுக்குப் போக அது உதவக்கூடாது. பொறுமை, நிதானத்தை வளர்க்க தீவிரம் உதவவேண்டும். படபடப்பு, அவசரம், ஆசை வெளிப்படும் இடங்களில் அவற்றைத் தீவிரமாகக் களைந்து நிதானம், பொறுமை, பற்றற்ற மனம் வளர அதே தீவிரத்தைப் பயன்படுத்தினால் அது. திருவுருமாற்றமாகும்

### திருவுரு மாற்றம்

திருவுரு மாற்றத்தைத் தரும் செயல்கள் ஆன்மா மலர உதவும். அவ்வாழ்க்கை நாம் நாடுவது.

1956இல் இந்தியாவுக்கு பற்றாக்குறையால் ஆபத்து. அடுத்த பத்தாண்டுகளில் பல இலட்சம் பேர் இறப்பார்கள் என்ற ஆராய்ச்சியின் முடிவு கிடைத்தது. நாட்டின் முன்னுள்ள பிரச்சினை பஞ்சத்தைத் தவிர்ப்பதெப்படி? என்பதுதான். 100 கோடி ரூபாய்க்கு கோதுமை, அரிசி வாங்கினார்கள். அந்த ஆண்டு பிரச்னை தீர்ந்தது. ஆபத்து விலகியது. அடுத்த ஆண்டு அதிகமாகவும், அதற்கடுத்த ஆண்டு மேலும் அதிகமாகவும் உணவு தானியத்தை வாங்கினார்கள். பஞ்சம் தவிர்க்கப்பட்டது. சர்க்காருக்குப் பாராட்டு. இது நல்லது.



இதைவிட உயர்ந்த நல்லதொன்றுண்டு என சர்க்கார் அதை நாடியது. உபரி தானியத்தை நாமே உற்பத்தி செய்ய புது ரக விதை, உரமிடுதல், உணவு தானியக் கழகம், விஞ்ஞான விவசாயம் ஆகியவற்றை இந்திய சர்க்கார் நாடியது. அதன் விளைவாக உற்பத்தி நிரந்தரமாகப் பெருகியது. பஞ்சம் இனியில்லை என்ற நிலை ஏற்பட்டது. விவசாய மலர்ச்சிக்கு வழி செய்தவுடன் நாடு மலர்ந்தது. இதைப்பசுமைப்புரட்சி என்றனர். 10 ஆண்டுக்குப் பின் விவசாய வளர்ச்சியின் பயனாய் தொழில் அபிவிருத்தியாயிற்று. மேலும் 10 ஆண்டு கடந்தபின் மேலும் தொழில் அபிவிருத்தியால் நாட்டில் வியாபாரம் பெருகி,வெளிநாட்டு மூலதனம் கோடிக்கணக்காய் நம்மை நாடி வந்தது. பஞ்சத்தைத் தவிர்க்கும் முறை பஞ்சத்தை மட்டும் தவிர்க்கலாம். விவசாயத்தையும், வியாபாரத்தையும், தொழிலையும், நாட்டையும், கல்வியையும் அதன்மூலம் வளர்க்க வேண்டுமானால் அதற்கு உதவுவது-

**மலர்ச்சியாகும்.**

நம் கரணங்களில் தாழ்ந்தது உடல். உயர்ந்தது ஆன்மா. ஆன்மா மலரும்படி வாழ்வை அமைத்துக் கொண்டால், அது நிரந்தரமான நல்ல பயனை அளிக்கும். அன்னையை நாடினால், ஆன்மிக மலர்ச்சி அன்றாட வாழ்வில் தானே உதயமாகும். ●

# அரச மரத்தின் ஆற்றல்

டாக்டர் நா. மகாலிங்கம்

அஸ்வத்தம் என்பது அரச மரமாகும்.

வேள்விக்கு இது மிகவும் பயன்படுவதால் யாக்ஞக விருட்சம் என்று பெயர்.

இதன் குச்சிகள் ஹோமத்துக்குச் சிறப்பானவை.

இதன் கிளையிலிருந்து உண்டாகும் அக்னியே அக்னி ஹோத்ரம் இஷ்டி, யாகம் இவைகட்குப் பயன்படும்.

அரச மரத்துக்கு அரணி என்ற பெயரும் உண்டு.

பாகவதத்தை பரீட்சித்துக்கு உபதேசித்த சுகாசாரியார் அரணியிலிருந்து தோன்றியதால் "ஆரணேயர்" என அழைக்கப்பட்டார்.

பாரதத்தில் "ஆரணேய பர்வா" என்று கூறப்படுகிறது.

அரச மரத்தை வெட்டுவதோ எரிப்பதோ கூடாது.

ஒரு சமயம் அக்னி பகவான் மனம் வெறுத்து தேவ சபையிலிருந்து வெளியேறினார்.

அக்னியைச் சமாதானப்படுத்தத் தேவர்கள் பின் தொடர்ந்தனர்.

குதிரை வடிவில் ஓடிச் சென்ற அக்னி தேவன் தன்னை ஓர் அரச மரத்தில் மறைத்துக் கொண்டார்.

குதிரைக்கு வடமொழியில் அசுவம் என்று பெயர்.

அசுவம் சென்று மறைந்ததால் அசுவத்த விருட்சம் என்று அரச மரம் பெயர் பெற்றது.

நான்முகனின் உத்தரவால் இது மரங்கட்கு அரசனா கியது.

பகவத் கீதையிலும் கண்ணன் 'மரங்களில் நான் அரச மரம்' என்று உபதேசித்தார்.

ஒரு சமயம் அரச மரத்தின் பூஜா பலனால் பிப்பலாதர் என்ற ஒரு முனி குமாரன் பிறந்தான்.

இவனது தகப்பனார் அரக்கர்களால் கொல்லப்பட்டதால் கோபித்த இவர், அரச மரத்தின் அடிப்பகுதியிலிருந்து கிருத்யா என்ற ஒரு தேவதையை உண்டாக்கி ஏவினார்.

அது ராட்சஸ குலம் மீதமின்றி அழிக்கவே பிரம்மதேவர் அத்தேவதையை சமுத்ரத்தின் மத்தியில் எரியச் செய்தார்.

மேற்கண்ட தேவதை அரச மரத்தடியில் தோன்றியதால் அரச மரத்தை, அதுவும் குறிப்பாக அதனடிப் பாகத்தை நினைத்தபோதெல்லாம் தொட்டு வணங்குவது தவறு என்று ஒரு கருத்து வழங்கப்படுகிறது.

சனிக்கிழமை மட்டும் அரசை அணைத்தும் தழுவியும் வழிபடலாம் என்று கூறப்படுகிறது.

புத்திரப் பேற்றுக்கு அரசமர வழிபாடு ஒரு வரப்பிரசாதமாகும்.



அரசமரம், வேப்பமரம், மாமரம் முதலியவற்றை வளர்ப்பதே புண்ணியமாகக் கருதப்படுகிறது.

புத்ரன், செல்வம், ஆரோக்யம் முதலியவற்றை விரும்பும் மனிதன் இரண்டு அரசுகளை ஒன்றாக வைத்துப் பிரதிஷ்டை செய்ய வேண்டும்.

அச்சமயம் தனியே பாராயணம், பூஜை, ஹோமம் முதலியன செய்ய வேண்டும்.

இதற்கு ரட்சையாக பக்கத்தில் வேப்பமரம் ஒன்றும் வளர்க்க வேண்டும்.

நாள்தோறும் தண்ணீர் ஊற்றி வரவேண்டும்.

ஆயிரம் இலைகள் தோன்றியபின் அதற்கு விதிப்படி உபநயனம் செய்து பூணூல் அணிவித்து ப்ரும்மோபதேசம் செய்ய வேண்டும்.

மான்தோல் (சிறிது) பலாச தண்டம் முதலியவற்றையும் சமர்ப்பிக்க வேண்டும்.

பிறகு சிறிது காலம் கழித்து இரு அரச மரங்களுக்கும் விவாஹம் செய்து வைக்கவேண்டும்.

இவ்விதம் செய்து ஒரு மண்டல காலம் ஆசாரத்துடன் பிரதட்சணம் செய்து வரவேண்டும்.

இதனைச் செய்வதால் மலடிக்கும் குழந்தை பிறக்கும் என்பது பிரத்ட்சயமாக ஆன்றோர் கண்ட உண்மையாகும்.

அரசமர வழிபாட்டால் பிறந்தவர்கட்கு அசுவத்த நாராயணன் என்று பெயர் சூட்டுவதும் உண்டு.

பிரம்ம சர்மா என்ற வேதியர் ஒருவர் நிரம்பக் கல்விச் செல்வம் பெற்றும், கல்விக்கேற்ற அனுஷ்டானம் இல்லாமல் பணத்தாசையிலும், பிறரை ஏமாற்றுவதிலுமே காலம் கழித்தார்.

ஆனால் மனைவியின் வற்புறுத்தலால் இரண்டு அரச மரங்களைப் பயிரிட்டு வழிபட்டார்.

இதன் பலனாக இவ்வேதியர் மரணமடைந்து யமலோகம் செல்லும்போது ரட்சணம் செய்யப்பட்டார்.

பொதுவாக அமாவாசையும் திங்கள் கிழமையும் சேர்ந்து வரும் நாள்களில் அரசமரப் பிரதட்சணம், வழிபாடு இயற்றி மித உணவு உண்டு (பலகாரம்) தானம் முதலியன செய்வது மிகவும் உயர்ந்த பலன் தரும்.

வலிமையும் சக்தியும் உள்ளவர்கள் இரவு கண்விழித்து பகவான் ஹரியைத் தியானிப்பதும் மேலும் உத்தமம்.

பிரதட்சணம் என்பது உடலால் பிரணவத்தை எழுதுவது என்று ஐதீகமுண்டு.

அமாவாசையும் சோமவாரமும் கூடிய நாளில் அரச மரத்தை நூற்றெட்டு பிரதட்சணம் செய்ய வேண்டும்.

ஒவ்வொரு பிரதட்சண முடிவிலும் விருட்சத்தின் முன்பு ஏதாவதோர் இனிப்பையோ, பழத்தையோ சமர்ப்பிக்க வேண்டும்.

பிறகு பூஜையைப் பூர்த்தி செய்து தூப தீபம், கற்பூரம் காட்டி நமஸ்கரிக்க வேண்டும்.

சக்திக்குத் தக்க தட்சணை தந்து உணவளித்து பூஜை செய்து வைத்தவரைத் திருப்திப்படுத்த வேண்டும்.

இவ்விதம் குறைந்த பட்சம் மூன்றாண்டுகளாவது அமாவாசையும் திங்களும் கூடிவரும் நாளில் செய்தால் கோரியது கிட்டும்.

பன்னிரண்டு வருடம் செய்வதும் உண்டு.

முதல் வருடமும், பன்னிரண்டாவது வருடமும் மட்டும் மும்மூர்த்திகளையும், எட்டு திக் பாலகர்களையும் ஆவாஹனம் செய்து பூஜித்து விரதம் இருந்து மறுநாள் புனர் பூஜை செய்து அஷ்டாட்சர மந்தரத்தால் ஹோமம் செய்து பாரணை (உணவு) செய்ய வேண்டும். இதற்கு அமா ஸோமவார விரதம் அல்லது அசுவத்த நாராயண விரதம் என்று பெயர்.

இதன் சிறப்பை மஹாபாரதம் கூறுகிறது.

ஒரு சமயம் காஞ்சிபுரத்தை ரத்னஸேனன் என்ற அரசன் ஆண்டு வந்தான்.

அப்போது தேவஸ்வாமி என்ற அந்தணரும் தனவதி என்ற அவரது மனைவியும் அறநெறி பிறழாது வாழ்ந்து வந்தனர்.

இவர்களுக்கு ஏழு புதல்வர்களும் குணவதி என்ற பெண்ணும் உண்டு.

ஏழு புதல்வர்கட்கும் திருமணமாகி மருமகள் எழுவர் அந்தணர் வீடு வந்தனர்.

அப்போது ஒரு சமயம் துறவி ஒருவர் பிட்சை கேட்டு வந்தார்.

இவர் வீட்டில் மருமகள் எழுவரில் யார் பிட்சை போட்டாலும் துறவி "தீர்க்க சுமங்கலீ பவா" என்று வாழ்த்துவார்.

ஆனால் தேவஸ்வாமியின் மகள் குணவதிக்கு மட்டும் 'தர்மவதியாக இரு' என்று ஆசிகளை வழங்குவார்.

இதனால் கவலையுற்ற குணவதி இதனைத் தன் தாயிடம் தெரிவித்தாள்.

இதனை குணவதியின் தாய் தனவதி கவனித்து துறவியிடம் பணிந்து காரணத்தைக் கேட்டாள்.

வற்புறுத்திக் கேட்கவே துறவி, "குணவதிக்கு மணமாகி ஸப்தபதி என்ற கர்மா நடக்கும்போதே கணவன் இறந்து

விதவையாகி விடுவாள்'' என்றார்.

"இதிலிருந்து தப்ப வழி ஏதாவது உண்டா?'' என சந்நியாசியிடம் தாயும் மகளும் கேட்டனர்.

அதற்கு துறவி "சிம்லத்வீபம் எனப்படும் தீவில் (தற்கால சிங்கப்பூர்) உள்ள ஸோமவதீ என்ற சலவைத் தொழிலாளியின் மனைவியைக் கடல் கடந்து சென்று அழைத்து வந்தால்தான் இத்துன்பத்திலிருந்து தப்பலாம்'' என்றார்.

மேலும் "திருமணம் நடக்கும்போதே சிம்லத்வீபத்தில் வசிக்கும் ஸோமவதி அருகில் இருக்க வேண்டும்'' என்றும் உறுதியாகத் தெரிவித்தார்.

கடல் கடந்து சென்று ஸோமவதியை அழைத்து வர அந்தணரின் ஏழாவது மகன் சிவஸ்வாமி என்பவன் மட்டும் தான் சம்மதம் தெரிவித்தான்.

பெற்றோர் அனுமதி பெற்று குணவதியையும் அழைத்துக்கொண்டு சக்தி வாய்ந்த ஒரு கழுகின் உதவியால் சிம்லத்வீபம் சென்று ஸோமவதி வீட்டையும் அடைந்தனர்.

தினசரி ஸோமவதிக்குத் தெரியாமல் அவ்வீட்டை வாசலில் தண்ணீர் தெளித்து, கோலமிட்டு, மெழுகி, மலர்கள் பறித்து வைத்து, தண்ணீர் கொண்டு வைத்து, ரகசியமாக பற்பல கைங்கர்யங்களைச் செய்து வந்தனர்.

இதனால் வியப்புற்ற ஸோமவதி மறுநாள் சீக்கிரமாக எழுந்து சிவஸ்வாமி, குணவதியின் செயலைப் பார்த்து மனம் வருந்தினாள்.

"தவத்திலும், பக்தியிலும் சிறந்த நீங்கள் எதற்காக எனக்குப் பணிவிடை செய்ய வேண்டும்? அச்வத்த நாராயணன் திருவருளால் நீங்கள் கேட்பதை நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றாள்.

உடனே சிவஸ்வாமி "நீங்கள் எங்களுடன் காஞ்சிபுரம் வந்து எனது சகோதரி குணவதியின் திருமணத்தை நடத்திவைக்க வேண்டும்'' என்றான்.

துறவி கூறியதையும் தெரிவித்தனர்.

இதனைச் செவிமடுத்த ஸோமவதி தனது யோக மஹிமையால் அவ்விருவருடனும் காஞ்சி நகரம் வந்தடைந்தாள்.

குணவதியின் பெற்றோர் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தனர்.

விரைவில் ருத்ரசர்மா என்ற வரனை அழைத்து வந்து குணவதிக்கு விவாஹம் செய்து வைத்தனர்.

ஸப்தபதீனம் என்ற ஏழடி நடந்து மனைவியின் காலைத் தூக்கி அம்மி மீது வைக்கும்போது ருத்ரசர்மா கால் இடறிக் கீழே விழுந்து உயிர் நீத்தான்.

உடனே ஸோமவதி எழுந்து நின்று "எனது அமாஸோம வார விரதத்தின் பலனால், அசுவத்த நாராயணன் திருவருளால் இறந்த ருத்ரசர்மா உயிர் பெற்றெழட்டும்'' என்று கூறினாள்.

அவ்வமயமே யாவரும் திகைக்கும்படி உறக்கத்திலிருந்து எழுபவன் போல ருத்ரசர்மா எழுந்து நின்று குணவதியின் கரம் பற்றினான்.

ஸோமவதி மணமக்களை வாழ்த்திவிட்டு சிம்லத் வீபத்துக்கு விரைந்தாள்.

ஸோமவதி காஞ்சிபுரத்துக்குக் கிளம்புவதற்கு முன்பே தனது வீட்டில் உள்ளவர்களிடம் "நான் வருமுன்பு யாராவது நம் வீட்டில் உள்ளவர்கள் இறந்தால் ஈமச்சடங்குகள் எதுவும் செய்யாமல் உடலைப் பாதுகாத்து வரவேண்டும்'' என்று கூறிச் சென்றிருந்தாள்.

அதன்படி ஸோமவதி வருவதற்குள் அவளது கணவனும் புதல்வர்களும் இறந்து விட்டனர்.

வீட்டில் உள்ளவர்கள் இறந்த உடல்களைப் பாதுகாத்து வைத்திருந்தனர்.

நீராடி, சுத்தமான ஒருமைப்பட்ட மனத்துடன் அரச மரத்தை நூற்றெட்டு பிரதட்சணம் செய்தாள், ஸோமவதி.

ஒவ்வொரு முறையும் வலம் வந்ததும் ஒரு பிடி சர்க்கரையை விருட்ச ராஜாவுக்கு சமர்ப்பித்தாள்.

நூற்றெட்டு முறை வலம் வருவதற்குள் ஸோமவதியின் கணவன், புதல்வர்கள் யாவரும் உயிர் பெற்றனர்.

விரத ராஜன் எனப்படும் இதை செய்யும்போது அவசியம் விரத தினத்தில் பஞ்சையும், கிழங்கு வகைகளையும் கையால் கூடத் தொடக்கூடாது.

இத்தகைய அமா ஸோம வார விரதத்தால் ஸோமவதி பல்லாண்டு வாழ்ந்து வந்தார்.



மேலும் புத்தர் பெருமான் ஞானம் பெற்றது, அரசமரத் தடியில் தான்.

இந்துக்களும், பௌத்தர்களும் இம்மரத்தை மிக பக்தியோடு வழிபாடு செய்கிறார்கள்.



கேசவப் பெருமாள் கோயில் தாயார்



மாதவப்பெருமாள் கோயில் தாயார்



சென்னை பைராகிமடம் தாய



கிருஷ்ணன் கோயில் தாயார்
தம்புசெட்டி தெரு, சென்னை



நிலமங்கைத்தாயார் – மாமல்லபுரம்



ஸ்ரீ வேதவல்லித்தாய
திருவல்லிக்கேணி





ஸ்ரீ வைஷ்ணவி தேவி
திருமுல்லைவாயில்



மயிலை–ஸ்ரீ அலர்மேல்மங்கை தாயார்





ஸ்ரீ கமலவல்லித் தாயார்–உறையூர்



மரகதவல்லி – திருப்புட்குழி



ணகவல்லித் தாயார் மதுராந்தகம்



பத்மாவதித் தாயார்
திருவெள்ளக்குளம்



மட்டவிழ்குழலித்தாயார் – சீர்காழி



திருவள்ளூர் ஸ்ரீ கனகவல்லி



யதுகிரிநாச்சியார் திருநாராயணபுரம்





அலர்மேல்மங்கை – திருநாங்கூர்



செங்கமல வல்லித்தாயார்
தேரழந்தூர்



திருமலைவையாவூர் தாயார்



ஸ்ரீ பூமிதேவி – ஒப்பிலியப்பன் கோ
கும்பகோணம்



கோமளவல்லித்தாயார் – கும்பகோணம்



ஹேமாம்புஜவல்லி – புள்ளம்பூதங்குடி



ம்புஜவல்லி – தஞ்சைமாமணிக் கோயில்



திருமழிசை ஆண்டாள்



புருஷோத்மநாயகி – திருநாங்கூர்



ஸ்ரீரங்கம் ரங்கநாயகி



ஸ்ரீ பரிமளரங்கநாயகி புண்டரீகவல்லி
திருஇந்தளூர்



ஸாரநாச்சியார் – திருச்சேறை





மோகூர்வல்லி – திருமோகூர்





பஞ்சமுக ஆஞ்சநேயர் கோவில் தாயா
பெருங்களத்தூர்



பூங்கோவல்நாச்சியார் – திருக்கோவலூர்



ஸ்ரீ மதுரவல்லித்தாயார் – திருக்கூடல்



ஸ்ரீ அமிர்தவல்லி – அஹோபிலம்



செங்கமலவல்லி
தஞ்சைமாமணிக் கோயில்



ஸ்ரீ அஹோபில வல்லித்தாயார் –
சிங்கப்பெருமாள்கோவில்



கணிப்பொறி ஓவிய உருவாக்கம் : ஜி.கே. மூர்த்தி
புகைப்படம் : T.R. சீனிவாசன்

# ஸ்ரீவித்யா கணபதி

சாந்தினி



ஸ்ரீ மஹா கணபதியை 'மகேஸ்வரன்' என்று ஆதிசங்கரர் கூறுகிறார். ஈஸ்வரனுக்கும் மேலானவர் என்ற பொருள்படக் குறிப்பிடுகிறார். கணபதியை முழு முதற்கடவுள் என்று கூறுவதுண்டு. கணபதியை மட்டுமே வழிபடுபவர்கள் 'காணாபத்யர்' என அழைக்கப்படுவர். இவர்கள் தீவிர பக்தர்கள். கணபதியைத் தவிர வேறெந்த தெய்வத்தையும் உயர்வாகக் கருதமாட்டார்கள். இப்படிப்பட்ட பக்தர்கள் கணபதியை சக்தியுடன் வழிபடுகிறார்களா என்று தெரியவில்லை.

சக்தியுடன் கூடிய பல விநாயக மூர்த்தங்கள் உள்ளன. அவரைப் பற்றிய நூல்களிலும் சக்தி கணபதியைப் பற்றி விரிவாகவே விளக்கப்பட்டிருக் கின்றன. சக்தி கணபதி திருவுருவங்கள் பல உள்ளன. அவற்றுள் ஒன்றான 'ஸ்ரீவித்யா கணபதி'யைப் பற்றித்தான் இங்கு விளக்கப்படுகிறது.

சக்தியை முதன்மையாக வழிபடுபவர்கள் (சாக்தர்கள் எனப்படுவர்) 'ஸ்ரீவித்யையை' மிகவும் சிரத்தையுடனும் உரிய உபாசனா மார்க்கங்களுடனும் பூஜை செய்வர். அவர்கள் 'ஸ்ரீவித்யோபாசகர்கள்' என்று அழைக்கப்படுவார்கள். தக்க குரு மூலம் தீட்சை பெற்று வழிபடுவார்கள்.

ஸ்ரீவித்யா சக்தி கணபதியுடன் இணைந்து 'ஸ்ரீவித்யா கணபதி'யாக மஹா கணபதி விளங்கு கிறார். ஸ்ரீவித்யா கணபதியைப் பற்றி எழுத, பல நூல்களும், பெரியார்களும் உதவினார்கள்.

ஸ்ரீவித்யா கணபதியை ஆராதித்து வழிபடுவது என்பது மிகவும் கடினம். வழிபாட்டு முறைகளை நன்கு தெரிந்து கொண்டு, ஒரே சிந்தனையோடு பூஜை செய்யவேண்டும். பூஜைக்குரிய மந்திரங்களைச் சரியாக உச்சரிக்கவேண்டும். ஒழுக்கம், நேர்மை, சுத்தம் ஆகியனவெல்லாம் வழிபடுபவருக்கு இருத்தல் அவசியம். அப்படி செய்யும் மகான்கள் சிலரே இருப்பார்கள். இப்படி பல கஷ்டங்களுடன் 'ஸ்ரீவித்யா கணபதி' வழிபாட்டினால் என்ன லாபம் என்று சிலர் நினைக்கிறார்கள். கேட்கவும் செய்கிறார்கள். சக்தியையும், கணபதியையும் இணைத்து வழிபட்டு சித்தி பெற்றுவிட்டால் அவர்களே 'ஸ்ரீவித்யா கணபதி' ஸ்வரூபமாகி விடுகிறார்கள் என்று நூல்கள் கூறுகின்றன. அவரைப் பார்த்து வணங்கினாலே நம் துன்பங்கள் போய்விடும். அவர்களுடைய வாக்கு தெய்வ வாக்காக ஆகிவிடுகிறது.



ஸ்ரீவித்யா கணபதியை ஆராதிப்பவர்கள் மிகச் சிலரே இருப்பார்கள். வழிபாடு கடினமானதுதான். இருந்தாலும் ஸ்ரீவித்யா கணபதியைப் பற்றித் தெரிந்து கொள்வதில் தவறேதும் இல்லை.

சக்தியுடன் விநாயகர் இணைந்து கொண்டாரா? அல்லது விநாயகரோடு சக்தி சேர்ந்து கொண்டாளா என்ற விவரத்தை ஆராயாமல் 'ஸ்ரீவித்யா கணபதி'யைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

ஸ்ரீவித்யா கணபதியின் சிற்ப வடிவங்கள் பாரதத்தில் சில இடங்களில்தான் காணப்படுகின்றன. இவ்வுருவங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குமுன், 'ஸ்ரீவித்யா கணபதி'யின் தத்துவத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்வது நல்லது.

'வாஞ்சா கல்ப லதா கல்பம்' என்ற நூல் – கணபதியை சக்தி உருவத்தில் வழிபட உதவும் அரிய பொக்கிஷமாகும். மந்திரங்கள் மறைபொருளுடன் இருக்கும். உபாசகர்கள் ஸ்ரீகணபதியை, ஸ்ரீவித்யா வாகவே நினைத்து வழிபடுகிறார்கள் என்று பெரியோர் கூறுவர்.

ஸ்ரீவித்யா கணபதியை வழிபட முதலில் தக்க குருவின் மூலமாக மந்திர தீட்சை பெறவேண்டும். இது முதல் படியாகும்.

லலிதா சகஸ்ரநாமாக்களில் ஒன்றாக 'காமேஸ்வர முகாலோல கல்பித ஸ்ரீகணேஸ்வரா' என்று ஒரு நாமா (பெயர்) வருகிறது. இதில் கணபதியின், ஆவிர் பாவதத்தைப் பற்றிக் கூறுகிறது.

மேற்கண்ட வார்த்தைக்குப் பொருள்: சிவபெரு மானுக்கு 'காமேஸ்வரன்' என்ற பெயர் உண்டு. அவருடைய திருமுகத்தை அன்னை பராசக்தி பார்த்ததன் விளைவாக கணேசனைத் தோற்று வித்தவள்' என்ற கருத்து உள்ள நாமாவாகும்.

மகேஸ்வரனும், பராசக்தியும் இருபெரும் சக்தி களாவர். இவர்களின் இணைப்பால் உலகமும், ஜீவன்களும் உய்கின்றன.

இம்மாபெரும் சக்திகளின் கூட்டுறவால் முதன்மை ஸ்தானம் வகிப்பவராக ஸ்ரீகணேசர் சக்தி தெய்வமாகத் திகழ்கிறார்.

உடலும், உயிரும் ஒன்று சேர்ந்திருப்பதுதான் ஜீவ அமைப்பு உடல் சக்தியின் கூறு. உயிர் சிவத்தின் கூறு இவ்விரண்டின் தெய்விக சேர்க்கைதான் கணேச மூர்த்தியில் இடம் பெறுகின்றன. அதனால் மஹா கணபதி 'ஸ்ரீவித்யா கணபதி'யாக காட்சி தருகிறார் இவ்வரிய கணபதியை, கலைஞன் தத்துவப்படி, மிக அழகாகவும், புனிதத் தன்மையுடனும் பெண் உருவில் படைத்துள்ளான்.

ஸ்ரீவித்யா கணபதிக்குத் தனிச் சந்நிதியோ, கோயிலோ அதிக அளவில் இல்லை. பாரதத்தில் சில இடங்களில்தான் ஸ்ரீவித்யா கணபதியின் வடிவத்தைக் காணலாம். ஆனால் தென் பாரதத்தில் ஓர் இடத்தில்தான் (சரியான விவரம் தெரியவில்லை) ஸ்ரீவித்யாகணபதிக்கு பூஜை முதலான வழிபாடுகள் நடக்கின்றன.

லலிதா ஸகஸ்ரநாமாவில்'ஸ்ரீவித்யா' என்ற திருப்பெயர் வருகிறது. அதற்கு, சகல வித்தை களுக்கும் முதன்மையாக விளங்குபவள் என்றும், தெய்விக அழகுடையவள் என்றும் பொருள். ஸ்ரீவித்யை மகாசக்தி படைத்தவள். ஆன்மிகவாதிகள் ஸ்ரீவித்யையைப் பற்றி விரிவாக விளக்கிப் பேசுவார்கள்.

ஸ்ரீவித்யா பல பிரிவு கொண்டவளாக உள்ளாள். யக்ஞ வித்யா, குஹ்ய வித்யா, பிரம்ம வித்யா, மஹா வித்யா என்று நான்கு ரூபங்களில் காணப்படுகிறாள். விரிவாக எழுதப்புகின் ஸ்ரீவித்யையைப் பற்றி பல பக்கங்கள் கொண்ட நூலாகிவிடும். இந்த விதமான நூல்களும் பல உள.

*ஸ்ரீவித்யோபாசனையும் – மஹாகணபதியும்*

ஸ்ரீவித்யோபாசனை முறையில் தொடக்கத்தில் ஸ்ரீவித்யா கணபதி உபாசனை உள்ளது. ஸ்ரீசக்கரத்தில் பூஜை செய்யும் தகுதி கணபதிக்குத்தான் முதன்மை ஸ்தானம் உள்ளது. மஹாகணபதிக்கு ஸ்ரீசக்ரம் உண்டு. ஸ்ரீவித்யா உபாசகர்கள் நவாவரண பூஜையில் ஷோடசாநியாசம் என்றதோர் அங்கம் (பகுதி) உண்டு. அதில் கணபதி நியாசமும் இடம் பெறும், கணபதி நியாசம் என்றால், உகந்த சூரிய நிறத்தோடும், யானை முகத்தோடும், மூன்று கண்களோடும், பாசம், அங்குசம், வரதம் போன்றவற்றுடனும் சக்தியுடன் கூடிய விநாயகனை தியானிப்பது என்று பொருள்படக் கூறும் மந்திரமாகும்.

ஸ்ரீமஹாகணபதியை 51வித மாத்ருகா ஸ்தானங் களில் நியாசம் செய்யவேண்டும்.

*பஞ்சமுக விநாயகர் சக்தியின் வடிவமே!*

மஹா கணபதி – சித்த கணபதி – சக்தி கணபதி – மோட்ச கணபதி-வித்யா கணபதி என்று இவ்வைந்து முகங்களோடு, 'பஞ்சமுக விநாயகர்' என்று அழைப்பர். இந்த விநாயகப்பெருமானோடு வித்யாவும், சக்தியும் இடம் பெறுகின்றனர்.

'ஐந்து' என்ற எண்ணில் சில விவரங்கள் உண்டு. ஐந்து திக்குகள் – பஞ்சாட்சரம் – பஞ்சகவ்யம், பஞ்சகோசம், பஞ்சதளம், பஞ்ச பிராணங்கள், பஞ்ச பூதங்கள். இப்படியாக ஐந்தின் மகிமையோடு விளங்குவதுதான் 'ஸ்ரீவித்யா கணபதி'ரூபம். மேலும் சக்தியின் வாகனமான சிங்கத்தின்மீது ஐந்து முகங்களோடு காட்சி தருபவர் சக்தி விநாயகரே.

லலிதா சகஸ்ரநாமாக்களில் அம்பிகையை, பஞ்சமி, பஞ்சபூதேசி, பஞ்ச சங்க்யோபாசாரிணி என்று குறிப்பிடுவதெல்லாம், மஹா கணபதிக்கும் பொருந்தும். ஐந்து என்ற எண் உலகில் காணும் எல்லாப் பொருள்களிலும் சக்தியின் பரிமாணம் பரவியுள்ளது என்ற விவரம் தைத்ரீயோபநிஷத்தில் காணப்படுகிறது.

விநாயகப்பெருமானுக்கு ஐங்கரங்கள் இருப்ப தாலும், ஐந்து முகங்களோடும் இருப்பதாலும் சக்தி தெய்வமாகவே விளங்குகிறார்.

இனி 'ஸ்ரீவித்யா கணபதி'யின் விவரத்தைப் பார்ப்போம். ஸ்ரீவித்யா கணபதியின் சிற்ப வடிவங்கள் சில தலங்களில்தான் காணமுடிகின்றன. பொதுவாக ஸ்ரீவித்யா கணபதிக்குத் தனிப்பட்ட சந்நிதியோ, கோயிலோ இல்லை எனலாம். அப்படியும் எங்கோ ஓர் இடத்தில் தனிச் சந்நிதியில் ஸ்ரீவித்யாகணபதிக்கு ஆராதனை, பூஜைகள் நடப்பதாகத் தெரிகிறது.

திருநெல்வேலி அருகே சங்கரநயினார் ஆலயத்தில் சிவனும் விஷ்ணுவும் ஒரே உருவில் இருந்து காட்சி தருகிறார்கள். பூஜைகளும் நடந்து வருகின்றன. திருச்செங்கோடு தலத்தில் சிவனும், சக்தியும் ஒருருவாக அர்த்த நாரீசுவர வடிவில் காட்சி தருகிறார்கள்.

பல கோயில்களில் சுற்றுப்புற மாடங்களிலும், கருவறையைச் சுற்றியுள்ள மாடங்களிலும் அர்த்த நாரீசுவர மூர்த்தங்களைக் காண முடிகிறது. பல்லவர் காலத்திலிருந்தே அர்த்தநாரீசுவர ஐக்கியத் திருமேனி களைக் காணமுடிகிறது.

இதே போன்றுதான் ஸ்ரீவித்யா கணபதியிடமும் காணமுடிகிறது. இன்னொரு விளக்கமும் பெரியோர் கூறுகிறார்கள். மஹா சக்தியிடமிருந்து உருவானவர் ஸ்ரீகணபதி. அவருடன் ஸ்ரீவிஷ்ணுவையும் சேர்த்துக் கொண்டதால், இரு சக்தி ஸ்வரூபமாகி 'வித்யா கணபதி'யாகக் காட்சித் தருகிறார் என்கிறார்கள். இவ்விளக்கம் எவ்வளவு உண்மையென்று தெரிய வில்லை.

யானை முகம் கொண்ட சக்தி தெய்வம் என்பதைவிட, சக்தியுடன் கூடிய 'ஸ்ரீவித்யா கணபதி' என்றே கூறலாம்.

புதுக்கோட்டை புவனேஸ்வரி அதிஷ்டானத்தைச் சேர்ந்த ஸ்ரீவைத்யநாத சாஸ்திரிகளும், ஆச்சாள்புரம் ஸ்ரீகோவிந்தராஜபிள்ளை அவர்களும் சேர்ந்து அடிக்கடி இங்கு நடக்கும் கணபதி ஹோமத்தில் வாஞ்சா கல்ப கணபதி ஹோமத்தை, நடத்தி வருகிறார்கள். சக்தியின் ஆலயத்தில் கணபதி ஹோமம் நடப்பது, கணபதியுடன் சக்தியும் சேர்ந்திருப்பதை உணர்த்துகிறது.

ஸ்ரீவித்யா கணபதியின் உருவ அமைப்பைப்பற்றித் தெரிந்து கொள்வோம்.

ஓர் ஆங்கில ஆன்மிக இதழான 'தத்வலோகா' என்ற இதழில் ஒரு பக்கத்தில் 'ஸ்ரீவித்யா கணபதி' திருவுருவத்தை சிற்பவடிவில் மூவர்ணத்தில் அச்சிட்டிருந்தார்கள். தலைப்பில் 'ஸ்ரீவித்யா கணபதி' என்னும் ஒரு ஸ்லோகம் அர்த்தத்துடன் விளக்கப் பட்டிருக்கிறது. ஆனால் அவ்வரிய சிற்பம் எங்குள்ளது என்பதைக் குறிப்பிடவில்லை. ஆங்கில இதழ் ஆசிரியருக்கு "இப்படத்திற்கான விவரமும் எங்கு இருக்கிறது என்பதையும் தெரிவியுங்கள்" என்று கேட்டுக் கடிதம் எழுதினேன். அதற்கு 'ஆந்திர மாநிலத்தில் குண்டூர் மாவட்டத்தில் உள்ள 'ஸ்வேத சிருங்காசலம்' என்ற இடத்தில் உள்ள 'வேத வேதாந்த குருமஹா வித்யாலயா' பல்கலைக்கழகத்திற்கு எழுதித் தெரிந்து கொள்ளுங்கள்" என்று பதில் வந்தது. எழுதினேன். எந்தத் தகவலும் இல்லை. கடிதமும் திரும்பி வந்துவிட்டது. மறுபடியும் 'தத்வ லோகா'விற்கு விவரம் எழுதினேன். "சிருங்கேரியிலுள்ள மடத்து நிர்வாகிக்கு எழுதுங்கள்" என்று பதில் வந்தது. அதன்படி சிருங்கேரி மடத்து நிர்வாக அதிகாரிக்குக் கடிதம் எழுதினேன். அதற்கு அந்த அதிகாரி, "தத்வலோகா ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்" என்ற பதில் வந்தது. பிறகு யாருக்கும் 'ஸ்ரீவித்யா கணபதி'யைப் பற்றி கடிதம் எழுதவில்லை.

வேதங்கள் மூலம் 'ஸ்ரீவித்யா கணபதி'யைப்பற்றி அறிகிறோம். தவிர சில நூல்களில் சிறு வித்யாசங் களோடு விவரம் உள்ளது.

உருவ விளக்கம்: (வேதம்) ஸ்ரீவித்யா கணபதிக்கு பன்னிரு கரங்கள் – சிரசில் பிறைச் சந்திரன் – மூன்று கண்கள் – சக்தியின் அம்சமாக இதய பாகம், இரு ஸ்தனங்களோடு காணப்படுகின்றன,பெண்களுக்குரிய அங்க அமைப்புகள் – துடி இடை – சிறு வயிறு (தொந்தியன்று) இடக்காலை மடக்கி, வலக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்த நிலையில் காணப்படுகிறார்.

### *கரங்களும், அவற்றில் காணும் பொருள்களும்*

வலக்கையில் – அமிருத கலசம்-இடக்கையில் சங்கிலி போன்ற ஆயுதம் – மற்றும் வலப்புறமுள்ள

ஐந்து கரங்களும், இடப்புறம் ஐந்து கரங்களும், வலக்கைகள் ஐந்தில், கீழேயிருந்து மேல் நோக்கி,வரம் – சூலம் – கரும்புவில் – கதாயுதம் – பிளந்த மாதுளம்பழம்.

இடக்கைகள் ஐந்தில் மேலிருந்து கீழ்புறமாக, தாமரை–பாசக்கயிறு – ஆம்பல் மலர் – நெற்கதிர் – தன்னுடைய தந்தம்.

திரு. நஜன் அவர்கள் ஸ்ரீவித்யா கணபதியைப் பற்றிய விளக்கம்:'துதிக்கையில் அம்ருத கலசம் – சிவந்த முகம் – நாகாபரணங்கள் – இளம் முலைகள் – சிறு வயிறு – கிரீடத்தில் பிறைச் சந்திரன்.

வலக்கரங்கள்: மாதுளம்பழம் – கதை – கரும்பு – சக்கரம் – வில்

இடக்கரங்கள்: தாமரை – பாசம் – நீலோத்பலம் – நெற்கதிர் – ஒடிந்த கொம்பு.'

மேலும் நஜன் எழுதுகிறார். சிருங்கேரி சாரதா ஆலயத்தின் மேற்கு பிராகாரத்தில் பத்து கரங்களுடன் சக்தி கணபதியைக் காணலாம். ஸ்ரீவித்யா சங்கரர் ஆலயம் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்தது. அமைப்பு: ஸ்ரீவித்யா கணபதி தெற்கில் சந்நிதி (தெற்குதிசை) கொண்டுள்ளார்.

இங்கு ஸ்ரீவித்யா கணபதியின் சிற்பமும், அதையொட்டி வண்ண ஓவியமும், பஞ்சமுககணபதி உருவங்களையும் காணலாம்.

சிருங்கேரியில்தான் 'ஸ்ரீவித்யா கணபதி' கோயில் கொண்டுள்ளார் என்று ஊகிக்க முடிகிறது.

சுசீந்திரத்தில் உள்ள தாணுமாலேஸ்வரர் கோயிலில் உள்ள ஒரு தூணில் பெண் வடிவில் கணபதியின் சிற்பத்தைக் காணலாம். 'விக்னேஸ்வரி' என்று கூறுகிறார்கள். இருகரங்களோடு, மெலிந்த இடையுடன் காணப்படும் கணபதி பெண் வடிவத்தில் இருந்தால் 'ஸ்ரீவித்யா கணபதி' எனக்கூறலாம். ஒரு காலை மடக்கி மற்றொரு காலைத் தொங்கவிட்டு சிம்மா சனத்தில் அமர்ந்திருக்கிறார். இதைப்பற்றிய வேறு விளக்கம் தெரியவில்லை.

வட இந்தியாவில் ஜபல்பூர் அருகே 'பீராகேட்' என்ற தலத்தில் கணேசர் பெண் வடிவில் காட்சி தருகிறார். மதுரை சுந்தரேஸ்வரர் சந்நிதிக்குப் போகும்போது வலப்பக்கத் தூண் ஒன்றில் 'கணேசனி' என்ற பெயருடன் பெண் ரூபத்தில் விநாயகரைக் காணலாம். வடிவீஸ்வரம் ஆலயத்திலும் பெண் ரூபத்தில் வீணை வாசிப்பது போன்று பிள்ளையார் காணப்படுகிறார்.

இன்னும் சில இடங்களில் பெண் வடிவத்தில் ஸ்ரீமஹாகணபதி சிற்பங்கள் காணப்படலாம்.

'ஸ்ரீவித்யா கணபதி' சக்தியின் வடிவம். இவ்வரிய வடிவத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளும் நோக்கத் தினால்தான் இக்கட்டுரை எழுதப்பட்டது. ஸ்ரீவித்யா கணபதியைப் பற்றி முழு விவரம் இங்கு கூறப்பட்ட தாகச் சொல்ல முடியாது. புதுமையாக பெண் வடிவில் கணபதி காணப்படுகிறார் அவரைப்பற்றி ஓரளவேனும் தெரிந்து கொள்ளலாமே என்ற எண்ணத்தில்தான் இக்கட்டுரை உருவானது. ●



# தினந்தோறும் கவிதை

## டாக்டர் ஆலந்தூர் மோகனரங்கன்









தினந்தோறும் கவிதைகளை எழுதாவிட்டால்
சிரத்தினிலே எனக்கிருக்கும் மகுடம் சாயும்!
தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
சிங்கத்தை அதட்டுகின்ற வீரம் சாயும்!
தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
நீக்குள்ளே விரல்வைக்கும் எண்ணம் சாயும்!
தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
திரைகடலே தலைகுனியும் திறமை சாயும்!

தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
சிறுபுல்லும் என்னிடத்தில் பேசி டாது!
தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
சிரிக்கின்ற மலர்க்கூட்டம் சிரித்திடாது!
தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
தீண்டுகின்ற தென்றலென்னைத் தீண்டி டாது!
தினந்தோறும் கவிதைகளை எழுதா விட்டால்
தீந்தமிழும் எனைமறந்த பிரிவு தோன்றும்

# லட்சுமி ராஜரத்னம்

# கிளிக் கடை

கண்களில் மை கரைசல் வழிய தன்னருகே பொம்மை போல் நிற்கும் இளம் மனைவி சந்திரி காவைப் பார்த்து ரசித்துக் கொண்டான் சரவணன்.

இவள் எனக்கே சொந்தம் என்ற இறுமாப்பு நெஞ்சில் ஆக்ரமித்துக் கொண்டது.

"கல்யாணமே வேண்டாம்னு சொல்லிட்டு இருந்தியே.. இப்ப என்னடான்னா அவ மேல வச்ச கண்ணைத் திருப்ப மாட்டேங் கறே" அக்காக்காரி அவன் விலாவில் இடித்துவிட்டுப் போனாள்.

"என்னடா, சொத்தோட அடிச்சே பர்ஸ்ட் பிரைஸ்" என்று நண்பர்கள் கேலி செய்தனர்.

பால் கன்னத்தில் இப்படியே ஒண்ணு 'பச்'னு வச்சுரலாமா என்ற வெறியை அடக்கிக் கொண்டான் சரவணன்.

கிணற்று வெள்ளத்தை ஆத்து வெள்ளமா அடிச்சிட்டுப் போகப் போகுது. இதையெல்லாம் முதலிரவில் முறையாக வைத்துக் கொண்டால்தான் ருசி அதிகம்.

"சந்திரிகா...ஏய்..." என்று அருகிலே யாரும் இல்லாத தனிமையில் மெல்ல அழைத்தான்.

அவள் வெடுக்கென்று தலையைத் திருப்பினாள். கனிவு காட்ட வேண்டிய கண்களில் எரிச்சல்.

"ஏய்... என்ன ஏய்... நான் என்ன உங்க வீட்டு வேலைக்காரியா?" என்று வார்த்தைகளைக் கடித்துத் துப்பினாள்.

அவனுடைய ஆசைத் திணறலில் படீரென விழுந்த கறுப்புத் திரை. குரலில் இத்தனை வெறுப்பு காட்ட முடியுமா? அவள் அவன் பக்கம் திரும்புவதைக் கண்ட ஒருத்தி, "சந்திரி கண்ணு, என்னடாவேணும்?" என்று ஓடிவர...

சரவணன் வாயை மூடிக் கொண்டான்.

அன்றிரவு முதலிரவு. அன்ன மென நடைபயின்று வரும் அழகுச் சிலைக்காக காத்துக் கொண் டிருந்தான் சரவணன்.

சந்திரிகா! சொல்லிப் பார்த்துக் கொண்டான் சரவணன். சந்திரிகா, எத்தனை அழகான பெயர்! பொருத்தம்.

அவளிடம் பேச வேண்டியதை ஒத்திகை பார்த்துக் கொண்டான். மறக்காமல் நடுப்பகலில் ஏன் கடுப்பைக் காட்டினாய் என்று கேட்க வேண்டும்.

கையில் பால் செம்பை ஏந்திய வளாக அன்னநடை பயிலாமல் அதிர்ந்த நடையில் வந்த சந்திரிகா படீரென கதவைச் சாத்தினாள்.

"ஏன் சந்திரி, தோழிகள் யாரும் வரலையா?"

வெடுக்கென முகத்தை நிமிர்த்தியவள், "இங்கே என்ன எக்ஸிபிஷனா நடக்குது தோழி களெல்லாம் வந்து பாடி ஆட... ஏன்? இப்படி அலையறீங்க சே!?" என்றாள் முகத்தைத் தோளில் இடித்தபடி.

"என்ன சொல்றே? நானா அலையறேன்? என்ன சொல்ல வந்தேன் ஏன் இப்படி பேசறே? என்னைப் பத்தி உனக்கு என்ன தெரியும்?" என்று கொஞ்சம் சினம் பொங்கக் கேட்டான்.

'முதலிரவே இப்படியா? மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம் என்று சொல்லுவார்களே.. எனக்கு இப்படியா இறைவன் வரத்தைத் தர வேண்டும்?'

அம்மாவின் நினைவு வந்தது. குரல் அதிர்ந்து பேசியவள் இல்லை. ஏதாவது பேசவேண்டும் என்றால் கூட இதமாக, இனிய சங்கீதம் போல அப்பாவிடம் சமயம் பார்த்து அல்லவா சொல்லு வாள்? அதனால் தான் மகுடிக்குக் கட்டுப்பட்ட ராகம் போல் அப்பா அம்மாவின் சொல்லுக்குக் கட்டுப் பட்டுக் கிடந்தாரோ?

முதலிரவு என்ன? அதைப் போல் பல இரவுகள் வந்து போயின. சந்திரிகாவின் ஆணவம் அதிகமாகியதே தவிர, குறைய வில்லை. சுண்டு விரல் நகம்கூடத் தன் மேல் படிய இடம் தரவில்லை.

"என்னப்பா?" என்ற அம்மா விடம் அவன் என்ன சொல்லுவான்?

இவள் உன்னைப் போல் இல்லை என்றா சொல்ல முடியும்?

அலுவலக நண்பர்கள் 'என்னடா புது மாப்பிள்ளை' என்றபொழுது தலைகுனிந்தான்.

தீபாவளி வந்துவிட்டது. இந்தத் தடவை எதிர்பாராமல் அதிகப் படியான போனஸ்.

"சரவணா! புதுப் பெண்டாட்டிக்கு என்னடா வாங்கித் தரப் போறே" நண்பன் ரங்கன் கேட்டான்.

"அவளுக்கு என்ன பிடிக்கும்னு தெரியலையே!"

"போடா, நகைக்கும், புடைவைக்கும் மயங்காத பொம்பளை ஏதுடா?"

நகைகளையும், புடைவைகளையும் வாங்கிக் குவித்தால் ஒரு வேளை சந்திரிகா தன்னிடம் பிரியம் காட்டுவாளோ?

"எனக்கு வாங்கத் தெரியாதுடா. ப்ளீஸ். நீ கொஞ்சம் ஹெல்ப் பண்ணேன்."

சிவப்புக்கல் நெக்லஸ். சிவப்புக்கல் வளையல், சிவப்பில் பட்டுப்புடைவை..

சந்திரிகா தன்னை அணைத்துக் கொள்வதைப் போல் கிளர்ந்து போனான் சரவணன்.

இரவின் தனிமையில் அவளிடம் அவற்றைக் காட்டிய போது-

அவனைப் புழுவைப் போல் பார்த்தாள்.

"இதெல்லாம் வேணும்னு நான் கேட்டேனா?"

"இல்லை சந்திரி! நானாத்தான் வாங்கினேன்."

"இதெல்லாம் எங்கிட்ட இருக்குது. கொண்டு போய் எங்கிட்டாவது கெடாசுங்க. வாங்கறதுக்கு முன்னாடி என்கிட்ட கேட்கிறதில்லையா?"

"கேக்காம வாங்கித் தரதுதான் அன்பளிப்பு. என் போனஸ் பணம் முழுவதையும் போட்டு வாங்கிட்டு வந்தேன்."

அவன் பரிதாபமாகச் சொன்னான்.

"வேணும்னு கேட்டா எங்கப்பா கொண்டு வந்து கொட்டுவாரு. நீங்க பிச்சைக்கார போனஸ் பணத்துல எதுக்காக வாங்கித் தரணும்?"

அவனுடைய அன்பைத் திமிர் மறைத்தது. பிறந்த வீட்டின் செல்வ வளம் தலை கனத்தைக் கொடுத்தது. தங்கள் அந்தஸ்துக்கு மீறிய வகையில் பெண் எடுத்தது தவறோ?

அப்பா உயிருடன் இருந்திருந்தால் கண்டிப்பாக மறுத்திருப்பார். பெண்ணின் அழகும், அந்தஸ்தும் அம்மாவை மயக்கி விட்டிருந்ததில் ஆச்சர்யமே இல்லை. பெரிய இடத்துப் பெண் என்றால் 'என் மருமக பெரிய இடம்'னு தம்பட்டம் அடித்துக் கொள்ளலாமே?

சரவணன் மனத்தினுள் படும் அவஸ்தைகள் இவர்களுக்குத் தெரியுமா?

"சரவணா! தீபாவளிக்கு உங்க மாமனார் வீட்டுக்குப் போகணுமே! எல்லார்க்கும் துணிமணிகள் எடுத்து வச்சிருக்காராம்."

"யார் சொன்னாங்க?"

"யார் சொல்லணும்? உன் பொண்டாட்டிதான் சொன்னா"

தங்களுக்கு தீபாவளிச் செலவு இல்லை என்பதில் அவளுக்கு ஆனந்தம்.

சரவணனின் குடும்பம் அப்படி ஒன்றும் சிக்கனம் பிடிக்க வேண்டிய குடும்பம் இல்லை. சரவணனின் தகப்பனார் லட்சுமணன் ஏழெட்டு வீடுகளை வாங்கிப் போட்டு விட்டுத்தான் செத்திருந்தார். நிறைய வாடகை வந்து கொண்டிருந்தது. மகள்களுக்கும் கல்யாணம் செய்துவைத்து விட்டார். சரவணன் எந்தச் சுமையையும் சுமக்க வேண்டியதில்லை.

தலைச்சுழி யாரை விட்டது? சந்திரிகாவுக்கு ராஜாத்தி மாதிரி வாழத் தெரியவில்லை.

தீபாவளி அன்று ஒரு நண்பனின் வீட்டில் திருமணநாள் விருந்து. சரவணன் சந்திரிகாவுடன் போக விரும்பினான். அந்த நண்பன் அந்த அளவுக்கு அழைத்திருந்தான்.

"எங்கூட விருந்துக்கு வரே"

"வரேன்"

பார்த்துப் பார்த்து விலையுயர்ந்த பரிசு ஒன்றை-கண்ணாடிப் பேழையில் வைத்ததாகப் பார்த்து வாங்கினான்.

பரிசைக் கொடுக்கும்பொழுது சந்திரிகா தன் வாயைக் காட்டி விட்டாள்.

"இத்தனை காஸ்ட்லியா வாங்கணுமானு கேட்டேன். இவருதான் வாங்கினாரு. கண்ணாடி பெட்டியில் வச்ச அலங்காரம். பத்திரமா பார்த்து வையுங்க. விலை ஆயிரத்து சொச்சம். இப்படியா காசைக் கொட்டுவாங்க?"

எல்லாருடைய பார்வையும் அவன் மேல் வலையாகப் பின்னிக் கொள்ள அவமானப்பட்டுப் போனான். நெருங்கிய நண்பர்கள் சிலர் "என்னடா, உன் பெண்டாட்டி இப்படி காலை வார்றா? அவ ஏதாச்சும் கேட்டு நீ வாங்கித் தரலையா?" என்று காதருகில் கிசுகிசுத்தார்கள்.

அவனுக்கு அங்கே விருந்து மருந்தாகியது. விஷத்தைப் போல் கசந்தது.

"ஏண்டி, இப்படி பண்றே?" என்று வரும் பொழுது கேட்க..

"எனக்கு உங்களைப் பிடிக்கலை" என்றாள் பட்டென்று.

அடுத்த நாள் நண்பன் சிவா "சரவணா! வா. இப்படியே ஹோட்டல்ல டிபனை முடிச்சுகிட்டு பீச்ல போய் உட்காரலாம்" என்று அழைத்தான்.

சரவணனுக்கும் மாறுதல் வேண்டியதுதான்.

இருவரும் டிபனை முடித்துக் கொண்டு கடலலை தவழும் வெண் நுரையைப் பார்த்தபடி அமர்ந்து கொண்டார்கள்.



"மனசைத் திறந்து பேசு சரவணா! அடைச்சு வச்சுக்காதே. கல்யாணம் ஆனதிலேர்ந்து உன் முகமே நல்லாயில்லை."

"அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லை" மண்ணைத் தோண்டி னான் சரவணன்.

"நேத்து அத்தனை பேர் எதிரேயும் உன் பெண்டாட்டி அவமானப்படுத்தியதைப் பார்த்துதான் எனக்கு இப்படி நினைக்கத் தோணுது.

சீழ் கட்டிப் பழுத்துக் கிடந்த கட்டியின் மேல் சூடுகோல் பட்டதும் உடைந்து விடுவது போல் சரவணன் உடைந்து போனான். எல்லாவற்றையும் கொட்டினான்.

"கல்யாணம் ஆகியும் நான், பட்டினிதான் சிவா! அந்தத் தாபம் தான் என்னை அலைக்கழிக்குது"

"அப்ப நீ ஹோட்டலுக்குப் போக வேண்டியதுதான்"

"நீ என்ன சொல்றே?"

"புரியாத பாப்பாவாடா நீ? நல்ல இடம் ஒண்ணு இருக்குது. புதுசு தொழிலுக்கு."

"தவறில்லையாடா சிவா? பெண்டாட்டிக்குப் பண்ற துரோக: மில்லையா? எங்கப்பா எப்படி வாழ்ந்தாரு! எங்க அம்மாவைத் தவிர வேற பொண்ணை நிமிர்ந்து பார்த்திருப்பாரா?"

"உங்கம்மா உங்கப்பாவை அனுசரிச்சுப் போனாங்க. உன் பெண்டாட்டி அப்படி இல்லையே? இப்படி ஒரு தொடுப்பு உனக்கு இருக்கிறது தெரிஞ்சா அவ தன்னாலே வருவா பார்.

"அப்படிங்கறே?"

"போடா, ஆம்புள்ளையா லட்சணமா நடந்துக்க. வாச னையா செண்ட் கிண்ட் போட்டு அமர்க்களமா நடந்துக்க. உன் பெண்டாட்டிய லட்சியம் பண்ணாதே. இவருக்கு என்ன வந்துச்சுனு உன் பெண்டாட்டி அசரணும். கண்ணீர் விடணும்."

இரவு முழுதும் யோசிச்சு... இது தன் தாபத்தைத்தீர்த்துக் கொள்ளும் வழியா... இப்ப சந்திரிகாவைத் தண்டிக்கும் வழியா... புரியவில்லை. எதுவா னாலும் தனக்கு ஒரு வடிகால் வேண்டும். 'பெண்டாட்டி ஏறுமாறி னால் கூறாமல் சந்யாசம் வாங்கிக் கொள்' என்று ஔவையார் சொன்னது போல் சந்யாசம் வாங்கிக் கொள்ளமுடியுமா?

தீபாவளி முடிந்து ஊரெல்லாம் ஓய்ந்து கிடக்கும் மாலை...

சிவா சரவணனை அழைத்துக் கொண்டு 'அந்த' வீட்டிற்குப் போனான்.

"எனக்கு பயமா இருக்குது சிவா!"

"உன் பெண்டாட்டியையே நினைச்சுக்கிட்டு இருக்காதே. பெண்ணும் புதுசு. உனக்கும் முதலிரவு ஆகலை. புது மாப் பிள்ளை கணக்கா போப்பா"

கதவைத் திறந்தாள் நடுத்தர வயதுப் பெண்மணி ஒருத்தி. அவளே சிக்கென்று வார்த்து எடுத்தாற் போல் இருந்தாள்.

"இவளாடா?" கண்ணால் கேட்டான் சரவணன்.

இல்லை என தலையாட்டி னான் சிவா.

"வாங்க தம்பி" என்று அழைத் தாள் அந்தப் பெண்மணி.

அவளை அப்படியே ஓரமாக நகர்த்திக் கொண்டு போனான் சிவா.

"பையன் புதுசு. கல்யாணம் ஆகி ஃபஸ்ட் நைட் கூட ஆகலை. பணக்காரப் பையன். பக்குவமா உன் பொண்ணை நடந்துக்கச் சொல்லு."

அவள் ஜிமிக்கிகள் குலுங்க தலையை ஆட்டினாள். "எங்க சுமி பார்த்துக்குவா" என்றாள் வெற்றி லைக் காவிப் பற்கள் மின்ன.

"நான் வரேண்டா" என்று கண்களைச் சிமிட்டியபடி நகர்ந் தான் சிவா.

"இங்கே வந்து குந்துங்க தம்பி" என்று அவனை உள் ளறைக்கு அழைத்து அமர வைத் தாள் அவள்.

அவன் சங்கடத்துடன் அமர்ந்து கொண்டான். "என் மக இப்ப வந்துருவா. நீங்க சிவா தம்பிக்கு ஃப்ரெண்டா?"

அவன் அந்த இடத்தைச் சுற்றிப் பார்வையைத் தவழ விட்டான். சுவரில் வரிசையாகப் படங்கள். அறை நடுவே சாண்ட் லியர் விளக்கு ஒன்று. ஓர் ஓரமாக டி.வி. சின்ன ஷெல்ப் அருகே மேஜை. அதில் உள்ள புகைப்படத்திற்கு மாலை போட்டு வைக்கப்பட்டிருந்தது.

அவன் பார்வை அதில் நிற்க..

"என்ன தம்பி பார்க்கறீங்க? இவரு தான் என்னைய... எப்படிச் சொல்றது? நான் தாலி கட்டாத பெண்டாட்டியா இவர் கிட்டதான் இருந்தேன். என் தங்க ராசா. மனசு கோணாம வச்சுகிட்டு இருந்தாரு. இப்படியாகும்னு நினைக் கலையே.. பொட்டுனு போயிட் டாரு.. ஒரு வீடு கூட வாங்கித் தரலை. எனக்கு சாமர்த்தியம் இல்ல. பொண்ணைக் கைல வச்சுக்கிட்டு சம்பாத்தியம் இல்லாம இருக்க முடியுமா? அதான் தம்பி இப்படி..."

அவன் அவளை நிதானமாகப் பார்த்தான்.

"இது என் பெண்ணுக்கு அப்பா தாங்க. என்ன செய்யறது! தம்பிக்கு வசதி பட்டா எம் பொண்ணை சிறப்பா வச்சுக்கிட முடியும். வேற யாரும் இந்தப் படி ஏற விட மாட்டேன். என்ன சொல்றீங்க தம்பி? அவசரமில்ல. பொண்ணுகிட்ட பழகிட்டு யோசனை பண்ணுங்க."

"குடிக்க தண்ணி கொடுங்க முதல்ல"

அவள் அவசரமாக உள்ளே போய் வெள்ளித் தம்ளரில் தண்ணீரைக் கொண்டு வந்தாள்.

ஆனால் அவன் அங்கு இல்லை.

"அட தேவுடா. பய பயந்த வன்னு சிவா சொன்னானே.. நான் ஏதோ பேசி பயப்பட வச்சுட் டேனா?" என்று அவள் சொல்லிக் கொண்டே நின்றாள்.

அடுத்த வாரம் அதே நேரத்தில் அந்த வீட்டின் கதவைத் தட்டி னான் சிவா.

"அட, வாங்க தம்பி! என்னங்க சொல்லாம ஓடிப் போயிட்டீங்க, பயந்துட்டீங்களா?"

சரவணன் அமர்த்தலாக அமர்ந்து கொண்டான்.

"இந்தாங்க. இது வீட்டுப் பத்திரம். உங்க பொண்ணு பேர்ல வாங்கியிருக்கிற வீடு"

"அட.. என் பொண்ணைப் பார்க்கலை. அதுக்குள்ள அன்னிக்கு நான் சொன்னதை மனசுல வச்சுக்கிட்டு வீடே வாங்கிட்டீங்களா?"

"இல்லை.. எங்கப்பாவோட கடமையை நான் நிறைவேத் திட்டேன். அவர் வாங்கித் தந்திருக்க வேண்டிய வீடு இது. நான் வாங்கித் தந்திருக்கேன். மூணு லட்சரூபாய் பாங்கிலே போட்டிருக்கேன். வச்சு ஏதாவது பிஸினஸ் பண்ணட்டும். இனிமே என் தங்கச்சியைத் தேடி எவனும் படி ஏறி வரக்கூடாது."

சரவணன் திரும்பிப் பார்க் காமல் படி இறங்கினான். ●

---

வெடிகுண்டு கலாசாரமாய்
விலைவாசி ஏற்றமாய்
மதக் கலவரமாய்
மக்களின் ஏமாளித் தனமாய்
அரசியல் வாதிகளின் சூழ்ச்சியாய்
பக்தி மார்க்கமாய் வசியப்படுத்தும்
பல போலிச் சாமிகளாய்
காவலர்களின் பணியை மீறி
அவர்களே தவறு செய்வதாய்
நம் பண்பாட்டை இழிவுபடுத்தும்
பெண்களின் விபசாரமாய்
நெறி தவறிய செயல்களாய்
கும்மாளமிடும் வீணர்களின்
மடமையினைக்
கொளுத்துவோம்!

**மடமையைக் கொளுத்துவோம்!**

பா. நந்தகுமார்




**தி**ருமூலர் 8000 ஆண்டுகட்கு முன்னும், திருவள்ளுவர் 2000 ஆண்டுகட்கு முன்னும் நம் பாரத நாட்டில் தோன்றியவர்கள். திருமூலர் காலம் கி.மு.6000 முதல் கி.மு.100 வரையாகும். திருவள்ளுவர் காலம் கி.மு.75 முதல் கி.பி.36 வரையாகும்.

சுந்தரநாதன் என்ற தொன்மைத் திருப்பெயருடன் திருமூலர் முதன்முறையாகத் தென்னாட்டுக்கு பதஞ்சலி, வியாக்கிரபாதர்களுடன் வந்து தில்லையம்பதியில் கனகசபையிலே நடராசப் பெருமானுடைய நடனதரிசனம் கண்டது 8000 ஆண்டுகட்கு முன்னதாகும். அதன்பின் அவர் திருக்கயிலைக்குச் சென்று 3000 ஆண்டுகள் தவம் புரிந்தார். பின்னர் கி.மு.3100இல் மகாபாரதப் போர் முடிவில், அவர் பொதிகைமலை அகத்தியரைக் காண விரும்பித் திருக்கயிலையிலிருந்து வந்தார். திருமூலருக்கு இது இரண்டாவது தென்னாட்டு யாத்திரை ஆகும்.

திருமூலர் பொதிகைமலையை நோக்கி வரும் வழியில் சாத்தனூரில் மாடுகள் மேய்க்கும் மூலன் இறந்து கிடக்க, அவனது பசுக்கள் அவன் சடலத்தைச் சுற்றி நின்று அழக் கண்டார். அக்காட்சி கண்டு மனமிரங்கிய அவர் தம் உயிரை மூலன் உடம்பினுள், கூடுவிட்டுக் கூடுபாய்ந்து, புகுத்தி மூலனாக எழுந்து, தம் உடலை ஓர் அரசமரப் பொந்தில் சேமித்து வைத்தார். பின்னர் அங்கிருந்த பசுக்களின் துயர் நீக்கினார். அடுத்து தம் உடலை வைத்த இடத்தில் வந்து பார்க்க, அவ்வுடல் மறைந்ததை உணர்ந்தார்.

பின்னர், மூலனின் சரீரத்தோடு, 'திருமூலர்' என்ற பெயருடன் திருவாவடுதுறையை அடைந்தார். அங்கே கோயிலின் வெளிப் பிராகாரத்தில் வடமேற்கு மூலையில் இருந்த ஓர் அரசமரத்தடியில் 3000 ஆண்டுகள் யோகத்தில் அமர்ந்தார். ஆண்டுக்கு ஒரு பாடலாகத் 'தமிழ் மூவாயிரம்' பாடியருளினார். 'தமிழ் மூவாயிரம்' என்னும் நூலுக்குத் 'திருமந்திரம்' என்ற பெயரும் உண்டு.

திருமூலர் 5900 ஆண்டுகள் உலகில் உயிரோடு வாழ்ந்திருக்க முடியுமா? என்ற சந்தேகம் சாதாரணமாய் ஏற்படலாம். ஆனால், அவர் 'தமிழ் மூவாயிரத்தில்' பாடியுள்ள பின்வரும் பாடல்களால் அவர் அத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருக்கக் கூடுமெனத் திண்ணமாய் நம்பலாம்.

*'அண்டம் சுருங்கில் ஆக்கைக்கு அழிவில்லை,'* என்றும்,

*'காற்றைப் பிடிக்கும் கணக்கறிவாளர்க்குக்*
*கூற்றையுதைக்கும் குறியதுவாமே',* என்றும்,

*'உடம்பைவளர்க்கும் உபாயம் அறிந்தேன்*
*உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே.'*

என்றும், திருமூலர் தம் அனுபவத்தைக் கூறுவதிலிருந்து அவர்தம் ஆயுள் நீடிப்பை நாம் அறியலாம்.

உலகத்தார் உய்யும் பொருட்டு மேற்சொன்ன 'கூற்றை உதைக்கும்' முறைகளைத் தம் நூலில் அருளிச் செய்தார் திருமூலர். தாம் முத்தியடையுமுன் 'திருமந்திரத்தைத்' தமது

ஏழு சீடர்களுக்கும் போதித்து, பாரில் ஏழு மடங்களை ஏற்படுத்தி, பதி,பசு,பாச இலக்கணங்களை மக்களுக்குப் புகட்டும்படி செய்தார். 'தமிழ் மூவாயிரம்' பாக்கள் வரையப்பட்ட ஒரு சுவடியைத் திருவாவடுதுறை திருக்கோயிலின் முன்னர் இருக்கும் பலிபீடத்தின் கீழ் சேமித்து வைத்தார். அச்சுவடியைத்தான் கி.பி.634 முதல் கி.பி.650 வரை வாழ்ந்த திருஞானசம்பந்தர் எடுத்தார் என்பர்.

*"மூலன் உரைசெய்த முப்பது உபதேசம்*
*மூலன் உரைசெய்த முந்நூறு மந்திரம்*
*மூலன் உரைசெய்த மூவாயிரந் தமிழ்*
*மூலன் உரை செய்த மூன்று மொன்றாமே."*

'திருமூலர் அருளிய திருப்பாடல்கள் முப்பது உபதேசம், முந்நூறு மந்திரம், மூவாயிரந் தமிழ் ஆகியவை ஒரே உண்மையினை உரைத்தருளுவனவாகும்' என்பர் ஆன்றோர்.

திருவள்ளுவர் பிறப்பதற்கு 25 ஆண்டுகட்கு முன்னர் தான் திருமூலர் 'தமிழ் மூவாயிரம்' என்னும் நூலை இயற்றிவிட்டு முத்தியடைந்தார். அந்நூலை, திருவள்ளுவர் நன்கு கற்றுள்ளார் என்பது அவரது திருக்குறளில் நன்கு புலனாகிறது. அவர் தம் குறளில் கையாண்ட சில பகுதிகளே அதற்கு அத்தாட்சியாகும்.

"ஆரும் அறியார் அகாரம் அவனென்று என்று திருமந்திரம் கூறுவதை, அகரம் முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன்" எனக் கையாளுகிறது குறள். "பொருளது வாய்நின்ற புண்ணியன்" என்னும் திருமந்திர வாசகம், "பொருள் சேர் புகழ் புரிந்தார்" என்னும் குறளில் வருகிறது. "எண் சக்தி தூய்மையும்" என்னும் திருமந்திரம், "எண்குணத்தான்" என்ற குறளில் ஒலிக்கிறது. "அறவாழி அந்தணன் ஆதிபராபரன்" என்னும் திருமந்திரம்," "அறவாழி அந்தணன் தாள்" எனக் குறளில் வருகிறது "ஆமே சுவை ஒளியூ றோசை நாற்றம்" எனும் திருமந்திரம்," "சுவை ஒளியூறோசை நாற்றமென்றைந்தின்" எனக் குறளில் கையாளப்படுகிறது. இவ்விதம் எத்தனையோ சான்றுகள் உள்ளன.

இங்ஙனம் திருமூலரின் திருமந்திரத்தை நன்கு கற்றுத் தேர்ந்து கையாண்ட திருவள்ளுவர், "அணுவைத் துளைத் தேழ் கடலைப் புகுத்தி, குறுகத் தறித்த குறளை," மனித சமுதாயத்திற்கு, தீந்தமிழில் திறம்படத் திரட்டித் தந்த தெய்வப் புலவராவார். தமிழ்மொழிக்கு உலகப்புகழ் தேடித்தந்த ஒப்பற்ற தமிழறிஞர் அவர்.

அரிய மானிடப் பிறவி எடுத்த நாம் பெற வேண்டிய பேறுகள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பவையாகும். இந்நான்கினுள் முன்னைய மூன்றாகிய அறமும், பொருளும், இன்பமும் இம்மண்ணுலகில் நாம் அனுபவிக்க வேண்டியவையாகும். அவற்றை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பாலாகக் கொண்டு குறளை இனிது இயற்றியவர் வள்ளுவர். மொத்தம் 1330 அரும் பாக்களை மனிதகுலத்திற்கு, ஏன் உலகிற்கே, வாழ்க்கை நெறிக்கான அறிவுரையாக அருளியவர் அவர்.

பொதுவாகக் கூறின், வள்ளுவர் தம் குறளில் உறுதியாக வலியுறுத்த முயல்வது அறம் ஒன்றேயாகும். அடுத்து, ஒழுக்கம், உயர்வைக் கொடுக்கும் என்பதனை ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம், உயிரினும் ஓம்பப்படும்" என்னும் குறளால் விளக்குகிறார். கல்வி, இல்லறம், வெகுளாமை, மது சூது ஒழிப்பது எல்லாம் நல்லது என்று கூறும் வள்ளுவரிடம், ஒரே ஒரு நல்லதைக் கூறுங்கள் என்றால், "ஒன்றாக நல்லது கொல்லாமை" என்கிறார். கொல்லாமைக்கு அடுத்தபடியாகப் பொய்யாமையே நல்லதெனக் கருதுகிறார். அதனையே, "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று" என்கிறார். இவ்விதம் குறளில் பல அறிவுரைகள் கூறப்படுகின்றன.

மக்களுக்கு இன்றியமையாத ஆன்மிக அறநெறிகளைத் திருமூலர் தம் திருமந்திரத்திலும், உலக வாழ்க்கை அறநெறிகளைத் திருவள்ளுவர் தம் திருக்குறளிலும் வெகு விளக்கமாக வகுத்துரைத்துள்ளனர். அவற்றை நாம் கசடறக் கற்றுத் தேர்ந்து, பொருளுணர்ந்து தெளிந்து, கடைப்பிடித்து நம் பிறவிப் பயனைப் பெறுவது நமது கடனாகும்.

## ஓ! உறவுகளே!




வெளிச்சத்தில் உடலை
விடாது துரத்தும் நிழல்
இருளைக் கண்டதும்
எங்கே ஓடி ஒளிந்தது?
துன்பம் வரும்போது
தொலைந்து போவதுதான் "நட்போ?"

உயரே மிதக்கும் மேகங்கள்
உருக்குலைந்து மழையாய்
மண்ணில் விழ
எக்காள இடிச்சிரிப்பு எதற்கு?
உனது வீழ்ச்சியில்
உல்லாசப்படுவதே "உடன்பிறப்போ?"

ஒளியை உற்பத்தி செய்து
ஊருக்கே அளித்தாலும்
'நிலவாய்' நெஞ்சு குளிராமல்
எல்லார்க்கும் என்னால் உயர்வு
என்றே வயிறு எரியும் சூரியன்தான்
"சொந்தங்களோ?"



தங்க. சிவராசன்

# சுகம் சுமையாகிறது



## டி.வி.ஆர்.

"நாம ஒருத்தரை ஒருத்தர் சந்திச்சிட்டதே தவறு, வித்யா!"

"அது தவறில்லை சுரேஷ்! விபத்து"

"உன் கணக்குப்படி அது விபத்தாகவே இருக்கட்டும். அதில இரண்டு பேருமே பலியாகிட்டோம்."

"எனக்கு அப்படித் தோணலை."

"பின்னே எப்படித் தோணறதாம்?"

"விபத்திலிருந்து மீண்டிருக்கலாம். நீங்க உங்க வக்கீல் பாதையிலே போயிருக்கணும். நான் என் டாக்டர் வழியிலே நடந்திருப்பேன்."

"அதுதானே இப்ப நடந்துட்டிருக்கு?"

"நீங்க என்ன சொல்றீங்க சுரேஷ்?"

"பின் என்ன, கார்த்தால எட்டு மணி அடிச்சா கிளினிக்குக்கு ஓடிடறே!"

"அந்த வேளையிலே நீங்க கேஸ் கட்டுலே மூழ்கிடறீங்க.. போயிட்டு வரேன்னு நான் குரல் கொடுத்தாக்கூட பதில் குரல் இல்லை".

"நீ மத்தியானம் ஒரு மணிக்கு வர்றே, வித்யா!"

"அது வரையில் மிலாட் யுவர் ஹானர்னு நீங்க கோர்ட்ல போராடிட்டு டிபனை வெட்டக் கேண்டீனுக்கு ஓடறீங்க".

"நான் சாயங்காலம் அஞ்சு அஞ்சரை மணிக்கு வர்றப்ப நீ உன் கிளினிக்ல இருக்கே"

"எல்லா டாக்டர்களுமே சாயங்காலம் தான் நோயாளிகளைக் கவனிப்பாங்க."

"சில நாள் நீ வர்றப்ப இராத்திரி பத்துமணி கூட ஆயிடறது".

"என்ன செய்ய...? தொழில் சுமை"

"இதனாலதான் குடும்பச்சுமை இல்லை... வாழ்க்கை சுமை இல்லை.."

"ஏன் சுகத்தை சுமைன்னு வர்ணிக்கிறீங்க சுரேஷ்?"

"சுகமா? வாழ்க்கை சுகமா...? கல்யாணமான இரண்டு மூணு நாளுக்குத் தானே மனசு விட்டும் பேசியிருக்கோம், சிரிச்சிருக்கோம்?"

"ஏன், கொஞ்சி விளையாடியும் இருக்கோம். நம்ம கோவா ஹனிமூன் போட்டோவைக் காட்டட்டுமா?"

"போட்டோவைப் பார்த்துப் பெருமூச்சு விடச் சொல்றியா வித்யா?"

"சரி. ஒகே. இப்ப என்ன செஞ்சா சுகம் கிடைக்கும்? நான் இராத்திரி வர்றப்ப ஒண்ணு நீங்க கேஸ் கட்டோடு போராடிட்டிருப்பீங்க.. அல்லது டி.வி. பார்த்துட்டிருப்பீங்க.. நான் சுக்கா ரொட்டியை இழுத்து இழுத்துக் கடிச்சிட்டிருப்பேன்"

"நாம இப்படிப் பேசிட்டே போறதில் புண்ணியமில்லை வித்யா! நமக்குன்னு ஒரு நேரம் வேணும். அந்த நேரம் ஒரே ஒரு மணி நேரமானாக்கூடப் போதும்".

"நானும் ஒத்துக்கறேன் சுரேஷ்! இப்படிச் செய்யட்டுமா?"

"எப்படி?"

"கிளினிக் வேலையை முடிச்சுட்டு கரெக்டா ஒரு மணிக்கு கோர்ட்டுக்கு வரேன். நீங்க சேம்பர்ஸ்ல ரெடியாயிடுங்க. நான் டிபன் காரியர்ல சாப்பாட்டை எடுத்துட்டு வரேன். இரண்டு பேரும் சேர்ந்து அமர்க்களமாச் சாப்பிடுவோம். தினமுமா மத்தியானங்கள்ல கேஸ் இருக்கப் போறது? இல்லாத நாள்ல வீட்டுக்கு வந்துடுவோம்"

"நல்ல ஐடியா"

"இன்னும் கேளுங்க... கிளினிக்கை இப்ப அஞ்சு மணிக்குத் திறக்கறேன். நாளையிலிருந்து நாலுமணி. சரியா எட்டு மணிக்கு டான்னு வந்துடறேன்."

"எட்டு மணிக்குப் பிறகு?"

"டாக்டர் பத்மா கவனிச்சுப்பா.

எக்ஸ்ட்ர்ராவா ஆயிரம் ரூபா கொடுத்தாப் போதும்''.

''ஓகே''

''ஆனா ஒரு கண்டிஷன்''

''என்ன வித்யா?''

''நீங்க கேஸ் கட்டைத் தொடக் கூடாது.''

''உன்னையே தொட்டுட்டிருக் கணும்னு சொல்ல வர்றியா?''

''அது நான் சொல்லாமலே நீங்க வழக்கமா செய்யறதுதானே... இப்பக் கூட அதானே நடக்கிறது?''

''ஏதேனும் பெரிய கேஸ்னு வந்தா...''

''அதே மாதிரி சில எமர்ஜென்ஸி கேஸ்கள் எனக்கும் வரும், சுரேஷ்!''

''அப்படிப்பட்ட கேஸ் ஒண்ணுதானே எனக்கு இரண்டு வருஷம் முன்னாடி வந்து அதில நானே மாட்டிக்கிட்டேன் வித்யா!''

''என்னையும் மாட்டி விட்டீங்க சுரேஷ்!''

''ஒரு பக்கத்துக் காதல்னா நீ இப்படி பேசியிருக்கமாட்டே...''

''சே, ஒரு காதல் போயும் போயும் ஒரு கோர்ட்ல, ஒரு கேஸ்ல, ஒரு சாட்சிக் கூண்டிலேயா பிறக்கணும் சுரேஷ்?''

''எத்தனையோ குழந்தைகள் பிளேன்ல, பஸ்ல ரெயில்ல ஏன் கட்டை வண்டிகள்லே பிறக்கிற மாதிரி நம்ப கேஸ் கோர்ட்ல பிறந்தது. அது என் தவறில்லை. நீ சாட்சியா வந்ததுதான் தவறு, வித்யா!''

''நானா எனக்குப் பொழுது போகாம, வேற வேலை இல்லாம ரோட்ல நடக்கறப்ப கோர்ட் கட்டடம் தெரிந்ததுன்னு குடுகுடுன்னு ஓடிப் போய் சாட்சிக் கூண்டில் நின்னேன்?''

''என்ன செய்ய? எதிர் தரப்புக் காரங்க உன்னை சாட்சி சொல்ல இழுத்தாங்க...''

''உண்மையா அன்னிக்கு எனக்கு உடம்பே வெடவெடத்துப் போயிட்டது. ஒரு குற்றவாளி மாதிரி நிக்கறதாப் பட்டது. ஆனா இப்ப நினைச்சுப் பார்த்தா....''

''சிரிப்பு வர்றதா வித்யா?''

''இல்லை, அழுகை வர்றது''

''ஏனாம்?''

''காதல் பிறந்த இடமாச்சே.''

''காதல் பிறந்தா அழுகை வராது. அதுக்குப் பிறகு கலியாணம் நடந்தாத் தான் அழுகை வரும்.''

''சரி. சரி... எப்ப வந்தால் என்ன...?''

''அந்தக் காட்சி இன்னும் என் மனசை விட்டு மறையலை வித்யா!... நீ இளம் நீலக் கலர்ல ரொம்ப அழகா, புடைவை கட்டிட்டிருந்தே.. அதே கலர்ல சோளி, அதே கலர்ல காதில் ஸ்டட்... அதே கலர்ல...''

''தலையில சின்ன ப்ருச். கொண்டையில நைலான் ரிங். கால்ல செருப்பு...''

''அடடே இதையெல்லாம் நான் கவனிக்கலையே வித்யா...''

''வர்ற ஞாயிற்றுக்கிழமை அதே மாதிரி டிரஸ் பண்ணிக் காட்டறேன் போதுமா...?''

''அதே மாதிரித்தானே? அல்லது அதே புடைவை சோளியா? பழசாப் போயிருக்கும். ஆமாம், நான் இவ்வளவு ஞாபகம் வைச்சுட்டிருக்கேனே, நீ எதையெல்லாம் நினைவில வைச்சுட் டிருக்கே?''

''வெள்ளை பேண்ட், கறுப்புக் கோட், கறுப்பு கவுன், கறுப்பு மீசை, கறுப்புத் தலை. கொஞ்சம் சிவப்பான முகம். இடக்கை விரல் மோதிரம், வலக் கையில் ஒரு கேஸ் கட்டு.''

''ஞாயிற்றுக்கிழமை அதே மாதிரி...''

''அதே டிரஸ்ஸா, அதே கேஸ் கட்டா...? பழசாப் போயிருக்கும். ஆனா மீசைக்கு என்ன பண்ணுவீங்க சுரேஷ்?''

''மேக் அப்''

''எனக்கு இன்னும் வார்த்தைகள் கூட மறக்கலை...''

''எங்கே சொல்லேன் பார்ப்போம்''

''என்ன விளையாட்டா இருக்கா சுரேஷ்?''

''ப்ளீஸ்''

''ஓகே... சொல்லட்டுமா?''

''ஐம் ரெடி.''

''இதோ! 'உங்க பேரு? வித்யா–மிஸ்ஸா மிஸஸ்ஸா? அதுக்கும் கேஸுக்கும் என்ன சம்பந்தம் அட்வகேட் சார்? ஓகே. சார் போட்டுப் பேசினதனாலே மேலே கேட்கலை.. உங்க தொழில்.. டாக்டர்... கவர்ன் மெண்ட்டா? இல்லை. அப்ப பிரைவேட் பிராக்டிஸ், அதோ அங்கே நிக்கற சிங்காரிங்கற பெண்மணி உங்க பேஷண்ட்டா.. இப்ப அவ பேஷண்ட் மாதிரியா இருக்கா சார்...? வக்கீல் கிட்ட எதிர்க்கேள்வி கேட்கப்படாது. ஸாரி சார். தட் இஸ் ஒகே. அவ உங்ககிட்ட வைத்தியம் பார்க்க அடிக்கடி வருவாளா? தேவை ஏற்படறச்சே. எப்பத் தேவை ஏற்படும்? மூஞ்சியிலே தோள்பட்டையிலே, மண்டையிலே, இடுப்பிலே காயங்கள் ஏற்படறச்சே. எப்படி இப்படி காயங்கள் ஏற்படறதுன்னு தெரியுமா? எனக்காகத் தெரியாது. அவளை விசாரிச்சப்ப தெரிய வந்தது–என்ன தெரிய வந்தது? அவ புருஷன் குடிச்சுட்டு வந்து அடிச்சதனால வந்த காயங்கள்னு சிங்காரி சொல்லுவா–யுவர் ஹானர் ப்ளீஸ் நோட் திஸ் பாயிண்ட். யெஸ், நோட்டட்.யூ மே கோ மிஸ் ஆர் மிஸஸ் டாக்டர். வித்யா... எப்படி என் ஞாபக சக்தி சுரேஷ்?''

''பிரமாதம். ஆனா அதைவிடப் பிரமாதம் நீ கோர்ட் கலைஞ்சப்புறமும் கூட என்னைப் பார்க்கணும்னு காத்துட் டிருந்தது...''

''கேஸ் எப்படிப் போகும்னு தெரிஞ்சுக் கத்தான்...''

''இதை நீ உன்னை சாட்சிக்கு

இழுத்த வக்கீல்கிட்டேயே கேட்டிருக்க லாமே''

''அது ஒரு முசுடு''

''அப்ப நான் முசுடு இல்லையா?''

''என்ன செய்யறது, என் தலை யெழுத்து, நீங்க ஸ்வீட்டா இருந் தீங்க...''

''நீயும் ஸ்வீட்டா இருந்ததால்தான் உன்னை லஞ்சுக்கு இன்வைட் பண்ணி னேன். அம்மா டிபன்பாக்ஸ்ல போட்டுத் தந்திருந்த இட்லி மிளகாய்ப் பொடியைத் தியாகம் பண்ணிட்டு ஒரு பெரிய ஒட்டல்ல ஸ்வீட், மசால்தோசை, ஐஸ்கிரீம் எல்லாம் உனக்கு உபசரித்தேன்...''

''ஐஸ்கிரீம் இல்லை!''

''பின்னே என்ன?''

''நீங்க வாங்கித்தந்தது ஃப்ரூட் ஸாலட்''.

''அதுக்குப் பிறகு நாம எத்தனை முறை ஒட்டலுக்குப் போயிருப்போம்?''

''பதினேழு முறை''

''பதினெட்டாவது முறை போனது தான் கோவாவில ஹனிமூன் போனது''.

''அப்ப நாம் ஒட்டலுக்குப் போகலை...''

''பின்னே?''

''ஒட்டல்லேயே தங்கினோம்''

''சரி. இப்ப என்ன செய்யறது?''

''இன்னும் என்ன இருக்கு சொல்ல? அதுதான் மலரும் நினைவு அலைகள்ல நன்னாவே நீந்தியாச்சே''

''இப்படி எத்தனை நாள்தான் நீந்தறதோ சுரேஷ்?''

''வித்யா!''

''என்ன சுரேஷ்?''

''கேட்கப்படாத கேள்வியைக் கேட்கிறேன். பதில் சொல்லுவியா?''

''சொல்றேன்''

''உனக்கு உன் டாக்டர் தொழில்ல சுமாரா மாசம் என்ன வருமானம் வர்றது?''

''மொத்தமாகவா, நிகரமாகவா?''

''நிகரமாத்தான்''

''சில மாசம் பத்தாயிரம். சில சமயம் பன்னிரண்டாயிரம். ஸம்மர் வந்தா டல்... பாதிப்பேர் வெளியூர் போயிடு வாங்க. அப்ப அஞ்சாயிரம் ஆறாயிரம் கூட வராது...''

''போன வருஷம் இன்கம்டாக்ஸ் கணக்குக்கு என்ன காட்டினே?''



“பொய்க் கணக்கு எழுதாம காட்டினேன். ரூபாய் லட்சத்து எட்டாயிரத்து சொச்சம். எக்கச்சக்கமா டேக்ஸும் கட்டினேன். ஆமாம் ஏன் திடீர்னு இதையெல்லாம் இப்பக் கேக்கறீங்க, சுரேஷ்?”

“உன் பாடு எவ்வளவோ பரவாயில்லை. சொல்லப்போனா நீ என்னைவிட அதிகமாகவே சம்பாதிக்கறே.. என் பார்ட்னரும் நானும் மாசம் பத்தாயிரம்னு சம்பளமா எடுத்துக்கறோம். விடுமுறை மாசங்கள் வந்தா கட்சிக்காரன் வர்றதில்லை. என்னுடைய நிகர வருமானம் தொண்ணூறாயிரம்தான்.”

“பணமா பெரிசு?”

“பணம் பெரிசில்லைன்னா எப்படி நீ ஒரு கார்ல, நான் ஒரு காரிலன்னு போகமுடியும் வித்யா? கோர்ட்ல ஒருவித அவதி. வீட்ல இன்னொருவித அவதி.”

“வீட்ல என்ன அவதி சுரேஷ்?”

“நம்ப தாம்பத்தியம் தான். புருஷன்–பெண்டாட்டி நம்ம இஷ்டத்துக்கு அரட்டை அடிக்கக்கூட முடியறதில்லை. ஒரு பக்கம் கேஸ்கட்டு, கோர்ட், இன்னொரு பக்கம் கிளினிக், ஸ்டெதாஸ்கோப். இப்படியே தெருவில தினசரி மீட் பண்றமாதிரி இருந்தா தாம்பத்தியத்ல என்ன சுகம் இருக்கும் வித்யா?”

“இதை நானும் உணர்றேன்”

“உங்களுக்கு கோர்ட்டை விட்டா கதி இல்லை. எனக்கு என் தொழிலே சரியாயிருக்கு”.

“இதுக்கும் ஒருமுடிவு வரணும் வித்யா! வந்துடும்னு நினைக்கிறேன்”.

“எப்படி?”

“அடுத்த வாரம் சொல்றேன்”.



“அடுத்த வாரம் சொல்றேன்னு போனவாரம் சொன்னீங்களே என்ன அது?”

“நீ அடுத்த மாசத்திலேர்ந்து கிளினிக்குக்குப் போகவேண்டாம்”.

“என்ன உளர்றீங்க, சுரேஷ்? டாக்டர் தொழிலை விட்டுடச் சொல்றீங்களா....?”

“இல்லை...”

“வீட்டிலேயே பார்க்கச் சொல்றீங்களா?”

“அதுவும் இல்லை”.

“பின்னே?”

“உன் கிளினிக்கை டாக்டர் பத்மாகிட்டே ஒப்படைச்சுடு. அவ வேற ஒரு டாக்டரைக் கூட்டாளியா வைச்சுக்கிட்டுத் தொழிலை நடத்தறதானா நடத்தட்டும்”

“எனக்கு ஒண்ணுமே புரியலை சுரேஷ்!”

“பத்து மணியிலிருந்து ஒரு மணி வரை டியூட்டி. பிறகு மூணு மணியிலிருந்து சரியா அஞ்சரை மணி வரை. சகல வசதிகளும் உண்டு. இரண்டு நர்ஸ், ஒரு பியூன், ஒரு லேபரட்டரின்னு சகல வசதிகளும். மாசம் இருபதாயிரம் ரூபாய் சம்பளம். ஆறுமாசம் புரொபேஷன். பிறகு வேலை உறுதி. உறுதியான நாள்லேயிருந்து மாசம் இருபத்தஞ்சாயிரம். வருஷம் மூணு லட்சம். என்ன சொல்றே? மெடிகல் ஆபீசர்னு பதவியின் பேரு. என்ன சொல்றே?”

“முடிச்சாச்சா?”

“ஏன் இப்படிக் கேட்கறே?”

“கார்த்தாலே ஒன்பதரை மணியிலிருந்து பிற்பகல் ஒரு மணி வரை டியூட்டி. பிறகு லஞ்ச். மறுபடியும் இரண்டு மணியிலிருந்து சாயங்காலம் அஞ்சரை வரை. சம்பளம் மாசம் இருபதாயிரம் ரூபாய். வேலை உறுதியானதும் இருபத்தஞ்சாயிரம். கார், வீடு, பதவியின் பெயர் லீகல் அட்வைசர். ரொம்ப முக்கியமான கேஸ்கள்னு வர்றப்ப பம்பாய், கல்கத்தா, டெல்லின்னு பறக்க வேண்டியிருக்கும். மெட்ராஸ் ஹைகோர்ட்டுக்குப் போக வேண்டியிருக்கும். இப்ப கைவசம் இருக்கிற கேஸ் கட்டுகளை உங்க பார்ட்னர்கிட்ட கொடுத்துடணும். சம்மதமா?”

“முழுச்சம்மதம். ஆனா எந்தக் கம்பெனிக்கு லீகல் அட்வைசர்?”

“நான் எந்தக் கம்பெனிக்கு மெடிகல் ஆபீஸர்?”

“ஓர் அமெரிக்கன் கம்பெனி. போனவாரம் எம்டியைப் பார்த்து தான் பேச்சோட பேச்சா மெடிகல் ஆபீசர் தேவையில்லையான்னு கேட்டேன். உடனே தேவைன்னான். என் ஒய்ஃப் ஓர் எம்டி.ன்னேன். பயோடேட்டா கேட்டார். போட்டோவோட கொடுத்தேன். மறுநாளே போன் பண்ணிட்டார்”.

“யாரு எம்.டி? தியாகராஜனா?”

“உனக்கு அவனைத் தெரியுமா வித்யா? அவன் என்கூட சட்டம் படிச்சுட்டு அமெரிக்காவில் ஹார்வர்ட்ஸ் எம்பிஏ படிக்கப் போனான்”.

“அவனோட ஒய்ஃப் கவிதா என்னுடைய ஒண்ணுவிட்ட அத்தை பொண்ணு. நீங்க பயோடேட்டா கொடுத்த அன்னிக்கு இராத்திரியே கவிதா கிளினிக்குக்கு வந்தா. நிரம்பி வழிஞ்ச கூட்டத்தைப் பார்த்து அசந்து போயிட்டா. இரண்டு பேரும் ஊர் சமாச்சாரம் பேசிட்டு என் கதைக்கு வந்தோம். ஆனா நான் ஒரு கண்டிஷன் போட்டேன்”.

“அந்தக் கண்டிஷன் காரணமாத் தான் எனக்கு லீகல் அட்வைசர் பதவி கிடைச்சிருக்கு”

“என்னோட ஒண்ணுவிட்ட அத்தை பொண்ணாச்சே.. நான் கேட்டதைத் தராம இருப்பாளா....?”

“லா காலேஜ்ல என்னோட படிச்ச தியாகராஜன் ஆச்சே... என் வேண்டுகோளை மீறுவானா?”

“தம்பதின்னா இப்படித்தான் பரஸ்பரம் உதவி செய்யணும். அதுதான் தாம்பத்தியத்துக்கு அழகு”.

“தியாகராஜனும் அவனோட ஒய்ஃப்பும்...”

## கனித்தமிழ்த் தாயவளாம்!

பொங்கும் கடலலை போலொரு நங்கை
புறப்பட்டு வந்தாளாம் - அவள்
பொதிகை மலையில் புதுமைப் பெண்ணாய்
பூரிப்பில் வளர்ந்தவளாம்!

சங்கம் மூன்றில் மதுரை மண்ணில்
சரித்திரம் படைத்தாளாம் - அவள்
அங்கம் எங்கும் அணிகலன் பூண்டே
அழகாய் மிளிர்பவளாம்!

உலகம் எங்கும் ஒயிலாய் நடந்தே
உயர்ந்து நின்றவளாம் - அவள்
பலப்பல நாட்டில் மைந்தரைப் பெற்றே
பார்த்து மகிழ்ந்தவளாம்!

எண்ணற்ற மொழிகள் போட்டியிட்டாலும்
எதிர்த்து வென்றவளாம் - அவள்
அன்றும் இன்றும் அழியா இளமை
அணங்காய் நின்றவளாம்!

தோன்றிய காலம் யாதென் றறியாத்
தொன்மையைப் பெற்றவளாம் - அவள்
நீண்ட பெருமையை நிலத்தில் பெற்றே
நிமிர்ந்து வாழ்பவளாம்!

அன்னையாய் உலகோர் அனைவரும் போற்றிடும்
அருந்தமிழ்த் தாயவளாம் - அவள்
கண்ணின் மணியாய் மக்களைக் காத்திடும்
கனித்தமிழ்த் தாயவளாம்!

நல்லை வீ.கோவிந்தராசன் எம்.ஏ.எம்.எட்

## எங்கள் இந்தியா



எங்கள் இந்தியா எளிமையானது
பொங்கும் அன்பினால் புகழைச் சேர்த்தது
புனிதப் போரிலே வெற்றி பெற்றது
மனித நேயத்தில் நிறைவு தந்தது
எங்கள் இந்தியா! எங்கள் இந்தியா!

நாட்டு ஒற்றுமை கண்கள் போன்றது
நல்ல பண்புகள் நிலைத்து நிற்பது
சொல்லும் சொற்களோ தூய்மையானது
சுறுசுறுப்பு தான் வீறு பெற்றது
எங்கள் இந்தியா! எங்கள் இந்தியா!

புத்தன் தத்துவம் பூத்து நின்றது
புதிய வேதமாய்ப் புகழைப் பெற்றது
ஆன்ம நேயத்தில் ஆழமானது
ஆயிரங்காலம் ஆட்சி செய்தது
எங்கள் இந்தியா! எங்கள் இந்தியா!

இந்திய நாட்டை என்றும் காப்பது
இளைஞர் நமது கடமையானது
இணைந்து வாருங்கள் உறுதியாகவே
உலக அரங்கிலே தலைமை தாங்கவே
எங்கள் இந்தியா! எங்கள் இந்தியா!

கவிக்குரிசில்
ஐ.ஆர்.பெருமாள்

"நான் அந்தத் தம்பதியைச் சொல்லலை..."

"பின்னே?"

"இந்தத் தம்பதியை. எனக்கு மெடிகல் ஆபீசர் பதவி! நீங்க வாங்கிக் கொடுத்தது....."

"எனக்கு லீகல் அட்வைசர் பதவி. நீ சிபாரிசு செய்தது".

"இதிலேயும் ஒரு சிரமம் இருக்கு சுரேஷ்!"

"என்ன சிரமம் வித்யா?"

"ஒரே ஆபீஸ். ஒரே சமயம் வீடு திரும்பனும். சதா சர்வகாலமும் வீட்ல ஒரே மூஞ்சியையே பார்த்துட்டிருக்கனும். சுத்த போர்".

"என் மூஞ்சி உனக்கு போரா இருக்கா?"

"என் மூஞ்சியும் உங்களுக்கு போர் அடிக்காதா என்ன?"

"அப்படி அடிச்சா இப்படிச் செய்வேன்..."

"விடுங்கோ... விடுங்கோ. கன்னம் வலிக்கிறது. உதடு எதுக்கு இருக்காம்?"

●



**வானவன் மாதேவி ஈசுவரம்– பச்சைவெளியில் ஒரு கருங்கல் காவியம்.**

ஈழத்தின் வடமத்திய ப்பகுதியில் பசுமைச் சூழலில் ஒரு கருங்கல் காவியமாக நின்று கொண்டு தன் அடியவரை வருந்தி அழைக்கும் இக்கோயிலின் குரல் இப்போதும் அங்கு கேட்கும்.

# பொலன்னருவையின் வானவன் மாதேவி ஈசுவரம்

## தேவமணி ரஃபேல்

ஓர் அதிகாலை வேளையில், நாம், கொழும்பி லிருந்து பொலன்னருவைக்கு 'கோயில் உலா' புறப்பட்டபோது, 'நீங்கள் மனம் நொந்து திரும்பி வரப் போகிறீர்கள்' என்று ஓர் அன்பர் எச்சரிக்கை விடுத்தார். "நீங்கள் பார்த்த கோயில்களைப் போன்றல்லாமல் வெறும் இடிபாடுகளைச் சந்திக்கப் போகிறீர்கள்" என்றார் அவர். கவலையாக இருந்தது.

ஆனாலும், நாம் தமிழ்நாட்டில் காணாத இடிபாடுகளா என்று நினைத்துக் கொண்டாலும்கூட, வானம் பொத்துக் கொண்டதோ என்று ஐயுறும்வண்ணம், அந்த அதிகாலை வேளையிலும் கொட்டிய மழை எம்மை அச்சுறுத்தவே செய்தது. ஆனால்-

நாம் நண்பகல் வேளையில் பொலன்னருவையில் இறங்கியபோது, நல்ல வெயில் எம்மை வரவேற்றது. முன்தினம் பெய்த மழையில், தூசும் தும்பும் நீங்கிய நிலையில், ஒளிப்படம் எடுப்பதற்குத் தகுதியான கதிரவனின் ஒளி வெள்ளத்தில் அந்தப் பகுதியே பளபளத்தது. அந்த ஊரில், குரங்குகளைப் பாதுகாக்கும் ஓர் இயக்கத்தில் பணிபுரிந்த அன்பர்



ஒருவர் எமக்கு அறிமுகம் ஆனார். இவர் அகழ் வாய்வில் ஆர்வம் உடையவராய், அதையே பல்கலைக்கழகத்தில் ஒரு பாடமாகவும் கற்றவராம். "இங்கே 34 இந்துக் கோயில்கள் உள்ளன. நீங்கள் எதைப் பார்க்கவேண்டும்?" கேட்டார் அந்த அன்பர். "எல்லாவற்றையும் தான். ஆனால் குறிப்பாகச் சிவன் கோயில் எண்.2" என்றோம். "ஏதோவொரு 'மாதேவி ஈசுவரம்' என்பார்களே அந்தக் கோயிலா?" நண்பர் வினவினார். "அதே தான். அதன் சரியான பெயர் வானவன் மாதேவி ஈசுவரம்" என்றோம். "வாருங்கள் போகலாம்" என்ற அவரை, படபடக்கும் மனத்துடன் தொடர்ந்து சென்றோம்.

அழகிய உயர்ந்த மரங்கள் சூழ்ந்த ஒரு புல்வெளியில் திடீரென முளைத்தது போன்று கருங்கல் அடுக்கில் நின்றது கோயில். "இதுதான் நீங்கள் தேடிவந்த சிவன் கோயில் எண் இரண்டு" என்றார் நண்பர். ஒரு கணம் எமக்குக் கனவு போல் இருந்தது. அருகில் சென்று கோயிலைத் தொட்டுத் தடவிப் பார்த்தோம். தமிழ்நாட்டில் உள்ள பழம் பெருமைமிக்க சில கற்றளிகள் போன்றல்லாது, 'இந்தக் கருங்கல் தளி, ஆயிரம் ஆண்டுகள் கடந்தும் இவ்வளவு நல்ல நிலையில் நிற்பதைக் கண்டபோது எம் கண்கள் பனித்தன. கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்தோம். "உள்ளே போகலாம். வழிபாடுகள் செய்துவிட்டு இப்போதுதான் பூசாரி போனார்" என்றார் எமது வழிகாட்டி. நாம் கோயிலின் இப்போதைய வாயிலில் ஒரு கணம் தயங்கி நின்றோம்.

**வானவன் மாதேவி ஈசுவரத்தை ஒட்டினாற்போல் மற்றுமொரு சிவன் கோயில் இருந்ததற்கு அடையாளங்கள் காணப்படுகின்றன.**

கம்போடியா வரை சென்று தன் ஆளுமையையும் வீரத்தையும் நிலைநாட்டி உலக அளவில் ஒரு தாக்கத்தை ஏற்படுத்திய பேரரசர் இராசேந்திர சோழ தேவரின் கால்பட்ட கோயில் இது. இவர் உருவாக்கிய கோயில்கள் பலவற்றை நாம் வணங்கியிருக்கிறோம். இந்த இடத்தில் தான் மன்னர் நின்றார்' என்று கூறப்பட்ட இடங்களையும் பார்த்திருக்கிறோம். ஆனால் பொலன்னறுவையின் இந்தக் கோயில் அவருடைய எல்லாக் கோயில்களிலும் மாறுபட்டது. இது அவருடைய வீரம் விளைந்த மண். இக்கோயில் அவருடைய வெற்றியின் ஒரு சின்னம்.

கோயிலை எழுப்பிய பேரரசர் முதல் இராசேந்திரனின் கல்வெட்டு "திருமன்னி வளர" என்று தொடங்கும் இக்கல்வெட்டின் இப்போது எஞ்சியுள்ள பகுதி



கோயிலுக்கு விளக்கு ஒன்று அளிக்கப்பட்டதைக் கூறும் கல்வெட்டுகளின் பகுதிகள்.

கடவர்களாக இசைந்து
(விளக்கு எரிக்க)

கைக்கொண்ட காசு அஞ்சு

தெற்குப்புறத்து பட்டிகையில் காணப்படும். "திங்களேர் மலர்ந்து..." எனத் தொடங்கும் அரசன் அதிராசேந்திரனின் சாசனம்

கோயிலின் பெயரையும், ஊரின் பெயரையும் கூறும் கல்வெட்டுகள் கோயிலின் தெற்குப்புறச் சுவரில் காணப்படுகின்றன



ஜனநாத புரத்து



உடையார் வானவன் மாதேவி

எத்தனை முறை இந்தக் கோயிலுக்கு வந்திருந்து, அந்தத் தமிழ் மன்னர் வணங்கி நின்றாரோ என்று எண்ணினோம். எம் உடலின் மயிர்க்கால்கள் அனைத்தும் சிலிர்த்தன. கீழே குனிந்து கோயிலின் தரையை - இராசேந்திர சோழ தேவரின் கால்பட்ட தரையைக் - கைகளால் தொட்டு, கண்களில் ஒற்றிக் கொண்டோம். பிறகு நாம் கோயிலுக்குள் நுழைவதற்கு முற்பட்டோம்.

### சோழரின் படையெடுப்புகள்

ஈழத்தின் மீது முதற் பராந்தகன் காலம் முதலே (கி.பி.907-955) சோழப் படையெடுப்புகள் நடந்துள்ளன. இதற்குக் காரணம், முதற் பராந்தகன் காலத்தில் பாண்டியர், சேரர், சிங்களர் ஆகிய மூவரும் ஓரணியில் சோழருக்கு எதிராகத் திரண்டிருந்ததுவே. இந்தக் கூட்டணியை முறியடிக்க வேண்டிய கட்டாயம் எல்லாச் சோழ அரசர்களுக்குமே இருந்தது. கி.பி.985க்கும் 988க்கும் இடையில் முதல் இராசராசன் (985-1014) இலங்கையின் மீது படையெடுத்துச் சென்றார். ஐந்தாம் மகிந்தன் என்ற அரசன் அப்போது அங்கு ஆட்சியிலிருந்தான். பேரரசர் இராசராசரின் படைகள் ஈழத்தை அடைந்ததும் அந்த அரசன் தன் தலைநகரை விட்டு வெளியேறி மலை நாட்டில் ஒளிந்து கொண்டான் (தென்னிந்திய வரலாறு, நீலகண்ட சாஸ்திரி, பக்கம் 180). அதுவரை தலைநகராக இருந்த அநுராதபுரி அழிக்கப்பட்டு பொலன்னருவை புதிய தலைநகராக மாற்றப்பட்டது. பொலன்னருவைக்குப் பல பெயர்கள் இருந்தன. புலஸ்திபுரம், விஜயராஜபுரம் என்றெல்லாம் சிங்கள அரசர்கள் பெயரிட்டு மகிழ்ந்தார்கள். இது அவர்களுக்கு ஓர் இராணுவ மையமாகவும் 'கணவருநுவர' என்ற பெயரில் இயங்கி வந்திருக்கிறது.

கோதாவரிக்கரை நாடுகளிலிருந்து ஈழம் வரை முதல் இராசராசனின் பேரரசு விரிவடைந்த போது பொலன்னருவை 'ஜனநாத மங்கலம்' என்றும் 'ஜனநாதபுரம்' என்றும் பெயரிடப்பட்டு நிகரிலி சோழமண்டலம் என்ற சோழப் பேரரசின் ஒரு பகுதியில் இணைக்கப்பட்டது.

முதல் இராசராசனின் சேனை மிகவும் பெரியதாக இருந்தது. பத்து லட்சத்திற்கும் அதிகமான வீரர்களைக் கொண்டதாக அது இருந்தது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். (ராஜராஜீஸ்வரம், பி.வெங்கட்ராமன், பக்கம்.52) தாம் அடிமைப் படுத்திய நாடுகளில் எல்லாம் முக்கிய மையங்களில் அமைதி காக்கும் படைகளை நிறுத்துவது இராசராசரின் வழக்கமாக இருந்தது. ஈழத்திலும் அவர் அமைதி காக்கும் படை ஒன்றை நிறுத்தியிருந்தார். 'வேளைக்காரர்' என்ற படைப் பிரிவைச் சேர்ந்த இந்தப் படையில் 90,000 வீரர்கள் இருந்தார்கள் (ராஜராஜீஸ்வரம், பி.வெங்கட்ராமன், பக்கம்.53)

இந்த வேளைக்காரப் படையினர் தற்கால கமாண்டோ வீரர்களுக்கு இணையானவர்கள். இவர்களைப் பற்றிக் குறிப்பிடும், ஈழத்து வரலாற்று நூல் மகாவம்சம், இவர்கள் யானைகள் போன்று வலிமையானவர்கள் என்று சொல்கிறது (மகாவம்சம், ஆங்கில மொழிபெயர்ப்பு, பக்கம் 110). இந்தப் படையினரையும் நாட்டையும் நிர்வகிக்க ஓர் ஆளுநரையும் நியமித்தார் இராசராசன். இந்த ஆளுநர்கள் பேரரசனின் நெருங்கிய உறவினர்களாக அல்லது குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே இருந்தார்கள்.

ஈழம் அடிமைப்படுத்தப்பட்டு பொலன்னருவை தலைநகராக மாற்றப்பட்டபோது இங்கு ஆளுநராகப் பணிபுரிந்தவர் முதல் இராசேந்திரன். இவர் சிறுவயது முதலே தன் தந்தையின் பல போர்களிலும் பங்கேற்று வெற்றிகளைக் கொணர்ந்தவர். கங்கையையும், கடாரத்தையும் வென்ற இந்த மாமன்னரின் அன்னையின் பெயரே வானவன் மாதேவி. இவர் இராசராசனின் மனைவியருள் இரண்டாவது இடத்திலிருந்தார்.

இந்த அன்னையைப் போற்றும் வண்ணம், தான் பொலன்னருவையில் எழுப்பிய சிவன் கோயிலுக்கு வானவன் மாதேவி ஈசுவரம் என்று பெயரிட்டுப் பெருமை கொண்டார் பேரரசர் இராசேந்திரன்.

### கல்வெட்டுகள்

இலங்கையின், வட மத்திய பகுதியில் உள்ள அபரணை என்ற ஊரிலிருந்து பொலன்னருவைக்குச்





செல்லும் வழியில், பொலன்னருவை நகரை நெருங்குவதற்குச் சற்று முன்னதாகவே, மரங்கள் அடர்ந்த ஒரு பகுதியில், பொலன்னருவையின் பழம்பெருமை மிக்க சின்னங்கள் இலங்கை அரசால் மிகவும் சிரத்தையுடன் பாதுகாக்கப்பட்டு இருக்கின்றன. இந்தப் பகுதியின் கிழக்குப் பக்கத்தில் பராக்கிரவாகு மன்னர் வாழ்ந்த அரண்மனையின் எஞ்சிய பகுதிகளும், வடக்கில் கல் விகாரை எனப்படும் பௌத்த விகாரையும் உள்ளன. இவை இரண்டுக்கும் இடைப்பட்ட பகுதியில் பல சிவ, வைணவக் கோயில்கள் இருந்ததற்கு அடையாளங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் நாம் "சிவன் கோயில் எண் இரண்டு" என்று இப்போது அழைக்கப்படும் வானவன் மாதேவி ஈசுவரம் கோயிலை மட்டும் பார்வைக்கு எடுத்துக் கொண்டுள்ளோம்.

இக்கோயில் முதல் இராசேந்திரனால் எழுப்பப் பட்டதற்குச் சான்றுகள் கோயிலின் சுவர்களிலேயே உள்ளன. கோயிலின் தெற்குச் சுவரிலும் பட்டிகையிலும் மூன்று கல்வெட்டுகளும் இரண்டு கல்வெட்டுத் துணுக்குகளும் காணப்படுகின்றன இந்த ஐந்து சாசனங்களையும் 1912ஆம் ஆண்டு இந்தியத் தொல்லியல் துறையினர் படியெடுத்து அந்த ஆண்டுக் கல்வெட்டுகள் அறிக்கையில் வெளியிட்டிருக்கிறார்கள். இவற்றுள் முதல் கல்வெட்டின் சில பகுதிகளே உள்ளன. 'திருமன்னி வளர்' என்ற முதல் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி யோடு தொடங்குவதால் இது அவருடைய காலத்தில் எழுதப்பட்ட கல்வெட்டு என்பது உறுதியாகிறது.

1. *திருமன்னி*
2. *வளர இருநில*
3. *மடந்தையும்*
4. *பொர்ச் செய*
5. *ப் பாவையுஞ்*
6. *சீர்த்தனிச் செல்வி*
7. *யுந்தன் பெருந்தே*
8. *வியராகி இன்புற...*

இதுவே இப்போது எஞ்சியுள்ள பகுதி.



கோயிலின் வடக்குப் புறத் தோற்றம். கோயிலைச் சூழ்ந்திருந்த மதிலின் அடித்தளம் மாத்திரம் உள்ளது

மற்ற கல்வெட்டுகளில், இரண்டு, முதல் இராசேந்திரனின் பேரன் அதிராசேந்திரனின் காலத்தில் எழுதப்பட்டவை. மூன்றாண்டுகள் மட்டுமே ஆட்சியிலிருந்த (கி.பி.1067-1070) இவருடைய இறுதி ஆண்டின்போது இந்த இரண்டு சாசனங்களும் எழுதப்பட்டுள்ளன. 'திங்களேர் மலர்ந்து' எனத் தொடங்கும் ஒரு கல்வெட்டு தெற்குப் புறப் பட்டிகையில் காணப்படுகிறது. இது இந்த மன்னனின் காலத்தில்-கோயில் எழுப்பப்பட்டு 80 ஆண்டுகளுக்குப் பின்னர்-கோயிலுக்கு ஒரு தாரா நிலை விளக்கு அளிக்கப்பட்டதைக் கூறு கின்றது.

இதே மன்னனின் அடுத்த கல்வெட்டு மிகவும் பெரியது. கோயிலில் அர்த்த மண்டபத்தின் புறச்சுவர் முழுவதும் எழுதப்பட்டுள்ள இந்தச் சாசனம், சோழ மண்டலத்தின் பிற்பட்டு நாட்டின், மங்கலப்பாடியைச் சேர்ந்த சீராளன் என்ற சோழப் பல்லவரையன் ஒரு நந்தா விளக்கு எரிக்க ஐந்து காசுகள் கொடுத்த தகவலைத் தருகிறது. 23 வரிகள் கொண்ட இந்தக் கல்வெட்டு, கோயிலை "ராஜராஜேந்திர சோழ வளநாட்டு. ஜனநாத புரத்து உடையார் வானவன் மாதேவி ஈஸ்வர முடையார்" என்று அழைத்து மகிழ்கிறது. இந்தக் கொடையை நிர்வகிக்கக் கோயிலின் தேவகன்மிகளை நியமிக்கும் இந்தக் கல்வெட்டு, அப்போது கோயிலில் பணிபுரிந்தவர்களைப் பட்டியலிடுகிறது. இதன்படி, பஞ்சாசாரிய தேவகன்மி, கோமடத்து பிராமணன் கிராமவிந்தன், சிவபிராமணன் தில்லை நாயக பட்டன், உவச்சன், அரையன், கோயிலின் பத்மாகேசுவரர் கண்காணிப்பாளன் குடிதாங்கியான சண்டேச்வரராசன், திருவியான கங்கை கொண்ட சோழ மாணிக்கம், காமந்திருவியான கோதுகுல மாணிக்கம் கூத்தன் ராஜேந்திரவிடங்க மாணிக்கம், கோவிந்தன் ஆடவல்லான், தேவகன்மியான ராஜேந்திர சோழ மாணிக்கம் ஆகியோர் கோயிலின் பாதுகாவலர்களாக இருந்ததாகப் பட்டியலிடப் படுகிறார்கள். இத்தனைப் பேர் இங்குப் பணியிலிருந்ததால் இக்கோயில் ஒரு பெரும் மையமாக விளங்கியிருக்க வேண்டும்.

விளக்கு அறக்கட்டளைக்கு இத்தனை பாதுகாவலர்களை நியமிக்கும் இக்கல்வெட்டு, இந்தப் பணியாளரின் காலத்திற்குப் பின்னரும் இவர் களுடைய 'தலை மாறும்' இந்தக் கொடையை நிருவகிக்க வேண்டும் என்றும், 'சந்திராதித்தவல்'



கோயிலை உருவாக்கியவராம் "வானவன் மாதேவி ஈசுவரம் உடையார்" என்று அழைக்கப்பட்ட இவர், தனக்கென அடியவர்களைக் கொண்டு, ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரும் வழிபாட்டில் இருப்பது ஒரு சிறப்பு.

இந்த விளக்கு எரிக்கப்பட வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறது.

பொலன்னருவையின் வானவன் மாதேவி ஈசுவரம் கோயிலின் தெற்குச் சுவரில் உள்ள கல்வெட்டுத் துணுக்கு.,

"வானவன் மாதேவி ஈசுவரமுடையார் கோயிலிற்

பள்ளி கொண்டாரையும்....." என்றும்

இன்னுமொரு துணுக்கு, "அழகிய மணவாளரை எழுந்தருளுவித்து...." என்றும் சொல்கிறது. இதிலிருந்து பள்ளி கொண்டார், அழகிய மணவாளர் ஆகியோரின் திருமுன்கள் இக்கோயிலின் ஒரு பகுதியில் முன்பு இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவை இப்போது இல்லை. கோயிலுக்குச் சற்றுத் தொலைவில் சில வைணவக் கோயில்களின் இடிபாடுகள் உள்ளன.

**கருங்கல் தனி**

பச்சைக் கம்பளம் விரித்தாற்போன்ற ஒரு புல்வெளியைக் கிழித்துக் கொண்டு எழும்பியது போன்று கருங்கல் தனியாக நிற்கிறது. வானவன் மாதேவி ஈசுவரம். கோயிலைச் சுற்றி ஒரு மதில் இருந்ததற்கான அடையாளங்கள் காணப்படுகின்றன. மதில் இருந்திருந்தால், வாயிலும், அதன்மீது குறைந்த அளவில், மூன்று நிலைகளில் ஒரு கோபுரமும் இருந்திருக்க வேண்டும். அவை யெல்லாம் இப்போது இல்லை. மையக் கோயில் மட்டும், புறச்சுவர்களில் சிற்பங்கள் ஏதுமின்றி, பச்சை வெளியில் ஒரு கருங்கல் காவியமாக நின்று கொண்டிருக்கிறது. மிகவும் எளிமையான தோற்றம். இதுவே இக்கோயிலுக்கு ஓர் அழகைத் தருகிறது. தமிழ்நாட்டின், புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள நார்த்தா மலையில் காணப்படும் விஜயாலய சோழீசுவரம் என்ற சிவன் கோயிலின் கட்டட அமைப்பை ஒத்திருக்கிறது இக்கோயில்.

கிழக்குப் பார்வையாக உள்ள வானவன் மாதேவி ஈசுவரம் கோயிலின் விமானம் 32 அடி உயரத்தில் நிற்கிறது. இரண்டு அடுக்குகள் கொண்ட இவ்விமானம் திராவிட பாணியில் உருவாகியுள்ளது. அடித்தளம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டிகை ஆகிய உறுப்புகளுடன் காணப்படுகிறது. இதன் மேலே வேதிகையும், அரைத் தூண்களோடு கூடிய சுவரும் உள்ளன. கூரையின் நீட்சியான கொடுங்கையில் கூடுகளும், கூரையின் மீது நான்கு புறமும் சாலைகளும், கர்ண கூடுகளும் வைக்கப் பட்டுள்ளன. இரண்டாம் தளத்தின்மேல் கோயிலின் தலை எண்பட்டை வடிவில் உள்ளது. அதன் மேல் தாமரை அமைப்பு காட்டப்பட்டுள்ளது. குடம்

இல்லை. இது அநேகமாக தங்கத்தால் வைக்கப்பட்டிருந்திருக்க வேண்டும். இந்தக் குடம் இத்தனை காலத்துக்குப் பின்னரும் சிகரத்தின் மீது பளபளத்துக் கொண்டிருக்கும் என்று எதிர்பார்ப்பதே தவறு. விமானப் பகுதியில் இப்போது சிற்பங்கள் இல்லை. இரண்டாவது தளத்தின் மேல் நான்கு மூலைகளிலும் நான்கு நந்தி இருக்கைகள் மாத்திரம் உள்ளன.

விமானமும் அர்த்தமண்டபமும் மாத்திரமே இப்போது கோயிலின் பகுதிகளாக எஞ்சியுள்ளன. தரைமட்டத்திலிருந்து ஐந்து அடி உயரத்தில் கோயிலின் அடித்தளம் இருப்பதால் படிகள் வழியே ஏறி உள்ளே செல்லவேண்டும். ஏறுவதற்கு சிமெந்து படிகள் உள்ளன. இவை அண்மைக் காலத்தில் அமைக்கப்பட்டுள்ளதால், மையக்கோயிலின் தொடர்ச்சியாக ஓர் அந்தராளம், ஒரு மகாமண்டபம், ஒரு முன் மண்டபம் ஆகியவை இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

அர்த்த மண்டபத்திற்குக் கூரை இல்லை. கருவறையில், வானவன் மாதேவி ஈசுவரத்து உடையார் என்று இக்கோயிலை உருவாக்கியவரால் பெயரிடப்பட்டு வணங்கப்பட்ட சிவபெருமான் லிங்கத் திருமேனியாய் எழுந்தருளியுள்ளார். உட்சுவர்கள், சிற்பங்கள் ஏதுமின்றி வெறுமையாக இருக்கின்றன. ஆவுடையாரோடு மூன்று அடி உயரமுள்ள இந்தக் கருங்கல் லிங்கத்திற்கு நாள்தோறும் ஒரு சிங்களப் பூசாரி வழிபாடுகள் செய்கிறார். இந்த இறைவன் மிகவும் அருளுடையவர் என்கிறார்கள். பிள்ளைப்பேறு அற்றவர்கள் இங்கு வந்து இறைஞ்சினால் பிள்ளைவரம் கிட்டும் என்கிறார்கள், கோயிலுக்கு அருகே இருந்தவர்கள். மூலவரின் மீது சிவப்புப் பட்டு சாத்தியிருந்தார்கள். 'அன்று காலையில் தான் ஒரு தம்பதி, தமக்கு இந்த வகையில் அருள் கிடைத்ததற்கு நன்றிக் கடனாகச் சாத்திவிட்டுச் சென்றார்கள்' என்றார், அங்கு நின்று கொண்டிருந்த ஒரு சிங்களப் பெண்மணி.

கோயிலை நோக்கியபடி ஒரு நந்தி, இரண்டரை அடி உயர கருங்கல் மேடையில் அமர்ந்திருக்கிறது. ஒரே கல்லாலான இந்தச் சோழர்பாணி நந்தியின் தலை துண்டிக்கப்பட்டுள்ளது. கோயிலுக்கும் நந்திக்கும் இடையே உள்ள 25 அடி இடைவெளியில் சுவர்கள் இருந்ததன் அடையாளங்கள் காணப்படுகின்றன. இதே அளவில் மற்றுமொரு நந்தி, முதல் நந்தியின் நேர்க் கோட்டில், தெற்குப்புறம் அமர்ந்திருக்கிறது. இந்த நந்திக்கும் தலை இல்லை. இதுவும் சோழர் பாணி சிற்பமே. இது இரண்டரை அடி உயர ஒற்றைக் கல் மேடையில் உள்ளது. இந்த இரு நந்திகளுக்குமிடையே ஒரு சுவரின் அடித்தளம் தென்படுகிறது.

இரண்டாவது நந்திக்கு எதிரே வானவன் மாதேவி ஈசுவரத்தை ஒட்டினாற் போல் மற்றுமொரு சிவன் கோயில் இருந்திருக்கவேண்டும். தொல்லியல் அறிஞர் எஸ்.ஆர்.பாலசுப்ரமணியம் பல ஆண்டு களுக்குமுன் இக்கோயிலைப் பார்வையிட்ட போது, வானவன் மாதேவி ஈசுவரம் கோயிலை அடுத்துச் சில தூண்களையும், அவற்றில், சிதம்பரத்தையும், திருவாரூரையும் சேர்ந்த பெருங்குடியினராகிய சிலர் அத்தூண்களைக் கொடையாயளித்த செய்திகளைக் கூறும் கல்வெட்டுகளையும் பார்த்ததாகக் கூறுகிறார். (நடுக்காலச் சோழரின் கோயில்கள் எஸ்.ஆர்.பாலசுப்ரமணியன், பக்கம் 216) அத்தூண்கள் இப்போது இல்லை. அவை மற்றுமொரு சிவன் கோயிலின் பகுதிகளைத் தாங்கிக் கொண்டிருந் திருக்கலாம்.

வானவன் மாதேவி ஈசுவரத்து உடையார் கோயில் உருவாகி 1000 ஆண்டுகள் ஆகியும் இன்றும் வழிபாட்டில் இருந்து கொண்டு தனக்கென அடியார்களைக் கொண்டிருப்பது இதன் சிறப்புகளில் ஒன்று. தமிழ்நாட்டில், இந்தக் கால கட்டத்தில் உருவாகிய பல கலைக்கோயில்கள் கண்ணீர்க் காவியங்களாக நின்றுகொண்டிருக்கும் வேளையில் அன்னிய மண்ணில் நிறுவப்பட்ட இக்கோயில் இத்தனை சிறப்புடன் பேணப்பட்டு வருவது கலை ஆர்வலருக்கு மிகவும் மனநிறைவைத் தரும்.

இலங்கை சில காலம் சோழர் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது என்ற வரலாற்று உண்மைக்குச் சான்றாக நிற்கும் இந்த அழகிய சிறிய கோயில் தமிழ் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட சிற்ப ஆசிரியர்களைக் கொண்டு கலையழகு மிக்கதாக வடிவமைக்கப் பட்டுள்ளது. மையக்கோயிலே இத்தனை அழகுடையதாக இருக்கும்போது, முழுக்கோயிலும் (மதிற் சுவர், கோபுரம், அந்தராளம், மண்டபங்கள் ஆகியவற்றுடன்) இருந்திருந்தால் மிகவும் எழுச்சி மிக்க தோற்றத்தைக் கொண்டு, இவ்வழியில் செல்லுவோரின் கவனத்தை ஈர்க்கும் தன்மையுடன் இருந்திருக்கும்.

தாம் சென்ற நாடுகளுக்கெல்லாம், தம்முடைய கலைகளையும், பண்பாட்டையும், சோழர்கள் கொண்டு சென்றார்கள் என்பதற்கு, கீழைத் தேய நாடுகளில் உள்ள பல கோயில்கள் சான்றுகளாக நிற்கின்றன. இத்தகைய அற்புதமான கோயில்களில் பொலன்னருவையின் வானவன் மாதேவி ஈசுவரமும் ஒன்று. இதை உருவாக்கிய பேரரசர் இராசேந்திர சோழ தேவர் உலகம் சந்தித்த சிறப்புமிக்க அரசர்களில் ஒருவர். ●

# ஒரு மகாமனிதனின் கதை

ஜெயராதனி

பதின்மூன்று நாள்கள் காரியங்கள் நடந்து முடிந்தன. அப்பா அமரராகிப் போனார்.

"இன்னும் இரண்டு மாசம் இருந்திருந்தா, தொண்ணூறு வயசு முடிந்திருக்கும் அப்பாவுக்கு"

கடைசிப்பெண் கல்யாணியின் குரலில் துயரத்தின் சாயல் மிகுந்திருந்தது. கடைசிப் பெண் என்று அவள்மீது அப்பாவுக்குப் பாசம் அதிகம். கல்யாணி பிறந்தபோது அவருக்கு வயது ஐம்பது. உடலின் மிடுக்கு சரியத் தொடங்கிவிட்டது. மாடிப்படியேறி இறங்கினால் மூச்சு வாங்கிற்று. இருந்தாலும் அவளைத் தூக்கிக்கொண்டே இருப்பார்.

"எந்தக் குழந்தையையுமே இப்படித் தூக்கிக் கொஞ்சினதே இல்லை அவர்... பார்த்துச் சிரிக்கிறதோட சரி... அதென்னவோ, இந்தக் கல்யாணியை இப்படித் தூக்கிச் சுமக்கிறார்" என்று பெருமிதம் பொங்க அம்மா சொல்லுவாள்.

"வயசானபிறகு குழந்தை பொறந்தாலே பாசம் அதிகமாத்தான் இருக்கும்... பாசத்தைக் காட்டறதுக்கும் ஒரு பக்குவம் வரணும் போலிருக்கு.." காலை நீட்டிக் கொண்டு அமர்ந்திருந்த அத்தை சொல்லுவாள். சோடா பாட்டில் கண்ணாடிக்குப் பின்னால் பூதம் காட்டும் கண்களில் நீர் திரையிட்டு விடும். பேசுகிற போதே குரல் தழைகிற உணர்ச்சி பூர்வ மனசு அவளுக்கு.

அப்பாவும் அப்படித்தான் இருந்தார். பேசுகிறபோதே குரல் கசிந்து கண்ணீர் மல்கிவிடும். துயரங்களைத் தாங்காத பூ மனம் அவருக்கு. பசிக்கிறவர்களுக்குச் சாதம் போட்டு, அவர்கள் சாப்பிடுகிற வேகத்தைப் பார்த்துச் சுகித்துப் போவார்.

"பழைய சாதத்தை நாய்க்குப் போடு. அது சாப்பிடட்டும். பாவம் ரொம்ப நாழியா வாசல்லேயே உக்காந்திருக்கு. ரொம்பப் பசி போலிருக்கு..."

அம்மா கொண்டு வந்து போட்டதும் ஒரு பாய்ச்சலாய்ப் பாய்ந்து வந்து சாதத்தைச் சாப்பிடும் நாயையே பார்ப்பார்.

"இந்தச் சாதத்துக்கு இதைவிட உசந்த உபயோகமே இல்லை.. பார்வதி" என்று மனைவியிடம் சொல்கிறபோதே கண்ணீர் பெருகிவிடும். மேல் துண்டால் கண்களை ஒற்றிக் கொள்வார்.

"ஏம்பா அழறே?" என்று மடியில் உட்கார்ந்து தான் கேட்டது நினைவுக்கு வந்தது கல்யாணிக்கு.

"அப்பாவுக்கு ரொம்ப இரக்க சுபாவம்..."

கல்யாணி சொன்னதை ஆமோதித்தான் தேவராஜன்.

மூத்தபிள்ளை அவன். கல்கத்தாவில் ஒரு தனியார் நிறுவனத்தில் உயர்பதவி வகிப்பவன். அடுத்த வருஷம் ஒய்வு பெறும் வயது. அடுத்து சரஸ்வதி. பாட்னாவில் பிள்ளையுடன் இருக்கிறாள். கணவன் ஒய்வு பெற்று மூன்றாண்டுகள் ஆகிவிட்டன. அடுத்து வரிசையாய் இராமன், சுந்தரம், வாசுதேவன் என்று மூன்று பிள்ளைகள். எல்லாருக்கும் நல்ல உத்தியோகம். பின்னர் சரோஜா. பம்பாயில் இந்தியன் ஆயில் கார்ப்பரேஷனில் வேலை பார்க்கிறாள். அவள் கணவனுக்கும் அதில் வேலை. கடைசியாய்க் கல்யாணி. ஹைதராபாத்தில் கல்லூரிப் பேராசிரியரின் மனைவி.

"அப்பாவுக்கு ரொம்ப கன்டென்டட் லைஃப்... திருப்தியா வாழ்ந்தார்... எல்லாரும் நன்னா இருக்கறபோது போறார். ஹி லிவ்டு எ ஃபுல் லைப்..."

வாஸ்தவம்...அம்மா இல்லைங்கறதைத் தவிர ஒரு குறையில்லை அவருக்கு... ரொம்ப டிஸிப்ளின்ட் வாழ்க்கை அவருது.. என்றான் இராமன். வாசுதேவன் மட்டும் சம்மதிக்கவில்லை.

"கண் தெரியாமல் போயிடுத்து.. கண் தெரியாமல் கஷ்டப்படறாப்பலே என்ன பாபம் பண்ணினார் அப்பா? அதை நெனைச்சாத்தான் தாங்கல்லை..."

பாதி பேசிக் கொண்டிருந்தபோதே கல்யாணியின் குரல் உடைந்தது. அப்பா மாதிரி அவளும் உணர்ச்சிபூர்வமான பெண்.

ஆமாம். அப்பாவுக்கு முப்பது வருஷமாய்க் கண்தெரியவில்லை. வேலையிலிருந்து ஒய்வு பெற்ற சில மாதங்களில் கண் பார்வை மங்கத் தொடங்கிற்று. மாலை

வந்துவிட்டாலே இடறத் தொடங்குவார். இரவில் அரைப் பார்வை, கால் பார்வை என்று இருந்து வந்து நாளடைவில் பார்வை முழுவதுமாய் அற்றுப் போயிற்று.

பிள்ளைகள் பதறினார்கள். பெண்கள் தவித்தார்கள். அம்மா அழுதாள்.

"எனக்கு வைத்தியம் பார்த்துக் கொள்ள இஷ்டமில்லை. இப்படியே இருந்துட்டுப் போறேன். பழகின வீடுதான். நானே நடமாட முடியும்".

அப்பா செய்து காட்டினார். சுவரைப் பிடித்துக் கொண்டு கிணற்றடிக்குப் போனார். கணுக்கால் வரை, ஒரு நூலளவு விடாமல் கால் அலம்பிக் கொண்டார். சாப்பாட்டு அறைக்கு வந்து தன் இடத்தில் அமர்ந்து கொண்டார். சிந்தாமல் சிதறாமல் சாப்பிட்டார். பூஜை அறையில், இலக்குத் தவறாமல் பூக்களை சுவாமி படத்தில் அர்ச்சித்தார். கால் நடையோசையை வைத்தே யார் வருகிறார்கள் என்று துல்லியமாய்க் கூறினார். விழுந்த ஓசையைக் கேட்டே, கீழே விழுந்தது நாலணாவா, எட்டணாவா என்று சரியாகச் சொன்னார். குரலின் ஏற்றத்தாழ்வை வைத்தே மன ஓட்டத்தைக் கச்சிதமாகக் கணித்தார்.

கண்களைவிட்டுப் போன பார்வை மற்ற அங்கங் களுக்குள் அவற்றின் சக்தியாய்ப் பரிணமித்தது மாதிரி, மற்ற அங்கங்கள் மகாதீட்சண்யமாய்ச் செயலாற்றின.

பார்த்தவர்கள் பிரமித்தாலும், டாக்டரிடம் காட்டிக் கொள்ளாமல் பிடிவாதம் பிடிப்பதை ஏற்கவில்லை.

'அப்பா! இப்பல்லாம் சயின்ஸ் ரொம்ப டெவலப் ஆயிடுத்துப்பா..! உங்களுக்கு ரொம்ப ஈஸியாக் குணப்படுத்தலாம்... கல்கத்தாவிலே பெரிய ஸ்பெஷலிஸ்ட்கள் இருக்காப்பா.. மெட்ராஸிலே டாக்டர் ராம்நாத், உலகத்திலேயே பெரிய கண் டாக்டர்னு பேர் வாங்கினவர்... அவரை எனக்கு நன்னாத் தெரியும். அவர்கிட்டக் காட்டலாம்ப்பா.. நான் உங்களைப் பத்திச்சொன்னப்போ, எப்ப வேணும்னாலும் அழைச்சிண்டு வரச்சொன்னார்ப்பா..." பிள்ளை தேவராஜன் அழாத குறையாய்க் கெஞ்சினான். மற்ற பிள்ளைகள் ஆர்வமாக அப்பாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அழுகையோடு அம்மா கையைப் பிசைந்துகொண்டு நின்றாள். சம்மதிக்கவேண்டுமே என்ற கவலை அவள் முகத்தில் பரபரத்தது.

சற்றுநேரம் மௌனமாய், ஒளியிழந்த கண்களால் அந்தர வானத்தில், ஒளியைத் தேடுகிறவர் மாதிரிப் பார்த்தார். ஒருவாரத் தாடி, மீசை முகத்திற்கு அலாதி சோபையளித்தது. ஆதுரத்துடன் தேவராஜனின் கையைத் துழாவிப் பற்றிக் கொண்டார்.

"...தேவா!... நீ சொல்றது வாஸ்தவம்.. இருந்தாலும் எனக்கு வைத்தியம் வேண்டாம்... இப்படியே இருந்துட்டுப் போறேன். அதுதான் சரின்னு தோணறது... ஏதோ காரணத்துக்குத்தான் கண்பார்வை போயிருக்கு.. இதை நான் அனுபவிச்சுட்டுப் போறேன்... இதிலே எனக்குத் துளிக்கூடக் கஷ்டமோ வருத்தமோ இல்லை...."

அவன் கைகளைத் தட்டிச் சமாதானப்படுத்தினவர் கட்டிலில் படுத்துக் கொண்டார். பார்வை கூரை முகட்டை வெறித்தது. முகம் கண்டிப்பைக் காட்டிற்று.

பிறகு யாரும் அவரிடம் அதுபற்றிப் பேசுவதில்லை. அவருக்குக் கண்பார்வையில்லை என்கிறதே மறந்து போய்விட்ட மாதிரி நடந்து கொண்டார்கள்.

அம்மா மட்டும் அடிக்கடி, அப்பா காதில் கேட்கா வண்ணம் புலம்புவாள். புலம்பிக் கொண்டே ஒருநாள் கண்களை மூடினாள்.

'அப்பா ஏன் வைத்தியம் பண்ணிக்க மாட்டேன்னார்?'

சரசுவதியின் நியாயமான கேள்வியை வாசுதேவன் ஆமோதித்தான்.

'அப்பாவுக்குப் பிடிவாதம் அதிகம்' என்று சுந்தரம் சொன்னதை மற்றவர்கள் ரசித்ததாகத் தெரியவில்லை.

'எல்லா வசதிகளும் இருந்தும் வலுக்கட்டாயமாக் கஷ்டப்படுவேன்னு சொன்னா, வேறே என்ன அர்த்தம்?.. நம்பளையெல்லாம் ஆளாக்கிறதுக்கு அப்பா எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பார்?... இன்னிக்கு நாமெல்லாம் இவ்வளவு சௌக்யமா இருக்கோம்னா அதுக்குக் காரணம் அப்பாவோட உழைப்பும் தியாகமும் தானே? அப்படிப்பட்ட அப்பா, நம்பளோட கல்யாணத்தைப் பாக்கல்லை... நம்ம குழந்தைகளைப் பாக்கல்லை.. எதையுமே பார்க்காமே இருட்டிலேயே இருந்துட்டுப் போயிட்டாங்கறதை நினைச்சா என்னாலே தாங்கமுடியல்லை... நிச்சயமா முடியல்லை..."

சுந்தரம் குரலுடைந்து சொன்னதும் கல்யாணியும் சரசுவதியும் கேட்டார்கள். இராமன், வாசுதேவன் இருவரும் அழுகையை அடக்க முயன்றனர். சரோஜா விசும்பினாள்.

கீழுதட்டைக் கடித்துத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான் தேவராஜன். அவன் கண்களும் சன்னமாய்க் கலங்கின.

"எல்லாம் அவள் பண்ணின வேலை.'ஏதோ தகடு மந்திரிச்சுப் போட்டிருக்கா அவள்'னு அம்மா அடிக்கடி சொல்லுவா..." என்று சரோஜா கூறியதும் சர்ப்பமாய்த் தலைநிமிர்ந்தான் தேவராஜன்.

"அவள்னா யாரைச் சொல்றே?"

"எல்லாம் அவளைத்தான்...அப்பாவோட முதல் வொய்ஃபைச் சொல்றேன்".

சரோஜாவின் குரலில் குரோதம் தெரிந்தது.

'அப்பாவின் முதல் மனைவி' என்ற சொற்கள் மந்திரமாய் வேலை செய்தன. அனைவரும் ஏதோ

சக்திக்குக் கட்டுப்பட்டது மாதிரி மௌனமாகிப் போனார்கள். அறையில் மின்விசிறியின் சுழற்சியின் 'பம்'என்ற ஒலியைத் தவிர, வேறெதுவும் கேட்கவில்லை. பகல் பன்னிரண்டு மணி வெயிலின் வெப்பத்தின் கடுமையும் நன்கு தெரிந்தது. தெருவில் அரிசிப் பொரி விற்றுக்கொண்டு சைக்கிளில் யாரோ போனார்கள். 'அக்கூ' என்று சோகமாய்க் குயில் கூவிற்று. 'நில்லுடா... கையிலே மாட்டிகிட்டியினா, ஒன்னைப் பொலி போட்டுடுவேன்' என்று குண்டான ஒரு மூதாட்டி துரத்த, கையில் எதையோ எடுத்துக்கொண்டு ஒரு சிறுவன் சிட்டாய் ஓடினான். அவள் இந்த ஜன்மத்தில் அவனைப் பிடிப்பாள் என்று தோன்றவில்லை தேவராஜனுக்கு.

சம்பாஷணையின் திசை அசௌகர்யமாய் மாறுவதை உணர்ந்த சரசுவதி திசை மாற்றினாள்.

"அப்பா ஒரு பெட்டி வச்சிருந்தாரே அது இருக்கோடா சுந்தரம்? யாரும் தொடக்கூடாதுன்னு பூட்டி வச்சிருப்பாரே, அப்பப்ப எதையோ எழுதி அதுலே வைப்பார். 'என் மூச்சு இருக்கிற வரைக்கும் இதை யாரும் திறந்து பார்க்கக்கூடாது'ன்னு அம்மாகிட்டக் கண்டிப்பாச் சொல்லியிருந்தார். அது என்னடா ஆச்சு?"

சடாரென்று ஒரு சுவாரஸ்யம் தொற்றிக் கொண்டது.

"ஆமா... பழைய பச்சைக்கலர் ட்ரங்க் பெட்டி... பூட்டிச் சாவியைத் தலைமாட்டிலேயே வச்சிண்டிருந்தார்... கண் தெரியாதபோது கூட அந்தப் பெட்டியை அடிக்கடி தொட்டுப் பாத்துட்டு வருவார்... கடைசி வரை சாவி அவர் இடுப்பிலேயேதான் இருந்துது... கடைசியிலே மூச்சுப் போனதும் நான் எடுத்து பீரோவிலே வச்சேன்..."

இராமன் உற்சாகமாய்ச் சொல்ல, அனைவரும் அவனையே பார்த்தனர்.

அந்தப் பெட்டியில் அப்படி என்னதான் இருக்கும்? 'என் மூச்சுள்ளவரை யாரும் பார்க்கக்கூடாது' என்று சொல்வானேன்? பிறர் துயரம் தாங்காது கண்கலங்கும் அப்பாவின் வாழ்க்கையில் அப்படியென்ன ரகசியம் இருக்கும்? அம்மாகூட அந்தப் பெட்டியில் என்ன இருக்கிறதென்று தெரியாது என்றுதானே சொன்னாள்? ஏதாவது வைரம், வைடூர்யம் என்று உள்ளே இருக்குமா? அப்பாவுக்குப் பண ஆசையும் கிடையாதே!...

பரபரப்புடன் தேவராஜன் அந்தப் பெட்டியைத் திறக்கலானான். அனைவரும் சுற்றி நின்று பேரார்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

'கிறீச்' என்ற ஒலியுடன் பெட்டி திறந்தது. அகலவாட்டில் மடிக்கப்பட்டிருந்த வீட்டுப் பத்திரங்கள், சில கடிதங்கள். மக்கிப் போன கவரில், பென்சிலால் எழுதப்பட்ட கடிதங்கள், அதன்பின்னர், திரும்பி வந்த இரண்டு கடிதங்கள்.



இரண்டும் அப்பா 'கற்பகம்' என்ற பெயருள்ள பெண்ணுக்கு எழுதி 'விலாசதார் இல்லை' என்ற குறிப்புடன் திரும்பி வந்த கடிதங்கள். எல்லாம் ஐம்பது, அறுபது வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட கடிதங்கள். ஆங்கிலேய அரசரின் படம் போட்ட தபால் உறைகள். தபால் வில்லைகள். மக்கிப் போன காகிதங்கள். எல்லாவற்றிற்கும் கீழே ஒரு நிறம் புரியாத கவரினுள் ஒரு பழைய புகைப்படம். மஞ்சள் குளித்த புகைப்படம். 'போட்டோவுக்கு நிற்கறேன்.' என்னை ஓர் அந்நியன் கண்கொட்டாமல் பார்க்கிறான் என்கிற அச்சமும் எச்சரிக்கை உணர்வும் மலிந்த முகபாவத்துடன், கழுத்துவரை இழுத்துப் போர்த்திய ஒரு பெண்ணின் படம். அப்புறம் நகங்கிப் போன இரண்டு தங்க வளையல்கள்.

"என்ன இதெல்லாம்?... யாரோட போட்டோ அது? வளையலா?... எத்தனை பவுன்?..."

மூச்சைப் பிடித்துக் கொண்டு கல்யாணி கேட்டாள். வாசுதேவனும் சரோஜாவும் 'யாருண்ணா, இந்தக் கற்பகம்?' என்று தேவராஜனைக் கேட்க, மற்றபிள்ளைகள். தவிப்புடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

மெதுவாய் அந்தப் புகைப்படத்தை எடுத்தான் தேவராஜன். அழுந்தப் பிடித்தால் துளாகிவிடும்போல் இருந்த படத்தைக் கூர்ந்து பார்த்தான். மற்ற எல்லாரும் முண்டியடித்துக் கொண்டு பார்த்தார்கள்.

"யாரு கற்பகம்?"

சரசுவதியையும் சுந்தரத்தையும் கூர்ந்து பார்த்த தேவராஜன், ஆமோதிப்புடன் அவர்கள் பார்வையின் கேள்விக்குப் பதிலாய்த் தலையசைத்தான்.

"அப்பாவோட ஃபர்ஸ்ட் வொய்ஃப்."

"பெரியம்மாவா?..."

"அவளா?...."

எல்லா வினாக்களுக்கும் ஒரே பதிலாய்த் தலையசைத் தான்.

"உனக்கு எப்படிண்ணா, அவ பேரு தெரியும்?"

"அம்மா ஒருமுறை வாய் தவறிச் சொல்லியிருக்கா.. 'அப்பாகிட்ட மூச்சு விட்டுடாதேடா... என்னைக் கொன்னுடுவா' அப்பிடின்னு சொன்னா..."

எல்லாரும் பிரமிப்புடன் உட்கார்ந்திருந்தனர்.

"கடிதாசியெல்லாம் படியேன்..." என்று சரசுவதி பரபரக்க, தேவராஜன் ஒவ்வொன்றாய்ப் படிக்கலானான்.

கடிதத்தின் தேதியைப் பார்த்து "இது நான் பொறக்கறதுக்கு முன்னாலே, பெரியம்மாவோட அப்பா, நம்ம தாத்தாவுக்கு அதான் அப்பாவோட அப்பாவுக்கு– எழுதிய கடிதாக..." என்ற தேவராஜன் படிக்கலானான்.

"சம்பந்தி அவர்களுக்குக் கல்யாண சாஸ்திரி அநேக கோடி நமஸ்காரம் செய்து தண்டனிட்டு எழுதிக் கொள்வது. தங்கள் கிருஹத்தில் எல்லாரும் சௌக்கியம் என்று நம்புகிறேன். தங்களுக்குப் பல கடிதாசுகள் போட்டுத் தொந்தரவு செய்துவிட்டேன். தேவரீர் பெரிய மனசு பண்ணி க்ஷமிக்கவேண்டும். இப்பவும் சௌ.கற்பகம் அழுத கண்ணீரும் சிந்திய மூக்குமாய் இருக்கிறாள். சுவாமி படத்தின் முன்னால் அமர்ந்து சதா அழுது கொண்டிருக் கிறாள். பெரிய மனசு பண்ணி அவளை ஏற்றுக் கொள்ளவேண்டும். அவள் செய்தது மஹாத் தப்புதான். இருந்தாலும் சின்னக்குழந்தை அவள்.

தன் அண்ணாவின் கல்யாணத்தைப் பார்க்கவேண்டும் என்ற ஆசையில், தங்களது உத்தரவையும் மீறி பிறந்தகம் வந்துவிட்டாள். கல்யாணம் ஆனபின் புக்ககம்தான் எல்லாம். பிறந்தவீடு அந்நியம்தான் என்று புரிந்து கொள்ளாத வயசு...

கற்பகம் கல்யாணத்தின் போது பத்துப்பவுன் இரட்டைவடம் சங்கிலி போடுவதாகச் சொல்லி, வசதிப் படாததால் பிறகு போடுவதாகச் சொன்னேன். தாங்களும் பெரிய மனசு பண்ணி கற்பகத்தை ஏற்றுக் கொண்டீர்கள். அதற்குப்பின் குடும்பத்தில் அடுத்தடுத்து வந்த கஷ்டங்களால் என்னால் செய்து போடமுடியவில்லை. தவறு என்னுடையதுதான்.

அந்தக் கோபத்தினால்தான் என் பிள்ளையின் கல்யாணத்திற்கு வரமுடியாது, கற்பகத்தையும் மாப்பிள்ளை யையும்கூட அனுப்பமுடியாது என்று தாங்கள் கூறினீர்கள். அது தவறு என்று நான் சொல்லவில்லை. வார்த்தை தவறிய என்னைத் தண்டிக்கத் தங்களுக்குச் சகல உரிமையும் இருக்கிறது. இந்தத் தர்மநியாயங்களை அறியாத சிறுபெண் கற்பகம், அண்ணாவின் கல்யாணத்திற்கு வரவேண்டும் என்கிற ஆசையால் தங்கள் உத்தரவை மீறிப் பிறந்தகம் வந்துவிட்டாள்.

அந்தக் கோபத்தால், தாங்கள் கற்பகத்தை ஏற்றுக் கொள்ளமுடியாது என்று கூறிவிட்டீர்கள். நான் பரம ஏழை. என்ன செய்வேன்? என் ஓட்டு வீட்டை விற்றாவது பத்துபவுன் நகையைப் போட்டுவிடுகிறேன். எப்படியாவது என் பெண்ணை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று தங்களது பாதாரவிந்தங்களில் விழுந்து கதறிக் கேட்டுக்கொள்கிறேன். இப்படிக்கு கல்யாண சாஸ்திரி.. பி.கு: தாங்கள் கற்பகத்தை ஏற்றுக் கொள்ளாவிட்டால், பாழுங்கிணற்றில் அவளைத் தள்ளி விட்டுவிட்டு, என் குடும்பத்துடன் நானும் விழுவதைத் தவிர,வேறு வழியில்லை..."

மயான அமைதி நிலவிற்று.

எல்லாரும் வாய் திறக்கத் தெரியாதவர்கள் மாதிரி, அதிர்ந்து போய் அமர்ந்திருந்தார்கள்.

"அப்பாவா இப்படிப் பண்ணினார்?... அப்பாவாலே

எப்படி இப்படி நடந்துக்க முடிஞ்சுது? இப்படி ஓர் அநியாயம் நம்மாத்துல நடந்திருக்கா?"

சரசுவதி புலம்பினாள். பதில் பேசாமல் எல்லாரும் தேவராஜனையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

"மத்த கடிதாசுகளைப் படி..."

ஒவ்வொன்றாய் எடுத்துப் படித்தான் தேவராஜன். எல்லாம் கல்யாண சாஸ்திரி எழுதிய கெஞ்சல் கடிதங்கள். படித்தாலே மனம் துடித்துப் போயிற்று.

அப்பாவா இப்படிச் செய்தார்? கருணையும் இரக்கமும் மலிந்த அப்பாவா இதற்கு உடந்தை?

அஸ்திவாரம் கலைந்த கோபுரம், கலகலக்கிறமாதிரி, அப்பாவைப் பற்றிய உயர்ந்த அபிப்ராயம் சரியத் தொடங்கிற்று.

"இது வந்து பெரியம்மாவே தன் கைப்பட அப்பாவுக்கு எழுதின கடிதாசு" என்று ஒரு கடிதத்தைப் பிரித்தான் தேவராஜன்.

பென்சிலால் குண்டுகுண்டாய் எழுதப்பட்ட கடிதம்.

"..நான் அபலை. எதுவும் படிக்காதவள். அண்ணாவின் கல்யாணத்தைப் பார்க்கும் ஆசையில் அப்பாவின் பேச்சை மீறி பிறந்த வீட்டிற்கு வந்துவிட்டேன். தப்புதான். அப்போது அது தெரியவில்லை. தீக்குச்சியால் புடைவையைப் பற்ற வைத்துக் கொள்கிறமாதிரி இவ்வளவு பெரிய தீயாய் அது ஆகிவிடும் என்று எனக்குத் தெரியாது.

தாங்கள் பெரியவர். காலேஜுக்குப் போய்ப் படித்தவர். இந்த அபலை செய்த பிழையை மன்னிக்கக்கூடாதா? என்னை வீட்டிற்குள்கூடச் சேர்க்க வேண்டாம். புழக்கடையில் ஒரு மூலையிலாவது உட்கார அனுமதிக்கக் கூடாதா? தாங்களே நிராகரித்தால், பொம்மனாட்டி அதிலும் ஓர் அட்சரம் கூடப் படிக்காத அபலை, எங்கே போவேன்? குளம், குட்டையில் மிதப்பதைத் தவிர வேறு எனக்கு என்ன வழி?... அடியாள் கற்பகம்".

படிக்கிறபோதே தேவராஜன் குரல் உடைந்தது. கண்களில் கண்ணீர் பொங்கிற்று.

கல்யாணி கேவிக்கேவி அழத் தொடங்கினாள்.

"இதைப் படிச்சப்பறமுமா அப்பா மனசு மாறலை? அப்பாவா இப்படி?... எப்படி இவ்வளவு கொடூரமா அப்பா இருந்தார்? எப்பிடி இருக்க முடிஞ்சுது?.."

சரோஜா புலம்பினாள்.

குற்றவாளிகளைப் போல் மற்ற பிள்ளைகள் தலைகுனிந்து அமர்ந்து கொண்டிருந்தனர்.

அப்பா என்னும் மலைச்சிகரம் உடைந்து நொறுங்கி மண்ணோடு மண்ணாய், அவர்கள் மனத்துக்குள் சிதறிக் கொண்டிருந்தது.

"இல்லை... இல்லை. அப்பா மேலே தப்பில்லை" என்று உரக்கக் கூவிய தேவராஜன், அப்பா எழுதித் திரும்பி வந்த கடிதத்தைக் காண்பித்தான்.

'விலாசதார் இல்லை' என்ற குறிப்புடன் திரும்பி வந்த கடிதம்.

"செள.கற்பகத்திற்கு அநேக ஆசிர்வாதம். எல்லா வற்றையும் பார்த்து நான் அதிர்ச்சியடைந்தேன்.. நான் வயசில் உன்னைவிடப் பெரியவன். இருந்தாலும் உன் மன்னிப்பைக் கோருகிறேன்.

சுவாமி சத்தியமாய்ச் சொல்கிறேன். எதுவும் எனக்குத் தெரியாது. உன் அப்பா எழுதின கடிதங்களோ, நீ எழுதின கடிதங்களோ எதுவுமே எனக்குத் தெரியாது. என் அப்பா எல்லாவற்றையும் மறைத்துவிட்டார்.

உன் அண்ணா கல்யாணத்திற்கு நீ போனாய். அப்பா சொல்லியும் நீ மற்ற சொந்தக்காரர்களுடன் போனாய். அதை நான் பெரிதாய் எடுத்துக்கொள்ளவில்லை. அப்பா இவ்வளவு கோபிப்பார் என்று நான் நினைக்கவேயில்லை.

'ஏம்பா கற்பகம் இன்னும் வரலை?.. நான் போய் அழைச்சுண்டு வந்துடவா?' என்று அப்பாவிடம் கேட்டேன். 'நீ போகப்படாது. நான் போய்க் கூட்டிண்டு வரேன்' என்று போனவர் மறுநாள் திரும்ப வந்தார். வந்தவர் கொல்லைப்பாதையாகச் சென்று கிணற்றில் இரண்டு வாளியை இழுத்துத் தலையில் கொட்டிக்கொண்டார். என்னையும் வரச்சொல்லித் தலையில் இரண்டு வாளித் தண்ணீரைக் கொட்டினார். 'கற்பகத்துக்கு ஸ்நானத்தைப் பண்ணு...' என்று கத்தினார்.

'பெண்ணை அனுப்பமாட்டானாம். நாமள்ளாம் காட்டுமிராண்டிகளாம். அவன் பெண்ணைப் பாடாய்ப் படுத்தறோமாம். அவளைப் படிக்க வச்சு வேலைக்கு அனுப்பப் போறானாம்... வாயிலே வராததையெல்லாம் பேசறான்' என்றார்.

எனக்கு எதுவுமே புரியவில்லை. அப்பாவை மீறிச் சிந்திக்கக்கூடத் தெரியாது எனக்கு.

அதே வேகத்தில் பார்வதியை எனக்குத் திருமணம் செய்வித்தார். கல்யாணமானவுடனேயே வேலை மாற்றலாகி நான் அசலூருக்குப் போய்விட்டேன். அப்பா கூறியது எல்லாமே நிஜம் என்று நம்பிக் கொண்டிருந்தேன்.

ஆனால் சில வருஷங்கள் கழித்து அப்பா காலமானதும் பழைய கடிதங்களைப் படித்து துடித்துப் போனேன். அப்பா எல்லா விஷயங்களையும் மறைத்து, தன் ஈகோவுக்கு என்னையும் உன்னையும் இரையாக்கிவிட்டார்.

என் தவற்றை உணர்கிறேன். பார்வதி நல்லவள். உடனே புறப்பட்டுவா. நாம் எல்லாரும் ஒன்றாக இருக்கலாம். ஆசிர்வாதம்".

## சொல்லுகிறேன்...

இரா. நவமணி

உயரத்தில்
இருந்த போதும்,
ஒளி சிந்தும்
சக்தியென்று
இருந்த போதும்,
நடையில் தள்ளாட்டமில்லை!
பார்வையில்-
விரோதமில்லை!
நிலவைத்தான்
சொல்லுகிறேன்!

பாவம் மனிதன்
வார்டு உறுப்பினர்
பதவி
கிடைத்ததென்று
வாயும்
சிகரெட்டுமாய்
வானத்துக்கே
குதிக்கிறானே
மனிதனைத்தான்
சொல்லுகிறேன்!

போதைக்குப்
பாதையிடவா
பாதை போட
வந்த பணம்
பரிதவித்து
நிற்கிறது?
பாவம் இந்தநாடு
இந்தியாவைத்தான்
சொல்லுகிறேன்!



தேவராஜன் படித்து முடித்ததும் மற்றவர்கள் முகத்தில் பிரமிப்புப் பரவிற்று.

"அப்புறம் ஏன் வரலை?"

"கடிதாகதான் போய்ச் சேரவே இல்லையே? திரும்பி வந்துடுத்தே?"

"அப்பா நேர்லே போய்ப் பார்த்திருக்கலாம்... பாவம்டி பெரியம்மா..."

சரசுவதியின் கூற்றை அனைவரும் ஆமோதித்தனர்.

"உள்ளே இன்னொரு பேப்பர் இருக்கு. அதுலே என்னமோ எழுதியிருக்கு" என்று அவசர அவசரமாய் எடுத்தான் தேவராஜன்.

அது அப்பாவின் எழுத்து, கண்பார்வை அநேகமாய்ப் போன பின்னர் எழுத்துகளைக் கோத்துக் கோத்து எழுதிய டைரி..

"எனக்குக் கண்பார்வை போனது நியாயம் தான். சுவாமி யாரையும் அநாவசியமாகத் தண்டிப்பதே இல்லை. அவனது தீர்ப்பில் நியாயத்தைத்தவிர, தர்மத்தைத் தவிர வேறெதுவும் இருப்பதில்லை.

கற்பகத்துக்கு இழைக்கப்பட்ட கொடுமை அதீதமானது. எல்லா தர்மங்களையும் மீறினது. அப்பா என்னைத் தனது ஈகோவிற்குப் பலிவாங்கி விட்டார். அந்தப் பெண்ணை அப்படி மறுப்பது என்ன நியாயம்? ஆண் என்பதால், எது வேண்டுமானாலும் செய்துவிடுவதா? இது அக்கிரமம் இல்லையா? எனக்குத் தெரியாது என்றாலும் பொறுப்பு என்னுடையதுதான். அந்த அபலையைக் கண்ணீர் விடச் செய்த மகாப்பாபி நான். எனக்கு எந்தத் தண்டனையும் தகும்.

கற்பகத்தை மீண்டும் சேர்த்துக்கொள்ளக் கடிதம் எழுதினேன். அது இரண்டுமுறை திரும்ப வந்துவிட்டது. பிறகு நானே நேரில் சென்றேன். அவள் அப்பா காலமாகிவிட்டதாகவும், அவர்கள் அவமானம் தாங்காமல் யாரோ சொந்தக்காரர்களை நம்பிப் பட்டணத்திற்குப் போய்விட்டார்கள் என்றும் அறிந்து துடித்துப் போனேன்.

கற்பகம் என்ன பாடுபடுகிறாளோ? எவ்வளவு அவமானப்படுகிறாளோ? எல்லாவற்றிற்கும் காரண கர்த்தா நானல்லவா? என் புத்தியில்லாத்தனம் அல்லவா அவளை இவ்வளவு பாடுபடுத்திற்று? அப்பாவை மீறிச் செயல்பட்டிருக்க வேண்டாமா நான்?

அந்தப் பாவம் தான் என் கண்களைப் போக்கிற்று. கற்பகத்தின் வாழ்க்கையை இருட்டாக்கிய நான் இருளில் தடுமாறுவதுதான் நியாயம். தர்மம். என் தவற்றுக்கு அதுதான் சரியான தண்டனை. நான் வைத்தியம் செய்துகொள்ளப் போவதில்லை. தண்டனையை நான் அனுபவிப்பேன்.

ஆண்டவனே! எனக்கு நீண்ட ஆயுளைக் கொடு. நான் கண் தெரியாமல் நீண்டநாள் இருந்து என் பாபத்தைக் கழுவவேண்டும்..கற்பகம்! என்னை மன்னிச்சுடு.. தயவு செய்து என்னை மன்னிச்சுடு... எவ்வளவு சாபம் வேணும்னாலும் எனக்குக் கொடு... நான் இருந்து எல்லாத்தையும் அனுபவிச்சுடறேன்.

நான் பண்ணின பாவம் என் குழந்தைகளை பாதிக்கக்கூடாது. அதுக்காக நான் நீண்டநாள் இருந்து கண் தெரியாமக் கஷ்டப்படணும்..."

கிறுக்கலாய் கோத்துக் கோத்து எழுதியிருந்தார்.

ஏழு 'குழந்தைகளும்' அப்பா மறைந்த தினத்தில் அழுததைவிட, அதிகமாய் விக்கி அழலானார்கள். ●

# கார்கில் கல்யாணம்



**சோ**முப் பண்டாரம் என்னை இப்படி ஆச்சர்யத்தில் ஆழ்த்துவார் என்று நான் நினைக்கவே இல்லை. என்னுடைய நீண்ட நாளைய நண்பர் அவர். பல உண்மைச் சம்பவங்களை அவர் எனக்குக் கதைகளாகச் சொல்லி யிருக்கிறார். பல வருடங்களுக்கு முன்பு அதாவது நான் இளைஞனாக இருக்கும்போது அவரைப் பார்ப்போமா என்று ஏங்கியதுண்டு. அப்போது என் கதைகளெல்லாம் பிரசுரமான காலம். பல கதைகளின் கரு அவர் சொல்லிய தாகத்தான் இருக்கும். கதைகளுக்கு நல்ல 'தீம்' வேண்டுமே, சோமுப் பண்டாரத்தைப் பார்க்க மாட்டோமா என்று நான் தவியாய்த் தவித்த காலமுண்டு. சில சமயங்களில் அவர் நான் எதிர்பாராத வண்ணம் எங்கேயாவது தென்படுவார். பல சமயங்களில் என் தவிப்புதான் மிஞ்சும்!

இந்த முறை நான் அவரைச் சந்தித்தது ஆச்சரியம்தான். ஏனெனில் அவர் என்னைத் தேடிக்கொண்டு என் வீட்டிற்கே அல்லவா வந்து விட்டார்! என் இல்லத்திற்கு அவர் ஒரு போதும் வந்ததே இல்லை. அப்படி இருக்க அவருடைய திடீர் விஜயம் என்னை வியப்பில் ஆழ்த்தியது.

பிற்பகல் மூன்று மணிக்கு. வீட்டின் அழைப்பு மணி ஒலித்தது. ஓய்வாக இருந்த நான் கொஞ்சம் வெறுப்புடன் தான் வாசற்கதவைத் திறக்கச் சென்றேன். கதவைத் திறந்தவுடன் ஒரே பிரமிப்பு. வெளியில் சோமுப் பண்டாரம் நின்று கொண்டிருந்தார். தலையில் முண்டாசு. இடுப்பில் காவி வேட்டி, மார்பை மூடியபடி ஒரு காவி உத்தரியம். கண்களைக் கசக்கிக் கொண்டு மீண்டும் ஒருமுறை பார்த்தேன். நிச்சயம் பண்டாரம்தான். எனக்கு ஒரே குதூகலம். அவசரமாக ஒரு கதை எழுதவேண்டும். எதை வைத்து எழுதுவது என்று நான் யோசித்துக் கொண்டிருக்கும் வேளையில் சோமுப் பண்டாரம் விஜயம் செய்தது என்னை வியப்பில் ஆழ்த்தியது.

"யாரு சாமி தானே? நல்லவேளை நீங்கள் இருப்பீர்களோ மாட்டீர்களோ என்று சந்தேகத்தில்தான் வந்தேன். நல்ல வேளை, உங்களைப் பார்க்க முடிந்தது" என்ற பீடிகையுடன் உள்ளே நுழைந்தார் சோமுப் பண்டாரம்.

என் வாயெல்லாம் பல்லாகி விட்டது. "வரவேணும் வரவேணும். இப்படி வீட்டிற்கே திடீர் விஜயம் செய்வீர்கள் என்று கனவிலும் நினைக்கவே இல்லை." என்று கூறி மிக்க மகிழ்ச்சியுடன் அவரை வரவேற்றேன் நான்.

"சாமி! எனக்குத் தலைபோகிற அவசரம். இல்லாவிட்டால் உங்கள் வீடுதேடி வந்திருக்கமாட்டேன். இந்தக் கார்கில் சண்டை வந்தாலும் வந்தது. அதனால் எங்கள் ஊரில் ஒரு பெரிய பிரச்னை தீர்ந்து போனது" சொல்லிவிட்டு என் முகத்தைப் பார்த்தார் பண்டாரம்.

நிச்சயமாக நல்லதொரு கதை கிடைக்கப் போகிறது என்று நான் தீர்மானித்துக் கொண்டேன். என் அவசரம் எனக்கு. தீபாவளி மலருக்கு ஒரு கதை எழுதவேண்டுமென்று கதையின் கருப்பொருளுக்காகச் சிந்தனை செய்து கொண்டிருந்த எனக்கு இப்படிக் கதையும் கையுமாகப் பண்டாரம் வந்தது தாகத்தால் தவித்த ஒருவனுக்குத் தண்ணீர் கிடைப்பது போலிருந்தது.

"கார்கில் சண்டைக்கும் உங்கள் ஊர்ப் பிரச்னைக்கும் என்ன சம்பந்தம்?" என்று ஆச்சர்யத்துடன் கேட்டேன் நான்.

"இருக்கிறது. அதைச் சொல்லத் தானே ஓடோடி வந்தேன்? இச்சண்டையைப் பற்றி மக்கள் மறப்பதற்குள் அதை உங்களிடம் சொல்லாமல் போனால் என் மண்டையே வெடித்துவிடும்."

சோமுப் பண்டாரம் வரவேற் பறையில் போடப்பட்டிருந்த சோபாவில் நன்கு அமர்ந்து கொண்டார். அவர் கண்கள் மெதுவாக மூடிக் கொண்டன. இப்போது அவர் முகம் முன்பைவிடச் சற்றே பிரகாசமாக இருந்தது. அவருடைய முகவிலா சமோ தெளிவாக இருந்தது. இதன் அறிகுறி, அவர் சொல்ல வேண்டி யதைச் சொல்லத் தயாராகிவிட்டார் என்று அர்த்தம்.

**நா.ராமச்சந்திரன்**

## 2

செல்வராஜ் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள எருக்கை கிராமத்தைச் சேர்ந்தவன். பட்டப் படிப்பை முடித்து விட்டு அவன் இராணுவத்தில் சேர்ந்தான். எங்கும் வேலை கிடைக்க வில்லை என்ற நிலையில் இராணுவம் ஒன்றுதான் அப்போது புகலிடமாக இருந்தது. இராணுவத்தில் சேர்ந்த அவனை விமானப் படையில் சேர்த்துக் கொள்ள அரசாங்கம் அநுமதி யளித்தது. விமானப் படையில் சேர்ந்த அவன் தன் அயராத உழைப்பினாலும், நல்ல ஒழுக்கம், ஒழுங்குமுறைகளாலும் மளமள வென்று முன்னுக்கு வந்து விட்டான். இந்தப் பத்து வருட சர்வீஸில் போர் விமானங்களை இயக்கவும், யுத்த களத்தில் சாகசங்கள் புரிந்து எப்படி எதிரிகளைத் தாக்குவது என்பதிலும் அசகாய சூரனாகி விட்டான். எதிரிகளின் தாக்குதலிருந்து தப்புவதற்கு விமானம் எப்படி வேகமாக வட்டமடிக்க வேண்டும், தடாலென்று கீழே எப்படி இறங்கவேண்டும் மறுபடியும் அதை இயக்கி எப்படி மேலே ராக்கெட் போலச் செலுத்த வேண்டும் என்பன போன்ற பணிகளில் செல்வராஜ் சமர்த்தனாக விளங்கினான். விமானத்திலிருந்து 'பாராசூட்' மூலமாக அவன் கீழே குதிப்பதைப் பார்த்துப் பார்த்து வியந்திருக்கிறார் அவருடைய மேலதிகாரி கேப்டன் சுந்தர்.

எருக்கை கிராமத்திற்குப் பக்கத்தில் தேவூர். அதைக் குக்கிராமம் என்று சொல்ல முடியாது. கொஞ்சம் பெரிய ஊர். பேருந்து நிலையம், பெரிய மருத்துவ மனை, ஹைஸ்கூல், காவல் நிலையம் ஆகியவை அங்குண்டு. ஆனாலும் கிராமத்தின் களை போகாமல் இருந்தது அந்த ஊர். நகரத்தின் நாகரிகம் அங்கு இன்னும் எட்ட வில்லை போலும். கிராமத்தின் மண் வாசனையை அங்கு நுகர முடிந்தது. அந்த ஊரிலிருந்து வந்தவன் தான் குப்புராஜு. குப்புராஜும், செல்வராஜும் நல்ல நண்பர்கள். ஒன்றாகவே படித்து விட்டு இராணுவத்தில் சேர்ந்தவர்கள்.

குப்புராஜு நல்ல பலசாலி. சின்ன வயதிலேயே குத்துச் சண்டை, சிலம்பம் ஆகியவற்றில் அவனுக்கு ஆர்வம் இருந்தது. கொம்பைச் சுழற்றிக் கொண்டு அவன் ஆடுவது கண்களுக்குப் பரவசமூட்டுவதாக இருக்கும். அவனைப் போலீஸில் சேர்க்கவேண்டும் என்று தான் அவன் தந்தை விரும்பினார். ஆனால் நண்பன் செல்வராஜ் இராணுவத்தில் சேர்ந்தவுடன் குப்புராஜுக்கும் இராணுவத்தில் சேரவேண்டு மென்கிற எண்ணம் மேலோங்கி நின்றது. ஆனாலும் குப்புராஜுக்குத் தரைப்படையில் தான் நுழைவு கிடைத்தது.

தரைப்படையில் ஜவானாகச் சேர்ந்த குப்புராஜு படிப்படியாக உயர்ந்து ஹவில்தாராக வந்து விட்டான். அவனுடைய ஆக்கபூர்வமான திட்டங்களுக்கு மேலதிகாரிகள் செவி சாய்ப்பார்கள். இராணுவத்தின் விதிமுறைகளையும், ஒழுங்கு கட்டுப்பாடு ஆகியவற்றையும் பின்பற்றுவதில் குப்புராஜுக்கு இணை குப்புராஜுதான்.

கார்கில் பகுதிகளில் பயங்கர வாதிகளும் பாகிஸ்தானிகளும் ஊடுருவியிருக்கிறார்கள் என்ற தகவல் இராணுவத்திற்குக் கிடைக்கு முன், குப்புராஜுக்கு ஒருமாத கால லீவு கிடைத்தது. அதைப் பயன்படுத்திக் கொண்டு அவன் தமிழ்நாட்டிற்குப் பயணமானான். பயணப்படுவதற்கு முதல் நாள் செல்வராஜ், குப்புராஜைச் சந்திக்க நேர்ந்தது. 'கேண்டீன்' பக்கம் வந்த செல்வராஜ், குப்புராஜைப் பார்த்துவிட்டான்.

"என்ன குப்பு! நீ ஊருக்குப் போவதாகக் கேள்விப்பட்டேனே, நிஜம்தானா?" என்றான் செல்வராஜ், குப்புராஜின் தோள்களைத் தட்டியபடி.

"லீவு கிடைக்காது என்றுதான் நினைத்தேன். நல்ல வேளையாகக் கிடைத்துவிட்டது. ஊருக்குப் போயும் வெகு காலமாகிவிட்டது. கிளம்பி விட்டேன்" என்று உற்சாகத்துடன் பதிலளித்தான் குப்புராஜு. சொந்த ஊருக்குப் போகப் போகிறோம்; பெற்றோரைப் பார்க்கப் போகிறோம், என்ற பெருமிதம் அவன் முகத்தில் தெரிந்தது.

செல்வராஜ் சொன்னான்: "குப்பு! எனக்கு ஓர் உதவி நீ செய்ய வேண்டும். என் தங்கைக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கிறது. அதற்குப் பண உதவி வேண்டு மென்று எழுதியிருக்கிறார்கள். அதற்கான பணம் ஒரு லட்சம் வைத்திருக்கிறேன். அதை நீ என் அம்மாவிடம் சேர்க்கவேண்டும்" என்று.

செல்வராஜின் முகத்தில் தன் தங்கையின் கல்யாணத்திற்குத் தான் உதவியாக இருக்கிறோம் என்பதில் பெருமிதம் இருந்தது. ஓர் அசாதாரண நிம்மதி அவன் உடல் முழுவதும் பரவி அவன் முகத்தில் பளிச்சிட்டது.

"இது என்ன பெரிய உதவி? அதை நான் கட்டாயம் செய்கிறேன். நாளை நான் ரெயில் ஏறுவதற்குள் பணத்தை டிராப்டாக என்னிடம் சேர்த்துவிடு" என்று சொல்லிவிட்டு குப்புராஜு 'கேண்டீன்' உள்ளே சென்றுவிட்டான்.

மறுநாள் செல்வராஜுக்குப் பணத்தை டிராப்டாக எடுக்க முடிய வில்லை. அதற்குள் அவனுக்குப் பல வேலைகள் வந்துவிட்டன. எனவே லட்ச ரூபாயைப் பணமாகவே குப்புராஜிடம் கொடுத்து விட்டு ஜாக்கிரதையாக எடுத்துக் கொண்டு போகச் சொன்னான்.

"செல்வா! நீ கொஞ்சங்கூடக் கவலைப்படவேண்டாம். நான் பத்திரமாகப் பணத்தை எடுத்துச் சென்று முதல் வேலையாக உன் அம்மாவிடம் அதைச் சேர்ப்பித்து விடுகிறேன்" என்று குப்புராஜு கூறிவிட்டு அவனிடம் விடைபெற்றுக் கொண்டான்.

## 3

குப்புராஜு பணத்தைப் பூதம் காப்பது போலக் காத்துப் பத்திரமாக

சென்னைக்கு எடுத்து வந்து விட்டான். இன்னும் ஒரு நாள் பிரயாணம் நல்லபடியாக முடிய வேண்டுமே என்று எல்லாக் கடவுள் களையும் வேண்டிக் கொண்டான். அவன் வேண்டிக் கொண்டபடியே எல்லாம் முடிந்து ரயில், பஸ் என்று மாறி மாறி ஏறி ஒருவழியாகத் தேவூருக்கு வந்து சேர்ந்தான் குப்புராஜு.

ஊருக்கு வந்தவுடன்தான் அவனுக்கு முக்கியமானதொரு செய்தி தெரியவந்தது. அவனது பெற்றோர் அவனுடைய தங்கையின் திருமணத்தை முடித்திருந்த விஷயம்தான் அது.

குப்புராஜின் தங்கை பரிமளா கல்யாண வயதைத் தொட்டுக் கொண்டிருந்தாள். அவளுடைய வயதான தந்தை அவள் திருமணத்தைப் பார்க்கவேண்டுமென்று உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தார். மாப்பிள்ளைப் பையன் உள்ளூர் ஹெட்மாஸ்டரின் பிள்ளை. என்ஜினியரிங் படித்துவிட்டு சென்னையில் நல்ல வேலையில் இருந்தான். இந்தக் கல்யாணம் நடந்தால் பரிமளா அதிர்ஷ்டக் காரிதான். பையனைப் பெற்றவர்கள் மிகவும் அவசரமாக இருந்தார்கள். ஒருமாத அவகாசத் திற்குள் கல்யாணம் முடிந்துவிட வேண்டும் என்பது அவர்களது நிபந்தனை.

விஷயத்தைக் கேட்ட குப்புராஜு யோசனையில் ஆழ்ந்து போனான். எப்படிக் கூட்டிக் கழித்தாலும் இன்னும் ஒரு லட்ச ரூபாய் அவர்களுக்குத் தேவைப்பட்டது.

"குப்பு! உன்னைத்தான் நாங்கள் நம்பியிருக்கிறோம். நீ மறுபடியும் ஊருக்குக் கிளம்புவதற்குள் இந்தக் கல்யாணத்தை முடித்துவிடு" என்று கரைந்தாள் அம்மா. அப்பாவோ பிள்ளையின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். எப்போதுமே அவர் அதிகம் பேசமாட்டார். தங்கை பரிமளாவிற்கோ இந்தக் கல்யாணத்தில் அளவற்ற பிரியம். தன் அண்ணன் தன்னுடைய ஆசையை எப்படியும் நிறைவேற்று வார் என்ற நம்பிக்கையில்



அவள் திளைத்துக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு சமயம் இந்தக் கல்யாணப் பேச்சு வரும்போதும் அவளுடைய ஏக்கம் நிறைந்த பார்வை குப்புராஜின் இதயத்தைத் துளைக்கும்.

குப்புராஜு தேவூருக்கு வந்து இரண்டு நாள்கள் ஆகிவிட்டன. ஒவ்வொரு நாளும் பக்கத்தில் இருக்கும் எருக்கை கிராமத்திற்கு லட்ச ரூபாயை எடுத்துக்கொண்டு போய் செல்வராஜின் அம்மாவிடம் கொடுத்து விட்டு வரவேண்டு மென்று தான் நினைப்பான். ஆனால் ஏதோ வேலை அவனைத் தடுத்து நிறுத்திவிடும்.

அன்று காலை தலைமை ஆசிரியரே குப்புராஜுவின் வீட்டிற்கு வந்துவிட்டார். வந்தவர் தன் மகன் கல்யாணத்தை விரைவில் முடித்துவிட வேண்டுமென்று நாள் குறிப்பிட்டுப் பேசத் தொடங்கி விட்டார்.

அம்மாவின் வற்புறுத்தல் ஒரு புறம், தந்தையின் மௌன நிர்ப்பந்தம். இதையெல்லாம் விட தங்கையின் ஏக்கமும் சோகமும் கலந்த பார்வை ஆகியவை மறுபுறமும் குப்புராஜைத் திக்குமுக்காடச் செய்தன. அவன் என்ன செய்வான்? தாமரையிலையில் தவிக்கும் நீர்த் திவலைகள் போல் தத்தளித்தான்.

அன்று இரவு முழுதும் அவனுக்குத் தூக்கமே இல்லை. புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தான். அவனுடைய தங்கை பரிமளா அவன் மனத்திரையில் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தாள். "அண்ணா,உங்களை விட்டால் எனக்கு யார் இருக்கிறார்கள்? வெண்ணெய் திரண்டு வருகிறது. அதைவிட்டு விடலாமா?" என்று சொல்லிச் சொல்லிக் கதறுவது போலிருந்தது.

குப்புராஜு ஒரு தீர்மானத்திற்கு வந்து விட்டான். கையிலிருக்கும் லட்ச ரூபாயில் பரிமளாவின் கல்யாணத்தை முடித்துவிட வேண்டும் என்ற தீர்மானம் தான் அது. 'நண்பனுக்கு நிலைமையை எடுத்துக்கூறி மன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம்; விரைவிலேயே அந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடலாம்' என்று தன்னையே ஒருவாறு சமாதானம் செய்து கொண்டான். தேவூருக்குப் பக்கத்திலுள்ள தெற்காத்தூரில் அவர்களுக்கு ஒரு வீடு இருக்கிறது. அதை விற்றாவது செல்வராஜுக்குப் பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடலாம் என்று வேறு தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

குப்புராஜின் மனம் இப்படி உறுதிப் பட்டவுடன் எருக்கைப் பக்கம் அவன் போகவே இல்லை. பணத்தை செல்வராஜ் வீட்டிற்குக் கொடுக்கவுமில்லை. மனப்போராட்டத்தில் உள் மனது அவனை 'அடப்பாவி! இப்படி நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டாயே! உன் சகோதரி பரிமளா மாதிரி தானே செல்வராஜின் சகோதரியும்? அந்தக் குடும்பத்தின் சாபம் உன்னைச் சும்மா விடுமா?' என்று சொல்லிக் கொண்டிருந்த போதிலும் அதையும் மீறி வேலை களைச் செய்து கொண்டிருந்தான். ஆனாலும் ஹோ! அவனுடைய மனசாட்சி அவனைச் சித்திரவதை செய்து கொண்டுதான் இருந்தது!

பணம் பிரதானமாகப் போன இந்தக் காலத்தில் அது வந்தவுடன் எதுதான் நடக்காது? குப்புராஜின் இல்லத்தில் எல்லாமே வேகமாக நகர்ந்தன.. எல்லார் முகத்திலும் ஒரு பிரகாசம்! பரிமளாவின் முக விலாசத்தில் ஒரு புதுப்பொலிவு நடையில் ஒரு நளினம். இன்னும் அவள் செய்யும் எல்லாச் செயல்களிலேயும் ஒரு மெருகு, ஒரு குதூகலம்... ஆனால் குப்புராஜின் உள்ளத்தில் மட்டும்... அதை எப்படிச் சொல்வது? மனசாட்சிக்கு அப்படி ஒரு வலிமையா?

"எண்ணியபடி எதுவும் நடக்காது; ஏதும் அவன் செயல்; மனப்பால் குடிக்காதே" என்று அந்தக் காலத்தில் பாபநாசம் சிவன் அவர்கள் பாடிய பாடலொன்று உண்டு. அப்படி ஒரு சம்பவம் எண்ணியபடி நடக் காமல் போய்விட்டது குப்புராஜின் வாழ்வில்.

கார்கில் பகுதியில் பாகிஸ்தானியர் ஊடுருவி விட்டார்கள் என்ற சேதி ஊர்ஜிதமான போது இந்தியப் படை போருக்குத் தயாராகிவிட்டது. காலாட்படையும், விமானப்படையும், கடற்படையும் போருக்கு ஆயத்தம் செய்யத் தொடங்கிவிட்டன. குப்புராஜுக்குக் கம்பியில்லாத் தந்தி மூலம் உடனே புறப்பட்டு வர உத்தரவு வந்துவிட்டது. நாட்டின் சேவை சொந்த வாழ்க்கையைவிட மிக முக்கியமல்லவா? தங்கையின் கல்யாணம் இருந்தது. தெற்காத்தூர் வீடு விற்பனை சம்பந்தமாகப் பல வேலைகள் இருந்தன. இன்னும் எவ்வளவோ? இதற்கிடையில் நண்பன் செல்வராஜ் விஷயமாகச் சரியாக நடந்து கொள்ளவில்லையே என்ற மன உறுத்தல்... இவ்வளவையும் அப்படி அப்படியே போட்டு விட்டு குப்புராஜு போருக்குக் கிளம்பிவிட்டான். கார்கில் பகுதியை எதிரிகளிடமிருந்து கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணமே அவன் உள்ளத்தில் அப்போது மேலோங்கி நின்றது. கிளம்புமுன் ஒரு வார்த்தை மட்டும் அவன் சொல்லிவிட்டுப் போனான். எக்காரணத்தைக் கொண்டும் தங்கை பரிமளாவின் கல்யாணம் தடைபடக்கூடாது. குறித்த காலத்தில் அது நடந்தே தீரவேண்டும் என்பது தான் அது.

## 4

ஏறக்குறைய இதே சமயத்தில் எருக்கையில் செல்வராஜின் வீடு திமிலோகப்பட்டுக் கொண்டிருந்தது. அரைகுறையாக ஒரு டெலிபோன் தகவல் அவர்களுக்கு வந்திருந்தது. செல்வராஜே பேசினான். தபால் ஆபீஸில் டெலிபோனை எடுத்த பெரியவர் ஒருவர் அந்தச் செய்தியை செல்வராஜின் அம்மாவிடம் சொன்னார் "தாயி! உன் பிள்ளை செல்வா தான் பேசினான். கல்யாணத்திற்காகப் பணத்தைத் தேவூர் குப்புராஜிடம் கொடுத்தனுப்பி யிருக்கிறானாம். யுத்தம் தொடங்கி விட்டது அதனால் இனிமேல் பேசுவது கஷ்டம். பணத்தைப் போய் வாங்கிக் கொள்ளச் சொன்னான். அதற்குமேலேயும் ஏதோ சொன்னான் அது என் காதில் விழவில்லை. கல்யாணத்தை உடனே முடிக்கச் சொன்னான். அவனுக்காகக் காத்திருக்க வேண்டாம் என்று அழுத்தமாகச் சொன்னது மட்டும் எனக்கு நன்றாகக் கேட்டது" சொல்லும்போதே பெரியவரின் சுவாசப்பை துருத்திபோல் மேலும் கீழும் வேகமாக அசைந்தது.

இந்தத் தகவல் கிடைத்தவுடன் செல்வராஜின் தாயார் தேவூருக்குக் கிளம்பிவிட்டாள். தேவூர், எருக்கை யிலிருந்து அதிக தூரமில்லை. இரண்டு கிலோ மீட்டர்தான் இருக்கும்.

தேவூருக்குச் சென்ற செல்வராஜின் தாயாருக்கு ஏமாற்றமே காத்திருந்தது. அந்த அம்மாள் அவன் வீட்டை அடைவதற்குள் குப்புராஜு புறப் பட்டுப் போய்விட்டான். அவன் சென்று இரண்டு மணி நேரம் ஆகிவிட்டது. அப்படியொன்றும் பணம் கொடுத்து விட்டுப் போக வில்லை என்று பரிமளா கூறிவிட்டு வந்தவளை உட்காரச் சொல்லிவிட்டு காபி கலக்கப் போய் விட்டாள்.

செல்வராஜின் தாயாருக்கு என்ன செய்வதென்றே தெரிய வில்லை. பணம் தான் கிடைக்க வில்லை என்றாலும் குப்புராஜுவைப் போலத்தான் மகனும் போருக்குப் புறப்பட்டிருப்பானோ என்ற திகில் வேறு அவளைப் பற்றிக் கொண்டது.

குப்புராஜின் வீட்டில் எல்லாமே மளமளவென்று நகர்ந்தன. பண

நெருக்கடி தீர்ந்தவுடன் பரிமளாவின் கல்யாணத்திற்குத் தடையென்ன இருக்கிறது? நல்ல சுபயோக சுப முகூர்த்தத்தில் பரிமளாவிற்கும் தலைமை ஆசிரியர் மகனுக்கும் சீரும் சிறப்புமாக விவாகம் நடந்தேறியது. குப்புராஜு வரவில்லை யென்ற குறையைத் தவிர வேறு எந்தக் குறையும் அங்கில்லை.

பரிமளாவின் கல்யாணத்திற்குச் சென்றுவிட்டு வந்த செல்வராஜின் தாயாருக்குப் பெருங் குறை. தன் பெண் கல்யாணம் நடைபெற வில்லையே என்ற ஏக்கம் அவள் உடலை வெகுவாகப் பாதித்தது. பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்து விட்டாள். பட்ட காலிலேயே படும் என்கிற பழமொழி அவள் விஷயத்தில் சரியாகிவிட்டது. கல்யாணம் நடக்க வில்லை என்று குறைப்பட்டுக் கொண்டிருந்த அவளுக்குத் திடீரென்று இன்னொரு கவலை வந்து சேர்ந்தது.

போர்க்களத்திலே விமானம் ஓட்டிச் சென்ற செல்வராஜின் விமானம் காணவில்லை. அவனைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை என்ற செய்தி யுத்தகளத்திலிருந்து வந்தபோது செல்வராஜின் தாயார் அப்படியே மயங்கி விழுந்துவிட்டாள். சுய நினைவு வர வெகு நேரமாயிற்று.

மகனையும் காணவில்லை; மகளுக்கும் கல்யாணம் ஆகவில்லை. எப்படித்தாங்கும் அந்த வயதான சரீரம்? அந்தக் குடும்பமும் ஆழ்ந்த துக்கத்தில் மூழ்கிப் போனது.

காலம் நகர்ந்து கொண்டிருந்ததே தவிர செல்வராஜைப் பற்றி எந்தத் தகவலும் காணோம். இந்தச் சமயத்தில் தான் ஒரு திடீர் திருப்பம் ஏற்பட்டது. கடவுள் மட்டும் கஷ்டத்திற்கு மேல் கஷ்டங்களைக் கொடுத்துக் கொண்டிருப்பாரா? ஏதாவது ஒரு விடிவு காலம் எந்த ரூபத்திலாவது வந்து தானே ஆகவேண்டும்?

அந்த விடிவுகாலம் சிங்கார வேலன் ரூபத்தில் ஒரு நாள் வந்து சேர்ந்தது. செல்வராஜின் தங்கை சுந்தரிக்குப் பார்த்திருந்த மாப்பிள்ளை பையன்தான் சிங்கார வேலன். அவன் ஒருநாள் இருக்கையில் உள்ள செல்வராஜின் வீட்டிற்கு வந்தான். அப்போது செல்வராஜுவின் தாயார், வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். சிங்காரவேலனைப் பார்த்தவுடன் பரபரப்படைந்தாள்.

"வா தம்பி வா! வீட்டில் எல்லாரும் நல்லா இருக்காங்களா?" என்று கேட்டுக் கொண்டே" வீட்டினுள் திரும்பி "சுந்தரி! சுந்தரி! தம்பி வந்திருக்கு காபி போட்டுக் கொண்டு வா?" என்று தன் பெண்ணிற்குக் கட்டளையிட்டாள்.

"ஒண்ணுமில்லை, அண்ணனைப் பற்றி ஏதாவது தகவல் வந்ததா என்று கேட்டுப் போகத்தான் வந்தேன்" என்றான் சிங்காரவேலன். சொல்லி விட்டு வீட்டின் உட்புறம் தன் கண்களை ஊடுருவினான்.

வீட்டின் உள்ளே ஜன்னல் வழியாக சுந்தரி தன்னைப் பார்ப்பது சிங்காரவேலனுக்கு நன்கு தெரிந்தது.

→

அவள் கண்களால் பார்த்தாள் என்று சொல்வதைவிட கண்களால் பேசினாள் என்று சொல்லலாம். அவற்றுக்குப் பேசும் திறன் மட்டும் இருந்திருந்தால் அந்த நொடிப் பொழுதில் ஆயிரமாயிரம் கதைகளைப் பேசியிருக்கும். அவள் கண்கள் சிங்காரவேலனின் கண்களைத் துளைத்து, அவன் மனத்தைத் தொட்டு, அவன் உடலைக் கிறுகிறுக்க வைத்து விட்டன. ஒரு நிமிட நேரம் தான்! எத்தனை எத்தனை இன்பங்கள் இருவர் உள்ளங்களில் ஏற்பட்டன! அதனைக் கவிஞனால் மட்டுமே உணர்ந்து, அனுபவித்துப் பாட முடியும்!

சிங்காரவேலனே பேச முற்பட்டான். "அம்மா! உங்களிடம் என் எண்ணங் களைச் சொல்லவேண்டு மென்றுதான் இங்கு வந்திருக்கிறேன். சுந்தரியை நான் கல்யாணம் செய்து கொள்வதாகத் தீர்மானித்து விட்டேன். அதற்காகப் பணம் குறுக்கே நிற்கவேண்டாம். நானே எல்லாச் செலவுகளையும் ஏற்றுக் கொள்கிறேன். உங்கள் சம்மதம் தான் வேண்டும். இதைப்பற்றிப் பேச என் அப்பாவே இன்னும் கொஞ்ச நேரத்தில் இங்கு வருவார்...." ஒரே மூச்சில் பேசி முடித்துவிட்டு சுந்தரியின் தாயாரின் முகத்தை ஆவலோடு பார்த்துக் கொண்டிருந் தான் அவன்.

விஷயத்தைக் கேட்ட அந்த அம்மாளுக்கு ஒன்றுமே புரிய வில்லை. இந்த மாதிரியான ஒரு பேச்சை, பிள்ளைவீட்டாரிடமிருந்து அவள் கொஞ்சமும் எதிர்பார்க்க வில்லை. இந்தக் கல்யாணமே பணப் பிரச்னையில்தான் நின்று கொண் டிருந்தது. செல்வராஜ் பணத்தைக் குப்புராஜு மூலமாக அனுப்பியதாகச் சொல்கிறான். ஆனால் குப்புராஜிட மிருந்து எந்தத் தகவலும் இல்லை. செல்வராஜைக் கேட்கலாம் என்றாலோ அவன் யுத்தகளத்தில் இருக்கிறான். அவன் இருக்குமிடமே தெரியவில்லை. விமானம் மூலம் சென்றவனின் கதி அரசாங்கத் திற்கே தெரியவில்லை. இந்த மாதிரியான சூழ்நிலையில் அந்த வயதான தாய் என்ன செய்வாள்? மகனைப் பற்றி நல்ல செய்தி வரவேண்டும், தன் பெண்ணிற்குக் கல்யாணம் ஆகவேண்டும் இவை தான் அவள் முன் நிற்கும் தலையாய பிரச்னைகள். அவை எப்படித் தீரப் போகின்றனவோ?

"என்னம்மா பேசாமல் இருக் கிறீர்கள்? ஏதாவது பதில் சொல் லுங்கள்" அவசரப்படுத்தினான் சிங்காரவேலன்.

அந்த வயதான அம்மாள் என்ன பதில் சொல்வாள்? சிங்காரவேலன் தன் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொன்னதில் அவளுக்குப் பரம திருப்தியே. ஆனால் அந்தச் சந்தோஷ சமாசாரத்தைக் கீழே அமுக்கிவிட்டு மேலே பூதாகாரமாக நின்றது பிள்ளையின் பிரிவு. யுத்த களத்தில் காணாமல் போய்விட்டான் என்றால் அதற்கு என்ன அர்த்தம்? விடை காணமுடியாமல் தத்தளித்தாள் அவள். எனினும் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "சிங்காரம்! நீ சொல்வது எனக்கு ரொம்பவும் திருப்தியாக இருக்கிறது. ஆனால் இதெல்லாம் தெய்வச் செயல். நான் நம்பியிருக்கும் முருகன் எப்படி வழிநடத்துகிறான் என்று பார்ப்போம்..." ஒரு மாதிரி யாகப் பதில் சொல்லி சிங்கார வேலனை வழியனுப்பி வைத்தாள். சிங்காரவேலனும் சுந்தரி கொண்டு வைத்த காப்பியை அருந்தி விட்டு "என் அப்பா இன்னும் சிறிது நேரத்தில் இங்கு வருவார். நல்ல பதிலாகச் சொல்லியனுப்புங்கள்' என்று கூறிவிட்டு சுந்தரியிடம் கண்களாலேயே பிரியா விடை பெற்றுத் தன் வீட்டுக்குத் திரும்பினான்.

## 5

அதற்குப் பின் என்ன நடந்தது என்று கூறத் தேவையில்லை. சிங்காரவேலனின் தகப்பனார் கல்யாணத்தைப் பேசி முடிக்க அன்று மாலையே வந்துவிட்டார். "பணத்தைப் பற்றி நீங்கள் எந்தக் கவலையும் படவேண்டாம். பெண்ணைக் கொடுங்கள். அதுவே போதும்" என்று அவர் கூறியபோது அந்த வார்த்தைகள் அமிர்தமாகத் தான் இருந்தன. ஆனால் செல்வராஜைப் பற்றி ஒன்றும் தெரியவில்லையே அவன் இல்லாமல் எப்படி வேலைகள் நடக்கும்?

அதற்கும் ஊர்ப் பெரியவர் ஒருவர் வழி கண்டுபிடித்துச் சொன்னார். அவர் சொல்வதிலும் நியாயம் இருந்தது. அவர் சொன்னார். "செல்வராஜைப் பற்றி இதுவரையிலும் எந்தத் தகவலும் இல்லை. அதற்குள் நாம் எந்த முடிவுக்கும் வரவேண்டாம். அவன் இருப்பதாகவே வைத்துக் கொண்டு இந்தக் கல்யாணத்தை நடத்தி முடிக்கலாம். அவன் ஆசி இந்தத் திருமணத்திற்கு இருக்கும்போது நாம் ஏன் தடைபோட வேண்டும்?" இந்த அறிவுரை எல்லாருக்கும் ஏற்புடையதாக இருந்தது. எனவே எல்லோருமே இந்த முடிவுக்குச் சம்மதம் தெரிவித்து விட்டார்கள்.

பிறகென்ன? அடுத்த சுபயோக சுபவேளையில் சிங்காரவேலனுக்கும், சுந்தரிக்கும் திருமணம் இனிதே நடந்தேறியது. அதே திருமணத் தன்று தான் ஒரு பெரிய அதிசயமும் நிகழ்ந்தது.. இதைக் கடவுளின் லீலா வினோதமென்பதா? அல்லது வேறு பெயரிட்டு அழைப்பதா?

சிங்காரவேலன் சுந்தரியின் கழுத்தில் தாலிகட்டி முடிந்தவுடன்; எங்கிருந்து வந்தாளோ தெரிய வில்லை. விடுவிடுவென்று ஒரு பெண் மணமேடை மேலிருந்த சுந்தரியின் கைகளைக் குலுக்கி விட்டு, அவள் கையில் ஒரு பையைத் திணித்துவிட்டு, வந்த வேகத்திலேயே திரும்பிச் சென்று விட்டாள். அவளை அடையாளம் கண்டுகொள்ள யாவருக்கும் வெகு நேரமாகிவிட வில்லை. அவள் வேறு யாருமில்லை. குப்புராஜின் தங்கை பரிமளாதான். ஆனால் அவள் அப்படி ஏன் வேகமாகத் திரும்பிப் போக வேண்டும் என்பதுதான் புரியாத புதிராக இருந்தது.

முகூர்த்தம் முடிந்தவுடன் சுந்தரி பையைத் திறந்தபோது அதில் புத்தம் புதிய ஐநூறு ரூபாய்க் கட்டுகள்

இருந்தன. அவற்றை எண்ணிய போதோ அது ஒரு லட்சம் இருந்தது! இந்த ஆச்சர்யத்தில் எல்லாரும் மூழ்கியிருந்தபோது இன்னும் ஓர் எதிர்பாராத சம்பவம் அங்கு நிகழ்ந்தது

காணாமற்போன செல்வராஜு பாகிஸ்தானிகளால் கைது செய்யப்பட்டு, நாளை மறுநாள் ஓர் ஒப்பந்தப்படி அவனுடைய கேப்டன் நசிகேதாவுடன் டெல்லி வந்து சேரப்போகிறான் என்ற செய்திதான் அது.

சுந்தரிக்கும் அவள் தாயாருக்கும் ஏற்பட்ட இந்த இரட்டிப்பு சந்தோஷத்தை வார்த்தைகளால் விவரிக்க முடியுமா? அல்லது வர்ணிக்கத்தான் முடியுமா?

ஒருபக்கம் செல்வராஜு கொடுத்த பணம் திரும்பி வந்து சேர்ந்துவிட்டது. இன்னொரு பக்கமோ அவனே யுத்த களத்தில் மறுபிறவி எடுத்து நாளை மறுநாள் டெல்லிக்குத் திரும்பி வரப்போகிறான். கேட்கவேண்டுமா குதூகலத் திற்கு? இருவர் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் பொங்கி வழிந்தது.

கதையைச் சொல்லி முடித்து விட்டு கண்களைத் திறந்து கொண்டார் சோமுப் பண்டாரம். 'இந்தக் கார்கில் யுத்தத்தில் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் நடந்தது பெரிய விந்தை தான்! இதை ஏன் கார்கில் கல்யாணம் என்று சொல்லக்கூடாது? இரு குடும்பத்தினருக்கும் கல்யாணம் நடப்பதில் பணம்தான் பெரிய பிரச்னையாக இருந்தது. அந்தப் பிரச்னை ஒருவித மனத் தாங்கலும் இல்லாமல் சுலபமாக முடிந்ததே. அதுவே அவர்கள் செய்த பெரிய புண்ணியம் தான்...'' என்று முத்தாய்ப்பு வைத்தார் பண்டாரம்.

''ஆனால் இதில் ஒரு முடிச்சு அவிழ்க்கப்படாமல் இருக்கிறதே! என்று இழுத்தேன் நான்.

''சாமி! நீங்க எதைக் கேக்கறீங் கன்னு எனக்குத் தெரியும். பரிமளா பை நிறையப் பணத்தைக் கொண்டு வந்து சுந்தரியின் கைகளில் திணித்தாளே, அதைப் பற்றித்தானே?'' என்று கேட்டு பண்டாரமும் இழுத்தார்.

'ஆமாம்' என்பதற்கு அடையாள மாகத் தலையை ஆட்டினேன்.

''சாமி! கல்யாண சமயம். சுப நிகழ்ச்சி நடக்கும்போது அதைச் சொல்லவேண்டாம் என்றுதான் அதை விட்டுவிட்டேன். குப்புராஜு அவசர அழைப்பு வந்தவுடன் டெல்லிக்குச் சென்று விட்டான் என்று சொன்னே னல்லவா? பிறகு அவன் தாமதிக்காமல் கார்கில் பகுதிக்குப் படைவீரனாகச் சென்று விட்டான். ஆனால் அவன் மனசாட்சி அவனை விடுவதாக இல்லை. செல்வராஜின் தங்கை கல்யாணத்திற்குக் கொடுக்க வேண்டிய லட்ச ரூபாய் பணத்தைத் தன் தங்கை கல்யாணத்திற்கு உபயோகப்படுத்திக் கொண்டு விட்டோமே என்ற எண்ணம் அவனை அதிகம் வாட்டி எடுத்தது. எனவே கடிதத்தில் அதைப்பற்றிக் குறிப்பிட்டு பரிமளாவிற்கு எழுதி யிருந்தான். எப்படியும் பணத்தைப் புரட்டி சீக்கிரமாகவே அனுப்பிவிடு வதாக அந்த லெட்டரில் அவன் கோடிட்டுக் காட்டியிருந்தான்.

''ஆனால் விதி வேறுவிதமாகச் சதி செய்து விட்டது. யுத்த களத்தில் அவன் வீரமரணம் அடைந்து விட்டான். அவனுடைய சேவையை மெச்சி தமிழ்நாடு அரசு முதலில் அளித்த ஒரு லட்ச ரூபாயைத் தான் பரிமளா சுந்தரியின் கல்யாணத்தன்று கொடுத்துவிட்டு, விடுவிடு வென்று சென்றுவிட்டாள்.''

சோமுப் பண்டாரம் கதையை முடித்துவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார்.

நாறும் கண்களை மூடிய வண்ணம் குப்புராஜின் ஆன்மா சாந்தியடையப் பிரார்த்தித்துக் கொண்டேன். ★

## பள்ளியில் கொள்ளை போனவை



ஆர்.பி.சாரதி

பள்ளியில் பாவி நான்
பாட மூட்டையில்,
கொள்ளை கொடுத்ததைக்
கூவித் தேடவா?

பிள்ளையாய் அன்று நான்
பேசித் திரிந்த என்
வெள்ளை மனத்தினை
வெளியில் தேடவா?

அன்னையும், தந்தையும்
அன்பொடு பாட்டியும்,
அளித்த நல் அறிவினை,
அவனியில் தேடவா?

அத்தைகை பிடித்து நான்
ஆலயம் சென்றுமே,
ஆழ்ந்த நல் பக்தியை
ஆரிடந் தேடுவேன்?

வேற்றுமை யின்றியே
பெண்ணொடு ஆண்கள்கை
பற்றியே ஆடிய
பாசமும் போனதே!

கவலைகள் இன்றியே
களித்துச் சிரித்த நல்
இளமையும் பள்ளியில்
களவு போனதே!

பள்ளியில் பிள்ளையாய்க்
கொள்ளை கொடுத்ததைக்
கோடி கோடியாய்க்
கொடுப்பவர் யாரினி?

# அரியூரிலிருந்து ஓர் அழைப்பு

சந்திரானந்தா

பகல் மணி ஒன்று.

பெற்றோரோடு வேலூருக்குத் திரும்பிக் கொண்டிருக்கும்போது கண்ணமங்கலத்தைத் தாண்டி கணியம் பாடிக்கருகில் –

சுட்டெரிக்காத மிதமான வெயிலில் வானத்தின் உச்சியில் மிகச் சிறிய தாய்ப் பின் சிறியதாய் ரத்தச் சிவப்பாய் மாறித் தாமரையின் நடுவில் அமர்ந்த நிலையில் சங்கு சக்கரம் அபய முத்திரையுடன் பிரித்தும் பிரிக்காத உதடுகளில் நகை சிந்தி ஒளிர்ந்தாள் 'அம்மா' நாராயணி.

அன்று மாலையே –





கோ பூஜையின்போது ஸ்ரீ விஜயேந்திரா

தாம் வசித்த என்ஜினீயர் சுப்பராய முதலித்தெருவில் முதிர்கன்னியிடம் "அம்மா வந்திருக்கிறேன்" என்று கூறி, சில நொடிகள் கழித்து 'என் தலையில் மஞ்சள் நீர்தெளி' என்றும் கூறினான் வானவெளியில் வண்ண மயக் கண்ணம்மையைத் தரிசித்த பதினாறு நிரம்பாத பால்வழியும் குழந்தைமை தவிக்கும் முக வசீகரம் கொண்ட சதீஷ்குமார்.

அந்த நாள்: 1992 மே 8ஆம் தேதி.

அரியூர் கூட்டுறவு மில்லில் வெல்டரான தந்தை நந்தகோபாலும், சத்து வாச்சாரி அரசினர் மேனிலைப் பள்ளியில் ஆசிரியையான தாய் ஜோதியும் ஊரிசு மேனிலைப் பள்ளியில் பன்னிரண்டாம் வகுப்புப் படிக்கும் தங்கள் இரண்டாவது வாரிசுக்கு அம்மாவின் அருள் கிடைத்ததை சில பொழுதுகள் நம்பி, நம்பாமல் அசையிட்டு தங்களுக்குத் தாங்களே பின்னிக் கொண்ட சிலந்திகளாய்த் தவித்தனர்.

நம்பச் செய்தான் 'அம்மா' நாராயணி.

அருள்வாக்குச் சொல்லத் தொடங்கினான் 'அம்மா'

ஆம்... அன்றிலிருந்து சதீஷ்குமார் எனும் பெயர் மறைந்து 'நாராயணி அம்மா' எனும் நாமம் நானிலத்தின் சேமம் பொருட்டுப் பரவியது.

ஓம் சக்தி நாராயணி –

வேலூரிலிருந்து எட்டு கி.மீ. தூரத்தில் தொரப்பாடி சிறைச்சாலையைத் தாண்டி அரியூர் மலைக் கோடியில் இரண்டு ஏக்கர் பரப்பில் அமைந்த ஓம் சக்தி நாராயணி சித்தர் பீடாதிபதியானாள் 'அம்மா'.

உலக அமைதி, உலக சமாதானம், உலக நலம் என்று ஆன்மிக நெறி நின்று சமுதாயப் பணிகளில் மூழ்கி மக்களுக்கு விழிப்புணர்வூட்டத் தொடங்கினாள் 'அம்மா' ஓம் சக்தி நாராயணி.

'அம்மா'வின் அருள்வாக்கு –

திக்குகளெங்கும் பக்குவம் நோக்கும் மக்களின் மனங்களில் சிக்கெனக் குடியேறி விளைவுகளின் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்தது.

'அம்மா' அதிகமாய் அறியப் பட்டாள்.

மலை முகட்டில் தலைகாட்டப் பிரபஞ்சத்தின் நலனை விலையாக்கும் கலைமகனாய் மண் நோக்கிக் கண் திறக்கிற ஆதவனின் வரவிற்கு முன்பே ஓம் சக்தி நாராயணி பீடம் –

ஜெய ஜெய நாராயணி... அம்மா அம்மா... சரணம் சரணம்... மலைக் கோடி அரியூரில் பிறந்தவளே என்பன போன்ற 'அம்மா'வை முன்நிறுத்தும் அற்புதப் பாடல்களால் பக்தர்களை அழைக்கத் தொடங்கிவிடுகிறது.

'அம்மா'

காலை மணி ஆறுக்குத் தியானம், யாகத்தின்போது செப்புக் குடத்தில் வைத்த மந்திரம் உருவேற்றப்பட்ட கலச தீர்த்தத்தைக் கோமாதாவுக்கு அர்ப்பணிக்கும், ஒன்பது மணிக்குக் கோபூசை, பத்து மணிக்குத் துளசி பூசை, பத்து பதினைந்திலிருந்து சுயம்புவாய் சுகம் தரும் அம்மா பூசை, பன்னிரண்டிலிருந்து மூன்றரைவரை உச்சிக்காலப்பூசை, நான்கு மணிக்கு 'அம்மா' தரிசனம். மாலை ஆறிலிருந்து எட்டரை மணி வரை பூசை என்று அட்டவணையிட்டு அரிய பூசைகளை அரியூர் மட்டும் தெரிய அல்லாமல் இப்பெரிய உலகம் மனத் துன்பங்களிலிருந்து விடுதலையுற 'நம்மை நாமே அறியாமல் தெய்வம் நம்மை ஈர்க்கிறது' என்பதை அங்கிங்கெனாதபடி எங்கெங்கும் மெய்ப்பிக்கிறாள்.

'அம்மா'வின் பூசைகளிலேயே –

மா பூசை கோ பூசைதான்.

செலவு குறைந்த, அதாவது புல், எள், காய், கனி, சோறு என்ற ரீதியில் மட்டுமே எளிமையாய் நிறைவேற்றக் கூடிய பிரதான பூசை.

"தன் ரத்தத்தைப் பாலாக்கிச் சில காலம் தன் குழந்தைக்கு மட்டுமே தரும் தாய் நம்மில் முதலிடம் வகிக்கிறாள். அதனால் தாய்க்கு முதல் மரியாதை தருகிறோம்...

"சாதி, மத,இன, மொழி, நாடு என்கிற எந்தப் பேதமும் பாராமல் கோமாதா பாலைக் கொடுத்துக் கொண்டேயிருக்கிறாள். வாழ்க்கை முடியும்போது கூட, பாலைப் பருகச் செய்கிறாள்...

→

“பசுவைத்தான் நாம் கோ மாதா என்கிறோம். ஆட்டை ஆடுமாதா என்றோ கழுதையைக் கழுதை மாதா என்றோ குறிப்பிடுவதில்லை...

“அம்மாவுக்கு ஆயிரம் பெயர்கள். அவற்றில் ஒரு பெயர் கோ மாதா. வெகு சுலபமாய் உணர்த்த, உச்சரிக்க உபாசிக்க உயர்ந்தது கோ மாதா...” என்று நளினமான குரலில் அழுத்த மாய்க் கூறுகிறாள் ‘அம்மா’ என்று எல்லாரும் வாய் நிறைய அழைக்கும் அம்மா நாராயணி.

**சோ**டச உபசாரம் –

எனும் முறையில் நான்குமணிநேர உச்சிக் காலப் பூசையிலும், மற்ற ஒவ்வொரு பூசையிலும் தீர்த்தம் தவறாமல் அளிக்கப்படுகிறது, ஆசிர் வாதத்துடன்.

பௌர்ணமியில் விளக்குப் பூசை, யாகம் விசேடமானவை.

ஒவ்வொரு வெள்ளியும் –

ஆயிரமாயிரம் குறைகளெனும் குகைக்குள் இருளில் தவிக்கும் மக்களுக்கு, ‘அம்மா’ தம் அருள் வாக்கு ஒளியால் விமோசனம் வழங்குகிறாள்.

இளம் மஞ்சள் நிறமான நாரா யணிக்கு, எட்டு பட்டைக் கோபுரத் துடன், பூமியிலிருந்தே அஷ்ட கோணத்தில் நிர்மாணிக்கப்பட்டு வரும் பல்லவர் காலப் பாணியிலமையும் இக்கோயிலில் ஐம்பத்தாறடி கருவறை விமானக் கோபுரத்திற்குக் கீழ் ஆறடி உயர ‘ஓம் சக்தி நாராயணி’ பிரதிஷ்டை செய்யப்படவிருக்கிறாள்.

இக்கோயில் மகா மண்டபத்திற்கு மேல் –

அறுபத்து நான்கு பீடங்களின் சக்திகள் இடம் பெற்றிருக்கின்றன. உலகில் வேறெங்கும் நிர்மாணிக்கப் ப்டாத நாராயணிக்கான இக்கோயில், கி.பி. 2000 மே மாதத்தில் –

குடமுழுக்கு காணவிருக்கிறது. தொடர்ந்து ஆறுகாலப் பூசைகளும் நடுப்பகலில் இப்போதைய பொட்டல அன்னதானத்திற்குப் பதில் வாழை யிலையில் அன்னசாலையில் இடப்பட விருக்கிறது.

**பீ**டத்தின் சார்பில் இப்போது அமலில் இருக்கும் –

ஒன்று முதல் ஐந்து வகுப்புகள் வரை நடக்கும் எழுபது குழந்தைகள் படிக்கும் இலவசப் பள்ளி, பத்துப் படுக்கைகளுடன் கூடிய இலவச மருத்துவமனை, அறுபது பசுக்கள் கொண்ட கோ சாலையிலிருந்து கிடைக்கின்ற பாலை கிராம ஏழைக் குழந்தைகள் ஒரு நாளைக்கு இருநூறு மி.லி. வீதம் ஐந்து வயதுவரை இலவசமாய்ப் பெறும் திட்டம், ‘அம்மா’வின் பிறந்த (3–1–1976) நாளன்றும் அவதாரம் வெளிப்பட்ட (8–5–1992) நாளன்றும், கோ தானம், ஆடை தானம், தொழிற் கருவிகள் தானம் போன்றவையும், சாந்தி மண்டபமும், விருந்தினர் மாளிகையும் மேலும் விரிவாக்கப் படுமாம்.

மாதம் ஒருமுறை ஆன்மிக வியாக்கியானம் அருளும் ‘அம்மா’ கனடா, அமெரிக்கா, ஜெர்மனி, சிங்கப்பூர் போன்ற நாடுகளுக்குப் போய் முப்பத்தாறு விதமான ஆரத்தி களை நடத்தி, நம் பண்பாட்டை, பக்தியின் பரவசத்தை மனித நேயத் தைப் பரப்பி வருகிறாள்.

சீராய் வெட்டப்பட்ட சிகை, குறுந்தாடி, மீசை, மார்பில் உருளும் உருத்திராட்ச ஸ்படிக மணிகள் சகிதம் காவி முன்புற மேல் மறைப்போடு, இடையில் தரையில் தவழாத காவி நாலு முழவேட்டியுடன், மாநிறத்தில், சராசரி உயரத்தில், விசாலமான நெற்றி சுருங்க, தீர்க்கமான ஆழ்பார் வையில், கூழாங்கற்களை வாயினுள் அடக்கியது போ[illegible] சிறற்ற ஆசிர் வாதத்தை அ[illegible]ய் அருளும் இருபத்து நான்கு வயதான –

‘ஓம் சக்தி நாராயணி சித்தர் பீடாதிபதி ‘அம்மா’, அரியூர் மலைக் கோடியில் அனைவரையும் அரவணைக்கும் ஆன்மிக விருட்சமாய் உயர்ந்து நிற்கிறாள். ●

## புகழுக்குத் தாவு

கூவுங் குயிலே கூவு - பெருங்
கூக்குரல் போட்டே கூவு - எனில்
கோழைக் குரலைக் காட்டாதே - அதில்
குழைவை நெளிவைக் காட்டாதே!

ஆறிலும் சாவு
நூறிலும் சாவு
அடுத்து வரும் சாவு - அதைப்
போருக்கு ஏவு
புகழுக்குத் தாவு - உயிர்
கொடுத்துவிடக்கூவு

இமயம் காக்கச் செல்வோம் - நம்
எதிரிகள் தம்மை வெல்வோம்
அமைதி குலைப்போர்
தம்மை - இனி
அழிப்பதே உலகுக்கு நன்மை.

எல்லையில் பகைவன் தொல்லை - நாம்
இருக்க நேரம் இல்லை
தொல்லைகள் தந்தவர் பல்லை - இனித்
தொலைப்பதே இன்பத்தின் எல்லை.

வீரம் ஒன்றே மூச்சு - அதில்
விளைவைப் பற்றியே பேச்சு
தீரம் காட்டியே வருவார் - நம்
திறமையால் வெற்றி பெறுவோம்

பால
. நடராஜன்



• சுவிட்சர்லாந்தின் ரயில்வே

சுற்றி வருகிறது... ஐரோப்பாவி லேயே நீண்ட, பெரிய, ரயில்வே என்று பேரெடுத்திருக்கிறது.

ஒருவேளை இங்கே 97 தனியார் ரயில்வேக்கள் இருப்பதும் ஒரு காரணமோ?

# சுகமான சுவிட்சர்லாந்து

செயிண்ட் கோதர்ட் (St.Gothard) ரயில்வே மிகச்சிறந்த தொழில்நுட்ப முன்னேற்றத்தின் சின்னம்....

பத்மினி பட்டாபிராமன்

ஐரோப்பாவின் விளையாட்டு மைதானம் என்கிறார்கள் சுவிட்சர் லாந்தை. பொருத்தம்தானே!

ஆல்ப்ஸ் சிகரங்களில் நடக்கும் பனிச்சறுக்கு விளையாட்டுகள், பனிங்கு ஏரிகளில் நீர் ஆட்டங்கள், பசும் புல்வெளிகளில் கோல்ஃப், குளிருக்கேற்ற ஹனிமூன் விளை யாட்டுகள்...

இயற்கையோடு, அதனைச் சேதப் படுத்தாத நவீனமும் சேரும் போது அந்த ஊர் லட்சக்கணக்கான சுற்றுலா வாசிகளை இழுக்கும்தானே!

பாங்க் – அரசியல்வாதிகளைக் கவர்கிறது. சுவிஸ் நாட்டின் தலைநகர் பர்ன் (Berne) முப்புறமும் ஆர் (Aar) நதியால் சூழப்பட்டிருக்கிறது. ஆதியில் "பர்ச்சோல்ட்" (Berchold) என்ற அரசர், 1191இல் இராணுவ தளமாக இந்த ஊரை ஆக்கிக் கொள்ளப்போக, பின்னாளில் சுவிஸ் நாட்டின் தலைநகராகிவிட்டது.

ஐக்கிய நாடுகள் சபையின் (The League of United Nation) தலைமை அலுவலகம் சுவிஸ் நாட்டின் ஜெனீவாவில் இருந்தும்கூட, சுவிஸ், ஐக்கிய நாடுகள் சபையின் உறுப் பினராக இல்லை.

சுவிஸ் நாட்டின் அழகிய பள்ளத் தாக்குகளில் வீடு கட்ட வேண்டு மானால் வடக்குப்புறம்தான் போக வேண்டுமாம். தென்புறம் சூரிய வெளிச்சமே வராதாம்!

இந்நாட்டின் ரயில்வே மிகவும் புகழ் பெற்றது. நாட்டை 5800 கிலோ மீட்டர்



• இண்டர்லேகன் நகரம்

ஃபிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, ஆஸ்ட்ரியா என்று எல்லையிடப் பட்டுள்ளதால் ஜெர்மன், ஃப்ரெஞ்ச், இத்தாலி என்று எல்லா மொழிகளும் பேசுகிறார்கள். சொந்த மொழி ஸ்விஸ்...

நீங்கள் சுவிட்சர்லாந்தில் குடியுரிமை பெறவேண்டுமா? 23 வருடங்கள் மொத்தமாக இங்கே வாழவேண்டும். முதல் ஏழு வருடங்களில் "ஒழுங்காக" வேலையில் இருந்திருந்தால் முடிவில் 15 வருட பர்மிட் தரப்படும். அதன்பின் குடியுரிமைக்கு விண்ணப்பிக்க வேண்டும்.

ரைன் நதி ஜெர்மனி முழுதும் பாய்ந்தாலும் அதன் பிரதான உற்பத்திக் கேந்திரம் சுவிஸ்தான்....

பனிச்சறுக்குப் பிரியர்களாக ஐரோப்பியர்களை மாற்றிய ஆல்ஃப்ஸ் சுவிஸ் முழுதும் அரசாள்கிறது.... "செங்கன் விசா" (Schengen) என்பது ஃப்ரான்ஸ், ஜெர்மனி, ஸ்பெயின், போர்ச்சுகல், உள்ளிட்ட பத்து ஐரோப்பிய நாடு களுக்கு மொத்தமாக எடுக்கக் கூடியது...

ஆனால் சுவிட்சர்லாந்துக்குத்தனி விசா வாங்கவேண்டும்.



ஆல்ப்ஸ் மலைத் தொடரின் ஒரு பகுதி

ஃப்ரான்ஸிலிருந்து சாலை வழியே போனால் முதலில் வரவேற்பது சுவிஸ் நாட்டில், பேஸில் (Basel) என்ற அழகான ஊர்.

குறுக்கும் நெடுக்கும் ட்ராம்கள் ஊர்ந்து போக, பூ வாசனையோடு மெல்லிய காற்று...

நாட்டின் 70 சதவீதம் ஆக்கிரமித்திருக்கும் ஆல்ப்ஸ் மலைத்தொடர், எல்லாத் திசையிலும் கண்ணில் பட்டுக்கொண்டே இருக்கிறது.

பேஸல் நகரின் பல்கலைக்கழகம் 1460இல் கட்டப்பட்டு இன்றும் பொலிவுடன் திகழ்கிறது. பழங்காலச் சாமான்கள் – கலைப்பொருள்கள் – (antiques)விற்கும் கடைகள் நிறைய... ஐரோப்பியர்களின் பழம்பொருள் சேகரிப்புக்கு உதவுகின்றன. மணியோசை ஒலிக்க சுவிஸ் பசுக்கள் புல் பார்த்துக் குனிந்திருக்க, பள்ளத் தாக்குகளில் பசுமை... கோடிப் பசுக்கள் கூடித் தின்றாலும் அவை அசை போடுமுன் மறுபடி செழித்து விடும் பசுமை... பளிங்கு சுத்த ஏரி நீரில் வானின் நீலமும், ஆல்ப்ஸின் பனி வெண்மையும் கரையோர மரங்களின் பசுமையும் பிரதிபலித்து, சலனமில்லாத நீரில் வண்ணமய மான மௌனம்....

இன்டர்லேகன் – சுவிஸ் நாட்டின் மையப்பகுதியில் ஆல்ப்ஸின் வயிற்றில் பொதிந்திருக்கும் சொர்க்கம்...

ப்ரையன்ஸ் (Brienz) துன் (Thun) என்ற இரு ஏரிகளுக்கிடையே அமைந்து, ஆல்ப்ஸின் சிகரங்களான மான்ச், (Mounch) எய்கர் (Eiger) ஜுங் ஃப்ரோ (Jung Frau) ஆகியன சூழ்ந்து நிற்க, இயற்கை, நிறையவே அக்கறை எடுத்துச் செய்த ஊர். "ஜுங்ஃப்ரோ" வில் இருக்கும் ரயில்நிலையம் ஐரோப்பாவின் மிக உயரமான இடத்து ரயில் நிலையமாம். 3454 மீட்டர் உயரத்தில் இருக்கிறது....

படகு சவாரி, மலையேற்றம், கோல்ஃப் என்று உல்லாச, த்ரில் விரும்பிகளுக்கு எல்லாவற்றையும் வழங்கும் இடம் இன்டர்லேகன்.

சாரட் வண்டிபோல குதிரை இழுத்துச் செல்லும் வண்டியில் மெதுவாக ஊர்ந்து போய் ஊரின் அழகைப் பார்க்கலாம்.

சிறு கடைகள், உணவு விடுதிகள், சாவனீர் கடைகள் அவ்வப்போது ஆங்காங்கே தென்படுகின்றன.

சாவனீர் கடைகளில் பெரும் பாலும் மாட்டின் கழுத்துமணியை விதவித உலோகங்களில், மாடல் களில் செய்து வைத்திருக்கிறார்கள்.

ஆரோக்கியமான மாடுகள் சுவிஸ் புல்வெளிகள் எங்கும் மேய்வதைப் பார்க்கலாம். கழுத்து மணியின் ஓசையைக் கேட்கலாம்.

இரவில் சுவிட்சர்லாந்தில் ஒரு சுற்று சென்று வந்தால், அவர்களது அடிப் படைக் கலாசாரம் ஓரளவுக்குப் புரியும்.

பாலே நடனக்காட்சிகள், நாடகம், நடனம், இசை என்று தியேட்டர்கள் நிறைகின்றன.

திறந்தவெளி அரங்குகளில் அநேகமாக கோடையில் (அதாவது ஜூன்,




ஆல்ப்ஸ் பின்னணியில் சுவிஸ் தெரு

ஜூலை, ஆகஸ்டில்) நடக்கும் இசை விழாக்கள் உண்டு. குர்சால் (Kursaal) என்று பெயர்.

குளிர்காலத்தில் பனிவிழா... ஆனால் ஆண்டு முழுவதும் பனி இருப்பதால், ஆல்ப்ஸில் எப்போதும் பனிச்சறுக்கு உண்டு.

உலகம் முழுவதுமிருந்து பனிச்சறுக்குப் பிரியர்கள் வந்து குவிகிறார்கள்.

இதனால் லேட்டஸ்ட் தொலைத் தொடர்பு வசதிகளும் சிறப்பாக இருக்கின்றன. ஊர் சிறியதாக இருந்தாலும், இன்டர்லேகனில் இன்டர்நேஷனல் விழா நடத்தும் அளவு வசதிகள் உண்டு...

"ஸ்கில்தார்ன்" என்று ஒரு மலைக்குப் (ஆல்ப்ஸில் தான்) பெயர்... இங்கே பிஸ்க்ளோரியா (Piz Gloria) என்று சுழலும் ரெஸ்டா ரெண்ட் ஒன்று இருக்கிறது. ஜேம்ஸ் பாண்ட் சாகசம் செய்த "ஆன் ஹர் மெஜஸ்ட்டீஸ் சர்வீஸ்" (On her Majesty's Service) என்ற புகழ்பெற்ற ஹாலிவுட் படம் இந்த ரெஸ்டா ரெண்ட்டில்தான் எடுக்கப் பட்டதாம். இது 3000 மீட்டர் உயரத்தில் இருப்பதால் வானம் தெளிவாக இருக்கும் நாள்களில் இங்கிருந்து சுமார் 200 ஆல்ப்ஸ் சிகரங்களைப் பார்க்கமுடியுமாம்.

இன்டர்லேகனில் "மட்டனாஃப் (Mutonhof) என்று ஓர் உணவு விடுதி... ஊருக்கு நடுவே உயரமாய், அலங்காரமாய், அதே நேரம் 1700ஆம் ஆண்டுக் காலத்தின் சாயலில்....

17ஆம் நூற்றாண்டில் இராணுவ வீரர்களுக்கு ஆஸ்பத்திரியாக இருந்தது.. உலகப் போர்களை எல்லாம் சந்தித்து, இன்று உணவு விடுதியாய் மாறியிருக்கிறது...

ஸ்வெட்டர், ஜர்கின், லெதர் ஜாக்கெட் இப்படி எதற்குள்ளாவது புகுந்துகொண்டு சுவிட்சர்லாந்தின் சுத்த வீதிகளில் காலைநேர சுத்தக் காற்றில் நடப்பது சுகானுபவம்...



• கிருஸ்துமஸ் மரங்களின் அணிவகுப்பு

அங்கங்கே தென்படும் தெருவை ஒட்டிய சிறு பிளாட்ஃபாரம். அதை ஒட்டி ரயில் நிலையம். ஆரவாரம் இல்லாத, ஏதோ பஸ்ஸ்டாண்ட் கூரையைவிட சற்று பெரிய நிலையம்... சின்ன கூவலோடு வழுக்கி வந்து நிற்கும் ரயில்கள்... தானியங்கிக் கதவுகள்... மெல்ல ஏறி இறங்கும் சுவிஸ்வாசிகளுக்கு நடுவே சக்கர நாற்காலி உருட்டி அதில் ஏறி இறங்கும், ஏதோ போரில் ஊனப்பட்டோர்...

இந்நாட்டுக் கரன்ஸி ஸ்விஸ் ஃப்ராங்குகள் (Swiss Francs). இன்றைய தேதியில் 1.45 ஸ்விஸ் ப்ராங்குகள் ஓர் அமெரிக்க டாலருக்கு ஈடாகின்றன.. பரவாயில்லை, ஸ்ட்ராங்தான்!

சுவிஸ்ஸின் பெருமை சொல்ல, சாக்லேட், பாங்க், கடிகாரம் ,ஏரி என்று அடுக்கலாம். இந்த நான்கையுமே கொண்ட மிக அழகான நகர் லூசரேன். (Lucerene)

இதன் ஏரி, ஆல்ப்ஸின் உச்சி களைப் பிரதிபலித்துக் கொண்டு மெல்லிய குளிர் அலைகளுடன், அருமையான படகுச் சவாரிக்கு அழைக்கிறது.

ஏறத்தாழ70 கி.மீ.நீளம்... படகில் செல்லும்போது லூசரேனின் வான் விளிம்பு (Skyline) ஐரோப்பிய பாணி கட்டடங்கள் வரிசையாக நிற்க, நீல



• ஆல்ப்ஸ் உச்சியில் உணவுக் கூடம்



• ஆல்ப்ஸ் மலை மீது ஏறும்போது கீழே "ஏங்கல் பர்க்" நகரம்

வானின் பின்னணியில் உற்சாகமான காட்சி!

வைரங்கள் பதித்த கைக்கடிகாரங் களிலிருந்து தங்கம், பிளாட்டினம், முத்துகள் பதித்து இன்னும் எத்தனை வகை வேண்டும்?

உலகப்புகழ் பெற்ற (Bucherer Watch) புகரர் வாட்ச் ஷோரூம் போனால் கண்களுக்கு இமைக்கவும் மறந்துவிடுகிறது...

சில விலையுயர்ந்த நகைகளும் கிடைக்கின்றன.. “கிராண்ட் கபா ஷாப்பிங்” (Grand Capa Shopping) சாக்லேட் விற்பனையில் டாலர்களை அள்ளிக் கொண்டிருக்கிறது.

தின்பண்டம் எதெல்லாம் முடியுமோ அதெல்லாம் சுருட்டி சாக்லேட்டுக்குள் அடைத்திருக்கிறார்கள்.

ஆல்ப்ஸின் பெருமைமிக்க, உலகப்புகழ்பெற்ற சிகரம் டிட்லிஸ் (Mount Titlis). இதற்கு கேபிள் காரில் போகவேண்டும். கேபிள் கார் கிளம்பும் இடம் “ஏங்கல் பர்க்” (Engel Burg) கடல்மட்டத்திலிருந்து 1000 மீட்டர் (3300 அடி) உயரத்தில் இருக்கிறது... இங்கிருந்து 6 பேர் உட்காரும் கேபிள் கார்கள் மேல் நோக்கி நகர்கின்றன.

பத்தாயிரம் அடி உயரத்தில் இருக்கிறது டிட்லிஸ். கேபிள் கார்கள் நகரும்போது செங்குத்தாகவே செல்வது போல் இருக்கிறது.

கேபிள் காரைத் தாங்கும் தடித்த ஒயர்கள், அவற்றைச் சுமக்கும் புல்லிகள் கொண்ட டிரான்ஸ் ஃபார்மர்கள் (Transformers) மலையில் கிட்டத்தட்ட படுத்தாற்போல பதிந் திருக்கின்றன..

60 டிகிரி கோணத்தில் மேலே ஏற ஏற ஆல்ப்ஸ் மலையின் அடிவாரம் கண்ணெதிரே சரிந்து சரிந்து






• வாட்ச் ஷோரூம்

போகிறது.. சுற்றிலும் கணக்கற்ற கிறிஸ்துமஸ் மரங்கள்...

கீழே தொலைவில் பசும்புல் தரை முழுதும் ஸ்விஸ் பசுக்கள். அவற்றின் மெல்லிய மணியோசை... இந்த கேபிள் காரில் குறிப்பிட்ட உயரம் சென்று இறங்கியதும் மற்றொரு பெரிய லிஃப்ட் சுழலும் அமைப் புடையது "டிட்லிஸ் ரோட் ஏர்" (Titlis Rotair) என்று வண்ணமாய்ப் பொறித்திருக்கிறார்கள்.. அதன் கண்ணாடிச் சுவர்கள் வழியே இப்போது ஆல்ப்ஸின் பனிச்சரிவுகள், வெள்ளை வெயில், வேகமாக வளைந்து வளைந்து வழுக்கும் பனிச்சறுக்கர்கள், கிளைடரில் (தனி நபர் விமானம்) ஆல்ஃப்ஸைச் சுற்றும் தைரியர்கள் என்ற காட்சிகள் மாறுபடுகின்றன..

டிட்லிஸ் உச்சியில் போய் நிற்கிறது லிஃப்ட். அதன் தானி யங்கிக் கதவுகள் திறக்க, திடீரென வெள்ளைப் பனிப் பாறைச் சரிவில் கால்கள் புதைகின்றன. வெளியே வெப்பநிலை மைனஸ் டிகிரிக்கும் குறைவாக இருந்தாலும் முகத்தில் தாக்கும் வெயில்.

இங்கே பனியாலேயே மலைக் குள் ஒரு குகை செதுக்கியிருக் கிறார்கள். பனிச்சுவரில் விளக்கப் படங்கள்...தொழில்நுட்ப உத்திகள்...

பனியை உருட்டி உருட்டி ஒருவர் மேல் ஒருவர் எறியும் ஆதிகால விளையாட்டிலிருந்து, சாகச ஸ்கீயிங் (Skiing) வரை எத்தனையோ விளை யாட்டுகள்.

கைகளில் உறை அணியாமல் "பனிமனிதன் செய்கிறேன்" என்று தொடங்கியவர்கள் விரல்கள் கம்பி களாய் நீட்டிக்கொண்டன... சிலரின் அனாயாச ஸ்கீயிங். இதில் சிறுவர் களும் உண்டு. சிலரின் புதுப்பழக் கத்தால் "ஸ்கீயிங்" தவிர பனியை முதலில் பார்ப்பவர்கள், ஏறி இறங்குகையில் தொப் தொப்பென்று விழுகிறார்கள்.

தற்காப்புக்கு கம்பிக் கிராதி போடப்பட்டிருக்கிறது... திறந்தவெளி ரெஸ்டாரெண்ட்...

விரல் சைஸுக்கு உருளைக் கிழங்கு பொரித்துத் தருகிறார்கள்... அதிசய மாக சிக்கன் பிரியாணி கிடைக்கிறது. ஜப்பான், கொரியா போன்ற ஆசிய நாடுகளிலிருந்து அநேகம்பேர் வருகிறார்களல்லவா? அவர்களுக்கு வேண்டுமே!

ஒரு கோக கோலா அல்லது தண்ணீர் பாட்டில் 8 டாலர் (300 ரூபாய்க்கு மேல் என்று நினைக் காமல் ஆல்ப்ஸ் உச்சி என்று நினைத்தால் போதும்) என்று விற்க, வெயில் காயும் திறந்தவெளியில் பெஞ்சுகளில் உற்சாக மாக உணவு விலையாகிறது.

நான்கு மாதக் குழந்தையையும் அலட்டாமல் முதுகுத் தொட்டிலில் தூக்கிவரும் ஐரோப்பிய மாதர், துள்ளும் சிறுவர்களை மிரட்டாமல், தாநும் மிரளாமல் தைரியமூட்டும் தந்தைமார், வீடியோ கேமராவின் சிறு வட்டம் அல்லது சதுரமே கதி என்று ஆல்ப்ஸை அளக்கும் பல தேசப் பயணிகள், 'பனிமூன்' போல 'யாருமே இல்லை தங்களைச் சுற்றி' என்ற உணர்வில் நடந்து கொள்ளும் ஜோடிகள்... இப்படி ஒரு வித்தியாச மான உலகம் இங்கே... பேலன்பர்க் (Ballen Burg) என்ற நகரில் 800 ஆண்டுகளுக்கு முந்தைய ஸ்விஸ் வீடுகள் அன்றைய விழாக்கள், அந்த சமையல் அறைகள், பழைய கருவிகள் மூலம் செய்யும் கைவினைப் பொருள்கள் என்று பல நூற்றாண்டுகள் பின்னே அழைத்துச் செல்கிறார்கள்.

பொதுவாகவே ஐரோப்பியர்கள் 'பழைய பாணி'யை மெருகோடு காட்சிப் பொருளாக்குவது ரொம்பப் பிடிக்கிறது. ஜங்ஃப்ரோ (Jungfrau) என்ற சிகரம், மலை ஏறுபவர்களின் தளமாக இருக்க (அல்லது களமாக) எய்கர் (Eiger) மோன்ச் (Monch) போன்ற சிகரங்களும் சம உயரத்தைத் தொடுகின்றன...

இந்நாட்டின் மற்றொரு பெருமைக் குரிய அம்சம் மேடம் துஸ்ஸட் (Madame Tussaud) என்ற பெண்மணி... மெழுகு பொம்மைகள் செய்வதில் நிகரற்றவர். லண்டனில் இப்போது மிகப் பிரபலமாக இருக்கும் மெழுகு பொம்மைக்கூடம் உருவாகக் காரணமாயிருந்தவர் இந்த ஸ்விஸ் பெண்மணிதான்.



பனிமலையில் ஏறும் ட்ரக்

1864இல் சுவிட்சர்லாந்தில் தான் முதன்முதலில் உலகநாடுகள் எல்லாம் ஒன்றுகூடி போர்களைப் பற்றியும், அதன் நாசங்களைப் பற்றியும் விவாதித்தன. போரில் காயம் பட்டோர்க்கு உதவி செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு ரெட்கிராஸ் (Red Cross) அமைப்பு அப்போதுதான் தொடங்கப்பட்டது இது உலகின் மிக முக்கியமான நிகழ்வுகளில் ஒன்று.. இன்றும் ரெட்கிராஸின் தலைமை அலுவலகம் சுவிட்சர்லாந்தில் ஜெனீவாவில் தான் இருக்கிறது...

இயற்கை அழகு மட்டுமன்றி, தொழில் வளர்ச்சியிலும், வரலாற்றுப் பின்னணியிலும் சுவிட்சர்லாந்து ஒரு தனியிடம்தான் பெற்றிருக்கிறது.



உதவி பெற்ற சிறு விவசாயியுடன் ராசி ராமலிங்கம் 1

# வளமான வாழ்விற்கு வழிகாட்டும்





அன்னை திருமதி ராதா பாய் 2

# வேளாண்மை வித்தகர் ராசி ராமலிங்கம்

**எஸ்.எஸ். நாகராஜன்**

"உழவன் கணக்குப் பார்த்தால் உழக்கு கூட மிஞ்சாது" என்ற பழமொழி நெடு நாள்களாக இருந்தாலும் இதை ஒரு சவாலாக ஏற்று வேளாண்மைத் தொழிலை வியாபார ரீதியாகச் செய்து அதில் கணிசமான அளவு லாபத்தை ஈட்டித் தர முடியும் என்று நிருபித்துத் தந்ததோடு சக விவசாயிகளையும் லாபமெடுக்கச் செய்து அவர்கள் வாழ்வில் விளக் கேற்றி வருகிறார் திரு.நீ.இராமலிங்கம் (22 முதல் வீதி, ஞானப்பிரகாச நகர், ஆனந்த ரங்கர் மஹால் அருகில், புதுச்சேரி 605 008). இன்று நூற்றுக்கணக்கான சிறு மற்றும் குறுநில விவசாயிகள் மற்றும் நிலமில்லா ஏழை மக்கள் மனத்தில் நீங்காத இடத்தைப் பெற்று *'ராசி இராமலிங்கம்'* என்று கூறுமள விற்குப் பெருமை அடைந்துள்ளார் இதற்குக் காரணம் வறுமைக் கோட்டிற்குக் கீழ் இருந்த பலரது வாழ்வில் இவர் வளத்தினைத் தோற்றுவித்துள்ளார். இவரால் பயனடைந்த பல விவசாயிகளைச் சந்தித்த பிறகே கட்டுரை ஆசிரியர் திரு. இராமலிங்கத்தை நேரில் சந்தித்தார். தமிழ்நாட்டில் இப்படி ஒரு மா மனிதரை, கட்டுரை ஆசிரியர் சந்திப்பது இதுவே முதல் முறையாகும். திரு. 'ராசி' இராமலிங்கம் ஆண், பெண் என்று பாகுபாடு இல்லாமல் தன்னைச் சந்தித்த அனைவருக்கும் உதவி செய்துள்ளார் (படம் 1). இருப்பினும் இவரால் பயனடைந்தவர்களுள் அதிகம் பேர் பெண்களே. திரு. இராமலிங்கத்தை வேளாண்மைத் தொழிலில் ஒரு புரட்சிப் புயலாக் கியவரும் ஒரு பெண்மணியே. இவர் வேறு யாரும் இல்லை இவரது அருமைத் தாய் திருமதி ராதாபாய் அவர்களே. பண்ணை யிலேயே தங்கி பண்ணை நிர்வாகத் திற்கு உதவி வருகிறார் (படம் 2).

வயலில் ராசிக் கனகாம்பரச் செடி 3



திரு. இராமலிங்கம் மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் தமிழ்மொழியில் பி.ஏ. பட்டம் பெற்றவர். இவரது சொந்த ஊர் காட்டேரி குப்பம். தனது இளம் வயதில் வறுமையால் அவதிப் பட்டுக் கொண்டிருந்த சமயம் திரு. இராமலிங்கத்தின் தாயார் தனது வீட்டுத் தோட்டத்தில் கறிவேப் பிலை மற்றும் டெல்லி கனகாம்பரம் ஆகியவற்றைச் சாகுபடி செய்து அதில் கிடைத்த வருமானத்தை



4 பணக் குவியலுக்கு உதவும் மலர்க் குவியல்கள் (பால்முல்லை, கனகாம்பரம், ரோஜா மற்றும் குண்டுமல்லி)

வைத்துக் கொண்டே ஒரு குடும்பத்திற்குத் தேவைப்படும் அனைத்து அத்தியாவசியப் பொருள்களையும் விலை கொடுத்து வாங்கி வாழ்வை நடத்தி வந்துள்ளார். இச்செய்கை திரு.இராமலிங்கத்தின் நினைவில் நிலை கொண்டிருந்தது. இவர் பாண்டிச்சேரி கூட்டுறவு சர்க்கரை ஆலையில் களப்பணி அதிகாரியாகப் பணிபுரிந்து வந்தார் இது சமயம் பல விவசாயிகளுக்கு இவர் உதவி செய்தார். இதோடு இவருக்கு தானும் ஏன் விவசாயம் செய்யக் கூடாது என்ற எண்ணமும் இருந்தது. பிறகு பணி நிமித்தமாக இவர் மரக்காணத்திற்கு மாற்றப்பட்டார். இது இவரது வாழ்க்கையில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. முதலில் மரக்காணத்தில் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து அதில் கரும்பு சாகுபடி செய்தார். இதில் இவருக்கு எதிர்பார்த்த வெற்றி கிட்டவில்லை. இதுசமயம் இவர் தாயார் 'கனகாம்பரம் சாகுபடி (படம் 3) ஒரு வெட்டியெடுக்கப்படாத தங்கச் சுரங்கம் என்று கூறியது ஞாபகத்திற்கு வந்தது. 1984ஆம் வருடம் குரும்பரம் என்ற கிராமத்தில் அரை ஏக்கர் நிலம் வாங்கி அதில் டெல்லி கனகாம்பரம் சாகுபடி செய்தார். கனகாம்பரம் சாகுபடி இவருக்கு அளவிலா மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. கடுமையான உழைப்பு மற்றும் அனுபவம் ஆகியவற்றால் கனகாம்பரம் சாகுபடியில் லட்சக் கணக்கில் பணம் சம்பாதிக்க முடியுமென்பதைத் துல்லியமாகத் தெரிந்து கொண்டார். உழைப்பால் உயர்ந்த இவர் தன்னைப் போல் தவித்த சக விவசாயிகளின் வாழ்க்கை வளமடைய முயற்சி செய்தார். இதற்குத் தேவைப்பட்டது கன்றுகள். கன்றுகளை உற்பத்தி செய்யத் தொடங்கிவிட்டார். இவர் உற்பத்தி செய்த டெல்லி கனகாம்பரத்தில் நாட்டுக் கனகாம்பரத்தை



5 சுவாமியை அலங்கரிக்கும் கனகாம்பரம்



மேடை அலங்காரத்தில் கனகாம்பரம் 6



7 மலர்ச் சரம்

விட கதிர்கள் நீளம். மகசூலும் அதிகம். கண்டதும் கவரும் ஆரஞ்சு நிறப் பூக்கள். பெரிய இதழ்கள் கொண்டவை. செடி அடர்ந்து படர்ந்து வளரும். பூச்செடிகளையும், கதிர்களையும் ஒன்பது அங்குலம் வரை கொண்டு வருடம் 365 நாள் களும் மகசூலை வாரி வழங்கக் கூடியது. நட்ட 3ஆம் மாதம் பூக்கத் தொடங்கி தொடர்ந்து மூன்று வருடங்கள் பலன் தருவது. ஓய்வே இல்லாது பூக்கும் ஒப்புயர்வற்ற டெல்லி கனகாம்பரம் மலர்ச்சரம், பூ மாலைகள், கட் அவுட்டுகள், திருமணப் பந்தல் அலங்காரம் மணமேடை அலங்காரம், சுவாமி அலங்காரம் போன்ற பலவகை யான உபயோகங்களைக் கொண்டது (படங்கள் 3-7). பெண்களின் கூந்தலை அலங் கரிக்க மலர்ச்சரம் பெரிய அளவு உதவுகின்றது (படம் 8). இது பூக்கள் அதிக அளவு விற்பதற்கு உதவு கிறது என்கிறார் பூ வியாபாரி. கட்டுரை ஆசிரியர் ஆகஸ்ட் 22, 1999 அன்று பாண்டிச்சேரியில் இருந்தபோது மார்க்கெட்டில் ஒரு கிலோ கனகாம்பரத்தின் விலை



இளம்பெண்ணின் கூந்தலை அலங்கரிக்கும் கனகாம்பரம் 8



9 பண்ணையில் பூ விற்பனை

ரூ.400/-ஆக இருந்தது. இந்தத் தேதியில் பல கல்யாண முகூர்த்தங்கள், மாரியம்மன் திருவிழாக்கள் இருந்தன. மேலும் ஆவணி மாதத்தில் செடியில் பூ மகசூல் சற்று குறைவு. பூவின் விலை கிலோ ரூ.20/-இல் இருந்து ரூ.500/-வரை போகும். ஆனால் சராசரி விலை கிலோ ரூ.50/- ஆகும். இவற்றை விவரிப்பதன் காரணம் கனகாம்பர மலர் சாகுபடி என்றைக்கும் பணத்தை அள்ளித் தரும் அமுதசுரபி என்று காட்டுவதற்கே. மார்க்கெட்டில் விலை கிட்டாத போது வாரிக் கொட்டப்படும் தக்காளி மற்றும் செடி முருங்கை போன்ற பயிர்களால் ஏற்படும் நஷ்டம் கனகாம்பரம் சாகுபடியில் இல்லை. திரு. இராமலிங்கத்திடம் வளமடைந்த விவசாயிகளது வருமானத்தை விசாரித்தபோது கீழ்க்காணும் தகவலைத் தந்தார்.

**சிறு விவசாயிகளுக்கு வருமானம்**
**டெல்லி கனகாம்பரம்**

| சாகுபடி பரப்பு | பயன் அடைந்த வர்களின் எண்ணிக்கை | வருடத்தில் வருமானம் ரூ. | மாதத்தில் வருமானம் ரூ. |
|---|---|---|---|
| 25 சென்ட் | 1,000 | 36,000 | 3,000 |
| 50 சென்ட் | 200 | 72,000 | 6,000 |
| 1 ஏக்கர் | 100 | 144,000 | 12,000 |

குறிப்பு:- ஏக்கரில் ஆண்டில் வருமானம் லட்சத்திற்கு அதிகம்.

திரு. இராமலிங்கத்திடம் பயன் பெற்ற விவசாயி களைப்பற்றிக் கேட்டபோது, "பயன் பெற்ற விவசாயிகளுள் பெரும்பாலானோர் பெண்கள்" என்றார். அடுத்து சாகுபடி பணிக்கு உதவும் கூலி ஆட்களின் வருமானத்தைப் பற்றிக் கேட்டபோது கீழ்க்காணும் விளக்கங்களை அளித்தார்.

"25சென்ட்டில் கனகாம்பரம் சாகுபடி செய்யும் போது 3 நபர்களுக்கு வருடத்தில் 12 மாதங்களிலும் வேலை கிட்டுகின்றது. இந்த நபர் ஒவ்வொருவருக்கும் மாதம் ரூ.1200/- முதல் ரூ.1500/-வரை வருமானம் கிட்டுகின்றது" என்றார்.

திரு. இராமலிங்கம் தனது தோட்டத்தில் சாகுபடி செய்த மலர்களை, கிராமங்களில் வியாபாரம் செய்யும் பெண்களுக்கு விற்பனை செய்கிறார் (படம் 9). இவர் கனகாம்பரம், பால்முல்லை, குண்டுமல்லி, ரோஜா ஆகியவற்றை கிலோ ரூ.60/-க்கு விற்பனை செய்கிறார். இதை வாங்கி விற்பவர்களுக்கு அவர்கள் இட்ட மூலதனத்தை விட இரண்டு மடங்கு வருமானம் கிட்டுகிறது. இது போலவே தனது பண்ணையில் உள்ள கொய்யாத் தோட்டத்தில் அதிகாலையிலேயே கொய்யாவைப் பறித்து விற்பனை செய்கிறார் (படம் 10). சுமார் 50-60 பெண்கள் கூடையில் 25 கிலோ வரை கிலோ ரூ.4/- வீதம் விலை கொடுத்து வாங்கி அவற்றை கிராமம் கிராமமாகத் திரிந்து கிலோ ரூ.8.வீதம் விற்பனை செய்து ஒவ்வொரு பெண்ணும் ஒரு நாளைக்கு ரூ.100/- வருமானம் பெறுகின்றனர். இவ்வாறு தலைச் சுமையாக மலர்கள் மற்றும் பழங்களைக் கொண்டு சென்று விற்பனை செய்யும் பெண்களிடம், கட்டுரை ஆசிரியர் "உங்களுக்கு வருடம் முழுவதும் இம்மாதிரியாக மலர்கள், பழங்கள் விற்கும் வாய்ப்பு இருக்கிறதா?" என்று கேட்டதற்கு அவர்கள் கூறியதாவது:

"சார்! நாங்கள் பயிர் வேலைக்குச் செல்லும்போது வருடத்தில் 6 மாதங்கள்தான் வருமானம் கிடைக்கும். தற்போது கிராமங்களில் மலர், மற்றும் பழச்சாகுபடி வந்த பிறகு வருடம் முழுதும் எங்களுக்கு வருமானம் கிட்டுகின்றது" என்றனர்.

பூக்களை அதிகாலையில் பறிக்க கிராமப் பள்ளிகளில் படித்து வரும் ஏழைக் குழந்தைகளுக்கு தினமும் வேலைவாய்ப்பு தந்து வருகிறார் (படம் 11).

### சாகுபடிக்கு வசதிகள்:

திரு. இராமலிங்கம் தன்னை நாடி வரும் பெண் விவசாயிகளுக்கு அதாவது வறுமைக் கோட்டிற்குக் கீழ் இருக்கும் பெண்களுக்கு இந்தியன் வங்கியில் கடன் பெற்றுத் தருகின்றார். அத்துடன் பெண்களுக்கு கனகாம்பரம் சாகுபடிக்குத் தேவையான பயிற்சிகளையும் தனது பண்ணையில் அளித்து வருகிறார் (படம் 12). இவர் கனகாம்பரம் சாகுபடி கையேடு என்ற புத்தகத்தையும் எழுதியுள்ளார். இதனைப் பயிற்சியின் போது எல்லாருக்கும் இலவசமாக வழங்குகிறார். இதில் சாகுபடி முறைகள், சாகுபடி செலவு, வரவு போன்ற விவரங்கள் அடங்கியுள்ளன. திரு. இராமலிங்கத்திடம் கன்றுகள் வாங்கிய அனைத்து மகளிரும் வளம் அடைந்ததோடு, தாங்கள் பெற்ற கடனை, குறித்த காலத்தில் வங்கிக்குத் திருப்பிச் செலுத்தியுள்ளனர். "இந்தியன் வங்கி, தமிழ்நாடு மகளிர் மேம்பாட்டுக் கழகம் மற்றும் கல்வி கேந்திரா போன்ற தொண்டு நிறுவனங்களின் உதவியுடன் சுமார் 1000 வேளாண் பெண்கள் பயனடைந்து வருகிறார்கள். சுமார் 15,000 விவசாயத் தொழிலாளர்கள் நேரிடையாகவும்,



பண்ணையையும் அமைத்து திறம்பட நிர்வகித்து வருகிறார். தனது கடுமையான உழைப்பின் மூலம் இன்று சொந்தமாக வீடு, வாகனம் அனைத்தையும் பெற்று வளமாக வாழ்கிறார். சிலரது முகத்தைப் பார்த்தவுடனேயே நமக்கு அவர் மேல் நம்பிக்கை ஏற்படும். அதே போல் திரு. இராமலிங்கத்தைப் பார்த்தாலே போதும். நமக்கு மனத்தில் ஒரு மரியாதையுடன் கூடிய நம்பிக்கை ஏற்படுகிறது. இதனால் இவர் பண்ணையில் இவரைச் சந்தித்து தக்க விளக்கங்களைப் பெற பல

கொய்யா விற்பனை 10



50,000க்கும் மேற்பட்டோர் மறைமுகமாகவும் வேலை வாய்ப்பு பெறுகின்றனர்" என்கிறார் திரு. இராமலிங்கம்.

சுமார் 2 ஏக்கர்களில் சாகுபடி செய்த விவசாயி திரு. இராமலிங்கம் தற்போது 65 ஏக்கர்களில் பண்ணையை நிறுவியுள்ளார். கடும் உழைப்பால் உயர்ந்தவர் என்பதை

11 பள்ளி மாணவ, மாணவிகள் பூப்பறித்தல்



மகளிருக்கு பயிற்சி 12

பெண் விவசாயிகள் வந்த வண்ணம் உள்ளனர் (படம் 13). இந்த நம்பிக்கை நட்சத்திரத்திடம் "உங்களது வெற்றிக்குக் காரணம் என்ன?" என்று கேட்டதற்கு ஒரு சிறு பிரசங்கம் செய்தார்.

விளக்கங்கள் கேட்டு வரும் பெண்கள்

இது காட்டுகின்றது. திரு. இராமலிங்கம் தயாரித்த கன்றுகளுக்குக் கிராக்கி நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே போகிறது. பத்து ஏக்கர்களில் கனகாம்பர சாகு படியும், அறுபது ஏக்கருக்கு மேல் தென்னை, கொய்யா, மா, சப்போட்டா ஆகியவற்றைக் கொண்ட கலப்புப்





13



நிலைக்கு உயர்த்துவாள். உயர்ந்த பிறகு அகந்தை கொள்ளாமல் நமது சக விவசாயிகளது வாழ்வையும் வளமாக்க நாம் உண்மையாக உழைக்க வேண்டும். அப்படி நான் உழைத்ததால்தான் லட்சக்கணக்கில் நாற்றுகளை விற்று லட்சக்கணக் கான ரூபாயையும் சம்பாதித்து தொழிலதிபர் என்ற நிலையை இன்று அடைந்துள்ளேன். இருப்பினும்

பூஜைக்கு ஏற்ற மலர் கன்றுகள் (விருட்சி செம்பருத்தி, நந்தியாவெட்டை கஸ்தூரி) 14



15 பசுமை அகங்கள் (Green Houses)

"நாம் சோதனைகளைக் கண்டு பயப்படாமல் அவற்றைச் சாதனை யாக்க வேண்டும். ஏனெனில் சோதனைகள் மாறுவேடம் பூண்ட சாதனைகளாகும். மேலும் புதிய தொழில் துறைகளில் நுழை வதனால் இருப்பதும் போய் விட்டால் என்ன செய்வது என்று



வெயிலின் கொடுமையைத் தடுக்கும் ஷேட் நெட் (Shade Net) 16



17

திரு ராமலிங்கம்

அஞ்சுபவர்களுக்கு வளமான வாழ்வு எட்டாத தூரம் போய் விடும். பண்ணைப் பயணத்தின் போது பொடி (வெயில்) சுடலாம், முள் குத்தலாம், காலில் கல் இடறலாம். அதற்குப் பயந்து பயணத்தைத் தவிர்ப்பதா? திட்டமிட்டுச் செயல் பட்டால் வெற்றி தேவதை விருப்பமுடன் அரவணைப்பாள். ஏரோட்டும் விவசாயியை காரோட்டும்



மக்கள் சேவையில் ராசிக் குடும்பம் 18

அடுத்த கட்டத்திற்குப் போகும் முன் என்ன செய்யலாமென்பதைப் பற்றியும் நிதானமாகச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார்.

இன்று 10 ஏக்கர் சொந்த நிலத்தில் கனகாம்பரம் சாகுபடி செய்து பாண்டிச்சேரிக்கும் சென்னைக்கும் மலர்களை அனுப்பி வைக்கிறார். இவர் தனது பண்ணையில் பிரமாண்டமான அளவில் நர்சரி வைத்து தரமான கறிவேப்பிலை, மா, கொய்யா, சப்போட்டா, எலுமிச்சை ஆகியவற்றின் கன்று களையும் தயார் செய்கிறார். பூஜைக்குத் தேவைப்படும் மலர்ச் செடிகள் (படம் 14), முல்லை, மல்லி, கனகாம்பரம் செடிகள் இவற்றை பசுமை அகங்களில் (Green Houses) வளர்த்து உற்பத்தி செய்கிறார் (படம் 15). இளம் செடிகளுக்கு வெயிலினால் ஏற்படும் கொடு மையைத் தடுக்க "ஷேட் நெட்" (Shade Net) அமைத்துள்ளார் (படம் 16). ஆண்டுக்கு 6 லட்சம் கன்றுகள் இவரது நர்சரியில் உற்பத்தி செய்யப்படுகின்றன. இக் கனகாம் பரம் நாற்றுகளை 12 லட்சமாக அதிகமாக்கத் திட்டமிட்டு வருகிறார். ஓராண்டில் ஒரு லட்சம் கறிவேப் பிலைக் கன்றுகளைத் தயார் செய்கிறார். கறிவேப்பிலை சாகு படியில் வருடத்தில் லட்ச ரூபாய் சம்பாதிக்க முடியுமென்கிறார். இவரது நர்சரியை நேரில் காணப் பலர் வருகின்றனர். அவர்களுள் விவசாயக் கல்லூரி மாணவர்களும் அடங்குவார்கள். ராசி நாற்று களுக்கு கிராக்கி அதிகமான நிலையில் போலிக் கன்றுகள் விற்பனை செய்வதைத் தடுக்கவும் முயற்சி எடுத்து வருகிறார் கன்றுகள் உள்ள பாலிதீன் பைகளில் ராசி என்ற பெயர் இருப்பதுடன் அவரது கையெழுத்தும் பைகளில் இடம் பெற்றுள்ளது. திரு. இராமலிங்கம் தனது சேவைக்காகப்பல விருது களைப் பெற்றுள்ளார் (படம் 17). இதில் "முத்துமல்லா அறக்கட்டளை" விருதும் அடங்கும். விவசாயி களுக்கு தோட்டக் கலைப் பயிர்கள் கணிசமான அளவில் லாபத்தை ஈட்டித் தருகின்றன. இருப்பினும் பல விவசாயிகளுக்கு இது தெரியாது. இதற்காக விஸ்தரிப்புப் பணியை இடைவிடாது தொடர்ந்து செய்து வருவது ஒரு ராசிக் குடும்பம் ஆகும் (படம் 18). இக்குடும்பத்தின் பணி மேலும் ஓங்க நாம் வாழ்த்துவோம். •

## அருள்வாய் கண்ணா!

தாயகப் பற்றி னோடு
தவழவே மண்ணைத் தின்றாய்!
தாயிடம் வாய்தி றந்து
தரணியைத் தெரிய வைத்தாய்!
ஆயரின் குலக் கொழுந்தே!
அச்சுதா! கமலக் கண்ணா!
தூயவை பதிய நின்தாள்
தொழுகிறேன் அருளுவாயே!

புறத்தின் தோற்றம் மயங்காமல்
பொய்மை யாளர் நம்பாமல்
நிறத்தை மாற்றும் ஓந்திநிகர்
நீசர் பக்கம் அணுகாமல்
திறத்தார், உழைப்போர் வழியேகித்
திகழும் வளங்கள் பெற்றிடவே
உறவே கண்ணா வணங்குகின்றேன்
உயர எளியேற்(கு) அருள்வாயே!

இருளில் பதுக்கும் பெருஞ்செல்வம்
ஏழை வாயில் நெருங்கிடவும்,
திருடு, கொள்ளை, பொய், சூது
தேசம் விட்டு மடிந்திடவும்,
சருகாய்த் திரியும் சால்பில்லார்
சாற்றல் முற்றும் அழிந்திடவும்
இருகை கூப்பி வணங்குகின்றேன்!
எழிலார் கண்ணா அருள்வாயே!



இமயபாரதி

ஆசீர்வாதம். ஒருவர் வயதில் மூத்தவரான மற்றொருவரைக் கண்டால் நமஸ்காரம் செய்வதும் அதற்கு வயதில் பெரியவர்கள் அந்த நபருக்கேற்ப ஆசி மொழிகளைக் கூறுவதும் நமது இந்து தர்மத்தில் தொன்றுதொட்டுக் கடைப்பிடிக்கப்பட்டு வருகிற பழக்கமாகும்.

இப்படிப்பட்ட ஆசீர்வாதங்கள் பலிக்குமா என்று கேட்டால் என்னுடைய பதில் : 'பலிக்கும்; பலிக்காது' என்பதாக இருக்கும். புரியவில்லையா? ஆசீர்வாதம் வெறும் உதட்டளவில் சொல்லப்பட்டாலும், நமஸ்காரம் என்பது வேண்டா வெறுப்பாகச் செய்யப்பட்டாலும் அந்த ஆசீர்வாதமும் நமஸ்காரமும் பலிக்காது; பலனற்றுப் போகும். 'உள்ளப்பூர்வமாக மனப்பூர்வமாக என்னை வணங்கும் இந்த மாது சௌபாக்கியவாதியாக வாழட்டும்; இந்த இளைஞன் சிரஞ்சீவியாக வாழட்டும்' என்று மனப்பூர்வமாக வாழ்த்தினால் அது நிச்சயம் பலிக்கும். வணங்குவோரும் 'இந்தப் பெரியவரை குருபோலவும் தாய் போலவும் தந்தை போலவும் மதித்து வணங்குகிறேன்' என்று நினைத்து வணங்கினால் அந்த வணங்குதல் மனப்பூர்வமான ஆசிகளைக் கொண்டு தரும்.

சிவபெருமான் வாயு பகவானைத் தேர்ந்தெடுத்து 'நான் உன் மகனாகப் பிறக்க விரும்புகிறேன்' என்று கூறினார். வாயு பகவான் உள்ளம் மகிழ்ந்து போனான். வாயுவுக்கும் அஞ்சனாவுக்கும் அப்படிப் பிறந்த பிள்ளைதான் அனுமான். முற்காலத்தில் அனுமான் என்றழைக்கப்பட்ட பிள்ளை பிறந்தவுடன் வைக்கப்பட்ட பெயர் சுந்தரன். காற்றின் வேகத்தோடு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்த இப்பிள்ளை, ஒரு நாள் பிரம்மமுகூர்த்தம் என்னும் காலைப் பொழுதில் செக்கச் சிவந்த வானத்தில் சூரியனைக் கண்டு, அது ஒரு பெரிய பழம் என்றெண்ணிப் பறந்து அதைத் துரத்தியது. சூரிய பகவான் ஓடோடிப் போய் இந்திரனிடம் 'சிறுபிள்ளை இப்படி துரத்துகிறது' என்று முறையிட, வஜ்ஜிராயுதத்தால் இந்திரன் பிள்ளையைத் தாக்க, அது வாயு பகவானின் மடியில் வந்து விழுந்தது. ஞானக் கண்ணால் நடந்ததை அறிந்த வாயு புத்திர சோகத்தில் ஆழ்ந்தான். உலகத்தின் காற்று சக்தியான வாயு சுவாசபந்தனம் அதாவது மூச்சை அடக்கி உட்கார்ந்து விடுகிறான். கடல் அலைகள் நிற்க, மரங்கள் நிற்க, உயிரினங்களும் தேவர்களும் தவிக்கின்றனர். மும்மூர்த்திகளும் தேவர்களும் வாயுவின் இடத்திற்கு வந்துவிடுகிறார்கள். மும்மூர்த்திகள் வாயுவை மூச்சடக்கி இருப்பவனை எழுப்புகின்றனர். "இது உனக்குத் தகாது. உயிரினங்களை வதைக்காதே. இந்திரன் செய்த தவற்றுக்கு அனைவருக்கும் தண்டனை தருவது நியாயமில்லை" என்று மும்மூர்த்திகள் எடுத்துரைத்தனர். அக்னி முதலான தேவர்களும் அதை வழிமொழிந்தனர். வாயு தேவன் அனைவரும் சொன்னதை ஏற்றான். தெய்வங்கள் அனைவரையும் தன் பிள்ளையை ஆசீர்வதிக்க வேண்டினான். அனைவரும் மனப்பூர்வமாய்த் தங்கள் சக்தியைத் தந்து ஆசீர்வதித்துச் சென்றனர். வனவாசம் முடிந்து பட்டாபிஷேகம் பெற்று மணிமுடி தரித்த நாளின் இரவில் இராமனும் சீதையும் உரையாடிக் கொண்டிருக்கும்போது சீதை சொன்னாள்; 'இராவணன் எல்லாவிதத்திலும் உங்களைவிடப் பெரியவன் என்று என் குருமார் சொன்னார்கள் என்னுடைய சுயம்வரத்தின்போது. ஆனால், நீங்கள் பெரியவர் என்று நிரூபித்து விட்டீர்கள்.'

அதற்கு இராமபிரான் கூறினார்: 'உண்மையிலேயே அவன் என்னைவிடப் பெரியவன். நான் பிறந்தது என் தந்தைக்குக் கிடைத்த ஆசி செய்யப்பட்ட கனியால், தந்தை அதை மேலும் ஆசிப்படுத்தி என் அம்மாக்களுக்குக் கொடுக்க நாங்கள் பிறந்தோம். தாய் தந்தையின் ஆசியால் வளர்ந்தோம். உன் தந்தையின் ஆசியும் மேலும் என்னைப் பலமாக்கியது; பட்டாபிஷேகத்தன்று விதி விளையாடி காட்டுக்குத் துரத்த அப்போது ஆசி கிடைக்கவில்லை. காட்டுக்குப் போனதும் குகன் என்னை மனப்பூர்வமாய் வணங்கி "நீ காட்டில் துன்புறுவது கூடாது. அந்தக் காலம் விரைவாக ஓடிவிட வேண்டும்" என்று வாழ்த்தினான். எனக்குத் துணையாய் இருந்த வானர சேனையும் அணிலும் ராமஜெயம் என்று வாழ்த்தியதால், மனப் பூர்வமாய் வாழ்த்தியதால், அந்த ஆசிகளின் பலனாய் நான் இராவணனை வெற்றிபெற்று உன்னை மீட்டு வந்தேன். இதுதான் ஆசீர்வாதத்தின் பலன். நம்மை ஒருவர் வணங்கும்போது கர்வத்துடன் இருக்கக் கூடாது. இது நம்முள் இருக்கும் இறையை வணங்குவதாக நினைத்து மனப்பூர்வமாய் ஆசீர்வதிக்க வேண்டும். ✿

## அருளாசி

ஸ்ரீ ப குருசுராஜானந்தா



# பொன்விழா காணும்

# நம் குடியரசு தினம்



ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்ட நம் பாரதம் பற்பல போராட்டங்களை நிகழ்த்திய பின்பு 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம்தேதி சுதந்தரம் அடைந்தது. இதனை அடுத்து இரண்டரை ஆண்டிற்குள் அதாவது 1950ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் தேதி "இந்தியா குடியரசு நாடு" என பிரகடனமும் ஏற்பட்டது. நாம் குடியரசு அடைந்து 50 ஆண்டுகள், வரும் ஆங்கிலப் புத்தாண்டில் (2000ஆம் ஆண்டு) ஜனவரி 26இல் பொன்விழா ஆண்டாக நிறைவடைகிறது. இந்தக் குடியரசு தினம் முதன் முதலில் டெல்லியிலும் நமது சென்னை மாநகரிலும் எப்படிக்கொண்டாடப்பட்டது என்பதனை விளக்கும் வரலாற்று ஏடுகளில் 1950ஆம் ஆண்டிற்கு ஒரு கண்ணோட்டம் இது. வரும் புத்தாண்டு நம் அரசியல் விழாக்களில் "இந்தியக் குடியரசு தினம்" முதலிடம் வகிக்கிறது.

நம் பாரதம் "குடியரசு நாடாக" உருவாக பல அரசியல் மேதைகள், சட்டவல்லுனர்களின் திறமையால் 1950ஆம் ஆண்டு ஜனவரி 26இல் "இந்தியா குடியரசு நாடாக" பிரகடனம் செய்ய உறுதியும் நேர்மையுமான பாதையை வகுத்தனர். அத்தினமே நம் பாரதத்தின் முதல் குடியரசு தினமாகும். இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதியான டாக்டர் இராஜேந்திர பிரஸாத் அவர்களை எப்படி தேர்ந்தெடுத்தார்கள் என்பதைப் பார்ப்போம்.

1950ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் தேதி நம் இந்தியாவின் "குடியரசு தினம்" என அறிவித்ததுமே, டெல்லி மாநகர் கோலாகலமாகக் காட்சி யளிக்கத் தொடங்கியது. அங்குள்ள மத்திய அரசின் கட்டடங்கள், பாராளு மன்றம் மற்றும் பிற கட்டடங்க ளெல்லாம் வண்ணப்பூச்சுகள் பூசப் பட்டு கண்களைப் பறித்தன. நகரின் எல்லாப் பிரதான சாலைகளெல்லாம் சுத்தமாகக் காட்சியளித்தன. ஆங்காங்கு மூவர்ணக் கொடிகளுடன், பலவித வண்ணத் தோரணங்களும் சரம்சர மாகத் தொங்கவிடப்பட்டிருந்தன. தனியார் நிறுவனங்களின் அலங் காரங்களே அரசு நிறுவனங்களை விடச் சிறப்பாக அமைந்திருந்தன. வீதிகளில் மக்கள் மிக்க சுறுசுறுப்புடன் எங்குமே ஒரே குதூகலமாய்க் காணப் பட்டனர்.

### 1950ஆம் ஆண்டு ஜனவரி 23 (திங்கட்கிழமை)

ஜனவரி 23ஆம் தேதி காலை அரசியல் நிர்ணய சபையில் காங்கிரஸ் கட்சி உறுப்பினர்களும் மற்றும் பிற உறுப்பினர்களும் இந்தியாவின் முதல் ஜனாதிபதியைத் தேர்ந்தெடுக்க வேட்புமனுவைத் தாக்கல் செய்யத் திரண்டிருந்தனர். காலை 10.15 மணிக்கு காங்கிரஸ் கட்சியின் பிரதான 'கொறடா' வான சத்யநாராயண சின்ஹா 'ரிடர்னிங் ஆபீசர்" எச்.வி.ஆர் ஐயங்கார் முன்பு புதியதாக அமைய விருக்கும் இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்க டாக்டர் இராஜேந்திர பிரஸாத் அவர் களின் வேட்புமனுவைத் தாக்கல் செய்தார். அன்று பிற்பகல் 3 மணி வரை வேட்புமனு தாக்கல் செய்யலாம் என அறிவித்திருந்தும் வேறு யாருமே மனுதாக்கல் செய்யவில்லை. எனவே குறிப்பிட்ட நேரம் முடிந்ததும் டாக்டர் இராஜேந்திர பிரஸாத்தின் ஒரே ஒரு மனு மட்டுமே தாக்க லானதை ஏற்று, அதனை முறைப்படி பரிசீலனை செய்தனர்.

### ஜனவரி 24 செவ்வாய் :

காலை 10 மணிக்கு அரசியல் நிர்ணயசபையில் எல்லா உறுப்பினர் களும் வந்து கூடினர். சபையின்

ரகமி

விசேஷ காரியதரிசியான எச்.வி.ஆர். ஐயங்கார் வந்ததும் மிகுந்த பரபரப்பு ஏற்பட்டது. வந்தவர் சபையோர்க்கு வந்தனம் செலுத்தியபின், அங்குள்ள 'மைக்'கில் "மேன்மைதங்கிய சபை உறுப்பினர்களே! குடியரசு இந்தியாவின் முதல் ஜனாதிபதியின் பதவிக்கு ஒரே ஒரு மனு மட்டுமே தாக்கல் செய்யப் பட்டது. அம்மனுவில் அப்பதவிக் காக குறிப்பிடப்பட்டுள்ளவர் டாக்டர் இராஜேந்திர பிரஸாத்!" என அறிவித் ததுமே, சபையில் எழுந்த மகிழ்ச்சிக் கரவொலியின் ஆரவாரங்கள் இரண்டு நிமிடங்கள் நீடித்தன. தொடர்ந்து ஐயங்கார் "அந்த மனுவில் அப் பெயரைப் பண்டிதநேரு பிரேபிக்க, அதனையே சர்தார் வல்லபாய்பட்டேல் ஆமோதித்துள்ளார்" என்றதுமே மீண்டும் கரவொலிகள் பலமாய் ஒலித்தன.

"ஆகவே இந்தியக் குடியரசு ஜனாதிபதி தேர்தல் விதிமுறை 8வது ஷரத்து உட்பிரிவின்படி, டாக்டர் இராஜேந்திர பிரஸாத் அவர்கள் இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார் என்பதை மிக்க மகிழ்ச்சி யோடு அறிவிக்கிறேன்!" என்றதுமே உறுப்பினர்கள் தங்கள் மேஜைகள் மீது இருகைகளால் பலமாகத் தட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். புரொபசர் ஷிப்பன்லால் சக்ஸேனா, தனது ஒரு கையை மேஜையைத் தட்டியும், மறு கையால் பக்கத்திலிருந்த உறுப்பினர் முதுகில் தட்டியும் தனது மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

## நேருஜி, பட்டேல் இருவரும் இராஜேந்திர பிரஸாத்துடன் கைகுலுக்கினர்

ஜவஹர்லால் நேருவும், சர்தார் பட்டேலும் இராஜேந்திரபிரஸாத்தின் அருகில் சென்று மகிழ்ச்சியோடு கை குலுக்கிக் கொண்டனர். மற்றும் பிற உறுப்பினர்களும் தனித்தனியாக அவரிடம் தங்களது வாழ்த்துகளைக் கூறி கைகளையும் குலுக்கிக் கொண்டனர். அனைவருக்கும் நன்றி கூறியபின் அவர் வங்கக்கவி ரவீந்திரநாத் தாகூரின் "ஜனகணமன" பாடலும், பங்கிம் சந்திரரின் "வந்தே மாதரம்" பாடலும் இரண்டும் சம அந்தஸ்தோடு, தேசிய கீதங்களாக இயக்க விருப்பம் தெரிவித்தபோது அனைவருமே கரகோஷத்தோடு ஏற்றனர். பின்னர் அவர், வந்திருந்த உறுப்பினர்களுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டார்.

## ஜனவரி 26 (வியாழன்)
## இந்தியக் குடியரசு தினம்
## ஜனாதிபதி பதவி ஏற்பு வைபவம்!!

நம் இந்திய வரலாற்றின் ஒளிமய மான குடியரசுதின விழாவுக்கும் முதல் ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரஸாத் அவர்களின் பதவிப்பிர மாணத்திற்கும் ஏற்பாடாகியது. அன்று காலை 7 மணிக்கு இராஜேந்திரபிரஸாத் பதவி ஏற்பதற்குமுன் டில்லி ராஜ் காட்டிலுள்ள மகாத்மா காந்திஜியின் சமாதிக்கு அஞ்சலி செலுத்த, கடும் குளிரையும் பொருட்படுத்தாமல் துணைப்பிரதமர் சர்தார் பட்டேல் மனுபென் பட்டேலுடன் வந்தார் சமாதி, மலர்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. சற்று தூரத்தில் "ராம்துன்" "ரகுபதிராகவ" பக்திப்பாடல்கள் பாடப் பட்டன. இராஜேந்திர பிரஸாத் சமாதிக்கு மலர் தூவி அஞ்சலி செலுத்த 15 நிமிடங்களாயின.

காலை 10 மணிக்கு இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரல் சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி விசேஷ பரிவாரங் களுடன் சர்க்கார் மாளிகையின் தர்பார் ஹாலுக்கு வந்தார். அங்கு அவரைச் சர்க்கார் உயர் அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள், மிகுந்த மரியாதையுடன் வரவேற்றனர். அடுத்து ஜவஹர்லால் நேரு, சர்தார் பட்டேல், மற்ற மந்திரிகள், சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி ஹரிலால் ஜே.கனியா மற்றும் பிற நீதிபதிகள், ராஜ்ய முக்கிய மூத்த அதிகாரிகள், வெளிநாட்டு தூதர்கள், முப்படைத் தளபதிகள், பத்திரிகை யாளர்கள் மற்றும் வானொலி நிலைய நிருபர்கள், புகைப்படக்காரர்கள் குழுமியிருந்தனர்.

டாக்டர் இராஜேந்திர பிரஸாத் தனது குடும்பத்தோடு அங்கு வந்ததும், அவரைப் பாதுகாப்புடன் பதவிப் பிரமாணம் நடக்கும் இடத்திற்கு அழைத்து வந்தனர். அங்கு சக்கரவர்த்தி இராஜகோபாலாச் சாரியை இராஜேந்திர பிரஸாத் மிக்க மரியாதையுடன் வணங்க, பதிலுக்கு அவரும் ஆசி கூறினார்.

காலை 10 மணி 18 நிமிடத்திற்கு இராஜாஜி இந்தியக் குடியரசின் சிறப்புகளைப் பற்றி மிகச் சுருக்க மாகவும், ரசிக்கும்படியும் கூறிய பின்பு, "இந்திய வரலாற்றின் பொற்காலம் போன்ற இந்நாளில், நமது இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதிக்கு இறைவன் சர்வ வல்லமையும் அளித்திடுமாறு பிரார்த் தித்து அவரை வாழ்த்துகிறேன். அவர் தமது கடமைகளைப் பொறுப்புடனும், சீரும் சிறப்புடனும் நடத்துவதற்கு இந்திய மக்களும் தேசத்திற்கு நல்ல எதிர்காலத்தை உருவாக்கப் பெரிதும் உறுதுணையாக இருந்து பங்கேற்பார் களாக!" என ஆசி கூறினார்.

பின்னர் இந்தியாவின் பிரதம நீதிபதி ஹரிலால் ஜே.கனியா டாக்டர் இராஜேந்திரபிரஸாத்திற்கு இந்தியக் குடியரசின் ஜனாதிபதியாக பதவிப் பிரமாணமும், ரகசியக் காப்புப் பிரமாணமும் செய்து வைத்தார். ஜனாதிபதி தனது பிரமாணத்தை 'கடவுளின் பெயரால்' இந்தியில் கூறி எடுத்துக்கொண்டார். பின்னர் இராஜாஜி இந்தியக் குடியரசின் முதல் ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரஸாத் என மகிழ்ச்சியோடு கூறி, கை குலுக்கி, அங்கு விசேஷமாக அமைக்கப்பட்டிருந்த சிம்மாசனத் திற்கு அழைத்து வந்து அன்போடு அமரச் செய்தார். சபையே அதிரும் படியாக கரவொலிகள் எழுந்தன. வெளியே இராணுவ மரியாதை அடையாளமாக 31 பீரங்கிக் குண்டுகள் முழங்கப்பட்டன. ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திரபிரஸாத் இருகரங்கள் குவித்து அனைவரையும் வணங்கினார். பதவிப்பிரமாணம் முடிந்ததும், இந்தியக் குடியரசு சாசனத்தின்



• பாராளுமன்றம்



எச்.வி.ஆர். ஐயங்கார்



இராஜேந்திரபிரஸாத்



ஜவஹர்லால் நேருஜி



வலலபாய் பட்டேல்

மூன்று பிரதிகளில் ஜனாதிபதி தனது கையொப்பமிட்டார்.

பின்னர் ஜனாதிபதி இராஜேந்திர பிரஸாத் நன்கு அலங்கரிக்கப்பட்ட இராஜாங்கக் கோச்சில் சுமார் 5 மைல் தூரத்திலுள்ள இர்வின் ஸ்டேடியத்திற்குச் சென்றார். வழி நெடுகிலும் லட்சக்கணக்கான மக்கள், வெள்ளம் போல் திரண்டு வந்து தங்கள் மகிழ்ச்சியை ஜனாதிபதிக்குத் தெரிவித்தனர். ஸ்டேடியத்தை அடைந்ததும் அங்கு அவர் இராணுவமரியாதை

இராஜாஜி



ஹீரலால் ஜே. கனியா



பி.எஸ். குமாரசாமி ராஜா (முதன் மந்திரி)



பி.வி. ராஜமன்னார் (ஹைகோர்ட்டின் பிரதமநீதிபதி)



களை ஏற்றபின்பு, நமது தேசியக் கொடியைப் பறக்கவிட்டு மரியாதை 'சல்யூட்' செய்தார். கூடியிருந்த மக்கள் கைகளில் பிடித்திருந்த தேசியக் கொடியை அசைத்து மிகுந்த மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். தனது வாழ்த்துரைகளுக்குப்பின் ஜனாதிபதி தமக்கென ஏற்பாடு செய்துள்ள 'ராஷ்டிரபதி பவ'னுக்குச் சென்றார்.

**ராஷ்டிரபதிபவனின் வரலாறு**

இந்தியாவின் ஜனாதிபதியாக பதவி ஏற்பவர்கள் தங்கி அலுவல் களை கவனிப்பதற்காக ஏற்படுத்தப் பட்டதே 'ராஷ்டிரபதிபவன்' என்ற கட்டடமாகும். இந்தக் கட்டடம் உலகிலேயே பெரிய ஆட்சிபுரியும், மாளிகையில் இரண்டாவது இடம் பெற்றுள்ளது. பாரிஸ் நாட்டிலுள்ள 'வேர்செலிஸ்' மாளிகையே முதலிடம் பெற்ற மாளிகையாகும். ஆங்கிலே யர்கள் இந்தியாவை ஆண்டபோது அவர்களின் அரசப் பிரதிநிதிகள் (வைஸ்ராய்) தங்குவதற்காக இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் பிரபல கட்டடக்கலைச் சிற்பியான 'சர்எட்வின்லுடியென்ஸ்' என்பவரால் கட்டப்பட்டது. இது 330 ஏக்கர் பரப்பளவில் உள்ளது.

ஆங்கிலேயர் நம் இந்தியாவை முடியாட்சி செய்தபோது முதலில் அவர்கள் தங்களது தலைநகரமாக கல்கத்தாவையே வைத்திருந்தனர். ஆனால் 1899ஆம் ஆண்டு இந்தியாவுக்கு வைஸ்ராயாக வந்த லார்டு கர்ஸன், சில ஆண்டுகளுக்குள் பெரிய மாகாணமாக இருந்த வங்காளத்தை, சூழ்ச்சி எண்ணத் தினால் இரண்டாகப் பிரித்தார். இதனை எதிர்த்து வங்காளிகளும் இவர்களுக்கு ஆதரவாக மக்களும் ஆங்காங்கு ஊர்வலங்களும், ஆர்ப் பாட்டங்களும், கிளர்ச்சிகளும் நடத்தினர். இதனை அடக்க ஆட்சியாளர்கள் பலரைக் கைது செய்தனர். அதில் பெரும்பாலானோர் இளைஞர்களே ஆவர். ஆனால் இக்கிளர்ச்சி மேன்மேலும் பலத்தது. இதனால் ஆங்கிலேயர் கல்கத்தாவி லிருந்து ஆட்சி செய்வது மிக்க சிரமமாகவே இருந்தது!

இதனால் வைஸ்ராய் லார்டு கர்னல் தமது மேலதிகாரிகளின் ஆலோ சனையின்படி தங்களது தலைநகரை கல்கத்தாவிலிருந்து டெல்லிக்கு மாற்றினார். டெல்லி பாதுகாப்பிற்கும், ஆட்சிசெய்யவும் உகந்த இடமெனவும் முடிவு செய்தனர். டெல்லி நகரமோ கங்கைநதியின் உபநதியான யமுனை யின்மீது அமைந்துள்ள அழகான நகரம்.

சிறப்பான இந்த வைஸ்ராயின் மாளிகை 17 மில்லியன் பவுண்டு மதிப்பீட்டில் (இன்றைய இந்திய ருபாய் மதிப்பீட்டில் 81 கோடி ருபாய்) கட்டப்பட்டது. இந்த மாளிகை கட்டி முடிக்க 17 ஆண்டுகள் பிடித்தன. இந்தக் கட்டடம் எந்த முறையில் கட்டவேண்டும் என்ற விவரங்கள் அப்போது இங்கிலாந்து தேசத்தை ஆட்சிபுரிந்த ஐந்தாம் ஜார்ஜ் மன்னரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவரது தீர்க்க யோசனை, மற்றும் கலைநுணுக்கங்களை நன்கு ஆராய்ந்து "மேற்கத்திய இந்தியக் கலைவடிவில் அதனை உருவாக்க வேண்டும்" என உத்தரவிட்டார். இந்த மாளிகை தொடக்க வேலை தொடங்கியபோது சூட்டப்பெற்ற ஆங்கிலப் பெயர் "கவர்ன்மெண்ட் ஹௌஸ்" எனப்படும். பின்பு இதே பெயர் "வைஸ்ராய் மாளிகை" என்று மாற்றப்பட்டது.

இப்படிப் புகழ்பெற்ற ஜனாதிபதி மாளிகையில் 1929ஆம் ஆண்டு ஜனவரி 23ஆம் தேதி முதன் முதலாக அப்போதைய வைசிராயாக இருந்த இர்வின் பிரபு குடியேறினார். இறுதி யாகக் குடியேறிய வெளிநாட்டுக்காரர் மவுண்ட்பேட்டன் பிரபு. 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15இல் பாரதம் சுதந்தரம் அடைந்ததும் அதே ஜனாதிபதி மாளிகையில் முதன் முதலாகக் குடியேறிய இந்தியர் ஸி.இராஜகோபாலாச்சாரியார் ஆவர். இவருக்குப்பின் முதல் இந்திய ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரஸாத் ஆவார். இவர் பதவி யேற்றதும் ஜனாதிபதி மாளிகை என்பது "ராஷ்டிரபதி பவன்" என்று பெயரும் சூட்டப்பெற்றது!

டில்லி மாநகரில் "குடியரசு தினம்" மற்றும் ஜனாதிபதி டாக்டர் இராஜேந்திர பிரஸாத் அவர்களின் பதவிப் பிரமாணச் செய்திகளை வரலாற்று ஏடுகளிலிருந்து அறிந்த நாம் அடுத்து நமது சென்னை மாநகரில் 1950ஆம் ஆண்டு ஜனவரி 26இல் "முதல் குடியரசு தினம்" எப்படி கொண்டாடப்பட்டது என்பதையும் பழைய வரலாற்று ஏடுகளிலிருந்து அறிவோம்.

**சென்னை மாநகரில்!**

குடியரசு தினத்தை முன்னிட்டு அதற்குமுன் நாலைந்து நாள்களா கவே நமது சென்னை மாநகர் சிங்காரமாகவே காட்சியளித்தது. குடியரசு தின வைபவத்தைக் காண வெளியூர்களிலிருந்து வந்த மக்கள் சென்னையில் வந்து குழுமியிருந் தனர். சென்னை மவுண்ட் ரோட்டி லுள்ள இராஜாஜி மண்டபம் வண்ணப் பூச்சுகளால் மின்னிப் பளிச்சிட்டது. ஆங்காங்கு காகிதத்தாலான தேசியக் கொடிகளும் தோரணங்களும் கட்டப் பட்டு மிக்க சிறப்புடன் காட்சி யளித்தன. சென்னை நகரில் டிராம் வண்டிகளில் அசோக சக்கரமும் ஸ்தூபியிலுள்ள மூன்று சிங்கங்களின் உருவங்களைப் போலவும் வண்ண மின் விளக்குகளால் ஜோடிக்கப்பட்டு மின்னின. மின்சார ரயில்வண்டிகளில் மின்சார பல்புகளைத் தோரணமாக ஜோடித்து இரவு நேரங்களில் ரயில் தொடர் செல்லும்போது பார்வைக்கே மிக்க அழகாக இருந்தது.

சென்னைத் துறைமுகத்திற்கு உள்ளேயும் வெளியேயும் கடலில் நிற்கும் வெளிநாட்டுக் கப்பல்களில் தங்களது கொடிமரத்தில் அந்தந்த நாட்டுக் கொடியுடன் இந்திய தேசியக் கொடியையும் இணைத்துப் பறக்க விட்டு தங்களது மரியாதையைத் தெரிவித்தனர். அக்கப்பல்களில்



பவநகர் ராஜா தம்பதி (சென்னைக் கவர்னர்)



இராஷ்டிரபதி பவன்

ஜோடிக்கப்பட்ட மின்விளக்குகள் இரவில் எரியும்போது கடலிலிருந்து மின்விளக்குகள் செடிகளைப் போல பூத்துக் குலுங்கின.

## ஜனவரி 26 1950 :

1950ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் தேதி காலை நடந்த குடியரசு தின வைபவம் மற்றும் கவர்னர், ராஜ்ய மந்திரிகள் பதவிப் பிரமாணங்களைக் காண மக்கள் திரள்திரளாக இராஜாஜி மண்டபத்தை நோக்கிச் சென்றனர். ஹாலுக்குள் தேசப்பிதா மகாத்மா காந்திஜியின் உருவப்படம், மலர்கள் மற்றும் வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அங்கு தொங்கும் பழைய மாடல் கண்ணாடி சரவிளக்குகளில் வண்ணவண்ண மின் பல்புகளும், மெழுகுவத்தியும் ஏற்றி வைக்கப்பட்டிருந்தன.

பதவிப்பிரமாணத்திற்காக விசேஷ மேடையும், விழாவிற்கு வரும் முக்கியப் பிரமுகர்களுக்கான விசேஷ இடங்களும் ஒதுக்கப் பட்டிருந்தன. அவர்களில் சீனாவின் இந்திய தூதரான கே.எம்.பணிக்கர் ஆர்க்காடு இளவரசர், பங்கனப்பள்ளி நவாபும் வந்திருந்தனர்.

காலை 10 மணிக்குச்சென்னை கவர்னர் பவநகர் மகாராஜா தனது மனைவி மகாராணியுடன் நன்கு அலங்கரிக்கப்பட்ட குதிரைகள் பூட்டிய கோச் வண்டியில் இராஜாஜி ஹாலுக்கு வந்தார். அங்கு விசேஷமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஸ்பெஷல் மலபார் போலீஸின் மரியாதையை ஏற்றுக்கொள்ள, போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஜே.தேவசகாயம் கையில் உருவிய வாளுடன் கவர்னரை வரவேற்றார். போலீஸ் மரியாதைக்குப் பின் கவர்னர் இராஜாஜி ஹாலின் வெளி உயரமான படிகளில் விரிக்கப் பட்ட சிவப்பு விரிப்பில் நடந்து மேல் படிக்குச் சென்றதும், அங்கு சென்னை முதன் மந்திரி பி.எஸ்.குமாரசாமி ராஜாவும், ராஜாங்க பிரதம செயலாளர் கே.ராமுன்னிமேனனும் வரவேற்று அழைத்துச் சென்றனர்.



இராஜாஜி மண்டபம்

ஹாலுக்குள் இருபுறங்களிலும் சென்னை மேல்சபைத் தலைவர் ஆர்.பி.ராமகிருஷ்ணராஜுவும், சட்டசபை சபாநாயகர் ஜே.சிவஷண்முகம் பிள்ளையும் அமர்ந்திருந்தனர் அவருக்குப் பக்கத்தில் தென்மண்டல கமாண்டர் லெப்டினன்ட் ஜெனரல் மகராஜ் ஸ்ரீராஜேந்திரசிங்ஜியும் அமர்ந்திருந்தார். பதவிப் பிரமாண மேஜையின்மீது பகவத்கீதை, பைபிள் இருபிரதிகள் (ஒரு பிரதி பிராடெஸ்டெண்ட் கிறிஸ்தவர்களுக்கும் மற்றொன்று கத்தோலிக்கர்கள் பயன்படுத்தவும்) திருக்குர்ஆனும் வைக்கப்பட்டிருந்தன.

இராஜாஜி ஹாலுக்குள் கவர்னர் வந்ததுமே அங்கு 'ஜனகணமன' தேசிய கீதம் பாண்டுவாத்தியத்தில் இசைக்கப்பட்டது. பின்பு கவர்னர் இந்தியக் குடியரசின் சாசனத்தைப்

படித்து முடித்ததும் சென்னை ஹைகோர்ட்டின் பிரதம நீதிபதி பி.வி.ராஜமன்னார் கவர்னருக்கு முறைப்படி பதவிப்பிரமாணமும், ரகசியக்காப்புப் பிரமாணமும் செய்து வைத்தார். கவர்னர் பகவத் கீதையைக் கையில் வைத்துக்கொண்டு 'எனது உளமார' எனக்கூறி ஆங்கிலத்தில் பிரமாணம் எடுத்துக்கொண்டார். அப்போது இராணுவ மரியாதையாக 17 குண்டுகள் வெடிக்கப்பட்டன.

அடுத்து சென்னை முதன் மந்திரி பி.எஸ்.குமாரசாமி ராஜா கையில் பகவத் கீதையை வைத்துக்கொண்டும், இறைவன் பெயராலும்பதவிப்பிர மாணம் எடுத்துக்கொண்டார். பின்பு அவர் கவர்னரிடம் சென்று கை குலுக்கினார். முதன் மந்திரி குடியரசு சாசனப் புத்தகத்தில் கையொப்பமிட்ட பின்பு ஆர்.பிராமகிருஷ்ணராஜுவும், ஜே.சிவஷண்முகம்பிள்ளையும் 'இறைவன் பெயரில்' பிரமாணம் எடுத்துக்கொண்டனர். சென்னை ஹைகோர்ட் பிரதம பிரதம நீதிபதி பி.வி.ராஜமன்னார் உறுதிமொழிக்கு அடுத்து ராஜதானி மந்திரிகள் முறையே டாக்டர் டி.எஸ்.எஸ்.ராஜன், எம்.பக்தவத்சலம், பி.கோபால்ரெட்டி, கே.மாதவமேனன், எச்.சீதாராமரெட்டி, ஏ.பி.ஷெட்டி, கே.சந்திரமௌலி, பி.பரமேஸ்வரன், என்.சஞ்சீவிரெட்டி, பெருமாள்சாமிரெட்டி, கடைசியாக ஜே.எல்.பி.ரோச் விக்டோரியா ஆகியோர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டனர்.

இதில் 6 மந்திரிகள் 'இறைவன் பெயராலும்' மற்ற ஐந்து மந்திரிகள் 'உளமார' எனக்கூறியும் மந்திரி ரோச் விக்டோரியா கையில் பைபிள் வைத்துக்கொண்டும் பிரமாணம் எடுத்துக்கொண்டனர். காலை 10 மணிக்குத் தொடங்கிய பதவிப் பிரமாணம் 11 மணிக்கு முடிவடைந்தது.

### சென்னை கார்ப்பரேஷன் ஸ்டேடியத்தில் குடியரசு தினவிழா :

அன்று மாலை 5 மணிக்குச் சென்னை கார்ப்பரேஷன் ஸ்டேடியத்தில் நடக்கும் விழாவைக் காண பிற்பகல் 3 மணியிலிருந்து ஜனக்கூட்டம் சுமார் 2 லட்சத்திற்கு மேல் நெரிச லிட்டது. கவர்னர் தம்பதி இராஜாஜி ஹாலிலிருந்து கோச்சில் ஸ்டேடியத் திற்குப் புறப்பட்டனர். கோச்சிற்குப் பின்னால் போலீஸ் உதவி கமிஷனர் ஆர்.எம்.மகாதேவன் மற்றும் சார் ஜெண்ட் மேஜர் லூயிஸ் இருவரும் குதிரைமீது வந்தனர்.

கவர்னரின் கோச் மாலை 5 மணிக்கு ஸ்டேடியத்தை அடைந்தது. அங்கு கூடியிருந்த மக்கள் மிக்க மகிழ்ச்சியோடு கவர்னர் தம்பதியை வரவேற்றனர். அங்கு முதன் மந்திரி பி.எஸ்.குமாரசாமி ராஜா வரவேற்றார். தவிர சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஏ.வி.பட்ரோ, ஆர்கே. சுகுமாரன் (உதவி கமிஷனர்) கவர்னர் தம்பதிக்கு போலீஸ்மரியாதை அளித்தனர். பின்பு அங்கு விசேஷமாக அலங்கரிக்கப்பட்ட மேடையில் கவர்னர் தேசியக் கொடியைப் பறக்கவிட்டு மரியாதை "சல்யூட்" அளித்தனர். அப்போதும் இராணுவ மரியாதை குண்டுகள் வெடித்தன. அன்றிரவு சென்னை மெரினா கடற்கரையில் வாணவேடிக்கைகள் மிகச்சிறப்பாக நடந்தன. இதனை வேடிக்கை பார்க்க கவர்னர் தம்பதியும் வந்திருந்தனர்.

குடியரசு தினத்தை முன்னிட்டு சென்னை சிறையிலிருந்து சுமார் 8000 கைதிகள் விடுதலை செய்யப் பட்டனர். அன்று காலை முதல் சென்னை வானொலியில் 7மணிக்கு மாயூரம் டி.ஆர்.விஸ்வநாத சாஸ்திரி தொகுத்த 'வந்தேமாதரம்' பாரத்பஜன் 7.30க்கு மதுரை எஸ்.சோமசுந்தரம் கச்சேரி (திருச்சி அஞ்சல்) 8.30 முதல் 9.00 வரை 'ரஜனி' தொகுத்தளித்த 'ஸ்வாதந்தர்யநிருத்யம்' 10.10க்கு டில்லியில் நடந்த குடியரசு தின வைபவங்கள் நேர்முக அஞ்சல், 5.30 மணிக்கு திருவெண்காடு பி.சுப்பிரமணியபிள்ளை நாதஸ்வரம் (திருச்சி அஞ்சல்) இரவு 7.30க்கு குடியரசு தினத்தை முன்னிட்டு சென்னை முதன் மந்திரி பி.எஸ். குமாரசாமி ராஜாவின் 'குடியாட்சி' சிறப்புரை 7.45 என்.எஸ்.கிருஷ்ணன்.--டி.ஏ.மதுரம் அளித்த "விந்தை மனிதன்" இரவு 10.00 மணிக்கு எம்.எஸ்.சுப்புலட்சுமியின் கச்சேரி, ஆர்.கே.வெங்கட்ராம சாஸ்திரி வயலின், கல்பாத்தி ஏ.ராமநாதன் மிருதங்கம், டி.எஸ்.வில்வாத்திரி ஐயர் கடம், பக்கவாத்தியங்களுடன் நடை பெற்றன.

தன்னலமற்ற தலைவர்களின் அரும்பெருந் தியாகத்தால் விடுதலை பெற்ற பாரதத்தின் சுதந்தரத்தைப் பொன்னே போல் போற்றி எந்த நாளும் காப்பதற்கு இந்தப் பொன்விழா குடியரசு நாளில் உறுதி ஏற்போம்!




'எனது - நான்' என்ற
எண்ணம் விடு.
சுத்தத்தைச்
சுயம் பிரகாசமாக்கி
சுதந்தரமாய்ப் பற.
சத்தியத்தைச்
சாதனையாக்கி
சாகா வரம் பெறு
சித்தத்துள்
சிறிதுநேரம்
சிவத்தை வை.
பற்றற்ற நிலை காண
பலநேரம்
பயிற்சி செய்.
எற்றைக்கும்
தத்துவத்தின்
தன்மை-மகத்துவத்தைத்
தரணிக்கு ஓதிவிடு.

கலாபாரதி

**சங்கரி புத்திரன்**

"திண்ணிய நல்லறிவொளியாய் திகழுமொரு பரம்பொருளை அகத்தில் சேர்த்து, செய்கையெல்லாம் அதன் செய்கை நினைவெல்லாம் அதன் நினைவு என எப்போதும் ஆனந்தச் சுடர் நிலையில் வாழ்ந்துயிர்கட் கினிது செய்வோர் தப்பாதே இவ்வுலகில் அமரநிலை பெற்றிடுவார்" என்று மகாகவி பாரதி காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் பாடிய பாடலின் உட்பொருளுக்கு உருவமாக காலம் காலமாக வாழ்ந்து, திகழ்ந்து, பாரதப் புண்ணிய பூமியில் மறைந்த ஞானிகள், சித்தர்கள், துறவிகள் எண்ணிக்கை கணக்கிலடங்காதவை எனினும் அப்பலருள் சிலரைக்கூட அறியாதவர்கள் தாம் நாம்.

மகாகவி சுட்டிக்காட்டிய அத்தகைய அமரநிலை பெற்றவர்களில், அவர் வாழ்ந்த காலத்திற்கு முன்பே தோன்றி, தமிழ் நாட்டில் பல லீலா விநோதங்கள் புரிந்து, மறைந்த குழந்தையானந்த சுவாமிகள் என்ற ஜீவன் முக்தரும் ஒருவர்.

ஓர் ஆன்ம ஞானி என்பதைப் பறை சாற்றும் நெற்றி; ஒளி வீசும் கண்கள்; பருத்த தொந்தி, சங்கு சக்கர முத்திரையோடு கூடிய குச்சிக் கால்கள். கழுத்தில் மகர கண்டியும் கௌரி சங்கர ருத்ராக்ஷஹாரமும் எப்பொழுதும் சாளவாய் வழிந்து கொண்டு இருக்கும் வாய், இதுதான் அவரது உருவம்.

அணிமாதி சித்திகள் கைவரப் பெற்று ஒரே நேரத்தில் பல இடங்களில் பல ரூபங்களில் காட்சியளிக்கும் தன்மையும் சின்னக் குழந்தைகள்கூட இடுப்பில் வைத்துக் கொண்டு நடக்கக் கூடிய அளவுக்குத் தன் உருவத்தைச் சிறியதாக ஆக்கிக்கொள்ளும் ஆற்றலும், கையில் போட்டிருந்த மோதிரங்கள் உடைந்து சிதறிவிடும் அளவுக்குத் தன் உருவத்தைப் பெரிதாக ஆக்கிக் கொள்ளும் (விஸ்வரூபம்) சக்தியும் பெற்று, அதைப் பல இடங்களில் நிரூபித்தும் காட்டிய அப்புண்ணிய புருஷரின் சித்து விளையாட்டுகள் நேரில் அருகிலிருந்து பார்த்த பக்தர்களின் உருவ வர்ணனை தான் மேலே உள்ளது.



# குழந்தையானந்த சுவாமிகள்

தமிழ்நாட்டில் மதுரைக்கடுத்த சமயநல்லூரில் வாழ்ந்த இராமசுவாமி ஐயர் — திரிபுரசுந்தரி அம்மாள் தம்பதிக்குப் பிறந்த இரட்டைக்குழந்தைகளில் ஒருவராகத் தோன்றியவர். இராமன் எனப் பெயரிடப்பட்ட இவர், மதுரை மீனாட்சி கோயிலின் உள்ளேயே இராஜகோபாலன் என்ற பெயருடன் வாழ்ந்து, 7 வயதிலேயே துறவியாகி வடக்கே சென்று காஷ்மீர், நேபாளம், வங்காளப் பகுதிகளில் "திரிலிங்க சுவாமிகள்" என்ற திருநாமத்துடன் சஞ்சரித்தவர்.

பிறந்ததிலிருந்தே காலில் சங்குசக்கர சின்னத்தையும், நாவில் நாராயண நாமத்தையும் கொண்ட இவரை-தாய்ப்பால் அருந்தாமலேயே நன்றாகச் சிரித்து விளையாடிக் கொண்டிருந்த இவரை — பெற்றோர் வேண்டுகோளின்படியும், அன்னை அங்கயற்கண்ணியின் அருட்கட்டளைப்படியும் மதுரை மீனாட்சி கோயிலினுள்ளேயே அன்னையின் பரிவிலும் பராமரிப்பிலும் வளர்ந்த இவரை — இவரது பெற்றோரின் மறைவுக்குப் பின் காசியிலிருந்து மதுரைக்கு வந்து தங்கியிருந்த "கணேசப்ரும்மம்" என்ற ஒரு துறவி சீடனாக ஏற்று, காசிக்கே அவருடன் கூட்டிக் கொண்டு போய்விட்டார். சகல சாஸ்திரங்களையும் யோக ரகசியங்களையும் அங்கே பல யோகிகளிடம் கற்றறிந்த இவர்,



நேபாளம், இமயமலை, வங்காளம் போன்ற பகுதிகளில் சஞ்சரித்தார். இவரது ஜீவசமாதிகள் வடக்கே இரண்டும், தெற்கே இரண்டுமாக மொத்தம் நான்கு இருக்கின்றன எனக் கூறப்படுகிறது.

முதல் சமாதி காசியில் கணேசகட்டம் என்ற பெயர்பெற்ற பஞ்சலிங்க கட்டத்தில் குரு கணேசபாபா சமாதிக்குப் பக்கத்திலும், இரண்டாவது சமாதி நேபாளம் பசுபதிநாதர் கோயிலிலும், மூன்றாவது சமாதி தென்காசியில் சந்நிதி மடம் தெருவில் குடியிருந்த பக்தர் சங்கரன் பிள்ளை என்பவரின் வீட்டினுள்ளேயும், நான்காவது சமாதி மதுரை 'அரசடி' என்ற இடத்திலும் உள்ளன.

மனித ஆயுளுக்கு மேம்பட்ட பல ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கருதப்படும் இவர் — திரிலிங்க சுவாமிகள் என்ற பெயரில் வடக்கே சஞ்சரித்தபோது இராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்தர் போன்ற மகான்களையும், தெற்கே இவரது குழந்தைத்தனமான மழலைப் பேச்சையும், செய்கைகளையும் கேட்ட , கண்ட பக்தர்கள் வைத்த பெயரான குழந்தையானந்த சுவாமிகள் என்ற நாமத்துடன் உலவியபொழுது ரமண மகரிஷிகளையும், சிருங்கேரி சாரதா பீடாதிபதி நரசிம்ம பாரதி சுவாமிகளையும் சந்தித்து உரையாடியிருப்பதாகத் தெரிய வருகிறது.

நேபாளம், இமயமலை பிரதேசங்களில் சஞ்சரித்தபோது பாம்பு கடித்து இறந்து போன நேபாள அரசன் ஒருவனை உயிர்ப்பித்ததால் அவனது அரண்மனையிலேயே இடம் கேட்டுப் பெற்று சுமார் பன்னிரண்டு ஆண்டு காலம் ஜீவ சமாதியில் இருந்தார். இவர் அணிந்திருந்த மகரகண்டியும், கௌரி சங்கர ருத்ராக்ஷஹாரமும் உயிர்ப்பிக்கப்பட்ட நேபாள அரசனால் கொடுக்கப்பட்டதாக அறிய முடிகிறது. வடக்கே அவதூதராகவே (ஆடையில்லாமல்) சஞ்சரித்த இவரை திபெத், நேபாளம், காஷ்மீர், பரோடா அரசர்கள் பூஜித்து ஆசி பெற்றதால் 'ராஜபூஜித மகான்' என்றும் அழைக்கப்பட்டார். இவரது சீடர்கள் இன்றும் வட இந்தியாவில் பல பகுதிகளில் உள்ளனராம்.

பின்னர் நேபாள சமாதியிலிருந்து கிளம்பி வடஇந்தியா, ஆந்திரம் போன்ற பகுதிகளில் சஞ்சரித்து பல அனுக்ரக லீலைகள் புரிந்த பின்னர் தமிழ்நாட்டுக்கு வந்து சுமார் பத்தாண்டு காலம் திருவண்ணாமலையில் சமாதி நிலையில் இருந்தார். பின்பு அங்கிருந்து கிளம்பி தென்காசி வந்து மூன்றாவது ஜீவசமாதி எய்தினார்.

தென்காசி சமாதியிலிருந்து வெளிக் கிளம்பிய பின்னர் சதுரகிரிமலை பிராந்தியங்களிலும் தமிழ்நாட்டில் பல ஊர்களிலும் சஞ்சரித்து பல பக்தர்கள் இல்லங்களில் தங்கி பலவிதமான அனுக்ரக லீலைகள் புரிந்துவிட்டு (நடுவில் ஒரு தடவை காசிக்கும் சென்று திரும்பினாராம்) கடைசியில் மதுரையை மையமாகக் கொண்டு சுமார் இருபது வருடகாலம் அப்பகுதியில் பல லீலைகள் புரிந்தார்.

1932ஆம் ஆண்டு (ஆங்கிரச வருடம் புரட்டாசி மாதம்) மதுரை லக்ஷ்மிநாராயணபுர அக்கிரஹாரம் நான்காம் நம்பர் வீட்டில் நவராத்திரி உத்சவத்தை சுவாமிகளே முந்நூறு சவரனில் செய்து வைத்திருந்த ஸ்ரீசக்ரத்தை பூஜையில் வைத்து 9 நாள்கள் கோலாகலமாகக் கொண்டாடினார்கள். சரஸ்வதி பூஜையன்று பகல் 2 மணிக்கு மேல் சுவாமிகள் சித்தியடைந்த விஷயத்தை தேதியூர் சுப்ரமணிய சாஸ்திரிகள் என்ற வேத விற்பன்னரைக் கொண்டு ஊர்ஜிதம் செய்து கொண்டு போட்டி போட்டுக் கொண்டு வந்த பல இடங்களில் கடைசியில் மதுரை அரசடிப் பகுதிதான் அவரது சமாதிக்கேற்ற இடம் என நிர்ணயிக்கப்பட்டது. தற்போது சுவாமிகள் அங்கேயே நல்லடக்கம் ஆகி சூக்ஷ்ம தேகத்திலிருந்து பக்தர்களை அனுக்ரகித்து வருகிறார்.

ஸ்வாமிகள் சமாதியில் அடங்குமுன் அவருடன் கூடவே இருந்து தன் குடும்பத்துடன் அவருக்கு வேண்டிய கைங்கர்யங்கள் செய்து ஸ்வாமிகளுடைய பரம அனுக்கிரகத்தை அடைந்தவர் எல்.வி.ராமலிங்க ஐயர் என்ற குருபக்த சிகாமணி ஆவார். கடைசியாக உடன் இருந்த சிஷ்யர் என்ற முறையில் சுவாமி களை அடக்கம் செய்யும் பாக்கியமும் அவருக்கே கிடைத்தது.

தாம் சமாதி ஆகப் போவதை சுவாமிகள் முன் கூட்டியே இரண்டு நாள்கள் முன்பே சூட்சுமமாகக் குறிப்பிட்ட பக்தர்களுக்குத் தெரிவித்து கடைசியாக சில லீலைகள் புரிந்தாராம்.

குழந்தையானந்த சுவாமிகள் என்ற பெயருக்கேற்றபடி இவரது செய்கைகள் சில சமயம் குழந்தைகள் அடம் பிடிப்பது போலவும், குழந்தைத்தனமாகவும் இருக்கிறமாதிரி நமக்குத் தோன்றும்படி அமையுமாம். ஆனால் அதில் ஏதோ உட்பொருளோ நம் செயலில் ஏதேனும் தவறோ இருந்தால்தான் அப்படி நடந்து கொள்வாராம்.

சான்றுக்கு சிலவற்றைப் பார்ப்போம்.

ஒருமுறை ஒரு வீட்டில் லலிதா சகஸ்ரநாம அர்ச்சனை செய்யச் சொல்லிவிட்டு, நூறு நாமாக்கள் சொல்லி அர்ச்சனை ஆனவுடன் திடீரென்று நிறுத்தச் சொல்லிவிடுவார்! "அம்பிகையை எத்தனை நாழிடா காக்க வைக்கிறது?" என்று கூறி கற்பூரஹாரத்தி எடுக்கச் சொல்லிவிடுவார்.

புதுக்கோட்டை கீழ 3ஆம் வீதி சுப்பையர் வீட்டில் ஒரு வருடம் தங்கியிருந்தார். அப்போது அவரது 2 மனைவிகளுக்குக் குழந்தைப் பேறு இல்லை. ஒருநாள திடீரென்று இருவரையும் அழைத்து "ஏண்டி உங்களுக்கு குழந்தை பாக்கியம் வேண்டுமா?" என்று கேட்டு "குனியுங்கோடி" என்றார். அவர்கள் இருவரும் குனியவே மூத்தாளுக்கு முதுகில் ஓங்கி நான்கு அடிகளும், இளையவளுக்கு மூன்று அடிகளும் விழுந்தன. அடித்தவர் சுவாமிகள் தாம். அடிபட்டவர்களுக்கு அதே எண்ணிக்கை குழந்தைகள் பிறந்தனராம்.

மதுரை வீதி ஒன்றில் இருந்தவாணியர் செக்கில் எண்ணெய் ஆட்டி குடம் குடமாக வைத்திருந்தார். அவ்வழியே சென்ற சுவாமிகள் எல்லாக் குடங்களையும் காலால் உருட்டித் தள்ளி விட்டார். வாணியர் மனைவி அவரைத் திட்டவே சுவாமிகள் கை கொட்டிச் சிரித்தாராம். எங்கோ போயிருந்து அப்போது அங்கே வந்த வாணியரிடம் "பாருடா நான் ஒன்னும் செய்யலை. உன்

வீட்டுக்காரி என்னைக் கண்டபடி வையறா?" என்று சொல்லிக்கொண்டே இருக்கும்போது குடங்களில் பழையபடி எண்ணெய் நிரம்பிவிட்டது. வாணியர் மனைவியைக் கடிந்து கொண்டார். அன்று முதல் அந்த வாணியரின் கடையில் நல்ல வியாபாரம்.!

சுவாமிகள் தமக்கென்று நிலையான எந்த இருப்பிடம் இன்றி (ஆசரமம், மடம் போன்றவை) எந்த ஊருக்கும் சென்று எவர் வீட்டிலும் நுழைந்து அங்கு தங்கி அனுக்ரகம் புரியும் இயல்புடையவராக இருந்திருக்கிறார். முதல்நாள் ஆசார அனுஷ்டானத்தைக் கடைப்பிடித்த அந்தணர் வீட்டிலும், அடுத்த நாள் அரண்மனை போன்ற செட்டிமார் இல்லங்களிலும், அதற்கடுத்த நாள் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்காத விலைமாதர்கள் வீட்டிலும் போய் இருந்து தங்கி அருள் புரிந்துள்ளார். பக்தர்கள் சிலர் கொண்டு வரும் பழங்களையும் தின்பண்டங்களையும் விலையுயர்ந்த பொருள்களையும் தாமே தன் கையால் எடுத்து அங்கு வந்து குழுமி இருக்கும் எல்லா எளியவர்க்கும், ஏழைகளுக்கும் விநியோகம் செய்துவிடுவார். தீயவர்கள் கொண்டுவரும் பொருள்களைக் கையால தொடவே மாட்டார். அவற்றைக் கண்டால் கண்ணை மூடிக்கொண்டு விடுவார். "அவற்றைக் கொண்டு போய் மாட்டுக்குப் போட்டுவிடு" என்று சொல்லிவிடுவார். ஏன்? என்று கேட்டால் அது தகாத பாத்திரம் என்று மறுமொழி கூறிவிடுவார். ஸ்நானம், ஆகாரம், நித்திரை போன்ற செயல்களை நம்மைப்போல் குறிப்பிட்ட நேரத்தில்தான் செய்ய வேண்டும் என்ற நியதியை அவர் போன்ற சித்த புருஷர்கள் கடைப்பிடிக்க மாட்டார்கள் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம்தான். என்றைக்கு எப்பொழுது தோன்றுகிறதோ அப்போதுதான் ஸ்நானம் செய்வார். வெந்நீர் ஸ்நானம் தான். எண்ணெய் ஸ்நானம் தான். அதுவும் சுத்த நீரை வெயிலில் வைத்துக் கொதிக்கச் செய்த வெந்நீர் தான் வேண்டும்.பசு நெய் அது கிடைக்காவிட்டால், நெய், நல்லெண்ணெய், அல்லது விளக்கெண்ணெய் மூன்றும் சேர்ந்த முக்கூட்டு நெய்யாக இருக்கவேண்டும். வஜ்ஜிர சரீரம் போன்ற உடலை உடைய குண்டு கூட பாயாத உடலை உடைய அவருக்கு நாலு பேர் சேர்ந்து எத்தனை சூடுபறக்கத் தேய்த்தாலும் நெய் உருகாது. அவர்கள் கைகள் வலி எடுத்துவிடும். ஆனாலும் அவர் போதும் என்று சொல்லும் வரை தேய்த்துக் கொண்டே இருக்கவேண்டும். ஸ்நானம் ஆனபின உடம்பைத் துடைத்துவிட்டு சாம்பிராணிப் புகை போட்டு, விபூதி அபிஷேகம் செய்து ருத்ராக்ஷம் அணிவித்து, ஆசனத்தில் அமர்த்த வேண்டும். பின்பு நேரம் தெரியாமல் நிஷ்டையில் இருப்பார். விழித்துக் கொண்டவுடன் விபூதி பிரசாதம் அளிப்பார். அதுவரை பக்தர்கள் காத்திருக்கவேண்டும். இந்தக் கண்கொள்ளாக் காட்சி என்றைக்காவது, எப்பொழுதாவது, எந்த ஊரிலாவது யார் வீட்டிலாவது நடக்கும். அவர்கள் புண்ணிய வான்கள் தாம். இவரது ஆகாரம் பருப்பு சொருபமே தெரியாதபடி கரைந்த பயத்தங்கஞ்சி தான் பெரும்பாலும். யார் வீட்டிலாவது திடீரென்று இட்லி, சாம்பார் கேட்பார். எப்போது எது கேட்பார் என்று தெரியாத நிலையில், அவற்றைத் தயாரித்து வைத்திருக்க வேண்டும். குறிப்பறிந்தாவது உடனே தயாரித்து அளிக்கவேண்டும். சிறிது நேரம் தவறினாலும் அல்லது தயக்கம் காட்டினாலும் வேண்டாம் என்று கூறி மறுத்து வீட்டைவிட்டு வெளியேறி விடுவாராம். இத்தகைய இவரது வினோதமான செயல்களுக்கு ஈடுகொடுத்து அந்தக் காலத்தில் பலன் பெற்றோர் அநேகர்.

இவர் செய்த சித்து விளையாட்டுகள் தனிக்கட்டுரையாகவே எழுதக்கூடிய அளவுக்கு மிகப்பலவாகும்.

காசியில் அவதூதராகத் திரிந்த இவரை கலெக்டர் பிராம்லிதுரை சவுக்கால் அடித்த அடி கலெக்டரின் மனைவி மக்கள் மீது பட்டது. பின்னர் கலெக்டர் கோபமுற்று இவரை ஓர் அறையில் தள்ளிப் பூட்டி சாவியை பத்திரமாக தன்னுடன் வைத்துக் கொண்டும் பூட்டிய பூட்டு அப்படியே இருக்க, சுவாமிகள் அறையை விட்டு வெளியேறி வாசலில் இருந்த கலெக்டர் முன் பிரசன்னமானார். அதைக்கண்ட கலெக்டர் திகைத்து மன்னிப்பு கேட்டு அவரது மகிமையைப் புரிந்து கொண்டு "பிராம்லி கட்டளை" என இன்றும் வழங்கும் ஓர் ஆராதனைக் கட்டளையை ஏற்படுத்தினார்.

1920ஆம் ஆண்டில் மதுரை ரயில்வே ஜங்ஷனில் ஒரு ஆங்கிலேய துரைக்கு முதல் வகுப்பில் ரிசர்வ் செய்யப்பட்ட ஓர் இருக்கையில் சுவாமிகள் போய் அமர, அந்த துரையின் புகாரின் பேரில் ஸ்டேஷன் மாஸ்டர் இவரை வலுக்கட்டாயமாகத் தூக்கி, கீழே இறக்கிவிட்டார். டிரைவரால் ரயிலை நகர்த்த முடியவில்லை. ஸ்டேஷன் மாஸ்டரும், துரையும் மன்னிப்பு கேட்டு சுவாமிகளை அதே இருக்கையில் அமர்த்தியவுடன் தான் ரயில் நகர்ந்தது.

இதுபோன்ற பலவித சித்து விளையாட்டுகள் விளையாடி நல்லவர்களை அனுக்கிரகித்தும் தீயவர்களைத் திருத்தியும், உண்மை பக்தி கொண்டவர்களுக்கு இறைவன் இறைவியின் தரிசனங்களைக் காண்பித்துக் கொடுத்தும் இப்பூவுலகில் 200 ஆண்டுகளுக்கு மேல் வாழ்ந்து மறைந்த குழந்தையானந்த சுவாமிகள் இன்றும் தனது ஜீவ சமாதியிலிருந்து பலருக்கு அருள்புரிவது கண்கூடு. ●

## இரண்டாவது மனமேது?

**- பல்கலைச் செல்வர் ரமணன்**

விருந்தெனவே சுவைதரினும் விழைந்திருக்குங் களிபலவும்
இருந்துயர்த்து மருங்கலையு மிணைந்திருக்கும் நண்பரையும்
வருந்துயரும் மகிழ்வலையும் வளைந்துசெலு மிளங்குறும்பும்
ஒரு முறைதான் காதலிப்பே னொருமனந்தான் மயங்கிடவே...!

அருந்திமகிழ் மதுவெனினு மமுதமெனு மருந்தெனினும்
கருங்குவளை விழியவளோ கழுத்தளவு நிதிக்குவையோ
திருந்திவரு முறவினரோ திரண்டுவருங் குடிபடையோ
ஒரு முறைதான் காதலிப்பே னொருமனந்தான் மயங்கிடவே...!

வருவதெலா மினித்திருந்தும் வயதுடனே கனிந்திருந்தும்
அருந்தவத்திற் றனித்திருக்கு மடியவனாய்ப் பணிந்திருந்தும்
பொருந்திவரு மறிவினையோ பொலிந்து வரு மிறைவனையோ
ஒருமுறைதான் காதலிப்பே னொருமனந்தான் மயங்கிடவே...!

# கொடுத்தோமா கெடுத்தோம்

புனிதன்

'இப்போது லட்சாதிபதியாய் இருக்கிறார்,' என்றதற்கு 'முன்பு என்னவாய் இருந்தார்?' என்று கேட்கப் போய் 'கோடீசுவராக இருந்தார்' என்று பதில் வந்ததாம். அந்தக் கதைதான் பரமசிவத்தின் கதை.

வேளச்சேரியில் எந்தவித அக்கு தொக்கும் இல்லாமல் ஓய்வு பெற்ற இந்த வயதில் தானும் தன் மனைவியு மாய் வாழும் பரமசிவத்தின் பிளாட்டைப் போய் எட்டிப் பார்க்கிறவர்கள், கொஞ்சம் அசந்துதான் போவார்கள். அவர்கள் இந்தப் பிளாட்டுக்குக் குடிபெயர்ந்தா, அல்லது கிரயம் பண்ணிக் கொண்டா வந்து சேர்ந்து வருடம்கூட ஆகவில்லை. அந்த பிளாட்டிலே இருக்கும் சோபாசெட், டிவி, ஃப்ரிஜ் ரகங்கள் பெரிய பங்களா வாசிகளின் அந்தஸ்தில் இருப்பவை.

ஆரோக்கியமான மனிதர். அவர் வயசுக்கு மீறிய வேகத்தோடு விஷ்க் விஷ்க் என்று நாலு தெரு வழியே வாக்கிங் போகும்போது, அத்தனை பேர் கண்களும் படும். அந்தத் தெருவாசிகளுக்கு அவர் 'வாக்கிங்' வரும் நேரம் அநேகமாய் அத்துபடி. மார்க்கெட் பக்கம் கூறு கட்டி விற்கும் காய்கறிகளைப் பார்த்துப் பார்த்து வாங்கிக் கொள்வதும் அந்த நேரம் தான். ஒருத்தரிடமே வாங்கி 'வாடிக்கை' பேர் வாங்குவதில் அவருக்குச் சம்மதமில்லை. மளிகை சமாசாரம் ஏன் கட்டிங்–ஷேவிங் விஷயங்களில் கூட அதே கொள்கை தான். அவர் வாடிக்கையைத் தவிர்த் ததில் உள்ளார்ந்த காரணம் ஒன்று இருந்தது. ஒரு நெருக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால், தன்பூர் வோத்திரம் பற்றி யெல்லாம் கேட்கத் தொடங்குவான். அது தெரிந்தால் அவமானம்.

மகா அடக்கமானவர், தானுண்டு தன் வேலையுண்டு என்று ஒதுங்கி யிருக்கும் பெரிய மனிதர் என்று அக்கம் பக்கத்தாரின் அனுமானங்களுக்கு ஆளாகியிருக்கும் இன்றைய பரம சிவத்தைப் பழைய பரமசிவமாய்க் கொஞ்சம்போல் கோடி காட்ட வேண்டி யிருக்கிறது.

சென்னை கிடங்குத் தெருவில் ஒரு மொத்த வியாபாரக் கடை (சொந்தம்), அடையாறில் ஒரு பங்களா, இந்தப் பக்கம் தண்டையார் பேட்டையில் நீண்ட காலத்துக்கு முன் வாங்கிப் போட்ட ஓர் அடுக்கு மாடி வீடு, சூளைப் பக்கம் பத்துக் குடித்தனத்துக்குத் தோதான ஒரு ஸ்டோர்ஸ், தவிர வீட்டு உபயோகத்துக்காக ஒரு கார், தனக்காக ஒரு பென்ஸ் கார்-இப்படி மானாவாரி சொத்துக்கு அதிபதியாய் இருந்தவர்தான் பழைய பரமசிவம்.

அவருடைய முழுச் சொத்து விவரமும் தெரியாத அரைகுறைகள், "மூணும் பொண் பிள்ளையாய்ப் போச்சு. அவர் இருந்த அந்தஸ்துக்கு ஆபஸ்ட்பரியிலேதான் பெண்ணுங் களுக்குக் கல்யாணம் வைச்சார். ஷேக் சின்ன மௌலானா நாதஸ்வரம், செம்மங்குடி கச்சேரி என்று அடிச்சுத் தூள் பறத்திட்டாரே! மாப்பிள்ளை மாருங்களுக்குக் காரோட சீர்வரிசை தான். அதுலயே சொத்தெல்லாம் போச்சு'' என்று சொல்வதுண்டு.

உண்மை அதுவன்று. பரமசிவத் துக்கு இருந்த சொத்தில் இதே சீரோடு மேலும் அரை டஜன் பெண்களுக்குக் கல்யாணம் செய்து வைத்திருக்கலாம். பின்னே? இருந்த சொத்தெல்லாம் காணாமல் போன மார்க்கம்தான் எது? அத்தனை பெரிய மொத்த வியாபாரக் கிடங்குத் தெரு பிஸினஸை நிறுத்தி விட்டு, அடையாறு பங்களாவை மார்வாடி ஒருவருக்குக் கொடுத்து விட்டு, குடித்தனத்துக்காக விட்டிருந்த வீடுகளைக் கூறு போட்டு விற்றுத் தொலைத்துவிட்டு, படாடோபச் செல வினங்களுக்கு ஈடுகொடுக்க முடியாமல் பதுங்கி வந்து நகரெல்லையில் ஓர் அறுநூற்றைம்பது சதுர அடி பிளாட்டில் முடங்கிக் கிடக்க வேண்டிய அவசியம் என்ன வந்தது?

இதற்கு அடிப்படைக் காரணம் அந்தத் தம்பதிக்கு இன்னமும் உறைக்காமல் போனாலும் அவர்கள் பேசுவதைக் கேட்டால் உங்களுக்குப் புரியக்கூடும்.

அன்றைய செய்தித்தாளைப் பிரித்து ஒரு பக்கத்தைத் தொட்ட பரம சிவத்தின் பார்வை, மேலே நகராமல் ஊன்றிப் போய் குரல் மட்டும் எதிரிலிருந்த மனைவி கோமதி பக்கம் பரவசமாய் வழிந்தது. "கோமு, இங்க பாரேன், குற்றால ஸீஸன் கொள்ளை போவுது. ஒரு ஸீஸன் தப்பினதுண்டா? திருநெல்வேலியில் ஸ்டார் ஓட்டல்ல தங்கி, அன்றாடம் குத்தாலத்துக்கு ட்ரிப் அடிப்பமே, எப்படி?''

"ஸீஸன்னு சொன்னா எனக் கென்னவோ ஊட்டி தாங்க ரொம்பப் பிடிச்சது. அப்படியே மைசூர், பெங்களூர். பொண்ணுங்களுக்கு டஜன் கணக்கிலே ரெடிமேட் துணி...''

"ஏன், உனக்கு மைசூர் சில்க் புடைவை எந்த ஸீசன்ல தப்புச்சு? அங்கேர்ந்து நந்தி ஹில்ஸ். ஏசி டாக்ஸிதான்.''

"அங்கேர்ந்து ரயில்ல திரும்பலாம்னா கேப்பீங்களா... பிளேன்தான்..."

"ப்ளேன் நமக்குப் புதுசா என்ன? ஸ்டேட்ஸ்க்கு சும்மா ஜாலி டூர் இரண்டு முறை போனமே! என்னதான் சொல்லு, சிங்கப்பூர் டீஸென்ஸி வராதும்மா. இத்தனைக்கும் மலேஷியாக்காரன் செத்த எலியைத் தூக்கி யெறியறாப்ல சிங்கப்பூரைத் தூக்கி யெறிஞ்சது அறுபத்தஞ்சிலதான் தெரியுமோ?"

அந்தக் கிழத் தம்பதிக்குப் பொழுது போக்கே இத்தகைய மலரும் நினைவுகள் தாம்! இந்த நினைவுகள் அன்றைய நிஜங்களாய் இருந்த போது சுருண்டவை தாம் அவரது சொத்துகள்.

"ஹும்..." ஒரு பெருமுச்சை நெட்டித் தள்ளினாள் கோமதி. "முன்னெயெல்லாம் நினைக்கக்கிட்டா பம்பாய் எங்கே, கல்கத்தா எங்கே, டில்லி எங்கேன்னு காசைப் பார்க்காம ப்ளேன்லயே கூட்டிப் போய் ஸ்டார் ஒட்டல்ல தங்கி அப்படியொரு டூர் போனோம்... இப்ப... இங்க இருக்கிற மைசூர் தசராவுக்கும் போறதுக்குக் கூட வக்கில்லாமப் போச்சு."

"ஆமா... பெரிய மாப்பிள்ளை கொடைக்கானல்ல ஸ்டெர்லிங் வாங்கியிருக்கிறாராமே! கேட்டுப் பார்ப்பமா?" பரமசிவம் மெல்ல அடிபோட்டார்.

"அதெப்படிங்க? அவங்களுக்கு வாங்கினதை நமக்கு விட்டுத் தருவாங்க? அதுகூட அவங்களோடதோ, கம்பெனியோடதோ... கொஞ்சம் இருங்க. மல்லிகா இன்னிக்கு– புதன்கிழமைதானே இன்னிக்கு – வர்றேன்னு சொல்லியிருந்தா. எப்ப வர்றான்னு போன்ல கேட்டுக்கறேன். சாப்பாட்டுக்கே வந்தா நல்லாருக்கும். வெங்காய சாம்பாரும் உருளைக் கிழங்கு பொடிமாசும் ரொம்பப் பிடிக்கும் அவளுக்கு..."

அவள் போன் செய்துவிட்டு வந்தாள்.

"என்ன..என்ன சொன்னாள் அவள்?"



"நான்தான் சொன்னேனே! இங்க வந்துகினே இருக்காளாம். டிரைவரால தான் லேட்டாம். இல்லாட்டா முன்னேயே வந்திருப்பாளாம்.. நீங்க பக்கத்துல அந்த வடக்கத்தியான் கடைக்குப் போய் ரஸமலாய், அம்பது கிராம் மிக்சர் மட்டும் வாங்கி வந்துடுங்க...."

அவர் சட்டையை மாட்டிக்கொண்டே பர்ஸைத் திறந்து பார்த்து முகம் சுூம்பினார். "பார்த்தியா? அந்தப் பழைய பேப்பர் கட்டி வச்சிருக்கே அதை எடைக்குப் போடணும் போடணும்னு. மறந்து போவுது. நாளைக்காவது ஞாபகப்படுத்து. ஏன் கோமு! உனக்கும் ரஸமலாய்னா ரொம்பப் பிடிக்குமே! வாங்கி வரவா?" தயக்கத்துடன் கேட்டார்.

"வேணாங்க. இந்த மாதிரி வேண்டாத ஆசைக்குத் தூண்டாதீங்க. இப்பதான் ஷுகர் கண்ட்ரோலுக்கு வந்திருக்கிறதா டாக்டர் சொன்னார். உங்க பேச்சைக் கேட்டா அவ்வளவு தான். பக்கத்து இலைக்குப் பாயசம் கிறாப்ல கேக்கறீங்களாக்கும்? அதெல்லாம் வேணாம். மல்லிகாவுக்கு மட்டும் போதும், வாங்கிவாங்க..."

"இங்க நிலைமையும் மல்லிகாவுக்கு மட்டும்தான் வாங்கறாப்ல இருக்கு..." என்று பர்ஸைப் பார்வையிட்டுக் கொண்டே சொன்னவர், போகிற போக்கில் இறங்கிய குரலில் சொன்னார். "கோமு! உம் பொண்ணுகிட்ட ஜாடை மாடையாச் சொல்லிப் பாரு. கொஞ்சம் பணத்துக்குக் கஷ்டமா இருக்குன்னு. எனக்கு எதிர்ல வேணாம். நான் வெளிய போயிடறேன். அப்ப நைஸாக் கேட்டுப் பாரு. அவதான் உனக்குச் செல்லப் பொண்ணாச்சே!" என்று சொல்லிவிட்டு மகளுக்காக ஸ்வீட் வாங்கி வரப் போனார்.

சொன்னபடி மல்லிகா ஒரு மணி நேரத்துக்குள் வந்து சேர்ந்தாள். மயிலாப்பூரில் இருப்பவள். கணவர் ஐ.ஏ.எஸ். அரசு குடியிருப்பு. ஆள் அம்பு குறைவில்லை.

கொஞ்சம் இரட்டை நாடி உடம்பு.

"மல்லிகா... வாம்மா வா.. குழந்தைகளைக் கூட்டி வரலையா?" என்று வாசலுக்கு வந்து, வெளியில் நிற்கும் அவள் காரை எட்டிப் பார்த்துவிட்டு உபசரிப்பாய் அழைத்தாள்.

"ஆமா.. உனக்கு இன்னும் அவங்க குழந்தைகதான் போ. பெரியவன் ஈவினிங் காலேஜ் போறான். அடுத்தவன் ப்ளஸ் டூ கம்ப்யூட்டர் கிளாஸ் போறான். பாட்டி வீட்ல சீராட



கொண்டு மகளுக்குப் பரிமாறிடத் தொடங்கினாள்.

"ஆயிரம்தான் சொல்லு, உன் கை மணம், எங்க யாருக்குமே வரலையம்மா. அப்பா ரொம்பக் கொடுத்து வச்சவர்." அம்மாவின் ஜாடைப் பேச்சை அவள் கண்டுகொள்வதாகவே தெரியவில்லை. வெங்காய சாம்பாரைத் தளர விட்டுப் பிசைந்தாள். சரிக்குச் சரியாய் உருளைக்கிழங்கு பொடி மாசைச் சேர்த்துக் கொண்டு உருட்டி உள்ளுக்குத் தள்ளினாள்.

சாப்பாட்டுக்கிடையே பரமசிவம் வந்தார். "வாம்மா மல்லிகா! வந்து ரொம்ப நேரமாச்சா? இங்க பக்கத்துல தான் ஃப்ரண்ட் ஒருத்தரைப் பார்க்கப் போயிருந்தேன். கொஞ்சம் பணம் தேவைப்பட்டது" தன் பங்குக்கு அவரும் முடையைக் குறிப்பாலுணர்த்தினார்.

மல்லிகாவோ மாறாக, "எது எப்படின்னாலும் நீங்க வேளைக்குச் சாப்பிடணும்ப்பா. உங்களுக்குத்தான் ஷுகர் இருக்கே! அப்புறம் வெட வெடன்னு வந்துடும். தெரியுமா? வந்து உட்காருங்க. என்னமோ மசமசன்னு நிக்கறியே? அப்பாவுக்குச் சாப்பாடு போடும்மா. பாரு, இப்பவே ஒரு மாதிரியா இருக்காரு" என்று மொட்டை அதிகாரம் செய்தாள்.

கோமதியம்மா இயந்திர கதியில் பரிமாற, அவரும் சாப்பிட்டு முடித்தார்.

அதற்குப் பிறகு பணத்தைத் தொடாத பொது உரையாடல் கிட்டத்தட்ட ஒரு மணி நேரத்துக்கு நீண்டது. சற்றுமுன் அப்பா வாங்கி வந்த ரஸமலாயையும் மிக்சரையும் ருசித்துவிட்டு விடைபெற்றாள்.

பகலுணவுக்குப் பிறகு பத்து நிமிடமாவது இருவருக்கும் ஒரு குட்டித் தூக்கம் போடாவிட்டால் தலைவலி வந்துவிடும். படுக்கையில் முதலில் சாய்ந்தவர் பரமசிவம்தான். அருகில் குத்துக்காலிட்டு அமர்ந்து கொண்டு அவர் முகத்தையே பரிதாபமாய் ஊடுருவினாள் கோமதி.

வர்றதுக்கு அவங்களுக்கு ஏது நேரம்? எங்கே அப்பாவைக் காணோம்?" தன் பெரிய சரீரத்தை ஆயாசமாக சோபாவுக்குக் கொடுத்தாள்.

"மாப்பிள்ளை எப்படி இருக்கார்?"

"மாசத்துல பத்துநாள் வீட்ல தங்கினா அதிகம். எப்பப்பாரு, கேம்ப், கேம்ப்ன்னு வாட்டி எடுக்கிறாங்க. எனக்கு சலிப்பாப் போச்சு. செலவைச் சமாளிக்க முடியலைம்மா!" என்று அலுத்துக் கொண்டவள், "சரி சரி எனக்குப் பசிக்குது. உள்ளே நுழைஞ்சப்பவே வெங்காய சாம்பார் வாசனை தூக்கிச்சு. உருளைக் கிழங்கு பொடிமாஸ்தானே? இன்னிக்கு ஒரு வெட்டு வெட்டப் போறேன். கொண்டா கொண்டா" என்று தானாகத் தட்டத்தைக் கழுவி எடுத்து டைனிங்டேபிளில் வைத்து அமர்ந்தாள்.

"அதென்னம்மா உங்களுக்குக்கூட சமாளிக்க முடியாத செலவு?" தன் கோரிக்கை நோக்கிப் பேச்சுக்கு இழுத்தாள் கோமதி.

"அதை ஏன் கேட்கிற போ? பெரியவன் காலேஜுக்குப் போகக் கார் தனியா வேணும்னு கேட்டான். இவரு கார் வாங்கித் தர்ற மாதிரி இல்லைன்னு பைக் வாங்கிக்கோன்னார். அவனே போய் புல்லட் வாங்கினு பணத்தைக் கட்டுங்கறான். ஒரு வழியா பணத்தைப் புரட்டிக் கட்டினா... சின்னவன், 'அவனுக்கு மட்டும் புல்லட், எனக்கு சாதா பைக்கூட இல்லையான்னு அடம். இதுக்கு நடுவில் லேடீஸ் கிளப் பிரண்ட் ஒருத்தி வீட்டுக்குப் போயிருந்தப்ப, அவ வீட்ல இருந்த ஃபாரின் ஸ்டீரியோ செட் ஒண்ணைப் பார்த்துட்டு, வாயிருக்க மாட்டாம ரொம்ப நல்லாயிருக்குன்னு சொன்ன பாவம், அதே மாதிரி ஒரு செட் வாங்கி அனுப்பிச்சிட்டு, பணத்தை ஒரு வாரத்துக்குள்ள கொடுத்தாப் போதும்னு சொல்லிட்டுப் போறா. நமக்கு இருக்கிற நெருக்கடியை அவகிட்ட சொன்னா, அவர் கௌரவம் என்ன ஆவது? இப்படியும் போக முடிலை, அப்படியும் போகமுடியலை. கிடந்து முழி பிதுங்குது போ. உன் பாடு எவ்வளவோ தேவலைம்மா..."

"என் பாடுதானே? ஆமாமா... எவ்வளவோ தேவலை. எனக்கென்ன குறைச்சல்?" என்று விரக்தி நிறைந்த அளவில் கோமதி பேச்சை நிறுத்திக்

ஒரு பெருமூச்சுக்குப் பின், "என்னமோ உன் பெரிய பெண் நம்மகிட்ட உயிரையே வச்சிருக்கிறதா சொல்லியே? கேட்டுனுதானே இருந்தே? பணம் தேவைப்பட்டது அதுக்காக ஒரு ஃப்ரெண்டைப் பார்க்கப் போனேன்னு பச்சையாத்தான் சொன்னேன்? 'ஏம்ப்பா, உங்களுக்கு அப்படியொரு பணமுடையா'ன்னு ஒரு வார்த்தை கேட்டாளா பார்த்தியா?" என்றார் அவர்.

"வந்ததும் வராததுமா சொன்னாளே, அவளுக்கே இப்ப ஏகப்பட்ட பண முடையாம்" என்று சொன்ன அவள் நெருக்கடி குறித்து அடுக்கியதை யெல்லாம் பொறுமையோடு எடுத்துரைத்துவிட்டு, "பெண்ணைப் பெத்த தோஷத்துக்கு நாமதான் செய்ய வேண்டியதையெல்லாம் செய்யணும். அதுக்குத் திருப்பி அவ செய்யணும்னு எதிர்பார்க்கறது எத்தனை மடத்தனம்னு எனக்கு இப்ப புரிஞ்சு போச்சுங்க. எல்லாத்தையும் தோத்துட்டு இப்படி நாம்ப அம்போன்னு நிக்கறமே!" என்று நன்னிரக்க அழுகை பாய்ச்சினாள் அவள்.

மனைவியை எப்படித் தேற்றுவது என்று தெரியாமல் சற்றுத் தடுமாறினார் பரமசிவம். பிறகு மனைவியைப் பிரியமாகத் தட்டிக் கொடுத்துக் கண்ணீரைத் துடைத்து, "பாலுக்குச் சர்க்கரையில்லைன்னு அவளுக்குக் குறை. கூழுக்கு உப்பில்லைன்னு நமக்குக் கவலை. இரண்டும் ஒரு மாதிரிதானேன்னு சமாதானம் ஆகிக்கிறதுதான் புத்திசாலித்தனம். பெரியவ கோடீசுவரியா இருந்தாலும் ஹவுஸ் ஒய்ஃப்தான். அடுத்தவ ஜெயந்தி உத்தியோகம் பார்க்கிறா. புருஷனும் சென்ட்ரல் கவர்ன்மென்ட்ல வேலை பார்க்கிறார். அடுத்த வாரம் அவ வருவாதானே? அவளைக் கேட்டுப் பார்ப்பம். அடியே, ஒரு கதவு மூடினா பகவான் இன்னொரு கதவைத் திறப்பான்னு சொல்லுவாங்க. நீ ஒண்ணும் இடிஞ்சு போகத் தேவையில்லை. நிம்மதியாக் கொஞ்சம் தலை சாய்க்க" என்று படுக்க வைத்தார்.

அடுத்த வாரத்தில் ஒரு நாள் இரண்டாவது மகள் ஜெயந்தி போன் செய்துவிட்டுத்தான் வீட்டுக்கு வந்திருந்தாள்.

ஜெயந்தி எப்போது வந்தாலும் அம்மாவுக்குப் பிடிக்கும் என்று திருவல்லிக்கேணி கோயில் கடையில் தட்டை, முறுக்கு–அப்படியே வாயில் போட்டால் கரையும்–எல்லாம் வாங்கிக் கொண்டு வருவாள். இன்றும் வாங்கி வந்திருந்தாள்.

பெரியவள் போல் இல்லை இவள். உத்தியோகம் பார்க்கிறவளாய் இருந்தாலும் அம்மா வீட்டுக்கு வந்தால் அம்மாவை அடுப்படி வேலைக்கு அனுமதிக்க மாட்டாள். தானே வீட்டு வேலைகளை எடுத்துப் போட்டுக் கொண்டு பற்றுத் துலக்குவதி லிருந்து பலகாரம் செய்வது வரை அத்தனை வேலைகளையும் செய்து முடிப்பாள்.

'ஜெயந்தி! ஏன் அங்கே கிடக்கிற ஏனங்களையெல்லாம் வாரிப் போட்டுனு கழுவிட்டிருக்கே? பாவம் நீ, உத்தியோகத்துக்கும் போயிட்டு, வீட்டு வேலையும் செய்துட்டு... இப்படி வந்து உட்காரு ஜெயந்தி! அப்பா உன் கூட ஏதோ பேசணுமாம்" என்று மகளின் கையைப் பிடித்து அழைத்து வந்து ஹாலிலிருந்த சோபாவில் பரமசிவத்துக்கு எதிரிலே உட்கார வைத்தாள்.

"ஜெயந்தி! மாப்பிள்ளை எப்படி இருக்கார்? பேரப் புள்ளைங்களை மாசத்துக்கு ஒரு முறையாவது கூட்டி வந்து காட்டும்மா..."என்று இறங்கிய குரலில் சற்று கெஞ்சலாய்க் கேட்டுக் கொண்டார் பரமசிவம்.

"ஏதாவது லீவுலே கூட்டி வரேம்ப்பா.. போன வாரம் மல்லிகா வந்தா இல்லையா? அப்பா எங்கேயோ வெளிலபோயிருந்ததாச் சொன்னா...."

பரமசிவம் சந்தர்ப்பம் கிடைத்த தென்று குறுக்கே பாய்ந்தார். "எங்கேயோ போகலைம்மா... எங்கே போனேன்னு அவளண்டை சொன்னேனே!"

கணவரைக் கண்டிக்கும் தோரணையில், "நீங்க ஏங்க அதையெல்லாம் போய் இவளண்ட சொல்லிக்கிட்டு....?" என்று அடக்கினாள்.

ஜெயந்தி முகம் சுருங்கி, "என்னம்மா... என்னமோ உங்களுக்குள்ள பூடகமாப் பேசிக்கிட்டு? என்ன விஷயம் சொல்லுங்களேன்" என்று அதட்டினாள்.

"எங்க கஷ்டம் எங்களோடவே இருந்துட்டுப் போவட்டும். இதையெல்லாம் போய்ப் பெரிசா பொண்ணுங்ககிட்ட சொல்லுவானேன். அப்புறம் அவங்க என்ன ஏதுன்னுகூடக் கேட்டுக்காமப் போயிட்டாங்கன்னு நொந்துக்குவானேன்?" லேசான விசும்பல் காட்டினாள் கோமதியம்மாள்.

"நான்தான் இப்ப என்ன ஏதுன்னு கேக்கறன் இல்லையா? என்கிட்ட சொல்றதுக்கென்ன?" என்று உலுக்கினாள் மகள்.

"நான் சொல்றேம்மா.." தந்தை முந்திக்கொண்டார். "இப்ப எனக்கு பாங்க் பாலன்ஸ் எதுவும் இல்லை. ஆசைப்பட்டதைச் செஞ்சுக்கிறதுக்கு இல்லைன்னாலும்... ஓர் அவசரச் செலவுக்கு அஞ்சாயிரம் பத்தாயிரம் இருப்பில் இருந்தா நல்லாயிருக்கும். அதைத்தான் ஜாடை மாடையாச் சொன்னோம் உங்கக்காகிட்ட. அதை அவ காதுலயே வாங்கிக்கல" அந்த அவளில் ஓர் அழுத்தம் கொடுத்துப் பேசிவிட்டு, மகள் முகத்தைப் படிக்க முயன்றார் அவர்.

அது துடைத்து வைத்தது போலிருந்தது. சற்றுப் பொறுத்து உலர்ந்த குரலில் சொன்னாள். "நானும் சம்பாதிக்கிறது மெய்தான். அதுக்காக நான் என் இஷ்டப்படி செலவு பண்ண முடியுமா? அப்படியும் நான் தனியாக் கணக்கு வச்சிட்டிருந்தாலும், அவருக்குத் தெரியாம எதுவும் செய்யறதுக்கில்லப்பா. எனக்கு எப்பவும் உங்க நினைப்புதான். இப்பத்தான் பாருங்க. கே.கே.நகர்ல ப்ளாட் வாங்க அட்வான்ஸ் கட்டணும்னு பேங்கிலே இருக்கிற பாலன்ஸையெல்லாம் சுரண்டித் தரச்சொல்லி வாங்கிப் போனாரு... இல்லாட்டா, இப்படி நீங்க

சொல்லிக் கேக்கறவரைக்குமா காத்துட்டிருப்பேன்? என்னை உங்களுக்குத் தெரியாதா?''

பரமசிவம் தம்பதி அவள் முதுகுப்புறம் இருந்ததால் கூம்பிய முகத்துடன் ஒருவரைப் பார்த்து ஒருவர் தலையசைத்துக் கொண்டனர்.

அவளுக்கு உணவு படைக்கும் போதும் சரி, அவளுக்குத் தலைவாரி விட்டபோதும் சரி. தனது மனம் காயப்பட்டது வெளியே தெரியாமல் மறைக்க, கோமதி வெகு பாடுபட்டாள். பரமசிவம் தனது வழக்கமான டெக்னிக்படி கடைத் தெருப்பக்கம் கொஞ்சம் வேலை இருப்பதாய்ச் சொல்லிக்கொண்டு வெளியேறி விட்டார். ஜெயந்தி வெளியேறிய பிறகே திரும்பினார்.

"பார்த்தாச்சுங்க. எல்லாத்தையும் பார்த்தாச்சு. என்னமோ உங்க இரண்டாவது பொண்ணு சும்மா அப்படிக் கோடி காட்டினா கொண்டாந்து கொட்டுவானு சொன்னீங்களே... என்னமாக் கொட்டிட்டுப் போயிட்டா பார்த்தீங்களா? ஒருத்தன் கையில பிடிச்சுக் கொடுத்தாச்சுன்னா... அத்தோட கத்தரிச்சு விட்டுட வேண்டியதுதான்னு சொல்லாமச் சொல்லிட்டுப் போயிட்டா பார்த்தீங்களா? மறந்துடுங்க. எல்லாத்தையும் மறந்துடுங்க. இனிமே உங்களுக்கு நான், எனக்கு நீங்க'' அவள் மூக்கை உறிஞ்சிக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

பரமசிவம் நினைத்துக் கொண்டவராய், "நம்ம கௌரிகூட வந்து நாளாச்சுல்ல?'' என்று கேட்டார்.

கௌரி அவர்களுடைய மூன்றாவது பெண். மூன்றாவது பெண்ணுக்கு வரன் பார்க்கும்போது, முதல் இரண்டு பெண்களுக்குச் செய்த அளவுக்குச் சீர்செய்ய முடியாத நிலைமைக்குத் தள்ளப்பட்டிருந்தார் பரமசிவம், இருந் தாலும் வாய்த்த மாப்பிள்ளை தங்க மானவர். பெரிய குடும்பம். இவர்தான் தலைப் பிள்ளை. தாம்பரம் பக்கம் சின்னப் பட்டறை வைத்திருந்தார். எல்எம்இ படிப்பு. தனியாய் இருந்தால் அவரது சம்பாதனை தலைக்குமேல் வெள்ளம்தான். கல்யாணத்துக்கு நிற்கும் தங்கைகள் இருவர், கல்லூரி எட்டும் தம்பி, பெற்றவர்கள். எல்லாமே அவர் தலையில். இத்தனைக்கும் ஈடுகொடுத்து முகம் சுணங்காமல் இருக்கும் மூன்றாவது மகள் கௌரியை நினைத்தாலே நெகிழ்வார் பரமசிவம்.

"பாவங்க கௌரி. மூணு பேர்ல அவதான் ரொம்ப புத்திசாலி. அவளுக்குத் தான் சரியானபடி சீர் செய்யலை. எனக்கு அது உறுத்திட்டே இருக்கு'' குறைபட்டுக் கொள்வாள் கோமதியம்மாள்.

அப்போதுதான் பிளாட்டுக்கு வாட்டர் டாக்ஸ், வேறு ஏதோ டிமாண்ட் நோட்டீஸ் எல்லாம் வந்து சேர்ந்தது. என்னத்தை வைத்து எப்படிச் சமாளிப்பது என்று தடுமாறிக் கொண்டிருந்த நேரம்.

அழைப்பு மணியோசை கேட்டது. அடுத்து என்ன ஆபத்தோ என்று கதவைத் திறந்தாள். கௌரி!

அம்மாவைப் பார்த்ததும் அப்படியே கட்டிப் பிடித்துக் கொண்டாள் அவள்.

"என் ராசாத்தி, உன்னைத்தாண்டி நினைச்சிட்டிருந்தேன். வந்து பார்க் கணும்னா எங்களுக்குத் தள்ளலே. தனியாவா வந்தே?''

"எனக்கென்ன பயம்? அவரும் வரணும்னுதான் சொல்லிட்டிருந்தார் கடைசி நேரத்துல அவசரமா முடிச்சுத் தரவேண்டிய வேலை வந்துட்டது. அப்பா எங்க இருக்கார்? இப்பவும் கால்ல சக்கரம் கட்டிட்டு சுத்தறாரா?'' சிரித்துக் கொண்டே கேட்ட கௌரி, படுக்கையறைப் பக்கம் எட்டிப் பார்க்கவும் அவரும் வெளியில் வரவும் சரியாக இருந்தது.

அவரும் பதிலுக்குச் சிரித்துக் கொண்டே, "வசதி இருந்தா சுத்தலாம் தான். இங்கதான் அவசியத்துக்கே வழியில்லாம இருக்கே...'' என்றார்.

கோமதியம்மாள் கோபத்தோடு, "ஏங்க... இப்பத்தான் பொண்ணு உள்ள நுழைஞ்சா. அவகிட்ட போய் நம்ம பஞ்சப்பாட்டைப் பாடணுமா?'' என்றாள்.

"என்னம்மா நீ, என்னை அன்னியம் மாதிரி வச்சுப் பேசறியே, நல்லாருக்கா? நீங்க வாங்கப்பா'' என்று பரமசிவத்துக் காகப் பரிந்தாள்.

மற்ற இரண்டு மகள்களையும்போல, ஏன் அதற்கும் ஒரு படி மேலாகவே தாய் வீட்டில் கௌரி தங்கினாள்.

புறப்படுகையில் இருவரையும் இணைத்து வைத்துக்கொண்டு தனது கைப்பையைத் திறந்து புத்தம் புது ஐம்பது ரூபாய் நோட்டுக் கற்றை யொன்றை நீட்டினாள். "தப்பா நினைக் காதீங்கப்பா. பிளாட் வச்சிட்டிருக் கிறவங்களுக்கு இப்பத்தான் வாட்டர் டாக்ஸ் அது இதுன்னு நோட்டீஸ் வருதுன்னு பேசிக்கிட்டாங்க. உங்களுக்கு வர்ற வட்டிப் பணம் வீட்டுச் செலவுக்குச் சரிக்கட்டினு போவுதுன்னு அம்மா சொன்னாங்க. இப்படி அதிகப்படி செலவுக்குப் பணம் இருக்குமா, தெரியலை. அதான்...''

"எப்படி... எப்படிம்மா உன் கஷ்டத்துல இத்தனை பணம்? உங்க வீட்டுக்காரருக்குத் தெரியுமா?'' பணம் வாங்கத் தயங்கி கோமதி கேட்டாள்.

"சிறுவாடு சேர்க்கறதுன்னாவே மிச்சம் பிடிச்சு வைக்கறதுன்னு தானேம்மா அர்த்தம்? நான் திருடலை, பொய் சொல்லலை. செலவுக்குக் கொடுக்கிற பணத்துல சிக்கனம் பிடிச்சுச் சேர்த்து வச்சது, சமயத்துக்கு உதவும்னு. உங்களுக்கு உதவறதுக்கு இது நல்ல சந்தர்ப்பமா எனக்குத் தோணுச்சு. கொடுத்தேன். எனக்கு சேவிங்ஸ் கணக்கு இருக்கிறது அவருக்குத் தெரியும். மகளே உன் சமர்த்துன்னு அதுக்காக அவர் தட்டிக் கொடுத்திருக்கிறாரே தவிர ஏதும் கண்டுக்கிறதில்லை. என் பணம் வேற, உங்க பணம் வேறயாம்மா? சொல்லுங்கப்பா...''

"கௌரி! உன் கருத்து எங்களுக்கு இருந்திருந்தா... நாங்க இன்னிக்கும் சாரும் சேருமாவே இருந்திருப்

போம்மா...'' குரல் தழுதழுக்கச் சொல்லிப் பணத்தை வாங்கிக் கொண்டு, 'நன்றி' சொன்னார் அவர்.

வசதிக் குறைவானவளே பெற்றவர்களிடம் இத்தனை பரிவும் பாசமும் காட்டி ஒத்தாசை செய்யும்போது, அத்தனை மேட்டுக்குடி வாழ்வில் திளைக்கும் மல்லிகாவும் ஜெயந்தியும் எப்படித் தங்களை ஒதுக்கிவிட்டுப் போனார்கள் என்பது குறித்து பரமசிவம் தம்பதி பொங்கிப் பொருமி இறுதியில் விரக்தியில் வீழ்ந்து மாய்ந்து போனார்கள்.

இந்த நிகழ்ச்சி முடிந்து அடுத்து வந்த மாத முதல் ஞாயிற்றுக்கிழமை.

நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலையில் உள்ள ஒரு நட்சத்திர ஒட்டல். கௌரி கல்யாணம் முடிந்த கையோடு மூத்தவள் மல்லிகா. தங்கைகளிடம் போட்டாள் ஒரு நிபந்தனை. 'இத பாருங்க. இனிமே ஒவ்வொரு மாசமும் முதல் ஞாயிற்றுக் கிழமை நாம மூணு பேரும் ஒண்ணா சேர்வோம். வேற உபத்திரவம் இல்லாம தனியா ஏதாவது ஒட்டல்ல கூடுவோம். சாப்பிடுவோம். பேசுவோம். பிரிவோம். நான் நேரம் குறிச்சு என் கார்ல கூட்டி வருவேன். அந்த நாளை ஃப்ரீயா வச்சுக்குங்க'' என்று விதித்து, அதன்படியே இந்த நாளில் கூடியிருந்தார்கள்.

போன மாத முதல் ஞாயிற்றுக் கிழமை பேசித் திட்டமிட்டது எப்படி அமல் நடத்தப்பட்டது என்பது குறித்து இன்று விவாதிக்கப்பட்டது.

மல்லிகாதான் முதலில் பேசினாள்: "ஏன் கௌரி, அப்பா அம்மா என்னைப் பத்திக் கன்னா பின்னான்னு திட்டியிருப் பாங்களே!'' என்றாள்.

"சேச்சே... அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை. உங்களைப் பத்தி எதுவுமே பேசலக்கா. நம்ம கஷ்டம் நம்மளோட இருக்கட்டும்னு ரொம்பத் தான் நொந்து போய்ப் பேசினாங்க. அதைக் கேட்டப்ப அழுகை வந்துடுச்சு எனக்கு. தெரியுமா?'' நெகிழ்ந்த குரலில் கூறினாள் கௌரி.

அக்காமார்கள் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து நமட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டார்கள். குறுகுறு வென்று பார்த்துக்கொண்டிருந்த கௌரிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "எனக்குப் புரியலை அக்கா! அப்பா பணமுடைன்னு உங்ககிட்ட சொன்னாரா இல்லையா? நீங்களே டைரக்டாக் கொடுத்திருக் கலாமில்லையா? எதுக்கு என் கையில கொடுத்து, என்னைக் கொண்டு போய்க் கொடுக்கச் சொன்னீங்க? இதுல நான் ஏதோ சிறுவாடு சேர்த்து வைச்சுக் கொடுத்தாப்ல டிராமா போட வச்சிங்க. ஏன். எதுக்குடி இப்படி? உங்க மேல அப்பா அம்மாவுக்கு எத்தனை வருத்தமா இருக்கும்?''

"பரவாயில்ல கௌரி! அதனால நாங்க ஒண்ணும் கெட்டுப் போக மாட்டோம்'' என்று முன்வந்தாள் ஜெயந்தி. "நாங்க நினைச்சிருந்தா ஐயாயிரம் என்ன, பத்தாயிரம்கூட கொடுக்கலாம்தான். ஆனா... அப்படிக் கொடுத்தா ஷுகர் பேஷண்டுக்கு ஸ்வீட்ஸாக் கொடுத்த கதை ஆயிடும். புரியலையா? மூன்று தலை முறைக்கு உக்காந்து சாப்பிடற அளவுக்குச் சொத்து சேர்த்து வச்சிருந்தார் அப்பா. அத்தனையும் நாம் மூணு பேரையும் கல்யாணம் பண்ணிக் கொடுத்து சீர் செஞ்சதால மட்டுமா கரைஞ்சு போச்சு? இல்லை... வெளிநாடு உள்நாடு இப்படி சகட்டுமேனிக்கு ஜாலி டூர் போயே அழிச்சுட்டார். இப்பவும் அவருக்குக் கையில காசு இல்லாததால்தான் அடங்கி ஒடுங்கி உட்கார்ந்திருக்கார். நாங்க அவருக்குக் கேட்ட பணத்தைத் தந்து ருசி காட்டிட்டோம்னு வச்சுக்க. உடனே டூர் கிளம்பிடுவார். திரும்பத் திரும்பக் கேப்பார். எங்களாலதான் கொடுக்க வசதி இருக்கே! நாங்க அவர் முகத்தில் அடிச்சாப்ல நிர்தாட்சண்யமா நடந்துட்டா... எங்களை அவர் வெறுத்தாலும் பரவாயில்ல. அவங்க உருப்படணும் கௌரி...''

"அப்ப நான் கொடுத்திருக்கேனே. அது அவரைக் கெடுத்துடாதா?''

"நிச்சயமாக் கெடுக்காது. அதான் நீ செலவுல சிக்கனப்படுத்திச் சிறுவாடு சேர்த்துள்ளதுன்னு சொல்லிட்டியே! கொஞ்சமாவது உறைக்காதா? தவிர, இப்ப நிஜமாவே அவருக்கு நெருக்கடி நிலை. இந்த நேரத்துல நாங்க வேடிக்கை பார்த்துட்டு இருக்க முடியுமா? அதான் உன் மூலமா ஒத்தாசை செய்தோம். இது ரகசியமாவே இருக்கட்டும். அடுத்தவங்க யாருக்கும் தெரிய வேணாம்'' அந்த மாத முதல் ஞாயிறு தீர்மானத்தைப் பெரியவள் மல்லிகா முடித்து வைத்தாள். ●

## அழகு மகள்

**இளங்கம்பன்**



காணுகின்ற இடத்திலெலாம்
அழகு மகள் சிரிப்பு!
கன்னியவள் வீசுகின்ற
காந்தவலை விரிப்பு!
பேணுமவள் நம்மனத்தை
இட்டிடுவாள் கொள்ளை
பெண்ணவள்தான் தோன்றாத
இடமும் எங்கும் இல்லை

ஓசையிலாக் குளக்கரையில்
ஓதிடும்புல் தரையில்
ஒலிஎழுப்பி ஓடிவரும்
ஓடைதரும் நுரையில்
ஆசைமுத்தம் அளிக்கவரும்
ஆழியதன் அலையில்
அசையாமல் நலங் கூட்டும்
ஆன்ற பச்சை மலையில்

அவள் அமர்ந்தே
சிரித்திடுவாள்
ஆமதுவே உண்மை!
அணுவினிலும் அணுஆவாள்
அது அவளின் வன்மை
புவனமெலாம் பூத்திருக்கும்
பூவையவள் ஆட்சி
புகல்வதற்கும் எளியதுவோ?
ஆம் அதனின் மாட்சி

# புதுச் சேலை

ஹம்சா தனகோபால்

சுமதி கோலஇழைகளை இணைத்துவிட்டு நிமிர்கிறாள். யதேச்சையாய்ப் போன அவள் பார்வையில் எதிர்வீட்டு வாலிபன். அவளையே பார்த்திருக்கிறான். சே! என்ன ஜென்மம்! அவள் வெளியே என்று வந்துவிட்டால் எப்போதும் பார்வையால் கொத்தித் தின்பதா? கிழிந்த சேலை அவள் சோளியை மறைக்காமல்... தெய்வமே.... பாவாடை தெரியும் கிழிசல். எப்படி மறைத்துக் கட்டினாலும் கிழிசல்கள் முழுதும் மறையவில்லை. எத்தனை முறை தைப்பது? தையலுக்கு அப்பாற்பட்டு சேலை நைந்து விட்டிருந்தது.

உள்ளே வந்து கதவடைக்கிறாள். இன்று அவள் கணவன் வீடு வரும் நாள். அவன் ஞாயிறுதோறும் வருகையில் ஒரு பண்டிகை போலத் தான் அவளுக்கு. அவள் குழந்தை திவ்யாவிற்கும் அப்பாவைப் பார்ப்பதில் கொள்ளை விருப்பம். எல்லா வீடுகளில் கணவன்மார்கள் நித்தம் அலுவலகம் போய் வருவது என்றால், இவளுக்கோ வாரம் ஒருமுறைதான் அந்த வாய்ப்பு. சில வாரங்கள் ஏமாற்றத்தை அள்ளித் தெளித்து அவன் வராமல் போவதும் உண்டு.

வாங்கி வந்த பால் பாக்கெட்டை மாடியில் எடுத்துப் போய்க் கொடுக்கிறாள் சுமதி. வீட்டுச் சொந்தக்கார மாமி தங்கமானவர். இந்த நல்ல ஏரியாவில் கீழ் போர்ஷனுக்கு வெறும் எண்ணூறு ரூபாய் தான் வாடகை வாங்குகிறார் மாமி. இவள் மீது இருக்கும் இரக்கத்தில் மாமியின் மனம் கனிந்திருக்கிறது. இரண்டு கார்கள் நிறுத்தும் இடம் போக சின்ன இடம்தான் வீடு. ஆனால் அதற்கே கண்ணை மூடிக்கொண்டு இரண்டாயிரம் கொடுப்பார்கள்.

மூடின கதவைத் தட்ட, மாமி கதவைத் திறக்கிறாள். ''வாடிம்மா. இந்த கார்த்தாலே தலைக்கு ஊத்திண்டாச்சா? ஓ.... ஞாயிற்றுக்கிழமை! உன்னோட ஆம்படையான் வர நாளா? இங்கே பாருடி. அவனை நன்னாக் கேளு. இப்படி கிழிசலும் பட்டினியுமாய் நானிருக்கேன். உன்னோட இரண்டாவது பெண்டாட்டி புதுப் புது சேலை கட்டிண்டு மினுக்கறா. என்ன அப்படி பார்க்கறே? எனக்கு எப்படி தெரியும்னா. நான் கோயிலுக்குப் போறேனில்லையோ. அப்ப அவ வீட்டைக் கடந்துதானேடி போக வேண்டியிருக்கு? சதா வெளியே உக்காந்துண்டு பேச்சும் சிரிப்பும்தான். நேத்திக்கு, பெரிய நெக்லஸ் போட்டுண்டு இருந்தா. மூத்தா நீ. இப்படி நிக்கறே.''

''விடுங்க மாமி! இது என் தலையெழுத்து. சுகுணா கொடுத்து வச்சவ. இதுக்காக வாரத்துக்கு ஒருநாள் வருகிறவர்கிட்ட முகம் காட்ட முடியுமா மாமி?''

'அசடுடி நீ. இல்லன்னா வீட்டு வேலைக்குன்னு வந்தவ உன் புருஷனை முடிஞ்சிட்டுப் போயிடுவாளா? அவ கொழிக்கறா. நீ இப்படி ஊதுவத்தி தேய்க்கறது அப்பளாம் இடறதுன்னு அல்லாட...அதுல திவ்யாவுக்கு வேற கான்வென்ட் படிப்பு. இங்கே பாருடி நீ சரின்னு சொல்லு. அவனைக் கோர்ட் வாசப்படி ஏத்தி....''

''அதெல்லாம் வேண்டாம் மாமி! என்னயிருந்தாலும் அவர் என்னோட புருஷன். அவரைக் கோர்ட் படி ஏத்தறதும் கூண்டுல ஏத்தறதும் எனக்குப்பிடிக்கலை. நான் வரட்டுமா மாமி?''

''உக்கும் போ. போய் சமைச்சு வச்சுக் காத்திரு விதம் விதமா சாப்பிட்டு இரண்டு மணி நேரம் இருந்துட்டு ஓடிடுவான். உன்னை மாதிரி இருக்கிற பொண்ணுங்களைச் சொல்லணும்டி,'' செல்லமாய் தலையில் அடித்தபடி உள்ளுக்குப் போகிறாள் மாமி.

மாமி சொல்வது சத்தியம். மாதம் ஆயிரம் ரூபாய் மட்டும்தான் இவளுக்குக் கொடுக்கிறான். அதில் வாடகை, குழந்தையின் பள்ளிச் செலவு ரேஷன் என்று எத்தனை தொல்லைப் படுத்தும் செலவுகள்!

ஒரே ஊன்றுகோலான மகளை சாதாரணப் பள்ளியில் சேர்க்கவும் மனமில்லை. ஒருநாளில் ஒரு நேரம் சாப்பிடும் நாள்கள் கூட சுமதிக்கு உண்டு. திவ்யாவின் சின்ன வயிறு நிறைய எப்படி எப்படியோ செயல்படுவாள். மாமியின் பல வேலைகளை அவள் தான் பார்ப்பாள். வாசல் பெருக்குவது.... வீடு பெருக்கித் துடைப்பது. கீழே மிகச் சிறிய வீடு, மாடியில் பரந்து விரிந்திருக்கும்.

கார் ஷெட் பெருக்கி வெளியே வாசல் பெருக்குகையில்தான் அந்த வாலிபன்... சே.... கொஞ்சம் லட்சணமான பெண்கள் வாசல் தெளிக்கப் போய்விடக் கூடாது. அதுவும் கிழிசல் சேலையில்... போனவாரம் அப்படித் தான் அவள் கடைக்குப் போய் வருகையில் எங்கிருந்தோ திடீரென்று முன்னால் முளைத்தான்.

''ஸாரி, உங்ககிட்ட இருக்கிற மூணு சேலையும் கிழிஞ்சுபோய் இருக்கு. உங்களுக்காக இந்த சேலை வாங்கியிருக்கேன். நீங்க அவசியம் வாங்கி உடுத்திக்கணும்.''



சுமதி கோபப்பட்டு எத்தனையோ வருடங்கள் ஆகிவிட்டிருந்தன. எங்கிருந்துதான் இப்போது அந்த ரௌத்ரம் எட்டிப் பார்த்ததோ தெரியவில்லை. "ஒரு பெண்ணுக்குச் சேலை வாங்கிக் கொடுக்கறதா இருந்தா அப்பா, கணவன், அண்ணன்னு இருக்கணும். நீங்க இதுல எதுவும் இல்லை. இன்னொருமுறை இப்படி செய்தீங்க நான் பொல்லாதவளா மாறிடுவேன்."

இவள் ரௌத்திரத்தில் அவன் சுருண்டு பின்வாங்கிவிட்டது உண்மை. அவனது அந்தச் செயல் இவளை நிரடிற்று. கண்களில் கண்ணீர்!

அவளும் எத்தனையோ வழிகளில் மிச்சம் பிடிக்கிறாள். ஆனால் திவ்யாயின் பள்ளிச் செலவு அவளை விழி பிதுங்க வைக்கிறது. அவள் அவர்கள் கேட்கும் பணம் கட்டாவிடில் "அதான்மா உன்னை மாதிரி ஏழைகளுக்கு ஸ்கூல்ல இடம் இல்லைன்னு சொல்றோம். வேணுமானா டி.சி.யைக் கொடுத்துடறேன். உன்மேலே இரக்கப்பட்டு சீட் கொடுத்தது தவறாப் போச்சு."

பச்சைத் தண்ணீர் வயிற்றை நிரப்ப எப்படியோ பணத்தைக் கட்டிவிடுவாள் சுமதி. திவ்யா இவள் கஷ்டம் அறிந்தவள் போல மிக நன்றாய்ப் படித்து வகுப்பில் எல்லாவற்றிலும் முதலாய் நிற்கிறாள். படிப்பது மூன்றாவது என்றாலும் ஆறாம் வகுப்பு மாணவி போல அறிவு. 'அம்மா! நான் பெரியவளானதும் நிறையப் படிச்சு வேலைக்குப் போவேன். உன்னை என் கண்ணு போல பார்த்துப்பேன்மா. அப்ப இந்த அப்பா வந்தா அடிச்சு விரட்டிடலாம்மா!'

'அப்படிச் சொல்லக்கூடாதுடா கண்ணு! என்ன இருந்தாலும் அவர் உன் அப்பா. ஏதோ போதாத காலம் இப்படி ஆச்சு. அவர் வச்ச ஆட்டோ மொபைல் கடை சரியாவே நான் இருக்கிறவரை நடக்கலை. சுகுணா வந்ததும் அமோகம் ஆச்சு. அவமேலே மோகமும் வளர்ந்து போச்சு.'

ஏதேதோ சிந்தனைகளால் அலைக்கழிக்கப்பட்டு விரைந்து சமையல் கவனிக்கிறாள் சுமதி. திவ்யா தன் பாடங்களையெல்லாம் எழுதிக் கொண்டிருக்கிறாள். இவள் சாப்பிட அழைக்காதபோதே வந்து நின்றாள். "அம்மா! எனக்குச் சாப்பாடு போட்டுடு. நான் போகணும்."

"ஏன்மா அப்பா வருவாரு. அவரோட உட்கார்ந்து சாப்பிடலாம் இல்லையா?"

"இல்லம்மா. நான் தனியா சாப்பிடணும். அவர் வரப்ப நான் இருக்க விரும்பலை. என் தோழி வீட்ல போய் படிக்கறேன். எப்போ அவர் தினமும் வாராறோ அப்பதான் எனக்கு அவர் அப்பா."

கண்ணீர் மறைக்க தலை குனிகிறாள் சுமதி. போய்விட்டாள். சிறு அசைவு கேட்டாலும் இவள் பார்வை வெளியே தெருவிற்கு ஓடுகிறது. இரு சக்கர வாகனங்கள் எது போனாலும் அவன் மோட்டர் சைக்கிளா என்று இவள் கண்கள் வெளியே. அந்த வாலிபன் தான் எதிர்வீட்டில் வாசலுக்கு நேராய் அமர்ந்து பேப்பர் படிக்கிறான். இவள் பார்வை எப்படித் தெரியுமோ? அந்த நேரம் இங்கே அவன் கண்கள்!

சே....

வண்டியை நிறுத்தி உள்ளே நுழைவது சரவணன் தான். அவள் கணவன் . முதன் முதலாய் அவன் வந்து பெண் பார்த்த துடிப்பும் வெட்கமும் அவளைப் பற்றிக் கொள்கிறது. கை, கால் அலம்ப நீர் கொடுக்கிறாள். கனிவாய் அவனை பார்வையில் அள்ளிக்கொள்கிறாள். முன்னைக்கு இப்போது இளைப்பு அதிகம்.

சாப்பிடும்போது அவன் சுவை அறிந்து பரிமாறுகிறாள். "என்னங்க இன்னும் கோஸ் பொரியல் வைக்கட்டுமா?"

"போதும் சுமதி! இங்கே ஞாயிறு வந்துடேறன்னு சுகுணா கோபப் படறா. என்ன செய்யறது? வரலைன்னா நீ வருத்தப்படுவே." இன்னும் சிறிது நேரத்தில் அவள் சூரியன் அஸ்தமித்து விடும்.

அவனுக்குக் கையால் விசிறிக் கொண்டே மிருதுவாய் சொல்கிறாள். "என்னங்க! என் புடைவைங்க எல்லாம் கிழிஞ்சு போச்சு. புதுசா வாங்கணும். நீங்க கொடுக்கிற ஆயிரம் ரூபாய்ல எதுவும் செய்ய முடியலைங்க. சில நேரம் மத்தவங்க வீட்ல சமையல் கூட செய்யறேன் நான்."

சொல்லும்போதே அவள் குரல் உடைந்துவிடுகிறது. திவ்யா எங்கே என்று அவன் கேட்காதது உறுத்துகிறது. சுகுணாவின் பெண் மட்டும் தான் இவனுக்குக் குழந்தையா? கேட்கத் தோன்றுகிறது ஆனால் கேட்கவில்லை.

"என்ன நீ வரப்ப எல்லாம் பஞ்சப் பாட்டு பாடறே? இப்ப முன்மாதிரி வருமானம் இல்லை. நீ ஊதாரியாச் செலவு செய்தா நான் என்ன செய்யட்டும்? நான் வாரா வாரம் வரணும் என்கிறியா? வராமலே நின்னுடணும் என்கிறியா?"

கணவன் புறப்படும் வரை சுமதி வாய்திறக்கவே இல்லை. 'வராமல் நின்னுடணும் என்கிறியா' என்கிற சொற்களே அவளைப் புரட்டிப் போட்டன. கண் நிறையக் கணவனைப் பார்க்கும் வாய்ப்புக்கும் பங்கமா? இவளுக்கு இருக்கும் துடிப்பும் உணர்வுகளும் அவனுக்கு இல்லாமல் போனது எப்படி? அவன் புறப்பட்டுப் போகும்வரை மகள் திவ்யாவைப் பற்றிக் கேட்காதது மனத்தைப் புண்ணாக்கியது.

மற்ற குழந்தைகள் போல தந்தையின் கரம்பிடித்து வெளியே போக அந்தக் குழந்தைக்கும் ஆசை இருக்காதா? அதை ஏன் அவன் புரிந்து கொள்ளவில்லை?

அவன் புறப்பட்டுப் போய்விட்டான். சாப்பிடப் பிடிக்கவில்லை சுமதிக்கு. அவள் சாப்பிடும் அந்த உணவு இருந்தால் இரவு திவ்யாவின் பிஞ்சு வயிற்றின் பசி போக்கிவிடலாம் என்கிற எண்ணமும் கூட. கிழிசல் சேலையை மறைத்துக் கட்டி ஊதுவத்தி தேய்க்க உட்காருகிறாள் சுமதி. வெளியே இவள் வாசலில் செருப்பு ஒலிகள். எதிர்வீட்டு வாலிபன் சின்னதாய் ஒருபுன்முறு



வலுடன் நிற்கிறான். உள்ளே வர வில்லை. கையில் இரண்டு சேலைகள் அடங்கிய பாலிதின் பை.

''ஸாரிங்க. உங்க மகள் திவ்யா சொல்லி நான் எல்லாம் தெரிஞ் சுட்டேன். இப்ப கூட திவ்யா எங்க வீட்லதான் படிச்சிட்டிருக்கா. உங்களைப் போலவே எனக்கு ஓர் அக்கா

இருந்தாங்க. அவங்களைச் சிறப்பாத்தான் திருமணம் செய்து கொடுத்தோம். ஆனா புருஷனோட சித்ரவதை தாங்காம தற்கொலை செய்துட்டாங்க. எங்கக்கா மாதிரியே நீங்க அழகா கோலம் போடறீங்க. அதே நடை. அதே அதிராத பேச்சு. அதான் நீங்க இப்படி கிழிசலும் நைந்துபோன சேலையிலும் நிக்கறது மனத்தைச் சங்கடப் படுத்திட்டுது. அதான் இதை வாங்கி வந்தேன். தவறுதான். ஆனா மன்னிச்சு இதை நீங்க ஏத்துக்கணும்.''

அந்த இளைஞன் பவ்யமாய் படிதாண்டாமல் வாசற்படியின் அந்தப் பக்கம் நின்று அந்தப் பையை நீட்டினான்.

மறுத்துப் பேச வாய் திறந்தாள் சுமதி. அதற்குள் மாடிப்படிகளில் நின்றிருந்த மாமி மறைவிலிருந்து முன்னால் வருகிறாள். "இதோ பாரு சுமதி! வேண்டாம்னு சொல்ல வரே. அந்தப் பிள்ளையாண்டான் சொன்னதை நான் கேட்டேன்டி. தீபாவளி வரப்போறது. இப்படி கிழிஞ்ச சேலையில் நிற்பியா? உன் புருஷனுக்குக் கண் இல்லை. தம்பின்னு சொல்லிட்டு இவன் நீட்டினா அதை வாங்கிக்கறதிலே தவறே இல்லைடி. வாங்கிக்கோ.''

நடுங்கும் கரங்களால் அந்தப் பாலீதின் பையை வாங்கிக் கொள் கிறாள் சுமதி.

அவளுக்கு, நன்றி சொல்ல வேண்டும் என்பது கூட மறந்து விட்டிருந்தது.

"ரொம்ப தேங்க்ஸ்டா அம்பி. நான் பண்டிகைக்கு வாங்கிக் கொடுப் பேன். அதுவரை இவ இப்படி நிக்க முடியுமா? உனக்கிருக்கிற மனசு கூட சொந்தக்காரனுக்கு இல்லை.''

"வரேன்க்கா. வரேன் மாமி!''

அந்த இளைஞன் போய் விட் டிருந்தான்.

'மறுயோசனை வேண்டாம்டி. பையனைப் பார்த்தா தவறாத் தெரியலை. நல்ல நாள் பார்த்து உடுத்திக்கோ. கிழிசலைத் தூர எறி. பொண்ணு புக்ககத்திலே விசேஷம், சமைக்க வரியான்னு கேட்க வந்தேண்டி சுமதி!''

"தாராளமா வரேன் மாமி!''

"எத்தனை பேருக்குன்னு நீ கேட்கலையே.''

"அது எத்தனைப் பேரா இருந்தா என்ன மாமி? நான் வரேன். என்னோட பெண்ணோட வருங்காலம் அவ படிப்புதான் எனக்குப் பிரதானம். என்னோட உழைப்பு இல்லை.''

"உனக்கு ரொம்ப நல்ல மனசுடி சுமதி! உன் நல்ல குணத்துக்கு உன் ஆம்படையானே ஒருநாள் வந்து நிக்கப் போறான் பாரு.''

சொல்லியபடி மாடியேறுகிறாள் மாமி.

சிறுமுறுவலுடன் கண்களைத் துடைக்கும் சுமதி 'மாமி உங்க வாக்குப் பலிக்கட்டும்' என மனத்தில் பிரார்த்திக் கிறாள்.

## நிலா பத்து



**அமுதபாரதி**

- முகம் தெரியாத காடு
  முதலில் தெரிந்தது
  நிலா.

- எவ்வளவு குறும்பு
  மொட்டுகளைக் கொஞ்சும்
  கிழட்டு நிலா!

- தெரிகிறது
  ஆயினும் இல்லை
  நீரில் நிலா.

- அநாதைப் பிணம்
  பால் தெளிப்பு
  அனுதாப நிலா.



- வழுக்கைத் தலையின் பளபளப்பு
  எப்போது முடியுதிர்த்தது
  நிலா!

- மடியில் ஒன்றுமில்லை
  என்றாலும் தடவும்
  நிலா.

- குளமே குளிப்பாட்டு
  உனக்குள்
  அழுக்கு நிலா.

- ஆழப் படுத்துவோம்
  அதிக நேரம் ரசிக்கலாம்
  ஏரியில் நிலா.

- உயர்ந்தவன்
  எல்லார்க்கும் சொந்தம்
  சாக்கடைக்குள்ளும் நிலா.

- கடற்கரை
  காதலர்கள்
  தலைமுறை அறிந்த நிலா.

பி.ஆர். ராஜாராம்

# ஸமர்த்த ராம்தாஸ்

மகாராஷ்டிரத்தில் ஞானேஸ்வர், நாமதேவ், ஏக்நாத், துக்காராம் எனும் ஸாதுக்களின் பரம்பரையில் கடைசியில் வந்தவர் ராம்தாஸ். இவர்கள் நாடெல்லாம் சுற்றி பஜன், கீர்த்தனம், புராண ப்ரவசனம் ஆகியவற்றின் மூலம் பக்தியையும், தர்மத்தின் பற்றையும் வளர்த்து வந்தனர். 13ஆவது நூற்றாண்டிலிருந்து 17ஆவது நூற்றாண்டுவரை இவர்கள் மகாராஷ்டிரம் முழுவதும் சுற்றி, அங்குள்ள ஜனங்களையும், அவர்கள் வாழும் நிலையையும் அருகிலிருந்து பார்த்தும், அனுபவித்தும் – அதனால் சமூகத்திற்குத் தேவையான நல்லது கெட்டதை மக்களிடையே எடுத்துரைத்தார்கள். இம்மகான்களின் இடைவிடாத பிரசாரம், மராட்டியர்களுக்குள் அசைக்க முடியாத ஒற்றுமையை உண்டாக்கி, அதன் மூலம் மகாராஷ்டிர ராஜ்யத்தையே ஸ்தாபிக்கத் தகுதியான ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தியது. பதினாறாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் சத்ரபதி சிவாஜியும், ஸமர்த்த ராம்தாஸ் சுவாமிகளும் தோன்றி முகலாயர்களின் ஆதிக்கத்தைத் தடுத்து இந்துக்களின் ஸனாதன தர்மத்தைப் புனருத்தாரணம் செய்தனர். அவ்விருவரும் அம்மாதிரி செய்யாதிருந்தால் இந்தியாவில் முகலாய ஆட்சி பரவி, இந்து தர்மம் அழிந்திருக்கக்கூடும்.

ஔரங்கபாத் ஜில்லாவில் ஜாம்ப என்னும் கிராமத்தில் ஸூர்யாஜிபந்த் என்னும் பிராமணர் ஒருவர் இருந்தார். அவர் கிராமக் கணக்குப்பிள்ளை. அவருடைய மனைவி பெயர் ரேணுபாய். இவர்களுக்கு இரண்டாவது மகனாக சகம் 1530இல் (கி.பி.1608) கீலக வருஷம், சைத்ர சுக்ல நவமி (ஸ்ரீராமநவமி புண்ணிய தினத்தில்) நாராயணன் (பிற்காலத்தில் ராம்தாஸ்) பிறந்தார். அவருடைய ஒன்பதாவது வயதிலேயே ஸ்ரீராமருடைய அனுக்கிரகம் கிடைத்தது. பன்னிரண்டாவது வயதில் தன் தாயாருடைய நிர்பந்தத்தால் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்து, திருமண மண்டபத்தில் உட்கார்ந்திருந்தபோது மங்களாஷ்டகம் ஸ்லோகம் சொல்லி முடிவில் 'ஸுலக்னே ஸாவதான' வார்த்தையைக் கேட்டதும், "இது யாரைக் குறித்துக் கூறப்படுகிறது?" என்று நாராயணன் மணமகளின் சகோதரனைக் கேட்டார். "யாரைக் குறித்தா? உன்னைக் குறித்துத்தான். இவ்வளவு நாள் திரிந்ததுபோல இனி உன்னிஷ்டப்படி திரிய முடியாது. இப்பெண்ணாகிய சங்கிலியால் உன்னை நன்றாகக் கட்டியாகி விட்டது. இனி நீ பொறுப்புடன் ஸாவதானமாகக் குடும்பத்தை நடத்தவேண்டும் என்று பொருள்" என்று சொன்னதும் அவர் அந்த இடத்தைவிட்டு மாயமாக மறைந்து விட்டார். எங்கே எப்படிச் சென்றார் என்று யாருக்கும் தெரியவில்லை. பலஇடங்களில் தேடியும் பயனில்லை. நாராயணன் அன்று முழுவதும் கோதாவரி நதியிலேயே தங்கி, இரவு காட்டின் வழியாகச் சென்றார். பஞ்சவடிக்கருகில் உள்ள டாங்களி என்ற இடத்தில் 24ஆவது வயது வரை தவம் புரிந்தார். பல சித்திகளையும் பெற்றார். அப்பொழுது ஸ்ரீராமர் நாராயணன் முன்தோன்றி "நீ தவம் செய்தது போதும்! நாடு முழுவதும் சுற்றி விரைவில் அழிந்து வரும் ஸனாதன தர்மத்தை ஸ்தாபனம் செய்து, மக்களுக்கு ஸ்ரீராம பக்தியைப் புகட்டு. ஆஞ்சநேயனும் உனக்குத் துணைவனாக இருந்து வருவான். இன்று முதல் உனக்கு 'ஸமர்த்த' என்ற நாமம் சூட்டுகின்றேன்!" என்றார். 'ஸமர்த்த' என்றால் 'எல்லாவற்றையும் செய்யத் திறமை உள்ளவன்' என்று பொருள். அன்றுமுதல் நாராயணன் ஸமர்த்த என்றும், ஸ்ரீராமருக்குத் தாஸனானதால் ராம்தாஸ் என்றும், இரண்டும் சேர்ந்து 'ஸமர்த்த ராம்தாஸ்' என்றழைக்கப்பட்டார்.

பிறகு நாடெங்கிலும் யாத்திரையாகப் போய் பக்தியைப் பரப்பினார். அப்பொழுது எங்கும் தர்மம் சரிவர அனுஷ்டிக்கப்படாமல் இருந்தது. ஆதலால் மக்களுக்கு தர்மம், பக்தி ஆகியவற்றின் உண்மைகளை எடுத்துரைத்தார். சில சமயம் தனது



சித்திகளை உபயோகித்தும், பலருடைய மனத்தை மாற்றினார். ஆதில்ஷா என்னும் முகலாய மன்னரிடமிருந்தே மாருதி கோயிலுக்காக ஜமீனை நன்கொடையாகப் பெற்றார்.

பீஜப்பூர் சுல்தானுக்குக்கீழ் இருந்த மகாராஷ்டிரர்கள் சிவாஜியின் தலைமையில் சக்தியைப் பெற்று, நவாபை ஜெயித்து, மராட்டிய ராஜ்ஜியத்தையும் ஸ்தாபித்தனர். சிவாஜி சிறந்த பக்தன். அடிக்கடி துக்காராம் பஜனைகளுக்குச் சென்று மெய்மறந்து தியானத்தில் ஆழ்ந்திருப்பான். துக்காராமை வணங்கி தனக்கு மந்திரோபதேசம் செய்ய வேண்டுமென்று சிவாஜி வேண்டிக்கொண்ட போது, "ஸ்ரீஸமர்த்த ராம்தாஸ் அவர்களே உனக்கு உபதேசம் செய்யவேண்டும். ஆதலால் அவரை நாடிச்செல்!" என உத்தரவிட்டார். சிவாஜியும் அப்படியே செய்தான். கி.பி.1649இல் ராம்தாஸ், சிவாஜிக்கு இராஜதர்மத்தைப் போதித்து ஆசீர்வாதம் செய்தார். குருபக்தியால் தன்னையே மறந்து, குருவை விட்டுப் பிரியவே மனமில்லாமல் எப்பொழுதும் அவருடனே இருக்க சிவாஜி விருப்பப்பட்டான். ஆனால் ராம்தாஸ் அதை விரும்பாமல், விரோதிகளை விரட்டி, நாட்டைக் காக்கும்படி உத்தரவிட்டார். "மக்களுக்கு பக்தி, ஞானம் ஆகியவற்றை நான் பரப்புகிறேன், நீ அரசாட்சியைச் சரிவர நடத்து. அதுதான் உன் கடமை!" என்றார்.

'தாஸபோத' என்னும் மகத்தான நூலை ஸமர்த்தர் மராத்தியில் இயற்றினார். இதன் முற்பகுதி அத்வைத வேதாந்த தத்துவத்தையும், அதன் அனுஷ்டானத்தைப் பற்றியும் விரிவாகக் கூறுகிறது. பிற்பகுதி, மக்கள் சம்சார வாழ்க்கையைச் சரிவர நடத்துவதற்கு அவர்கள் எதை எதை எப்படிச் செய்யவேண்டும், மற்றும் பல தனிப்பட்ட விஷயங்களையும் வர்ணிக்கிறது. 'தாஸபோத'த்திலிருந்து உதாரணத்திற்கு.

"டாயி டாயி ஷோத க்யாவா! மக க்ராமி ப்ரவேஷ்கராவா!

ப்ராணிமாத்ர போல்வாவா! ஆப்த பணே!!"

'எந்த ஊருக்குப் போனாலும், சமூக சேவை செய்வதற்குச் சென்றால் அந்த ஊரிலுள்ள மக்கள் எப்படி இருக்கிறார்கள் என்று முன்பே கண்டறிய வேண்டும். யார் தர்மசீலன், யார் அதர்மம் செய்பவன், வாய்ச்சாலன் யார், சுயநலக்காரன் யார், கபட நாடகக்காரன் யார், அபிமானமற்றவன் யார், பிறருடைய துன்பங்களைப் பார்ப்பவன் யார்? என்பனவற்றை அறிந்து கொண்ட பின்பே, ஊருக்குள் நுழைய வேண்டும். இவற்றைத் தெரிந்து கொண்டபின் அவரவர் தேவைக்கேற்றாற்போல் அதை வெளியில் சொல்லாமல், மக்களுடன் பழக வேண்டும்'

"துர்ஜன் ப்ராணி ஸம்ஜாவே! பரிதே ப்ரகட ந கராவே! ஸஜ்ஜனாபரிஸ் ஆள்வாவே! மஹத்வ தேவுனி!!"

கெட்டவன் அயோக்கியன் என்று சொல்வதில் நமக்கொன்றும் லாபமில்லை. அவனை நாம் நன்கு தெரிந்து வைத்திருக்கவேண்டும். ஆனால் வெளியில் சொல்லக்கூடாது. ஸமர்த்தரின் சம்பிரதாயப்படி, துறவிகள் ஒரே இடத்தில் உட்கார்ந்து கொண்டு பிக்ஷை எடுக்கக்கூடாது. நாலு இடத்தில் போய், மக்களை ஒன்று கூட்டி, நல்ல விஷயங்களை நாமாகப் போய்ச் சொல்லவேண்டும்.

"ஆபணாஸ் ஜே ஜே அனுகூள், தே தே கராவே தாத்காள்!

ஹோயினா த்யாஸ் நிவள், விவேக் உமஜாவா!!"

'நமக்கு அனுகூலமான தர்ம காரியங்களை உடனடியாகச் செய்ய வேண்டும். நாளைக்குச் செய்து கொள்ளலாம் என்று என்றைக்கும் சொல்லக்கூடாது – தள்ளியும் போடக்கூடாது'

இதைத்தவிர மனாசே ஸ்லோக, இராமாயணத்தில் கிஷ்கிந்தா மற்றும் யுத்த காண்டத்திற்கு விளக்கம், பீமரூபி ஸ்தோத்திரம், கருணாஷ்டகம் மற்றும் பல ஸ்தோத்திரங்கள், பதங்கள் 'அபங்' எனப்படும் பக்தி, வைராக்கியம், ஞானம் ஆகிய வற்றைப் போற்றும் பல பாடல்களை ஸமர்த்தர் இயற்றியிருக்கிறார். மனாசே ஸ்லோக என்றால் மனத்திற்கு அறிவு புகட்டும் ஸ்லோகங்கள் என்று பொருள். பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டவர்களுடைய மனது திருந்தி ஸன்மார்க்கத்தில் செல்ல வேண்டும் என்பதற்காகவே இயற்றப்பட்டன. அதிலிருந்து சில பகுதிகள்:

*'மனீம் மானவ வேர்த சிந்தா*
*வாஹாதே (ம்)*
*அகஸ்மாத ஹோணார ஹோவூனி*
*ஜாதே (ம்)*
*கடே போகணே(ம்) ஸர்வஹீ கர்ம*
*யோகே(ம்)*
*மதீமந்த தே கேத மானீ(ம்)*
*வியோகே(ம்)*

'மக்கள் சில சம்பவங்களைக் கண்டு வருந்துகிறார்களே, அது வீண். எது நடக்கவேண்டுமோ அது அவசியம் நடந்தே தீரும். அவனவன் செய்த கர்மாவிற்கேற்றபடி புத்திரன் மித்திரன் முதலியவர்களின் சேர்க்கையும் பிரிவும் ஏற்படுகின்றன. அப்படியிருக்க அதை அறியாதவர்கள் பிரிவைக்கண்டு வருந்துகின்றனர்.'

*'மனா வாஸனா சுகவி யேரஜாரா*
*மனா காமனா ஸாண்டி(ம்) ரே*
*த்ரவ்யதாரா*
*மனா யாதனா தோர் ஹே*
*கர்பவாஸி(ம்)*
*மனா ஸஜ்ஜனா பேடவி(ம்)*
*ராகவாஸி'*

'ஏ மனமே! ஜனன மரணத்தை அளிப்பதும் மற்றும் பலவித துன்பங் களைக் கொடுப்பதுமான பணம், பந்து, மனைவி ஆகியோரிடமுள்ள ஆசையை விட்டுவிடு, பொறுக்க முடியாத துன்பங்களை உண்டாக்கும் கர்ப்பவாஸம் பெறாதிருக்க, ஏ மனமே! ஸ்ரீராகவனிடம் பக்தி செய்து அவனை அடை.'

*'பஹு சாங்கலே நாம யா*
*ராகவாசே(ம்)*
*அதி ஸாஜிரே(ம்) ஸவல்ப ஸோபே*
*புகாசே(ம்)*
*கரீ முள நிர்மூள கேதா(ம்)*
*ப*
*ஜிவா(ம்) மானவா(ம்) ஹே*
*கைவல்ய ஸாசே(ம்)*

'ஸ்ரீராமச்சந்திரனுடைய நாமம் மிகவும் சிறந்தது. இனிமையான இரண்டே எழுத்துகளைக் கொண்டது. உச்சரிப்பதற்கு மிகவும் சுலபமானது. யாதொரு செலவுமின்றிக் கையாளக் கூடியது. மக்களால் உச்சரிக்கப்பட்ட மாத்திரத்திலேயே பிரபஞ்சத்திற்கு மூலகாரணமான அஞ்ஞானத்தை அழித்து அவர்களுக்கு மோட்ச சுகத்தை அளிக்கவல்லது.'

இப்படி பக்தியைப் பரப்பிய, ஞானத்தைப் போதித்த பல அற்புத காரியங்களைச் செய்த ஸமர்த்த ராம்தாஸ் தன்னுடைய 72ஆவது வயதில், அதாவது ஜனவரி 22, 1682இல் மாக கிருஷ்ணபக்ஷ நவமியன்று, தன் சிஷ்யர்களுடன் பஜனை செய்து கொண்டிருக்கும் போதே, உயிர் துறந்தார். அவருடைய சீடர்கள் அவருக்கு மகாராஷ்டிரத்தில் உள்ள 'ஸஜ்ஜன்கட்' என்னுமிடத்தில் சமாதி கட்டினார்கள். ஸஜ்ஜன்கட் இன்றும் ஒரு புண்ணிய க்ஷேத்திர மாக விளங்கி வருகிறது.



**கவிமாமணி மதிவண்ணன்**



## மன்மத அழைப்பு

ஆயிரம் கோடிக் கவிதைகள் உன்றன்
பார்வையில் பிறக்கிறது! – நீ
அரை நொடி சிரிக்கும் புன்னகையோ அதன்
அர்த்தம் விரிக்கிறது!

தேரென நீயும் ஊர்வலம் வருகையில்
தெருவே சிலிர்க்கிறது! – உன்
சின்ன சின்ன மின்னல் அசைவோ
சரித்திரம் படைக்கிறது!

கூந்தலை விரல்கள் கோதும் அழகு!
கோடி கொடுத்திடலாம்! – ஆ!
காந்தக் கவர்ச்சிக்கே ஒரு காவியம்
பாடி முடித்திடலாம்!

ஏங்கும் தனிமையில் எத்தனை நாள்கள்
இளைத்துக் கிடப்பேன்நான்! – அடி!
என்னவளே! வா என் அருகே! உனை
இணைத்துச் சிறப்பேன் நான்!

அம்புகள் தைத்த இடங்களை எல்லாம்
அன்பால் ஒற்றி எடு! – நான்
அற்புத இளமை அரங்கில் சிறக்க
இன்றே வெற்றி கொடு!

அமுதும் விடமும் அனலும் புனலும்
அமைந்த சங்கமமே! – என்
அங்கம் முழுதும் வைப்பாய் உன்றன்
நெற்றிக் குங்குமமே!

# அரக்கரைப் பிழியும் மகாதீரதௌரேய, பலபராக்கிரம ஸர்வ சக்த வீராஞ்சநேயன்



ஸ்ரீராம பகத அனுமன் ஒப்பற்ற மகாவீரன். அவன் மகாதைரியம் உள்ளவன். தேகபலம். மனோபலம். புத்திபலத்துடன் ஆன்மபலம் நிரம்பப் பெற்ற சிரஞ்சீவி.

அசோகவனத்திலும். இராவணப் போர்க்களத்திலும் அரக்கர் கூட்டத்துடன் போராடுவதே அனுமனின் தனி அழகாகும அத்தகைய அழகைக் காண வேண்டாமா? அனுமனின் பல பராக்கிரமத்தை, கண்கூடாகப் பார்க்க வேண்டுமா?

வீராஞ்சநேயன அரக்கரைப் பழம் பிழிவதைப் போல் தன் வாலால் சுற்றிப் பிழிந்து. தூக்கி எறிவதைப் பாருங்கள். இவவோவியத்தின் மூலமாக அத்திரவித்தையிலும். மாயையிலும் தேர்ந்த அசுரர் விடும் பாணங்களை அலட்சியமாகத தன் கரத்தால் தட்டிவிடுகிறான். வானரவீரன் அசுர பாண வேகத்தால் பூமியே பிளந்து விடுகிறது. வானமே போர்வானமாகத் தென்படுகிறது.

கபிசிரேஷ்டனின் வால் அசுரர்களைச் சேர்த்து இறுக்கித் தசைகளை நசுக்கிப் பிழிந்து. எலும்புகளை ஒடிக்கிறது. எல்லா அரக்கர்களிடமிருந்தும் பிழியப்படும் ரத்தம் நடுவில் ஊற்றாகக் கொட்டுகிறது. அனுமனின் வாலின் சக்தியையும். பலத்தையும். அழகையும் உணரலாம். அவ்வாலின சக்தியால் நாமும் சக்தியுடன் தீங்குகளை வெற்றி கொள்ளவே அனுமனின் வாலைப் போற்றி அதற்குப் பொட்டு வைத்துக் கும்பிடுகிறோம்.

அனுமனின் வால் தீங்கினை நொறுக்கி அறம் போற்றும் நம் யாவரையும் காக்கட்டும்.

தைத்திரிய உபநிடதத்தில் 'புச்சம் பிரும்மம்' என்கிறது. அவன் திருவுருவில் வாலில் குங்குமமிடுவதும் பிரம்மோபாசனையாகிறது.

எத்தனை பலமிருந்தால் அசுரர்களை ஒன்றாகத் தன் வாலாலேயே கட்டி நசுக்க முடியும்! அனுமனின் பலத்தைக் காட்டவே இச்சித்திரம்.

எத்தனை சக்தியிருந்தால் அவர்களை ஒரு நொடியில் தன் வாலால் சாறுபிழிவதுபோல் பிழிந்தெடுக்கக்கூடும்?

அதுமட்டுமா? அனுமன் ஞானப் பொலிவுடையவன். பிரம்மச்சரியத்தால் அவனது வீரியம் ஓங்கி ஓஜஸ் சக்தியாவதால் அவன் மகா தேஜஸ்வியாகப் பிரகாசிக் கிறான்.

அனுமனின் சுந்தரவடிவமே ஐசுவரியம். அக்கம்பீரமும். தேஜஸும் அழகும் காணக்கிடைக்குமோ? இராமனின் ஐசுவரியமே அனுமன்தான். அதனால்தான் இராமன் 'ஆஞ்சநேயா! நீ என்னுயிர்த் துணையாயிருப்பதற்கு உனக்கு எதைக் கொடுப்பது? உலகில் நீயே என் எல்லாச் செல்வமுமாயிருக்கிறாயே!" என எதுவுமே அனுமனின் சேவைக்கு ஈடாகக் கொடுக்கமுடியாமல் இராமன் தன்னையே தந்துவிட. ஆரக்கட்டித் தழுவிக்கொண்டு மகிழ்கிறான். ஆக ஞான. பல. ஐசுவரிய. வீரிய. தேஜஸ். சக்தியுடன் ஷாட் குண்யவிக்கிரக தேகியாக அனுமன் சோபிப்பதை இவ்வோவியத்தில் பேரானந்தத்துடன் காண்கிறோம்.

சுந்தர வடிவினனான மாருதியின் பலத்தின் அழகு அவனது திரண்ட புஜங்களில் தெரிகிறது. அவனது சக்தியின் அழகு அவனது வாலில் தெரிகிறது. அவனது வீரிய. தேஜஸ்களின் அழகு பிரம்மச்சரியத்திலும். இராம சேவையிலும் புலப்படுகிறது. அவனது எல்லையற்ற அறிவழகும். பக்தி அழகும் துல்லியமாகத் தெரிகிறது. அவனுக்கு ஈடான செல்வமுமில்லை எனத் தன்னையே தந்தான் இராமனாதலின், அனுமனே எல்லாச் செல்வ அழகிற்கெல்லாம் மேலாம் பேரழகுடையவனென அறிகிறோமன்றோ?

மனத்தை வென்றவனும். காற்றில் வேகமுடையவனும். விஷயப்பற்றுடைய புலன்களை வென்றவனும். புத்திமான் களில் சிறந்தவனும். வாயுபுத்திரனும். வானரக் கூட்டங்களில் முக்கியமானவனுமான ஸ்ரீராமதூதனாகவுள்ள இராமாஞ்ச நேயனைச் சரணமாகப் பற்றுகிறேன்.

*ஓம் தத்ஸத்*

**வி.ஏ. இராமச்சந்திரன்**



• கேலாங் சிவன் கோயில்



ஸ்ரீவேணுகோபாலன்

# சிங்கப்பூரில் கோயில்கள்

சிங்கப்பூர் கோயில்களுக்கும் நம் கோயில்களுக்கும் ஒரே ஒரு வித்தியாசம்.

சுத்தம்!

உள்ளே போனால் உங்கள் கண்ணைப் பறிப்பது இந்த சுத்தம்.

குட்டி இந்தியா என்று வழங்கும் சிராங்கூன் சாலையில் மூன்று கோயில்கள் இருக்கின்றன.

சீனிவாசப் பெருமாள் கோயிலுக்குப் போவோம். பெரிய விஸ்தீரண நிலம்! ஒரு காலத்தில் இங்கே குளம் இருந்ததாகக் கூறப்படுகிறது.

வாசலில் ராஜ கோபுரம்! புராண இதிகாச பொம்மைகள் அந்தக் கோபுரத்தைத் தாங்கிக் கொண்டிருக்க—

மேலை நாட்டுப் பிரயாணிகள் இந்த பொம்மைகளில் ஐந்து நிமிடம் செலவிடுவார்கள். காமிராவால் சுட்டுத் தள்ளுவார்கள்.

கவலை இல்லாமல் காலணிகளை வெளியே விட்டுப் போகலாம். யாரும் சீண்டமாட்டார்கள்.

உள்ளே விஸ்தார மண்டபம்

சுத்தமாக இருக்கும்.

தரையில் தும்பு தூசி இருக்காது

தூண்களில் எண்ணெய்ப் பிசுக்கு. அழுக்கு துளியளவும் இருக்காது.

இடப்புறம் குழாயில் கால் கழுவிக் கொள்ளலாம். அருகில் வாஷ்பேஸினில் கை கழுவிக் கொள்ளலாம்.

இந்த இடத்தின் ஓரம் முதலில் தொடங்குவது பிள்ளையார் சந்நிதி.

பெருமாள் கோயிலில் இந்தப் பிள்ளையார் அந்த நாளிலிருந்து சேர்ந்தே எழுந்தருளிவிட்டார்!

இவருக்குப் பூஜை செய்வதும் வைணவ அர்ச்சகர்கள்தாம்

அடுத்து சக்கரத்தாழவார் சந்நிதி. கம்பீர உருவம்!

இதன் பிரதட்சிணத்தில் கவுன் போட்ட சிங்கப்பூர் பெண்மணி அமர்ந்து ஒரு சிறிய கைப் புத்தகத்தில் தமிழில் கொடுக்கப் பட்டிருக்கும் வடமொழி சுலோகங்களைப் படித்துக் கொண்டிருக்கிறார்.

சிங்கப்பூர் தமிழர்களிடம் உள்ள பக்தியும் ஈடுபாடும் நம்மிடம் உள்ளதைவிடப் பல பிளஸ்கள்.

அடுத்து பிரதான சந்நிதியைப் பார்ப்போம்.



ஸ்ரீ ஸ்ரீநிவாஸப் பெருமாள் (உற்சவர்)

**சீனிவாசப் பெருமாள்**

வெளியிலிருந்தே கருவறை சுத்தமாகத் தெரியும்.

ஸ்ரீதேவி பூதேவி சமேத சீனிவாசப் பெருமாள், நல்ல உயரத்தில் தென்படுவார்.

அவர் முன்னால் உற்சவர்கள் ஆபரணங்களுடன் மின்னிக் கொண்டு தெரிவார்கள்.

சந்நிதிக்கு முப்பதடி தூரத்தில் சின்னதாக கருடன்.

பெருமாளைச் சேவித்துவிட்டு இடப் புறம் சென்றால் தாயார் சந்நிதி.

கஜலட்சுமியாக சேவை சாதிக் கிறார்.

பிராகாரத்தில் வருகிறோம்.

எங்கும் சுத்தம்! இங்கேயும் ஓரமாக வாஷ்பேஸின்கள்

ஆண்டாள் சந்நிதி.

சந்நிதியின் முன்னால் துளசி மாடம்.



• பிரதான சந்நிதி



• சீனிவாசப் பெருமாள் கோபுரவாயில் வழியே உட்புறக் காட்சி



• சீனிவாசப் பெருமாள் கோயிலின் கோபுரவாசல்








• ஆண்டாள்

தள்ளிப் போனால் அனுமான் சந்நிதி.

இந்தப் பெருமாள் கோயிலுக்கு எப்போதும் பக்தர்கள் வந்தவண்ணம் இருப்பார்கள்.

• கருடாழ்வார்





• விநாயகர்

சமயங்களில் பிரசாதங்கள் வழங்கப்படும்.

எண்ணெய் ஒட்டாத ஸ்பெஷல் பேப்பர்களில் விநியோகிப்பார்கள்.

உண்டுவிட்டு பேப்பரைப் போட குப்பைத் தொட்டிகள். அவையும் ஒழுங்காக சுத்தப்படுத்தப்பட்டு எப்போதும் சீராக இருக்கும்.

உற்சவ காலங்களில் பெருமாளை வாகனத்தில் வைத்து அலங்கரித்து உள்ளேயே பிராகாரம் சுற்றி எழுந் தருளச் செய்கிறார்கள்.

சிங்கப்பூர்க்காரர்கள் இந்த ஊர் வலத்தில் சேவை செய்வதைப் பார்க்க வேண்டும். தீவர்த்தி ஏந்துகிறார்கள். கோயில் சின்னங்களைப் பிடிக் கிறார்கள். அவர்களே போட்டி போட்டுக் கொண்டு வாகனங்களைத் தூக்குகிறார்கள்.

அந்தஸ்து, பதவி எதைப் பற்றியும் சிந்திப்பதில்லை. பக்தி கலந்த சிரத்தையோடு செய்கிறார்கள்.

ஒரு கோயிலில் இந்த வாகன சேவையில் சர்ப்ப கதி, கஜகதி என்று பலவித நடைகளைக் காட்ட வேண்டி யிருக்கிறது.

இந்த பக்தர்களே கௌரவம் பார்க்காமல் நடனம் ஆடுவது போல இதைச் செய்கிறார்கள்.

கூலி ஊழியர்களே வாகனம் தூக்குவதைப் பார்த்த நமக்கு இது ஓர் அதிசய மாறுபாடு!



கேலாங் சிவன் கோயிலின் பிரதான சந்நிதி

இந்தச் சேவை மனப்பான்மை மனப்பூர்வமாக இவர்களைப் பற்றி யிருக்கிறது.

பொதுவாக கோயில் பார்க்கிங் பகுதியில் நிற்கும் டோயடோ.



வீரமாகாளியம்மன் கோயில்



எல்லாவித அந்தஸ்து உள்ளவர்களும் கோயிலில் அன்று உண்பதை ஒரு முக்கிய அங்கமாக நினைப்பார்கள்.

கோயிலை ஒட்டி பெரிய திருமண மண்டபம்! அதன் முன்னால் நீளமாக க்யூ நிற்கிறது. நகரிலுள்ள எல்லாரும் நிற்கிறார்கள். ஏற்றத்தாழ்வு இல்லாமல் சமமாக நிற்கிறார்கள்.

ஒருவருக்கு இடம் கிடைக்க கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் ஆகிறது. ஆனால் அதை யாரும் பொருட்படுத்துவதில்லை.

கிழக்கு கேலாங் சிவன் கோயிலின் வெளித் தோற்றம்

பென்ஸ் கார்களைப் பார்த்தே வந்திருக்கும் பக்தர்களின் அந்தஸ்தை அறிந்துவிட முடியும்.

வைணவக் கோயில் ஆயிற்றே! சில விசேஷ தினங்களில் விருந்தும் உண்டு.

குறிப்பாக, புரட்டாசி சனிக் கிழமையில் இங்கு நடக்கும் விருந்துக்கு சிங்கப்பூர் நகரமே திரண்டு வந்துவிடும்.





• நான்முகன்



• மகேஸ்வரி

## வடபத்திர காளி அம்மன்

சிராங்கூன் சாலையில் உள்ள மற்றோர் ஆலயம் வடபத்திர காளியம்மன் கோயில்.

இந்தக் கோயிலைக் கட்டுவதிலிருந்தே முன்னின்று வளர்த்து சந்நிதிகளும் கோபுரமும் காண வைத்த முக்கிய பிரமுகர் காலம் சென்ற திரு.எஸ்.எல்.பெருமாள் அவர்கள்.

கோயிலுள் காளியம்மன், ஸ்ரீஇராமபிரான் இருவருக்கும் பிரதான சந்நிதிகள். கூடவே சுப்ரமணியர், பிள்ளையார் ஆகியவர்களும் சந்நிதி கொண்டிருக்கிறார்கள்.

எவ்வளவு நேரமும் அம்மன் முன்னே நிற்கலாம் போல ஒரு மன ஈடுபாடு நமக்குத் தோன்றுகிறது. அப்படி ஒரு தெய்விக அழகு!

அடுத்தாற்போல் பக்கத்தில் விநாயகர் சந்நிதி. சந்தனக்காப்பு விநாயகரைப் பார்த்தால் பக்திப் பரவசம் மனத்தில் பூத்துக் குலுங்கும்.

அதை அடுத்து முருகன் சந்நிதி, கையில் வேலும், அபய முத்திரைக் காப்பும் கொண்டு நமக்கு அருள் வழங்குகிறார்.

அடுத்த பெரிய சந்நிதி இராமர் சந்நிதி.

தமிழ்நாட்டுப் பெரிய கோயில்களில் நடப்பது போல் எல்லாச் சேவைகளும் இந்தக் கோயிலில் குறையில்லாமல் நடக்கின்றன.

ஆஞ்சனேயருக்குத் தனிச் சந்நிதி! அனுமான் பிரசன்ன முகமாக நமக்குத் தரிசனம் தருகிறார்.

பிராகாரத்தில் அசுரனைக் கொல்லும் காளியின் தோற்றம் ஆளுயரத்தில் சுதையில் வடிக்கப்பட்டிருக்கிறது. பார்ப்பவர்களுக்கு அச்சம் தரும் உருவம்.

இன்னும் நாட்டுப்புற தெய்வங்களும் இங்கே குடி கொண்டிருப்பது கோயிலின் முக்கிய அம்சம்.

மண்டபத்தில் பிரசாதம் பரிமாறுகிறவர்கள் யாவரும் சிங்கப்பூர் வாசிகள். தொண்டு செய்வதற்காக வந்திருக்கிறார்கள்.

என்ன பரபரப்பான தொண்டு!

தரையில் இலை போட்டுப் பரிமாறுகிறார்கள். சம்பிரமமாக சாம்பார், ரசம், வடை, பாயசம் எல்லாம் உண்டு.

ஒரு கோஷ்டி உண்டு முடித்ததும், மிகத் துரிதமாக, தொண்டர்கள் தரையைச் சுத்தம் செய்கிறார்கள். எல்லா இலைகளும் பெரிய பாலிதீன் பைகளுள் ஓடுகின்றன.

தரையை நன்றாகத் துடைத்த பிறகு ஈரம் போகும்படி மற்றொரு துடைப்பு!

எல்லாம் இரண்டு மூன்று நிமிடங்களுக்குள்!

இடத்தைப் பார்த்தால் ஒரு விருந்து நடந்திருக்கிறது என்பதே தெரியாது.

அடுத்த கோஷ்டி சாப்பிடுவதற்கு உட்காருகிறது.

(இந்தக் கோஷ்டியில் நானும் சாப்பிட்டிருக்கிறேன்)

இந்தத் திருமண மண்டபத்தில் திருமணங்களும், உபன்யாசங்களும் ஆன்மிக நிகழ்ச்சிகளும் நடக்கின்றன.

தவிர, இந்தக் கோயில் 'இந்து மதம்' என்பதற்குப் பொது இலக்கியமாக விளங்கி வருகிறது.

வியாழக்கிழமைகளில் சத்ய சாய்பாபா சத்சங்கம் கூடுகிறது. ஏராளக் கூட்டம். பாதிப் பேர் சீனர்கள், மலேஷியர்கள். வாசல் வழிகளில் சீனர்கள் சாய்பாபா படம், புத்தகம், காஸெட் முதலியவற்றை விற்கிறார்கள்.

சீனர்கள் பாபா பஜனையில் கலந்து பாடுவது பார்ப்பதற்கு ஒரு பரவசமான காட்சி!

ஐயப்ப பூஜையும் இங்கே நடக்கும்.

சைதன்ய வழிபாட்டினர் ஒருவிதமாக நடனம் ஆடியவாறு பஜனை பாடுவதும் இங்கே நடக்கும்.

இன்னும் இந்துக்கள் அனைவரும் அவரவர் சம்பிரதாயங்களுக்கிணங்க நடத்திக் கொள்ளும் விசேஷ பூஜைகளும் சடங்குகளும் இங்கே நடக்கும்.

ஆக ஓர் 'இந்து' என்று அடைமொழி சொல்வதற்கேற்ப அத்தனை வித வழிபாடுகளும் இங்கே நடக்கும்.

விஜயலட்சுமி, தான்யலட்சுமி, கஜலட்சுமி, சந்தானலட்சுமி, வீர லட்சுமி முதலான அத்தனை லட்சுமிகளையும் சுந்தர வடிவில் பார்க்கிறோம்.

தூண்களில் பல பக்தர்களின் உருவங்கள் நம் மனங்களைக் கொள்ளை கொள்கின்றன.

தினமும் கூட்டம் அலை மோது கிறது.

பஜனைகள் தவிர சமயச் சொற்பொழிவுகளும் அவ்வப்போது நடைபெறுகின்றன. எப்போதும் சுறுசுறுப்பாகத் திகழ்கிறது இந்தக் கோயில்.



**வீரமாகாளியம்மன் கோயில்**

சிராங்கூன் சாலையில் இருக்கும் மற்றொரு கோயில் இது. ஏழைகள் கட்டிய கோயில்.

165 ஆண்டுகளுக்கு முன் (1835) சிங்கப்பூரில் பொதுப் பணித் துறையில் வேலை செய்த நாட்சம்பள ஊழியர்கள் இதைக் கட்டினார்கள்.

1981இல் இதைப் புதுப்பித்திருக் கிறார்கள்

சுற்றுலா வரும் மேலைநாட்டுப் பிரயாணிகளுக்கு இது ஓர் இலக்கான கோயில்.

தினமும் இவர்கள் வந்து போட்டோ நிறைய எடுப்பார்கள்.

திறந்திருந்தால் உள்ளே போய் எல்லாத் தெய்வங்களையும் பிரமிப் போடு பார்ப்பார்கள். இந்து மதம் தெரிந்த அவர்களது வழிகாட்டிகளே கோயிலைப் பற்றி விவரிப்பார்கள்.

நமக்கு முன்னால் சந்நிதி கொண் டிருப்பது வீரமாகாளியம்மன். உக்கிர விழிகள் பயபக்தியை உண்டாக்கும்.

அவரது வரிசையில் ஒரு புறம் ஆறுமுகக் கடவுள். மற்றொரு புறம் விநாயகர். இன்னும் சிவன், பார்வதி ஆகியோரின் சந்நிதிகள்.





• விட்டத்தைத் தாங்கும் யாளிகள் • கர்ப்பக் கிருகத்தைச் சுற்றி அமைப்புகள்

பிராகாரமும் சுற்றுப்புறமும் 'சுத்தம்'! தமிழர்கள் ஏராளமாக வந்து வணங்கும் கோயில் இது.



**'கேலாங்' (கிழக்கு) சிவன் கோயில்**

சிங்கப்பூரில்—

புது இந்துப் பாணி கோயிலுக்குச் சின்னமாக அமைவது கிழக்கு கேலாங்கில் உள்ள சிவன் கோயில்.

கிட்டத்தட்ட 15 கோடி ரூபாயில் 1993இல் அமைக்கப்பட்டது.

இதன் சிவலிங்கம் கி.பி.1390. சோழ வம்ச பரமேச்வரனால் கொண்டு வரப்பட்டது என்று கூறுகிறார்கள்.

சிங்கப்பூரில் பிரசித்தமாக இருக்கும் ஆர்ச்சேர்டு ரோடில் இந்தக் கோயில் இருந்தது.

பின்னர் பாதாள ரயில்வேக்கு இடம் விட்டு சிராங்கூன் சாலைக்கு நகர்ந்தது. இப்போது கேலாங் (கிழக்கு) பகுதியைத் தேர்ந்தெடுத்து 1993இல் பிரம்மாண்ட கோயில் எழுப்பி இருக்கிறார்கள் சிங்கப்பூர்க் காரர்கள்.

தமிழகமும் தெரிகிறது. வட இந்திய கஜூரஹோ பாணியும் இதில் தெரிகிறது.

வெளிச்சுவரில் 108 நடன வடிவங் களை வடித்திருக்கிறார்கள்.

எண்கோண வடிவில் கட்டடம். அரண்மனை போன்ற கலைக்கூடம்.

ஏராளப் படிகள் ஏறி மேலே போனால் தரையில் மிதிக்க கால் கூசுகிறது. அத்தனை சுத்தம்! எங்கும் பளிங்கின் பிரதிபலிப்பு!

உள்ளே மனத்துக்கு இதமான நிசப்தம். கண்ணில் விழும் 32 தூண் களும் பிரமிக்க வைக்கின்றன. கல்லா? காங்கிரீட்டா?

காங்கிரீட்டில் இவ்வளவு வேலை செய்ய முடியுமா? அசந்து போகி றோம்.

கர்ப்பகிருகத்தின் உயரமும் அதில் சிவனின் கம்பீரத் தோற்றமும் மிக எடுப்பாகத் தெரிகிறது.

பக்கத்து சந்நிதியில் இன்னொரு சிவலிங்கம் இருக்கிறது. காசியில் நடப்பது போல இந்த லிங்கத்திற்கு பக்தர்கள் தாங்களே அபிஷேகம் செய்யலாம். பூஜை செய்யலாம். ●

# வாழும் கலை அளித்து வாழ்விக்க வந்த மகான்



'தோள் கண்டார் தோளே கண்டார், தாள் கண்டார் தாளே கண்டார்' எனக் கம்பன் அன்று இராமனைப் பற்றிப் பாடியது கவிதையின் மிகைப்படுத்துதலோ என்ற ஐயப்பாடு கொண்டுள்ளவர்கள், நம்மிடையே இன்று தெய்வத்தின் திருவுருவாய், கண்டோருக்கும் காணாதோருக்கும், ஏன் உலகத்துக்கே அருள் பாலித்து வரும் ஸ்ரீஸ்ரீரவிசங்கரின் ஒளிவீசும் திருமுகத்தைப் பார்த்தால் கம்பன் அன்று இறைவனைப் பற்றிப் பாடிய அனுபவம் இதுதான் என உணர்வர்.

கிருஷ்ணன் என்ற சொல்லுக்கு காந்தம் போல் ஆகர்ஷிப்பவன் என்று ஓர் அர்த்தம் உண்டாம். திறந்த மனத்துடன் இவரைப் பார்ப்பவர்களின் கரங்கள் தாமாகவே வணக்கத்தில் குவிகின்றன. கண்கள் அமைதியில் மூடி அந்த நொடியின் தெய்வானுபவத்தை மனது அனுபவப்பூர்வமாக உணர்கிறது. அடுத்த நொடியில் தெய்வமே கண்முன் இருக்கையில் நேரத்தை வீணாக்காமல் அந்த தெய்வ தரிசனத்தின் அனுபவத்தை முழுதும் தனதாக்கிக் கொண்டு, வேண்டியபோது மனத்திரையில் நினைவு கொள்ள வசதியாக இருக்கும் வகையில் மனம் கண்களை மூடவிடாமல் எச்சரிக்கையும் செய்கிறது.

இப்படிப்பட்ட மனித தெய்வம் நம்மிடையே இருப்பது இந்தியாவைவிட வெளிநாட்டில் உள்ள பலருக்கும் அதிகமாகத் தெரிந்திருக்கிறது. இந்த தெய்வ தரிசனமும் அது விளைவிக்கும் ஆனந்தமும் அனைவருக்கும் சொந்தமாகவேண்டும் என்பதே இக்கட்டுரையின் நோக்கம். 'கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்' என ஆண்டாள் அன்று பாடியதன் நோக்கமும் அதுதானே!

தற்போது நாற்பத்து மூன்றே வயதான இவர் தென்னிந்தியாவைச் சேர்ந்த குடும்பத்தில் பெற்றோர் செய்த தவத்தின் நற்பயனால் அவதரித்துள்ளார். குழந்தைப் பருவத்திலேயே பல மணி நேரம் தியானத்தில் மூழ்கி இருந்ததாகக் கூறுகின்றனர் இவர் பெற்றோர். 'இப்பிரபஞ்சமே என் குடும்பம். இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைவரும் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றனர்' எனத் தன் பள்ளித் தோழர்களிடம் கூறியதாகக் கேள்வி. சிறியவர், பெரியவர், சாதி மதம், ஆண் பெண், படித்தோர் படிக்காதோர், கடவுள் நம்பிக்கை உள்ளவர், இல்லாதவர் அனைவரும் இவரது ஓர் அன்புப் பார்வையில், ஸ்பரிசத்தில், புன்னகையில் புதிதாகப் பிறந்ததைப் போல் உணர்கின்றனர். அனைவராலும் அன்புடன் 'குருஜி' என அழைக்கப் படுகிறார்.

குரு என்பவர் யார்? நம்மைப் பற்றிய விழிப்புணர்வை நமக்கு ஏற்படுத்துபவரே குரு. ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு நாளும் இதழ்விரிவது போல் நம்மை நமக்குள் மலரச் செய்பவரே குரு. யார் சந்நிதியில் நமக்குத் தேவைகள் என்று ஒன்று தோன்றுவதில்லையோ, எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் யார் சந்நிதியில் நமது பூரணத்துவத்தை நாம் உணர்ந்து கொள்கிறோமோ, யார் சந்நிதியில் காரண காரியமின்றி நம் மனத்தில் அன்பும் மகிழ்ச்சியும் பீரிட்டுப் பொங்குகின்றனவோ அவரே குரு என அறிந்துகொள்ளலாம். ஸ்ரீஸ்ரீரவிசங்கரின் சந்நிதியில் இவையனைத்தும் சாத்தியமாயிற்று பலருக்கு. தன் சீடனையும் தன் நிலைக்கு உயர்த்துபவரும் குரு மட்டுமே.

ஸ்ரீஸ்ரீரவிசங்கர் முன்னிலையில் நடைபெறும் சத்சங்கங்களில் பங்கு பெறுவது ஒரு விசேஷ அனுபவம். பக்திப் பரவசத்தில் மக்கள் தன்னை மறந்து

எஸ்.வேதவல்லி

கண்களை மூடி தியான நிலையில் எளிய நாமாவளி களைப் பாடுவது சத்சங்கங்களின் முக்கிய அம்சம். நூற்றுக்கணக்கானோர் பங்கு பெறும் சத்சங்கங்களின் ஆக்கப்பூர்வமான சக்தியை அனுபவப்பூர்வமாக உணர்ந்தோர் கணக்கிலர். ஸ்ரீஸ்ரீரவிசங்கர் உலகத்தில் எங்கிருந்தாலும் ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு புதிய தலைப்பில் அவரது ஞானக்கண் பார்வையில் உருவாகும் ஞானோபதேசங்கள் சத்சங்கங்களில் வாசிக்கப்படும். பலரும் அந்தந்த வாரத்தில் தங்களுக் கெனவே அவை எழுதப்பட்டதாக உணர்ந்திருக் கின்றனர்.

வார்த்தைகளின் பலன் மௌனத்தைத் தோற்று விப்பதே என்பதை குருஜியின் முன்னிலையில் அறிந்து கொள்ளலாம். அவர் சந்நிதானத்தில் கேள்விகளும் விடைகளும் தாமாகவே விடைபெறுகின்றன. சம்பிரதாயங்கள் அன்றி, ஒரு நெருங்கிய தோழனைப் போல் புன்சிரிப்புடனும் நகைச்சுவையுடனும் ஆழமான அறிவை அனைவருக்கும் சுலபமான முறையில் புரிய வைக்கும் எளிய அரிய மாமனிதர் இவர். தனிப்பட்ட முறையில் இவரைப் பற்றிக் கேட்கும் அனைத்துக் கேள்விகளுக்கும் இவரது பதில் புன்சிரிப்பு மட்டுமே.

இவரை முழுமையாக அறிந்து கொள்வது சாதாரண மனிதர்களுக்கு இயலாதது. கடல் நீரைக் கொட்டாங் கச்சியில் அடக்க முடியுமோ? எனினும் இவரைப் பார்ப்பதற்கும், சிறிதாவது நம் சிற்றறிவுக்கு எட்டிய வரை இவரை உணர்ந்து கொள்வதற்குமே மகாபுண்ணியம் செய்திருக்கவேண்டும் என இவரை நேரில் கண்டு அனுபவித்தவர்கள் கூறுகின்றனர்.

சூழ்நிலைகள் எதுவாக இருந்தாலும், நடப்பதும் நடக்கப் போவதும் எதுவாயினும், கவலையில்லாமல் இருப்பதோடன்றி மகிழ்ச்சிப் பெருக்குடன் ஒவ்வொரு நொடியிலும் நிகழ்காலத்தில் வாழ்வதெப்படி என்பதை சாதாரண மக்களும் அறிந்துகொள்ள 'வாழும் கலை' என ஒரு பயிற்சியையே உருவாக்கி அளித்துள்ள அவர் கருணையை என்னென்பது!

வாழும் கலை (Art of living) என்னும் இப்பயிற்சி தற்போது 93 நாடுகளில் ஸ்ரீஸ்ரீரவிசங்கரின் நேர்முகப் பார்வையின்கீழ் தனிப்பயிற்சி பெற்ற ஆசிரியர்களால் பயிற்றுவிக்கப்படுகிறது. மொத்தம் 16 மணி நேரப் பயிற்சியான இது 6 நாள்களில் சிறிது சிறிதாகக் கற்றுத் தரப்படுகிறது. ப்ராணாயாமம், யோகா ஆகியவற்றுடன் வாழ்க்கைக்கு முக்கியத் தேவையான ஆத்ம ஞானமும் போதிக்கப்படுகிறது. 16 வயதான அனைவரும் சாதிமத வேறுபாடின்றி இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

நமது மூச்சிற்கும் சிந்தனைக்கும் உள்ள தொடர்பின் அடிப்படையில் உருவான இப்பயிற்சியினால் மருந்துகளின்றி ஆஸ்துமா, மைக்ரேன், ரத்த அழுத்தம், மனத்தளர்ச்சி, தூக்கமின்மை, ஏன் - கோபம், வருத்தம், தனிமை, மன உளைச்சல் போன்ற நோய்களிலிருந்தும் விடுபட்டுத் தன்னம்பிக்கை, தனிமனித ஆற்றல் மேலோங்கிப் பயனடைந்தோர் ஏராளம். பெங்களூரி லுள்ள NIMHANS, அமெரிக்காவிலுள்ள நேஷனல் இன்ஸ்டிட்யூட் ஆப் ஹெல்த் போன்ற நிறுவனங்கள் இப்பயிற்சியினால் கிடைக்கும் பலனை ஆராய்ந்து பல அரிய கருத்துகளை வெளியிட்டுள்ளனர்.

பீஹாரில், இப்பயிற்சியை மேற்கொண்ட சிறைக் கைதிகள் பலரும், "இப்படிப்பட்ட ஒரு பயிற்சி எங்களுக்கு முன்பே கிடைத்திருந்தால் நாங்கள் சிறைக்கே வந்திருக்கமாட்டோம்" எனக்கூறுகின்றனர்.

பெரிய நிறுவனங்களான பிரிட்டானியா, ஓபராய், ஆர்.பி.ஜி. டாடா இன்ஃபோஸிஸ், ராம்கோ, எக்ஸைடு பாட்டரீஸ், ரூட் இண்டஸ்ட்ரீஸ், ஹாரிசன் (மலையாளம்) போன்ற பல நிறுவனங்களின் அதிகாரிகள் இப்பயிற்சியை மேற்கொண்டு பயனடைந்துள்ளனர்.

ராஜீவ்மேனன், கங்கை அமரன், ஏவி.எம்.குமரன், பத்மா சேஷாத்ரி பள்ளியின் மிஸஸ் ஒய்.ஜி.பி. சஞ்சய்தத்தின் மனைவி திருமதி ரியா பிள்ளை, நடிகை மது எனப் பல துறையைச் சேர்ந்தவர்களும் இப்பயிற்சியை மேற்கொண்டுள்ளனர்.

டெல்லியிலுள்ள ஆல் இண்டியா இன்ஸ்டிட்யூட் ஆப் மெடிகல் சயின்ஸஸ் கேன்சர் சென்டரின் தலைவர் வினோத் கோச்சுப் பிள்ளை பலவகை யோகா, தியானமுறைகள் கற்றபின் கடைசியில் 80இல், வாழும் கலைப் பயிற்சியை மேற்கொண்டார். "புதிய தெம்பு, மற்றும் பொறுமையை எனக்கு அளித்து என்னை ஒரு புதிய மனுஷியாகவே இப்பயிற்சி மாற்றியுள்ளது" எனக் கூறுகிறார் இவர்.

இப்பயிற்சியின் மூலம் கிடைக்கும் அங்கத்தினர் சந்தாவில் ஏழை எளிய மாணவர்களுக்கு இலவசக் கல்வி, உணவு, சீருடை அளிக்கப்படுகிறது.

தவிர இந்தியாவின் 200க்கும் மேற்பட்ட இளைஞர்களைத் தேர்ந்தெடுத்துத் தற்போது 'கிராம மேம்பாடு' பற்றி ஒரு தனிப்பயிற்சியை 2 மாதகாலம் பெங்களூரிலுள்ள பன்னாட்டு மையத்தில் இலவசமாக அளித்து, ஒவ்வொருவரையும் 10 கிராம வளர்ச்சிக்குப் பொறுப்பாக அனுப்பி வைத்து ஒரு கிராம மறு மலர்ச்சி இயக்கத்தையே தொடங்கி வைத்துள்ளார் ஸ்ரீஸ்ரீரவிசங்கர். இந்தியாவில் தவிர இண்டர்நேஷனல் அசோசியேஷன் ஃபார் ஹ்யூமன் வேல்யூஸ் (IAHV) என்ற பன்னாட்டு நிறுவனத்துடன் ஒருங்கிணைந்து

செயல்பட்டு அன்பு, பாசம், நேசம், நம்பிக்கை, அஹிம்சை போன்ற அடிப்படை நெறிமுறைகளை மக்களிடையே வளரச் செய்வதில் ஈடுபட்டுள்ளது வாழும் கலை நிறுவனம். IAHVஇல் பன்னாட்டுத் தலைவர்கள், பிரதமர்கள், ஜனாதிபதிகள் போன்றோர் அங்கத்தின ராவர். இவர்கள் அனைவரும் ஸ்ரீஸ்ரீரவிசங்கரின் ஆலோசனையின் பேரில் இந்தச் சேவையை மேற்கொண்டுள்ளனர்.

ஸ்ரீஸ்ரீரவிசங்கர் கூறுகிறார் – "இன்று உலகில் நடக்கும் போர்களுக்கும் போராட்டங்களுக்கும் என்ன காரணம்? 'நான் யார்' என்னும் கேள்விக்கு மனிதன் தன் குறுகிய கண்ணோட்டத்தில் காணும் விடையே. மனிதன் தன் சாதி, மதம், தொழில், தேசம், பாரம்பரியம், இனம், மொழி, பால் போன்ற பிரிவினைகளின் அடிப்படையில் மட்டுமே தன்னை அடையாளம் கண்டுகொள்கிறான். இந்த அடையாளத்தைப் பாதுகாக்கத் தயாராகவும் இருக்கிறான். காரண காரியங்களை, நியாயம், நேர்மையைச் சுட்டிக் காட்டும் அறிவும் பயனற்றதாகிப் போகிறது."

இதை எப்படி சமாளிப்பது? அவரே விடையையும் கூறுகிறார். ஆத்ம ஞானம் ஒன்றே இதற்குத் தீர்வு. சமயம் என்பது வேறு, கடவுள் என்பது வேறு, சமயம் என்பது பழத்தோல் போன்றது, கடவுள் என்பவர் பழம் போன்றவர். பழத்தைவிடப் பழத்தோலா நமக்கு முக்கியம்?

அனைத்துச் சமயங்களுக்கும் மூன்று தோற்றங்கள் உண்டு. நீதி நெறிமுறைகள், புற அடையாளங்கள் மற்றும் பழக்க வழக்கங்கள். வேறுபாடு என்பது அடையாளங்களிலும் பழக்க வழக்கங்களிலும் மட்டுமே. நீதி நெறிமுறைகள் அனைத்துச் சமயங்களுக்கும் ஒன்றே. நீதி நெறிமுறைகளை மறந்து, பழத்தோலைப் போல் புற அடையாளங்களையும், பழக்க வழக்கங் களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு சண்டையிடுகிறோம் நாம்.

சரியான ஞானம், படிப்பு, அறிவு ஆகியன இயற்கையில் காணும் வித்தியாசங்களை மதிக்க நமக்குக் கற்றுத்தரவேண்டும். "நான் இந்த உலகத்தின் ஓர் அங்கம். இந்த உலகில் உள்ள அனைத்துமே (மக்களையும் மாக்களையும் சேர்த்து) என்னுடையவை என்ற பாவத்தை ஏற்படுத்த வேண்டும். இந்த வகையில் அனைத்துச் சமயங்களையும் தனதாக்கிக் கொண்டு, தன் உள்ளுணர்வு தூண்டும் சமயத்தை, பிற சமயங்களை இகழாமல் பின்பற்றலாம்"

இத்துடன் மனித மேம்பாட்டிற்கு இருவழிகள் உள்ளன என்கிறார். குறுகிய வட்டத்தில் தன்னை 'யாரோ'வாக அடையாளம் கண்டு கொள்ளும் மனிதன், தான் 'எது'வாகவும் இல்லாமல் இருப்பது முதல்படி. எதுவாகவும் இல்லாமல் இருந்து பின் எல்லாமாகவும் இருப்பது இரண்டாவது படி.

இந்த நிலையை அனைவரும் அடையவேண்டுமென்றே ஸ்ரீஸ்ரீரவிசங்கர் உருவாக்கிய 'வாழும் கலை'யின் நோக்கம்.

இவரைக் காண விழைபவர்கள் பெங்களூரிலிருந்து 21 கி.மீ.தொலைவில் உள்ள கனகபுரா சாலை, உதயபுராவில், ஸ்ரீகுன்றுகளுக்கு இடையில் அமைதி யான ஏரியின் மடியில் இயற்கைச் சூழலில் அமையப்பெற்ற வேதவிஞ்ஞான மகாவித்யா பீடத்துடன் தொடர்பு கொண்டு சந்திக்கலாம். உலகம் முழுவதும் இவரது தரிசனத்திற்காக மக்கள் காத்துக் கொண் டிருப்பதால் இவர் அடிக்கடி பிரயாணம் மேற்கொள்ள வேண்டி வரும். எனவே இவர் இருப்பதை உறுதி செய்தபின் செல்வது நல்லது.

**தொலைபேசி: 080 – 8432273**

வாழும் கலைப்பயிற்சியை மேற்கொள்ள விரும்பு பவர்கள் –

**திரு. ஹரீஷ் இராமச்சந்திரன்,** பி–6, அபிநவ் கார்டன்ஸ், 34 வேளச்சேரி சாலை, சென்னை – 600 015 ஃபோன்: 2355457 என்ற தொலைபேசி எண்ணுடன் தொடர்பு கொண்டு பலனடையலாம்.

## கறுப்புக் காந்தி

*பாவலர் சாரதிதாசன்*

**கல்விக் கண்கள் திறந்தவர்**
**காமராசர் என்பவர்**
**சொல்லிலும் செயலிலும்**
**தூய்மை மிக்க முதலவர்**

**பட்டி தொட்டி எங்குமே**
**பள்ளிகள் திறந்தவர்**
**திட்டமிட்டுச் சேவைசெய்யும்**
**திறத்தில் சிறந்தவர்**

**பள்ளியில் படித்திடும்**
**பாலர்க்கும் பகலுணவு**
**அள்ளி அள்ளித் தந்தவர்**
**அன்பு பொங்க வந்தவர்**

**கறுப்புக் காந்தி என்பவர்**
**காந்தி வழியில் சென்றவர்**
**பொறுப்புடன் முதல்வராகிப்**
**புகழினில் உயர்ந்தவர்**




திருச்சி சித்த மருத்துவர் -ஆர்.கண்ணன்

சித்த மருத்துவ நூலகம்

# சிகரத்தைத் தொட்ட சித்த மருத்துவர்

திருச்சி வானொலியில் தொடர் சொற்பொழிவு நடத்தி, அந்த தொகுப்பு–ஆடியோ கேசட்களாக வந்து பெரும் வரவேற்பு பெற்றது. சென்னைத் தொலைக்காட்சி, விஜய் டி.வி., சன் டி.வியில் இவரது சிறப்புப் பேட்டிகள் ஒளிபரப்பாகி மக்களைப் பெரிதும் கவர்ந்து வருகின்றன. குறிப்பாக ஓராண்டிற்கு மேலாக ராஜ்.டி.வியில் தினமும் காலை 7.15 மணி அளவில் 'காலைத் தென்றல்' நிகழ்ச்சியில் தொடர்ந்து இவர் பயனுள்ள மருத்துவத் தகவல்களைத் தந்து வருவது இவருக்குப் பெரும் ரசிகர் கூட்டத்தையே உருவாக்கியுள்ளது. இவரைச் சந்திக்க நேரே திருச்சி பிரியா நர்ஸிங் ஹோம் சென்றோம்.

அழகிய முகப்பு உள்ள மருத்துவமனை சுகாதாரமாக, சுத்தமாகப் பராமரிக்கப்படுவதைப் பார்த்தோம்.

நோயாளிகள் தங்கி சிகிச்சை பெற அறைகளும், உதவி டாக்டர்களும், பயிற்சி பெற்ற நர்ஸ்களும், பணிவான பணியாளர்களும் இருப்பதைக் கண்டோம்.

பல அரிய நூல்களுடன் சித்த மருத்துவ நூலகம், பல அரிய மூலிகைச் செடிகளுடன் மூலிகைத் தோட்டம், மருந்துகள் தயாரிக்கும் கூடம், மருந்துகள் பாதுகாப்பு அறை, மூலிகைகளின் விசேஷத் தன்மை பற்றிய விளக்கப்படங்கள் அனைத்தையும் பார்த்தோம். அனைத்தும் டாக்டர் ஆர்.கண்ணன் அவர்களின் கடும் உழைப்பினால் உருவானவை.

**டாக்டர் ஆர்.கண்ணன்**

இந்திய ஜனாதிபதியின் கௌரவ சித்த மருத்துவராக முதல்முதலாக நியமிக்கப்பட்ட பெருமை பெற்று பத்து ஆண்டுகளாக தொடர்ந்து இந்தப் பதவியை வகித்து வருகிறார் டாக்டர் ஆர்.கண்ணன்.

இவரது தாய்–தந்தை இருவருமே பிரபல சித்த மருத்துவர்களாக வாழ்ந்தவர்கள். அந்தப் பரம்பரையில் வந்த இவர், சித்த மருத்துவப் புகழுடன் அதன் முன்னேற்றத்திற்காகத் தம்மை அர்ப்பணித்துத் தினமும் இருபது மணிநேரம் வரை உழைத்து வருபவர்.

ஐந்து வருட சித்த மருத்துவப் படிப்பை முறையாகப் படித்த முழுமையான பி.ஐ.எம். டாக்டர் இவர். எந்த வியாதியையும் குணப்படுத்திக் காட்டுவதில் தனது முப்பது வருட சித்த மருத்துவத் திறமையை–அனுபவத்தைப்–பயன்படுத்துகிறார்.

இந்திய அரசின் மாநில, மத்திய மருத்துவ உயர்பதவிகள் பலவற்றை வகித்து வருகிறார். பொதுமக்களால் விழா நடத்தப்பட்டு. 'சித்த மருத்துவ மாமணி' 'சித்த மருத்துவச் செம்மல்' போன்ற பல பட்டங்களைப் பெற்று சித்த மருத்துவப் பல்கலைக் கழகமாகத் திகழ்கிறார்.

கம்பீரமான அழகிய தோற்றம், நகைச்சுவையுடன்

ஸ்ரீவித்யா

நல்ல கருத்துகளைக் கூறும் இயல்பு ஆகியவற்றால் பலரின் மனத்தில் கோபுரமாய் உயர்ந்து விளங்குகிறார்.

"டாக்டர் பேச்சைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். வியாதியில் பாதி, அவரது பேச்சிலேயே நீங்கி விடுகிறது" என்கிறார்கள் நோயாளிகள்.

டாக்டர் கண்ணன் அவர்களின் சித்த மருத்துவ சிகிச்சையின் சிறப்பை அறிந்து இந்தியாவின் பிற மாநிலங்களில் மட்டுமின்றி உலக நாடுகள் பலவற்றி லிருந்தும் நோயாளிகள் தேடி வந்து குணம் அடைந்து செல்கிறார்கள்.

கைவிடப்பட்ட நோயாளிகளைக் கூட சவாலாக ஏற்று குணப்படுத்திக் காட்டுகிறார் டாக்டர் ஆர்.கண்ணன்.

குழந்தை பிறக்காத பல தம்பதியர் இவர் சிகிச்சை யால் குழந்தை பாக்கியம் பெற்று வருவது குறிப்பிடத் தக்கது.

'லூகோடெர்மா' எனப்படும் வெண்புள்ளி நோய்க்கு சிகிச்சை, 'செதில் படை நோய்' எனும் சோரியாசிஸ் நோய்க்கு சிகிச்சை, மூட்டுவலி, முகவாதத்திற்கு சிகிச்சை தந்து குணப்படுத்துவதில் தனிப்புகழ் பெற்று விளங்குகிறார், டாக்டர் ஆர்.கண்ணன். இவர் சித்த மருத்துவக் கட்டுரை எழுதாத பத்திரிகைகளே இல்லை எனலாம்.

இவரிடம் சிகிச்சைபெற்று நோய் குணமடைந்த சிலர் முகவரி கேட்டு அவர்களை நேரே சந்தித்து அவர்கள் கருத்தைக் கேட்டோம்.

**திரு.செல்வம் & திருமதி இராஜேஸ்வரி தம்பதி**

"எங்களுக்குத் திருமணம் ஆகி ஆறு வருடங்கள் ஆகியும் குழந்தை பிறக்காமல் மனம் வருந்தினோம். பல டாக்டர்களிடம் சிகிச்சை பெற்று, பணம் நிறையச் செலவழித்தோம். குழந்தை பிறக்கவில்லை. நண்பர்கள், உறவினர்கள் எங்களை கேலியாக பேசத் தொடங்கினர். நாங்கள் வேண்டிய தெய்வம் எங்களைக் கைவிடவில்லை. திருச்சி பிரியா நர்ஸிங் ஹோம் டாக்டர் ஆர்.கண்ணன் அவர்களின் பேட்டியைத் தொலைக்காட்சியில் பார்த்துக் கடிதம் எழுதி அனுமதி பெற்று சந்தித்தோம். எங்களுக்கு மிகச் சிறந்த சித்த மருத்துவச் சிகிச்சை அளித்தார். ஆறே மாதத்தில் பலன் கிடைத்து, கர்ப்பம் உண்டாகி குழந்தை பிறந்தது. ஆறு வருடம் குழந்தையில்லாத குறையை ஆறே மாத சிகிச்சையில் நீக்கிய டாக்டர் ஆர்.கண்ணன் அவர்கள் அற்புதமான சித்த மருத்துவ மேதை என்பதில் சந்தேகமே இல்லை"

**திருமதி மீனாட்சி**

"எனக்கு மூட்டுவலி-மூட்டுவாதம் வந்து இரண் டாண்டுகள் படாத பாடுபட்டேன். உட்கார முடியாது. உட்கார்ந்து எழும்போது மூட்டுவலி உயிரைப் போக்கும் படி இருக்கும். நடக்கமுடியாது. காய்கறி வாங்கச் சந்தைக்கு மிகச் சிரமப்பட்டுச் சென்று வருவேன். டாக்டர்களிடம் காண்பித்து எத்தனையோ மருந்துகள் சாப்பிட்டும் ஊசிகள் போட்டுக் கொண்டும் பலன் ஏற்படவில்லை. சில மருந்துகள் தற்காலிக நிவாரணம் மட்டுமே தந்தன. பத்திரிகைகளில் திருச்சி சித்த மருத்துவ நிபுணர் டாக்டர் ஆர்.கண்ணன் அவர்களைப் பற்றிப் படித்துத் தொலைபேசி மூலம் 'அப்பாயிண்ட் மெண்ட்' பெற்றுச் சந்தித்தேன். அவரது மருத்துவ



பிரியா நர்ஸிங் ஹோம்



திருமதி.இராஜேஸ்வரி (குழந்தைப் பேறு)



திருமதி.அம்சவல்லி (முகவாதம்)



திருமதி.ஜானகி (தீராத தலைவலி)

மனையில் அட்மிட் செய்து பதினைந்து நாள்கள் மட்டுமே சிகிச்சை செய்து பூரணமாக மூட்டுவலியைக் குணப்படுத்தி விட்டார். பிசியோதெரபி, ஆயில் மஸாஜ், மூலிகைகளை மூட்டுகளில் கட்டுதல் போன்ற சிகிச்சை அளித்தும், சில உடற்பயிற்சி செய்யவைத்தும் என் மூட்டு வாதத்தை முழுதுமாக சரி செய்துவிட்டார். இப்போது வலியின்றி நன்றாக நடக்கிறேன்''

வண்ணப் போட்டோ: வி.கண்ணன்

திருமதி.மீனாட்சி

(மூட்டுவலி)



### திரு.சீதாராமன்

''எனக்கு உடல் முழுவதும் 'சோரியாசிஸ்' என்ற தோல் உரியும் செதில்படை நோய் வந்து வேதனையில் புழுவாகத் துடித்தேன். ஒரு நாளைக்கு ஒரு கூடை நிறையத் தோல் உரியும். உடம்பு முழுதும் அரித்துச் சொரிந்து கொண்டே இருப்பேன். தோல் உரிந்து கொண்டே இருக்கும். பல மருத்துவர்களைச் சந்தித்து விதவிதமான சிகிச்சை செய்து கொண்டும் குணமாக வில்லை. திருச்சி சித்த மருத்துவ நிபுணர் டாக்டர் ஆர்.கண்ணன் பற்றி வெளிநாட்டவர் ஒருவர் பெருமையாகப் பேசியதைக் கேட்டு, அவரது பிரியா நர்ஸிங் ஹோமில் டாக்டரைச் சந்தித்து சிகிச்சை பெற்றேன். அவரது மருத்துவமனையில் தங்கி, ஒரே மாதத்தில் நான் காண்பது கனவா என்று வியக்கும்படி எனது தோல் உரியும் வியாதி'சோரியாசிஸ்' பூரணமாகக் குணமானது. பத்திய முறையுடன் சில தைலம் தடவி, மருந்துகள் சாப்பிட்டு நிவாரணம் கிடைத்தது. பல வருட நோயை ஒரே மாதத்தில் குணப்படுத்திக் காட்டிய டாக்டர் ஆர்.கண்ணன் எனக்கு மறுஜென்மம் தந்த தெய்வமாகத் தெரிகிறார்''

(செதில் படை நோய்)



திரு.சீதாராமன்



மூலிகைத் தோட்டம்

(கிரகணி நோய்)



திருமதி.இராஜேஸ்வரி







**திருமதி இராஜேஸ்வரி**

"எனக்கு வயிறு வலித்து ஒரு நாளைக்கு ஏழு முதல் எட்டு தடவை வரைகூட மலம் அடிக்கடி போய்க் கொண்டே இருந்தது. எப்போதும் மலம் கழிக்க வேண்டும் என்ற உணர்வு இருந்துகொண்டே இருக்கும். சாப்பிட்ட உடனேயே மலம் கழிக்கச் சென்றுவிடுவேன். இந்த கிரகணி நோய் என்னைச் சித்ரவதை செய்தது. நிம்மதி, மகிழ்ச்சி எல்லாம் போய்விட்டன. எந்த நேரம் மலம் வருமோ என்ற பயம். பயத்தில் இருந்ததால் பஸ் பயணத்தைத் தவிர்த்தேன். உடம்பு வலிக்கும். எடையும் குறைந்து வாடினேன். திருச்சி சித்த மருத்துவ நிபுணர் டாக்டர் ஆர்.கண்ணன் சொற்பொழிவை வானொலியில் கேட்டு அவர் மீது நம்பிக்கை ஏற்பட்டு கடிதம் மூலமாகத் தொடர்பு கொண்டு சந்தித்து சிகிச்சை பெற்றேன். நான்கு வருட நரக வேதனையை நான்கே மாதத்தில் டாக்டர் ஆர்.கண்ணன் குணப்படுத்தி எனக்கு இன்ப அதிர்ச்சி அளித்தார். பல டாக்டர்களால் குணப்படுத்த இயலாத 'கிரகணி' வியாதியைக் குணப்படுத்துவதில் டாக்டர் ஆர்.கண்ணன் தனிப்புகழுடன் திகழ்கிறார்"

**திருமதி.அம்சவல்லி**

"எனது முகத்தில் வலப் பக்கமாக வாய் கோணி சுருக் சுருக்கென்று குத்துவதுபோல் வலி வந்து 'முகவாதம்' நோயால் பாதிக்கப்பட்டேன். பேசவும் முடியாமல் போனது. இதனால் தாழ்வு மனப்பான்மை வந்து தற்கொலை செய்துகொண்டு விடலாமா என்றுகூடத் தோன்றியது. பல வைத்தியம் பணத்தைக் கரைத்ததே தவிர, பலன் கொடுக்கவில்லை. நான் மனம் நொந்த நிலையில் திருச்சி டாக்டர்.ஆர்.கண்ணன் அவர்களிடம் சிகிச்சை பெற்று முகவாத நோயிலிருந்து முற்றிலும் குணமான என் தோழி, டாக்டர் பற்றி பெருமையாகக் கூறி டாக்டர் கண்ணன் அவர்களைச் சந்திக்க வைத்தாள். அவர் தந்த அற்புத சிகிச்சையால் மூன்று வருட முகவாத நோய் மூன்றே மாதத்தில் முழுமையாகக் குணமானது. டாக்டர் கண்ணன் அவர்கள்மூலம் எனக்குப் புதுவாழ்வு கிடைத்தது குறித்துப் புல்லரித்துப் போனேன்"

**திருமதி.ஜானகி**

"எனக்கு தலைமுழுதும் வலி வந்து வேதனையால் துடியாய்த் துடித்தேன். எத்தனை மருந்து மாத்திரைகள் சாப்பிட்டும் தீராத தலைவலி என்னைக் கொடுமைப் படுத்தியது. பல டாக்டர்களின் சிகிச்சைகளும் எனக்குப் பலன் தரவில்லை. தலைவலி அதிகமாகி வாந்தி வரத் தொடங்கிவிட்டது. திருச்சி சித்த மருத்துவ நிபுணர் டாக்டர். ஆர்.கண்ணன் எழுதிய நூல்களைத் தற்செயலாக வாங்கிப் படித்தேன். அவரது திறமை அவர் எழுத்திலேயே தெரிந்தது. நேரடியாக பிரியா நர்ஸிங் ஹோம் சென்று உதவி டாக்டரைச் சந்தித்துப் பேசி பிறகு டாக்டர் ஆர்.கண்ணன் அவர்களைச் சந்தித்து சிகிச்சை பெற்றேன். சில பத்திய முறைகளுடன் டாக்டர் அளித்த மருந்துகளைச் சாப்பிட்டு ஆறே மாதத்தில் இருபது வருடங்களாக நான் பட்ட தலைவலி இன்னலிலிருந்து விடுபட்டேன்.

...இப்படி பலரும் கூறிய பாராட்டு மொழிகளைக் கூறிக் கொண்டே இருக்கலாம். அந்த அளவுக்கு மக்களிடையே இவர் பெரும் புகழ் பெற்றுள்ளார்.

இவர் ஆன்மிக, சமூகத் தொண்டுகளையும் ஆற்றி வருகிறார். நல்ல விஷயங்களுக்கு உதவும் பரோபகாரி யாகவும் திகழ்கிறார். விஷப்பூச்சிக்கடி, சளி, இருமல், ஆஸ்துமா, முடக்கு வாதம், கீல் வாதம், உள்மூலம், வெளிமூலம், வயிற்றுப்புண், கொலைட்டிஸ், ஒவ்வாமை, ஒற்றைத் தலைவலி, நகச் சொத்தை, பித்த வெடிப்பு, மயிர் புழுவெட்டு, தலைமுடி உதிர்தல், கரப்பான், நாட்பட்ட காது சீழ், நீரிழிவு, ஆண் மலட்டுத் தன்மை, பெண்களுக்கு ஏற்படும் வெள்ளைபடுதல், ஹெர்ப்பிஸ், சிம்ப்ளெக்ஸ், நாட்பட்ட பால்வினை நோய்களையும் டாக்டர் கண்ணன் குணப்படுத்தி வருகிறார்.

"சித்த மருத்துவம் பற்றி எந்தச் சந்தேகங்கள், கேள்விகளுக்கும் பதில் பெற: டாக்டர் ஆர்.கண்ணன். பி.ஐ.எம்..சித்த மருத்துவ நிபுணர், பிரியா நர்ஸிங் ஹோம்., தென்னூர், திருச்சி–620017. தொலைபேசி: 764765, 766381 தொலைநகல்:0431–766599 ஈ.மெயில் Dr.Kannan @md2.Vsnl.net.in இன்டர்நெட் http// www.Siddhakannan.com என்ற முகவரியில் எப்போது வேண்டுமானாலும் தொடர்பு கொள்ளலாம்" என்கிறார் சிகரத்தைத் தொட்ட சித்த மருத்துவர் ஆர்.கண்ணன்.

சித்த மருத்துவ சிகரத்தைத் தொட்டு அதில் கொடி கட்டிப் பறந்து கொண்டிருக்கும் சாதனையாளர் டாக்டர்.ஆர்.கண்ணன் அவர்களின் இலட்சியம் நிறைவேறி சித்த மருத்துவச் சிறப்புகள் சிறந்தோங்க ஆதரவு தெரிவித்து அங்கிருந்து கிளம்பினோம். 

# சோழன் கொணர்ந்த காவிரியாறு

குடவாயில் பாலசுப்ரமணியன்



இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து தமிழகத்தில் செங்கோல் ஒச்சிய கரிகாற்பெருவளத்தான் காவிரிக்குக் கரை எடுத்து அதன் பாசனத்தைச் சீர் செய்தான் என்பதைப் பழந்தமிழ் நூல்களும், செப்பேடுகளும், கல்வெட்டுகளும் எடுத்துக் கூறுகின்றன. அதே பெருமன்னன் இமயம் வரை படை எடுத்துச் சென்று சீன நாட்டிற்குச் செல்லும் தடத்தில் (சிக்கிம் பூடான் எல்லையில்) இருந்த மலை ஒன்றை இடித்து ஏற்றதொரு கணவாயை உருவாக்கினான் என்பதையும் இலக்கியச் சான்றுகள் கொண்டு அறியமுடிகிறது. இதனைச் செயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியில் "செண்டு கொண்டு கரிகாலனொருகால் இமய சிமைய மால்வரை திரித்தருளி" என்றும், சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் "பொன் மலைப் புலிவென்றோங்கப் புதுமலை இடித்துப் போற்றும் அந்நெறி வழியேயாக அயல் வழி அடைத்த சோழன்" என்றும் கூறுகின்றனர்.

மலையை இடித்து மக்களுக்குப் பயன்படுமாறு செய்யும் கலையை அறிந்தவர்கள் தமிழர்கள் என்பதற்கு மேலும் ஒரு சான்று உள்ளது. கரிகாலனுக்குப் பல நூற்றாண்டுகள் முன்பு வாழ்ந்த சோழ மன்னன் ஒருவன் மலையைத் திரித்துக் (வெட்டிப் பாதை உருவாக்கி) காவிரி நதியைச் சோழநாட்டிற்குக் கொண்டு வந்தான் என்பதை இலக்கியங்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், புராணங்கள் ஆகியவை கூறுகின்றன. இவற்றை மிகையான கற்பனை என்று ஒதுக்க முடியாது. அண்மையில் விண்ணிலிருந்து செயற்கைக்கோள் (சாட்டிலைட்) எடுத்து அனுப்பிய படங்கள் அதனை மெய்ப்பிக்கும் வகையில் உள்ளன.

கடாரம் கொண்டான், கங்கைகொண்டான் என்ற பட்டங்கள் பூண்ட முதலாம் இராஜேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடு கரிகாலனுக்குக் காலத்தால் முன்பு வாழ்ந்த சித்ரதன்வன் எனும் சோழமன்னன் காவிரியைச் சோழ நாட்டிற்குக் கொண்டு வந்தான் (சுலோகம் 34, 35) என்று கூறுகிறது. மூன்று பெரும் சோழ மன்னர்களின் அவைக்களப் புலவராய் வாழ்ந்து தக்கயாகப்பரணி, மூவருலா எனும் நூல்களைத் தமிழுக்கு அளித்த கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர், விக்கிரம சோழனுலா, குலோத்துங்க சோழன் உலா, இராசராச சோழன் உலா எனும் மூன்று உலாக்களிலும் கரிகாலனுக்கு முன்பு வாழ்ந்த சோழமன்னன் ஒருவன் காவிரியாற்றின் தடத்தில் இருந்துகொண்டு அதன் போக்கைத் தடுத்த மலையை உடைத்துப் பொன்னி நதியைச் சோழ நாட்டிற்குக் கொண்டு வந்தான் என்று கூறுகிறார். இதனைக் குலோத்துங்க சோழன் உலாவில்... "கோல் கொன் றலை யெறியுங் காவிரியாற்றுப் படைக்கு மலையெறிய மன்னர்க்கு மன்னன்" என்று பாடியுள்ளார். இதுபோன்றே கலிங்கத்துப் பரணி பாடிய ஜெயங்கொண்டார் கரிகாலனுக்கு முன்பு வாழ்ந்த சோழமன்னன் ஒருவன் "காவிரிப் புனல் கொணர்ந்தவன்" என்று குறிப்பிடுகின்றார்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த இந்நிகழ்ச்சி தவிர இரண்டாம் இராசராசன் (கி.பி.1146–1163) காலத்தில் ஒரு முறை காவிரிப் போக்கில் தடை ஏற்பட்டது. அப்போது இராசராசன் தடையாக நின்ற மலையை அகற்றி வழிகண்டான். அதனை ஒட்டக்கூத்தர் "மலை கொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன் வரராசராசன்" என்று குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியத் திற்கு உரைகூறும் நச்சினார்க் கினியரும் தடையாக நின்ற மலையை அகற்றிக் காவிரிப் போக்கைச் சீர் செய்த நிகழ்ச்சியை மேற்கோள் காட்டியுள்ளார். இராசராச சோழனுலாவில் அம்மன்னனின் வாளாயுதமானது "சுழியிட்ட காவிரிக்குச் சோணாடு வாழ வழியிட்ட வாள்" என்று குறிக்கப்பெற்றுள்ளது. இவை அனைத்தையும் தொகுத்து நோக்கும் போது இருமுறை காவிரித்




தடத்தில் மலை திரிக்கப்பட்டது என்ற செய்தி அறியமுடிகிறது.

புராண நூல்கள், காவிரி சோழ நாட்டிற்கு வந்ததைச் சுவையான கதையாகக் கூறுகின்றன. அகத்திய முனியின் கமண்டலம் காக்கை ஒன்றினால் கவிழ்க்கப்பட்டதால் ஓடியநீர் காவிரியாகச் சோழநாடு வந்தது என்பதே அவை கூறும் செய்தியாகும். இதனை மணிமேகலை,

*"செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்*
*கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட*
*அமர முனிவன் அகத்தியன் தனது*
*கரகம் கவிழ்த்த காவிரிப் பாவை"*

என்று கூறுகின்றது.

கதைப் போக்கில் பல மாறுதல்கள் இருப்பினும் சுவையான செய்திகளோடு காவேரிப் புராணம் துலாக்காவேரி மகாத்மியம், திருவலஞ்சுழி தலபுராணம் போன்ற பல நூல்கள், காவிரியின் தோற்றம், சோழநாட்டு வருகை போன்ற பல செய்திகளைக் கூறுகின்றன. புராணங்களை ஆழ்ந்து நோக்கும் போது அடைபட்ட காவிரி நீர் மனித முயற்சியால் சோழநாடு கொண்டு வரப்பட்டது என்ற மையக் கருத்தினைத் தவறாமல் கூறுகின்றன. திருவலஞ்சுழி திருக்கோயிலிலுள்ள ஓவியம் ஒன்று காவிரி சோழநாட்டுக்கு வந்த கதையைச் சித்திரிக்கின்றது.

நிலவியல் அடிப்படையில் ஆராயும் போது குடகுப் பகுதியில் உள்ள சய்ய மலையில் கடல் மட்டத்திற்கு மேலாக 4400 அடி உயரத்தில் உற்பத்தியாகும் காவிரி

கர்நாடக மாநிலத்தில் ஏறத்தாழ 280 கி.மீ. கிழக்கு நோக்கி ஓடித் தமிழகத்திற்குள் தர்மபுரி மாவட்டத்தில் நுழைகின்றது. அப்பகுதி முழுவதும் மலைகளும் உயரமான கணவாய்களும் திகழும் இடமாக விளங்குகின்றது. தோப்பூர் மலை பிரியும் இடத்தில் உள்ள கணவாய் சுமார் 780 அடி உயரமுடையது. இங்குள்ள நிலப்பரப்பில் காவிரி ஓட ஒகேனக்கல் எனும் நீர்வீழ்ச்சியாகச் சுமார் 86 அடி உயரத்திலிருந்து வீழ்கிறது. நீர்வீழ்ச்சியிலிருந்து வெளியேறும் நீர் சனத்குமார நதியுடன் சேர்ந்து ஒசூர், தர்மபுரி வட்டங்கள் வழியே ஓட்டம் பெற்றுப் பின் தென்மேற்காக ஓடி மேட்டூர் அணையை அடைகின்றது.

காவிரி தமிழகத்திற்குள் நுழையும் பகுதி முழுவதும் நெருக்கமான மலைத் தொடர்கள் உள்ளன. இவை காவிரியின் போக்கினைத் தடை செய்பவையாக விளங்கின. சய்ய மலையில் உற்பத்தியாகும் இடத்திலிருந்து கிழக்கு நோக்கிப் பாய்ந்து வரும் காவிரி இப்பகுதிக்குள் நுழைந்த பின்பே தென்மேற்காகவும் தெற்காகவும் ஓடி, ஈரோட்டைத் தாண்டிய பின்பே கிழக்கு நோக்கிச் சோழநாட்டிற்குள் நுழைகின்றது.

பழங்காலத்தில் சோழ மன்னன் ஒருவன் காவிரிப் போக்கினைத் தடை செய்த மலையை வெட்டிச் சோழ நாட்டிற்குத் திருப்பினான் எனக்கூறும் சோழர் கால இலக்கியங்களும், செப்பேடுகளும் கூறும் மலைப்பகுதி தருமபுரி மாவட்டத்து ஒகேனகல் பகுதியே என்பது நிலவியல் அடிப்படையில் நோக்கும் போது தெளிவா கின்றது. மேலும் ஒகனகல் நீர்வீழ்ச்சியிலிருந்து காவிரி புறப்படும் இடம் இயற்கையாக அமைந்த தடமன்று என்பதும், அது மனிதனால் வெட்டி ஏற்படுத்தப் பெற்ற அமைப்பே என்பதும் அறியலாம். சோழமன்னர்கள் இங்குள்ள மலைப் பகுதிகளைச் சீர் செய்து, மலைப் பகுதிகளை வெட்டி அகற்றித் தடையில்லாத வழித்தடத்தை அமைத்து, காவிரியைத் தெற்கு நோக்கி ஓடச்செய்து சோழநாடு பயன்பெறுமாறு செய்துள்ளனர்.

தடம் மாறிய தமிழக நதிகள் பற்றிச் செயற்கைக் கோள் எடுத்த படங்களைக் கொண்டு ஆய்வுகள் மேற்கொண்ட பாரதிதாசன் பல்கலைக் கழகத்துப் பேராசிரியர் சோம. இராமசாமி தமது ஆய்வுக் கட்டுரையில் காவிரி ஒரு காலத்தில் ஒகேனகல் பகுதியிலிருந்து வடகிழக்காக ஓடிப் பெண்ணையாற்றில் கலந்து சென்றதாகவும், அதுபோன்றே 2700 ஆண்டுகளுக்கு முன்பு ஒகேன கல்லிலிருந்து சின்னாறு, குடியாத்தம், வாலாஜாபாத் வழியாகச் சென்று சென்னைக்கு வடக்கேயுள்ள கொற்றலை யாறு பள்ளத்தாக்கில் ஓடிக் கடலில் கலந்தது என்பதற்கான சாத்தியங்களைச் செயற்கைக் கோள் தந்த படங்கள் வாயிலாக விளக்கியுள்ளார். இவ்வோட்டத்திற்குப் பிற்காலத்தில் தான் தற்போதைய காவிரித்தடம் ஏற்பட்டதாகவும், அதன் போக்கில் ஏற்பட்ட மாறுதல் களையும் கூறியுள்ளார்.

குடகிலிருந்து புறப்பட்ட காவிரி பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தருமபுரி மாவட்டத்து ஒசூர்ப் பகுதியை அடையும் போது அங்குள்ள மலைத் தொடர்களில் மோதி, வழி கிடைத்த இடங்களிலெல்லாம் பாய்ந்து வெள்ளப் போக்கிற்கேற்பப் பல முறை தமிழகத்தில் தன் தடத்தை மாற்றிச் சென்றிருக்கிறது. அதனால் தான் சென்னைக்கு வடக்கிலிருந்து கடலூரில் கலக்கும் கெடிலம் ஆறுவரை பல்வேறு காலகட்டங்களில் காவிரியாறு அங்குத் தடம் பதித்துச் சென்றுள்ளதைச் செயற்கைக்கோள் படங்கள் காட்டி நிற்கின்றன. தடம் மாறிய காவிரியின் ஓட்டத்தை ஒழுங்குபடுத்த நினைத்த பண்டைய சோழ மன்னன் ஒருவன் ஒகேனகல் பகுதியில் மலையை வெட்டி அதன் ஓட்டத்தை ஒழுங்கு படுத்திச் சோழ நாட்டிற்கு அந்நதியைக் கொண்டு வந்துள்ளான். அதனைத்தான் புராணங்களும், இலக்கியச் செய்திகளும், செப்பேடுகளும், கல்வெட்டுக்களும் காட்டி நிற்கின்றன. செயற்கைக்கோள் எடுத்த படங்கள் அதனை மெய்ப்பிக்கின்றன. ●

## காலச்சக்கரம் சுழலட்டும்



நிற்காமல் ஓடும் இந்தத் தேருக்கு
சங்கிலியிழுப்பது யார்? – அரசன் முதல்
ஆண்டிவரை – நாளுக்கு – இருபத்தி நான்கு மணி...
பிரபஞ்சத்தின் முதல் கம்யூனிச ஆசான்...

நடந்தது... தெரியும்... மெல்ல அசைபோட
சுவையான சரித்திரம் புரிகின்றது...
இப்போது நடப்பது தெரிகின்றது
தீவிரவாதமும் பயங்கர வன்முறைகளும்...
நடக்கப்போவது... காலம் மட்டுமே அறிந்த பரமரகசியம்....
அவை நல்லவையாக இருக்கட்டும் என்ற நம்பிக்கையோடு
காலச்சக்கரம் சுழலட்டும்... கையில் செங்கோல் தவழட்டும்!

எஸ். வசந்தகுமார்

# புனிதா

## மன்னார்குடி விசுவநாதன்

அப்படியொரு சோதனை தன் குடும்பத்துக்கு வந்து சேரும் என்று கதிரேசன் நினைத்துப் பார்க்கவே இல்லை.

முப்பத்தைந்து ஆண்டுகளாக போஸ்ட்மேன் வேலை பார்த்து, சென்ற ஆண்டுதான் ஓய்வு பெற்றார்.

கிடைத்த பணத்தில் தன்னுடைய ஒரே மகள் புனிதாவை, முப்பது வயது முடிந்துவிட்ட நிலையில், கணிசமாகத் தொகை செலவு செய்து சிறப்பான முறையில் திருமணம் செய்து கொடுத்தார்.

மாப்பிள்ளை குணா சென்னையில் தனியார் கம்பெனியொன்றில் என்ஜினீயர். நல்ல சம்பளம். அவர்கள் குடும்பத்தில் தாய் தந்தைக்கு ஒரே பிள்ளை. அதனால் வீணான தொல்லை எதற்கும் வேலை இல்லை.

அப்பா அம்மா, மகன் மருமகள் நான்கு பேர் கொண்ட குடும்பம். நல்ல குடும்பம் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாக இருந்தது.

திருமணமாகி ஐந்து வருடங்கள் ஆகியும் தன் மகளுக்கு மகப்பேறு கிட்ட வில்லையே என்று கதிரேசன் மனைவி லெட்சுமிக்கு அளவு கடந்த வேதனை.

மாப்பிள்ளை குணாவின் பெற்றோர் கோயில் கோயிலாகச் சென்று வழி பட்டனர். ஜோதிடம் பார்த்தனர். கடவுளுக்குப் பிரார்த்தனை செய்து அத்தனையும் நிறைவேற்றினர்.

பலன் கிட்டவே இல்லை.

சென்ற வாரம்தான் அவர்களுக்குப் புதிய யோசனை தோன்றியது போலும்.

மகன் குணாவையும் மருமகள் புனிதாவையும் தேர்ந்த மருத்துவர்களிடம் அழைத்துச் சென்று நுட்பமாக மருத்துவப் பரிசோதனை செய்து பார்த்தனர்.

புனிதாவுக்குக் குழந்தை உண்டாகும் வாய்ப்பே இல்லையென்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார்களாம் மருத்துவக் குழுவினர்.

அந்தத் தகவல் கிடைத்ததுமே கதிரேசனும் லெட்சுமியும் துடித்துப் போய் விட்டார்கள்.

அந்தத் துடிப்பு அடங்குவதற்குள் மகள் புனிதவதியிடமிருந்து வந்த கடிதம்தான் பெரிய அதிர்ச்சியையும் திகைப்பையும் அளிப்பதாக இருந்தது.

"அன்புள்ள அம்மா... அப்பா...

உங்கள் மகள் புனிதா எழுதும் கடிதம். எனது மாமனார் எழுதிய கடிதத்தின் மூலம் நிலைமையை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன். இப்பொழுது அவர்கள் தங்கள் மகனுக்கு, அதாவது என் கணவருக்கு வேறு பெண்ணைத் திருமணம் செய்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டு வருகிறார்கள். எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. பூமிக்குப் பாரமாக ஏன் வாழ வேண்டுமென்று தோன்றுகிறது.... அபாக்கியவதி

புனிதா.."

கடிதம் கைக்குக் கிடைத்த நேரத்திலிருந்து கதிரேசனும் லெட்சுமியும் திகைத்துத் தடுமாறிப் போனார்கள்.

வாய்விட்டு அழவில்லையே தவிர, இருவரின் நெஞ்சுத் துடிப்பைச் சொல்லி மாளாது.

"லெட்சுமி.... நம்ம குடும்பம் கிற மலர்த் தோட்டத்திலே இடி விழுந்தது போல ஆயிட்டுதே.... நம்மளோட ஒரே வாரிசு புனிதா... நல்ல விதமா வாழணும்... நமக்குப் பேரக் குழந்தையைப் பெத்துக் கொடுக்கணும்னு தானே... கையில கிடைச்ச பணம் முழுவதையும் செலவழிச்சுத் திருமணத்தை அவ்வளவு சிறப்பாக நடத்தி முடித்தோம்? அதையெல்லாம் சம்பந்தி வீட்டார் நினைச்சுப் பார்க்கலையே...."

"சரிங்க.... விடுங்க... கடவுள் நம்ப பொண்ணைக் கைவிட மாட்டாருன்னுதான் நான் நம்பறேன்...."

"சரி.... லெட்சுமி... நம்ம பொண்ணு மலடின்னு தெரிஞ்சவுடனேயே... தங்களோட மகனுக்கு இன்னொரு பொண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணணும்னு துடிக்கிறாங்களே.... கதை மாறி.... மாப்பிள்ளை மலடுன்னு தெரிஞ்சு.... நாம நம்ம பொண்ணுக்கு வேறே மாப்பிள்ளை பார்த்தா அவங்க அதை ஒத்துக்கு வாங்களா?"

விரைந்து தன் கணவரின் வாயைப் பொத்தினாள் லெட்சுமி.

"என்ன வார்த்தை சொல்றீங்க.... பேசாமே இருங்க.... பதறாத காரியம் சிதறாது...."

"என்ன லெட்சுமி... நம்ம பொண்ணு எழுதியிருக்கிற கடிதத்தை முழுமையாகப் படிச்சியா இல்லையா..."

"நீங்க என்ன சொல்றீங்க..!" என்று கேட்டவாறே கணவரைத் திகைப்போடு பார்த்தாள் லெட்சுமி.

"என்ன லெட்சுமி... புரியலையா? பூமிக்குப் பாரமா நான் ஏன்

வாழணும்னு கேட்டு எழுதியிருக்காளே.... கவனிக்கலையா?

"ஐயை யோ... அவ ஏதாவது அசட்டுத் தனமாச் செஞ்சுடக் கூடாதே! நாம உடனே போய்ப் பார்த்துட்டு வருவோம்..." பதறிய வாறே சொன்னாள் லெட்சுமி.

"ஆமாம்.... லெட்சுமி... அது தான் சரி. போயி பார்த்துட்டு பத்து நாளைக்கும் பொண்ணை எங்க வீட்டுக்கு அனுப்பி வையுங்கன்னு சம்பந்திகிட்டே கேட்டு அழைச்சுகிட்டு வந்துடுவோமா?"

"அதுதான் சரி.... நம்ம பொண்ணு ரொம்பவும் மனசு ஒடிஞ்சு போயிருக்கிறா... அவளை இங்கே அழைச்சுகிட்டு வந்து தான் ஆகணும்..."

நினைப்பதெல்லாம் நடப்ப தில்லை என்பதுதான் எவ்வளவு உண்மையான வார்த் தைகள்...!

"அப்பா.... அம்மா.... நீங்க இரண்டு பேரும் என்ன சொன் னாலும் நான் இப்ப உங்களோட புறப்பட்டு அங்கே வர மாட்டேன். நான் இங்கேதான் இருப்பேன்... மருமகளா இருக்க முடியலைன் னாலும் வேலைக்காரியாகவாவது இங்கேதான் இருப்பேன்...."

குணாவின் தந்தை பொன்னம் பலமும் தாயார் மீனாட்சியும் சிலை போல நின்று கொண்டிருந்தார்கள்.

குணா வேலைக்குப் போய் விட்டிருந்தார்.

"என்னம்மா இப்படிப் பேசுறே? இந்த வீட்டுக்கு மருமகளாக நீ வந்து அஞ்சு வருஷம் ஆவுதே... உன்னை நாங்க எப்பவாவது கொடுமைப் படுத்தியிருக்கோமா? அல்லது குணா எப்பவாவது உன் விருப்பத்துக்கு விரோதமாக நடந்திருக்கானா? இப்ப... இப்ப... எங்க வீட்டுக்கும் ஒரு வாரிசு வேணும்னு நாங்க நினைக்கிறதிலே என்ன தவறு? நாங்கதான் குணாவுக்கு ஒரு பொண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணணும்னு முடிவு பண்ணியிருக்கோமே தவிர... குணா இன்னும் ஒத்துக்கலை. முடியாதுன்னு தான் சொல்றான். அதுவும் உனக்குத் தெரியும்..."



-பொன்னம்பலம்தான் பேசினார்.

இப்பொழுது கதிரேசனுக்கும் லெட்சுமிக்கும் பாலைவனத்தில் நீரூற்றைக் கண்டது போன்ற மகிழ்ச்சியும் நம்பிக்கையும் ஏற்பட்டது.

"ஓ.... மாப்பிள்ளை குணா இன்னும் மறுமணத்துக்கு ஒப்புக் கொள்ளவில்லையா?"

நெஞ்சை நீவி விட்டுக் கொண்டார்கள் கணவனும் மனைவியும்.

ஊருக்குப் புறப்படும்போது சம்பந்தியிடம் மீண்டும் ஒரு முறை கேட்டார் கதிரேசன். "ஒரு மாறு தலுக்காகவாவது புனிதாவைக் கொஞ்சநாள் பிறந்தகத்துக்கு அனுப்பி வையுங்களேன்..."

"இத பாருங்க சம்பந்தி.... நான் முகஸ்துதிக்காக எதுவும் பேச மாட்டேன்... உங்க பொண்ணு பேரிலே மட்டும் புனிதவதி இல்லை... நிஜமாகவே புண்ணிய வதியும் கூட. உங்க பொண்ணு இந்த வீட்டிலே மருமகளாகக் கால் வச்ச நாள்லேயிருந்து எங்களுக்கு நல்ல நேரம்தான். ரொம்ப நாளாக எனக்குக் கிடைக்காமலிருந்த ஓய்வூதிய மொத்தத் தொகை உடனே கிடைச்சுது. என் பையனுக்கு ரெண்டு வருசத்துக்கு ஒரு முறை உத்தியோகத்திலே பிரமோஷன் கிடைச்சுகிட்டே இருக்கு. குழந்தைப் பேறு தான் இல்லை. அது ஒண்ணுதான் குறை...."

"சம்பந்தி... உங்க நல்ல மனசை நான் புரிஞ்சுகிட்டேன்..." உணர்ச்சி மிகுதியில் பேசினார் கதிரேசன்.

"உங்க பொண்ணு வர்றேன்னு சொன்னா... தாராளமா அழைச்சு கிட்டுப் போங்க... நாங்க தடுக்க மாட்டோம்..."

இப்பொழுது கொஞ்சம் நம்பிக் கையுடன் மகளை அணுகினார் கதிரேசன். "அப்பா.... என்னை வற்புறுத்தாதீங்க... நான் புகுந்த இடத்தைவிட்டு வர மாட்டேன். என்ன நடக்குமோ... நடக்கட்டும்.

என்னை விட்டுடுங்க. வற்புறுத் தாதீங்க...”

கதிரேசனும் லெட்சுமியும் மிகுந்த மன வருத்தத்துடன் ஊருக்குத் திரும்பினார்கள்.

அவர்கள் ஊருக்குப் புறப்படும் வரை மாப்பிள்ளை குணா வீட்டுக்கே வரவில்லை. டெலி போனில் பேசினார். தனக்கு கம்பெனி சம்பந்தமாக அவசர வேலை இருப்பதாகவும், நிர்வாக இயக்குநருடன் வெளியூர் செல்ல வேண்டியிருப்பதாகவும் வீடு திரும்ப இரண்டு மூன்று நாள்கள் ஆகுமென்றும் சொல்லிவிட்டார்.

எனவேதான் மாப்பிள்ளைக் காகக் காத்திருப்பதில் பொருள் இல்லை என்பதைப் புரிந்து கொண்ட கதிரேசனும் லெட்சுமியும் சோகத்துடன் ஊர் திரும்பினர்.



எதிர்பாராத விதமாகத் தனது பால்ய நண்பர் பகவதியைச் சந்திக்க முடியுமென்று கதிரேசன் நினைத்துப் பார்க்கவே இல்லை.

“வாய்யா பகவதி.... என்னதான் நாம பால்ய நண்பர்கள்னு சொன் னாலும். நீ இப்ப சென்னையிலே பெரிய வக்கீலாகத் தொழில் நடத்துறே... நானோ... சாதாரண போஸ்ட் மேனாக வேலை பார்த்து ரிட்டயர் ஆயிட்டேன். என்னை யெல்லாம் வந்து பார்க்க உனக்கு நேரம் இருக்குமா என்ன?” என்று சலிப்படைந்த குரலில் பேசி அவரை வரவேற்றார், கதிரேசன்.

பகவதி கதிரேசனை வியப்புடன் பார்த்தார்.

கதிரேசனுக்கு அடிவயிற்றில் என்னவோ செய்தது.

இந்த பகவதி சென்னையில் வக்கீலாகத் தானே இருக்கிறார்... மாப்பிள்ளை குணா இந்த வக்கீல் கிட்டே போயி நம்ம பொண்ணை விவாகரத்து செய்வது பற்றி ஏதாவது பேசியிருப்பாரோ... அது சம்பந்தமாகத் தன்னிடம் தகவல் சொல்வதற்காக பகவதி வந்திருப் பாரோ....

மகளின் கல்யாணத்துக்கு வந்து விட்டுப் போனார்.

அதற்குப் பிறகு பேச்சு மூச்சே இல்லை.

இப்பொழுது திடுமென்று சென்னையிலிருந்து புறப்பட்டு இங்கே வந்திருப்பதைப் பார்த் தால்...

உள்ளே அடுக்களையில் வேலையாக இருந்த லெட்சுமி அங்கே வந்தாள்.

அவளுக்கு பகவதியை நன்றா கவே தெரியும்...

“அண்ணே! வாங்க... நல்ல சமயத்திலே வந்தீங்க... இப்ப எங் களுக்கு உங்களைப் போன்ற வக்கீலின் உதவியும் ஆலோ சனையும் தான் தேவையா யிருக்கு....” என்று பேசிக் கொண்டே எதையோ சொல்ல முயன்றவளை, கதிரேசன் தன் பார்வையாலேயே அடக்கி விட்டார்.

அதையும் பகவதி பார்த்து விட்டார்.

வக்கீல் இல்லையா?

புள்ளி வைத்தால் கோலம் போட்டு விடுபவர்களாயிற்றே....

“ம்.... சென்னையிலே வக்கீல் தொழில் எப்படி இருக்கு? நல்ல வருமானம் கிடைக்குதா?... ஒரே பையன்தானே... அவனுக்குக் கூட படிப்பெல்லாம் முடிஞ் சிருக்குமே..” என்று பேசிக் கொண்டே போனார் கதிரேசன்.

லெட்சுமியால் பேசாமலிருக்க முடியவில்லை.

கணவரைப் பார்த்தாள்: “என்னங்க.... அவங்க பட்டணத் திலே பெரிய வக்கீல்... அவங்க புள்ளையை நல்ல விதமாகப் படிக்க வைக்கிறதோ... வேலைக்கு அனுப்புறதோ பெரிய காரிய மில்லை... நம்ம விஷயத்தைப் பற்றிப் பேசுங்களேன்....”

“உங்க விஷயம்னா... எனக்குப் புரியலையே... ஒரே பொண்ணு உங்களுக்கு.... சென்னையிலதான் கல்யாணம் பண்ணிக் கொடுத் திருக்கீங்க.... அதிலே என்ன பிரச்னை?” என்றவாறே கதிரேசனை ஒரு மாதிரியாகப் பார்த்தார் பகவதி.

“என்னய்யா அப்படிப் பார்க் கிறே?” என்றார் கதிரேசன்.

"இல்லை.... எப்பவும் சிரிப்பும் கிண்டலுமாகவே பேசிக்கிட்டு இருப்பியேய்யா... இப்ப... இவ்வளவு சோகத்துக்கு என்ன காரணம்னு புரியலையே... மேலும்... அஞ்சு வருஷத்துக்கு முன்னால நடந்த உம்ம மகள் புனிதாவோட கல்யாணத்துக்குத் தான் நான் வந்துட்டுப் போனேனே.... அப் புறம்தான்... இந்தப் பக்கம் வர்றதுக்கு எனக்கு சந்தர்ப்பமே கிடைக்கலை... ஓயாத வேலை... ஒழியாத வேலை..."

அதுவரை மௌனமாக நின்று கொண்டிருந்த லெட்சுமி, பகவதியைப் பார்த்து. "அண்ணே! நீங்க சவுக்கியமா இருக்கீங்களா? வீட்டிலே எல்லாரும் சவுக்கியம் தானே?" என்று கேட்டு வைத்தாள்.

பிறகு காபி தயாரித்து எடுத்து வருவதற்காக உள்ளே போனாள்.

நண்பர்கள் இருவரும் பழைய நினைவுகளில் மூழ்கிப் போய் இருந்தார்கள்...

கதிரேசனும் பகவதியும் காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மன் கோயில் வளாகத்தில் உட்கார்ந்து மணிக் கணக்கில் பேசிக் கொண்டிருந்த அந்த நாள்களை நினைத்துப் பார்த்தனர்.

ஆற்று மணலில் போய் உட் கார்ந்து பேசுவார்கள். இளமைக் கனவுகளைத் தங்களுக்குள் பகிர்ந்து கொள்வார்கள்.

கதிரேசன் போஸ்ட்மேனாக வேலையில் சேர்ந்து விட்டிருந்தார்.

பகவதி சென்னையில் சட்டக் கல்லூரியில் படித்து வந்தார்.

விடுமுறையில் காஞ்சிபுரம் வந்தால் கதிரேசனின் வீடே கதியென்று உட்கார்ந்து விடுவார் பகவதி. சினிமாவுக்குப் போவார்கள். பூங்காவில் உட்கார்ந்து கதை பேசுவார்கள்.

வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் முருகன் கோயிலுக்கோ, பெருமாள் கோயிலுக்கோ, காமாட்சியம்மன் கோயிலுக்கோ சென்று பிராகாரத்தில் அமர்ந்து பேசத் தொடங்கிவிடுவார்கள்.

"என்ன இருந்தாலும்.... கதிரேசன்... உனக்குக் கல்யாணமாயிட்டாலும்.... அல்லது.... எனக்குக் கல்யாணமாயிட்டாலும்... அப்புறம்... நாம பிரியத்தானே போறோம்?" என்று ஒரு நாள் பகவதி சொன்னார்.

'சட்' டென்று பகவதியின் கைகளைப் பற்றினார் கதிரேசன்.

"என்ன பகவதி... இப்படிச் சொல்லிட்டே? நட்பு... அதிலேயும் பால்ய வயசிலேயிருந்து ஏற்பட்ட நட்பு. ரொம்பவே ஆழமானது... ஆணிவேர் மாதிரி. அவ்வளவு சீக்கிரம் அது முனை மழுங்கிப் போயிடாது... நம்ம நட்பு என்றைக்குமே சாசுவதமானது. கல்யாணம் ஆனா என்ன.. குடும்பத்தை நடத்துவோம்... நேரம் கிடைக்கிறப்ப சந்திச்சு பேசிக்குவோம். நல்லது கெட்டதுல கலந்துக்குவோம். அப்புறம் என்ன?"

கதிரேசனின் பேச்சில் மயங்கிப் போனார் பகவதி.

"கதிரேசன்! நீ போஸ்ட்மேன் வேலைக்கு லாயக்கு இல்லை அய்யா!"

"என்னப்பா அப்படிச் சொல்லிட்டே? வேணும்னா என்னோட 'பீட்'ல வந்து விசாரிச்சுப் பாரு. நான் வீடு வீடாகப் போய்த் தபால்களைக் கொடுக்கிற விதமே தனி... கிழங்கட்டைகளுக்கு வர்ற முதியோர் உதவித் தொகையைக் கையில வச்சுகிட்டு அந்தக் கிழடுகள் இருக்கிற இடத்தைத் தேடிக்கொண்டு போய்க் கொடுப்பேன். சல்லிக் காசு யார்கிட்டேயும் இனாம் வாங்கினது இல்லை...."

இடை மறித்தார் பகவதி.

"கதிரேசன்... நான் சொல்ல வந்ததே வேறே...."

"வேறேயா?"

"ஆமா... நீ வக்கீலுக்குப் படிக்க வேண்டிய ஆளுன்னு சொல்ல வந்தேன்..."

அதைக் கேட்டதும் கதிரேசன் பெரிதாக வாய்விட்டுச் சிரித்தார்...

இப்பொழுதும் சிரித்தார்.

"கதிரேசன்! சிரிச்சது போதும். இப்ப உம்ம மனசிலே இருக்கிற வேதனை... பிரச்னை... எல்லாத்தையும் என்கிட்ட சொல்லணும்" என்றார் பகவதி.

சில கணங்கள் யோசித்தார் கதிரேசன்.

பிறகு தன்னுடைய மகள் புனிதா சம்பந்தப்பட்ட பிரச்னை முழுவதையும் ஒன்று விடாமல் பகவதியிடம் சொல்லி முடித்தார்.

"அப்படியா? உம்ம மாப்பிள்ளை குணா வேலை பார்க்கிற கம்பெனி ரொம்ப பிரபலமான கம்பெனிதான். சென்னையிலே தான் அதன் தலைமை நிர்வாகம் இருக்கு... அவங்களோட சட்டம் சம்பந்தமான பிரச்னைகளை நானும் இன்னொரு வக்கீலும் சேர்ந்து தான் கவனிக்கிறோம்... நான் இதைப் பற்றி விசாரிக் கட்டுமா?" என்றார் பகவதி.

இதற்குள் லெட்சுமி கொண்டு வந்து கொடுத்த காபியை வாங்கிக் குடித்து முடித்து விட்டு அவசரமாகக் கிளம்பினார் பகவதி.

அவரை வாசல்வரை வந்து வழியனுப்பி வைத்தார் கதிரேசன்.

வக்கீல் பகவதியிடமிருந்து வந்த கடிதத்தைக் குழப்பத்துடன் பிரித்துப் படித்தார் கதிரேசன்.

'அருமை நண்பர் கதிரேசனுக்கு அன்பு மறவாத வக்கீல் பகவதி எழுதிக் கொண்டது.

நலம். நலம் காண ஆவல்.

நீர் சொன்ன பிரச்னைகளைப் பற்றித் தீர்க்கமாக விசாரித்துப் பார்த்தேன்.

அதிர்ச்சியான தகவல் கிடைத்தது. அதை உங்களிடம் தெரிவிப்பதைத் தவிர எனக்கு வேறு வழி தெரியவில்லை. அதனால் தெரிவிக்கிறேன்.

உங்க மாப்பிள்ளை குணாவுக்கு அவரது பெற்றோர் மறுமணம் செய்ய நினைப்பதும் உறவினர்கள்

பெண் பார்க்கிறார்கள் என்பதும், மறுமணம் செய்து கொள்ள குணா ஒப்புக் கொள்ளவில்லை என்பதும் உண்மைதான்...

ஆனால்-

வேறு ஜாதிப்பெண் ஒருத்தியுடன் குணா கடந்த சில மாதங்களாகக் கள்ள உறவு கொண்டு வாழ்ந்து வருகிறார். அந்தப் பெண் குணாவுடன் கல்லூரியில் படித்த பெண்ணாம். ஏழைக் குடும்பமாம். முப்பது வயதாகியும் திருமணம் நடக்கவில்லை. தாயார் விசாலாட்சி மட்டும் துணை...

....அந்தப் பெண் ஷீலாவுடன் குணா உறவு கொண்டு பழகத் தொடங்கினார். அந்தப் பெண்ணிடம் 'கொஞ்ச நாள் போகட்டும்... திருமணம் செய்து கொள்கிறேன்' என்றும் சொல்லியிருக்கிறார். 'மனைவிக்குக் குழந்தை பிறக்கவில்லை.... அதனால் அவளை விவாகரத்துச் செய்ய ஏற்பாடு செய்து வருகிறேன். அந்தப் பிரச்னை முடிந்ததும் உன் கழுத்தில் தாலி கட்டி விடுகிறேன் என்று பொய் சொல்லி, அந்தப் பெண்ணை நம்ப வைத்து அவளுடன் ரகசியமாகக் குடும்பமே நடத்தி வருகிறார். இந்த விஷயம் குணாவின் பெற்றோருக்குத் தெரியாது ஆனால்... இன்னோர் அதிசயம்... இப்பொழுது அந்தப் பெண் ஷீலா கர்ப்பிணி.

அவசரப்படாமல் பொறுமையுடன் பிரச்னையை அணுகவும்.

இப்படிக்கு

பசுபதி"

கடிதத்தை வாய்விட்டுத்தான் படித்தார் கதிரேசன்.

அதைக் கேட்டவாறே பக்கத்தில் நின்றிருந்த லெட்சுமி கண்ணீர் விட்டு அழுதாள்: "கடைசியில என் பொண்ணோட கதி இப்படியா ஆகணும்..."

"லெட்சுமி! வக்கீல் பகவதி என்ன எழுதியிருக்கார்னு பார்த்தியா? கொஞ்சம் பொறுமையா இரு. இந்த விஷயம் நம்ம பொண்ணுக்குத் தெரிஞ்சா... அவ உயிரையே விட்டுடுவா... அவ எற்கனவே ரொம்பவும் குழம்பிப் போயிருக்கிறா..."

"அது சரி... இப்ப என்னங்க செய்யுறது..." என்றாள் லெட்சுமி.

"கடவுள்தான் நமக்கு வழி காட்டணும்..." என்று நெடுமூச் செறிந்தவாறு பேசினார் கதிரேசன்.

"என்னங்க இப்படி பேச றீங்க... ஒரே பொண்ணு... அவ வாழ்க்கை என்னங்க ஆவுறது? நம்ம காலத்துக்குப் பிறகு அவ என்னங்க செய்வா?" -பேசிக் கொண்டே கண்களிலிருந்து கண்ணீர் வடித்தாள் லெட்சுமி.

திடீரென்று தன்னுடைய தாயும், தந்தையும் வீட்டினுள் வந்து நுழைவார்கள் என்பதை புனிதா எதிர்பார்க்கவேயில்லை.

இந்த முறை மாப்பிள்ளை குணா வீட்டில்தான் இருந்தார்.

தன்னுடைய மாமனார் மாமியாரைப் பார்த்ததும் துணுக் குற்றார். திருதிருவென்று விழித்தார்.

"ஏம்ப்பா குணா! உன்னோட மாமனார் மாமியார் வந்திருக் காங்க. அவங்களை வாங்கன்னு கூடக் கூப்பிடாமே... இப்படி உட்கார்ந்திருக்கியே..." என்று பொன்னம்பலம் கேட்ட பிறகு தான், தன்னுணர்வுக்கு மீண்டவராக, முகத்தில் வலிய வரவழைத்துக் கொண்ட புன்னகையோடு..." வாங்க மாமா... வாங்க அத்தை..." என்று வரவேற்றார் குணா.

வீட்டில் மௌனம் தான் நிலவியது.

ஏதோ நடந்திருக்கவேண்டும் என்பதைப் புரிந்து கொண்டார்கள் கதிரேசனும் லெட்சுமியும்.

ஒருவர் முகத்திலும் மலர்ச்சியில்லை.

இப்படியே எவ்வளவு நேரம் தான் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டே நிற்பது என்பதை உணர்ந்த பொன்னம்பலம், "சரி... வாயேம்மா... பக்கத்திலே இருக்கிற அம்மன் கோயிலுக்குப் போய்ட்டு வருவோம்..." என்று அழைத்தார்.

"சரிப்பா...போவோம்.." என்று உடனே கிளம்பிவிட்டாள் புனிதா.

அவளை யாரும் தடுக்கவும் இல்லை.

கோயிலில் அம்மனை வழிபட்ட பிறகு கதிரேசன், லெட்சுமி, புனிதா மூவரும் ஒரு பக்கமாக பிராகாரத்தில் உட்கார்ந்தனர்.

"ஏம்மா... உன் வீட்டிலே எல்லாரும் இப்படி மௌனமாவே உட்கார்ந்திருக்காங்களே... என்னதான் நடந்திச்சு?"

"நடக்கக்கூடாததெல்லாம் நடந்து போச்சும்மா" என்று சொல்லிவிட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டாள் புனிதா.

"புனிதா! எங்களுக்கும் கொஞ்சம் தெரியும்... இருந்தாலும் எங்க வாயாலே அதையெல்லாம் சொல்லி உன் மனசைப் புண்படுத்த நாங்க விரும்பலை..."

"எனக்கும் என் மாமனார், மாமியார் எல்லாருக்குமே தெரிஞ்சு போச்சு..."

"நீ என்னம்மா சொல்றே?" என்று கேட்டவாறே மகளை நெருங்கி வந்து உட்கார்ந்தாள் லெட்சுமி.

"அம்மா... அவரு ஒரு வருஷமா ஒரு பெண்ணோட குடும்பம் நடத்திக்கிட்டு வந்திருக் காரு... கல்லூரியிலே ஏற்பட்ட பழக்கம்.. என்னை விவாகரத்து பண்றதுக்கு சட்ட நடவடிக்கை எடுக்கிறதாகச் சொல்லி அந்த ஏழைப் பெண்ணோட குடும்பம் நடத்துறாரு. பாவம்... என் மாமனார் மாமியாருக்கு இதெல்லாம் தெரியாது. இப்ப நிலைமை என்ன தெரியுமோ?"

"சொல்லும்மா..."

"நேற்றைக்கு அந்தப் பொண்ணுக்குக் குழந்தை பிறந்துட்டுது.

ஆஸ்பத்திரியிலே குழந்தையோட அப்பாபேரு என்னன்னு கேட்டிருக்காங்க. இவர் அங்கே போயி தன்னோட பேரைச் சொல்லியிருக்காரு. அந்த லேடி டாக்டர் என்னோட மாமியாருக்குப் பழக்கமாம். அந்த டாக்டரம்மா எங்க வீட்டுக்கு போன் பண்ணி மாமனார் கிட்டே எல்லாத்தையும் சொல்லிட்டாங்களாம். உடனே மாமனாரும் மாமியாரும் புறப்பட்டுப் போயி அந்தப் பொண்ணுகிட்டே சண்டை போட்டிருக்காங்க. அப்பத்தான் விவாகரத்து ஒண்ணும் ஆகலை.. அதற்கான முயற்சியும் நடக்கலைங்கற விஷயம் அந்தப் பொண்ணுக்குத் தெரிஞ்சிருக்கு..."

"ம்... அப்புறம்..."

"ம்...அப்புறம் என்ன... இவரு தன்னை ஏமாத்திட்டதா நினைச்சுக் குமுறி இருக்கிறா அந்தப் பொண்ணு. இன்னொருத்தியோட சக்களத்தியாக வாழ்க்கை நடத்த முடியாதுன்னு சொல்லிட் டாளாம். இவரையும் பிடிவாதமா தன் முகத்திலே விழிக்கக்கூடா துன்னு சொல்லி அனுப்பிட்டாளாம்."

"ஓ..."

"அது சம்பந்தமாகத்தான் குடும்பத்திலே குழப்பமோ?"

"குழப்பமா... பெரிய பிரளயமே நடந்து முடிஞ்ச பிறகுதான் நீங்க வீட்டுக்குள்ளே வந்து நுழைஞ்சிங்க..."

"சரிம்மா... இப்ப நீ என்ன நினைக்கிறே... எங்களுக்கு அதுதான் முக்கியம்..."

"இனிமேலும் இவரோட நான் வாழ விரும்பலை. இன்னொரு கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்னு இவர் சொன்னதெல்லாம் நாடகம்னு தெரிஞ்சு போச்சு. என்னை ஏமாத்தியிருக்கலாம். இன்னொரு பெண்ணையும் ஏமாத்தியிருக்காரே... வாழ்ந்த வரைக்கும் போதும். வாங்க. அம்மன் சந்நிதியிலே விழுந்து வணங்கிட்டு நான் உங்ககூட வந்துடுறேன்..." என்றாள் புனிதா.

"என்னம்மா... வீட்டிலே பெரியவங்ககிட்டே சொல்லிக்க வேணாமா?"

"பிரளயம் நடந்து ஓய்ஞ்ச நேரத்திலே... நான் என் பிறந்த வீட்டுக்குப் போறேன்... எப்ப திரும்பி வருவேன்னு சொல்ல முடியாது.. அப்படீன்னு சொல்லிட்டேன். நீங்க வீட்டுக்குள்ளே வந்து நுழையுறதுக்கு முன்னாடியே சொல்லிட்டேன்..."

"சரி... அப்புறம் உன் இஷ்டம். நீயாகப் பிறந்த வீட்டுக்கு வர்றேன்னு சொல்றப்ப நாங்க வேண்டாம்னு சொல்லுவோமா? தாராளமா வாம்மா... அழைச்சுக்கிட்டுப் போறோம்..."

ஊரின் நடுவே இருந்த கதிரேசனின் வீட்டுக்குள் அமைதியாக உட்கார்ந்து ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள் புனிதா.

அவள் தாய் லெட்சுமி உள்ளே சமையல் பணியில் ஈடுபட்டிருந்தாள்.

கதிரேசன் ஈஸிசேரில் சாய்ந்தவாறு உட்கார்ந்து தினசரி பேப்பர் படித்துக் கொண்டிருந்தார்.

## நூலகமும் ஒரு போதிமரமே

உலகத்து அறிஞர்களின்
உள்ளத்து எண்ணமெல்லாம்
ஓரிடத்தில் சேர்ந்திருக்கும்
நூலகத்தில் நுழைந்திட்டால்,
கார்த்திகை மாதத்தில்
வீடுதோறும் விளக்கேற்றி
வரிசையாக வைப்பதுபோல்,
வகைவகையாய் நூல்களெல்லாம்.
அறிவென்னும் ஒளி கொடுக்கும்.
அறியாமை இருள் கெடுக்கும்!
பள்ளிக்கூடப் பிள்ளைகளுக்கும்
பல்கலைக்கழக மாணவிகளுக்கும்
ஞானம் வழங்கும்
நூலகமும் ஒரு போதிமரம்தான்!

கவிஞர் எஸ்.விக்கிரமன்
வீரப்புரம்

புனிதா பிறந்தகம் வந்து அன்றோடு ஒரு வாரம் ஆகி விட்டது.

அவள் கணவன் வீட்டிலிருந்து எந்தத் தகவலும் வரவில்லை.

இவளும் அவர்களுக்கு எந்தத் தகவலும் அனுப்பவில்லை.

வாசலில் டாக்ஸி வந்து நின்றது.

குழப்பத்துடன் புனிதாவும் கதிரேசனும் எழுந்து வெளியே போய்ப் பார்த்தார்கள்.

வயதான பெண்மணி ஒருத்தி கையில் துணி சுற்றிய ஒரு பச்சைக் குழந்தையுடன் காரிலிருந்து இறங்கி நிதானமாக நடந்து வந்து உள்ளே நுழைந்தாள்.

"யாரும்மா நீங்க?" என்று கேட்டாள் புனிதா.

"சுருக்கமாக சொல்லிடுறேன்... புனிதாங்கிறது நீதானேம்மா..."

"ஆமாம்..."

"இது.. இது... உங்க கணவருக்கும் என் மகள் ஷீலாவுக்கும் பிறந்த குழந்தை.." என்றவாறே குழந்தையை புனிதாவிடம் நீட்டினாள் ஷீலாவின் தாய் விசாலம்.

பரபரப்போடு குழந்தையைக் கையில் வாங்கிக் கொண்டாள் புனிதா.

"என் மகள்... என் மகள்.. ஆஸ்பத்திரியிலே செத்துப் போயிட்டா..."

"ஐயோ..." அலறினாள் புனிதா.

"அவ சாகறதுக்கு முன்னாடி... இந்தக் குழந்தையை புனிதாகிட்ட ஒப்படைச்சுடும்மான்னு என் கிட்டே சத்தியம் வாங்கிக்கிட்டா... அவளுக்கு செய்து கொடுத்த சத்தியத்தை நான் காப்பாத்திட்டேன்... நான் போறேன்..."

விசாலம் மௌனமாக நடந்து சென்று டாக்ஸியில் ஏறிக் கொண்டாள்.

அவளை யாரும் தடுக்கவில்லை...



• ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகள்

• பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள்

# யுகபுருஷர் ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகளும் மகரிஷி ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகளும்

*ராமதாஸ்*

**பரமஹம்ஸ ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகள்:**

தமது இஷ்ட தெய்வமான பராசக்தியை அபிஷேக ஆராதனை செய்வதற்குமுன் ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகள் உதய காலத்தில் ஸ்ரீ மஹா கணபதிக்கு சதுராவர்த்தி தர்ப்பணம், பிந்து தர்ப்பணம் செய்து, தத்துவ சேதனம் செய்த பின்பு அன்னைக்கு அபிஷேகம் செய்யத் தொடங்குவார். சூரியஉதயம் சற்று தாமதப்பட்டாலும் படலாம். இவருடைய சதுராவர்த்தி தர்ப்பணம் தொடங்குவது தாமதம் ஆகாது.

அதன்பின் தேவிக்கு தினந்தோறும் பாலா, துர்கா, லலிதாவுடன் சேர்த்து ஒன்பது வித ஸகஸ்ரநாம அர்ச்சனைகள் செய்வார். அர்ச்சனைக்குத்தேர்ந்தெடுக்கும் புஷ்பங்களையும் அவற்றை தேவியின் பாதத்தில் சமர்ப்பிக்கும் பாவனையும் எழுத்தினால் விவரிக்க முடியாதவையாகும். புயல் அடித்தாலும், ஹர்த்தால் நடந்தாலும், இந்த தேவ யக்ஞத்தில் தொய்வு என்பதே ஏற்பட்டதில்லை. அப்படியாக அவர் செய்யும் தேவயக்ஞத்தில் மற்றவர்களால் ஏற்படும் சிறு தவறுகளை, கடுமையாக, தவறு செய்பவர் மனம் நோகும்படி கூறாமல், ஹாஸ்யமாக, கதை மூலம் விவரிப்பதனால் தவறு செய்தவர் திரும்பவும் தன் ஜன்மத்தில் அந்தத் தவற்றைச் செய்யாமல் தடுத்து தேவ யக்ஞமாகச் செய்வார்.

புராண இதிஹாஸம், உபநிஷத் கருத்துகளை தேவ யக்ஞத்தின் இடையில் தன் சிஷ்யர்களுக்கும் மற்றவர்களுக்கும் மிகவும் எளிமையாக எடுத்துக் கூறி, அதற்கான மேற்கோள்களையும், ஸஹஸ்ரநாம அர்ச்சனையில் வரும் நாமாவளியையும் இணைத்துக் கூறும் தன்மையினாலே நாஸ்திகனையும் ஆஸ்திகனாக்கி விடும் முறையில் ரிஷி யக்ஞம் ஆற்றுகிறார்.

தினம் தோறும் மாதா, பிதா, குரு, தெய்வம் என்றதை மனத்தில் கொண்டு பித்ருக்களைத் திருப்தி செய்வதுடன் பித்ரு தினங்களில் பித்ருக்களுக்கு (முன்னோர்களுக்கு) செய்யும் கடமைகளை சாஸ்திரத்தில் கர்ம காண்டத்தில் உள்ளபடி மிகவும் ஸ்ரத்தையாக ஸ்வாமிகள் செய்வது போன்று வைதீக மார்க்கத்தில் உள்ளவர்கள்கூடச் செய்ய முடியாது. அவர் செய்யும் பித்ரு காரியங்கள் வைதீகர்களுக்குக் கூடத் தெரியாததாய் இருக்கும். அப்படிப்பட்ட நேரத்தில் தர்ம சாஸ்திரத்திலிருந்து ஆதாரங்களை எடுத்துக் கூறி அவர்களுக்கு தர்ம ஞானத்தைப் புகட்டி யக்ஞம் செய்கிறார்.

மனச் சஞ்சலத்துடன் வரும் பக்தர்கள் அனைவரையும் அவர் சிறு குழந்தையானாலும், நடு வயது உடையவரானாலும், வயோதிகர்களானாலும் அவர்களை "வாங்கோ", "சௌகரியமா" என்று கேட்கும் பாவனை, தோரணையிலேயே அவர்களுடைய மனச்சங்கடம் தீர்ந்து நிம்மதியை அடைந்து விடுவார்கள். அதே சமயம் வருபவர்கள் நெற்றியில் அவர்கள் சம்பிரதாயப்படி திலகம் அணியாமலோ,

ஒற்றை வேஷ்டியுடனோ வந்தால் முகத்தைத் திருப்பிக் கொண்டு விடுவார். வந்தவர்கள் யாராக இருந்தாலும் ஏழை-பணக்காரன், படித்தவர்-படிக்காதவர் என்ற வேறுபாடு கொள்ளாமல் அவர்கள் தகுதிக்கேற்ப ஞானக் கல்வியைப் புகட்டுவார். எல்லாவற்றிற்கும் மேலாக வந்தவர்களை, தன் இரண்டு கைகளையும் சேர்த்து இணைத்து வைத்துச் சற்று வலப்பக்கமாக நகர்த்தி 'சாப்பிட்டு வாங்கோ' என்று சொல்லும் பவ்ய பாவனையை எழுத்தால் விவரிக்க முடியாது. நேரில் காண்பவர் அனுபவிக்கலாம். இந்த பவ்ய பாவனை யிலேயே பசி பறந்து போய்விடும். பிணியில் வாடுபவர்களை, பார்த்த மாத்திரத்தில் கண்டு அதற்கான தீர்வைக் கூறி தேவியின் கருணையால் நன்மை கிடைக்கும் என்ற சொல்லிலேயே பிணி குறைந்து விடுவதை, கண்டவர்கள் சொல்வார்கள். "மற்றவர்களுக்கு உபகாரமாய் இரு" என்ற தன் குருவின் வார்த்தையை குருவாக்கிய பரிபாலனமாக-நாயக்ருத்தைச்-செய்துவருகிறார்.

மனிதர்களின் வாழ்க்கைக்குப் பல வகைகளில் உதவி புரியும் ஆடு, மாடு, பக்ஷி இனங்களில் பசு முதன்மையாகவும், கோமாதா என்ற தெய்வமாகவும் அமைகிறது. பசுவே லோகமாதா, அதற்குச் சேவை செய்வதால் ஸகல தேவதைகளுக்கும் சேவை செய்த பலன் கிடைக்கும் அதுவே புண்ணியமான தனம்.

*"காவ:ப்ரதிஷ்டா பூதாநாம் ததாகாவ:பராயணம்*
*காவ: புண்யா:பவித்ராஞ்ச கோதநம் பாவநம் ததா"*

பூதம் என்ற சொல்லில் அடங்கியுள்ள பிராணி களுக்கெல்லாம் ஆதாரம் பசு. சரணம் அடையத் தக்கது பசு. புண்ணியமானதும், சுத்தமானதும், பசு புண்ணியமான தனம் என்பதும் பசுவே என்று கூறப்படுகிறது.

அப்படியான கோமாதாவின் தேகத்தில் ஸகல தேவதைகளும் ஸ்திரமாக நித்திய வாசம் செய்கிறார்கள். ஜகத்குரு ஆதிசங்கரர் "ப்ரச்னோத்தர ரத்ன மாலிகா" என்ற கிரந்தத்தில் அன்னை யார்? என்ற கேள்விக்கு, பசுவே என்று பதில் கூறி,"உலகில் உள்ள பிராணிகள் தந்தம் குழந்தைக்கு மட்டுமே பால் அளிக்கின்றன. பசு மட்டும் தன் கன்றுக்கும் பால் கொடுத்து, உலகில் உள்ள மற்ற பிராணிகளுக்கும் பால் கொடுத்து உதவுகிறது. பசுவின் பால், பிறந்த குழந்தை முதல் கடைசி நேரம் நெருங்கும் வயோதிகர்கள் வரை அருந்த அருகதையாக அமைந்திருக்கிறது" என்று கூறுகிறார் ஸ்வாமிகள்.

'கோமாதாவுக்குச் செய்யப்படும் உபசாரங்கள் எல்லாவற்றையும், தேவி தனக்கே செய்வதாக ஏற்றுக் கொள்கிறாள்' என்ற வாக்கியத்தின் அடிப்படையில் ஸ்வாமிகள் கோசாலை ஒன்றை ஏற்படுத்தி அதில் அகாராந்த க்ஷகாராந்தம் வரையில் உள்ள 51 மாத்ருகா அக்ஷரத்திற்கு 51 கன்றுடன் கூடிய கறவைப் பசுக்களை வைத்து அவற்றைத் தினமும் நல்வாசனை நீரால் குளிப்பாட்டி மஞ்சள், சந்தனம், குங்குமம், புஷ்ப மாலைகளால் அலங்கரித்து தூப, தீபம் காட்டி பச்சைப் புல், அகத்திக்கீரை ஆகியவற்றுடன் நெய் இல்லாத சர்க்கரைப் பொங்கல், பழம் ஆகியவற்றை நிவேதனம் செய்து அவற்றைப் பசுக்களுக்கே உணவாக அளித்து உண்டபின் தீபாராதனை செய்யும் நேரத்தில் கோகுல கிருஷ்ணனாக ஸ்வாமிகள் மாறிவிடுவார்.

ஸ்ரீஸ்வாமிகளின் கோசாலையில் கோமாதாக் களுக்குக்கொசு, ஈக்கள் தொந்தரவு செய்யக்கூடாது என்ற பெரும் எண்ணத்தில் மூன்று பசுக்களுக்கு ஒரு பேன் (fan) வீதம் ஸீலிங் பேன் நிறுவியும், அதன் காற்று முதுகின் பக்கம் மட்டும்தானே அடிக்கும்? பசுவின் வயிற்றின் அடிபாகம், கால்களில் கொசு, ஈக்களின் தொந்தரவு இருக்கும் என்று கருணையுள்ளத்துடன் கோசாலையின் இரண்டு பக்கங்களிலும் இரண்டு பெடஸ்டல்பேன் பொருத்தி இயங்கும்படி இருக்கச் செய்துள்ளார். இவை போதாதென்று பசுக்களின் மேல் கொசு, ஈக்கள் உட்காராமல் இருக்க வேப்ப எண்ணெயைப் பஞ்சில் நனைத்து லேசாகத் தடவச் சொல்வார். பஞ்சைத் தவிர வேறெதைக் கொண்டும் எண்ணெயைத் தடவினால் பசுக்களுக்குக் கஷ்டமாக இருக்கும்.ஆகவே பஞ்சையே உபயோகிக்கவேண்டும் என்பதில் கண்டிப்புடன் இருப்பார். இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் பசுக்களின் மீது கொசுவோ ஈயோ உட்காருவதை ஸ்வாமிகள் பார்த்துவிட்டால், தாம் அணிந்திருக்கும் பட்டு அங்கவஸ்திரத்தால் அவற்றைத் தட்டி அப்புறப்படுத்தும் காட்சியைக் காணு பவர்கள் ஆனந்தக் கண்ணீர் வடிக்காமல் இருக்க மாட்டார்கள். அப்படி யாராவது இருந்தால் அவர்கள் ஈரமற்ற மனம் உடைய மாக்கள் ஆவார்கள் என்பது திண்ணம்.

கோசாலை, இலை போட்டுச் சாப்பிட, படுத்து உறங்கக்கூடிய வகையில் எப்பொழுதும் சுத்தமாக இருக்கும். ஸ்வாமிகள் தினமும் காலையில் எழுந்ததும் கோமாதாவை ப்ரதக்ஷிணம் செய்தும், இரவில் படுக்கச் செல்லுமுன் ப்ரதக்ஷிணம் செய்தும் தன் கையாலேயே அவற்றுக்குப் புல் முதலியவற்றை அளித்து பின்பு தான் உறங்கச் செல்லும் வழக்கத்தைக் கடைப்பிடித்து வருகிறார். கறவை நின்ற பசுக்கள் எருமை மாடுகள், எருதுகள் ஆகியவற்றுக்கும் கோசாலை போன்றே தனியாக இடம் அமைத்துப் பராமரிக்கிறார். அவர் செய்கின்ற கோ பூஜை மிகவும் உன்னதமானது. உயர்ந்தது. பக்தி பூர்வமானது. வேண்டிய வரம் அருளக்கூடியது என்பது எல்லாரும் அறிந்த செய்தியாகும்.

→

இவற்றுடன் சத்துவ குணமுள்ள மிருகங்களில் முதன்மையானதும், தேவியின் கையில் ஏந்தக்கூடிய தகுதியைப் பெற்றதுமான மான், மயில், கிளி ஆகியவற்றுக்குத் தனித்தனியாக அவை வாசம் செய்யத் தகுந்த இயற்கை அமைப்புடன் கூடிய குடில்களை அமைத்து அவற்றைப் பேணிக் காப்பாற்றுவதை யக்ஞமாகச் செய்கிறார்.

இவ்வாறெல்லாம் வாயற்ற ஜீவன்களுக்கும் பரிவுகாட்டும் ஞான ஆச்சாரியனாக அமைந்தவர், அஞ்சாமை, உள்ளத்தூய்மை, ஞானம், யோகம், ஈகை, தர்மம், யக்ஞம் ஸ்வாத்யாயம், தபசு ஆர்ஜவம் என்பனவற்றுடன் கூடிய ஆச்சார்ய லக்ஷணங்களுடன் விளங்குகிறார். எப்படி அவர் விளங்குகிறார் என்று விவரிக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.

தன்னிடம் வருபவர்கள் எப்பேர்ப்பட்டவர்களாக இருந்தாலும், அரசியல் அந்தஸ்தில் இருந்தாலும், தனம் படைத்தவர்களாக இருந்தாலும் அவர்களிடம் அஞ்சாமல் சத்தியத்தை எடுத்துரைத்து அவர்களைத் திருத்தியும், தன் புத்தி, சொல், செயலில் எந்த மாறுபாடுகளும் இல்லாமல், எல்லாம் தேவியின் ஆராதனையாகச் செய்யும் ஆர்ஜவம் என்ற நேர்மையும் தன்னைப் பார்க்க வருபவர்களிடம் ஒரு சாதாரண மனிதராகத் தன்னை இணைத்து, பழகி, இதமாகப் பேசும் உள்ளத் தூய்மையுடனும், பிரஹ்ம ஞானத்தை அடைந்து அதிலேயே திளைக்கும் யோகத்துடனும், பிறருக்கு அளிக்கும் வஸ்திரம், புடைவை இதர பொருள்கள் நல்லவையாகவும், அவர்கள் பயன்படுத்தக்கூடியனவாகவும் இருக்க வேண்டும் என்ற நோக்கில் தன் கையாலேயே ஒருவருக்குத் தெரியாமல் மற்றவர்களுக்கு அளிக்கின்ற தானத்தின் தன்மையாலும், உலக லௌகீக விஷயத்தில் மனத்தைச் செலுத்தாமல் ஞான மார்க்கத்தில் செலுத்தும் தமம் என்ற செய்கையாலும், தாம் செய்கின்ற செயல், கர்மாக்கள் எல்லாம் அன்னையின் கட்டளை, அது அவளையே சென்று அடைகின்றது என்ற யாகத்தை ஆற்றுபவர்களாகவும், தாம் செய்யும் ஆராதனையில் செய்யும் செயல்கள் சாஸ்திர உபநிஷத்துகளுடன் ஒப்பிட்டு விளக்கிக் கூறுவதாலும் ப்ரஹ்மத்தை அறிய உதவும் தபஸை உடையவர் ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகள்.



• ஸ்படிக லிங்கம் (ஸ்ரீ அம்ருத ஜ்யோதி லிங்கேஸ்வரர் ஸ்ரீபரத்வாஜ ஆசிரமம், கங்கை நகர், அம்பத்தூர், சென்னை 600 053.)

வேதங்களும் ரிஷிகளும் ப்ரஹ்மத்தை 'ஸத்'என்று அழைக்கிறார்களே அது போல ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகள். சதா சர்வ காலம் ஸத்தியத்தையே கடைப்பிடித்து "ஸமாரக" லக்ஷணத்துடனும், ஸத்தியத்திற்கு மாறானவற்றை அகற்றி "வாரக" லக்ஷணத்துடனும், ஸத்தியத்திலேயே தான் நிலைத்து மற்றவர்களையும் நிலை பெறும்படி செய்து "தாரக" லக்ஷணத்துடனும் கூடிய குருவாக விளங்குகிறார்.

**பரத்வாஜ் ஸ்வாமிகள்:**

பரத்வாஜ் ஸ்வாமிகள் என்றும், சின்ன ஸ்வாமிகள் என்றும், முனிபுங்கவ பரத்வாஜ் என்றும் எல்லாராலும் அன்புடன் அழைக்கப்படுபவரும் என்னால் வசின்யாதி வாக்தேவதை ஸ்வரூபம் என்று அழைக்கப்பெறுபவரும் ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகளின் இரண்டாவது புதல்வர். ஸ்ரீஸ்வாமிகளுக்கு மூன்று புதல்வர்கள். மூன்று பேருமே தேவியின் சூலாயுதம் போன்றவர்கள். மூன்று பிரிவுகளை உடைய சூலாயுதத்தின் நடுநாயகமாக உள்ளது போல் இருப்பவர்தான் பரத்வாஜ் ஸ்வாமிகள்.

1958ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 13ஆம் தேதி கேட்டை என்ற ஜேஷ்டா நக்ஷத்ரத்தில் விருச்சிக ராசி, மேஷ லக்னத்தில் பிறந்தார். கௌஸல்யா ஸ்ரீஇராமனைப் பெற்றது போல் யசோதை ஸ்ரீகிருஷ்ணனைப் பெற்றது போல் தேவியின் அம்சமாயும், மாதா அன்னபூர்ணியைப் போல் ஸ்வாமிகளைக் காண வருபவர்களுக்கெல்லாம் உணவளித்ததன் காரணத்தால் கைரேகை கூடத் தேய்ந்து போன புண்ணியவதியான மாதுஸ்ரீ மரகதம்மாள் இவரை ஈன்றெடுத்தார்கள்.

கல்லூரிப் படிப்பு முடிந்து மேற்படிப்புக்குச் செல்ல எல்லாத் தகுதிகளும் இருந்தும் மேற்படிப்புக்குச் செல்லாமலும், உத்தியோகம் என்ற சிறையில் சிக்காமலும் அம்பாளின் சேவையிலேயே தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டார். தம் தகப்பனார் ஸ்ரீஸ்வாமிகளிடம் முறைப்படி ஸ்ரீவித்யா மந்திர உபதேசம் பெற்று விமலாநந்த இராமகிருஷ்ணன் என்ற பெயரைப் பெற்றார். ஸ்ரீகுருவின் ஆசியாலும், தேவியின் கருணையாலும் பல மந்திரங்களைக் கற்றும் பாலா திரிபுரசுந்தரியின் பரிபூரண அருளைப் பெற்று பல சித்திகளை அடையப் பெற்ற இவருக்கு பூர்ணா அபிஷேகம் செய்வித்து பூர்ண தீக்ஷையையளித்து தகப்பனாரும் ஸ்ரீ குருவுமான ஸ்ரீ ஸ்வாமிகள் "பரத்வாஜ்"என்ற தீக்ஷா நாமம் சூட்டி ஆசி வழங்கினார். இராமகிருஷ்ணனாக அதுவரை இருந்து வந்த அவர் அன்று முதல் "பரத்வாஜ் ஸ்வாமிகள்" என்று அன்புடன் எல்லாராலும் அழைக்கப்படுகிறார்.

பக்தி லக்ஷணங்கள் ஒருங்கே அமையப் பெற்று பக்தனாகி மனம், மொழி, காயம் ஆகியவற்றைத் தம் தகப்பனாரும் ஸ்ரீ குருவுமானவரின் பாத கமலங்களில் சமர்ப்பித்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து தம்மை அர்ப்பணித்து, அவருக்குப் பணிவிடை செய்வதையே சேவையாகக் கொண்டு,

*"தத் வித்தி ப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா*
*உபதேக்ஷ்யந்தி தே ஞானம் ஞானினஸ் தத்வ தர்சின"*

என்ற கீதையின் வாக்கியத்தை நிறைவேற்றி வருகிறார். ஸ்ரீகுருவின் சேவையில் தடங்கல் ஏற்படக்கூடாது என்பதாலும், தேவியின் ஆராதனையில் தொய்வு ஏற்படக்கூடாது என்ற காரணத்தாலும், ஆத்ம ஞானத்தில் முன்னேறி ஆத்ம தர்சனம் பெறவேண்டும் என்ற திட சித்தத்தினால் ஸம்ஸார பந்தத்தில் கட்டுப்படாமல் பிரம்மச்சாரியாக, ஓஜஸ் தேஜஸுடன், குருவிடம் சிஷ்யன் எப்படி இருக்கவேண்டும் என்ற உதாரண புருஷராகத் திகழ்கிறார்.

1. தேவர்கள், ஞானிகள், குரு ஆகியவர்களைப் போற்றுவதும், தூய்மையுடன் கூடிய நேர்மையான பிரம்மச்சாரியத்துடனும், அஹிம்ஸையாக இருப்பது "தேக தபசு"

2. மற்றவர்களைத் துன்புறுத்தாத உண்மையும், இனிமையுடன் கூடிய நலமான வார்த்தையும், வேத மந்திரங்களையும் கூறுவது "வாக்தபசு"

3. அன்புடனும், மன அமைதியுடனும், தன்னடக்கத்துடனும் நல்ல பரந்த நோக்கத்துடனும் இருப்பது "மானஸ தபசு"

இப்படியான மனம், வாக்கு, காயம் என்ற மூன்றுவித தபசில் ஸ்ரீகுருவின் கருணையால் தம்மை உட்படுத்திக் கொண்டு யோக பலத்தில் யோக சாதனையைத் தீவிரமாகக் கடைப்பிடித்து வருபவர்தான் பரத்வாஜ் ஸ்வாமிகள். ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள் பல அபூர்வ சித்திகளையும், அபூர்வ சக்திகளையும் பெற்றவர் என்பதைக் கண்கூடாகப் பார்த்துள்ளேன். தம் தந்தையார் ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகளின் அரிய வழிகாட்டுதலில் பரத்வாஜ் ஸ்வாமிகள் இளம் வயதிலேயே இடுப்பளவு நீரில் தவம், ஒற்றைக் காலில் நின்று ஆறு மணி நேரம் தவம் போன்ற அரிய சாதனைகளைப் புரிவதைப் பாராட்டாதவர்களே இலர் பெரும் வித்துவான்கள், பண்டிதர்கள் யாவரும் இவரைக்கண்டு மயங்குவார்கள். இவரது பூஜையில் லயிப்பார்கள். எதிர்காலத் திட்டம், எதிர்கால நிகழ்ச்சியைச் சொல்லிவிடுவார்கள்.



# சுப்ரீம் ஹோட்டலின் சுவையான விஷயங்கள்

மதுரையின் பிரபல ஹோட்டல் சுப்ரீம், தனது மாறுபட்ட மக்களைக் கவரும் செயல்பாடுகளினால், பல சுவையான விஷயங்களையும் அளித்து வருகிறது. அந்த ஹோட்டலுக்கு ஒருமுறை விஜயம் செய்தபோது அங்கே கண்டவை, அனுபவித்தவை நம்மை வியக்க வைத்தன. பயண நிமித்தமாகவும் அவசர வேலையாகவும் ஓர் ஊருக்குச் செல்பவர்களுக்கு அந்த ஊரில் தங்குவதற்குத் தகுந்த விடுதியைத்தான் முதலில் தேடிச் செல்லத் தோன்றும். மதுரை போன்ற நகரங்களில் தங்கவும், சிறந்த உணவைச் சாப்பிடவும் தக்க ஓட்டல்களைப் பற்றி விசாரித்து அறிந்துகொள்ள வேண்டும். அப்படி விசாரித்ததில் சில தகவல்கள் தெரியவந்தன.

**ரூப் டாப் ருசிகரம்**

ஹோட்டல் சுப்ரீம் புகழுக்கு மகுடமாய் இருப்பது ரூப்டாப் உணவகம்தான். எழில் கொஞ்சும் சுப்ரீம் ஏழு மாடி கட்டடம் மீது இந்த ரூப்டாப் உணவகத்தை 'முதன் முதலாக' அமைத்த பெருமை இதன் அதிபர்களுக்கு உண்டு. மதுரைக் கோயில் கோபுரங்களின் அழகை ரசித்தபடி தென்றல் காற்று மேனியில் தவழ குடும்பத்தோடு, குழந்தைகளோடு குதூகலமாக சாப்பிட இங்கே பலர் வருகின்றனர். மாலை நான்கு மணி முதல் நள்ளிரவு பன்னிரண்டு மணி வரை தினமும் இயங்கும் இந்த ரூப் டாப்பில் அற்புதமான ருசியுள்ள உணவு வகைகளைச் சாப்பிட்டுக் கொண்டே பேசி மகிழ மக்கள் கூடுகின்றனர்.



இந்த ரூப் டாப்பில் சாப்பிடும்போது காதல் மலர்ந்து, இந்த ஹோட்டல் திருமண அரங்கில் நிச்சயதார்த்தமும், திருமணமும் நடந்து, இங்குள்ள 'ஹனிமூன் சூட்டில் முதலிரவு நடைபெற்று குழந்தை பிறந்து, அந்தக் குழந்தையின் பிறந்தநாளையும் இங்குள்ள ராசியான ரீகல்,சன்செட் ஹால்களில் கொண்டாடுகிறவர்களும் உண்டு.

அப்பப்பா... எப்படி மனிதர்களின் வாழ்வில் முக்கிய இடத்தை இந்த சுப்ரீம் ஹோட்டல் பெற்றுவிட்டது பார்த்தீர்களா?

கவிஞர்களுக்கு நல்ல கற்பனைத்திறன் பிறந்து அபூர்வமான கவிதைகளைப் படைக்க இந்த சுப்ரீம் ரூப் டாப் தேடி வந்து விடுகிறார்கள். சினிமாக் கதை விவாதங்களும் இங்கே நடைபெறுகின்றன.

ரம்மியமான, மனத்திற்கு இதமான இடத்தை எவரும் விரும்பத்தானே செய்வார்கள்? இதனால்தான் குழந்தைகள் தினமும் சுப்ரீம் ரூப் டாப்பில் சாப்பிட, பெற்றோரை அடம்பிடித்து அழைத்து வருகிறார்கள். பிறந்த நாள் விழா, பிரிவு உபசார விழா, அறிமுக விழாக்கள் என்று பல விழாக்கள் ரூப் டாப்பில் நடக்கின்றன.

இங்கே பார்சல்களை அலுமினிய ஹாட்பேக்கில் வைத்துத் தருவதால் உணவு வகைகள் ஆறிப் போகாமல் சூடாக இருக்கிறது. இப்படி குளிர்ச்சியான ரூப் டாப்பில் சூடான சமாசாரமும் உண்டு. தரமான வெஜிடேரியன் உணவு வகைகள் மட்டுமே தந்தாலும் தனிப்புகழைப் பெற்றுக் கொடிகட்டிப் பறக்கிறது, இந்த சுப்ரீம் ரூப் டாப் உணவகம். நடுத்தரக் குடும்பங்களின் பட்ஜெட்டிற்கேற்ற வகையில் உணவு வகைகள் கிடைப்பது குறிப்பிடத்

பிரசன்னா

தக்கது. இதனால் கூட்டம் ரூப் டாப்பில் அலை மோதுகிறது.

### தோசைத் திருவிழா

இந்தக் காற்று மாசு—ஏர் பொல்லுஷன்—இல்லாத மொட்டை மாடி திறந்தவெளி ரூப் டாப் சுகாதார சூழ்நிலை உணவகத்தின் பெருமையை மேலும் உயர்த்துகிறது, இங்கே ஆண்டுதோறும் நடந்துவரும்—அமர்க்களமான விழா 'தோசைத் திருவிழா'

மதுரை சித்திரைத் திருவிழாவிற்கு நிகரான பெயரை இந்த தோசைத் திருவிழாவும் பெறக் காரணம் நூறு வகையான தோசைகள் பல சுவைகளில், பல வடிவங்களில் வழங்கப்படுவதுதான். ஒரு மீட்டர் நீள



★ இன்டர்நெட் சென்டர்

வண்ணப் போட்டோ:
வி. கண்ணன்

★ ஒரு மீட்டர் நீள தோசை





★ ராசியான ஹால்

தோசை எவரையும் வியக்க வைத்துவிடும். வெளி நாட்டவர்கள் இந்த தோசைத் திருவிழாவிற்கு விஜயம் செய்து ஆச்சர்யமாக தோசைகளைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து சாப்பிடுவார்கள். புகைப்படங்களும் எடுப்பார்கள்.

மஷ்ரூம் தோசை, மைசூர் தோசை, பன்னீர் தோசை, கோகனெட் தோசை, முந்திரிப் பருப்பு தோசை, கேரட் தோசை, மின்ட் தோசை, காஷ்மீரி தோசை என்று பலவகையான தோசைகள் இடம் பெற்று தோசைத் திருவிழா ஏக அட்டகாசமாக நடைபெறும். இரண்டு மாதம் இது நடப்பதைப் பார்த்து 'வருடம் முழுவதும் தோசைத் திருவிழா நடத்துங்களேன்' என்று பலரும்



★ அனைத்து வசதி அறை

கேட்கிறார்கள். அந்த அளவு அனைவரையும் கவர்ந்துவிட்டது இந்த தோசைத் திருவிழா.

**அடித்தளத்திலும் அருமையான ரெஸ்டாரெண்ட்**

காலை ஆறுமணி முதல் இரவு பதினோரு மணி வரை இயங்கும் கீழ்த்தளத்தில் உள்ள உணவகமும் இந்தியன், சைனீஸ், காண்டினென்டல், ஆந்திரா மீல்ஸ், மெட்ராஸ் மீல்ஸ், பாம்பே மீல்ஸ் சாப்பாடுகளை வழங்கி சபாஷ் சொல்ல வைக்கிறது. கண் கூசாத விளக்கொளியில் மனம் விட்டு, குடும்ப விஷயங்களைப் பேசியபடியே சாப்பிட இங்கே பலர் வருகிறார்கள்.

**ராசியான ஹால்.... அறைகள்...**

தரைத்தளத்தில் கிளாஸிக் மினி ஹால் உள்ளது. ஏழாவது மாடியில் ரீகல், இன்செட் ஹால்கள் இருக்கின்றன. இவற்றில் பல்வேறு கருத்தரங்குகள், அலுவலக மீட்டிங்குகள், இன்டர்வியூக்கள் நடக்கின்றன. 'சுப்ரீமில் எங்கள் ஆபீஸ் மீட்டிங் நடத்தினால்தான் எதுவும் சரிவர நடக்கிறது' என்று பலரும் நாடி வருகிறார்கள். 'ராசியான ஹால்கள்' என்ற பெயரை இவை பெற்றுவிட்டன. ஒரு முறை புக்கிங் செய்து புரோகிராம் நடத்துபவர்கள் இதன் மூலம் நல்ல பலன் கிடைத்து தொடர்ந்து நடத்த 'சுப்ரீம்' தேடி வருகிறார்கள். திருமணங்கள், நிச்சயதார்த்தங்கள், பிறந்தநாள் விழாக்கள், கம்ப்யூட்டர் எக்ஸிபிஷன்கள், சிறப்பு ஜவுளி விற்பனை என்று இந்த ஹால்களில் நடைபெறுகின்றன. 'கிங் சூட்' 'குயின் சூட்' 'ஹனிமூன் சூட்' என்று ஏஸி அறைகள். அனைத்து வசதிகளுடன் எழுபதிற்கு மேல் இருக்கின்றன.

'சுப்ரீம் ரூமில் தங்கி முயற்சி செய்தால்தான் எதிலும் சக்ஸஸ் ஆகுதுங்க' என்று வெளியூர்க்காரர்கள் முதல் வெளிநாட்டவர்கள் வரை சுப்ரீம் ரெகுலர் கஸ்டமர் ஆகிவிடுகிறார்கள்.

**பூமியில் சொர்க்கலோகம்**

சுப்ரீம் ஹோட்டல் உள்ளே சென்றால் போதும். மின் ஒளி வெள்ளத்தில், அழகிய கலை நுணுக்க

★ ரூப் டாப் உணவகம்



வேலைப்பாடுகளுடன் ரிசப்ஷன் முதல் ஏழு தளங்களும் பூமியில் இது சொர்க்கமோ என்று நினைக்க வைத்துவிடும்.

**சுப்ரீம் தந்த தேசிய விருது**

சினிமாக்காரர்கள் எதிலும் சென்டிமெண்ட் பார்ப்பது தெரிந்த விஷயம்தானே? இந்த சுப்ரீம் ஹோட்டலில் தங்கி சூட்டிங் நடத்தினால் படம் சூப்பர் ஹிட் தான் என்று வந்து தங்குகிறார்கள். நடிகர் பார்த்திபன் 'ஹவுஸ்ஃபுல்' படத்தின் படப்பிடிப்பை சுப்ரீம் ஹோட்டலில் தங்கித்தான் நடத்தினார். அந்தப் படத்திற்கு தேசிய விருதே கிடைத்துவிட்டதால் அது 'சுப்ரீம் ஹோட்டல் தந்த ராசி' என்று திரைப்படத் துறையினர் மதுரை சுப்ரீம் ஹோட்டல் நோக்கி தொடர்ந்து படையெடுத்து வருகின்றனர்.

**இணை இல்லாத இன்டர்நெட் சென்டர்**

ஹோட்டல் சுப்ரீம் அண்டர்கிரவுண்ட் தளத்தில் உலகின் எல்லா நாடுகளுடனும் குறைந்த செலவில் தொடர்பு கொள்ள 'சுப்ரீம் வெப் இன்டர்நெட் பிரவுஸிங் சென்டர்' உள்ளது. ஹோட்டலில் தங்குபவர்கள் மட்டுமின்றி மதுரைவாசிகளும் இதனால் பயன்பெற்று வருகிறார்கள்.

சுப்ரீம் ரூப் டாப்பில் மட்டுமின்றி இன்டர்நெட் சென்டரிலும் திருமணங்கள் நிச்சயிக்கப்பட்டு வருகின்றன. மாணவர்கள் வெளிநாட்டில் பட்டம் பெற, அயல்நாடுகளில் வேலை தேடுவோர் உலகின் முக்கிய கம்பெனிகள் பற்றி அறிய, வியாபாரிகள், வியாபார நுணுக்கத்தை நவீனமாக அறிய, டாக்டர் மருத்துவத்துறை புதிய கண்டுபிடிப்பு, புதிய மருந்துகள் பற்றி உலகம் முழுவதும் தெரிந்துகொள்ள, வக்கீல்கள் உலகின் பல இடங்களில் நடக்கும் முக்கிய வழக்குகள் பற்றி அறிய, குழந்தைகள் வீடியோ கேம்ஸ் விளையாட, சினிமா பற்றிய தகவல்கள், இன்டர்நெட் ஷாப்பிங், இசைத் தொகுப்பு பற்றி அறிய, அதிநவீன கம்ப்யூட்டர் கேம்ஸ் விளையாட, இல்லத் தரசிகள் வீட்டு நிர்வாகத்திலும், சமையலிலும் முடிசூடா இராணியாகத் திகழப் பயனுள்ள உலகத் தகவல்கள் பெற இந்த இன்டர்நெட் சென்டர் உதவுவதால் ஈடிணையற்ற ஒன்றாகத் திகழ்கிறது. இந்த இன்டர்நெட் சென்டரை இங்கே அறைகளில் தங்காத பிற மக்களும் பயன்படுத்துகிறார்கள்.

**இருபத்தி நான்கு மணிநேர ஜெராக்ஸ்**

ஹோட்டல் சுப்ரீமில் மட்டுமே 'ஜெராக்ஸ்' இருபத்திநான்கு மணிநேரமும் எடுக்கமுடியும். இங்கு எப்போதும் ஈ-மெயில் பெற, அனுப்ப இயலும். பேக்ஸ், எஸ்.டி.டி., ஐ.எஸ்.டி., பி.சி.ஓ. வசதிகள் அரசுக் கட்டணத்தில் இரவு பகலாக இயங்குகிறது. இந்தியன் ஏர்லைன்ஸ், ஜெட் ஏர்வேஸ் விமான பயணச் சீட்டுகள் கிடைக்க ஏற்பாடு செய்து தருகிறார்கள். வெளியூர் ஹோட்டல் ரூம்களுக்கு சுப்ரீமே 'புக்கிங்' செய்து தருகிறது. பணிவான அன்பான ரூம் சர்வீஸ், சேம்டே லாண்டரி, மருத்துவரை உடன் அழைக்கும் வசதி, பாதுகாப்புப் பெட்டக வசதி மற்றும் பண மாற்றம் (எக்ஸ்சேஞ்) வசதிகள் உள்ளன.

'கிரெடிட் கார்டு' ஏற்கிறார்கள். ஜெனரேட்டர் வசதியுடன் எப்போதும் இயங்கும் 'லிப்ட்' வசதியும் உண்டு. பெண்கள் பயமின்றி தனியாக வந்து இங்கே தங்கிச் செல்ல பாதுகாப்பு இருக்கிறது. மற்ற ஹோட்டல்களில் பார்க்க முடியாத டிரஸ்ஸிங் ரூம் இங்குள்ளது.

வாடிக்கையாளர்கள் வரும்போது ரூம் காலியாக இல்லாவிட்டால் இந்த டிரஸ்ஸிங் ரூமில் தங்கள் உடைமைகளைப் பாதுகாப்பாக வைத்துவிட்டு, குளித்துவிட்டு வேறு உடை மாற்றி வெளியே சென்று வேலைகளை முடித்து வருவதற்குள் அவர்கள் தங்க அறைகளை ஏற்பாடு செய்து விடுவார்கள்.

**சூப்பர் வசதி சுப்ரீம் டிராவல்ஸ்**

விமான டிக்கெட் வாங்கித் தந்து வாடிக்கையாளர் களுக்கு இருபத்தி நான்கு மணி நேர சேவை செய்து வரும் சுப்ரீம் டிராவல்ஸ் டாக்ஸிகளை வாடகைக்கு அளித்தும் பயணத்தை இனிமையாக்குகிறது.

**புத்தாண்டு, கோடை விழா**

ஆண்டுதோறும் பல்சுவை நிகழ்ச்சிகளுடன் பல பரிசுகளை அளித்து புத்தாண்டு கொண்டாட்டம் இங்கே புதிய பொலிவுடன் நடந்து வருகிறது. பெப்ஸி நிறுவனத்துடன் இணைந்து அறிவுப் போட்டி, ஜாரில் உள்ள சாக்லேட் எண்ணிக்கை எத்தனை? போன்ற, குழந்தைகளும் பங்கு பெறும், போட்டிகளை 'கோடை விழா'வில் கோலாகலமாக நடத்திக் காட்டுகிறது 'ஹோட்டல் சுப்ரீம்'.

ஹோட்டல் சுப்ரீம் சிறப்புகளை இன்டர்நெட் வெப்சைட்டிலும் பார்க்கலாம்.*

இத்தனை சிறப்புகளுடன் பதினோராண்டுகளாக மக்களின் பரிபூரண ஆதரவு வாழ்த்துகளுடன் மதுரை நகரின் புறநகர்ப் பகுதியில் இல்லாமல் மத்தியில், ரயில் நிலையம், பஸ் நிலையம் அருகில் அமைத்து அசத்தலான பெயரைப் பெற்றுவிட்டது 'ஹோட்டல் சுப்ரீம்'. சிறந்த ஹோட்டல் என்பதற்கான விருதுகளும் பெற்றுள்ளது.

* Website: http//wwwsupremehotels.com

# ஆவூர்ப் பழம்பதி

டாக்டர் இரா.கலைக்கோவன்



• விமானத் தளத்தின் வேலைப்பாடு

சேக்கிழார், திருத்தொண்டர் புராணத்தில் ஆவூரைப்பற்றிக் குறிப்பிடும்போது, 'அங்கணர்க்கிடமாகிய பழம்பதி ஆவூர்' என்று போற்றுகிறார். அவரின் கூற்றைச் சங்க இலக்கியங்களில் காணப்படும் ஆவூரைப் பற்றிய செய்திகள் மெய்ப்பிக்கின்றன. புறநானூற்றில் ஆவூர் குறிக்கப் பெறுகிறது. நலங்கிள்ளி என்ற சோழ மன்னர் தன் பங்காளியான நெடுங்கிள்ளியின் ஆளுகையில் இருக்கும் ஆவூர்க்கோட்டையை முற்றுகையிடுகிறார். நெடுங்கிள்ளி கோட்டைக் கதவுகளைச் சாத்திக்கொண்டு உள்ளிருக்கிறார். இந்நிலையில் கோவூர்க்கிழார் கோட்டைக்குள்ளிருக்கும் நெடுங்கிள்ளியைப் பாடுவதாகப் புறநானூற்றின் நாற்பத்து நான்காம் பாடல் மலர்கிறது. 'பாலில்லாத குழவி அழவும், மகளிர் பூவில்லாத வறிய தலையை முடிப்பவும், நீரில்லாத தொழில் புனைந்த நல்ல மனையிடத்துள்ளார் வருந்திக் கூப்பிடும் குரல் எழும்பவும்' என்று இப்பாடலில் முற்றுகையின் துன்பம் காட்டப்பெறுகிறது.

*'அறவை ஆயின் நினதெனத் திறத்தல்*
*மறவை யாயின் போரொடு திறத்தல்'*

*என்று கோவூர்க்கிழார்* நெடுங்கிள்ளிக்கு அறிவுரை கூறுகிறார். 'நீ அறவழி நிற்பவனாயின் இது உன தன்றோ' எனக்கூறி, நலங்கிள்ளிக்குக் கோட்டையைத் திறந்திடுக. வீரவழி நிற்க விரும்பிடின் கோட்டைக் கதவுகளைத் திறந்து நலங்கிள்ளியுடன் போரில் ஈடுபடுக. இவ்விரண்டு வழிகளில் எவற்றிலும் ஈடுபடாது கோட்டைக் கதவுகளை மூடியபடி உள்ளே ஒதுங்கியிருத்தல் நாணுடைய செயலன்றோ' என்னும் இப்புலவரின் கருத்துரை, தவறிடும் அரசுக்குத் தக்க வழிகாட்டும் சங்ககாலத் தமிழ்ப் புலவரின் நெஞ்சத் துணிவையும் அறவுரை கூறவல்ல ஆண்மைத் திறத்தையும் எடுத்தோதுகிறது.

சங்ககாலந்தொட்டே சோழர்களின் ஆட்சியிலிருந்த ஆவூர் காவிரியின் தென்கரையிலுள்ள பாடல் பெற்ற சிவத்தலமென்று புறநானூற்று உரையில் குறிப்பிடப்படுகிறது. இவ்வூரில் புகழ்பெற்ற பல புலவர் பெருமக்கள் தோன்றியிருக்கின்றனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவூர்க்கிழார், ஆவூர் மூலங்கிழார், பெருந்தலைச் சாத்தனார் என்போராவர். இப்பெருமக்களின் பாடல்கள் புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களில் காணப்பெறுகின்றன. ஆவூர் மூலங்கிழாரின் செய்யுட்கள் அகநானூற்றில் நான்கும், புறநானூற்



● விருத்தி ஸ்டூடியோ

றில் எட்டும் உள்ளன. 'பலநாள் உடல் உலரக் காத்திருந்து, பெருஞ் செல்வரிடத்துப் பெற்ற யானை முதலிய பெரும் பரிசில்களினும் மேலாக, ஒருவன் அன்புடன் அளிக்கும் உணவைக் காலையில் பனம்பட்டையில் உண்ணல் மிகச் சிறந்தது' என்னும் பொருளமைந்த இவரது பாடல் சங்ககாலத்துப் புலவர் தம் பண்பு நலன்களைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இவரது புதல்வர் பெருந்தலைச் சாத்தனாரும் புகழ்பெற்ற புலவர். குமண வள்ளலைப் பாடிய இப்பெருமகனாரின் பாடல்கள் பல இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

இத்தகு பெருமைகளைக் கொண்ட ஆலூரில் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகக் கருதப்படும் கோச்செங்கட்சோழர் மாடக்கோயிலொன்றை எழுப்பி, இவ்வூரின் புகழுக்குப் புகழ் சேர்த்தார். சிவபெருமானுக்காக அப்பெருமகனார் எழுப்பிய கோயிலை,

*'பத்திமைப் பாடல் அறாத*
*ஆலூர்ப்*
*பசுபதி ஈச்சரம் பாடு நாவே'*

என்று கி.பி.ஏழாம் நூற்றாண்டினரான சம்பந்தர் போற்றி மகிழ்கிறார். ஆன்ம கோடிகளாகிய பசுக்களுக்கெல்லாம் பதியாக விளங்கும் ஈசனைப் பசுபதி யென்று போற்றுதல் சைவ முறை யாதலின் அவர் உறையும் கோயில் 'பசுபதீச்சரம்' எனப்பட்டது. இவ்வூர் தஞ்சாவூர் மாவட்டத்தில், பாபநாசம் பகுதியில், பட்டீச்சரத்திற்குத் தென் மேற்கில், பத்து கிலோமீட்டர் தொலைவில், கோவிந்தக்குடிக்கருகில் அமைந்துள்ளது.

எழுச்சியுடன் விளங்கும் ஐந்து நிலைக் கோபுர வாயிலைக் கடந்து உள்நுழைந்ததும் கண்ணெதிரே மையத்தில் அமைந்திருக்கும் மாடக் கோயில் படக்காட்சிபோல் தோன்று கிறது. இம்மாடக்கோயிலின் வெளித் திருச்சுற்றில், தென்மேற்கு மூலையில் பிள்ளையாருக்கும், மேற்கில் முருகனுக்கும், வடமேற்கில் யானைத் திருமகளுக்குமாய் விமானங்களுடன் கூடிய சுற்றாலைக் கோயில்கள் அமைந்துள்ளன. முருகன் வில்லும் அம்புமாய் வள்ளி தெய்வயானையுடன் காட்சியளிக்கிறார். கிழக்குத் திருச்சுற்றில் கோபுரவாயிலின் இடப்பக்கம் யாகசாலையும், ஒன்பான் கோள் களுக்கான திருமுன்னும் அமைந் துள்ளன. வடகிழக்கு மூலையில் உள்ள வசந்த மண்டபம் இப்போது கோயில் அலுவலகமாகப் பயன்படுத்தப்படு கிறது. மாடக்கோயிலின் அடித்தள அமைப்பின் தெற்கிலுள்ள கோட் டத்தில் ஆலமர்கடவுள் அமர்ந் துள்ளார். இது தனிக் கோயிலாக்கப் பட்டுள்ளது. வடக்கிலுள்ள இரண்டு கோட்டங்களில் இரண்டு கொற்றவை வடிவங்கள் உள்ளன. ஒன்று பழையது. இது பின்னமாகிவிட்டதால் புதிய கொற்றவையை நிறுவியிருக்கிறார்கள்.

மாடக்கோயிலின் அமைப்பு பின்னர்ச் செய்யப்பட்ட திருப்பணி களால் மாறியுள்ளது. இம்மாடக் கோயிலைச் சுற்றிலும் உயர்ந்த மதிலமைந்துள்ளது. கோயில் இரண்டாம் தளக் கூரையின் முகப்பில் இறைவனும் இறைவியும் காளையின் மீதமர்ந்த கோலத்தில் காணப்படு கின்றனர். தென்கிழக்கு மூலையில்

இத்திருமுன்னைச் சுற்றிவர வசதியாக ஒரு திருச்சுற்று நடைபாதையின் தொடர்ச்சிபோல அமைந்துள்ளது.

நேரே அமைந்துள்ள வாயில், முகமண்டபத்திற்குள் அழைத்துச் செல்கிறது. இம்மண்டபம் செவ்வக வடிவில், வண்டிக்கூடு போன்ற கூரையுடன் அமைந்துள்ளது. இதன் வடபுறத்தில் ஆடல்வல்லான் திருமுன் தெற்கு நோக்கிய நிலையிலுள்ளது. இத்திருமுன்னின் உள்மண்டபத்து வாயிலை வாயிற்காப்போர் காவல் செய்கின்றனர். இம்மண்டபத்தின் வடபுறத்திலும் கீழே செல்லப் படிக் கட்டுகள் உள்ளன.

இதையடுத்து அமைந்துள்ள முன் மண்டபத்தின் வடபுறத்தில் பைரவர்



● ஆலூர் மாடக் கோயில்



● மாடக்கோயிலின் கீழ் அமைந்துள்ள வெற்றுத்;தளம்

இரண்டாம் தளத்துக்குச் செல்ல இருபத்தைந்து படிக்கட்டுகளுடன் கூடிய வாயில் அமைந்துள்ளது. படிக்கட்டுகள் முடியுமிடத்தில் வலப்புறம் ஒரு வாயிலும், நேரே ஒரு வாயிலும் அமைந்துள்ளன. வலப்புற வாயில் சோமாஸ்கந்தர் திருமுன்னிற்கு அழைத்துச் செல்கிறது. நீண்ட திறந்தவெளி நடைபாதையை அடுத்து இருதள விமானத்துடன் இத்திருமுன் அமைந்துள்ளது. பாதுகாப்பைக் கருதி இத்திருமுன்னிலுள்ள சோமாஸ்கந்தர் வடிவத்தை அகற்றியிருக்கிறார்கள். இப்போது இங்குத் தெய்வமில்லை.

களின் சிலைகள் ஐந்துள்ளன. இதற்கடுத்துள்ள பள்ளியறையில் செப்புத் திருமேனிகள் உள்ளன. இக்கோயிலிலுள்ள செப்புத் திரு மேனிகள் அழகும் கலைத்திறனும் வாய்ந்தவை. இன்பவல்லி அன்னையின் வார்ப்பு வடிவம் மயக்கும் அழகு கொழிப்பது.

பள்ளியறையையடுத்துத் தெற்கு நோக்கிய நிலையில் இறைவியர் திருமுன்கள் உள்ளன. இக்கோயிலில் வழக்கத்துக்கு மாறாக இரண்டு இறைவியர் இருக்கின்றனர். பள்ளி யறையை அடுத்திருப்பது அருள்மிகு பங்கயவல்லி அன்னையின் திருமுன். இதற்கு அடுத்து அருள்மிகு மங்களாம் பிகை அன்னையின் திருமுன். அருள்மிகு மங்களாம்பிகையின் வடிவம் இங்குள்ள திருக் குளத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டுக் கோயிலுள் நிறுவப்பட்டிருப்பதாகச் செவிவழிச் செய்தியொன்று வழங்கிவருகிறது. பங்கயவல்லி அன்னையின் திரு முன்னே பழைமையானதாகக் கருதப் படுகிறது.

இம்மண்டபத்திலிருந்து மகாமண்ட பத்திற்குச் செல்லும் வழியின் வலப்புறம் பிள்ளையாரும், இடப்புறம் முருகனும் அமர்ந்துள்ளனர். மண்டபத்தின் தென் கிழக்கில் கதிரவன், சந்திரன் முதலிய தெய்வத் திருமேனிகளும், தெற்கில் அப்பர், சம்பந்தர் வடிவங்களும் அதையடுத்து எழுவர் அன்னையர் வடிவங்களும் காணப்படுகின்றன. எழுவர் அன்னையர் வடிவங்களில் ஆறு வடிவங்கள் ஒரே அளவாகச் செய்யப் பட்டுள்ளன. ஒரு வடிவம் மட்டும் பெரிதாக உள்ளது. இதையடுத்து அய்யனாரும், காளியும் உள்ளனர். அய்யனார் தம் தேவியருடனும் தனித்தும் இருநிலைகளில் காணப் படுகிறார். இம்மண்டபத்தின் தொடர்ச் சியாக உள்திருச்சுற்று கருவறையைச் சுற்றிலும் செல்கிறது.

இம்மண்டபத்தின் தென்கிழக்குச் சுவரில் சடைமகுடத்துடன் ஒருவர் சிவலிங்கத்தை வழிபாடு செய்து வணங்குவது போன்ற சிற்பம் அமைந் துள்ளது. இவ்வடிவத்தைத் தசரதன் என்றும் தசரதன் இக்கோயில் இறைவனை வழிபட்டதாகச் செவிவழிக் கதை இருப்பதாகவும் கோயில் சிவாச் சாரியார்கள் குறிப்பிடுகிறார்கள். இது தசரதனோ, முனிவரோ தெரியவில்லை. சிற்பம் மிக அழகாகக் கலை நுணுக் கத்துடன் மெய்ப்பாடுகள் விளங்க அமைக்கப்பட்டுள்ளது. இதையடுத்துச் சண்டிகேசுவரி சிற்பமும், முனிவர் ஒருவரின் சிற்பமும் காணப்படுகின்றன.

கருவறைக்குமுன் அமைந்துள்ள உள்மண்டபத்தை வாயிற்காப்போர் காவல் செய்கின்றனர். இங்கும் வலப்புறம் பிள்ளையாரும், இடப்புறம் முருகனும் காணப்படுகின்றனர். கருவறையில் இறைவன் இலிங்கத் திருமேனியராய், பசுபதீசுவரராய் எழுந்தருளியுள்ளார்.

உள்திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் பிள்ளையாருக்கு ஒரு சிறு கோயிலும் வடக்குப் புறத்தில் சண்டேசு வரரின் சிறுகோயிலும் அமைந்துள்ளன.

இறைவன் எழுந்தருளியிருக்கும் விமானத்தின் கட்டட அமைப்பு மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. உபஉபானம், பத்மஉபானம், கம்பு ஆகியவற்றின்மீது பிரதிபந்தத் தாங்குதளம் ஜகதி, உருள்குமுதம், பிரதிவரி எனும் உறுப்பு களுடன் அமைந்துள்ளது. பிரதிமுகத் திருப்பங்களில் வீரர்களைத் திறந்த வாயிற்கொண்ட மகரத்தலைகள் காட்டப்பட்டுள்ளன. வேதிக் கண்டத் துடன் கூடிய வேதிகை உபரிக்கம்புடன் மேலமைய, சுவரை விஷ்ணுகாந்த அரைத்தூண்கள் அலங்கரிக்கின்றன. தளத்தின் பத்திப் பிரிப்புகளில் சாலைப் பத்தி மட்டும் நன்கு முன்தள்ளி அமைந்துள்ளது. விஷ்ணுகாந்த அரைத் தூண்களால் அணைக்கப் பட்டுள்ள இப்பத்திகளில் உருளைத் தூண்களால் அணைக்கப்பட்ட கோட்டங்கள் காட்டப்பட்டுள்ளன. இவற்றுள் தென்புறக்கோட்டம் வெறு மையாக உள்ளது. மேற்கில் லிங்கோத் பவரும், வடக்கில் நான்முகனும் காணப்படுகின்றனர். அனைத்து உறுப்புகளுடனும் அழகுற அமைந் துள்ள விஷ்ணுகாந்த அரைத்தூண் களின் நாகபந்த அமைப்பும் வீர கண்டத்தின்மேல் பிரியும் போதிகை களின் நாணுதல் உறுப்புகளும் இக்கட்டடத்தின் வயதை நிர்ணயிக்க உதவுகின்றன.

போதிகைகள் தாங்கும் உத்திரத் திற்குமேல் வாஜனமும் தாமரையிதழ் களால் அலங்கரிக்கப்பட்ட வலபியும் கூரையும் அமைந்துள்ளன. கூரையின் வெளிநீட்டலாய் விளங்கும் கபோதம் ஒவ்வொரு பத்திக்கும் இரண்டு கூடு வளையங்களைப் பெற்றமைந்துள்ளது. கூரைக்கு மேல் சற்று உள்தள்ளிய நிலையில் பூமிதேசம் யாளி வரிமான மாய் அமைந்துள்ளது. அதற்கும் சற்று உள்ளடங்கி அமைந்திருக்கும் ஆர வரிசையில் ஆறங்கம் கொண்டவை யாய் சாலைகளும், கர்ணகூடங்களும் இருத்தப்பட்டுள்ளன. இவற்றை இணைக்கும் ஆரச்சுவரில் பக்கத்திற்கு இரண்டு சூத்ரநாசிகைகள் ஆறங்க அமைப்புடன் காட்டப்பட்டுள்ளன. இவ் ஆர உறுப்புகளின் பெரும்பாலான வற்றின் சுவர்ப்பகுதிகளில் அனைத்துத் திசைகளிலும் பலவிதமான இறைத் திருமேனிகள் சுதைவடிவங்களாய்க் காட்சியளிக்கின்றன. ஆர உறுப்புகளில் சாலைகள் மட்டும் ஆறங்கம் கொண் டிருந்தும் அளவில் குறுக்கப்பட் டுள்ளன.

ஆர உறுப்புகளின் பின்னால் சாலைகளின் சிகர அளவில் காணப் படும் வேதிகையின்மீது வேசரமாய்க் கிரீவசுவர் எழும்புகிறது. இதன் உத்திரத்தையடுத்து மதலைகளாலான வலபி காட்டப்பட்டுள்ளது. வேசர சிகரத்தின் கீழிறக்கம், கிரீவத்திற்குக் கபோதம்போல் அமைந்துள்ளது.

நான்கு மகா நாசிகைகளும், நான்கு அல்ப நாசிகைகளும் கிரீவ சிகர அலங்கரிப்புகளாய் அமைந்துள்ளன. மகாநாசிகைகளில் கிழக்கில் சிவபெரு மானும், மேற்கில் சுகாசனத்தில் விஷ்ணுவும், வடக்கில் நான்முகனும்,

தெற்கில் ஆலமர் அண்ணலும் காட்டப் பட்டுள்ளனர். அல்ப நாசிகைகளில் விருத்த ஸ்படிதம் என்றழைக்கப்படும் பல்லவர்கால உருளைத் தூண்கள், நான்முகத் தூண்களால் அணைக்கப் பட்ட நிலையில் மிக்க அலங்கரிப்புடன் அழகுறக் காட்டப்பட்டுள்ளன. அனைத்து நாசிகைகளின் தலைப் பிலும் அழகிய கீர்த்தி முகங்கள். சிகரத்தின் உச்சியில் வேசரத் தூபி.

துணைத்தளத்திலிருந்து ஆதிதளக் கபோதம் வரையிலும் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ள இக்கோயிலின் மேற் பகுதி சுதையாலும் செங்கற்களாலும் ஆனது.

இக்கோயிலிலிருந்து திரிபுவன சக்கரவர்த்தி மூன்றாம் இராசராச தேவரின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று மட்டுமே கிடைத் துள்ளது. இதில் இக்கோயில் பசுபதீசுவரமுடையார் கோயிலென்றும், இவ்வூர் நித்த விநோத வளநாட்டின் உட்பிரிவான ஆவூர்க் கூற்றத்து ஆவூர் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இராசராசசோழ தேவரின் மூன்றாம் ஆட்சியாண்டின்போது இக்கோயி லுக்கு உரிமையுடையதாய் விளங்கிய நிலங்களின் பட்டியலை இக்கல்வெட்டு கூறுகிறது.

கோச்செங்கட்சோழரால் கட்டப் பட்ட இக்கோயில் பிற்காலச் சோழ மன்னர்களால் கற்றளியாக்கப்பட்டிருக் கிறது. கோயிலின் அமைப்பு முறை, கட்டட வேலைப்பாடு, கலைத்திறம் ஆகியவற்றைக் கொண்டு இது பன்னிரண்டு அல்லது பதின்மூன்றாம் நூற்றாண்டில் கற்றளியாய் மாற்றப் பட்டிருக்கலாம் என்ற முடிவுக்கு வரநேர்கிறது. பின்னர் நடந்திருக்கும் திருப்பணிகளே இங்கிருந்த கல் வெட்டுகள் மறைந்து போனமைக்குக் காரணம். திருப்பணி செய்யும் அருளாளர்கள் கோயிலிலுள்ள கல்வெட்டுகளைப் பாதுகாத்திடல் வேண்டும். அவை நம் வரலாற்று வடிப்புகள். அவற்றைச் சேதப்படுத்து வதோ, அவற்றின்மீது சுண்ணாம்பு பூசி மறைப்பதோ, அவையுள்ள கற்களைத் துண்டுகளாக்கி வேறு வேலை களுக்குப் பயன்படுத்துவதோ மன்னிக்க முடியாத குற்றங்களே யாகும். இனியாகிலும் இதுபோன்ற கொடுமைகள் நிகழாது, திருப்பணிகள் நடக்குமாறு கண்காணிப்பது அரசினர் கடமையாகும். தமிழனாகப் பிறந்த ஒவ்வொருவரும் இதில் கவனமும் ஈடுபாடும் கொண்டு நம் வரலாற்றைப் பாதுகாத்திடல் வேண்டும். ●

# அடியவர்க்கு மெய்யனின் அற்புதத் திருக்கோயில்



☆ ஔஷதகிரி அயக்கிரீவர் கோமில் – திருவமிந்திரபுரம்

ஆர்க்காட்டு நவாபு சீரழிக்க முயன்று பார்த்த நகரம்! இருபத்தெட்டாயிரம் ரூபாய் விலை கொடுத்து நவாப்பிடமிருந்து ஆங்கிலேயர்கள் பெற்றுக் கொண்ட அருமையான நகரம்! இறையாண்மைக்கு என்றுமே அழிவில்லை என்று, இன்றும் பறைசாற்றிக் கொண்டிருக்கும் அற்புதத் திருநகரம்!

ஆம்...

பெருமை வாய்ந்த தமிழ் மன்னர்களின் ஆட்சிக் காலங்களில் மாபெரும் நகரமாக இருந்து இன்று புரமாக மாறியிருந்தாலும், 108 வைணவத் திருப்பதிகளுள் ஒரு பதியாகவும், தென் திருப்பதி-நடுநாட்டுத் திருப்பதி என்று வைணவர்களால் போற்றப்படும் பதியாகவும் விளங்குகின்ற புரம்.. திருவயிந்திரபுரம்!

திருமங்கை ஆழ்வாராலும், தூப்புல் நிகமாந்த மகாதேசிகராலும் பாடப்பெற்ற திருத்தலம் இது.

கடலூருக்கு மேற்கே 7 கி.மீ.தொலைவிலுள்ள திருவயிந்திரபுரத் திருத்தலத்தின் புராணப் புகழைக் கூறுவதோடு மட்டுமின்றி, கல்வெட்டுச் சான்றுகள் மூலம் பெற்றுள்ள வரலாற்றுச் சிறப்பையும் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

உத்தரவாகினி, கருடநதி, வாரணவாசி, செழுநதி, தென்திசைக்கங்கை என்றெல்லாம் ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் புகழப்படும் கெடிலநதியின் கிழக்குக் கரையில் அமைந்துள்ளது, அருள்மிகு தேவநாதப் பெருமானின் திருவயிந்திரபுரத் திருத்தலம்.

இவ்வூர் இருஅயிந்தை, திருவகிந்திரபுரம், திருவந்திபுரம் என, புராணங்கள் வாயிலாகவும், இலக்கியங்களின் வாயிலாகவும் கூறப்பெற்றுள்ளது. கல்வெட்டுகளில் திருவயிந்திரபுரம், திருவஹீந்திரபுரம் எனக் காணக்கிடக்கிறது.

திருமாலின் நீர்வேட்கையைத் தணிப்பதற்காக நீர் கொண்டு வர கருடன் வானில் பறந்து சென்றார். ஆனால் ஆதிசேஷனோ தன் வாலால் நிலத்தில் ஓங்கி அடிக்க, நிலம் பிளந்து (வகிந்து) நீர் வந்தது என்கிற பொருளில் இத்தலம் 'வகிந்திரபுரம்' எனப்பெற்றது என்பர். 'அகி' என்ற சொல்லுக்குப் பாம்பு என்கிற பொருளும் உண்டு.

நீர் கொண்டு வரச்சென்ற கருடன் ஒரு முனிவரின் கமண்டலத்தை உருட்ட, அதிலிருந்து பெருகி வந்த நீர் நதியாக உருவாகிவர... இந்நதி கருடநதி என்று பெயர் பெற்றதாக வைணவப் புராணங்கள் கூறுகின்றன. திருவயிந்திரபுரக் கோயிலுக்குள் ஆதிசேஷ தீர்த்தம் கிணறாக இன்றளவும் உள்ளது.

வைணவ பிரம்மாண்ட புராணமும், வைணவக் கந்தபுராணமும் இத்தலத்தைப் பற்றிப் பல்வேறு வகைகளில் புகழ்ந்துரைக்கின்றன. மார்க்கண்டேய மகரிஷியின் மகளாக அவதரித்த திருமகளை, தேவநாதன் இங்கு திருமணம் புரிந்து கொண்டார் என்கிற புராணம் இங்கு சிறப்புடையதாகப் போற்றப்படுகிறது. சிவபக்தியிற் சிறந்த சோழமன்னன் ஒருவன் திருமால் கோயில்களை இடித்து வரும் வேளையில் இங்கு வந்தபோது திருமால் சிவலிங்க உருவில் காட்சியளித்தார் என பண்டைக்காலச் செவிவழிச்

பண்ணுருட்டி தமிழரசன்





☆ ஏழிசைநாதப் பெருமாள்

☆ செங்கமலத் தாயார்





செய்தியும் இத்தலத்திற்குண்டு. அதனாலேயே 'மூவராகிய ஒருவன்' என்ற திருப்பெயரை, திருமால் இங்கு பெற்றுள்ளார் போலும்!

கோயிலின் எதிரே உள்ள மலை ஔஷதகிரி (மருந்துமலை) எனப்பெயர் பெற்றுள்ளது. மலைக் கோயிலில் அயக்கிரீவர் எழுந்தருளியுள்ளார். தேவர்கள் இம்மலையில் மூலிகைகளாகவும், மரங்களாகவும் இருந்து திருமாலை நோக்கித் தவமியற்றுகின்றனர் என்கிறது புராணம். நிகமாந்த மகாதேசிகர் இயற்றிய நவரத்ன மாலையும், மும்மணிக் கோவையும் இம்மலை பற்றிய சிறப்பினைக் கூறுகின்றன. இன்றும் இம்மலையில் மூலிகைகள் நிறைந்திருக்கக் காணலாம்.

வியாசரால் இயற்றப் பெற்றதாகக் கூறப்படும் 18 புராணங்களில் 3 புராணங்கள் திருவயிந்திரபுரத்தைப் பற்றியனவாகும். அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை மேற் கொள்ளப் புறப்பட்டுத் தென்னாட்டை அடைந்தபோது 'நேமிக்கையான் கீந்திரபுரமுங்கண்டு கைதொழுதான்' என வில்லிபாரதம் ஆதிபருவம் 17ஆவது பாடல் எடுத்தியம்புகிறது.

கோயில் கருவறையில் மூலவரான தேவநாதப் பெருமான் கிழக்கு நோக்கி திருவேங்கடமுடையான் திருக்கோலத்தில் நின்றருளுகின்றார். வலப்புறம் மார்க்கண்டேயர், இடப்புறம் பூமிப்பிராட்டி!

ஹேமாம்புஜவல்லி என்றும் பார்க்கவி என்றும் வணங்கப்படும் செங்கமலத்தாயார் அமர்ந்த திருக் கோலத்தில் அருள் பாலிக்கிறார். அடியவர்க்கு மெய்யன், மூவராகிய ஒருவன், வெவ்வினை தீர்க்கும் அருமருந்து, வினை தீர்த்த மன்னவன், மேவு சோதி, நந்துதலில்லா நல்விளக்கு, அச்சுதன், பௌஷதன், ஸ்திரஜ்யோதி, அனகஜ்யோதிஸ், ஏழிசை நாதன், நின்றருளிய பெருமான் என்றெல்லாம் வைணவ இலக்கியங்களிலும், கல்வெட்டு களாலும் புகழப்பெறும் இப்பெருமானின் சிலையமைப்பு பிற்காலப் பல்லவர் காலத்திற்கும், சோழராட்சியின் தொடக்கக் காலத்திற்கும் இடைப்பட்ட கலைப்படைப் பாகத் திகழ்கிறது.

இராமானுஜர் வழிபட்டு வந்த அயக்கிரீவர் திருவுருவச் சிலையை அவருக்குப் பிறகு மூன்று தலைமுறையினர் வழிபட்டு வந்தனர். நான்காவது தலைமுறையாக நிகமாந்த மகாதேசிகர் பெற்று அயக்கிரீவருக்குத் தம் வழிபாட் டினைத் தொடர்ந்து செய்தார். கருட மந்திரத்தைச் செபித்து வந்ததால் கருடாழ்வார் தேசிகரின் முன்தோன்றி அயக்கிரீவர் மந்திரத்தை உபதேசித்தது மட்டுமின்றி அயக்கிரீவரின் விக்ரகத்தையும் கொடுத்தருளினார் என்றும் கூறுவர். தேசிகர் நிறுவிய அயக்கிரீவரின் திருமேனி மலைக்கோயிலில் உள்ளது. மேலும் தேசிகர் எழுப்பிய மாளிகை ஒன்றும் தேசிகர் திருமாளிகை என்ற பெயரில் உள்ளது. இவர் கி.பி.13ஆம் நூற்றாண்டில் பிறந்து 101 ஆண்டுகள் வாழ்ந்தவர் என்பது சிறப்பிற்குரியதாகும். கோயிலுக்குள் மகாதேசிகருக்கு சந்நிதி உள்ளது.

தேவநாதப் பெருமானை அடியவர்க்கு அருமருந்து, வெவ்வினை தீர்க்கும் மாமருந்து எனப்புராண இலக்கியங்கள் போற்றுவதற்கேற்ப தமிழ்மன்னர்கள் பலர், இக்கோயிலிலுள்ள கல்வெட்டுகளில் 'திருமேனிக்கு நன்றாக' என்று, வேண்டுதலுக்கான வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஔஷதகிரி எனப்படும் மருந்து மலையைத் தம் இருப்பிடமாகக் கொண்டதாலும், சேஷ தீர்த்தத்தின் தனிச் சிறப்பாலும் திருமால் இங்கு அனைவருக்கும் வினைதீர்த்த மன்னவராக விளங்குகின்றார் எனலாம்.

தமிழக மன்னர்களின் தனிக் கவனத்தை இந்திருத்தலம் பெற்றிருந்ததால் பல்வேறு திருப்பணிகளை இங்கு செய்துள்ளனர். பல்லவர்கள் காலத்தில் கட்டப்பெற்றுள்ள இக்கோயில், பல்வேறு மாற்றங்களைக் கொண்டு விட்டபடியால் பல்லவர்களின் கலை-கல்வெட்டுச் சான்றுகளை முழுமையாகக் காணமுடியவில்லை. இங்குள்ள கல்வெட்டுகளில் மிகப் பழைமையானதாகக் கருதப்படுவது விஜயாலயச் சோழரின் மகனான முதலாம் ஆதித்த சோழரின் கல்வெட்டேயாகும். கி.பி.871-907 வரை ஆட்சிபுரிந்த இம்மன்னனின் காலத்தில் இக்கோயிலுக்குப் பல நிவந்தங்கள் செய்யப்பட்டன.

11ஆம் ஆட்சியாண்டில் இவனுடைய பட்டத்தரசி திரைலோக்கிய மாதேவி, இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் முதலிய பகுதிகளைப் புதுப்பித்துக் கட்டிய செய்திகளைத் தெரிவிக்கிறது.

ஆதித்தனின் மகனான பராந்தகச் சோழரின் 31ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இராசசிம்மபாண்டியரின் மகள் வானவன் மாதேவி கோயிலுக்குள் ஒரு நொந்தா விளக்கு எரிக்க 95 ஆடுகள் கொடையாக அளித்ததைத் தெரிவிக்கிறது.

பரகேசரி முதலாம் இராசேந்திரச் சோழரின் முதல் மகனான முதலாம் இராசாதி ராசனின் (கி.பி.1018-1054) 12ஆம் ஆட்சியாண்டில் ஒரு கிராமத்தையும், விளை நிலங்கள் சிலவற்றையும் வரியில்லாத் தானமாகக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

முதலாம் குலோத்துங்கச் சோழரின் (கி.பி.1070-1122) 23ஆம் ஆட்சியாண்டில் குலோத்துங்கனின் மகன் விஷ்ணு வர்த்தனன் என்பவன், தந்தை உடல்நலம் பெற வேண்டியோ அல்லது அவ்வாண்டுக் காலத்தில் நடைபெற்ற போரில் வெற்றியுடன் தந்தை மீள வேண்டியோ, நேரில் வருகை தந்து காவானூர் மடத்தில் தங்கியிருந்து நிலக்கொடை அளித்தான். இக்கல்வெட்டில் 'திருமேனிக்கு நன்றாக' என்று கோரப்பட்டுள்ளது.

குலோத்துங்கரின் 49ஆம் ஆட்சியாண்டில் அழகிய மணவாளக்கிரமவித்தன் என்கிற பிராமணருடைய துணைவி திருவாண்டாள் சந்தி விளக்கு ஒன்று வழங்கி 12 ஆடுகளைக் கொடையாக அளித்துள்ளார்.

41ஆம் ஆட்சியாண்டில் உம்பர்பாடியைச் சேர்ந்த பட்டினவ நம்பி ஏறன் என்பவனின் மகள் செரிநங்கை சந்தி விளக்கு ஒன்று வைத்து, விளக்கேற்ற வேண்டிய நெய்க்காக 12 ஆடுகளைக் கொடுத்துள்ளார்.

குலோத்துங்கரின் மகன் விக்கிரமச்சோழரின் (கி.பி.1118-1135) 3ஆம் ஆட்சியாண்டில் ஒகூர் நாட்டரையன் ஆடவலான் சொங்கன் என்ற அதிகாரி நந்தா



☆ ஔஷதகிரி மலையின் படிக்கட்டுகள்



☆ திருவயிந்திரபுரம் நூற்றுக்கால் மண்டபம்

விளக்கொன்றை எரிக்க வேண்டி 32 பசுக்களைக் கொடையாக அளித்துள்ளான். வாகூரான அழகிய சோழச் சதுர்வேதி மங்கலம் என்னும் ஊரைச் சேர்ந்த பிரயாகை நம்பி சோமாசி என்பவன் ஒரு சந்தி விளக்கும் நான்கு பசுக்களையும் வழங்கியுள்ளான்.

4ஆம் ஆட்சியாண்டில் திருமுனைப்பாடி நாட்டு ராயூர் என்ற ஊரைச் சேர்ந்த அருளாளப்பட்டர் வைத்த ஒரு விளக்கை எரிக்கவேண்டிய நெய்க்காக 25 பொற்காசுகளை வழங்கியுள்ளார்.

விக்கிரமச்சோழரின் அமைச்சர்களுள் ஒருவரான மாதன் இரண்டாயிரவன் நந்தா விளக்கொன்றும் 32 பசுக்களையும் வழங்கினார்.

5ஆம் ஆட்சியாண்டில் அமாவாசை நாளில் பெருமாளைச் சேவிக்கவரும் வைணவர்களுக்கு அமுது படைக்கக் கொடையளிக்கப்பட்டது.

6ஆம் ஆட்சியாண்டில் திருவாய்க்குலத்தாழ்வார் திருவோலக்க விழா நாளில் பொங்கல்-அப்பம் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது.

விக்கிரமனின் மதன் மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி.1178-1217) 15ஆம் ஆட்சியாண்டில் சோழ குலவல்லியில் வாழ்ந்த செம்பிய தாயகேன் என்கிற எண்ணெய் வணிகர் இராமானுசர் திருமேனிக்குச் சாத்துவதற்காக திருவூரம் (கழுத்தணி) ஒன்றையும் சந்நிதியில் பாலமுது படைக்கப் பசு இரண்டும் கன்று இரண்டும், பால் கறக்கப் பித்தளைப் பாத்திரங்களையும் வழங்கினார்.

19ஆம் ஆட்சியாண்டில் தன ஆத்தியமான் நந்தா விளக்கும் 1500 காசுகளையும் வழங்கினான்.

மூன்றாம் இராசராசன் (கி.பி.1216-1256) கோப்பெருஞ் சிங்கக் காடவராயன் என்கிற சேந்தமங்கலச் சிற்றரசனால் கைது செய்து சிறைவைக்கப்பட்ட இராசராசன், திருவயிந்திரபுரத்தில் போசளர்களால் சிறை மீட்கப் பட்டான்..

**கோப்பெருஞ்சிங்கன் (கி.பி.1243-1279):** உடல்நலம் குன்றியிருந்த கோப்பெருஞ்சிங்கனின் 'திருமேனிக்கு நன்றாக' அமைச்சர் செங்கனிவாயரின் தம்பியான பெருமாள் வேணாடுடையான் கோயிலில் மேற்குக் கோபுரத்தைக் கட்டியுள்ளான். இதே காலத்தில் உமையன் வாணவதரையன் என்கிற குறுநில மன்னன் கோயிலைச் சுற்றி திருமதிற்சுவர்களை அமைத்தான்.

**இரண்டாம் மாறவர்ம விக்கிரம பாண்டியன் (கி.பி.1250-1276)**

6ஆம் ஆட்சியாண்டில் 'விக்கிரபாண்டியசந்தி' என்று தன் பெயரால் விழா ஏற்படுத்தி நிலக்கொடை அளித்தான்.

**மூன்றாம் மாறவர்ம சுந்தரபாண்டியன் (கி.பி.1303-1322)**

6ஆம் ஆட்சியாண்டில் கொடைகள் மூலம் கோயிலுக்குச் சேர்ந்த நிலங்களைப் பலரிடமிருந்து மீட்க அதிகாரிகளுக்கு உத்தரவிடப்பட்டது மட்டுமின்றி, நிலங்கள் மூலம் கோயிலுக்குச் சேர வேண்டிய வருவாய்களை ஒழுங்குபடுத்த, கோயில் நிர்வாகத்தையும் விழாக்களையும் முறைப்படுத்தப்பட்டது. 58 காணி நிலம் கொடையாகவும் வழங்கப்பட்டது. இங்கிருந்த அனுபவ சந்நியாசி மடத்தில் துறவிகளுக்குத் தினந்தோறும் அமுது படைக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

**ஐந்தாம் சடையவர்ம சுந்தரபாண்டியன் (கி.பி.1304-1319)**

9ஆம் ஆட்சியாண்டில் இம்மன்னனின் இயற்பெயரால் ஏற்படுத்தப்பட்ட 'கோதண்டராம'சந்தி விழாவிற்கு நிலக்கொடை அளிக்கப்பட்டது. இவ்வூரின் அனைத்து வரிகளையும் கோயிலுக்கே வழங்க உத்தரவிடப்பட்டது.

16ஆம் ஆட்சியாண்டில் நாச்சியார் அலைவாய் உகந்த பெருமகள் பெயரால் விழாவொன்றை ஏற்படுத்தி அவ்விழாவிற்கு 66 வேலி நிலம் கொடையளிக்கப்பட்டது. கோயிலுக்குத் திருப்பணிகள் நடைபெற்றன. நந்தவனங்கள் விரிவாக்கம் செய்யப்பட்டன.

10ஆம் ஆட்சியாண்டில் மாசிமகம் திருநாளில் தெய்வ நாயகப் பெருமான் அலைவாய் உகந்த நாச்சியாரோடு கடற்கரைப் பட்டினத்திற்குச் சென்று, கடலில் தீர்த்தமாடுவதற்கு இருபது மா நிலம் கொடையளிக்கப் பட்டது.

15ஆம் ஆட்சியாண்டில் ஆடூர் என்ற ஊரையே திருவிடையாட்ட இறையிலியாக வழங்கப்பட்டது. நிலங்களுக்குப் பாசன வசதி விரிவாக்கம் செய்யப்பட்டது.

**ஐந்தாம் மாறவர்ம விக்கிரம பாண்டியன் (1323-1330)**

3ஆம் ஆட்சியாண்டில், இப்பாண்டியனுடைய அண்ணன் வீரபாண்டியன் பெயரால் (எல்லாம் தலையான பெருமாள்) திருமாலை எழுந்தருளப் பண்ணி, அமுதுபடி சாத்துபடிக்காக நிலங்களையும், இவ்வூரின் வரியனைத்தும் கொடையாக வழங்கப்பட்டன.

5ஆம் ஆட்சியாண்டில் 'கோனேரின்மை கொண்டான்' என்னும் விருதுப் பெயரைப் பூண்ட இம்மன்னன் பிறந்தநாளில் தன் இன்னொரு சிறப்புப் பெயரான 'இராசாக்கள் நாயகன்' பெயரில் சந்திவிழாவை ஏற்படுத்தி. தெய்வ நாயகனின் அமுதுபடி சாத்துபடிக்காக நிலக்கொடையளித்தான்.

**எட்டாம் சடையவர்ம சுந்தரபாண்டியன் (1330-1347)**

10ஆம் ஆட்சியாண்டில் தெய்வநாயக சுவாமிக்கும், ஏழிசை நாதப் பெருமாளுக்கும், பூமாலைகள் சாத்துவதற்காகவும் திருவிளக்கேற்றவும், இங்கிருந்த இரண்டாயிரவன் மடைப்பள்ளியில் அமுது செய்யும் செலவினங்களுக்கும் கொடையளிக்கப்பட்டது.

13ஆம் ஆட்சியாண்டில் புதிய நந்தவனங்கள் அமைக்க நிலக்கொடை அளிக்கப்பட்டது.

வாழ்வு என்னும் நெடும்பாதை
வளைந்து நெளிந்தே செல்கிறது
தாழ்வு (உ)யர்வு சமதரைகள்
சரி(வு) என்றே பல நிலைகள்

புளியமரத்தின் அடியினிலே
புதிராய்ச் சிலிர்க்கும் சில நிழல்கள்
எளிய இன்பம் தருவதுவும்
எழுந்து நடக்கச் செய்துவிடும்

பள்ளம் மேடு கல்குத்தும்
பாதம் பொளிப்பில் நோவுதரும்




மஹி

தெள்ளித் தெளித்த மணல் தாரை
தீயாய்க் காலைச் சுட்டுவிடும்

வண்டி வாகனப் புரள்வுகளில்
வருத்தும் விபத்தும் நிகழ்ந்துவிடும்
கண்டிப்பாகவே இலக்கடையும்
காரிய சித்தியும் நிகழ்ந்துவிடும்

வாழ்வு என்னும் நெடும் பாதை
வருத்தம் இன்பம் கலந்தது தான்
தாழ்வில் விழுந்தே துவளாதீர்
தலைநிமிர்வெண்ணியே மயங்காதீர்!

15ஆம் ஆட்சியாண்டில் இம்மன்னரின் அமைச்சரான புத்துழார் திருவரங்கச் செல்வரான வில்லவராயர், தன் பெயரால் உருவாக்கிய பிரம்மதேயத்தில் வாழ்ந்த பட்டர்களுக்கு பில்லாலி, சூரியன்மேடு ஆகிய பகுதிகளில் நிலக்கொடைகளை அளித்தார்.

**முதலாம் மாறவர்ம வீரபாண்டியன் (கி.பி.1334-1367)**

10ஆம் ஆட்சியாண்டில் கோயிலில் ஊழியம் புரிந்த பறவைக்கரசு என்கிற பட்டரிடம் அமுதுபடி, சாத்துபடி, பரிவட்டம் போன்ற பணிகளைச் செய்வதற்காக நான்கு மா நிலம் கொடையளிக்கப்பட்டது. 'இரண்டாயிரவன்' என்கிற சிறப்புப் பெயரைப் பெற்ற அமைச்சர் திருவரங்கச் செல்வரான வில்லவராயர் தெய்வநாயகன் சந்நிதிக்காக 40 விளக்குகள் கொண்ட சரவிளக்கு மாலையொன்றை அளித்து விளக்கேற்றும் செலவுக்காக நிலக்கொடையும் அளித்தார்.

15ஆம் ஆட்சியாண்டில் 'உலகமுண்டான்' என்கிற பெயரில் திருத்தோப்பு அமைக்கப்பட்டு, தோப்பிலுள்ள பலவகை மரங்களால் வரும் வருவாயைக் கொண்டு கோயிலுக்கு நன்மைகள் செய்வதாக (பட்டர்கள், ஊர்ச்சபையார், மெய்க்காப்பாளர்கள்) மூவகைக் குழுவினர் இத்தோப்பின் பொறுப்பைப் பெற்றுக் கொண்டனர்.

**ஆறாம் மாறவர்ம விக்கிரமபாண்டியன் (கி.பி.1337-1343)**

3ஆம் ஆட்சியாண்டில் இம்மன்னனின் அமைச்சர்களுள் ஒருவரான அபிமான துங்கப்பல்லவரையர், திருவயிந்திர புரத்துக் கோயில் திருவாசலில் ஸ்ரீ வராகநாயனார் சிலையைப் பிரதிஷ்டை செய்தார். வராக நாயனார் சந்நிதியின் செலவினங்களுக்காக நான்கு மா முந்திரிகை புன்செய் நிலத்தைக் கொடையாக அளித்தார்.

4ஆம் ஆட்சியாண்டில் குறிஞ்சி வளநாட்டு மாறன் என்பவன் கோயிலுக்கு உப்பு வழங்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டான்.

7ஆம் ஆட்சியாண்டில் கோயில் நிலங்களுக்குரிய வரிபாக்கி வசூலிக்க உத்தரவிடப்பட்டது. வசூலித்த பணத்தை ஸ்ரீசேநாபதி ஆழ்வார் (விஷ்வக்சேனர்) பெயரில் வரவு வைக்கப்பட்டது.

**இரண்டாம் மாறவர்ம வீரபாண்டியன் (கி.பி.1341-1388)**

1ஆம் ஆட்சியாண்டில் புதியதாக அமைக்கப்பட்ட ஸ்ரீவராகநாயனார் சந்நிதிக்கு 8 மாநிலம் கொடையளிக்கப் பட்டது. 7ஆம் ஆட்சியாண்டில் மறுபடியும் கோயில் நிலங்களின் வரி வசூல் செய்யப்பட்டு விஷ்வக்சேனர் பெயரில் வரவு வைக்கப்பட்டது.

காலப்போக்கில் மறைந்த கல்வெட்டுகள் போக எஞ்சியுள்ள சில கல்வெட்டுகளின் செய்திகளே இவை. இது போன்று 19ஆம் நூற்றாண்டு வரை பல கல்வெட்டுகள் உள்ளன.

தமிழகத்தில் கால மாற்றங்களாலும் போர்க்காரணங்களாலும் மறைந்து போய்விட்ட கோயில்களுக்கிடையே இக்கோயில் இன்றளவும் மாறாமல் மறையாமல் தன் வரலாற்றுப் புகழை இன்றுவரை பறை சாற்றிக் கொண்டிருக்கிறது. இன்னும் பல கல்வெட்டுகளில், திருமலைக்கு ஏறும் படிகள் அமைத்தது, கெடில ஆற்றில் இறங்குவதற்காக படித்துறை அமைத்தது, கோபுரங்களையும் மண்டபங்களையும் பழுதுபார்த்தது, சுவாமிக்குப் பள்ளியறை அமைத்தது, நவரத்தினங்கள் அடங்கிய அணிகலன்கள் வழங்கியது உள்ளிட்ட பல்வேறு செய்திகளையும் இக்கோயில் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

நடுவில் நாடான தொண்டைமண்டலத்து மேற்கா நாட்டு திருவயிந்திரபுரமும், தெய்வநாயகப் பெருமான் திருக்கோயிலும், தோன்றிய நாள்முதல் இன்றுவரை வரலாற்றில் அருள்பொழியத் திருவளரும் அற்புதத் தலமாகத் திகழ்கிறது.

நாமும் 'திருமேனிக்கு நன்றாக' தெய்வநாயகனையும் அலைவாய் உகந்த நாச்சியாரான திருமகளையும் ஒருமுறை தரிசித்து வரலாமே! •

# மிருகாபிமானம்

## ராஜ்



**வே**லைக்காரன் கைத்தாங்கலாகப் பிடித்து வந்து உட்காரவைக்க நான் பால்கனியில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன்.

எண்பது வயதை எட்டிவிட்ட எனக்கு காலை ஏழு மணி முதல் பத்துமணி வரை இந்த நாற்காலிதான் வாசம்.

வேலைக்காரன் மூக்குக் கண்ணாடியையும் தினசரி செய்தித்தாளின் இணைப்பு மலரையும் கொண்டு வந்து கொடுத்தான். செய்தித்தாளை என் மகன் படிக்க வைத்துக் கொள்வான். அவனுக்கு, காலை எட்டுமணிக்கெல்லாம் ஆபீஸிற்குப் போக வேண்டும். அதுவும் தவிர எனக்கு இக்காலச் செய்தித்தாளில் அக்கறை இல்லை. எண்பது வயதில் இன்றைய செய்தித்தாள்களைப் படித்து எனக்கு என்ன ஆக வேண்டும்? அதுவும்தவிர இக்காலச் செய்தித்தாள் களைப் படித்து ஞானம் பெறவோ, மன நிறைவடையவோ என்ன இருக்கிறது?

மூக்குக் கண்ணாடியை எடுத்து மிகவும் சிரமத்துடன் பொருத்திக் கொண்டேன். இந்தக் கை நடுக்கம் என்னை மிகவும் சிரமப்படுத்துகிறது.

வீட்டிற்கு எதிரே ஒரு திறந்த வெளி. ஆனால் சுற்றிலும் காம்பவுண்டு சுவர் எழுப்பப்பட்டது. இப்படியே பல வருடங்களாக அது இருந்து வருகிறது. ஒருவர் இன்னொருவருக்கு விற்க என இதுவரை ஆறு, ஏழு பேர் கை மாறிவிட்டது. அதில் யாருமே கட்டடம் எழுப்ப முடியவில்லை. ஒருமுறை என் மகனே எதிரே இருக்கும் காலிமனையை "நான் வாங்கட்டுமா அப்பா" என்று கேட்டிருக்கிறான். "வேண்டாமடா. அது நல்ல இடமில்லை" என்று தடுத்துவிட்டேன். அது நல்லதாகப் போய் விட்டது. ஏனென்றால் அதை வாங்கிய ஒரு குடும்பத்தில் அடுத்தடுத்து இரண்டு அகால மரணங்கள். அண்ணன் தம்பிகளுக்குள் அடிதடி, குத்து வெட்டு.

சிந்தித்த வண்ணம் கையிலிருந்த பத்திரிகையைப் பிரிக்கப் போனவன், ஏதோ ஒரு விதமான சத்தம் கேட்டுத் திடுக்கிட்டேன்.

எதிரே இருந்த திறந்த வெளியில் ஒரு பெண் நாயும். அதன் மூன்று குட்டிகளும் இருந்தன. தாய் நாய் சாம்பல் நிறம். அதன் குட்டிகளும் அப்படியே தாயின் நிறம். ஒவ்வொன்றும் பீங்கான் பொம்மை போல் மிக அழகாக இருந்தன. ஒரே நிறத்துடன் ஒரே அளவில் இருந்த அவற்றை ஒன்றிலிருந்து ஒன்று பிரித்துச் சொல்ல முடியாது. அவை தம் தாயிடம் பால் குடிக்கும் அழகும் ஒன்றின் மீது ஒன்று குதித்து விளையாடும் அழகும், ஒன்றை ஒன்று விளையாட்டாகக் கடித்து, சண்டை போட்டுக் கொள்ளும் அழகும் காணக்கிடைக்காத காட்சி. அந்த இனிய அனுபவம் எல்லாருக்கும் கிடைக்காத ஒன்று.

இன்று அந்த மூன்று குட்டிகளில் ஒன்று அந்த எதிர்மனை மண்ணில் சாய்ந்து கிடக்க மற்ற இருகுட்டிகளும், தாயும் அதன் பக்கத்தில் உட்கார்ந்து ஏதோ சப்தம் எழுப்பிக் கொண்டிருந்தன. தரையில் விழுந்து கிடந்த குட்டி செத்துப் போய் விட்டிருக்கிறது. அடக்கடவுளே! அந்தக் காட்சியைப் பார்க்கவே என் நெஞ்சு வலித்தது. இது என்ன கொடுமை? நேற்று வரை

மூன்றும் துள்ளிக் குதித்து விளையாடி மகிழ்ந்தனவே! இன்று மட்டும் என்ன ஆகியிருக்கும்? அந்த இறந்த குட்டியின் உடலை நக்கிக் கொடுத்து அதை எப்படியாவது எழுந்து நிற்கச் செய்ய முயன்று தோல்வியடைந்து பரிதவிக்கும் அந்தத் தாய் நாயைப் பார்த்து என் மனம் பெரிதும் வேதனைப்பட்டது. அந்தத் துயரத்தைச் சகித்துக் கொள்ளமுடியாமல் நான் என் பார்வையைத் திருப்பி கையிலிருந்த பேப்பரில் என் கவனத்தைப் புதைக்க முயன்றேன்.

சில நிமிடங்கள்தான். அதற்குள் மறுபடியும் ஏதோ சப்தம் கேட்கவே நான் மீண்டும் எதிர் காலிமனையைப் பார்த்தேன். இப்போது இறந்து கிடந்த அந்த நாய்க்குட்டியின் பக்கத்தில் மற்ற இரு குட்டிகள் இல்லை. இந்த நாய்க் குட்டியின் உடலைக் காகம் ஒன்று குத்தித் தின்ன வந்து உட்காரத் தாய் நாய் அந்தக் காகத்தைப் பாய்ந்து பாய்ந்து விரட்டியது. பறந்து செல்வதுபோல் பாவனை செய்துவிட்டு அந்தக் காகம் மீண்டும் மீண்டும் அந்த செத்த நாய்க்குட்டியின் உடலைத் தாக்கவர; அந்தத் தாய் நாய் விடாமல் ஆக்ரோஷமாகப் பாய்ந்து அதை விரட்டியது. அக்காட்சியைக் கண்டு என் மனம் நெகிழ்ந்தது. ஐந்து அறிவே உள்ள மிருகங்களில் கூட என்ன தாய்ப்பாசம் போன்ற உயரிய உணர்வுகள்!

இனிமேல் என்னால் செய்தித்தாளைப் படித்துக் கொண்டிருக்கமுடியும் என்று தோன்றவில்லை. அதை மூடி வைத்தேன். அந்தத் தாய் நாய்க்கு எப்படியாவது உதவ வேண்டுமென்று தோன்றவே, வேலைக்காரனைக் கூப்பிட்டேன்.

அவன் வந்தான். அவனிடம் விஷயத்தைச் சொன்னேன். அதைக் கேட்டு அவன் "ஐயோ, நாம்ப அந்த நாய்க்குட்டிகிட்டே இப்போ போனா, அந்தத் தாய் நாய் நம்மைப் பிடுங்கிடும் ஐயா! கொஞ்சம் போவட்டும். அந்த நாய் அப்பாலெ எங்கேயாச்சும் போச்சுன்னா, குட்டியெ எடுத்துப் புதைச்சிடுவோம்" என்றான்.

அவன் சொல்வதும் சரிதான். ஆனால், என்ன செய்வது? இந்தத் தாய் நாய், காக்கையிடமிருந்து தன் செத்துப்போன குட்டியின் உடலைக் காப்பாற்றப் படும் கஷ்டம் பார்க்கச் சகிக்கவில்லையே?

அந்நேரம் என் சிந்தனையை, கீழ்வீட்டிலிருந்து கிளம்பிய அழுகைக்குரல் கலைத்தது. யாரோ பெரியவர்கள் அழும் குரல். அதன் வேதனை என்னைப் பெரிதும் தாக்கியது.

வேலைக்காரனை மறுபடியும் கூப்பிட்டேன். கீழ் வீட்டில் என்ன நடக்கிறது என்று பார்த்து வரச்சொன்னேன்.

அவன் கேட்டு வந்து சொன்ன சேதி என்னை அப்படியே உலுக்கியது. கீழ்வீட்டில் இருப்பவர் ஒரு கம்பெனியில் மார்க்கட்டிங் ஆபீசர், கார், வேலையாள் எனப் பல வசதிகளுடன் வாழ்பவர். சமீபத்தில் அவருடைய வயதான தாயும் தந்தையும் கிராமத்தி லிருந்து வந்திருக்கின்றனர். இன்று காலை வெளியே வாக்கிங் போய்விட்டு வருகிறேன் என்று சொல்லிச் சென்ற கீழ்விட்டு மனிதரின் தந்தை ஒரு லாரியில் அடிபட்டு இறந்து போய்விட்டிருக்கிறார்.

அந்தச் செய்தியைக் கேட்டு என்னால் பேசாமல் உட்கார்ந்திருக்க முடியவில்லை. வயதான காலத்தில் கணவன் மனைவி இருவரில் ஒருவர் மறைவது மற்றவருக்கு வாழ்க்கையில் எவ்வளவு சோகத்தையும், சூன்யத்தையும் ஏற்படுத்தும் என்பது அதை அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும். வேலைக்காரன் உதவியுடன் கீழ் வீட்டிற்குச் சென்றேன்.

கீழ் வீட்டுக்காரர் போன் பேசிக்கொண்டிருந்தார். வேறு சிலரும் இருந்தார்கள். கணவனைப் பறிகொடுத்த அந்த அம்மாளுக்கு அறுபத்தி ஐந்து வயதுக்குமேல் இருக்கும். அவர் அழுவதைப் பார்க்கப் பாவமாக இருந்தது. குரலே வெளிவரவில்லை.

"காலையிலே 'வாக்' போயிட்டு வரேன்னு சொன்னார். இவ்வளவு நேரமாச்சே வரல்லையேன்னு பாத்துட்டிருந்தேன். இந்த வீட்டுக்குப் பால் போடற ஆள்தான் வந்து சொன்னான்.'உங்க வீட்டுப் பெரியவரு மேல லாரி ஏதோ மோதி வாரிட்டுப் போயிடிச்சு. அப்படியே விழுந்து கிடக்காரு. மேலே ஒரு காயம் இல்லை. ஆனா உயிரில்லை. அவரை இடிச்சிட்டுப் போன லாரி நம்பரை அங்கிருந்தவங்க குறிச்சு வெச்சிருக்காங்க. நீங்க உடனே வாங்க"ன்னு சொல்லிட்டுப் போனான். இவனும் இப்போதான் போயிட்டு வந்தான். "அம்மா அப்படியே அப்பா படுத்துத் தூங்கற மாதிரி இருக்கும்மா" அப்படின்னு சொன்னான். போன் பண்ணி அவரை எடுத்துட்டு வர வேன் ஏற்பாடு பண்றேன்னு சொன்னான். அதுக்குள்ளே ஏதோ போன் வந்திருச்சு.. ஐயோ, காலிலே ஒரு முள்ளு குத்திட்டாக்கூட துடிச்சுப் போவாரே, அவருக்கா இப்படி ஆகணும்? அடுத்தவாரம் சமயபுரம் போகலாம்னு சொன்னாரே... இப்படிப் போயிட்டாரே."

குரலே வெளியே வராமல் அந்த அம்மாள் என்னைப் பார்த்துச் சொல்லிவிட்டு அழுதாள்... எனக்குப் பாவமாக இருந்தது. என்ன சமாதானம் சொல்வது என்று தெரியாமல் தவித்தேன்.

அந்நேரம் போன் பேசி முடித்துவிட்டு, அந்த அம்மாளின் மகன் – அந்தக் கீழ் வீட்டுக்காரர் வந்தார். என்னுடைய வருகையை, தலை அசைத்து அங்கீகரித்துவிட்டு தன் தாயைப் பார்த்துச் சொன்னார்.

“அம்மா! என் கம்பெனி டைரக்டர் பேசினார். நீ பாட்டுக்கு பாடியை அப்படியே எடுத்துட்டு வந்துடாதே. ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போயி, ‘போஸ்ட்மார்ட்டம்’ பண்ணிக்கிட்டு வந்துடு. அந்த லாரி நம்பர் தெரியும்கறே. கேஸ் போட்டு பணம் வாங்கிடலாம்னு சொல்றாரு. இல்லைன்னா நீ கேஸ் போட்டாக்க ஒங்கப்பா குடிச்சிருந்தாருன்னு சொல்லிடுவாங்க. நஷ்டத் தொகை எதுவும் வராதுங்கறாரு”

அவர் சொல்வதைக் கேட்டு அந்தப் பெரியம்மாள்- அவருடைய தாயார் – திடுக்கிட்டது தெளிவாகத் தெரிந்தது. சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு “நீ என்னடா பண்ணப்போறே?” என்று பலவீனமாகக் கேட்டாள்.

“பண்றதுக்கு என்ன இருக்கு? போலீஸிலே போய் கம்ப்ளெய்ண்ட் குடுத்துட்டு ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போயி போஸ்ட்மார்ட்டம் பண்ணி ரிப்போர்ட் வாங்கி அப்புறமா அந்த லாரி கம்பெனி மேலே துட்டு கேட்டு கேஸ் போட வேண்டியதுதான்...”

அவர் சொல்லி முடிக்கவில்லை. அந்தத் தாயார் அழுதபடியே குறுக்கிட்டார். “வேண்டாம்டா. டேய் வாணாம். அவர் உடம்பை அறுத்துக் கூறு போட வேண்டாம்டா. அவர் வாழ்நாள்லே உடம்பிலே ஒரு சிறு கீறல் விழுந்தாக்கூடத் தாங்க மாட்டாருடா. கெஞ்சிக் கேட்டுக்கறேன்.. அப்படியெல்லாம் பண்ணாதேப்பா... உனக்குப் புண்ணியமாப் போவுது...”

அதற்குள் அந்த வீட்டிற்கு வந்திருந்த பெரியவர் ஒருவர் அவரை நெருங்கி, “அதில்லை, தம்பி! அம்மா என்ன சொல்லுதுன்னா...” எனப் பேச முயன்றார்.

கீழ் வீட்டுக்காரர் அவரை ஒருமுறை முறைத்தார். “சித்தப்பா! எங்களுக்கு எல்லாம் தெரியும். நீங்க ஒண்ணும் சொல்ல வேணாம். அப்படி கேஸ் போட்டு அப்புறமா பணம் வந்தா, இப்ப பண்ற காரியங்களுக்காகச் செலவு பண்றமே, அதுக்குச் சரியாப் போகுமில்லையா?”

அவர் பேசிய தோரணையைக் கண்டு, நடுவில் நியாயம் பேச வந்த மனிதர் அப்படியே அடங்கிவிட்டார்.

கனத்த இதயத்துடன் நான் வேலைக்காரன் உதவியுடன் மாடியில் பால்கனியில் இருந்த என் இருக்கைக்குத் திரும்பினேன்.

எதிரே திறந்த வெளியில் தன் செத்துப்போன குட்டியின் உடலைக் கொத்த வரும் காக்கையை அந்தத் தாய் நாய் இன்னமும் பாய்ந்து பாய்ந்து துரத்திக் கொண்டிருந்தது. ●



## ...ன்றில் ஒன்று

புல்லின் மேற்பரப்பில்
புளகிதம்
கல்லின் கண்ணிமையில்
கவிதை

நெல்லின் நிறைவயிற்றில்
நிதர்சனம்
சொல்லின் சுழல்வடிவில்
சுகம்

...ல்லின் மெல்லிடுக்கில்
...ண்பு
...ில்லின் சீர்வளைவில்
...யூகம்

...சல்லின் சிறுமெய்யில்
...ற்றுயிர்
...ல்லின் உள்வெளியில்
...ங்கிதம்

...ால்லின் ஆழ்கர்ப்பத்தில்
...யங்கள்
...லையாள் முழுமையில்
...துகள்

கே. வசந்தா



## நெஞ்சுக்குள் திருவிழாக்கள்

கவலை என்னும்
காராக் கிரகத்தை நீங்கு

பந்தம் பாசம் என்னும்
பார் விதித்த தளைகளைத்
தவிடு பொடியாக்கு

துன்பங்கள் முன் குருடாகு
அதுசப்தமிடின் செவிடாகு

தெய்வம், மதம் பற்றித்
தினந்தோறும் வாதித்துச் சோராதே

நாற்காலிக்கு அலையும் தலைவனை
நாவினில் ஏற்றாதே

உன் வீட்டுக் கடிகார முள்ளின்
ஒவ்வொரு நொடியின் ஒலியினிலும்
ஒரு நரகாசுரன் மாளட்டும்!

இயற்கையோடு கை கோத்துக்கொள்!
இதுவே என்றென்றும் சொர்க்கம்!
உன் ஆட்டம் பாட்டம் கொண்டாட்டத்தால்
அதிரட்டும் இந்திரன்.

இதழ்களின் புன்னகை இதயத்தின் மென்னகை
எப்போதும் உன்னிடம் தவழட்டும்!

ஒவ்வோர் இழப்பும் ஒவ்வொரு லாபம்தான்
தன்னை இழந்து
உலகையே சம்பாதிக்கவில்லை ஓர் அசுரன்!

அதனால் இன்றே, இப்போதே
நெஞ்சுக்குள் நிகழட்டும்
தினந்தோறும் திருவிழாக்கள்!

பேரா.சி. பழனி

# பெரும்புகை அளவுகோல்

**ஊரின் அமைவிடம் :**

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டத்தில் பெரும் புகை என்னும் ஊர் அமைந்துள்ளது. திண்டிவனம்-செஞ்சி நெடுஞ்சாலையில் ஊரணித் தாங்கல் என்ற (செஞ்சிக்குக் கிழக்கில் 3 கி.மீ) ஊருக்கு வடக்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் அமைதியான இயற்கைச் சூழலில் இவ்வூர் அமைந்துள்ளது.

**அளவுகோல் இருப்பிடம் :**

இவ்வூரின் வடமேற்குத் திசையில் ஏரி உள்ளது. இதனை பெரும்புகை ஏரி என்று அழைக்கின்றனர். இந்த ஏரியின் தென்கிழக்குக் கரையின் கீழ் உள்ள பாறையில் கி.பி.16-17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் அளவுகோலும் கல்வெட்டும் கண்டுபிடிக்கப்பட்டன.

கோ.கிருட்டிணமூர்த்தி, புலவர் வில்லியனூர் வெங்கடேசன், கவிஞர் பண்ணுருட்டி தமிழரசன் ஆகியோர் இப்பகுதியில் ஆய்வு மேற்கொண்டபோது மண் மூடியிருந்த பகுதியில் கல்லெழுத்துகள் தென்பட்டன. மேலும் மண்ணை அப்புறப்படுத்தியபோது அளவுகோலும் இருப்பதை அறிந்து மேலும் ஆராய்ந்தனர்.

**பெரும்புகையின் தொன்மையும்-சிறப்பும் :**

பெரும்புகை சுமார் 2000 ஆண்டுகளுக்கு முந்தைய வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டுள்ளது. அண்மையில் இவ்வூர் பெரிய மலைப்பகுதியில் 1000 ஆண்டுகளுக்கு முன் புதிய கற்காலத்து மாந்தர் பயன்படுத்திய கற்காலக் கருவிகளை, புதுச்சேரி வரலாற்றுச் சங்க உறுப்பினர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

செஞ்சிக்கு வடமேற்கே சுமார் 10 கி.மீ. தொலைவில் உள்ள நெகனூர்ப்பட்டியின் மேற்கே உள்ள அடுக்கன் கல் என்னும் குன்றுப் பகுதியில் தொல்பழங்காலத்தைச் சார்ந்த ஓவியங்கள் கண்டறியப்பட்டன. இங்குள்ள பாறை ஒன்றில் இந்தியத் தொல்பொருள் துறையினரால் கல்வெட்டும் கண்டுபிடிக்கப்பட்டது.

**கல்வெட்டு :**

பெரும் பொகய்
செக்க உதி தாயியா (உற)
செறிக ஓ தண்ணிகெ
யி வித்த பள்ளி

என்கிறது கல்வெட்டு 'பெரும் பொகய்' என்பதே தற்போது பெரும்புகை என்று வழங்கப்படுகிறது. இவ்வூரைச் சேர்ந்த செக்க உதிதாயி என்ற சமணர் நெகனூர்ப்பட்டியில் இருந்த சமணத்துறவிக்குப் படுக்கையை அமைத்துக் கொடுத்த செய்தி இக்கல்வெட்டின் மூலம் தெரிய வருகிறது.

தற்போதும் பெரும்புகையில் சமணர்கள் வாழ்கிறார்கள். மல்லிநாதர் எனும் சமண தீர்த்தங்கரருக்குக் கோயில் ஒன்றும் உள்ளது. மேலும் இவ்வூருக்கு வடக்கே ஆலத்தம்மன் கோயில் ஏரிக்கரைக்குக் கீழே அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயில் சோழர் காலத்தியதாகும். கோயிலின் குமுதப் படைக் கல்வரிசையில் 'தேவதானங்கள் நீங்கலாக நாயனான அம்மை கோயிலுக்கு குழி 175 நிலம்' கொடுக்கப்பட்டதைக் கல்வெட்டு தெரிவிக்கிறது.

இப்பகுதி (செஞ்சிப்பகுதி) சங்ககாலச் சிறப்பும் பல்லவர், சோழர், பாண்டியர், நாயக்கர் விஜயநகர அரசர்கள், பின்னர் முகமதியர் காலத்திற்குமான சிறப்பையும்-வரலாற்றுச் சான்றுகளையும் கொண்டு விளங்குகிறது.

**அளவுகோல்கள் :**

சோழ அரசர்கள் காலத்தில் செயங்கொண்ட சோழ மண்டலத்து சிங்கபுர நாட்டினைச் சேர்ந்த ஊராக இது இருந்துள்ளது. சோழர்கள் காலத்தில் நிலங்கள் யாவும் அளக்கப்பட்டன. அதற்கான அளவுகோல்கள் பல பெயர்களில் இருந்தன. 'உலகளந்தான் அளவுகோல்' என்பது அரசருக்குரியது. அரசு அளவுகோல் எனவும் கொள்ளலாம். அதே சமயம் சோழ அரசர்கள் காலத்தில் பலவகை அளவுகோல்கள், பல அளவுகளில் உள்ளனவாக இருந்ததை அறிகிறோம். இவ்வளவுகோல் நிலங்களை-காட்டை-மனைக்காகவும்-கோயில் அமைக்கவும் தனித் தனியாகப் பிரிக்கப்பட்டு அளப்பதற்கென இருந்ததையும் அறிகிறோம். நிலம் அளக்கும் அளவைக்கோல், கடமை அளக்கும் கோல் என்ற அளவுகோலுக்குப் பெயர் வைக்கப்பட்டுள்ளது. தவிர ஊரின் பெயராலும் அளவு கோல்கள் இருந்தனவற்றையும் அறிகிறோம். முந்தியூர் நிலம் அளக்கும் அளவைக்கோல், திருமெய்யம்கோல், ஆதனூர் காடு அளந்தகோல், செம்பாட்டூர் கடமை அளக்கும் கோல் என்று பல அளவுகோல்கள் அரசுக்கு அரசு, நாட்டிற்கு நாடு, ஊருக்கு ஊர் பல அளவுகோல்கள் இருந்தன. இந்த அளவுகோல்கள் இடத்திற்கு இடம் நீள அளவுகள் மாறுபட்டு இருந்ததையும் அறியமுடிகிறது. இந்த அளவுகோல்கள் 12, 16,18,22 மற்றும் 24 அடி

அனந்தபுரம் கோ.கிருட்டினமூர்த்தி

அளவு கொண்டவையாகவும் இருந்துள்ளன. மேலும் கையளவைக் கொண்ட அளவுகோல் இருந்ததையும் அறிகிறோம். வட ஆர்க்காடு மாவட்டம் தாமரைப் பாக்கத்துக் கோயிலில் காணப்படும் மூன்றாம் குலோத்துங்கள் காலக் கல்வெட்டு ஒன்று 16 சாண் கோல் ஒன்றைப்பற்றித் தெரிவிக்கிறது. இந்த அளவுகோலைக் கொண்டு நிலம் அளக்கப்பட்டதையும் தெரிவிக்கிறது.

**பெரும்புகை அளவுகோல் :**

பெரும்புகை ஏரிக்கரைக்குக் கீழே உள்ள பாறையில் செதுக்கப்பட்டுள்ள அளவுகோல் 681 செ.மீ.நீளமுள்ளது. இந்த அளவுகோல் தெற்கு வடக்காகச் செதுக்கப்பட்டுள்ளது

அமைப்பு:




பெரும்புகை அளவுகோல்-மொத்த நீளத்தை 5 பகுதிகளாகப் பிரித்துக் காட்டப்பட்டுள்ளது. அளவு கோலின் சரிபாதி அளவில் ஒரு பகுதியாகவும் மீதம் பாதியை நான்கு அளவுகளாகவும் பிரித்துக் காட்டப் பட்டுள்ளது என்பது சிறப்பானதாகக் கருதப்படுகிறது.

பொதுவாக அளவுகோல்கள் ½ பாகம் ¼ பாகம் எனப் பிரித்துக் காட்டப்பட்டிருக்கும். இந்த அளவைக் கொண்டும் அளவை ¼ ½ ¾ என்று அளவுகளை அறிந்துகொள்ள முடியும். 85 செ.மீ. அளவு ஏறக்குறைய இரண்டு முழம் ஆகும். எனவே இரண்டு முழம் 8 சாண் அளவையும் குறிக்கும். 85 செ.மீ அளவு என்பது இரண்டு முழம் என்பதானால் 4 முழம் என்பது ஒரு பாகம் என்பதாகும்.

30 செமீ - 1 அடி<br>
3 விரல் - ¼ சாண்<br>
6 விரல் - ½ சாண்

(30 செமீ - 1 அடி. 12 விரல்கள் - 1 சாண் 9 அங்குலம்)

எனவே பெரும்புகை அளவுகோலில் காணப்படும் 1 பாகம் 2 முழமளவு ஆகும். இதனை ஒரு பாகத்தில் பாதிபாகம் என்று கணக்கிட்டுக்கொண்டால், பெரும் புகையின் நிலம் ஒரு பாகத்திற்குக் கீழாகவும் அளக்கப்பட்டுள்ளது என்பதை அறிய முடிகிறது.

இந்த அளவு கோலில் 85 செ.மீ.4 முழம் ஆகும். அதாவது ஒரு பாகம் (ஏறக்குறைய 1 பாகம் 6 அங்குலம் அளவு) எனக் கொள்ளவேண்டும். எனவே இந்த அளவுகோல் 16 முழக்கோல் எனவும் இதன் பாதி 8 முழம் எனவும் இதில் பாதி 4 முழம் எனவும் இதன்பாதி 2 முழம் எனவும் பிரிக்கப்பட்டுள்ளது.

2 முழம் ½ பாகம்<br>
4 முழம் 1 பாகம்<br>
8 முழம் 2 பாகம்<br>
12 முழம் 3 பாகம்<br>
16 முழம் 4 பாகம்

எனவும் அளவு பிரிக்கப்பட்டுள்ளது. அதாவது ஒருவரின் நிலம் 4 பாகங்களாகப் பிரித்துக் கணக்கிடப் பட்டுள்ளது. கட்டில், தொட்டில் முதலியன 24 விரல் நீளம் (2 சாண்) வீடு, மாளிகை, கோட்டையின் அரண் முதலியன 25 விரல் (2 சாணுக்கும் சற்று மிகுதி)

நகரம், கிராமம், பட்டினம் முதலியன 27 விரல் 2 ¼ சாண் கொண்டு அளவுகளால் அளக்கப்பட்டதை அறிகிறோம். எனவே பெரும்புகை கிட்டத்தட்ட 2 முழம் எனப் பிரித்துக் காட்டியிருப்பது இவ்வூர்ப் பகுதியில் மக்கள் வாழ்விடத் திற்கான மனைகள் பிரிக்கப்பட்டும் அல்லது ஆலத்தம்மன் கோயிலுக்கு வழங்கப்பட்ட நிலத்தின் அளவைத் துல்லியமாகக் குறித்திடவும் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்பதை உய்த்துணர முடிகிறது.

**அளவுகோல் கல்வெட்டு :**

பெரும்புகை அளவுகோலுக்குக் கீழே சிதைந்த நிலையில் காணப்படும் கல்வெட்டில்

1. ஸ்ரீ ஒம்மை சாமுண்ட..... (ச)க்கரவர்த்தி<br>
அவய..தெய தெரம மகாரா... நம்முடைய<br>
பாயகுத்த தனம் ஆனபெரு.....ப்பரவ

2. பெருமுகை உரொவ(ம்).....ரா(ன)<br>
பிக கொபந்தங்...தள உரொடு அளவுகொல்<br>
இம்மத்து நாலுவும்... இலத்து.....

என்று மட்டுமே படிக்கக்கூடிய நிலையில் காணப்படுகிறது.

'சாமுண்ட' என்பது இப்பகுதியை அரசாண்ட ஓர் அரசனைக் குறிக்கலாம். இப்பெயர் குறித்துத் தெளிவாக அறிய முடியவில்லையாயினும் மராட்டியர் காலத்து ஆட்சியின்போது செஞ்சியை 'சிண்டி' என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இப்பெயர் பெண் தெய்வத்தைக் குறிக்கிறது. இன்றும் செஞ்சியம்மன் என்ற பெண் தெய்வத்திற்கு செஞ்சி மக்கள் சிறப்பான விழா எடுக்கின்றனர். செஞ்சியம்மனுக்கு செஞ்சிக் கோட்டையின் தெற்குப் பகுதியில் கோயில் அமைக்கப்பட்டுள்ளது 'சிண்டி' என்ற பெயரே சாமுண்டி என அழைக்கப்பட்டது போலும்! செஞ்சி என்ற ஊரின் பெயரை சின்ஞ்சி, ஜிஞ்சி என்றும் குறிப்பிடப்பட்டுள்ளதை அறிகிறோம்.

தமிழக வரலாற்றில் மிக முக்கியமான அளவு கோல்கள் சிதம்பரம் முழக்கோல், தஞ்சை முழக்கோல், திருவண்ணாமலை முழக்கோல், மதுரை முழக்கோல் என்பனவாகும். இக்கோல்களினால் பிற்காலத்தில் தமிழ்நாட்டின் பெரும்பகுதிகள் அளக்கப்பட்டுள்ளன. பெரும்புகை அளவுகோல் பிற்கால செஞ்சி வரலாற்றுக்குச் சிறந்த சான்றாக அமைந்துள்ளது எனலாம். ●

# கருணை மனு



நாதன்

தரையில் படர்ந்திருந்த சிறைக்கம்பிகளின் நிழல் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து, இருளில் கரைந்து போயிற்று.

இன்னும் பன்னிரண்டு மணிநேரம் தான். என் கழுத்தை முத்தமிடத் தூக்குக்கயிறு தயாராகக் காத்திருந்தது.

'கவலைப்படாதே அம்மா! ஜனாதிபதிக்கு அனுப்பிய கருணைமனுவுக்கு எந்த நேரத்திலும் பதில் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். நிச்சயம் ஜனாதிபதி கருணை காட்டுவார்" என்று சிறைக்கம்பிகளுக்கு வெளியேயிருந்து கூறினார் வார்டன்.

எத்தனையோ மரண தண்டனைகளை நேரில் பார்த்தவர் அவர். ஏனோ என்னிடம் இவ்வளவு பரிவு காட்டுகிறார்.

"எனக்கு என்ன ஆனாலும் வருத்தப்படாதீர்கள் தாத்தா! உங்கள் பேரனை நன்றாகப் படிக்க வையுங்கள்...."

"என் பேரன் படிப்பதற்கு என்னம்மா? நான் இருக்கிறேன். என் மகள் இருக்கிறாள், மருமகன் இருக்கிறார். ஆனால் உன்னுடைய ஒரு வயதுக் குழந்தையைப் பார்த்துக்கொள்ள யார் இருக்கிறார்கள்?" என்று கூறிக் கொண்டிருந்தபோதே அவர் கண்களில் இரு நீர்த்துளிகள் மின்னுவது நன்றாகத் தெரிந்தது.

"தாயி! உன்னைக் கடவுள் கைவிடமாட்டார். நிச்சயம் காப்பாற்றுவார்" என்று கூறியபடி, சோர்வுடன் நடந்து சென்றார் வார்டன்.

ஒருவேளை ஜனாதிபதி என்னிடம் கருணை காட்டலாம். ஆனால் அருணிடம் இரக்கம் காட்டுவாரா? தூக்குமேடையிலிருந்து 'அவர்' மீண்டு வருவாரா?

'கடவுளே! ஜனாதிபதி என் கருணை மனுவை நிராகரித்து விட்டாலும் பரவாயில்லை. அருணுடைய தூக்குதண்டனையை ரத்து செய்யவேண்டும். என்னால் அல்லவா அவர் தூக்குமேடையில் நிற்கிறார்! அநியாயமாக அவர் சாவதா? கூடாது கூடாது' என்று மனம் அலறியது.

ஓராண்டுக்குள் என் வாழ்க்கை எப்படி திசைமாறிப் போய்விட்டது! எத்தனை எதிர்பாராத நிகழ்ச்சிகள்!

இன்று பகலில் சாப்பிட்டேனா, என்ன சாப்பிட்டேன் என்பதுகூட நினைவில் இல்லை. ஆனால், ஓராண்டுக்கு முன் நடந்த கல்யாணம் எவ்வளவு பசுமையாக நினைவிருக்கிறது!

அருணை நான் முதன் முதலாகச் சந்தித்தது, பேசியது, பழகியது எல்லாம் அடுக்கடுக்காய் நினைவுத்திரையில் விரிந்தன. பெரும்பாலான காதலர்கள் பெற்றோரின் எதிர்ப்பைச் சந்திப்பது இயற்கை. ஆனால் அந்த விஷயத்தில் நான் அதிர்ஷ்டசாலி. நானும் அருணும் விரும்புகிறோம் என்று தெரிந்ததுமே திருமணத்துக்கு இரு வீட்டாரும் பச்சைக் கொடி காட்டிவிட்டார்கள். ஒரே மாதத்தில் தம்பதியானோம்.

நான்கு மாதங்கள் மகிழ்ச்சியில் துள்ளி ஓடின. இல்லற வாழ்வின் மகிழ்ச்சியை உள்ளத்தில் மட்டுமன்றி, வயிற்றிலும் சுமந்து கொண்டிருந்தேன் மூன்று மாதங்களாக.

அவர் ஏற்றுமதி-இறக்குமதி நிறுவனம் ஒன்றில்

மானேஜராக வேலை பார்த்து வந்தார். வேலை விஷயமாக மாதத்தில் நாலைந்து நாள்களாவது வெளியூர்களுக்குச் செல்வதுண்டு. மற்ற நேரங்களில் நாங்கள் பிரிவதே இல்லை. சினிமா பார்ப்பதில் விருப்பம் உடைய அவர், அதையெல்லாம் தியாகம் செய்துவிட்டு, என்னையே வளைய வருவார். ஆண் குழந்தை பிறக்குமா, பெண் குழந்தை பிறக்குமா? என்ன பெயர் வைக்கலாம்? எந்தப் பள்ளியில் சேர்க்கலாம் என்றெல்லாம் நேரம் போவதே தெரியாமல் பேசிக்கொண்டிருப்போம்.

"ரஞ்சனா! பெண் குழந்தை பிறந்தால் உன் அம்மா பெயர். ஆண் குழந்தை பிறந்தால் என் அப்பா பெயர். சரிதானே?" என்றார் அருண். நான் தலையசைத்தேன்.

நான் சிறு வயதிலிருந்தே பியானோ நன்றாக வாசிப்பேன். திருமணப் பரிசாக புத்தம் புதிய பியானோ ஒன்றை என் தந்தை பரிசளித்தார். தினமும் ஒரு முறையாவது என்னை வாசிக்கச் சொல்லிதன்னை மறந்து ரசிப்பார் அருண்.

நிம்மதியாகச் சென்று கொண்டிருந்த வாழ்க்கையில் பிரேம்நாத் குறுக்கிட்டான். அதாவது, பிரேம்நாத் உருவில் விதி குறுக்கிட்டது.

பிரேம்நாத், இவருடைய கம்பெனி முதலாளி. இவரைவிட ஒன்றிரண்டு வயது அதிகம் இருக்கலாம். ஆனால் திருமணம் ஆகவில்லை.

தொழில் அதிபர்களுக்கு பிரேம்நாத் அளித்த பார்ட்டி ஒன்றுக்கு நான் இவருடன் சென்றிருந்தேன். அப்போதுதான் அவன் முதன்முதலாக என்னைப் பார்த்தான். அதன்பிறகு, அவன் விழிகள் என்னைப் பின் தொடர்ந்தபடி இருந்தன. இரு பூச்சிகள் என்மீது ஊர்ந்து கொண்டிருப்பது போல ஓர் உணர்வு, என்னை நெளிய வைத்தது.

"என்ன அருண்! உன் மனைவி பேசவே மாட்டேன் என்கிறாரே!" என்று அருணிடம் கூறிச் சிரித்தான் பிரேம்நாத்.

"இது போன்ற பார்ட்டிக்கு இவள் வருவது இதுவே முதல் தடவை. அதுதான்... வேறொன்றுமில்லை" என்றார் அருண்.

"அப்படியானால் அவர் கூச்சத்தைப் போக்குவதற்காகவே பல பார்ட்டிகள் நடத்தவேண்டும் போலிருக்கிறது" என்று அவன் பெரிதாகச் சிரித்தான். இவர் புன்னகை ஒன்றை மட்டுமே பதிலாகக் கொடுத்தார்.

விருந்து முடிந்ததும், அவன் தன்னுடைய காரிலேயே என்னையும், அருணையும் வீட்டுக்கு அனுப்பிவைத்தான். காரில் ஏறுகிறபோது இவர் காதில் அவன் ஏதோ மெல்லிய குரலில் கூற இருவரும் சிரித்தனர். வீடு போய்ச் சேர்ந்த பிறகுதான், அவன் என்ன சொன்னான் என்று கேட்டேன்.

'உன் மனைவி ரொம்ப அழகி. நீ மிகவும் அதிர்ஷ்டசாலி' என்றானாம்.

சாதாரணமாக ஒருவர் நம் அழகைப் புகழ்ந்தால் பெருமையாக இருக்கும். பிரேம்நாத்தின் பார்வையே சரியில்லாததால் அவன் அவ்வாறு சொன்னது எனக்கு வெறுப்பையே தந்தது.

ஒரு நாள் மாலை, பிரேம்நாத்தை அழைத்துக்கொண்டு என் வீட்டுக்கு வந்தார் அருண். "நீ நன்றாக பியானோ வாசிப்பாய் என்று கூறினேன். கேட்கவேண்டும் என்று விரும்பினார். மிஸ்டர் பிரேம்நாத்துக்கு இசை என்றால் உயிர்" என்றார் அருண் என்னிடம்.

எனக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. மனம் பிரேம்நாத்தை வெறுத்தபோதிலும் அவன் இவருடைய முதலாளி ஆயிற்றே! காபி கொடுத்து உபசரித்துவிட்டு, பியானோ வாசித்தேன்.

'ஓகோ ஓகோ' என்று தலையாட்டி ரசித்தான் பிரேம்நாத்.

ஏ.ஆர்.ரகுமானின் 'வந்தே மாதரம்' பாடலை பியானோவில் வாசிப்பது மிகவும் கஷ்டம். நான் மிகவும் சிரமம் எடுத்துக்கொண்டு அதை வாசிக்கப்பழகியிருந்தேன். அதைக் கேட்டுவிட்டு பிரேம்நாத் 'ஒன்டர்புல்! ஒன்டர்புல்' என்று உண்மையாகவே நெகிழ்ந்து போய்ப் பாராட்டியபோது என் மனம்கூட 'அவனைக் காரணமின்றி வெறுக்கிறோமோ?' என்று நினைக்கத் தோன்றியது.

பிரேம்நாத் தன் பெட்டியைத் திறந்தான். விலை உயர்ந்த ரோலக்ஸ் கடிகாரம் ஒன்றை எடுத்தான். 'உங்கள் பியானோ வாசிப்புக்கு ஒரு சாம்ராஜ்யத்தையே காணிக்கையாகத் தரலாம். ஆனால் நான் பேரரசனல்லன். சாதாரண வியாபாரி. உங்கள் ஈடிணையற்ற கலைத்திறனுக்கு இந்த ரசிகனின் காணிக்கையாக ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று கடிகாரத்தை நீட்டினான். நான் தயங்கினேன். 'பரவாயில்லை வாங்கிக்கொள்' என்றார் அருண். நான் வாங்கிக்கொண்டேன்.

சிறிது நேரத்துக்குப் பிறகு பிரேம்நாத்தும், அருணும் புறப்பட்டுச் சென்றார்கள்.

பிரேம்நாத் கொடுத்த கடிகாரத்தைப் பார்த்தேன். முழுவதும் தங்கமுலாம் பூசப்பட்டது. பத்தாயிரம் ரூபாய்க்கு மேலிருக்கும்.



பிரேம்நாத் நல்லவனா? கெட்டவனா? என்னால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. ஒரு வேளை அவன் நல்ல ரசிகனாகவும் இருக்கலாம். அநாவசியமாக அவனை ஏன் வெறுக்கவேண்டும்? என்றெண்ணினேன்.

அவன் விஷயத்தில் நான் கொண்டிருந்த வெறுப்பு அநேகமாக மறைந்துவிட்டது என்றே கூறவேண்டும்.

ஆபீசிலிருந்து அருண் பேசினார். "ரஞ்சனா! இன்று நான் பம்பாய் புறப்படுகிறேன். இரவு 10 மணிக்கு பிளைட். நான்கு நாள்களுக்குத் தேவையான டிரஸ்களை எடுத்துவை" என்றார்.

அவர் வெளியூர் செல்வது என்பது புதிதில்லை என்றாலும் இம்முறை அவரைப் பிரியும்போது, மனம் என்னவோ செய்தது. "நானும் உங்களுடன் வரட்டுமா?" என்று கேட்டேன். "இது என்ன அசட்டுத்தனம்" என்று கூறியபடி, கண்ணீரைத் துடைத்தார். 'இப்போதெல்லாம் டெலிபோனில் எஸ்.டி.டி.வசதி இருப்பதால் எந்த

நேரத்தில் வேண்டுமானாலும் பேசலாமே! நானும் ஒரு நாளைக்குத் தவறாமல் இரண்டுமுறை பேசுகிறேன். நீ எப்பொழுது வேண்டுமானாலும் பேசலாம், பாடக்கூடச் செய்யலாம்" என்று கன்னத்தில் தட்டினார்.

பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்ததும் டெலிபோனில் பேசினார். ஓட்டல் நெம்பர், ரூம் நெம்பர் ஆகிய எல்லாவற்றையும் கொடுத்தார். கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டாலும் மனம் ஏனோ கனத்தது.

மறுநாள் மாலை ஏழு மணி இருக்கும். காலிங் பெல் ஒலி கேட்டது. கதவைத் திறந்தேன். பிரேம்நாத் நின்று கொண்டிருந்ததைப் பார்த்து திடுக்கிட்டேன்.

"என்ன மிஸஸ் அருண்? இப்படி மலைத்து நின்றுவிட்டீர்களே! போன் செய்துவிட்டு வரலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால் உங்களுக்கு 'சர்ப்ரைஸ்' கொடுக்கவேண்டும் என்றுதான் இந்த திடீர் விஜயம்" என்றான்.

அதற்குப் பிறகு வாசலிலேயே நிற்கவைத்துப் பேசுவது நாகரிகமாக இருக்காது என்று நினைத்து 'உள்ளே வாருங்கள்' என்று அழைத்தேன். விடுவிடென்று வந்த பிரேம்நாத், சோபாவில் அமர்ந்து கொண்டான்.

"கொஞ்சம் இருங்கள். காபி கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டு உள்ளே சென்றேன். கைகள் காபி போடுவதில் ஈடுபட்டிருந்தாலும், மனம் 'அவர் இல்லாதபோது இவன் ஏன் வந்திருக்கிறான்?' என்ற கேள்வியை எழுப்பியபடி இருந்தது.

பிரேம்நாத் காபியைப் பருகியபடி, "ரஞ்சனா! பியானோ வாசிப்பதில் உங்களுக்குள்ள திறமையைக் கண்டு உண்மையில் அசந்தே போனேன். அன்று கேட்ட இசை என் நினைவைவிட்டு அகலவே இல்லை" என்று கூறினான். பிறகு "அருண் ஊரில் இல்லாதபோது நான் வந்திருப்பதைத் தவறாக நினைக்காதீர்கள். அருண்கூட இதைத் தவறாக நினைக்கமாட்டான். என்னைப் பற்றி அவனுக்கு நன்றாகத் தெரியும். உங்கள் பியானோ இசையைக் கேட்டுவிட்டுப் போகவேண்டும் என்றுதான் வந்தேன்" என்றான்.

நான் ஒரு கணம் தயங்கினேன். ஆனாலும் கணவர் வேலைபார்க்கும் நிறுவனத்தின் முதலாளி வீடு தேடிவந்து கேட்கும்போது அதை மறுப்பது சரியாகாது. தவிர, 'பிரேம்நாத் உண்மையிலேயே ஏன் நல்லவனாக இருக்கக்கூடாது' என்று மனம் கூற, விரல்கள் பியானோவை இசைக்கத் தொடங்கின.

ஒரு பாடல், இரண்டு பாடல் ஆயிற்று. 'இன்னும் ஒரே ஒரு பாட்டு' என்றான் பிரேம். 'சாஜன்' படத்தில் மாதுரி தீட்சித் பியானோ வாசித்தபடி ஒரு பாடலைப்பாடுவாரே. அந்தப் பாடலை வாசித்தேன்.

திடீரென்று மின்சாரத்தடை ஏற்பட்டு விளக்குகள் அணைந்தன. எமர்ஜென்சி விளக்கு ஒன்று இருந்தது. எதனாலோ அது வேலை செய்யவில்லை.

நாலாபுறமும் கரிய இருள் சூழ்ந்திருந்தது. 'இருங்கள், மெழுகுவர்த்தி கொண்டு வருகிறேன்' என்று நான் எழுந்தபோது, இரு கரங்கள் என் இடையைச் சுற்றி வளைத்தன. 'ரஞ்சனா! ஐ லவ் யூ" என்று காதருகே, பிரேம்நாத்தின் மெல்லிய குரல்.

என் உடல் முழுதும் தீயாய் எரிந்தது. அவனைப் பிடித்துத் தள்ள முயன்றேன். அவன் பிடி தளரவில்லை.

முரட்டுத்தனமாக அவன் என் முகத்தைத் தன் பக்கம் திருப்பினான்.

அவன் கண்கள் நெருப்புத் துண்டங்கள் போல் மின்னுவதை அந்த இருட்டிலும் காணமுடிந்தது. அதே சமயம்... என் இதழ்கள் ஏன் இப்படி தீயாய்ச் சுடுகின்றன!

என் முழு பலத்தையும் பிரயோகித்து அவனைத் தள்ளினேன். அவன் சோபாவில் போய் விழுந்தான்.

அதே சமயத்தில் விளக்குகள் எரிந்தன.

அவனைப் பார்க்கவே எனக்கு வெறுப்பாக இருந்தது. அழுகையைக் கட்டுப்படுத்த என்னால் முடியவில்லை.

"ரஞ்சனா! நான் முரட்டுத்தனமாக நடந்து கொண்டதாக நீ நினைத்தால் என்னை மன்னித்துவிடு. நீ நினைப்பதுபோல் நான் காமவெறியன் அல்லன். உண்மையாகவே நான் உன்னைக் காதலிக்கிறேன்".

"நான் ஏற்கெனவே கல்யாணம் ஆனவள். உங்கள் நண்பரின் மனைவி. அப்படியிருக்க, காதல் என்ற வார்த்தையைக் கூற உங்களுக்கு வெட்கமாயில்லையா?"

"நான் என்ன செய்யட்டும்? உன்னை நான் பார்ப்பதற்கு முன்பே உனக்குத் திருமணம் ஆகிவிட்டது. அது என் குற்றமல்லவே!"

"அபத்தமாகப் பேசாதீர்கள். உடனே இங்கிருந்து போய்விடுங்கள்"

"போய்விடுகிறேன். அதற்கு முன் ஒன்று கூறுகிறேன். நான் இதுவரை கல்யாணம் செய்துகொள்ளவில்லை. ஏன் தெரியுமா? எனக்குப் பிடித்தமான பெண்ணைச் சந்திக்காததுதான். இப்போதுதான் எனக்கேற்றவளைச் சந்தித்தேன். அது நீதான். நாம் ஒன்று சேருவதற்கு, ஏற்கெனவே உனக்கு நடந்துவிட்ட திருமணம் தடையாக இருக்கிறது என்றால் அதற்கு ஒரு வழி சொல்கிறேன்.

எனக்குப் பத்து கோடிக்குமேல் சொத்து இருக்கிறது. அருணுக்குப் பணக்கஷ்டம் இருப்பது எனக்குத் தெரியும். ஒரு பிளாங்க் செக் தருகிறேன். பத்து லட்சமோ, இருபது லட்சமோ-ஏன் ஒரு கோடி வேண்டுமானாலும்-எழுதிக் கொள்ளட்டும். அவனிடமிருந்து முறைப்படி விவாகரத்து வாங்கியபின் நான் உன்னை மணந்து கொள்கிறேன்" என்று கூறியவாறு பிரேம்நாத் 'செக்' புத்தகத்தை எடுத்தான். ஒரு செக்கில் கையெழுத்து போட்டான். அதைக் கிழித்து மேஜை மீது வைத்தான்.

"அவனுக்கு எவ்வளவு தொகை வேண்டுமானாலும் எழுதிக் கொள்ளட்டும். எனக்கு நீ வேண்டும். அவ்வளவுதான்". வேகமாக வெளியே சென்று, காரை ஸ்டார்ட் செய்தான்.

அவன் செல்வதையே சிறிதுநேரம் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு படுக்கை அறைக்குச் சென்று கட்டிலில் விழுந்தேன். நெஞ்சு வெடித்து விடுவது போல் விம்மி விம்மி அழுதேன்.

எவ்வளவு நேரம் அழுதேனோ, தெரியாது. டெலிபோன் மணி அடித்தது. ஓடிப்போய் எடுத்தேன். அருண்தான் பம்பாயிலிருந்து பேசினார்.

அவர் குரலைக் கேட்டதும் என்னால் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியவில்லை. "உடனே வாருங்கள், உங்களை உடனே பார்க்கவேண்டும்" என்றேன் விம்மலுடன்.

பிரிவுதான் என்னை அப்படி அழச்சொல்கிறது என்று எண்ணினார் போலும். "வந்த வேலை முடிந்துவிட்டது. நாளைக் காலை பிளைட்டில் புறப்படுகிறேன். கவலைப்படாதே" என்றார்.

நடந்ததையெல்லாம் அவரிடம் டெலிபோனில் கூறினால் என்ன விபரீதம் நடக்குமோ என்று பயம் ஏற்பட்டது. அழுகையை அடக்கிக்கொண்டு, "நீங்கள் முன்னதாகத் திரும்பிவருவது உங்கள் எம்.டிக்குத் தெரியுமா?" என்று கேட்டேன். "இல்லை. நாளை காலைதான் சொல்லவேண்டும்" என்றார்.

"வேண்டாம், நாளை வருவது தெரிந்தால் உடனே ஆபீசுக்கு வரச்சொல்லி விடுவார்கள். நாளை முழுவதும் நீங்கள் என்னுடனேயே இருக்கவேண்டும்" என்றேன்.

"சரி" என்று போனைக் கீழே வைத்தார்.

மறுநாள் காலை வீட்டுக்கு வந்ததும், என்னைத் தழுவிக் கொண்டு 'இந்தத் தடவை நம் பிரிவு உன்னை மட்டுமன்றி, என்னையும் ரொம்ப பாதித்துவிட்டது. மூன்று நாள்களாகத் தூக்கமே இல்லை" என்றார்.

என் கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் அவரைச் சுட்டிருக்கவேண்டும். திடுக்கிட்டவராய் "ரஞ்சனா! என்ன நடந்தது? ஏன் அழுகிறாய்?" என்று கேட்டார்.

"உங்கள் நண்பர், அதுதான் உங்கள் எம்.டி. நீங்கள் இல்லாதபோது இங்கு வந்தார். என்னென்னவோ உளறினார்..." மேலே பேச முடியவில்லை என்னால்.

ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது என்பதை அவர் புரிந்துகொண்டார். என்னைச் சோபாவில் உட்கார வைத்தார். மின் விசிறியை முழுவேகத்தில் சுழலவிட்டார். என் நெற்றியில் துளிர்த்திருந்த வியர்வையைக் கைக்குட்டையால் மெல்ல ஒற்றி எடுத்தார்.

"ரஞ்சனா! என்ன நடந்திருந்தாலும் சரி. ஒன்றையும் ஒளிக்காமல் சொல்.... பயப்படாதே" என்றார்.

நான் துயரங்களையும், உணர்ச்சிகளையும் கட்டுப்படுத்திக்கொண்டு, நடந்ததையெல்லாம் கூறினேன். பிரேம்நாத் மேஜையில் வைத்துவிட்டுப் போன செக்கை எடுத்துக் காட்டினேன்.

"உனக்கு விலை ஒரு கோடியா? சபாஷ்!" என்று, ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு கோபமாகச் சிரித்தார், அருண். பிறகு, "ஒரு கோடியில்லை, பத்துக்கோடியானாலும் சரி. மனைவியை விற்கத் துணிபவன் உலகத்திலேயே கடைந்தெடுத்த அயோக்கியனாகத்தான் இருக்கவேண்டும்" என்றார்.

"இனி அவனிடம் ஏன் வேலை பார்க்கவேண்டும்? ராஜினாமா செய்துவிடுங்கள். உங்கள் திறமைக்கு எத்தனையோ வேலை கிடைக்கும்"

"வேலையை விடுவதொன்றும் பெரிதில்லை. ஆனால் செய்த குற்றத்தை அவன் உணர்ந்து திருந்தவேண்டும் அல்லது அதற்கான தண்டனையை அவன் அனுபவிக்கவேண்டும். அது பற்றித்தான் யோசிக்கிறேன்"

"அவன் பணக்காரன். அவன் விரோதம் நமக்கு எதற்கு? இந்த ஊரைவிட்டே போய்விடலாம்"

"அது கோழைத்தனம். அவனுக்கு எப்படிப் பாடம் புகட்டுவது என்பது எனக்குத் தெரியும். நீ பயப்படாதே" என்றார் அருண்.

இந்தச் சமயத்தில் காலிங் பெல் ஒலித்தது.

கதவின் நடுவே இருந்த சிறு கண்ணாடித் துவாரம் வழியே பார்த்தேன்.

பிரேம்நாத் நின்று கொண்டிருந்தான்.

"அவன்தான்" அருணின் காதோடு சொன்னேன்.

அருண் அங்கிருந்த டேப்ரிக்கார்டரை 'ஆன்' செய்துவிட்டு என் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்றார். "ரஞ்சனா! நான் இங்கே மறைந்திருக்கிறேன். நீ

போய்க் கதவைத்திற. அவன் என்ன பேசினாலும் நீ பயப்படாதே. அவன் பேசுவதெல்லாம் டேப்ரிக்கார்டரில் பதிவாகும். அதை வைத்து அவனை மடக்குகிறேன். உன்னிடம் மன்னிப்பு கேட்கச் செய்கிறேன்" என்றார்.

எனக்கென்னவோ பயமாக இருந்தது. ஆனாலும் அந்த இக்கட்டான நேரத்தில் வேறு யோசனை செய்யவும் அவகாசம் இல்லை. அவர் சொன்னபடி கதவைத் திறந்தேன்.

"என்ன ரஞ்சனா! நேற்று சொன்னதைப் பற்றி நன்றாக யோசித்துப் பார்த்தாயா? உன் முடிவைத் தெரிந்து கொள்வதற்காகவே வந்தேன்" என்றபடி சோபாவில் அமர்ந்தான் பிரேம்நாத்.

நான் மவுனமாக இருந்தேன்.

"ஏன் சும்மா இருக்கிறாய்? மவுனம் சம்மதத்துக்கு அறிகுறி என்று எடுத்துக் கொள்ளலாமா?" அவன் சிரித்தான்.

எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

"மிஸ்டர் பிரேம்நாத்! வேண்டாம். மீண்டும் மீண்டும் தவறு செய்யாதீர்கள். இப்போதே எழுந்து போய்விடுங்கள்".

"உன் முடிவைத் தெரிந்து கொள்ளாமல் நான் போகப் போவதில்லை. நீ சரியென்று சொன்னால் போதும். அருணை வழிக்குக் கொண்டு வரும் பொறுப்பு என்னுடையது. ஒரு கோடி ரூபாய்க்கு செக் என்றதும், நம் இருவருக்கும் திருமணவாழ்த்து கூறுகிறானா இல்லையா பார்!"

"பணத்தைக் கால் தூசியாக நினைப்பவர் அவர்".

"ஒரு கோடி ரூபாயைக் கால் தூசியாக முட்டாள்கூட நினைக்கமாட்டான். அருண் மிகவும் புத்திசாலி. இப்போது எனக்கு தெரியவேண்டியது உன் முடிவுதான்"

"எனக்கு என் கணவர் தான் தெய்வம். அவரைத் தவிர வேறு யாரையும் மனத்தால்கூட நினைக்கமாட்டேன்"

"கடைசிவரை ஏழையாக வாழ நினைக்கிறாயா? உன் பெயரில் ஐந்து கோடி ரூபாய் சொத்து எழுதி வைக்கிறேன்..."

"பணத்தாசை காட்டி என்னை மயக்கிவிட முடியாது. வெளியே போங்கள்".

பிரேம்நாத் ஒரு நிமிடம் யோசித்தான். பிறகு, "ரஞ்சனா! எனக்கு மது, மாது எந்தப் பழக்கமும் கிடையாது. சிகரெட்டைக் கூடத் தொட்டதில்லை. இதெல்லாம் அருணுக்கும் தெரியும். எனக்கு ஒரே ஒரு கெட்ட பழக்கம்தான் உண்டு. நினைத்ததை அடைந்தே தீருவது என்ற ஒரு வெறி. ஊட்டியில் உள்ள காபி எஸ்டேட், பம்பாயில் உள்ள மருந்து கம்பெனி, பெங்களூரில் உள்ள ஒட்டல்- இப்படி எதை எதை வாங்க நினைத்தேனோ அதையெல்லாம் எத்தனையோ தடைகளை உடைத்து வாங்கிப் போட்டேன். வாழ்க்கையில் நான் தோல்வி அடைந்ததே இல்லை. உன் விஷயத்திலும் தோல்வி அடையமாட்டேன்" என்றபடி சோபாவிலிருந்து எழுந்த பிரேம்நாத் என் எதிரே வந்து நின்றான். தன் கண்களால் என்னை ஊடுருவிப் பார்த்தான்.

"இன்று நல்லநாள். முகூர்த்தநேரம். இன்று உன்னை என்னுடையவளாக்கிக் கொள்ளவேண்டும் என்ற முடிவுடன்தான் வந்திருக்கிறேன். இயன்றால் உன் விருப்பத்துடன். இல்லாவிட்டால் உன் விருப்பம் இல்லாமலே..." என்றபடி, என் தோளில் கை வைத்தான்.

"என்னடா சொன்னாய் நாயே!" என்று கர்ஜித்தபடி அருண் பாய்ந்து வந்தார். அவரை எதிர்பார்க்காத பிரேம்நாத் அதிர்ச்சி அடைந்தான் என்றாலும் சமாளித்துக்கொண்டு அவரைத் தாக்கினான். இருவரும் கட்டிப் புரண்டனர்.

போலீசுக்குப் போன் செய்யலாம் என்று எண்ணியபோது, சற்றும் எதிர்பாராத காரியம் நடந்தது. அருணைத் தள்ளிவிட்டு தன் பாக்கெட்டில் கைவிட்டான். பிரேம்நாத் கண்மூடிக்கண் திறப்பதற்குள் அவன் கையில் ஒரு ரிவால்வர் மின்னியது.

"அருண்! என்னை நெருங்காதே! நெருங்கினால் சுட்டு விடுவேன்" என்று மிரட்டியபடி என் அருகில் வந்தான். என்னை இறுகப்பிடித்தபடி, "இவளை என்னிடம் விட்டுவிடு. நான் கொடுத்த செக்குடன் ஓடிவிடு" என்று கூறினான்.

"அதைவிட செத்து விடுவேன்" என்றபடி, பிரேம்நாத் மீது பாய்ந்தார் அருண்.

இருவருடைய கரங்களும் துப்பாக்கி மீது இருந்தன. துப்பாக்கியைப் பிடுங்க அருண் முயன்றார், அதை அவன் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள இருவருக்குமிடையே போராட்டம் நடந்து கொண்டிருந்தபோது...

நான் என்னை விடுவித்துக்கொண்டு மேஜை அருகே ஓடினேன். பூக்களோடு இருந்த அலங்கார ஜாடியை எடுத்து பிரேம்நாத் மீது வீசினேன்.

அது குறி தவறாமல் அவன் தலையைத் தாக்கியது.

அதே நேரத்தில் துப்பாக்கி வெடித்தது,

குண்டு நெஞ்சைத் துளைக்க, குருதி வெள்ளத்தில் சாய்ந்தான் பிரேம்நாத்.

துப்பாக்கி அவன் கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்தது.

நானும், அருணும் செய்வதறியாது திகைத்து நின்றோம்.

எங்கள் இருவரையும் போலீஸார் கைது செய்து வழக்குத் தொடர்ந்தனர்.

நடந்ததை நடந்தபடி நாங்கள் கூறியும், அந்த ஒப்புதல் வாக்குமூலத்தைப் போலீஸார் ஏற்கவில்லை. நாங்கள் திட்டமிட்டுக் கொலை செய்ததாக போலீசார் வழக்கை ஜோடித்தனர். பிரேம்நாத்தின் உறவினர்கள் அதற்காக ஏராளமாகப் பணம் செலவு செய்து, அதில் வெற்றியும் பெற்றனர்.

எனக்கும், பிரேம்நாத்துக்கும் நடந்த உரையாடலை டேப்ரிக்கார்டரில் பதிவு செய்ய அருண் செய்திருந்த முயற்சி துரதிர்ஷ்டவசமாகத் தோல்வி அடைந்தது. டேப்ரிக்கார்டரில் காஸட்டே இல்லை.

பிரேம்நாத் கொடுத்திருந்த பிளாங்க் 'செக்' எங்களுக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்டது. நான் பிரேம்நாத்தை மயக்கி அடிக்கடி வீட்டுக்கு வரச் சொன்னதாகவும், பிறகு அருணும், நானும் சேர்ந்து பிளாக் மெயில் செய்து பிளாங்க் செக்கைப் பெற்றதாகவும், அது சம்பந்தமாக தகராறு ஏற்பட்டு இருவரும் சேர்ந்து பிரேம்நாத்தைக் கொலை செய்ததாகவும் போலீஸார் கூறியதைக் கோர்ட், ஏற்றுக் கொண்டது.

துப்பாக்கி பிரேம்நாத்துடையது என்று நாங்கள் கூறியதை நிரூபிக்க முடியவில்லை. ஏனென்றால் அது லைசென்ஸ் இல்லாத துப்பாக்கி. பிரேம்நாத்துக்கு சுடத்தெரியாது என்று சாட்சிகள் கூறினார்கள். என் கணவர் கல்லூரியில் படிக்கும்போது என்.சி.சி.யில் இருந்ததால் துப்பாக்கி சுடத் தெரியும். லைசென்ஸ் இல்லாத துப்பாக்கி என் வீட்டில் இருந்ததாக போலீஸ் கூறியதையும் கோர்ட் ஏற்றது.

முடிவில்-

அதிகபட்சம் நாலைந்து வருடம் சிறை தண்டனை விதிக்கப்படவேண்டிய வழக்கில், எங்கள் இருவருக்கும் விதிக்கப்பட்டது-மரண தண்டனை.

கீழ்க்கோர்ட்டில் விதிக்கப்பட்ட தண்டனை ஹைகோர்ட்டிலும் பின்னர் சுப்ரீம் கோர்ட்டிலும் உறுதி செய்யப்பட்டது.

விசாரணை நடந்து கொண்டிருந்தபோதே எனக்கு ஜனனி பிறந்தாள். என் தந்தை வீட்டில் அவள் வளர்ந்து வந்தாள். சுப்ரீம் கோர்ட் நீதிபதி எழுதிய தீர்ப்பில் அக்குழந்தையின் எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு என் தண்டனையைக் குறைக்கலாம் என்று ஜனாதிபதிக்குப் பரிந்துரை செய்திருந்தார்.

சுவரில் சாய்ந்தபடி கண்மூடி சிந்தனை வயப்பட்டிருந்த நான், சிறைக்கதவு தட்டப்படும் ஓசை கேட்டு எழுந்து நின்றேன்.

வெளியே நின்றிருந்த சிறை அதிகாரி, "ரஞ்சனா! உன் கருணை மனுவை ஜனாதிபதி ஏற்றுக் கொண்டுவிட்டார். உனக்கு விதிக்கப்பட்ட தூக்கு தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்றியிருக்கிறார்" என்றார்.

அவர் சொன்ன தகவல் உண்மையில் என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தியிருக்கவேண்டும். ஆனால் எவ்வித உணர்ச்சியும் காட்டாமல், "அவருக்கு...?" என்று கேட்டேன்.

"சாரி... அவர் மனுவை ஜனாதிபதி நிராகரித்துவிட்டார்" சிறை அதிகாரி வருத்தம் தோய்ந்த குரலில் கூறினார்.

நான் ஒரு நிமிடம் யோசித்தேன்.

"ஜனாதிபதியின் உத்தரவு எப்போது, எப்படி வந்தது?"

"இப்போதுதான். பேக்ஸ் மூலம்"

"ஜனாதிபதிக்கு நான் நன்றி தெரிவிக்கவேண்டும். என் கடிதத்தை உடனடியாக 'பேக்ஸ்' மூலம் அனுப்புவீர்களா?"

"ஏற்பாடு செய்கிறோம்" என்று கூறிய அதிகாரி, என்னிடம் காகிதமும் பேனாவும் கொடுத்தார்.

நான் எழுதினேன்:

"மாண்புமிக்க ஜனாதிபதி அவர்களுக்கு வணக்கம்.

"என் தூக்கு தண்டனையை ஆயுள்தண்டனையாக மாற்றியதற்காக நன்றி கூறுகிறேன்.

ஆனால் என் கற்பைக் காப்பாற்றும் முயற்சியால் கொலைகாரராக ஆக்கப்பட்டுவிட்ட என் கணவருக்குத் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. அவர் நிரபராதி. அவருடைய கருணை மனு நிராகரிக்கப்பட்டுவிட்டதால், இன்னும் சில மணி நேரத்தில் அவர் தூக்கிலிடப்பட இருக்கிறார்.

பெண் என்பதற்காகவோ அல்லது ஒரு குழந்தையின் தாய் என்பதற்காகவோ என் தண்டனையை நீங்கள் குறைக்கலாம் என்றாலும் குற்றமற்ற என் கணவர் சாகும்போது நான் உயிரோடு இருக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை.

தயவுசெய்து என்னிடம் கருணை காட்ட வேண்டாம். தண்டனையைக் குறைக்க வேண்டாம். என் கணவரின் தூக்கு தண்டனை எப்போது நிறைவேற்றப்படுகிறதோ அதே நாளில் அதே நேரத்தில் என்னையும் தூக்கில் போட உத்தரவிடுங்கள். இதுதான் என்னுடைய இரண்டாவது கருணை மனு. கடைசி மனு."

# ஒற்றுமை வளர்த்திடுவோம்!

பாரதத் தாயின் பதமலர் போற்றிப்
பாடித் தொழுதிடுவோம் – அவள்
பாரத வீர மக்களாய் நாமும்
மாண்புடன் வாழ்ந்திடுவோம்!

சோதரர் யாரும் இந்தியத் தாயின்
செல்வப் புதல்வர்களே – 'வந்தே
மாதரம்' என்றே வாழ்த்தி வணங்குவோம்
வாருங்கள் சோதரரே!

ஆடும் குமரி அணிதிகழ் இமயம்
அன்னைத் திருத்தலமே – பொங்கி
ஓடும் நதிகள் நம்வினை தீர்க்கும்
புண்ணியத் தீர்த்தங்களே!

காடும் மலையும் கழனியும் கடலும்
கற்பகச் சோலைகளே – ஒன்று
கூடும் உழைப்பில் உருவாக் கிடுவோம்
நல்லறச் சாலைகளே!

வானை முட்டும் கோபுரத் தலங்கள்
வைகுந்த வாசல்களே – அன்புத்
தேனைச் சொட்டும் ஆன்றோர் மொழிகள்
தீர்த்திடும் பூசல்களை!

ஊனை உருக்கும் அடியார் பாடல்கள்
உயர்ந்த வேதங்களே – அவை
ஊழைத் துளைத்தே உன்னத வாழ்வுக்
குய்த்திடும் போதங்களே!

பிரிவினை என்றொரு பேதம் வளர்த்தினிப்
பேசுதல் தான்திறமா? – யாரும்
சரிநிகர் என்றநல் வேதம் மறந்தினிச்
சமரிடல் நல்லறமா?

இனமொழி மறந்தே 'இந்தியர்' என்றே
ஒற்றுமை வளர்த்திடுவோம் – ஒன்றும்
மனமொழி செயலால் பாரததேவியின்
மாண்பை உயர்த்திடுவோம்!

வரத கோவிந்தராசன்



# இனிது, இனிது!

கவிமாமணி இளையவன்

சொன்னால் என்ன?
சொல்லலாம் இன்சொல்!
சொத்தா குறையும்?
முத்தா உதிரும்?

முன்னால் இருப்பவர்
முகம் சுருங்காது!
முந்தைய நட்பின்
முனை உடையாது!

வன்சொல் நமக்கு
வரிசை தராது:
வாசற் புறத்தில்
உறவே இராது!

முன்செய் பயனால்
மூண்ட பிறவியில்
இன்சொல் தருவோம்.
இனிமையைப் பெறுவோம்!

இனியன் என்றே
இறைவனைச் சொன்னோம்.
இனியவை நாற்பதை
இலக்கியம் என்றோம்:

கனியன் சொன்ன
காசினி ஒற்றுமைக்
கனிவேண்டுமெனில்
காய் விடலாமா?

# கடல் கடந்து வளரும் ஆன்மிகம்



☆ அமெரிக்காவின் பிட்ஸ்பர்க் கோயிலின் வெளித் தோற்றம்

ராலஃப வால்டோ எமர்ஸன் (Ralph Waldo Emerson), ஹென்ரி டேவிட் தோரோ (Henry David Thoreau) போன்ற அமெரிக்கத் தத்துவ ஞானிகளின் இலககியப படைபபுகள், அமெரிக்க மககள் வேதாந்த தத்துவ ஞானத்தை அறிந்து, உணர வகை செய்தன. அந்த மக்களின், ஆர்வம் பெருகி வளர்ந்து, அதை ஊக்குவிக்கக் காரணமாக இருந்தவர், பாரதததின் சிறந்த தத்துவ ஞானிகளில் ஒருவரான இராஜாராம் மோகன்ராய். தொடாந்து 1893ஆம் ஆணடு அமெரிக்காவின் சிகாகோ நகரில் நடந்த மதங்களின் உலகப பேரவை மாநாட்டில் தமது தத்துவப்பேருரையால் அமெரிக்க மக்களின் வேதாந்த தத்துவப் புததுணர்வைத் தூணடியவா சுவாமி விவேகானநதர்.

கடந்த நூற்றுக்கு மேற்பட்ட ஆண்டு களாக. வியாபார நிமித்தமாகவும் அமெரிக்கப பல்கலைக் கழகங்களில் மேற்படிப்பைத் தொடரவும் சென்று, அங்கேயே தங்கி நல்வாழ்வு வாழத் தொடஙகிய லடசககணக்கான இந்தியர்கள் தமது கலாசாரத்தையும் பாரம்பரியத்தையும் இந்துமதப் பழக்க வழக்கங்களையும், ஆன்மிக அறிவையும் வளர்த்துப் பேணி வந்துள்ளனா.

"யாதும ஊரே யாவரும கேளிர்" என்ற மரபின்படி எந்த ஊரையும் தம் சொந்த ஊராகப் பாவிக்கும் இந்திய சமுகத்தினர், தமது ஆன்மிகக் கலாசா ரத்தை வளர்க்க, ஆங்காங்கே, பாரத பாணியில் கோயில்களைக் கட்டி, தாமும் தாம் வசித்து வரும் நாட்டுப் பிரஜைகளும் வழிபட வகைசெய்து, சிறந்த ஆன்மிகப் பணியாற்றி வருகின்றனர்.

கடந்த 1970ஆம் ஆண்டு தோன்றிய Hindu Temple Society of North America என்ற ஸ்தாபனமும், கனடா நாட்டின் Hindu Temple Society of Canada என்ற ஸதாபனமும் அந்நாடுகளில் ஆன்மிகத்தைப் பரப்ப உறுதுணையாக நிற்கின்றன.

இன்றைக்கு அமெரிக்காவில் பல நகர்ப்புறங்களில் 60க்கு மேற்பட்ட கோயில்கள் கட்டப்பட்டு மக்களது பக்தியுணர்வை வளர்த்து வருகின்றன. இவ்வாறு தோன்றிய முதலாவது கோயில், அமெரிக்காவின் திருப்பதியாகக் கருதப்படும் பிட்ஸ்பர்க் நகரில் உள்ளது. அமெரிக்காவின் கிழக்கு பிராந்தியத்தில், பென்சில் வேனியா மாநிலத்திலுள்ள அந்த நகரக் கோயிலில், அருள்மிகு விநாயகர், வேங்கடாசலபதி ஆகியோர் எழுந்தருளி அருள் பாலித்து வருகின்றனர்.

நியூயார்க் நகரின் ஃப்ளஷிங் என்ற பகுதியில் கட்டப்பட்டுள்ள கோயிலில்

ஜனார்த்தனன்

விநாயகர், லிங்கரூப மல்லிகார்ஜுனர், உமையவள், மகாலட்சுமி, வேங்கடாசலபதி, முருகன், இராகவேந்திரர் சந்நிதிகள் மற்றும் லோபா முத்ரா சமேத அகஸ்தியர், சுதர்சனர் ஆகியோரது உத்சவ விக்கிரகங்கள் நவக்கிரக சந்நிதி ஆகியவை அழகு செய்கின்றன.

தவிர கோயில் சுவர்களை கீதோப தேசம், சேஷசயனம், தட்சிணாமூர்த்தி நடராஜர் முதலிய பல சிற்பங்கள் அலங்கரிக்கின்றன.

அடிக்கடி ஸத்யநாராயண பூஜை நடத்தப்படும் இக்கோயிலுக்கு வரும் அமெரிக்கர்கள் உள்பட பக்தர்கள் அநேகர் பூஜை செய்து, கற்பூர ஆரத்தி காட்டி எலுமிச்சம் பழத்தை சக்கரங்களால நசுக்கி ஓட்டி, கார்களுக்குப் பூஜை செய்வதும் அவர்களது வழக்கம்.

இதுபோன்று சிகாகோ நகருக்கருகே, அரோரா என்ற இடத்தில் கட்டப்பட்டுள்ள அழகிய திருக்கோயிலில் திருப்பதி பெருமாளைப் போன்ற உயரமான மூர்த்தமாக பாலாஜி என்ற திருப் பெயருடன் வேங்கடாசலபதி, ஸ்ரீதேவி, ஆண்டாள், நவக்கிரகங்கள், விநாயகர், மல்லிகார்ஜுனர், பிரமராம்பிகா வள்ளி தேவசேனா சமேத சுப்ரமணியர், ஸத்யநாராயணர், ஆஞ்சனேயர் ஆகியோர் எழுந்தருளிய தனித்தனி சந்நிதிகள் உள்ளன.

மாதந்தோறும், முதல் ஞாயிற்றுக கிழமை யன்று காலையில் சாரி சாரியாக கார்களில் பலநூறு கி.மீ. தூரம் பயணம் செய்து வந்து, வேங்கடாசலபதிக்கு நூற்றுக்கணக்கான பெரிய நான்கு லிட்டர் பிளாஸ்டிக் கேன் (Can)களில் வாங்கி வந்த பாலை அபிஷேகம் செய்து பெருமாளைக் குளிரவைப்பது கண்கொள்ளாக் காட்சி.

இக்கோயிலின் கீழ்த்தளத்தில் அமைந்த பெரிய அறையில் ஒருபுறம் பக்தைகளே தயாரித்து விற்கின்ற சூடான இட்லி, வடை, (சட்னி சாம்பாருடன்) சாப்பிட்டு விட்டு சிறிய தர்மோகூல் (Thermo Cool) பெட்டிகளில் கிடைக்கும் புளியோதரை, தயிர்சாதம், லட்டு, வடை ஆகியவற்றை, திரும்பும் வழியில் சாப்பிட வாங்கிக் கொண்டு செல்லாதவர்கள் மிகக்குறைவு. இந்த அறையில் மற்றொரு பகுதியில் ஆன்மிகச சொற்பொழிவுகள், தியான சுலோகங்கள், மந்திரங்கள், கர்நாடக இசை ஆகியவற்றின் காஸெட்களும், புத்தகங் களும் விற்கப்படுகின்றன. தவிர வார இறுதி தோறும் விடுமுறை நாள்களில் பள்ளிப்படிப்பு முடிந்து காலேஜ் சேர்வதற்கான 'SAT' என்ற நுழைவுத் தேர்வுக்கென பயிற்சி வகுப்புகளை, இக்கோயிலின் கீழ்த்தளத்து அரங்கில் பல வலலுனர்கள தன்னிச்சையாக (Voluntarily) நடத்தி வருகின்றனர்.

அமெரிக்காவின் தென்கிழக்கே ஜார்ஜியா மாநிலத்தின் தலைநகர் அட்லான்டா (Atlanta) நகரின் தென் பகுதியில் மேடான இடத்தில், சோழர்கால பாணியில் கட்டப்பட்டுள்ள வெண்மை நிற நாற்பது அடி உயர ராஜகோபுரமும் நான்கு விமானங்களும் அழகு செய்யும் கோயில் கருவறையில் பாலாஜி என்ற பெயருடன் அருள்மிகு வேங்கடாசலபதி நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். கருவறைக்கு வெளியே மகா மண்டபத்தில் விநாயகர், துர்க்கை, பளிச்சிடும் அகல ஜரிகையுடன் பல பட்டுப புடைவைகள் அணிந்து பலவித சுவர்ண ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டு பதமாஸனததில வீற்றிருக்கும் மகாலட்சுமி, சூடிக்கொடுத்த சுடர்க்கொடி ஆண்டாள, சத்யநாராயணர், கருடாழ்வார் ஆகியோர் தனித்தனி சந்நிதிகளில் அமர்ந்து அருள்புரிகின்றனர். மகாமண்டபச்



☆ சிவா விஷ்ணு கோயில் - கலிபோர்னியா






ஸ்ரீ துர்க்கை

மாதசிவராத்திரியன்று ருத்திராபிஷேகம், மற்றும் பூவங்கிசேவை, ஸ்ரீசக்கர பூஜை, சண்டிஹோமம் முதலிய பல வைபவ களைக் கண்டு களிக்க பலமைல்களுக்கப் பாலிருந்து பக்தர்கள வருவதுண்டு. இந்நகருக்கருகே வாழும் இந்திய சமூகத்தினர் நடத்தும், உபநயனம், திருமணம், சீமந்தம் முதலிய சடங்கு களுக்கும், ஹிரண்ய சிரார்த்தம் முதலிய கிரியைகளுக்கும் கோயில் குருக்கள் சென்று உதவுகின்றனர்.

அமெரிக்க கலாசாரத்தின் நடுவே அமெரிக்கப் பிரஜையாக வளரும் இந்தியக் குழந்தைகள் பாரத ஆன்மிக ஞானத்தைத்




மீனாட்சி சந்நிதி

சுவாகனில் ஆதிவராஹர், நரஸிம்மர், தட்சிணாமூர்த்தி, மீனாட்சி, காமாட்சி, சரஸ்வதி, இராஜராஜேஸ்வரி ஆகியோரின் மூர்த்தங்கள் செதுக்கப்பட்டுள்ளன. வேங்கடாசலபதிக்கருகில் சுதர்சனர் பஞ்சலோக விக்கிரகமாகவும், விநாயகருக் கருகில் சிறிய சிவலிங்கமாக ஈசனும் வீற்றிருக்க, மண்டபத்தின் தென்கிழக்குப் பகுதியில் நவக்கிரக சந்நிதியும் அமைந்துள்ளது. வெளியே அலங்கார மண்டபத்தில் ஆஞ்சநேயரின் சந்நிதி உள்ளது. கோயிலின் வெளியே ஓங்கி வளர்ந்த மரத்தடியில் நாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

இக்கோயிலில் நடத்தப்படும் கணபதி ஹோமம், ஸ்ரீனிவாச கல்யாணம்,





☆ அட்லாண்டா பாலாஜி கோயில்

☆ அட்லாண்டா கோயில் – ஸ்ரீதேவிக்கு அலங்காரம்





☆ நியூயார்க் கோயிலில்
லோபாமுத்ரா சமேத அகஸ்தியர்



☆ பெருமாள்–பத்மாவதி உற்சவ விக்கிரகங்கள்



☆ சிட்னி அருகில் ஹெலன்ஸ்பர்க் கோயிலில் கணபதி சந்நிதி

☆ சிட்னி கோயிலில் ஒரு சந்நிதி

தெரிந்துகொண்டு வளர்க்க, ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமைகளிலும் சுத்தாங்க வகுப்புகளும் பெரியவர்களுக்கென, கீதை வகுப்புகளும் இக்கோயிலில் நடத்தப் படுவதுண்டு.

அமெரிக்காவிலுள்ள "சின்மயா மிஷன்" 'ஸ்லோகதான்' (Slokathon) என்ற பிரசுரத்தில் சங்கடநாசன கணபதி ஸ்துதி, குருஸ்துதி, கணேச பஞ்சரத்னம், சிவமானஸ பூஜா, சாதனா பஞ்சகம், சாங்கேய யோகம், க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம் முதலிய பல நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்த சுலோகங்கள், சம்ஸ்கிருதலிபி, ஆங்கிலத்தில் உச்சரிப்பு முறை, ஆங்கிலத்தில் அதன் அர்த்தம் ஆகியவற்றைப் படித்தறியலாம். பிரதிவார இறுதியில் நடத்தப்படும் பாலவிஹார் வகுப்புகளில் சிறுவர் சிறுமிகளுக்கு இவை கற்றுத்தரப்படுகின்றன.

இவை தவிர அட்லான்டாவில் வாழும் தமிழர் ஒருவர் தம்வீட்டுப் பூஜை அறையை காஞ்சி பரமசாரியாளின் வண்ணப் படங்களால் அலங்கரித்து நடுவில் ஒரு சிறு மரத்தினாலான மண்டபத்தில் பரமா

☆ சிட்னி கோயிலின் பின்புறத் தோற்றம்

☆ சிட்னி கோயிலின் வெளிப்புறத் தோற்றம்





☆ டொராண்டோ கோயில் — நடராஜர் சந்நிதி

☆ டொராண்டோ கோயில் வளாக மகாமண்டபம்



டொராண்டோ கோயில் உற்சவ விக்கிரகங்கள்

☆ டொராண்டோ — ஆதி சங்கரர்





☆ ஸத்ய நாராயணா பூஜை — நியூயார்க்

சாரியான் பாதுகையை வைத்து நித்ய பூஜை செய்து வருகிறார். அவரும் அவரது நண்பர்களும் மாதம் தோறும் பரமா சாரியான் ஜயந்தி நடத்தி வருகின்றனர். அவர்களது பஜனைப் பாடல்கள் "பஜனாவளி" என்ற காஸெட்டாக வெளியிடப்பட்டுள்ளன.

அமெரிக்காவின் தெற்கு பிராந்தியத்தில் டெக்ஸாஸ் மாநிலத்தின் ஹூஸ்டன் நகரருகில் Pearl Land என்ற பகுதியில் அமெரிக்காவின் முதலாவது சக்தி பீடமாக விளங்கும் அருள்மிகு மீனாட்சியம்மன் கோயில் அமைந்துள்ளது. அழகாக அமைந்த இக்கோயிலில் அன்னை மீனாட்சி தவிர ஸுந்தரேசவரர், வேங்கடாசலபதி, பத்மாவதி, ஐயப்பன், இராதாகிருஷ்ணா ஆகியோரது சந்நிதிகள் அமைந்துள்ளன. இக்கோயிலிலும் கணபதி ஹோமம், துர்க்கா ஹோமம், மஹாசுதர்சன ஹோமம், ஸ்ரீஸூக்த புருஷஸூக்த ஹோமங்கள், சிவ அஷ்டோத்ர ஹோமம் முதலிய பல ஹோமங்கள் நடப்பதுண்டு. தவிர கோகுலாஷ்டமி, மீனாட்சி கல்யாணம் முதலிய உத்சவங் களும் கொண்டாடப்படுகின்றன. தீபாவளி திருநாள் கொண்டாட்டத்தில் பட்டாசு வாண வேடிக்கைகளும் பாரதவாசி களுக்காக நடத்தப்படுகின்றன. தவிர ரிக், யஜுர், ஸாம உபாகர்மா ஆகிய வைதிகச சடங்குகளும் இங்கு நடத்தப்படுவதுண்டு.

அமெரிக்காவின் தென் மேற்கு பிராந் தியத்தின் கலிபோர்னியா மாநிலத்தில் சான்பிரான்சிஸ்கோ நகருக்கருகில லிவர்மோர் (Liver More) என்ற பகுதியில் கட்டப்பட்டுள்ள சிவா விஷ்ணு கோயில் மிக அழகானது.

இவை போன்று அமெரிக்காவின் தலைநகர் வாஷிங்டன் டி.ஸி. (Wash-ington D.C) லாஸ் ஏஞ்சலஸ், டெட்ராய்ட், டேடன் (Dayton) ஆகிய பல ஊர்களில் இந்துக் கோயில்கள் கட்டப்பட் டுள்ளன. தொடர்ந்து அந்நாட்டுப் புறநகர்ப் பகுதிகளில் இன்னும் கோயில்கள் கட்டப்பட்டு வருகின்றன.



☆ நியூயார்க் கோயிலில் பக்தர்கள் கூட்டம்



☆ நியூயார்க் கோயில்



☆ நியூயார்க் கோயிலில் சீதா லட்சுமண ஆஞ்சநேயர் சமேத ஸ்ரீராமர்

அமெரிக்காவின் அண்டையிலுள்ள கானடா நாட்டின் ஒன்டாரியோ மாநிலத்தின் டொரான்டோ நகரின் ரிச்மண்ட் ஹில் (Richmond Hill) என்ற பகுதியில் அமைந்துள்ள ஒரு மிகப் பெரிய கோயிலில் அழகிய இரண்டு ராஜகோபுரங் களைத்

தாண்டிச் சென்றால் உள்ளே மிகப்பெரிய மண்டபத்தில் கணபதி, முருகன், சிவன், பார்வதி, நடராஜர், துர்க்கை, வள்ளி தெய்வசேனா, பைரவர், பாலாஜி என்ற பெயரில் வேங்கடாசலபதி, மகாலட்சுமி, ஆண்டாள், சீதா லட்சுமண ஆஞ்சனேயர் சமேத ஸ்ரீஇராமர் ஆகியோரின் தனித்தனி சந்நிதிகள் அமைந்துள்ளன.



☆ சிகாகோ–பாலாஜி கோயில்

இக்கோயிலைத் தவிர அப்பிராந்தியத்தில் வடக்கத்திய பாணியில் கட்டப்பட்டுள்ள இந்துக் கோயிலில் சலவைக்கல் மூர்த்தங்களாக கணபதி, சிவன், வேணுகோபாலன், துர்க்கை, ஆகியோர் அமர்ந்தருளும் சந்நிதிகள் உள்ளன.

இந்த டொரான்டோ நகரில் அண்மையில் தோன்றிய ஆதி சங்கரர் டிரஸ்ட் தற்காலிகமாக அமைத்த சிவன் கோயிலுக்கென காஞ்சிபுரத்து ஸ்தபதி ஒருவரால் பஞ்ச லோகத்தில் வடிக்கப்பட்ட 100 கிலோ எடையுள்ள ஆதி சங்கரரின் விக்கிரகம் சமீபத்தில் டொரான்டோ நகரைச் சென்றடைந்துள்ளது.

அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் உள்ள 'பெரிய தீவு' ஆஸ்திரேலியா கண்டமாகும். தென்னிந்தியாவிலிருந்து மிகப்பழைமையான காஸாயிட் (Caucasoid) என்ற மாரபினர் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் சென்று இத்தீவில் குடியேறியதாகக் கூறப்படுகிறது. அத்தகைய புராதனமான தீவின் கிழக்குக் கடற்கரையோரமாக உள்ள ஸிட்னி நகர் அருகே ஹெலன்ஸ்பர்க் என்ற இடத்தில் கட்டப்பட்டுள்ள கோயிலில் விநாயகர், வேங்கடாசலபதி, மகாலட்சுமி, ஆண்டாள், வேணுகோபாலசுவாமி ஆகியோரின் சந்நிதிகள் அமைக்கப்பட்டுள்ளன.

இது போன்று லண்டன் புறநகர் பகுதியிலும் இந்துக் கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது. துபாய், குவைத், ஸௌதி அரேபியா போன்ற மத்திய கிழக்கு இஸ்லாமிய நாடுகளில் வாழும் இந்திய சமூகத்தினர், அங்கு நிலவும் தீவிர மதவாத நம்பிக்கை காரணமாக, வெளிப்படையாக கோயில் எதுவும் கட்ட இயலவில்லை. இருந்தும், தமது வீடுகளில் பூஜை, பஜனை, மற்றும் பிற உத்சவங்களைக் கொண்டாடி அவர்கள் ஆன்மிகத்தை எளிய முறையில் பேணிப் பாதுகாத்து வருகின்றனர்.

இவ்வாறு கடல் கடந்த நாடுகளில் கட்டப்பட்டுள்ள கோயில்கள் அனைத்திலும் அமைந்த சந்நிதிகள் 'ஏர்கண்டிஷன்' வசதியுடன் உள்ளன. இங்கு தென்னகத்து வேத விற்பன்னர்கள் கோயில் மற்றும் ஆன்மிகப் பணி புரிகின்றனர். பஞ்சகச்சம் கட்டிய குருக்கள் சட்டையணிந்து (வெப்ப நிலை காரணமாக) கார்களை தாமே ஓட்டிவந்து இக் கோயிலில் பணியாற்றி வருகின்றனர். அவர்களுக்கென குடியிருப்பு வசதிகளை அந்தந்தக் கோயில் நிர்வாகங்களே ஏற்படுத்தி உதவுகின்றன.

இவ்வாறு ஆன்மிகத்தை வளர்த்து வரும் பல நாடுகளில் குடியேறிய பாரத மக்கள் மற்றும் இலங்கை, ஃபிஜி, ஆப்பிரிக்கா முதலிய நாடுகளிலிருந்து வந்து குடியேறிய தமிழர்கள் தவிர இதர பாரதவாசிகளுக்கும் வளர்ந்துவரும் ஆன்மிகத்தில் உள்ள ஈடுபாடும், ஒத்துழைப்பும் போற்றத்தக்கவை

★ ★ ★

# என் ராஜகுமாரி...



வள்ளுவன் வடித்த
காமத்துப் பால்
நிரம்பிய
தங்கக்குடம்!

நீலவான
நட்சத்திர உலகத்தில்
அவள்....
பௌர்ணமி நிலவு...!

எனது
ராஜ மாளிகையில்
மாபெரும்
சுயம்வரத்தில்
எனக்குக் காதல் மாலையிட்ட
ராஜகுமாரி..!

மாலை வேளையில்
என் கை கோத்து
நந்தவனத்தில்
நடந்து
தென்றலை
எனக்கு அறிமுகப்படுத்தியவள்...!

உலர்ந்து விடும்
உதடுகட்கு
அவ்வப்போது
ஈர ஒத்தடம் கொடுத்த
ஈழத்து எழில் மகள்

முன்னிரவு வேளையில்
தாமரைக் குளக்கரையில்
தன் மடிமீது
என்னைக் கிடத்தி
நிலவைக் காட்டி
நட்சத்திரங்களை
கையில் பிடித்துக் கொடுத்து
மேகக் கூட்டத்தை
விளையாட்டுக்கு
அழைத்து....
எனக்கு
தங்கக் கிண்ணத்தில் - காமப்
பால் சோறு ஊட்டியவள்....!!

பின்னிரவு வேளையில்
என் வாலிபத்தை
வம்புக்கிழுத்த
அவள்...
உணர்வுகள்...
ஆசைகள்...

இரவு தனது
முடிவுரையை
எழுதும் முன்பு
இளமையின்
ரகசியங்களை
எனக்கு
அம்பலப்படுத்திய
அன்னப்பறவை!
ஆம்... அவள்
என் ராஜகுமாரி..!!

கவிஞர் ராணிதாசன்

அமுதசுரபி - தீபாவளி மலர் - 1999

# சிரிக்காதே!

னலிலே பூத்திருக்கும் தாமரைப்பூ
ந்திக்கும் போதெல்லாம் மெலச்சிரிக்கும்
ன்னுயிர்தான் அச்சிரிப்பால் துடித்தே வீழும்
இதயமது எனைமறந்து தவித்து நிற்கும்

தெருவில்நான் போகையிலே வாசல் பக்கம்
திடுமெனவே பார்த்து நிலா சிரித்து நோக்கும்
உருவினையே இழந்திடுவேன் வெலவெலத்தே
உயிரதுவும் ஓடிடவே எத்த னிக்கும்

விரிந்திட்ட தோட்டத்து அழகு ரோஜா
வீதிவரும் எனைக்கண்டே முறுவல் கூட்டி
சிரித்திடுமே சிந்தையெலாம் தேளாய்க் கொட்டும்
சிலிர்த்திடுமே என் மனமும் தீயாய்ப் பற்றும்

கோவையிதழ் தேன்ததும்பி சிந்துமாப் போல்
குளிர்முத்துப் பல்வரிசை காட்டி மெல்ல
பூவையவள் சிரிப்பாலே என்றன் உயிரும்
போவதுபோல் துடிக்கிறதே ஐயோ துன்பம்

உரித்திட்ட மாதுளையாய்ச் சிரிக்கா தேநீ
ஒடிந்திட்ட பாளையெனச் சிரிக்கா தேநீ
சிரிக்காதே நானிங்கு வாழ வேண்டும்
சிரித்தென்னைக் கொல்லாதே செந்தேன் பூவே!

கோ.மா. கோதண்டம்



# கார்கிலில் ஒரு ரோஜா தருதுகிறது...

"ஹலோ! அம்மா! அம்மா!... நான் – சுப்பு – பேசறேன்... கார்கில் செக்டாரி லிருந்து பேசறேன்..." என்ற குரல் கேட்டதும், மீனாட்சியின் உடலெங்கும் மகிழ்ச்சி துடித்துப் பிரவாகமெடுத்துக் குரல் வழியாகப் பாய்ந்தது:

"சுப்பு!... சுப்பு!... நல்லாயிருக்கியா?... எந்த ஆபத்தும் இல்லையே?..." என்ற தாயின் குரலில் படபடப்பும் அலைபாய்ந்தது.

"என்னம்மா, போர்க்களத்திலே ஆபத்தில்லாமல் இருக்குமா?... நான் இன்னிக்கு வரை – இப்போ வரை நல்லாயிருக்கேன்மா!... நாளைக் காலையிலே பீரங்கித் தாக்குதல் நடத்த 'ஆர்டர்ஸ்' வரலாம்... இன்னிக்கு எங்க பட்டாலியனுக்கு போன் பேச அனுமதி கொடுத்திருக்காங்க... எப்படியும் இந்தப் போரிலே வெற்றி எங்களுக்குத் தான்... வலுவான பீரங்கியும் குண்டும் எங்க கையிலே இருப்பது மட்டுமில்லை – இன்னும் வலுவான தர்மமும் நியாயமும் எங்க இதயத்திலே இருக்கு... தர்மமும் நியாயமும் தோற்றதாக எந்தச் சரித்திரத்திலும் இல்லைம்மா!... அப்பா நல்லாயிருக் காங்கள்ா?... தம்பி எப்போ அமெரிக்கா போறான்?... தங்கச்சி காலேஜுக்கு ஒழுங்காய்ப் போய்க்கிட்டிருக்காளா?" என்று கேள்விகளைப் படபட என்று அடுக்கிக் கொண்டிருந்தான் மகன்.

"எல்லாரும் நல்லாயிருக்காங்க, சுப்பு!... உன்னைப்பத்தித் தான் இப்போ எல்லாருக்கும் கவலை...." என்ற தாயின் குரல் தழுதழுத்தது.

"ஏம்மா கவலைப்படறீங்க?... தாய் நாட்டைக் காப்பாத்த ஒரு மகனைப் போர்க்களத்துக்கு அனுப்பியிருக் கோம்னு பெருமைப்படுங்க, அம்மா!.. தம்பிக்கு நல்ல நல்ல சம்பந்தம் எல்லாம் வந்ததே? அவனுக்குச் சீக்கிரமாய்க் கல்யாணம் பண்ணிடணும்மா!... கல்யாணம் பண்ணிக்கிட்டுத் தான் அவன் அமெரிக்காவுக்குப் போகணும்..." என்று வற்புறுத்திச் சொன்னான் சுப்பிரமணியன்.

"அதெப்படிடா? மூத்தவன் நீ இருக்கிறப்போ, தம்பிக்கு முதல்லே கல்யாணம் பண்ண முடியுமா?"

"எனக்குத்தான் ஏற்கெனவே கல்யாணம் நடந்திருச்சேம்மா?... நான் எத்தனை தடவை உங்ககிட்டே சொல்லியிருக்கேன்? எங்க மனசுக் குள்ளே கல்யாணம் நடந்திருச்சு... அம்மா! நீ பெரிய புராணத்திலே படிச்சிருப்பியே. பூசலார் நாயனார்னு ஒருத்தர், மனசுக்குள்ளே கோயில் கட்டினார்னு. அந்தக் கோயிலையும் கடவுள் அங்கீகாரம் செய்தார், இல்லையா?... அது மாதிரி நீங்க எங்க மனசுக்குள்ளே நடந்த கல்யாணத்தை அங்கீகாரம் செய்துட்டா, சிகப்பி உங்க மருமகள் ஆவாள்: இல்லைன்னா, இவ என் மனைவி மட்டும் தான்!" என்று அழுத்தமாகச் சொன்னபோது, மீனாட்சியால் அதை எதிர்த்துப் பேச மனம் வரவில்லை.

"மன்னர் நரசிம்மவர்மன் நிஜமாகக் கட்டிய கோயிலை விட்டுட்டு, பூசலார் மனசுக்குள்ளே கட்டிய கற்பனைக் கோயிலைத்தான் சிவபெருமான், முதலிலே அங்கீகரித்தார். அது மாதிரி எங்க கல்யாணத்தை நீங்க அங்கீ கரித்தால் சரி, இல்லைன்னா, நாங்க மனசுக்குள்ளேயே கற்பனையாய்க் குடும்பம் நடத்தி வாழ்ந்திட்டுப் போறோம்... அம்மா! என்னைப்பத்தி கவலைப்படாதேம்மா!... நான் சந்தோஷமாய்த்தான் இருக்கேன்... தம்பிக்கு சீக்கிரம் பொண்ணு பார்த்து வை. கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நடத்த நான் லீவு எடுத்துக்கிட்டு வந்துடறேன்... என்ன சரியா?... அப்புறம் தங்கச்சிக்கும் ஓர் எஞ்சினீயர் மாப்பிள்ளை அல்லது டாக்டர் மாப்பிள்ளை பார்க்கணும்..." என்று மகிழ்ச்சி துள்ளும் குரலில் பேசிக் கொண்டேயிருந்தான் சுப்பிரமணியன்.

அவனுடைய உற்சாகம், தன் நெஞ்சிலே முள்ளாய்க் குத்திக் கிளற, நொடித்துப் போய் நின்றாள் மீனாட்சி.

"ஹலோ!... அம்மா!... நேரமாச்சு... க்யூவிலே நிறைய ஜவான்கள் நின்னுக்கிட்டிருக்காங்க... ஒவ்வொருத் தரும், தாயோடே, தந்தையோடே, அண்ணன், தம்பியோடே, மனைவி மக்களோடே பேசுறதுக்கு ஆர்வமாய்த் துடிச்சுக்கிட்டிருக்காங்க... நான் மறுபடி இன்னொரு நாள் பேசறேன்... நான் வர்றேன்மா!... குட் பை..." என்று மெல்ல போனை வைத்துவிட்டு வெளியே வந்தான் சுப்பிரமணியன்...

தொலைபேசியின் வழியாகப் பேச் சலைகள் ஓய்ந்த பிறகு, மீனாட்சியின் நெஞ்சில் துயர அலைகள் பொங்கிக் குமுறின....

அவளுடைய மூத்த மகன், போர்க்களத்தில் மட்டுமா?... வாழ்க்கை யிலும் எவ்வளவு எதிர்ப்புகளைச் சமாளித்துக் கொண்டிருக்கிறான்?...

ஏறத்தாழ ஆறாண்டுகளுக்கு முன்பு – சாதாரணத் தொழிலாளியாக இருந்த சோமசுந்தரத்தின் குடும்பம், திரைப்படக் கதைகளின் அதிசயம் போல், கிடுகிடு என்று வளர்ந்து முன்னேறி உயர்ந்திருந்தது.

அவர் 'மெக்கானிக்'காக வேலை செய்து கொண்டிருந்த ஒர்க்ஷாப்பின்

அய்க்கண்

முதலாளியின் மகன், துபாய் சென்று சம்பாதித்த பணத்தை வைத்து, சென்னையில் புதிய தொழிற்சாலை ஒன்றை நிறுவத் திட்டமிட்டார். அதனால், திருச்சியிலிருந்த ஒர்க் ஷாப்பை, நேர்மையும் உழைப்பும் நிறைந்த சோமுவுக்கே குறைந்த விலைக்கு, அதுவும் மூன்று தவணைகளில் கொடுக்கும்படியாக – விற்றுவிட்டுச் சென்றார் முதலாளி.

சோமுவின் கடுமையான உழைப்பால், ஒர்க் ஷாப்பின் வருமானம் விறுவிறு என்று உயர்ந்து, அவரை லட்சாதிபதியாக்கிவிட்டது.

அவர் குடும்பத்தில் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டது எப்படி ஓர் அதிசயமோ, அதே போல அவருடைய குடும்பத்தாரின் நடையுடை பாவனைகளிலும் அதிசயமான வேறுபாடு ஏற்பட்டது.

சோமுவும் அவருடைய மகன் குமாரும், மகள் அஞ்சலியும், 'வாயிலே வெள்ளி ஸ்பூனோடு பிறந்த' பரம்பரைப் பணக்காரர்கள் போல வாழத் தொடங்கியிருந்தார்கள்.

குமார், 'எஞ்சினீயரிங் கல்லூரிக்கு மோட்டார் சைக்கிளில்தான் போவேன்' என்று பிடிவாதம் பிடித்து, விலையுயர்ந்த ஒரு மோட்டார் சைக்கிளை வாங்கி, உலா வந்து கொண்டிருந்தான்.

அஞ்சலி ' நம்ம ஸ்டேட்டஸ்க்கு பஸ்ஸிலே போக முடியாது, டாடி!... எனக்கு ஒரு மாருதி வாங்கிக் கொடுத்துடுங்க...' என்று கேட்டு, ஒரு கார் வாங்கி, 'ஸெல்ஃப் டிரைவிங்'கும் பழகி, பட்டத்து இளவரசியாய், கல்லூரிக்குப் போய்க் கொண்டிருந்தாள்.

அவர்கள் வீட்டு நாய் கூட, இதுவரை 'லொள்... லொள்...' என்று ஓங்கிக் குரைப்பதை விட்டுவிட்டு, 'லொல்.... லொல்...' என்று நாகரிகமாக முனக முனைந்துவிட்டது!

அந்தக் குடும்பத்தில் புதிய மாற்றம் எதுவும் இராமல், பழைய நிலையிலேயே இருந்தவன் சுப்பிரமணியன் மட்டும் தான்!...

இதுவரையிலும் இவன் ஏழையாக இருந்தபோது மேற்கொண்டிருந்த பழக்கங்கள் எதையும் விட்டுவிடவில்லை. அந்தப் பழக்கங்களின் பட்டியலில் ஒன்று தான் சிகப்பியிடம் கொண்டிருந்த நட்பும்....

இளமையிலிருந்தே சுப்புவுக்கு, மலர்கள் என்றால், அதுவும் ரோஜா என்றால், மிகவும் பிடிக்கும். அதன் அழகையும் மெல்லிய மணத்தையும் ரசித்தபடியே நிற்பான். அதனால், அவனுக்கும் பூக்காரி வேலாயியின் ஒரே மகள் சிகப்பிக்கும் நட்பு ஏற்பட்டதில் வியப்பில்லை.

காலையில் பள்ளிக்கூடத்துக்குப் புறப்படும் சுப்பு, வழியிலுள்ள வேலாயியின் குடிசைக்குவந்து சிகப்பியை அழைத்துக்கொண்டுதான் பள்ளிக்குப் போவான். மாலையிலும் அப்படித்தான். அவளைக் கூட்டிவந்து குடிசையில் விட்டுவிட்டு, வேலாயி தொடுத்துக் கொண்டிருக்கும் மலர்க்குவியலிலிருந்து ஒன்றிரண்டு ரோஜா மலர்களை மட்டும் எடுத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்புவான்.

காலப்போக்கில் இந்த நட்பு, காதலாகப் பரிணமித்தது ஊரில் யாருக்கும் தெரியாது.

காதல் என்ற பெயரில், இணைந்து ஊர் சுற்றுவதோ, தனி இடத்தில் சந்தித்துப் பேசிக்கொண்டிருப்பதோ செய்யாத காதலர்கள் அவர்கள்!....

பள்ளிக்கூடத்து நட்புத்தான் என்று சாதாரணமாக நினைத்துக் கொண்டிருந்த சோமுவுக்கும் மீனாட்சிக்கும் திடுக்கிடும் அதிர்ச்சியாக, தன் காதல் விஷயத்தை ஒரு நாள் வெளியிட்டான் சுப்பிரமணியன்....

கல்லூரியில் என்.சி.சியில் சேர்ந்து 'பி' சர்டிபிகேட் வாங்கிய உற்சாகத்தில் இராணுவத்திலும் சேர்ந்துவிட்டான் அவன்.

அவன் வடநாட்டில் இருந்தபோது, சிகப்பியின் தாய் வேலாயி, திடீரென்று மஞ்சள் காமாலையில் இறந்து போய்விட்டாள். அநாதையாகிப் போன சிகப்பி, பக்கத்துக் குடிசையிலிருந்த ஒரு கிழவியின் ஆதரவில் இருந்து வந்தாள். தாய் விட்டு விட்டுப் போன பூ வியாபாரமே அவளுக்கும் தொழிலாகியது.

அந்த ஆண்டு இராணுவத்திலிருந்து விடுமுறைக்கு சுப்பிரமணியன் ஊருக்கு வந்திருந்தபோது திருமணப் பேச்சை எடுத்தாள் மீனாட்சி.

"அம்மா! எனக்கு நீ எந்தப் பெண்ணையும் பார்க்கவேண்டாம். நான் சிகப்பியைத்தான் கட்டிக்குவேன்..." என்று அவன் அழுத்தமாகச் சொன்னதும் குடும்பமே அதிர்ந்து போய்விட்டது.

"என்னடா சொல்றே? அந்த அநாதைப் பூக்காரியையா கட்டிக்குவேன் என்கிறே?... நம்ம ஸ்டேட்டஸ்க்கு, ஒரு பூக்காரியை இந்த வீட்டு மருமகளாகக் கொண்டு வரலாமா?" என்று குதித்தார் சோமசுந்தரம்.

"நமக்கு இந்த ஸ்டேட்டஸ் வர்றதுக்கு முன்னாலேயே எங்க காதல் ஏற்பட்டுடுச்சு, அப்பா!"

"அதுக்காக, அந்தப் பழைய கால வாழ்க்கைக்கே திரும்பணும்கிறியா?... இந்த பங்களாவுக்கு ஓர் ஏழைப் பூக்காரி மருமகளாக வர நான் சம்மதிக்க மாட்டேன்டா!"

"இந்தப் பங்களா புதுசு என்கிறதுக்காக. நம்ம குடும்பத்திலே உள்ள பழசையெல்லாம் விட்டுட முடியுமா?... இதைவிட புதுசா ஒரு மாளிகை கட்டினாலும், உங்க மனைவி, எங்க தாய்தானே அப்பா?... பொருளாதாரம் உயர்ந்திட்டா, வசதிகள் மாறலாம்; உறவுகள் மாறாது."

"நோ... இந்த உதவாக்கரைப் பேச்செல்லாம் எனக்குப் பிடிக்காது. அந்தப் பூக்காரி எனக்கு மருமகளாக முடியாது. இது என் தீர்மானமான முடிவு" என்று கர்ஜித்தார் சோமு.

"ஓகே. அது உங்க முடிவுன்னா என் முடிவையும் சொல்லிடறேன். அந்தப்



பூக்காரிதான் எனக்கு மனைவி" என்று பிரகடனம் செய்தான் சுப்பிரமணியன்.

தந்தையையும் மகனையும் சமாதானப்படுத்த முடியாமல், இருதலைக் கொள்ளி எறும்பாய்த் தவித்தாள் மீனாட்சி....

அன்று முதல், சுப்புவுக்கும் குடும்பத்துக்கும் இடையே 'பனிப்போர்' தொடங்கிவிட்டது...

குடும்பத்தில் பெருக்கெடுத்த 'நாகரிக' வெள்ளத்தில் பழைய காலச் சுவடுகள் அடித்துச் செல்லப்பட்டன...

வீட்டு முற்றத்தில் சுப்பு ஆசையாக வைத்து வளர்த்து வந்த ஒன்றிரண்டு ரோஜாச் செடிகளும் மல்லிகைச் செடிகளும், குடியுரிமை இழந்து வெளியேறிவிட்டன. அந்த இடத்தில் கண்ணுக்குக் குளிர்ச்சியான குரோட்டன்ஸ் செடிகள் குடியேறி, கம்பீரமாகத் தலையை அசைத்து ஆட்டம் போட்டுக் கொண்டிருந்தன.

மூத்த மகனுடைய பிடிவாதத்தால் ஏற்படப்போகும் தலைக்குனிவை ஈடுசெய்யும் வகையில், என்ஜினியரிங் முடித்த இரண்டாவது மகனுக்கு லட்சாதிபதி வீட்டுப் பெண்களில் ஒருத்தியைத் திருமணம் செய்து வைக்கத் திட்டமிட்டு, தரகர்களை விரட்டிக்கொண்டிருந்தார் சோமு.

இந்த நிலையில், திடீரென்று வெடித்த கார்கில் போர், திருமணப் பேச்சுகளை ஒத்திப்போட வைத்தது...

சுப்பு போனில் பேசிய இரண்டாம் நாள்—அவனது இராணுவ அலுவலகத்திலிருந்து வந்த தகவல், குடும்பத்தாரை மட்டுமன்றி, ஊர் மக்களையும் திடுக்கிட வைத்தது.

கார்கில் மலைக்குன்று ஒன்றில் ஊடுருவி முகாம் அமைத்திருந்த எதிரிகளை நோக்கி, பீரங்கிக் குண்டுகளை வெடித்துத் தாக்கிய பிறகு, அந்த முகாமைக் கைப்பற்ற நெருங்கியிருக்கிறது சுப்பிரமணியனின் படை.

அந்த நேரடிப் போரில் வெற்றி இந்தியாவுக்குக் கிடைத்தாலும், சுப்பிரமணியன் காணாமல் போய் விட்டான்.

அவன் காயமடைந்து களத்திலே இறந்து உருண்டு மறைந்துவிட்டானா, அல்லது எதிரிகளிடம் பிடிபட்டிருக்கிறானா என்று தெரியவில்லை.

தகவல் ஊருக்குள் பரவியதும், அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்கள் சோமுவின் வீட்டுக்கு வந்து பரிவுடன் விசாரித்தார்கள்.

"உங்க மகனுடைய வீரச்செயல் பற்றிப் பத்திரிகையில் படிச்சேன் ஸார்! யூ ஆர் ரியலி ஃபார்ச்சுனேட்.... நம்ம நாட்டைக் காப்பாத்துறதுக்காகப் போராடுகிற ஒரு நல்ல ஜவானை மகனாகப் பெற்றதற்காக நீங்க பெருமைப்படலாம் ஸார்!" என்று

ஒவ்வொருவரும் சோமுவிடம் புகழ்ந்து பேசப் பேச அவருடைய இதயத்தின் பாறை மெல்ல மெல்லக் கரைந்து இளகத் தொடங்கியது...

தன் மகன் உயிருடன் திரும்ப வேண்டும் என்று பிரார்த்தனை செய்ய, பக்கத்துத் தெருவிலுள்ள முருகன் கோயிலுக்குப் புறப்பட்டாள் மீனாட்சி.

கண்களில் நீரும், கையில் அர்ச்சனைக் கூடையுமாகக் கோயிலுக்குள் நுழைந்தாள் அவள்.

முன் மண்டபத்தில் குருக்களிடம் அர்ச்சனைத் தட்டை நீட்டிக்கொண்டு நின்றாள் அந்தப் பெண்.

"யார் பேருக்கு அர்ச்சனை?" என்று கேட்டபடியே குருக்கள் அர்ச்சனைத் தட்டை வாங்கிக் கொண்டார்.

அந்தப் பெண்ணின் பார்வையில் படாமல், ஒரு தூணின் மறைவில் வந்து நின்று கொண்டாள் மீனாட்சி.

"சுவாமி பேருக்குத்தான் சாமி!" என்று குரல் தழுதழுக்கச் சொன்னாள் அந்தப் பெண்.

குருக்கள் திரும்பும்போது சட்டென்று அவள் "கார்த்திகை நட்சத்திரம்" என்று சிறிது உரத்த குரலில் தொடர்ந்து சொன்னாள்.

கர்ப்பக்கிரகத்தின் வாயிலில் நின்றபடி "ஏம்மா சுப்பிரமணியரோட நட்சத்திரம் நேக்குத் தெரியாதா?" என்று சிரித்தபடி மண்டபத்திற்குள் நுழைந்தார் குருக்கள்.

"இல்லை சாமி!... இந்த சுவாமியோட நட்சத்திரம் உங்களுக்குத் தெரியும்தான்.... ஆனா, என் சுவாமியோட நட்சத்திரமும் அது தான்னு சொன்னேன் சாமி!" என்று அந்தப் பெண் சொன்னதும், ஏதோ விகவின் வசனம் கேட்டதுபோல், சிறிது குழப்பத்துடன் அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டு அர்ச்சனையைத் தொடங்கினார் குருக்கள்.

அந்தப் பெண் சொன்னதன் அர்த்தம், மீனாட்சிக்கு விளங்கியது.

அகன்ற நீண்ட விழிகளில் நிறையக் கண்ணீர் தளும்ப, சுவாமியைப் பார்த்துப் பிரார்த்தித்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணிடம் பேசலாமா என்று மீனாட்சியின் உள்ளம் துடித்தது. ஆனால் வாய்க்குள் புரண்ட நாக்கை, கணவனுடைய கோபம், அப்படியே சலனமில்லாமல் அடித்துப் போட்டு விட்டது.

அர்ச்சனை முடிந்து கருவறையிலிருந்து வெளிவந்த குருக்கள் "இந்தா சிகப்பி!" என்று அர்ச்சனைத் தட்டை அந்தப் பெண்ணிடம் கொடுத்தார்.

தட்டை வாங்கிக் கொண்டு, மீண்டும் சுவாமியைப் பார்த்து வணங்கிவிட்டு, கீழே இறங்கிப் பிராகாரத்தைச் சுற்றத் தொடங்கினாள் சிகப்பி.

மறைவிடத்திலிருந்தபடியே அவளை, தன் நீர்மல்கும் கண்களால் பார்த்தபடி நின்றாள் மீனாட்சி.

சிகப்பி சென்றபிறகு, தன் வெள்ளி அர்ச்சனைக் கூடையைக் குருக்களிடம் மௌனமாகக் கொடுத்தாள் மீனாட்சி.

"அர்ச்சனை, சுவாமி பேருக்கா?" என்று கேட்டார் குருக்கள்.

"இல்லை... என் மகன் பேருக்கு... சுப்பிரமணியன், கார்த்திகை நட்சத்திரம்...." என்றாள் தாய்.

மண்டபத்திற்குள் நுழைந்து அர்ச்சனையைத் தொடங்கினார் குருக்கள்...

யூகங்களும் விசாரணைகளும் கவலையும் பிரார்த்தனையுமாக ஒரு வாரம் கடந்தபின்பு, அந்த அவலச் செய்தி இடியாக அந்த ஊரில் இறங்கியது...

கார்கிலின் ஒரு சிகரத்தில் அமைந்திருந்த முகாமைவிட்டு, புறமுதுகிட்டு ஓடிய ஆக்ரமிப்பாளர்களை விரட்டிச் சென்ற இந்திய வீரர்கள், அங்கே சுப்பிரமணியனின் உடலைக் கண்டு திகைத்தார்கள்.

ஆக்ரமிப்பாளர்கள், தங்களிடம் சிக்கிய அந்த முன்னணிப் படை வீரனை, யுத்த தர்மத்திற்கு விரோதமாகச் சித்ரவதை செய்து கொன்றிருக்கிறார்கள்... தன்னந்தனியே இருபது பாகிஸ்தானிய வீரர்களைச் சுட்டுக் கொன்று குவித்த அந்த இந்திய வீரனிடம் அவ்வளவு ஆத்திரம் அந்த ஊடுருவல்காரர்களுக்கு!

சுப்பிரமணியனின் சடலம், கார்கிலிலிருந்துசென்னைக்குக் கொண்டு வரப்பட்டது. உயர் இராணுவ அதிகாரிகள் இரண்டுபேர், சடலத்தை எடுத்துவந்தார்கள். அவர்களோடு மத்திய அமைச்சர் ஒருவரும், இறுதி மரியாதை செலுத்த வந்திருந்தார்.

திருச்சி விமான நிலையத்தில் மத்திய அமைச்சர், தமிழக அமைச்சர்கள் மூன்றுபேர், ஆளும் கட்சி, எதிர்க்கட்சித் தலைவர்கள், இராணுவ, போலீஸ் அதிகாரிகள் பொதுமக்கள் திரளாகக் கூடியிருந்தார்கள்.

விமான நிலையத்திலிருந்து அலங்கரிக்கப்பட்ட இராணுவ ட்ரக்கில் சுப்பிரமணியனின் உடல், ஊர்வலமாகப் பிரதேச இராணுவப் படைத் திடலுக்கு எடுத்து வரப்பட்டது.

திடலில், வீரனின் சடலத்திற்கு அமைச்சர்கள், கட்சித் தலைவர்கள், அதிகாரிகள் எல்லாரும் அஞ்சலி செலுத்தியதும், பொதுமக்கள் வரிசையாக நின்று ஒவ்வொருவராக வந்து மலர்வளையம், மாலை, பூக்கள் தூவி அஞ்சலி செய்து கொண்டிருந்தார்கள். சடலத்தின் ஒரு பக்கத்தில், சுப்பிரமணியனின் குடும்பத்தார் அழுது கதறிக் கொண்டு நின்றார்கள்.

பொதுமக்களின் வரிசையில் வந்த அந்தப்பெண், வீரனின் சடலத்தின் மேல் தூவுவதற்காக, தன் கூடையில் வைத்திருந்த எல்லா ரோஜாப் பூக்களையும் போடுவதற்கு முன்பு, தன் கூந்தலில் இருந்த பூச்சரத்தையும்

எடுத்துச் சேர்த்துப் போட்டதை, மற்றவர்கள் கவனித்தார்களோ இல்லையோ—சோமசுந்தரத்தின் ஈரக்கண்கள் கவனிக்கத் தவற வில்லை.

அதை மற்றவர்கள் கவனித் திருந்தாலும், அந்தச் செயலின் முழு அர்த்தத்தையும் சோமுவைப்போல் புரிந்து கொண்டிருக்க முடியாதே!...

பூக்களை அஞ்சலியாகச் சமர்ப் பித்துவிட்டு சிறிது நேரம் அந்த வீரனின் முகத்தையே பார்த்தபடி நின்றிருந்த சிகப்பியின் அகன்ற விழிகளுக்குள்ளே சட்டென்று இறுக்க மான ஒரு தீர்மானம் நங்கூரம் பாய்ச்சியதையும், சோமுவின் தீட்சண்ய மான கண்கள் கவனித்துவிட்டன....

பொதுமக்களின் அஞ்சலிக்குப் பிறகு, சுப்பிரமணியனுடைய சடலம், சோமுவின் வீட்டுக்குக் கொண்டு வரப்பட்டு, இறுதிச்சடங்குகள் நடத்தப் பட்டன. இராணுவ டிரக்கில் நகரின் முக்கிய வீதிகளின் வழியாக, சுடுகாட்டுக்கு ஊர்வலமாக எடுத்துச் சென்றார்கள். இறுதி ஊர்வலம் சென்ற வழியெங்கும் இரு மருங்கிலும் திரளான பொதுமக்கள் துயரம் பொங்க நின்று கண்ணீர் அஞ்சலி செய்தார்கள்.

நீண்ட ஊர்வலம் சுடுகாட்டில் முடிய, அங்கே இராணுவ மரியாதை யுடன் ஆறு சுற்றுத் துப்பாக்கிக் குண்டுகள் முழங்க, சுப்பிரமணியனின் உடல் எரியூட்டப்பட்டது.

அன்றிரவு—

சோமசுந்தரம் பரபரப்புடன் சிகப்பியின் குடிசைக்குச் சென்றார்.

அங்கே அவர் கண்ட காட்சி— அவர் எதிர்பார்த்ததே என்றாலும்— அவருடைய உள்ளத்தைத் திகைப்பில் உறைய வைத்துவிட்டது.

பூவும் பொட்டும் இல்லாமல் விதவைக் கோலத்தில், கையில் ஒரு பையுடன் எங்கோ புறப்பட்டுக் கொண்டிருந்தாள் சிகப்பி.

முற்றிலும் எதிர்பாராதவிதமாக, அங்கே சோமசுந்தரம் வந்து நிற்பதைப் பார்த்துத் திகைத்து நின்றாள் அவள்.

"சிகப்பி! எங்கே புறப்பட்டுட்டே?" என்ற அவருடைய குரலில், அவர் அறியாமலே ஆழ்ந்த பரிவு ஆரோகண மாகியிருந்தது.

"இனிமே இங்கே எனக்கு யாரும் இல்லை... அதனாலே எங்க தூரத்துச் சொந்தக்காரங்க இருக்கிற காரைக் குடிக்குக் கிளம்பிட்டேன்."

"இல்ல சிகப்பி! நீ எங்களைவிட்டுப் போகக்கூடாது... உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கிறேன்.. என்னை மன்னிச் சிடு... உன்னை என் மகனோட மனைவியாய் வாழவிடலை நான்... ஆனா, இப்போ நீ என் மருமகளாக எங்க வீட்டுக்கு வந்து வாழணும், சிகப்பி! அது மட்டுமில்லை. என் மகனோட நினைவாக, நம்ம வீட்டுத் தோட்டத்திலே நிறைய ரோஜாப்பூச் செடிகள் வச்சு வளர்க்கணும்மா!" என்று தழுதழுத்த குரலில் கண்களில் நீர் கசியக் கையறு நிலையில் நின்ற மாமனாரை மெல்ல ஏறிட்டுப் பார்த்தாள் சிகப்பி...

●

# வெளிநடப்பு



மண்ணில் மானிடர் வந்த நாள் முதல்
வாழை தன்அடி வாழை யென்பபோல்
எண்ணி எண்ணி அலுத்த எம்புதிர்
எதுவும் தீர்ந்துள சரிதை காண்கிலம்

தவ சிரேட்டர்கள், ஆழ்ந்த சிந்தனைத்
தத்து வம்பல கற்ற மேதையர்
நவ மெ னப்படும் கருவி கொண்டு நம்
ஞாலம் முற்றிலும் துருவி ஆய்ந்தவர்

நோன்பு கோடியும் நோற்றவர், மறை
நூல்கள் யாவையும் ஆய்ந்த விந்தமெய்
ஆன்ம ஞானியர், யோக வாழ்வினர்
யாது கண்டனர்! இற்றை நாள்வரை?

மூது ணர்ந்தவர், முனிவர் எண்ணிலர்
முயற்சி தோற்றது தேறினர் செலும்
பாதை முற்றிலும் மாற்றி யாம் புதுப்
பயணம் மேற்கொளும் முடிவு கண்டனம்

காலம் முற்றிலும் இருபுறம் வரும்
கரை வழிச் செலும் நதிக எல்லர்யாம்
மூலம் முற்றிலும் மாற்றி ஆய்குவம்
முதலும், வாழ்க்கையின் முடிவும் தேடுவம்

ஒளியின் தாரையும் எவரும் காண்கிலர்
உண்மை தேடலில் தோல்வி கண்டனர்
வெளியில் வந்திட எண்ணி எம்புது
வீதி தேடிடும் வேள்வி ஏற்றனம்

வலியி லாதவர் வலிமை பாடுவம்
வறியர் நெஞ்சுள வண்மை போற்றுவம்
மெலியர் மென்மையில் வீறு காணுவம்
விதிவி லக்கினில் விதிகள் தேடுவம்

குலோத்துங்கன்

# ஜீவன் சிரிக்கிறது

ஜி.கே மூர்த்தி



தேகத்தை வளர்க்க ஊன், உறக்கம், புணர்ச்சி ஆகியவை தேவைப்படுகின்றன. இதில் நாம் கவனத்துடன் இருக்க வேண்டும். யாரும் உருவாக்க முடியாத திருக்கோயிலே இந்த உடம்பு, இம்மானிட தேகம் இறைவனின் திருக்கோலம். இந்த தேகமெனும் ஆலயத்தில் அவனைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அவனைக் காண இந்தத் தூல சரீரம் கிடைக்கப் பெற்றுள்ளது. இந்த உடலின் உண்மை உணராத மானிடன், வயிறு புடைக்க உண்ணுவதும், உறங்குவதும், மதுவருந்துவதும், புணர்ச்சியில் மூழ்குவதும் மற்றும் கேளிக்கைகளில் ஈடுபட்டுக் கூத்தாடிக் குறுகிய காலத்தில் மரணவாசல் போவதற்கு அவன் மண்டியிட்டு வணங்குகிறான்.

இது ஒரு விஞ்ஞான உலகம். இதன் நோக்கங்கள் என்ன, இதன் வளர்ச்சிதான் என்ன என்று யோசித்தால் அதனால் பெறக்கூடியவை விபரீதங்களேயாகும். அவை நமக்கு நாமே வைத்துக் கொள்ளும் தீயாகும். சற்று யோசித்துப் பாருங்கள். சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்பு நமது இல்லத்தில் இயற்கையின் மூலமாய் அக்னி மூட்டி அறுசுவை உணவு வகை சமைத்து உண்டு நல்ல ஆரோக்கியத்துடன் இருந்து மகிழ்ந்தோம். இன்று அப்படி அல்ல. செயற்கை எரிவாயுவைப் பயன்படுத்தி நாம் அன்றாடம் உண்ணும் உணவு வகைகளைத் தயாரிக்கிறோம். இதனால் நமது தேக ஆரோக்கியம் கெடுகிறது. இதன் விலையும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. இது எங்கு போய் முடியும் என்பதும் நமக்குத் தெரியாது, இதன் உற்பத்தியாளர்களுக்கும் தெரியாது. இவற்றின் நோக்கமென்ன? இவற்றின் பின் விளைவுகளைப் பற்றியும் நாம் சிந்திக்கவுமில்லை.

இது மனித குலம் உய்யவா என்றாலும் அதுவும் இல்லை என்ற விடைதான் பெற முடியும். இது தான் நாம் பகுத்தறிவு பெற்றதன் பயனா? தவிர நாளுக்கு நாள் மக்கள் பெருக்கம் அதிகரித்துக் கொண்டே போகிறது, விலைவாசிகளும் ஏறிக்கொண்டே இருக்கின்றன. இப்படிப்பட்ட இன்னல்களுக்கு இடையே சுகக்கேடான வாழ்க்கை வாழ்ந்து கொண்டே இருக்கிறோம் . இவற்றை நினைத்துப் பார்த்தால் நமக்கே வியப்பைத் தருகின்றன. இன்றைக்கு ஒரு தாய் கர்ப்பம் அடைந்தால் அந்தக் கருவிலுள்ள ஜீவன் வளர்வதற்கு அதற்கு தடுப்பு ஊசி போட்டுத்தான் பிரசவிக்க முடியும். அதன் பிறகு அந்தக் குழந்தையின் வளர்ச்சிக்குத் தடுப்பு சொட்டு மருந்து கொடுத்துத்தான் வளர்க்க வேண்டும். அதன் பிறகு ஆரம்ப, ஆதார, பட்டய, பட்டப் படிப்பு, மேல் மட்ட பட்டப் படிப்புக் கல்விகள் படிக்க வேண்டும். இப்படி எல்லாம் படித்தாலும் நமக்கு வேலை வாய்ப்புகள் இன்று போய், நாளைவா 'என்று எந்நாளும் சொன்னாலும் நாம் சளைக்காமல் ஏறாத படியெல்லாம் ஏறியிறங்கி வேலை தேடி அதன்பின் குடும்பம் நடத்த ஒரு பெண் துணையைத் தேடி அவளை மணந்து கொள்கிறோம். பிறகு வீடு, வாசல், காசு, பணம் தேடுகிறோம். அதன் பின் சொகுசு வாழ்க்கைக்கு வேண்டிய கார், போன், டி.வி, வாஷிங் மெஷின், மிக்ஸி மற்றும் இதரப் பொருள்களையும் பிரயாசைப்பட்டுத் தேடிக் கொள்கிறோம். அந்தச் சமயம் வருமான வரி அலுவலர்கள் வந்து உங்கள் வருமானத்திற்கு எப்படி வருவாய் வந்தது என்று கேட்டு அதற்கு ஆணை பிறப்பிக்கின்றனர். இவற்றின் நோக்கம் தான் என்ன?

இன்றைய விஞ்ஞான உலகத்தில் வாழும் நம்மிடையே ஒரு நெருக்கமான இருட்டு, உட் பொருளைக் காண முடியாமல் மறைக்கிறது. நாம் ஒளி மிகுந்த ஆற்றலின் பிறப்பிடம். இந்த உல்கத்தை அறிவு என்னும் திறவு கோல்

கொண்டு திறந்து பாருங்கள். நமது ஞானியர்கள், மகான்கள் கூறியதைக் கூட பின்பற்ற வேண்டாம். இன்றைய விஞ்ஞான உலகமும் பெரியதென போற்றும் இறைவணக்கத்தின் ஆற்றலின் அற்புதங்களை அறிந்து கொள்ளுங்கள். இறைவழிபாடு என்பது ஒரு மனிதனின் மிகச் சிறந்த படிப்பினை ஆகும். நிலத்தின் ஈர்ப்பு சக்தி எப்படி உண்மையோ, அதுபோல் தான்.

நம் சிந்தனைகள் சிற்றாடை உடுத்தும் சிறுமியைப் போல் இல்லாமல் ஒரு வனப்புமிக்க வனிதையின் செழிப்பைப் போல் வளர்ந்து கலங்கரை விளக்கமாக விளங்க வேண்டும். ரேடியம் என்னும் கதிர் ஒளியைப் போல், வழிபாடு என்பது ஒருவன் மனத்திலிருந்து பரிமளித்துத் தோன்றக் கூடிய ஒளி மிகுந்த ஆற்றலின், ஆதார சக்தியின் ஆரம்ப இருப்பிடமாகும். உண்பதாலும், உறங்குவதாலும், குழந்தைகளைப் பெறுவதாலும், பேசுவதாலும், இந்த மனிதப் பிறவி சிறந்த பிறவியாகாது. இதே செயல்களைத்தான் பிற உயிரினங்களும் செய்கின்றன. பகுத்தறிவு கொண்ட இந்த மனித ஜீவன் சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய மார்க்கங்களால் இறைவனை உணர்ந்து வணங்கி வழிபட்டு மோட்சத்தை அடைவதால் சிறந்த பிறவியாகிறது. ஆனால் இந்தச் சிறப்பு மற்ற உயிரினங்களுக்கு இல்லை. அதனால் மானிட ஜென்மமே எல்லாப்பிறவிகளிலும் சிறப்புடையதாயிற்று. ஆதலால் மானிடராய் பிறந்த எவரும் மோட்ச மார்க்கத்திற்குரிய நெறிகளை உணர்ந்து கடைப்பிடிக்க வேண்டும். அவை வாய்மை, கொல்லாமை, களவு செய்யாமை, மது அருந்தாமை, விபச்சாரம் செய்யாமை, நல்லவை கூறல், செய்நன்றியறிதல், பொறாமை, புறங்கூறாமை முதலியவையாகும். இவற்றின் விரிவான விளக்கங்களை திருக்குறள் நமக்கு உணர்த்துகிறது.

நாம் உயர்ந்த தவத்தால் இம்மானிடப் பிறவியைப் பெற்றோம். உலகத்தில் படைக்கப்பட்ட கோடிக்கணக்கான ஜீவராசிகளிலும், இம்மானிடப் பிறவியே உன்னதமானது. பக்தி என்பது மானிடர்களின் குணபேதங்களால் தாமச, இராட்சச, சாத்வீகம் என்றும் மூவகைப்படும், தாமச பக்தியின் இயல்பு பிறரைத் துன்புறுத்துவது. இவை ஆடம்பரமாகவும், பொறாமை, குரோதங்களில் இருந்து கொண்டே செய்யும் செயல்களாகும். இராட்சச பக்தியின் இயல்பு பிறருக்குத் துன்பம் செய்து தனக்கு மட்டும் நல்லதைச் செய்து கொண்டும் தினந்தோறும் ஏதேனும் ஓர் இச்சையை வளர்த்துக் கொண்டும் புண்ணிய பயன்களைத் தான் அனுபவிக்கும் பொருட்டு பேத புத்தியோடு இறைவனை வழிபடுதலாகும். சாத்வீக பக்தியின் இயல்பு பாவத்தைக் கழிப்பதற்காகச் செயல்கள் அனைத்தையுமே இறைவனுக்கு அர்ப்பணமாகச் செய்தல்.

இந்த சாத்வீகபக்தி ஞானம் என்பது மக்களின் குணங்கள் அனைத்திற்கும் பிறப்பிடமாக இருக்கிறது. இது இறைவனிடம் நீங்காத பற்று வைக்கும் உத்தமமான உயர்ந்த பக்தியை உண்டாக்கும். இதைத் தவிர, முன்பு கூறிய இராட்சச, தாமச பக்தியின் செயல் மார்க்கத்தை விரும்பச் செய்யாது இறைவனை நித்தியம் என்று கருதி எவன் ஒருவன் தன்னை விட எப்பொருளையும் சுபேதமாக (வேறின்மையாக) அறிகின்றானோ அவன் எல்லா உயிர்களையும் இறை வடிவமாகவே கருதுவான். அவன் தன் ஆன்மாவிடம், எவ்வளவு பற்றுதல் வைத்திருக்கிறோனோ, அவ்வளவு பற்றுதல் பிற ஜீவன்களிலும் வைத்திருப்பான். சைதன்யம் (அறிவு, இறைவன்) எல்லாவுயிர்களிடமும் சமமாக இருப்பது. இந்த மானிட ஜீவன் தேகமெனும் உடையை உடுத்தி வந்துள்ளது. அதற்கு அன்றாடம் விதவிதமான அலங்கார ஆடைகள் உடுத்தியும் உடலை நறுமண சோப்புகள், வாசனை திரவியங்களைப் பூசியும் அழகு செய்து பார்க்கிறோம். நாம் அணியும் உடையையும் அன்றாடம் ரின், சர்ப், வீல் பவர்சோப்புகள் போட்டு துவைத்தும் அதன் பின் சொட்டு நீலம் போட்டுப் பிரகாசிக்கச் செய்து உடுத்திக் கொள்கிறோம். இவை எல்லாம் ஒரு நாள் அழிந்து போகக்கூடியவை. நமக்குள்ளே இருக்கும் அழியாத ஜீவனுக்கு நாம் தினமும் என்ன செய்கிறோம் என்று சற்றுச் சிந்தனை செய்தால், உங்களுக்கே புரியும். இவற்றையெல்லாம் பார்த்து உள்ளுக்குள்ளே இருக்கும் ஜீவன் நித்தியம் சிரித்துக்கொண்டே இருக்கிறது. இதன் விடையை அறிந்துகொண்டு நன்மக்களே, செயல்பட்டு விழித்திருங்கள்.






"கிர்ர்ங்...."

அழைப்பு மணி ஒலிக்கிறது.

காலை மணி பத்து. குக்கரில் அரிசி பருப்பு, இரண்டு காய்கள் எல்லா வற்றையும் ஒன்றாகப் போட்டுவைத்து விட்டு, பிரேமா குளியலறையைத் தேய்க்க முற்பட்டிருக்கிறாள். கணவர் இறந்து, இரண்டு பெண் மக்களும் சிறகு முளைத்துக் கூட்டை விட்டுப் பறந்து போய் விட்டனர். இந்தக் கூட்டில், தனிமைச் சுமையுடன் பொழுதைத் தள்ளும் பிரேமா, குளியலறை வழுக்கலை வளர விடக்கூடாது என்ற உணர்வுடன் செயல்படத் தொடங்கினாள். அழைப்பு மணி, உடலில் மெல்லிய மின்சாரம் பாய்ந்தாற் போல் துடைப்பத்தைக் கீழே போடச் செய்கிறது. தூக்கிச் செருகிய சேலையைச் சரியாக்கிக் கொள்கிறாள். கதவைத் திறக்கிறாள்.

நாலைந்து அடுக்குச் செம்பருத்தி மலர் அடங்கிய கொத்துடன் ஏழெட்டு வயசு மலர் முகம், "குட்மார்னிங், பெரியம்மா!" என்று முகமன் கூறுகிறது.

"அடடே...! வாம்மா கீதா!... இன்னிக்கு ஸ்கூல் இல்லையா?"

"பெரியம்மா, இது உங்களுக்கு!..... எங்களுக்கு லீவு விட்டாச்சு, இன்னிலே ருந்து, எங்கப்பா இன்றைக்கு ஆஃபீஸ் போறாங்க. அம்மா சொன்னாங்க, இதைப் பெரியம்மாக்குக் கொண்டு போய்க் குடுத்து, நன்றி சொல்லிக் கும்பிட் டுட்டுவா, அன்றைக்கு சைக்கிள் மோதி அப்பா அடிபட்டு ரோட்டோரம் விழுந்து கிடக்கையில், கடைப்பக்கம் போன அவங்கதானே என்ன ஏதுன்னு விசாரிக் காம, உடனே ஆட்டோவச்சு நர்ஸிங் ஹோமில் சேர்த்து விட்டாங்க? அவங்க அப்படிப்பண்ணலன்னா நாம என்ன ஆயிருப்போம்ன்னு, சொன்னாங்க. பெரியம்மா, இந்தப் பூவெல்லாம் எங்கள் வீட்டுச் செடியில் பூத்தது. நடுவில வெள்ளையா கொஞ்சம் ரோஜாப் போல ஒரு பூ இருக்கே?.... பாருங்க... அதும் அதே செடியில் தான் பூத்தது..."

பிரேமா அந்தப் பூங்கொத்தை வாங்கிக் கொண்டு சிறுமியின் கழுத்தை வளைத்துக் குனிந்து கன்னத்தில் முத்த மிடுகிறாள். சிறுமி வெட்கத்துடன் கன்னத்தைத் துடைத்துக் கொள்கிறாள். "....அடாடா, நான் இன்னும் குளிக்கல, கீதாம்மா, உன்னை அழுக்குப் பண்ணிட் டேனா?...."

"ஐயோ, இல்ல பெரியம்மா, எனக்கு உங்களை ரொம்பப் பிடிச்சிருக்கு!"

பிரேமா அந்த அழகிய பூங்கொத்தைப் பார்க்கிறாள். அவள் கூறியது போல் நடுவில் உள்ள 'செம்பருத்திப்'பூ, ரோஜா வண்ணத்தில், நடுவில் சிறு கேசரங் களுடன் விளங்குகிறது. அதன் பக்க வாட்டுச் சிறு இலைகள் தெரிய நான்கு பெரிய அரக்குச் சிவப்பு மலர்களை வைத்துச் செண்டாகக் கட்டியிருக்கிறாள்.

"பெரியம்மா! ஒரே செடியில் இது போல வேறு நிறம் எப்படிப் பூ த்திருக்கு பாருங்க? ஆச்சரியமாயில்லையா?".....

பிரேமா அந்த மலர்களைப் பார்த்துக் கொண்டே சிறிது நேரம் நிற்கிறாள். விழிக்கோடியில் ஒரு நீர்முத்து உருண்டு வருகிறது.

அந்தப் பூங்கொத்தை, சிறு மேசை மீது வைக்கப்பட்டிருக்கும் கணவர் படத்துக்குக் கீழ் வைக்கிறாள். அந்தப் படத்தில் சந்தனமும் குங்குமமுமாகப் பொட்டு விளங்குகிறது. ஓர் அழகிய பட்டு நூல் மாலையும் சாத்தியிருக்கிறாள்.

தாவரஇயல்–மூலிகை ஆராய்ச்சி யாளரான அவர், பத்தாண்டுகளுக்கு முன் மேற்கு மலைக்காடுகளில் மூலிகை தேடிச் சென்றிருந்தார். அப்போது, காலன் கரிய நச்சுப் பாம்பை அனுப்பி அவர் உயிரைக் கவர்ந்து கொண்டான். தாவர இயற்கையின் ரகசியங்களை எல்லாம் நுணுகி நுணுகிக் கண்டறிந்த வியப்பில், அவர் முகம் ஒளிரும் காட்சி கண்முன் தோன்றுகிறது.

"பெரியம்மா! இவர்தான், பெரி யப்பாவா?"

"ஆமாம், கீதாம்மா...."

உணர்ச்சியில் தொண்டை கம்முகிறது.

"படத்தில் குங்குமம் சந்தனம் வச்சு, மாலை போட்டா, அவங்க சாமிகிட்டப் போயிட்டாங்கன்னு அர்த்தம்.... தானே?"

'ஆமாம்மா. நீ இங்க உக்காந்து படம் பாத்திட்டிருக்கியா? நான் போய்ச் சட்டுனு குளிச்சிட்டு வரேன்?"

படம் பார் என்று மூடிவைத்திருக்கும் சிறு தொலைக்காட்சிப் பெட்டியை அவள் திறக்கவில்லை. மாறாக, அலமாரியைத் திறந்து இரண்டு புகைப்பட ஆல்பங்களை எடுத்து அவளிடம் கொடுக்கிறாள். சிறுமி ஆவலுடன் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து அதைப் புரட்டுகிறாள். பிரேமா குளியலறைத் தேய்ப்பைத் தள்ளிப் போட்டுவிட்டு, அவசரமாகக் குளியலை முடித்துக் கொள்கிறாள். எதிர்பாராமல் கிடைத்திருக்கும் மாமணி.

அன்று அவள் பெரிதாக ஒன்றும் செய்து விடவில்லை. கீதுவின் தந்தையை அவள் அதற்கு முன் பார்த்ததும் இல்லை. மோதி எறியப்பட்ட அதிர்ச்சியில் தலையில் சிறிது காயம் ஏற்பட்டிருந்தது. முழங்காலில் அடி. அவள் உடனே ஓர் ஆட்டோவை அழைத்து, தெருவோரம் இருந்த மருத்துவமனையில் சேர்த்தாள். வண்டி, மோதல் என்று கூறினால்

போலீசு, கேசு என்று சிறு தனியார் மருத்துவமனைகளில் அனுமதிக்க மாட்டார்கள் என்ற முன்னுணர்வுடன், வீட்டில் படி இடறிக் கீழே விழுந்து விட்டார் என்று அவரை சிகிச்சைக்குச் சேர்த்து விட்டாள். அவருக்குச் சிறிது நேரத்தில் நினைவு வந்தது. பிறகே வீட்டுக்குத் தகவல் கூறச் சென்றாள். அவர்கள் தெருவில் கோடியில் குடிசை போல் இருந்த சிறு ஓட்டு வீடு அது. கீதுவின் தந்தை, பெரிய தெருவில் உள்ள உயர் நிலைப் பள்ளியில் பணியாளராக இருந்தார். தாயும் சத்துணவு ஊழியராக இருந்தாள். வழக்கு, அதுஇது என்று ஒன்றும் இல்லாமல், ஐநூறு ரூபாய் செலவுடன் வந்த ஆபத்து போய் விட்டது.

“பெரியம்மா, இந்த அக்கா யாருங்க?”

தலைத்துண்டை அவிழ்த்து உதறிய படி, பிரேமா குனிந்து பார்க்கிறாள்.

“இந்த அக்கா, உதயா. இந்த வீட்டுப் பொண்ணுதான். கம்ப்யூட்டர் ஸாஃப்ட் வேர் படிச்சுட்டு கலிஃபோர்னியாவில் இருக்கிறாள்....”

“இந்த அக்கா...?” இன்னொரு படத்தில் ரஜனி புத்தகம் படிக்கிறாள்....

“இவ ரஜனி, இவதான் மூத்தவள். இவ ரொம்பப் படிச்சு, பிஎச்.டி பண்ணி, அதுக்கும் மேல, அவங்கப்பாவைப் போல் ஆராய்ச்சி பண்றா...”

“பெரியம்மா! நீங்க ஏன் அவங்க கூடப்போகல? அவங்க கல்யாணமாகி உங்கள விட்டுப் போய்விட்டாங்களா?”

“இல்லம்மா, அவங்க இரண்டு பேருக்கும் இன்னும் கல்யாணமாகல....”

“பின்ன ஏன் பெரியம்மா, உங்களத் தனியா விட்டுட்டுப் போனாங்க?”

“அவங்க தனியா என்னை இருக்கச் சொல்லல. என்னையும் கூப்பிட்டாங்க. ஒரு முறை போனேன். ஆனா எனக்கு இந்த இடம் தான் பிடிச்சிருக்கு. அவங்க வேலைக்குப் போயிடுவாங்க. அங்கேயும் தனியாத்தான் இருக்கணும்...”

எங்கோ பார்த்துக் கொண்டு பிரேமா கூறுகிறாள்.

ஆனால் கீதா இதைப் புரிந்து கொண்டிருப்பாளா? தனிமையைப் பற்றி இக்குழந்தை இவ்வளவு உணர்வுடன் கேட்கிறாள்?

ஆனால் இந்த அடுக்குமாடியின் கீழ்த்தளம் வேண்டுமென்று விரும்பிப் பெற்ற உடைமையான வீட்டில், அவர் சேர்ந்தாற் போல் ஒரு மாதம் தங்கி இருப்பாரா? வீட்டின் ஓர் ஓர மண்ணில், அபூர்வ மூலிகைகளையோ, பயன்படும் செடிகளையோ தொட்டிகளில் பயிரிட எண்ணிய கனவுகள் நிகழ்வுகளாகப் பரிணமிக்கவே இல்லை. வீடுகட்டிய ஓராண்டுக்குள் அவர் காலம் முடிந்துவிட்டது. ஆனால் அதுவே அவள் மக்களைப் பிரியும் ஒரு கொடிய நிகழ்ச்சி போல் அமைந்தது தான் மிகப் பெரிய சமுதாயக் கொடுமை.

மலைக்காட்டில் அரவு தீண்டி மாண்ட வரை, இத்தகைய மரணங்களுக்குப்பின் தொடரும் பலசடங்குகள்—விசாரணை, பரிசோதனை என்ற தடைகள் கடந்து வீட்டிலே கொண்டு வந்து கிடத்தியதும், மாணவர், சக ஆராய்ச்சியாளர் என்று ஒரு பெருங்கூட்டமே மாலைகளும் வளையங் களுமாக வந்து மரியாதை செய்தபின் இறுதிச் சடங்குக்காகக் காத்திருந்த போது, ஒரு பெண்ணுக்கும் பெண்ணே எதிரி என்ற உண்மையை நிலைநாட்ட வந்த அவர் சகோதரி வந்து சேர்ந்தாள். ரஜனி முதுகலை இறுதியாண்டில் படித்தாள். உதயா, கல்லூரியில் இளங் கலை இரண்டாம் ஆண்டு. இருவரும் வளர்ந்த பெண்கள்.

“ஏண்டி ரஜனி, மணிக்குச் சேதி அனுப்பிச்சியா? மரம் மாதிரி நிக்கிற?” என்றாள் அத்தை.

மணி அவளுடைய இரண்டாவது மகன். எங்கோ மருந்து விற்பனைப் பிரதிநிதியாகச் சுற்றிக் கொண்டிருப்பான்.

“யாருக்கும் சேதி அனுப்ப இது சந்தோசமில்ல அத்தை?”

“என்னடி பிரேமா? உம் பொண்ணு வெடுக்குனு பேசுறா? ஏற்கெனவேமூணு நாளாகுது. அவன் வந்து தானே கொள்ளி போடணும்?...”

ரஜனி பாய்ந்து வந்தாள். “என்னது? எங்கப்பாவுக்குக் கொள்ளி போட உம்புள்ளையா? எதுக்கு? எங்கப்பாவுக்கு நாங்க இரண்டு பேர் இருக்கிறோம் அந்திமம் செய்ய!” அவள் கத்தல், பிரேமாவின் செவிக்குள் அம்புபோல் பாய்ந்தது. ரஜனி... இரவில் பிறந்த அந்தப் பெண், மென்மையறியாத ரோசக்காரியாக, யாருக்கும் அஞ்சாத நேர்—திறம் கொண்டவளாக வளர்ந் திருந்தாள். அவள் சிறுமியாக இருக்கையில் ஒருநாள் கூடப் பள்ளிக்குச் செல்லாமல் தங்க மாட்டாள். உறவினர் ஒருவர் வீட்டுத் திருமணத்துக்கு அழைத்துச் சென்ற நாளில் பள்ளிக்குச் செல்லாமலிருந்ததற்குத் தந்தை ஆசிரியைக்கு விடுப்புக் கடிதம் எழுதித் தந்தார். அதில் அவருக்குக் காய்ச்சலாக இருந்ததாக எழுதியிருந்ததைப் பார்த்து விட்டு, “அப்பா! நீங்க ஏன் பொய் எழுதினீங்க? பொய் பேசக்கூடாது; எழுதவும் கூடாது. கல்யாணத்துக்குப் போனேன்னு எழுதுங்க. டீச்சர் அடிச்சா நான் வாங்கிக்கிறேன்!” என்றாள். மகளைக் கட்டி அணைத்து முத்தம் கொடுத்த தந்தை, ”நீதாண்டா எங்க வாத்தியார்!” என்று கண்ணீர் மல்கச் சொன்னது நினைவுக்கு வந்தது.

உதயா மென்மையானவள். இடிந்து போய் உட்கார்ந்திருந்தாள். “ஏண்டி? எங்கோ கண்காணாத இடத்தில் கோரமா உயிரை விட்டிருக்கிறான். அவன் நல்ல கதி அடைய வேண்டாமா?... நல்ல வேளை, சோமு வந்துட்டான்.... சோமு, சீக்கிரமாக் குளிச்சிட்டுவாப்பா! புரோகிதர் வந்து காத்திருக்கார்...” என்று அத்தை கூறியதையும், சிகரெட் வாடையும் சிவந்த கண்களும் மீசையும் கிருதாவுமாக வந்த அவள் முதல் பிள்ளை அந்திமக்கிரியை செய்யத் தயாராகச் சென்றதையும் பார்த்துக் கொண்டிருந்த ரஜனி வெறிக் கூச்சல் போட்டாள்.

“என்னம்மா? எங்கப்பாவுக்கு இவங்க, யாரு? அவருக்குக் கிரியை செய்ய இவங்களுக்கு என்ன தகுதி இருக்கு? ராத்திரி பார்ல குடிச்சிட்டு இப்ப கிரியை பண்ண வாரான்!”

அவள் வெறிக் கத்தல் அங்கே ஒரு பூகம்பத்தையே நிகழ்த்தப் போதுமானதாக இருந்தது.

"ஏண்டி? என்னடி சொன்னே? பெண்ணாய்ப் பிறந்தவ அடக்கமாக இருக்கணும். ஒருத்தங்கிட்ட வாழ்ந்து பேரெடுக்கணும்."

"நீ சொல்ல வேண்டாம். உன் பிள்ளைக்கு நான் கழுத்தை நீட்டுவேன்னு கனவு காணாதே!...."

"பிரேமா! இது கொஞ்சங் கூட சரியா இல்ல. உன் பொண்களை இப்படி அடக்கமில்லாம வளர்த்திருக்கே. அவங்க வாயை மூடச் சொல்லிவிட்டு நடக்கிற காரியத்தைப் பாரு!...."



"என்ன, என்ன நடக்கிற காரியம்? உன் பிள்ளைகள் இரண்டு பேரும் அவங்க அப்பா சேத்து வச்ச பிஸினஸ், காசு, பணம் எல்லாம் குடியிலும் சூதிலும் தொலைச்சிட்டு இந்த உறவப் புடிச்சிக்கணும்னு பாக்கறாங்க..."

பிரேமா திகலுடன், "ரஜனி, இந்த சமயத்தில் வேண்டாம்மா?" என்று கெஞ்சினாலும் அவள் அடங்கவில்லை.

"பாருடி! அப்பாக்கு இவ செய்யும் மரியாதையை? ஏற்கெனவே மூணு நாளாகுது. ரகளை பண்ணாம போ! பொண்ணாப் பிறந்துட்டு..."

ரஜனி பாய்ந்து வந்து அத்தையை வெறியுடன் தள்ள, அப்போது தான் படியேறி வந்த அவள் மகன் சோமு, ரஜனி கத்தக் கத்த ஓர் அறையில் அவளைத் தள்ளிச் சாத்தினான். அவள் கதவை உடைத்தாள். கத்தினாள். பிறகு நடந்ததை அவளால் இன்னமும் சீரணிக்க முடியவில்லை. ஒரு மருத்துவரைக் கூட்டி வந்து அவளுக்கு 'காம்போஸ்' ஊசி போட்டு அடங்க வைத்துவிட்டு அன்றைய ஈமக் கடன்களை அவன் செய்தான். அவன் கொள்ளி வைத்ததையே புரோகிதரும் ஏற்றார். கணவரின் சடலம் கிடக்கையில், நான்கு பேர் முன், பிரேமா ஆண் மக்களைப் பெற்றிருக்கவில்லை என்று அவமானப்படுத்தப்பட்டாள்.

ஒரு பையன் கொள்ளி போட்டாலும், மற்றவன் மருமகனாகும் உரிமையைப் பெற்று விடவேண்டும் என்பது அவர்கள் திட்டம். ஆனால், ரஜனி, மயக்கம் தெளிந்து எழுந்ததும், நடந்ததை அறிந்தபின், தாயைத்தான் அவர்களின் இந்தத் துணிவுக்கு இடம் கொடுத்ததற்காகக் கடிந்து கொண்டாள். சொற்களைக் கடித்துத் துப்பினாள்.

கொள்ளி போட்ட உரிமையில் அவனும் தாயும் மறுநாள் வந்த போது, இளையவளும் சேர்ந்து கொண்டாள். தங்களுக்குப் பக்கபலமாக சில பேராசிரியர்களை அழைத்து வந்து, வெருட்டினார்கள். இருவரும் நெருப்புக் கோல் கொண்டு அவர்கள் தொடர்பை அழிக்கத் தீவிரம் ஆனார்கள்.

"பெற்ற தகப்பனுக்கு அந்திமம் செய்யப் பெண்ணுக்கு உரிமை இல்லை என்று வந்த அந்தப் புரோகிதனைக் கழுத்தை நெறித்திருப்பேன். என்ன சமூகம், என்னவிதி! எல்லாம் இந்த அம்மாவின் கண்டிப்பு இல்லாத கோழைத்தனத்தால் வந்தது. தன்மானம் இல்லை!" என்று கத்தினாள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, அவளுக்கு இந்தச் சூழலே கசந்து விட்டது. அடுத்த ஆண்டுக்குள் இந்த மண்ணை விட்டுச் செல்லத் திட்டமிட்டு ஆராய்ச்சி படிப்பென்று அமெரிக்க, மண்ணுக்குப் பெயர்ந்து விட்டாள்.

இளையவளைக் கண்ணி வைத்து சோமுவும் அவன் தாயும் வரத் தொடங்கினர்.

"வயசு முப்பதாகப் போகுது. எப்ப கல்யாணம் பண்ணி, எப்ப அவன் குடிக்கு ஒரு வாரிசு வரது? ஒண்ணுக் குள்ள ஒண்ணு. சோமு ஜாதகப்படி அவன் உறவில் கல்யாணமாகி, ஆண் வாரிசு வரும்னிருக்கு. அதுதான் மண்ணைத் தட்டிட்டுப் போயிட்டது. சோமு நெருப்புப் போட்டான். வாணாம். மணிக்கென்ன? ஏழுவயசு வித்தியாசம்..." என்று வந்து இளக்கினாள்.

இதை அறிந்த மூத்தவள், இவளையும் 'ஸாஃப்ட் வேர்' படிச்சவளுக்கு உகந்த இடம் என்று தீவிரமாக முனைந்து மண்ணைவிடச் செய்து விட்டாள். ஏமாற்றமடைந்த அத்தைக்காரி, பிரேமாவிடம் வந்து வந்து அழுதாள். அவளுக்கே ஒரு பெண் கல்யாணமாகாமல் இருந்தாள். பையன்கள் சுகமில்லை, இந்தப் பொண்ணுக்கும் படிப்போ திறமையோ இல்லை, எப்படியானும் ஒரு கல்யாணம் செய்ய வேண்டும் என்று உதவிக்கு வந்தபோது, மக்களுக்குத் தெரியாமல் பிரேமா உதவி செய்தாள்.

அவள் மகளை நல்ல வேளையாகக் கல்யாணம் செய்து கொடுத்தபின், யார் வீட்டிலோ வேலை செய்தாள். இந்த இழிவுகளைத் தாங்காமலே, ஒரு மாசநோய் நலிவில் போய்ச் சேர்ந்தாள். இரண்டு பையன்களும், எப்படியோ துணையைத் தேடிக் கொண்டுவிட்டனர். பையன்களுக்கு வயதானாலும், நடத்தை கெட்டுப் போனாலும், பெண்கள் கிடைத்து விடுகிறார்கள். ஆனால் பெண்ணின் படிப்பு, திறமை, நேர்மை, துணிவு இவை யாவும் அவள் ஒரு துணையைத் தேடிக் கொள்ள முட்டுக்கட்டைகளாக இருக்கின்றன....

சமையலறையில் குக்கரைத் திறந்து பொங்கலை எடுத்துப் பார்க்கிறாள். சாதாரணமாக, அவளுக்குத் தனக்கு மட்டும் சமைத்துக் கொள்ளவே மனம் வராது. பசிக்கும் உயிர் வாழவுமே உணவுஎன்ற மட்டில், ஒரு சப்பாத்தியோ, மாவுகரைத்த தோசையோ, எதையோ செய்து உண்பாள். இன்று இந்த வீட்டில் ஒரு நிலாக்கீற்று வந்திருக்கிறது. மிளகு, சீரகம் தேடி எடுக்கிறாள். "கீதாம்மா! அஞ்சு நிமிசம் பாத்துக்க. நான் பக்கத்துக் கடைக்குப் போயிட்டு வாரேன்!" என்று ஓடி முந்திரிப் பருப்பு வாங்கி வந்து, நெய் மணக்கத் தாளிக்கிறாள். சுவை கூட்ட ஒரு தேங்காய் சட்டினியும் தயாராகிறது.

பெண், குடும்பத்துக்காக மனித உறவுகளை மேம்படுத்தும் சக்தியாக இயங்க, பல்வேறு அழுத்தங்களையும் சிக்கல்களையும் தாங்கிய காலம் இல்லை இது. அவளை ஆதிக்கத்துக்குட் படுத்த முனையும் சமுதாயத்தை அவள் எதிர்த்துப் போராடும் காலம் இது. இந்தப் போராட்டத்தில் பெரும்பாலும் அவள் தனிமைப் படுத்தப்படுகிறாள்.

திடீரென்று இவளுக்கு நள்ளிரவில் ரஜனியிடம் இருந்து தொலைபேசிக் குரல்வரும். பதற்றத்துடன் எழுந்து, "என்னம்மா?" என்பாள். பதற்றப்படும்படி செய்தி எதுவும் இருக்காது. அவளுடைய ஆராய்ச்சி–அல்லது வேலைகள் பற்றிய எந்த விவரத்தையும் அவள் இவளுடன் பங்கிட்டுக் கொள்ள முடியாது. எனவே, "ஏம்மா? எப்படி இருக்கே? உன் குரலைக் கேட்கணும் போல இருந்தது..." என்பாள். இல்லையேல், "தூங்கிட்டியா? இன்னிக்கு என்ன சமைத்தாய்?" என்பாள். "அப்பாவுக்கு விசாகப்பட்டணத்தில் யாரோ பாலசுப்பிரமணியன் என்று தூரத்து உறவாமே? அவர் பையன் இங்கே அலாஸ்காவில் இருக்கிறானாம். பிஎச்.டி.யாம். டைவர்ஸி யாம். என்னிடம் கல்யாணம் பற்றிக் கேட்டார்.... நீ என் ஃபோன் நம்பர் கொடுத்தாயா?" என்று கேட்டாள் ஒருநாள். இந்தக் குரல்களில், பெற்றவரோ, துணையோ, அந்தரங்கங்

புதிய நூற்றாண்டை அடையும் தருவாயில்

எம்.ஆர்.எல், நவீன தொழில் நுட்பம், மற்றும் சந்தை சார்ந்த விலை நிர்ணய முறை ஆகியவற்றால் ஏற்படும் சவால்களை சந்திக்க தயாராக உள்ளது. இந்தியாவின் சுத்திகரிப்பு தொழில்துறையில் வேகமாக நிகழ்ந்து வரும் மாற்றங்களை சவாலாக ஏற்று, அவற்றை திறம்பட எதிர்கொள்ளும் மனப் போக்கே எம்.ஆர்.எல்-லின் நிர்வாக மேம்பாட்டிற்கு எடுத்துக் காட்டாகும்.

புள்ளி விவரங்களும் எம்.ஆர்.எல்.-ன் சரித்திரம் படைக்கும் ஆற்றலை பறைசாற்றுகின்றன.

இரண்டு சுத்திகரிப்பு ஆலைகள் – சென்னைக்கு அருகே மணலியிலும், நாகப்பட்டிணத்திற்கு அருகே பனங்குடியிலும் – ஆண்டிற்கு 70 இலட்சம் டன் கச்சா எண்ணெய் சுத்திகரிக்கின்றன.

- 1998-99-ல் இதுவரை கண்டிராத அதிகபட்ச விற்பனை மதிப்பு ரூ. 3747 கோடி
- இதுவரை இல்லாத அதிகபட்ச வரிக்குப் பின் இலாபம் ரூ.205 கோடி
- இதுவரை இல்லாத அளவு அதிகபட்ச டிவிடெண்ட் 35%.

எம்.ஆர்.எல். சுமார் 3500 கோடி ரூபாய் முதலீட்டில் பல்வேறு எதிர்கால வளர்ச்சி மற்றும் விரிவாக்க திட்டங்களை தீட்டி நிறைவேற்ற உள்ளது.

இவையாவும் எம்.ஆர்.எல்.-ன் 'எங்களால் முடியும்' என்ற நிகரில்லா தன்னம்பிக்கைக்கு மேலும் வலுவூட்டுகின்றன.

# புதிதாக தோன்றிவரும் வாய்ப்புகளை சவாலாக எதிர்நோக்க எம்.ஆர்.எல் தயாராக உள்ளது



இனிய தீபாவளி வாழ்த்துக்கள்






**மதராஸ் ரிபைனரீஸ் லிமிடெட்**

552, அண்ணாசாலை, சென்னை – 600 018.

Visit us at : www.mrl.co.in

*அடுத்த யுகத்தை நோக்கி நம்பிக்கையுடன் செல்கிறது.*

SOBHAGYA

களைப் பகிர்ந்து கொள்ள ஒரு நட்போ கூட இல்லாத தனிமையின் ஆற்றாமை, துடிப்பாய்ச் செவிகளில் ஒலிக்கும்.

தன் தனிமையை அவள் சுமக்க வில்லை. எண்ணெய் தீர்ந்து, சுடரும் அவிந்த திரியை யொத்த தனிமை இது.... ஆனால், அது சுடருக்கு வழிஇல்லாத தனிமை. எண்ணெயும் திரியும் இருந்தும் ஒளிகூட்டுபவர் இல்லாத தனிமை..... எங்கோ எட்டாக் கொம்புக்குப் போய் விட்ட பெண்களுக்கு எப்படித் துணைதேட? "அம்மா... நான் ஒருவரை விரும்புகிறேன். கல்யாணம் செய்து கொள்ள அவரும் விரும்புகிறார். நீ என்ன சொல்றே?" என்ற சேதி ஒரு நாள் வருமா?... உதயா... அவளுக்கேனும் அப்படி ஒரு துணை கிடைக்குமா?

இரண்டு தட்டுகளில் பொங்கலைப் போட்டுக் கொண்டு முன் அறைக்கு எடுத்து வருகிறாள். சிறு மேசையை நகர்த்திப் போட்டு, சிறுமியின் முன் ஒரு தட்டை வைக்கிறாள்.

"எனக்கா பெரியம்மா? நான் காலையில் இடியாப்பம் சாப்பிட்டேனே?"

"இருக்கட்டும். மணி பதினொண் ணுக்கு மேல் ஆயிருக்கு. என்கூட இந்தப் பொங்கலைச் சாப்பிடணும்.... இப்ப வேணாம்னா, கொஞ்ச நேரம் கழிச்சு சாப்பிடலாம்"

கீதா வெட்கத்துடன், "அப்ப கொஞ்ச நேரம் ஆகட்டும் பெரியம்மா...." என்று இசைகிறாள். பிரேமா இருதட்டுகளையும் மூடிவைக்கிறாள்.

"பெரியம்மா, நான் ஒண்ணு கேட்டா, கோவிச்சுக்க மாட்டீங்களே?"

"நான் எதுக்கம்மா கோபிக்கணும்?..."

"இல்லை. பெரியம்மா..." என்று சுற்று முற்றும் பார்த்துத் தயங்கிய வண்ணம் நெருங்கி வருகிறாள். "பெரியம்மா, இவங்க உங்க சொந்தப் பொண்ணுங்க தானே?" மரத்தை உலுக்கிப் பூச் சொரிதலை ஏற்கத் தயாராக இருந்தவளுக்கு மூக்கில் கூராக ஒரு கடுக்காய் வந்து விழுந்து காயப் படுத்தினாற் போலிருக்கிறது அந்த வினா அவள் திகைக்கிறாள்.

## மஞ்சம்

ரா.பு. தங்கராஜன்

புன்னகைசெய் பனித்துளிக்கு மரகதப்புல் மஞ்சம்.
பொறிவண்டு களித்துறங்கப் பூங்கமலம் மஞ்சம்.
மின்னுசுடர் மீன்களுக்கு நீள்விசும்பு மஞ்சம்.
மிதந்துவரும் கார்முகில்கள் மழையினுக்கு மஞ்சம்.

வண்ணமிகு தாமரைக்கு வாவிகளே மஞ்சம்.
வசந்தருது வனப்பினுக்கு மலர்வனமே மஞ்சம்.
எண்ணத்தின் உணர்வுகட்குச் செஞ்சொற்கள் மஞ்சம்.
எழிற்சிற்பி கற்பனைக்குக் கருங்கற்கள் மஞ்சம்.

இன்னிசைக்குச் சுவைகூட்டும் சுதியதுவே மஞ்சம்.
இளமைக்குப் புகழ்ஊட்டும் பேரார்வம் மஞ்சம்.
கன்னியர்தம் செவ்விதழ்கள் புன்னகையின் மஞ்சம்.
கன்னத்தின் செம்மைஎழும் நாணத்தின் மஞ்சம்.

அருளுக்குத் தயைமிகுந்த அன்புளமே மஞ்சம்.
அழகொளிசேர் நித்திலங்கட் காழ்கடலே மஞ்சம்.
இருள்நீக்கும் அறிவொளிக்கே இறைவனருள் மஞ்சம்.
இன்பமெனும் நிலையினுக்கு மனநிறைவே மஞ்சம்.



"சொந்தப் பொண்ணுங்கதான், ஏன் கேக்கற? உங்கப்பா அம்மாக்கு நீ சொந்தப் பொண்ணு போல இவங்களும் எங்க வீட்டுப் பொண்ணுங்க..." அவள் குனிந்து கை நகத்தைச் சீண்டிக் கொண்டு, "தெரியாம கேட்டுட்டேன் பெரியம்மா, மன்னிச்சுக்குங்க.... அவங்க உங்களத் தனியா விட்டுட்டுப் போயிருக்காங்க... ஏன்னா... எங்கப்பா அம்மாக்கு நான் சொந்தப் பொண்ணு இல்ல. நான் சின்னப் பாப்பாவா இருக்கறப்ப, என்னப் பெத்த அம்மா அப்பா இரண்டு பேரும், இந்தம்மா கிட்ட என்ன விட்டுட்டு ஆட்டோவில் போனாங்களாம். லாரி மோதி இரண்டு பேரும் செத்துப் போயிட்டாங்களாம். இந்த அப்பா அம்மாக்குக் குழந்தை இல்லை யாம். என்னையே குழந்தையா வச்சுகிட்டாங்களாம். ஊரிலிருந்து ஒரு பாட்டி வருவாங்க. அவங்க அம்மாகிட்ட சண்டை போடுவாங்க. ஏண்டி அறிவு கெட்டவளே, புள்ள இல்லன்னா ஒட்டா, உறவா? இது உனக்குக் கஞ்சி ஊத்துமா? கொள்ளிக்குக் கூட ஒதவாத பொட்ட இது வயசுக்கு வந்தா வூட்டத் துடச்சிட்டு எவங்கூடயேனும் ஓடிப்போகும் "னு திட்டுவாங்க. "எங்கேயானும் அநாதை இல்லத்திலே கொண்டு தள்ளுடி!"ன்னு வாங்க. ஒருநாள் அப்பா திட்டி விரட்டினாரு. " இனிமே இந்த வூட்டுப்பக்கம் வந்தா தெரியும்!" ன்னு துரத்தினாரு.

"பெரியம்மா! எனக்கு ரொம்பக் கஷ்டமாப் போச்சு. எனக்கு அவங்க தான் அம்மா அப்பா. அவங்க அடிபட்டு விழுந்தப்ப சாமியக் கும்பிட்டுட்டு அழுதேன். என்ன ஆனாலும் நான் அவங்கள எப்பவும் தனியா விட்டுட்டுப் போகவே மாட்டேன். எத்தினி வயசா னாலும் அவங்க கூடவே இருப்பேன். அவங்கள நல்லா வச்சுப்பேன்... பெரியம்மா.... பொண்ணுன்னா ஏன் மட்டமாப் பாக்குறாங்க?" ஆற்றாமை வெடித்து வருகிறது. பிரேமா அந்தப் பிஞ்சை மார்போடு அணைத்துக் கொள்கிறாள். "இல்லைடி கண்ணு! நான் அப்படி நினைக்கல. அப்படி யாரும் நினைக்காம நாம பண்ணுவோம்" குரல் கரகரக்கிறது பிரேமாவுக்கு.

# ஸ்ரீ இராமன் இராமச்சந்திரனானது எப்படி...?

பிரசன்ன கம்பீரபாரதி
தஞ்சை வி. நாராயணசாமி



**ஸ்ரீஇராமன் ஜனனம்** உலகத்திற்கே சிறப்போடு கூடியதொரு மகிழ்ச்சியான நிகழ்ச்சி. இருள்சூழ்ந்த உலகம் ஒளிமயமான நிலையைப் பெற்றது. இந்நிலையில் ஸ்ரீஇராமன் ஜனனமான செய்தியை முதன் முதலாகத் தெரிந்துகொண்டவர் சூரியபகவானே ஆவர். மகிழ்ந்த அவர் ஆனந்தக் கூத்தாடியவண்ணம் ஸ்ரீஇராமனின் அழகை ரசிக்க வேறெவரும் அவரைக் காண்பதற்கு முன்பாகவே தான் அதிவேகமாக அயோத்திக்கு வந்து. அவரது அழகில் ஈடுபட்டு மகிழ்ந்து மெய்மறந்திருந்தார்.

**பின் ஸ்ரீஇராமன் ஜனனமடைந்த** செய்தியைக் கேள்வியுற்ற சந்திரன், ஆனந்த பரவசமடைந்து. தான் முதலில் ஸ்ரீஇராமனை எப்படியும் பார்த்துவிட வேண்டுமென்ற எண்ணங்கொண்டு ஆவலோடு விரைந்தோடி வந்தார். அங்கு சூரிய பகவான் முன்னமேயே வந்து, இராமனது அருகில் அமர்ந்து. வேறெவரும் அவரைக் காணாவண்ணம். தனது பிரகாசத்தின்மூலம். அவரை மறைத்துக்கொண்டு தான் மட்டும் இராமனின் அழகை ரசித்தவாறு. அவ்விடத்தை விட்டுச் சிறிதும் நகராமல் அப்படியேயிருந்தார். இது சந்திரனுக்குப் பெரும் ஏமாற்றத்தையே தந்தது. இதனால் மனம் நொந்த சந்திரன் சூரியனை நோக்கி..."சூரியா...! நீங்கள் ஸ்ரீஇராமனை மறைக்காது அவ்விடத்தைவிட்டு சற்று விலகியிருங்கள். உங்களுக்கு மட்டும்தான் ஸ்ரீஇராமன் சொந்தமோ...? நானும் ஸ்ரீஇராமனது அழகைக்கண்டு ரசிக்க ஆசைப்படுகின்றேன்" எனக்கூறியும் சூரியபகவான் சந்திரனது விருப்பத்திற்குச் சிறிதும் செவி சாய்க்காமல் ஸ்ரீஇராமனின் அருகிலேயே அசையாமல் கண்கொட்டாது அப்படியே அழகை ரசித்துக் கொண்டிருந்தார். சந்திரன் பலமுறை கேட்டும் ஒரே பிடிவாதமாக சூரியன் சிறிதும் மதியாது. அசையாது அப்படியே இருந்தார். ஒன்றுமே செய்ய இயலாத சந்திரனுக்கு. சூரிய பகவான்மீது பெரும் சினம் ஏற்பட்டது. பின் ஸ்ரீஇராமனிடம் சூரியனின் செய்கையைப் பற்றி வருந்தியவாறு முறையிட்டுத் தெரிவித்தார். விவரம் அறிந்த ஸ்ரீஇராமன், "சந்திரா...! அவசரப்படாதே... எதற்கும் சற்றுப்பொறுமையைக் கடைப்பிடி. அது உனக்கு நீதி கூறும். இப்போது நான் உனக்கொன்று கூறுகின்றேன் கேள்" என்றார். அதன்படி பொறுமையையே குணமாகக் கொண்ட ஸ்ரீஇராமனது பொன்னான சொல்லைக் கேட்கலானார் சந்திரன்.

**"சந்திரா! நான் சொல்வதைச்** செவிமடுத்துக் கவனமாகக் கேள். சூரிய பகவான் மாலை நேரத்தில் அஸ்தமனத்திற்காக தான் வழக்கமாகச் செல்லுமிடமான மேற்கு திசைக்கு எப்படியும் போய்த்தான் தீரவேண்டும். இப்படியொரு விதி உலகம் தோன்றிய காலத்தேயிருந்து உள்ளதொரு கடுமையான கட்டுப்பாடு. இதை அவர் மீறவோ மாற்றவோ முடியாததொரு பிரமாணமாகும். கவலைப்படாதே... இவ்விடத்தைவிட்டு சூரியன் சென்றதும் அக்கணமே நான் உன்னை என்

பக்கத்திலேயே இருக்கச் செய்கின்றேன். பின் நாம் இருவரும் எப்போதும் இணைபிரியாது ஒன்றாகச் சேர்ந்தே இருப்போம்" என்று சந்திரனுக்கு அறிவுரை வழங்கினார். பின் சந்திரனும் அமைதி காத்தார்.

மாலை அஸ்தமன நேரம் நெருங்கவே, சூரியன் ஸ்ரீஇராமனைவிட்டுப் பிரிய மனமில்லாமல், அரை மனத்துடன் அவரிடம் கூறிக்கொண்டு கண்ணீர் சிந்தியவாறு பிரியாவிடை பெற்றுச் சென்றார்.

பெருமிதங்கொண்ட சந்திரன் ஸ்ரீஇராமனின் அருகில் சென்று சாசுவதமாக இருவரும் இணைபிரியாமல் இருந்துவிட்டார்கள்.

இப்படியாக இராமனும், சந்திரனும் மகிழ்வோடு ஒன்றாக இணைந்ததால் இராமச்சந்திரன் என்ற பெயர் எங்கும், என்றும், புகழ்ப்பெயரோடு நிலைத்து நின்றுவிட்டது.

அன்றும், இன்றும், என்றும் இராமச்சந்திரன் என்ற பெயரைக் கேள்விப்படாதவர்கள் எவருமே இருக்கமுடியாது...!

ஆனால் இதுவரை யாருக்காவது, எங்கேயாவது எப்போதாவது இராமசூரியன் என்ற பெயர் இருப்பதாக அறிந்தோர் அல்லது கேள்விப்பட்டோர் எவரேனும் உண்டோ...?

இராம்...!இராம்...!! இராம்...!

மங்களம்

## கணிப்பொறியே! கண்மணியே!

கணிப்பொறியே! என்றன் கண்மணியே – உன்றன்
கண்பட வேநான் காத்திருந்தேன்.
இனியுமென்ன? இன்பம் இன்பமென்றே – என்றன்
இதயம் முழுவதும் பூத்திருந்தேன்!

நாட்டியம் ஆடிடும் விரலசைவால் – கோடி
நன்மைகள் நொடியில் குவிக்கின்றாய்.
பூட்டி வைப்பாய் பலரகசியங்கள் – பெரும்
புள்ளிகள் கேட்பினும் வாய்திறவாய்!

என்தடையோ! அன்றி... உன்தடையோ – இங்கு
எவர்தடையும் நம்மைப் பிரிப்பதில்லை
மின்தடை மட்டிலும் சிலநேரம் – முறை
மாமன் எனவரும்: அச்சுறுத்தும்!

ஆயிரம் பேர்நமைச் சூழ்ந்திருப்பார் – நாம்
ஆரத் தழுவுதல் பார்த்திருப்பார்
ஞாயிறு மட்டுமே ஓய்ந்திருப்போம் – அந்த
நாளிலும் உன்னைநான் நினைந்திருப்பேன்!

மேட்டினில் உலவிடும் நாயகிநீ – ஏழை
மனைதொறும் விளங்கிட வேண்டுமடி
நாட்டினில் உன்நலம் அறியாதார் – 'கை
நாட்டு' எனும் நற்பெயர்(!) பெற்றனரே...!

சங்கேதச் சொல்லிற்குக் கட்டுப்படும் – நல்ல
சம்சாரமே உன்னை வாழ்த்துகிறேன்.
மங்காத அறிவியல் சாதனையுள் – வைர
மணிமுடி நீயென்றே போற்றுகிறேன்!





முனைவர் வேலூர் ம. நாராயணன்






# படப்பாடல்களில் பக்தி

## டாக்டர் சேயோன்

இறைவன்மீது மனிதனுக்கு எழுகின்ற கவர்ச்சியே பக்தியாகும். ஜடப்பொருள் உலகம் முழுவதிலும், உயிர்ப்பொருள் உலகம் முழுவதிலும், இயற்கை முழுவதிலும் கவர்ச்சியே எங்கும் காணப்படுகிறது. இயற்கையில் உள்ள எந்த நிகழ்ச்சிக்கும், உயிர்ப்பொருளின் வாழ்க்கையில் உள்ள எந்தச் செயலுக்கும் மூலமாயிருப்பது கவர்ச்சி எனும் சக்தியே! ஆன்மாவுக்குப் பிரம்மத்திடம் எழும் கவர்ச்சியே பக்தியாகும். மறைப்பு முழுவதும் நீங்கும்போதே அக்கவர்ச்சி அளவில் அடங்காததாகும். அதுவே பூர்ண பக்தியாகும்.

இறைவன் மீது மனிதன் செலுத்துகின்ற அன்பே பக்தியாகும். நாம் நாள்தோறும் பக்தி உணர்வூட்டும் பக்திப் பாடல்களைத் தவறாது பாடி இறைவனை வணங்குதல் வேண்டும். அப்போதுதான் நம் உள்ளத்தில் பக்தி பரிணமிக்கும். அந்தப் பக்தி நம்மைச் சிறந்த அன்பர்களாக்கும். நல்ல நண்பர்களை அடையச் செய்யும். செய்யும் செயல்களில் தூய்மையும், நேர்மையும், செழுமையும் பெற வழி வகுக்கும். உள்ளத்தில் உண்மையொளி சிறந்தோங்கி வாக்கினில் ஒளியும், ஈர்ப்புத் திறனும் மிக்கோங்கும். முகத்தில் அருள் ஒளியும், அறிவொளியும் பளீரென ஒளிர்ந்தோங்கும்.

இப்படிப் பக்தியுணர்வூட்டும் பாடல்கள் தமிழ் இலக்கியத்தில் மிகுதியாக உள்ளன. இடைக்காலத் தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் பக்தி இலக்கியங்கள் எனப் பறைசாற்றப்பட்டன. ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும், நாயன்மார்கள் பாடியருளிய பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டும் அதுபோன்று பிள்ளைத்தமிழ், உலா, கலம்பகம் முதலான சிற்றிலக்கியங்களும் நீதிநூல்கள் பலவும் பக்தி உணர்வை ஊட்டுகின்றன. தமிழ் மொழியைப் பக்திமொழி (Devotional Language) என்று உலக மொழியியல் வல்லுநர்கள் பாராட்டுகின்றனர்.

*இசையால் வசமாகா இதயம் எது? – தமிழ்*
*இசையால் வசமாகா இதயம் எது?*
*இறைவனே இசை வடிவம் எனும்போது*
*இசையால் வசமாகா இதயம் எது?*

எனவே பலராலும் விரும்பிக் கேட்கப்படும் திரைப்படப் பாடல்களிலும் பக்தி இலக்கியங்களின் தாக்கம் மிகுதியாக உள்ளது.

தெய்வம், திருவிளையாடல், திருவருட்செல்வர், கந்தன் கருணை, ஆதிபராசக்தி, துணைவன், திருமால் பெருமை உள்ளிட்ட நூற்றுக்கும் மேற்பட்ட பக்திப் படங்கள் வெளிவந்துள்ளன. அதன் வழி ஐந்நூற்றுக்கும் மேற்பட்ட பக்திப்பாடல்கள் முகிழ்த்துள்ளன. அந்தப் பாடல்கள் அனைத்தும் பக்தி உணர்வை ஊட்ட வல்லன; இறைவன் திருவிளையாடல்களை எடுத்துரைக்கும் திறத்தன. நன்னெறிக்கு உய்விக்கும் வளத்தன.

---

எந்த ஒரு செயலைத் தொடங்கினாலும் விநாயகரை முதலில் வணங்கிய பின்னரே மற்றைய கடவுளரை வணங்குவது இந்துக்களின் மரபு. விநாயகரின் வரலாற்றைக் குறித்த திரைப்படங்களும் வெளிவந்துள்ளன. பிள்ளையாரின் அருட்திறன், வரலாறு முதலானவற்றை உணர்த்தும் பாடல்களும் உள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கது பின் வருமாறு:

*"யாரை வணங்கிட வேண்டும்? பிள்ளை*
*யாரை வணங்கிட வேண்டும்!* (யாரை)

*எல்லாரும் துதி பாடி*
*எந்நாளும் நலம் காண* (யாரை)

*பிள்ளைகள் மனத்தோடு உறவாடுவான்*
*பிள்ளைத்தமிழ் கேட்டு விளையாடுவான்.*
*அன்பிலே அறிவிலே நன்மை யாவும்*
*நிறைந்து வாழ உலகிலே* (யாரை)

*எப்படி அழைத்தாலும் வருவானவன்*
*எப்பொருள் கேட்டாலும் தருவானவன்*
*எளியோரின் எண்ணங்கள் எல்லாமே நிறைவேற*

*முன்னிருந்தே நின்று காத்திடுவான்!*
*சங்கத்தமிழ் மூன்றும் தருவானவன்*
*சந்தமுடன் பாட அருள்வானவன்*
*வாக்கிலே நினைவிலே கல்வியோடு*
*செல்வம் யாவும் அடைந்திட* (யாரை)

படம் : **பிள்ளையார்**

பாடலாசிரியர் : **பூவை செங்குட்டுவன்**

அன்பு, அறிவு, நன்மை முதலான அனைத்துச் செல்வங்களையும் பெறுவதற்கு உறுதுணை இருப்பவன் விநாயகப் பெருமான் என விளக்கியுள்ளார், கவிஞர் பூவை செங்குட்டுவன்.

*"சங்கத்தமிழ் மூன்றும் தருவானவன் – அதைச்*
*சந்தமுடன் பாட அருள்வானவன்"*

என்னும் வரிகள்,

*"பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை*
*நாலும் கலந்துனக்கு நான் தருவேன் – கோலஞ்செய்*
*துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீயெனக்கு*
*சங்கத் தமிழ்மூன்றும் தா"*

என்ற அவ்வைப்பிராட்டியின் பாடலை நினைவூட்டுகின்றன. இந்தப் பாடலைப் பாடும்போது அனைத்துச் செயல் களுக்கும் ஆதாரமாக விளங்கும் விநாயகப் பெருமான் நம் கண்முன் தோன்றும் உணர்வினைப் பெறுகிறோம். அதை உணர்த்தும் வண்ணம் பாடியுள்ள கவிஞர் பூவை செங்குட்டுவனைப் பாராட்டுதல் நம் கடமைதானே!

'நமசிவாய' என்னும் திருவைந்தெழுத்தை நாளும் சொல்பவர்களுக்கு அபாயம் இல்லை என்பர் பக்தர்கள். "என்னுடைய அறிவு முழுதும் நிறைந்திருப்பது நமசிவாய என்னும் மந்திரம். சிவபெருமானே! உன்னைக் கைகுவித்து வணங்குவதனால் எனக்கு எந்தப் பயமும் இல்லை. உமையவளாய் ஒரு பாதியில் கொண்டு சிவசக்தியாய்க் காட்சியளிக்கும் அம்மையப்பர் தாம் அனைத்துயிர்களின் தோற்றத்திற்கும் காரணமாய் விளங்குகின்றனர். அவர்களில்லையேல் நானில்லை. பக்தி வெள்ளத்தினால் என்றன் உடல் உருகுகிறது. மனம் கனிகிறது. உயிர் நெக்கு நெக்குருகுகிறது. அனைத்துச் சக்திகளும் திரண்ட சிவசக்தி நாமங்களை உச்சரித்துப் பாடுகிறேன். நான் மட்டுமன்றி, என் சந்ததியர் அனைவரும் உனக்கு அடிமை செய்யக் கடமைப்பட்டுள்ளோம்!" இப்படி அம்மையப்பரை மனமுருகிப் பாடுகிறவர் திருவருட் செல்வராகிய திருநாவுக்கரசர்.

ஆம்! அவரைப் படத்திற்காகப் பாடவைத்துள்ளார் கவியரசர் கண்ணதாசன்.

*சித்தமெல்லாம் எனக்கு சிவமயமே இறைவா! – உன்னை*
*சேவித்த கரங்களுக்கு இல்லை பயமே!*
*அத்தனில்லாமல் ஒரு அம்மையில்லை – அந்த*
*அம்மையில்லாமல் இந்தப் பிள்ளையில்லை!* (சித்த)

*பக்திப் பெருக்கில் எந்தன் ஊன் உருக – அந்தப்*
*பரவசத்தின் உள்ளே உயிர் உருக*
*சக்தியெல்லாம் திரண்டு சிவம் பெருக – எந்தன்*
*சந்ததியே உந்தனுக்கு அடிபணிய – இறைவா!* (சித்த)

*கண்ணைத் திறந்து வைத்த கருப்பொருளே! – கோயில்*
*கதவைத் திறந்தழைத்த திருவருளே!*
*வெண்ணெய் நல்லூர் உறையும் அருட்கடலே – வந்து*
*என்னை என்றும் ஆளுகின்ற பரம்பொருளே இறைவா!*

(சித்த)

படம் : **திருவருட்செல்வர்**

பாடலாசிரியர் : **கவிஞர் கண்ணதாசன்**

இந்தப் பாடல் கருத்துச் செறிவும் கற்பனை வளமும் மிக்கது. பாடுவோர் உள்ளத்தை நெக்குருகச் செய்வது, சிவசக்தியாய் விளங்கும் அம்மையப்பரின் திருவுருவத்தை நம் கண்முன் நிறுத்துவது. எனவே பன்முறை பாடி மகிழத்தக்கது. அதனைக் கவியரசர் கண்ணதாசனின் கற்பனைச் சோலையில் பூத்த அற்புதச் சொல்லோவியம் எனில் மிகையாகாது.

சிவனின் திருவைந்தெழுத்தை உச்சரித்துச் சிவதரி சனத்தைப் பாடிய கவியரசர் கண்ணதாசன், அன்னையின் தரிசனத்தை அன்புடன் வேண்டுகிறார் ஆதிபராசக்தி என்னும் திரைப்படத்தில்.

திருக்கடவூரில் அந்தணர் குலத்தில் அவதரித்த அபிராமபட்டர் அந்த ஊரில் எழுந்தருளியிருந்த அபிராமி அம்மையை நாள்தோறும் வழிபடும் சிறந்த பக்தராய்த் திகழ்ந்தார். அப்போது தஞ்சை சரபோஜி மன்னனிடத்தில் சோதிடக்கலை பற்றி விரித்துரைக்கும் பணியை மேற்கொண்டிருந்தார். ஒருநாள் மன்னனிடத்தில் பேசும்போது, மறுநாள் அமாவாசை என்று சொல்வதற்குப் பதிலாக முழுத்திங்கள் – பௌர்ணமி நாள் என்று தவறுதலாகக் கூறிவிட்டார். அபிராமபட்டர் தவறாகக் கூறியதைப் புரிந்து கொண்ட மன்னன், அபிராமபட்டரைப் பார்த்து, "நாளைக்குக் கதிரவன் மேற்கில் மறைந்தவுடன் கிழக்கில் பௌர்ணமியின் அடையாளம், வானில் முழுமதி– முழுநிலவு – தோன்றுதல் வேண்டும், அவ்வாறு தோன்றா விடில் உம்மை என்னுடைய வாளுக்கு இரையாக்கி விடுவேன்" என்று கடுங்கோபத்துடன் கூறிவிட்டான்.

சக்தி உபாசகரான அபிராமபட்டர், தன்னுடைய தவறுக் காகப் பெரிதும் வருந்தி, வழிபடு கடவுளாகிய அபிராமி அன்னையின் அருளை வேண்டி மறுநாள் திங்களைத் தோற்றுவிக்குமாறு அபிராமி அந்தாதி பாட முடிவு

செய்தார். அவ்வாறு தோன்றாவிடில் தம்மைத் தீக்குழியில் மாய்த்துக் கொள்ளத் திட்டமிட்டார். ஒரு பெரிய தீக்குழியை உண்டாக்கினார். நூறு கால்களோடு கூடிய ஒற்றைவார் உறியொன்றை அமைத்து, தாம் அந்த உறியின் மேலடுக்கில் அமர்ந்து அபிராமியைப் போற்றி அந்தாதி பாடினார். ஒவ்வொரு பாட்டும் முடியும்போது உறியின் அடுக்கு ஒன்றை அறுத்துக் கொண்டே வந்தார். செய்யுள்கள் தொண்ணூற்றொன்பது பாடி முடித்ததும் தொண்ணூற்றொன்பது அடுக்குகளும் அறுத்தெறியப்பட்டு எஞ்சி நின்றது ஒன்றுதான். அதுவரையிலும் முழு நிலவு தோன்றவில்லை. அபிராமிபட்டர் பெருங்கவலை அடைந் தார்.

அரசனின் வாளுக்கு இரையாவதைவிட, தாம் உண்டாக்கிய தீக்குழியில் வீழ்ந்து இறத்தலே நல்லது என்று முடிவு செய்து கடைசிப் பாடலைப் பாடி உறியின் கடைசி அடுக்கை அறுத்தார். அவர் தீயில் விழாதவாறு அபிராமி அன்னை காட்சியளித்துத் தன் கைகளை நீட்டி அபிராம பட்டரைப் பற்றித் தரையில் விட்டாள். மேலும் தனது இடக் காதில் அணிந்திருந்த குண்டலத்தை வலக்கையால் வாங்கிக் கிழக்குத் திசையில் வீசினாள். அக்குண்டலம் திங்கள் தோன்றவேண்டிய இடத்திற்குச் சென்று முழுநிலவாய் ஒளிர்ந்து நின்றது. அமாவாசை நாளில் திங்கள் தோன்றியதைக் கண்டு அனைவரும் வியப்படைந்தனர். சரபோஜி மன்னன் உட்பட அனைவரும் அபிராமபட்டரின் உண்மையான பக்தியுணர்வைப் பாராட்டி வணங்கி மகிழ்ந்தனர். இதனை விரித்துரைக்கும் பாடல் இதோ:

*"சொல்லடி அபிராமி – வானில்*
*சுடர் வருமோ – எனக்கு*
*இடர் வருமோ – பதில்*
*சொல்லடி அபிராமி!*
*நில்லடி முன்னாலே – முழு*
*நிலவினைக் காட்டு உன் கண்ணாலே!*
*பல்லுயிரும் படைத்த பரமனுக்கே – சக்தி*
*படைத்தல் எல்லாம் உன் செயலல்லவோ!*
*சொல்லுக்கெல்லாம் சிறந்த சொல்லல்லவோ!*
*இந்தச் சோதனை எனக்கல்ல உனக்கல்லவோ!*
*வாராயோ ஒரு பதில் கூறாயோ – நிலவென*
*வாராயோ அருள்மழை தாராயோ?*
*வானம் இடிபடவும்*
*பூமி பொடிபடவும்*
*நடுவில் நின்றாடும் வடிவழகே!*
*கொடிகளாட முடிகளாட*
*குடிபடை எழுந்தாட வரும் கலையழகே!*
*பிள்ளை உள்ளம் துள்ளும் வண்ணம்*
*பேரிகை கொட்டி வர*
*மத்தளமும் சத்தமிட வாராயோ!*
*செங்கையில் வண்டு கலின் கலின் என்று*
*ஜெயம் ஜெயம் என்றாட – இடை*
*சங்கதமென்று சிலம்பு புலம்பொடு*
*தண்டை கலந்தாட – இரு*
*கொங்கை கொடும்பகை வென்றனமென்று*
*குழைந்து குழைந்தாட – மலர்*
*பங்கயமே உனைப் பாடிய பிள்ளைமுன்*
*நிலவு எழுந்தாட*
*விரைந்து வாராயோ!*
*எழுந்து வாராயோ?*
*கனிந்து வாராயோ!*
*காளி பயங்கரி சூரி மதாங்கினி*
*கண்களில் தெரிகின்றாள்!*
*கண்கள் சிவந்திடும் வண்ணம் எழுந்தொரு*
*காட்சியைத் தருகின்றாள்!*
*வாழிய மகன் இவன்*
*வாழிய என்றொரு*
*வாழ்த்தும் சொல்கின்றாள்!*
*வானகம் வையகம் எங்கணுமே ஒரு*
*வடிவாய்த் தெரிகின்றாள்!*
*அன்னை தெரிகின்றாள்! – என்*
*அம்மை தெரிகின்றாள்!*

படம் : ஆதிபராசக்தி
பாடலாசிரியர் : கவிஞர் கண்ணதாசன்

என்ன அருமையான பாடல்! அபிராமி அம்மையை நம் கண்முன் நிறுத்திவிட்டாரே! இதுதான் கவிஞரின் கவித்துவமும் மகத்துவமும்!

சிவன், சக்தி, திருமால், விநாயகர், முருகன் முதலான கடவுள்களைப் பற்றித் திரைப்படங்களில் இடம்பெற்ற பாடல்களில் மிகுதியானவை அன்னை பராசக்திக்கும் ஆறுமுகனுக்கும்தான்.

முத்தமிழோன் முருகன் முந்து தமிழ்க்கடவுளாய் மிளிர்கின்றான். பெயரிலே தமிழ்மொழியின் விளக்கத்தைக் கொண்டுள்ளான் முருகன். முருகு என்று உருகு என்கிறார் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள். முருகு என்ற சொல்லுக்கு அழகு என்று பொருள். முருகு – அன் – முருகன் ஆயிற்று. 'முருகினின்று முருகன் பிறந்தான் என்க' என்பார், இயற்றமிழ் வித்தகர் திரு.வி.கல்யாண சுந்தரனார். முருகு என்ற சொல் பொருள் பொதிந்தது. அதன் மு– எழுத்து மெல்லினத்தின் பிரதிநிதி. ரு – எழுத்து இடையினத்தின் பிரதிநிதி. கு – எழுத்து வல்லினத்தின்

பிரதிநிதி. தமிழின் மூன்று இனங்களின் பிரதிநிதிகளின் கூட்டுத்தான் முருகு! தமிழுக்கும் அமிழ்து, அழகு போன்ற பொருள்கள் உண்டு. எனவே முருகன் தமிழ்க்கடவுள் என்று எல்லாராலும் போற்றப்படுகிறான்.

அது மட்டுமன்று; முருகனின் பன்னிரு தோள்களும் தமிழின் பன்னிரண்டு உயிரெழுத்துகளாகும். பதி னெட்டுக் கண்களும் மெய்யெழுத்துகளாகும். ஆறு திருமுகங்கள் வல்லின, மெல்லின, இடையினத்தில் இடம் பெற்றுள்ள ஆறு இன எழுத்துகளாகும். அறிவுச் சுடராக விளங்கும் கூரிய வேல், ஆயுத எழுத்தாகும். இதனை உணர்த்தும் புராணப்பாடல் இதோ.

*கண்ணிகர் மெய்யும் சென்னிக்*
*கணமுறழ் இனத்தின் கூறும்*
*திண்ணிய தோள்களே போல்*
*திகழ்தரும் உயிரும் வேறொன்று*
*எண்ணுதற் கரியதாகும்*
*எஃகமும் இயலிற்காட்டும்*
*புண்ணிய முருகன் செய்ய*
*பொற்பதம் போற்றி வாழ்வோம்!*

இத்தகைய சிறப்புகளை எல்லாம் கொண்ட ஆறுமுகன் குடிகொண்டிருக்கும் அறுபடை வீடுகளில் மிகவும் முக்கியப்படைவீடாக விளங்குவது வங்கக் கடலின் ஓரத்தில் உள்ள திருச்செந்தூர். அது ஆணவத்தின் சின்னமாக விளங்கிய அசுரன் சூரபத்மனுடன் போரிட்டு வென்று அவன் ஆணவத்தை அடக்கி அருளொளி காட்டிய ஆறுமுகனின் படைவீடு. மாயை ஒழித்த மயிலோன், சேயோன் – முருகன் கொலுவீற்றுக் கொண்டிருக்கும் திருவீடு. வங்கக்கடலோரத்தின் திருச்செந்தூர் முழு வதிலும் அருளாட்சி செய்யும் அருட்கொடை வீடு! ஆண்டுதோறும் கந்தசஷ்டித் திருவிழாவன்று சூரசம் ஹாரக்காட்சியைப் பல லட்சக்கணக்கிலான பக்தர்கள் கண்ணார உளம் மகிழக் கண்டு களிக்க வழிவகுக்கும் பெரும் மகிழ்வீடு. அங்கே திருச்செந்தூர் நாதனை வழிபடும் மக்கள் வெள்ளத்தை அளவிட முடியாது. திருக் கோயிலின் அருகில் கூடிய கூட்டங்கள் மனிதர்களின் தலையா? கடல் அலையா? என்று மயங்கித் தவிக்கும் நிலையை உண்டு பண்ணுமாம்!

*திருச்செந்தூரின் கடலோரத்தில்*
*செந்தில்நாதன் அரசாங்கம்*
*தேடித்தேடி வருவோர்க்கெல்லாம்*
*தினமும் கூடும் தெய்வாம்சம்!*
*அசுரரை வென்ற இடம் – அது*
*தேவரைக் காத்த இடம்*
*ஆவணி மாசியிலும் – வரும்*
*ஐப்பசித் திங்களிலும்*
*அன்பர் திருநாள் காணுமிடம்!*
*கோயிலின் அருகினில் கூடிய கூட்டங்கள்*
*தலையா? கடல் அலையா?*
*குழந்தைகள் பெரியவர் அனைவரை இழுக்கும்*
*குமரன் அவன் கலையா?*
*மங்கையரின் குங்குமத்தைக் காக்கும் முகம் ஒன்று*
*வாடுகின்ற ஏழைகளைக் காணும் முகம் ஒன்று*
*சஞ்சலத்தில் வந்தவரைத் தாங்குமுகம் ஒன்று*
*சாதிமத பேதமின்றிப் பார்க்கும் முகம் ஒன்று*
*நோய்நொடிகள் தீர்த்து வைக்கும் வண்ண முகம் ஒன்று*

*நூறுமுகம் காட்டுதம்மா ஆறுமுகம் இங்கு*
*பொன்னழகு மின்னிவரும் வண்ணமயில் கந்தா!*
*கண்மலர்கள் தன்னருளைக் காட்டிவரும் கந்தா!*
*நம்பியவர் வந்தால் நெஞ்சுருகி நின்றால்*
*கந்தா முருகா! வருவாய் அருள்வாய் முருகா!*

படம் : **தெய்வம்.**

பாடலாசிரியர் : **கவிஞர் கண்ணதாசன்**

இந்தப் பாடலில் கவியரசர் ஆறுமுகப் பெருமானின் ஆறுமுகங்களும் என்னென்ன திருச்செயல்களைப் புரிகின்றன என்பதைக் கூறியிருப்பது புதுமையும் எளிமையும் மிக்கதாய் காலத்திற்கேற்ற கருத்தாயும் அமைந்திருப்பது பாராட்டத்தக்கது.

*"ஏறுமயில் ஏறி விளையாடுமுகம் ஒன்றே*
*ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே*
*கூறும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்றே*
*குன்றுருவ வேல்வாங்கி நின்ற முகம் ஒன்றே*
*மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே*
*வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே"*

என்கிறார் சந்தக்கவித்தலைவர் அருணகிரிநாதர்.

கவியரசர் கண்ணதாசன் ஆறுமுகங்களும் முறையே பெண்களின் குங்குமத்தைக் காத்து அவர்களை வாழ்வரசிகளாய் வையத்தில் வாழ வைக்கிறது; வாடுகின்ற ஏழைகளின் வாட்டம் போக்கி ஊட்டம் கொடுக்கும் வகையில் வளமையும் செழுமையும் பொங்க வாழ்வளிக் கிறது; மனம் கலங்கி மதி மயங்கித் தஞ்சம் அடை வோருக்குத் தெளிவூட்டி ஞானஒளி ஏற்றி உயர்வடைய வழிவகுக்கிறது; சாதி மத பேதமின்றி ஏற்றத்தாழ்வின்றி அனைவருக்கும் அருள்பாலிக்கிறது. உயிரினங்களின் நோய்களை நீக்கி நலமாக வாழவழிவகை செய்கிறது. அது மட்டுமா? ஆறுமுகங்களும் நூறுமுகமாக விரிந்து அருளொளி பாப்பி அகிலத்தைக் காக்கிறது என்று பாடியுள்ளார் கவிஞர். நக்கீரர் திருமுருகாற்றுப் படையில்

கூறியிருந்த ஆறுமுகங்களின் அருட்செயல்களிலிருந்து வேறுபட்டுள்ளது கவிஞரின் கருத்து. அதேபோல் குமரகுருபரர், கந்தர் கலிவெண்பாவில் கூறியுள்ள ஆறுமுகங்களின் அருட்செயல்களிலிருந்தும் கவிஞர் வேறுபடக் கூறியுள்ளார். இதுதான் கவிஞரின் தனித்துவம்! அதுவே அவரது மகத்துவம்!

சைவர்களுக்குத் திருவைந்தெழுத்தான 'நமசிவாய' எப்படி மந்திரமொழியாக இருக்கிறதோ அதேபோல வைணவர்களுக்கு திருவெட்டெழுத்தாக 'ஓம் நமோ நாராயணா' என்னும் மந்திரமொழி உள்ளது. எம்பெருமான் திருமாலின் பத்து அவதாரங்களும் இந்தப் பூவுலகம் சிறந்து விளங்குவதற்கான பல தத்துவ விளக்கங்களையும், வாழ்வியல் நெறிமுறைகளையும், வீடுபேறு அடைவதற்கான வழிமுறைகளையும் விரித்துரைக்கும் வகையிலும் உள்ளன.

திருமால் பெருமைகளைச் சொல்ல இயலாது. அவரின் திருவடி நிழலுக்கு ஈடிணையில்லை. அனைத்துயிர்களையும் காக்கும் பணியை அற்புதமாகப் புரிவதோடு மட்டுமன்றி, வாழ்வியல் தத்துவங்களை உணர்த்தும் வண்ணம் பல அவதாரங்களை எடுத்துப் பக்திநெறியின் மேன்மைகளை உணர்த்தி, முக்திக்கு வழிகாட்டும் முழுமுதற் கடவுள் நாராயணன் எனில் மிகையில்லை. இதனை முற்றிலும் உணர்த்தும் பாடல் கீழ்வருமாறு:

***திருமால் பெருமைக்கு நிகரேது? உந்தன்***
***திருவடி நிழலுக்கு இணை ஏது?***
***பெருமானே உந்தன் திருநாமம் – பத்துப்***
***பெயர்களில் விளங்கும் அவதாரம்***

(திருமால்)

கடல்நடுவே வீழ்ந்த சதுர்வேதம் தன்னைக்
காப்பதற்கே கொண்ட அவதாரம்

***மச்ச அவதாரம்!***

அசுரர்கள் கொடுமைக்கு முடிவாகும் எங்கள்
அச்சுதனே உந்தன் அவதாரம்!

***கூர்ம அவதாரம்***

பூமியைக் காத்திட ஒருகாலம் நீ
புனைந்தது மற்றொரு அவதாரம்!

***வராக அவதாரம்***

நாராயணா என்னும் திருநாமம் நிலை
நாட்டிட இன்னுமொரு அவதாரம்!

***நரசிம்ம அவதாரம்***

மாவலி சிரந்தன்னில் கால்வைத்து இந்த
மண்ணும் விண்ணும் அளந்த அவதாரம்!

***வாமன அவதாரம்!***

தாய்தந்தை சொல்லே உயர்வேதம் என்று
சாற்றியதும் ஒரு அவதாரம்

***பரசுராம அவதாரம்!***

ஒருவனுக்கு உலகில் ஒருதாரம் என்னும்
உயர்வினைக் காட்டிய அவதாரம் –

***இராம அவதாரம்***

ரகுகுலம் கொண்டது ஒரு இராமன் பின்பு
யதுகுலம் கண்டது பலராமன்!

***பலராம அவதாரம்!***

அரசுமுறை வழிநெறிகாக்க நீ
அடைந்தது இன்னுமொரு அவதாரம்

***கண்ணன் அவதாரம்***

விதி நடந்ததென மதிமுடிந்ததென
வினையின் பயனே உருவாக
நிலை மறந்தவரும் நெறி இழந்தவரும்
உணரும் வண்ணம் தெளிவாக
இன்னல் ஒழித்துப் புவி காக்க
நீ எடுக்க வேண்டும் ஒரு அவதாரம்!

***கல்கி அவதாரம்!***

படம் : **திருமால் பெருமை**

பாடலாசிரியர் : **கவிஞர் கண்ணதாசன்**

ஒவ்வோர் அவதாரமும் ஒரு கதை கூறும். ஆனால் அதன் மையக் கருவை ஒரே வரியில் அடக்கிப் பத்து அவதாரங்களின் பெருமைகளை ஓரிரு வரிகளில் பாடிய பண்ணரசர் கண்ணதாசனை எப்படிப் பாராட்டினாலும் தகும்.

நடந்து முடிந்த ஒன்பது அவதாரங்களை ஓரிரு வரிகளில் உணர்த்திய கவியரசர், இனி நிகழவிருக்கும்–எடுக்கவிருக்கும் பத்தாவது அவதாரமான கல்கி அவதாரம் குறித்துக் கூறும்போது ஐந்து வரிகளில் சொல்லியுள்ளார். அதுவும் மானுடர்க்கு அறிவூட்டும் வண்ணம்.

***'நிலை மறந்தவரும் நெறி இழந்தவரும்***
***உணரும் வண்ணம் தெளிவாக***
***இன்னல் ஒழித்துப் புவிகாக்க!***

என்று பாடியிருப்பது பன்முறை படித்துச் சிந்திக்கத்தக்கது. சிரந்தாழ்த்தி வணங்கத்தக்கது. நினைந்து நினைந்து மகிழத்தக்கது. மனம் நெகிழ்ந்து நெகிழ்ந்து பாராட்டத் தக்கது.

இந்துமத நெறிப்படி படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் முறையே பிரம்மன், விஷ்ணு, சிவன் மூவரும் புரிவதாக வரலாறு வரையறுக்கும். அதே

போன்று மூவரின் மனைவியரான சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி மூவரும் முறையே கல்வி, செல்வம், வீரம் மூன்றினையும் மக்களுக்கு வழங்கக்கூடியவர்கள் என்பது வெள்ளிடைமலை. மூன்று தேவியரையும் முறையே கலைமகள், அலைமகள், மலைமகள் என வர்ணிப்பர்.

சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி மூவரின் திருவிளை யாடல்களை விளக்கியுரைக்கும் வண்ணம் வெளிவந்த திரைப்படம்தான் சரஸ்வதி சபதம். இதில் மூன்று தேவியரும் ஆளுக்கொருவருக்கு முறையே கல்வி, செல்வம், வீரம் விளங்குமாறு அருள்பாலிப்பர். படத்தின் உட்கரு மூவருக்கும் போட்டி ஏற்பட்டாலும் ஒருவரை மற்றொருவர் சார்ந்திருத்தல் வேண்டும்; ஒருவரை யொருவர் போட்டியின் காரணமாக அழித்துக்கொள்ளக் கூடாது; ஒருவனுக்குக் கல்வி, செல்வம், வீரம் மூன்றும் சேர்ந்திருந்தால் உலகத்தார் அனைவரும் ஏற்றிப் போற்றும் புகழைப் பெறுவான் என்பதை உணர்த்தும் வகையில் திரைப்படம் அமைந்து, பார்த்தோர் அனைவரின் மனத்தையும் மகிழ்வித்தது. கல்வி, செல்வம், வீரம் ஆகிய மூன்று ஆற்றல்களின் முழு உருவங்களாகத் திகழும் தேவியர் மூவரின் அருளும் ஒருவருக்கு ஒருசேரக் கிடைத்துவிட்டால், அவருக்கு அனைத்து நலமும், நன்மையும், பெருமையும் புகழும் கிட்டும் என்பது உறுதி. இதனை விளக்கிக்கூறும் பாடல் இதோ:

*"கல்வியா? செல்வமா? வீரமா?*
*அன்னையா? தந்தையா? தெய்வமா?*

*(கல்வி)*

*ஒன்றில்லாமல் மற்றொன்று உருவாகுமா?*
*இதில் உயர்வென்றும் தாழ்வென்றும் பிரிவாகுமா?*

*(கல்வி)*

*படித்தவன் கருத்தெல்லாம் சபை ஏறுமா?*
*படைத்தவன் கருத்தானால் சபை மீறுமா?*
*படித்தவன் படைத்தவன் யாராயினும்*
*பலம் படைத்திருந்தால் அவனுக்கிணையாகுமா?*

*(கல்வி)*

*ஒன்றுக்குள் ஒன்றாகக் கருவானது – அது*
*ஒன்றினுள் ஒன்றாகப் பொருளானது!*
*ஒன்றையொன்று பகைத்தால் உயர்வேது!*
*மூன்றும் ஓரிடத்தில் இருந்தால் நிகரேது?*

*(கல்வி)*

*மூன்று தலைமுறைக்கும் நிதி வேண்டுமா?*
*காலம் முற்றும் புகழ் வளர்க்கும் மதி வேண்டுமா?*
*தோன்றும் பகை நடுங்கும் பலம் வேண்டுமா?*
*இவை மூன்றும் துணையிருக்கும் நலம் வேண்டுமா?*

*(கல்வி)*

படம் : சரஸ்வதி சபதம்

பாடலாசிரியர் : கவிஞர் கண்ணதாசன்

இந்தப் பாடல், பாடுபவரின் மனக்கண்முன் சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி மூவரையும் கொண்டுவரும் அளவிற்கு கருத்துச் செறிவும், கற்பனை வளமும், நடைச் சிறப்பும் மிக்கதாய் உள்ளது.

இப்படித் திரைப்படப்பாடல்களில் பக்தியைப் பரிமளிக்கச் செய்யும் எத்தனையோ முத்தனைய பாடல்கள் மிகுதியாக உள்ளன. ஒவ்வொரு பாடலும் கவிஞர் தம் கற்பனை வளமும், கருத்துச் செறிவும், கவித்துவ நயமும், பக்தி மணமும் மிகுந்து விளங்குகின்றன. அவை சிறந்த சொல்லோவியங் களாகத் திகழ்கின்றன எனில் மிகையன்று. •

## மனைவி (அல்)
## இசை பெறும் இல்லம்

நீதியரசர் சி.மு.அப்துல் வகாப்

தொட்டுக் கட்டிய மனைவி தன்னை
தோளில் சுமப்பது பாபமில்லை.
விட்டுவிட்டு அன்பைக் கொட்டும்
வீழ்ச்சியைப் போன்றவள் மனைவியன்றோ!
சிட்டுகள் போன்று குழந்தைகள் பெறுவாள்;
சிந்துவாள் கண்ணீர் குடும்பம் காக்க.
கட்டுமரத்தைப் போலிருந்து, வாழ்வுக்,
கடலில் மிதக்கத் துணையிருப்பாள்.
இறைவன் தந்த வரமென்றே, நீ,
என்றும் நினைத்திடு மனைவியினை.
குறைகளை உன்னிடம், காணுங்கால்,
கொஞ்சும் மொழியில் சாடிடுவாள்!
மறைகளில் புதைந்திடு தத்துவந்தனை,
மடியில் கிடத்தி உரைத்திடுவாள்!
சிறையாய் இருந்திடும் குடும்பந் தன்னைச்.
செப்பனிடுபவள் மனைவியன்றோ?
தெய்வம் தொழாது உன்னையே சுற்றி,
தினமும் தொழுகிற பக்தை தன்னை,
மெய் உயிர் தந்தும், காத்திடுவாய்
மேதினியே உன்னைப் போற்றிடுமே!
'பெய்கின்ற மழையும் யாருக்கெனில்,
பெண்ணாய் உலவும் தெய்வத்திற்காக!
செய்த வெதற்கு பூசை? மனைவி கண்ணீர்,
சிந்தாது, காத்திடு அது போதும்!

# இராமநாதபுரத்தில் ஓர் இலட்சிய மருத்துவமனை



★ ஐ.சி.யூ. தீவிர சிகிச்சைப் பிரிவு

தமிழ்நாட்டில் எத்தனையோ மருத்துவமனைகள் இருக்கின்றன. ஆனால் மாறுபட்ட மகத்தான இலட்சிய நோக்குடன் செயல்பட்டு வரும் மருத்துவ மனையைத் தேடிப் பார்த்தோம். பிற்படுத்தப்பட்ட மாவட்டமான இராமநாதபுரத்தில் முற்போக்கான முழுமையான மருத்துவ சிகிச்சைகளை உயர் லட்சியத்தோடு பன்னிரண் டாண்டுகளாக, பளிச்சிடும் திறமை மிக்க மருத்துவர்களுடன் அளித்து வரும் 'பயோனியர் மருத்துவமனை' பற்றிய தகவல் அறிந்து சென்றோம். அங்கே பல பயனுள்ள சுவையான விஷயங்கள் நமக்குக் கிடைத்தன.

பிரசவம் என்றால் மதுரைக்கு...

'பயோனியர் மருத்துவமனை' தொடங்கும் முன்பு பரிதாபமான நிலையில் தான் இருந்திருக்கிறது இராமநாதபுரம். சாதாரண பிரசவம் பார்க்கக்கூட இராமநாதபுரத்திலிருந்து மதுரைக்குத்தான் சென்று வரவேண்டி யிருந்தது.

அவசர சிகிச்சை என்றாலும் ஆலவாய் நகரை நோக்கி அலறி ஓட வேண்டிய அவலநிலை. இந்தச் சோதனையை அகற்றி இன்று சாதனை செய்து வரும் மருத்துவமனையாகத் திகழ்கிறது 'பயோனியர் மருத்துவ மனை'.

பருக் தந்த பரிசு, முகமது கியாதுதீன் அளித்த முழுமை...

இராமநாதபுர மாவட்ட மக்கள் சரியான மருத்துவ சிகிச்சை கிடைக்காமல் பட்ட அல்லல்களை அகற்றி அமரர் டாக்டர் இ.எம்.எம்.பருக் தந்த பரிசாக இந்த பயோனியர் மருத்துவமனை பரிமளிக்கிறது.

எல்லா வியாதிகளிலிருந்தும் முழுமையான விடுதலை கிடைக்க டாக்டர் ஏ.எஸ்.முகமது கியாதுதீன் அளித்த முத்திரை பதிக்கும் பொக்கிஷ மாக இந்த மருத்துவமனை ஜொலிக் கிறது.

"எங்களைப் பொருத்தவரை இது மருத்துவமனையில்லை. எங்களை வாழ வைத்துக்கொண்டிருக்கும் ஆலயம்" என்று மக்கள் பயோனியர் மருத்துவ மனையைப் பயபக்தியுடன் வணங்கிச் செல்கின்றனர்.

தளர்ச்சி, தடைகளைத் தாண்டி.....

பலவித சிறப்புகளுடன் செயல்பட்டு வரும் பயோனியர் மருத்துவமனைத் தலைவர் டாக்டர் முகமது கியாதுதீன் எம்.பி.பி.எஸ். டி.சி.எச்.. குழந்தைகள் நல மருத்துவரைச் சந்தித்தோம்.

"இந்த மருத்துவமனையைத் தொடங்க அடிப்படைக் காரணம் என்ன?" என்று கேட்டோம்.

"இராமநாதபுரம் மாவட்டம் கீழக் கரை என் சொந்த ஊர். இராமநாதபுரம்



★ ஸ்கேன் யூனிட்

விஜயா கண்ணன்

படி திட்டி முன் மாதிரியான மருத்துவ மனையாக நடத்தி வருகிறோம்.''



★ மருத்துவக் குழு

அரசு மருத்துவமனையில் நான் பணிபுரிந்தபோது இங்கேயுள்ள மருத்துவமனைகள் மிக மோசமான நிலையில் இருந்ததைப் பார்த்து மனம் வருந்தினேன். இந்த மாவட்டத்தில் பிறந்த நாம் இதற்கென்று என்ன செய்தோம்? என்று சிந்தித்தேன். இந்த ஊருக்கு, மாவட்டத்திற்கு, நம்மால் ஒரு விடிவு காலம் பிறக்கட்டுமே என்று யோசித்தேன். எனது சீனியர் டாக்டரும், சென்னை அரசு மருத்துவ மனையில் பதினான்காண்டுகளாகப் பணிபுரிந்தவருமான சர்ஜன் டாக்டர் இ.எம்.எம்.பருக் அவர்களிடம் இராம நாதபுரத்தில் புதிய நவீன சிறந்த மருத்துவமனை கட்டும் யோசனையைக் கூறினேன். அவரும் ஆர்வத்துடன் சம்மதித்தார்.

''இராமநாதபுரத்தில் மருத்துவ மனையா? நிச்சயம் சரிவராது!'' என்று பலர் எங்களைப் பயமுறுத்தினார்கள். ஆனால் நாங்களோ எங்கள் பிறந்த மண்ணுக்குப் பெருமை தேடித்தர வேண்டும் என்ற லட்சியத்தோடு தளர்ச்சி அடையச் சொல்லப்பட்ட வார்த்தைகளை – தடைகளை – மீறி உறுதியாக இருந்து அனைத்து மருத்துவ அதி நவீன வசதிகளுடன் 1987ஆம் ஆண்டில் இந்த 'பயோனியர் மருத்துவமனை'யைத் தொடங்கி வெற்றிகரமாக நடத்தி வருகிறோம். அன்று பரிதாபப்பட்டவர்கள்கூட இன்று எங்களைப் பாராட்டும் அளவுக்கு 24 மணி நேர சுறுசுறுப் பான மருத்துவமனையாகக் கடும் உழைப்பின் மூலம் சக மருத்துவர் களின் ஒத்துழைப்பினால் வெற்றிகர மாக நடத்தி வருகிறோம். சமீபத்தில் டாக்டர் பருக் காலமானார். அவர் காட்டிய வழியில் மென்மேலும் புதிய திட்டங்களை மக்களுக்குப் பயன்படும் படி திட்டி முன் மாதிரியான மருத்துவ மனையாக நடத்தி வருகிறோம்.''



★ பயோனியர் ஸ்கூல் ஆஃப் நர்ஸிங்

''என்னென்ன மருத்துவ வசதிகள் இங்கே இருக்கின்றன?''

''24 மணி நேர விபத்து சிகிச்சை, எலும்பு முறிவு சிகிச்சை, ரத்த வங்கி வசதி, அதி நவீன லேப், எக்ஸ்ரே யூனிட், ஸ்கேன், இன்குபேட்டர், ஐ.சி.சி.யூ.. ஐ.சி.யூ. 24 மணி நேர அவசர சர்ஜரி, வெளிநாட்டு மருத்துவ மனைத் தரம் வாய்ந்த அறுவை சிகிச்சை அரங்கம். அதி நவீன என்டோஸ்கோபி, லேப்ரோஸ்கோப்பி சிகிச்சை வசதி... இப்படி நிறையச் சொல்லிக் கொண்டே போகலாம்.

''இங்கே எட்டு டாக்டர்கள் பல்வேறு மருத்துவச் சிகிச்சைகளை அளித்து வருகிறார்கள். நான் குழந்தைகள் நோய்களுக்கு சிகிச்சையளித்து வருகிறேன். டாக்டர் பெரியசாமி– பொது அறுவை சிகிச்சை நிபுணர், டாக்டர் ஜோசப் ராஜன் – இருதய நோய் சிறப்பு நிபுணர், டாக்டர் சுகதேவ் – மனநல மருத்துவ நிபுணர், டாக்டர் பதுருதீன் மஹமூத் – பொது மற்றும் இருதய நோய் சிகிச்சை நிபுணர், டாக்டர் பரக்கத் நிஷா பேகம் பல் மருத்துவ நிபுணர், டாக்டர் செய்யது இப்ராஹிம் – எலும்பு மூட்டு நரம்பு அறுவை சிகிச்சை நிபுணர் – டாக்டர் வஹீதா அபு மகப்பேறு மருத்துவ நிபுணர் ஆகியோர் சிறப்பான மருத்துவச் சிகிச்சைகளை அளித்து வருகிறார்கள். டூயூட்டி டாக்டர்களும் இருக்கிறார்கள். சூப்பர் ஸ்பெஷாலிட்டி டாக்டர்களும் வருகை தந்து இங்கே சிகிச்சை அளித்து வருகிறார்கள். பல நர்ஸ்கள், ஊழியர்கள், மருத்துவ நிர்வாக உயர் அதிகாரிகளும், கடை நிலை ஊழியர்களும் உயரிய உழைப்பை அளித்து வருகிறார்கள்.''

சிங்கப்பூர் நோயாளி சிலிர்த்துப் போனார்...

''உங்கள் மருத்துவமனையைப் பற்றி நீங்கள் பெருமையாகக் கருதும் விஷயங்கள் எதுவும் உண்டா?''

கந்த கோட்டம் ஸ்ரீ முத்துகுமார சுவாமி, சென்னை-3.

"நிறைய இருக்கின்றன. இரண்டை மட்டும் சொல்கிறேன். சிங்கப்பூரி லிருந்து ஒரு நோயாளி வந்தார். அவர் நோய் காரணமாக காலை எடுத்து விடவேண்டும் என்ற நிலை இருப்பதாக சிங்கப்பூர் மருத்துவமனைகள் கை விட்ட நிலையில் எங்கள் மருத்துவ மனைக்கு வந்தார். ஆனால் நாங்கள் மிகச் சிறந்த சிகிச்சையின் மூலம் அவரது காலை எடுக்காமலேயே குணப்படுத்திக் காட்டினோம். அந்த நோயாளி எவ்வளவு பணம் வேண்டு மானாலும் செலவு செய்யத் தயாராக வந்தார். ஆனால் சென்னையிலிருந்து இராமநாதபுரத்திற்கு அவர் டாக் ஸிக்குத் தந்த வாடகையைவிடக் குறைவாக எங்கள் மருத்துவமனையின் பில் இருந்ததைப் பார்த்து மெய் சிலிர்த்துப் போனார். 'இத்தனை உயர்ந்த மருத்துவ சிகிச்சையை இவ்வளவு குறைவான செலவில் அளிக்க உங்கள் பயோனியர் மருத்துவ மனையால் மட்டுமே முடியும்!' என்று மனதாரப் பாராட்டினார்.

"மாவட்ட ஆட்சித் தலைவர் அஜெய் பட்டாச்சார்யா அவர்கள், தன் குழந்தைக்கு உடல் நலமில்லாமல் எங்கள் மருத்துவமனையில் அனுமதித் திருந்தார். நான் ரவுண்ட்ஸ் வந்த போது மாவட்ட ஆட்சியர் குழந்தை யுடன் அங்கே இருந்தார். என்னைப் பார்த்ததும் என் கையைக் குலுக்கி 'வெரிகுட் டாக்டர்! எல்லா மருத்துவ மனையிலும் முகம் சுளிக்க வைக்கும் 'ஹாஸ்பிடல் நெடி' இருக்கும். நான் அதனால் உள்ளே போக மாட்டேன். உங்கள் மருத்துவமனையில் அந்த 'நெடி' இல்லாமல் சுத்தமாக, சுகாதார மாக வைத்திருக்கிறீர்கள்" என்று பாராட்டினார்.

நாங்கள் 'மருத்துவமனை நெடி' இல்லாமல் பராமரிப்பதால்தான் நோயாளிகள் இங்கே தங்கி அறை களில் சிகிச்சை பெறும்போது வீட்டிலிருந்தே சிகிச்சை பெறுவது போன்ற உணர்வுடன் குணமடை கிறார்கள்.

## வழிகாட்டு எழுத்தாளனே....

**புதுவை நித்திலன்**



- போலிகள் நாளும்
  பொய்மை அரசாண்டு
  சமுதாயம் பாழாவதோ?
- விலங்குகள் நாளும்
  சமுதாய வேலியை
  ஒடிப்பது விதியாவதோ?
- பெண்களை நாளும்
  போதைப் பொருளாக்கும்
  பேதைமை தொடராவதோ? - இங்குக்
- காற்றோடு தண்ணீரை
  அணைபோட்டு சொத்தாகக்
  கணிப்பது மனுநீதியோ? - அவர்
- வஞ்ச மனங்கொண்டு
  பெரும்படை திரண்டால்
  சிறுதீயைப் பெரிதாக்கிடு! - இந்தக்
- குறையாவும் மலையேற
  குவலயம் சிறந்தோங்க
  வழிகாட்டு எழுத்தாளனே!

மேலும் நாங்கள் ஒன்பதாண்டு களாக நடத்தி வரும் 'பயோனியர் ஸ்கூல் ஆஃப் நர்ஸிங்' மற்றும் இரண்டாண்டுகளாக நடத்தி வரும் 'பயோனியர் காலேஜ் ஆஃப் பிசியோ தெரபி'யும்தான் காரணம்.

ப்ளஸ் டு சயின்ஸ் குரூப் மாணவிகள் எங்களிடம் ஏப்ரல் மாதம் அப்ளிகேஷன் பெற்று மூன்று வருட அரசு அங்கீகாரம் பெற்ற நர்ஸிங் பயிற்சியில் சேர்ந்தும், அரசு அங்கீகார ஒரு வருட அப்ரண்டிஸிவ் நர்ஸிங் டிரெய்னிங்கிலும் சேர்ந்தும் படித்து, படிப்பு முடிந்ததுமே வேலை வாய்ப்பு பெற்று விடுகிறார்கள்.

ப்ளஸ் டு சயின்ஸ் குரூப் மாணவர்கள் – மாணவிகள் எங்களிடம் அப்ளிகேஷன்களை ஏப்ரல் மாதம் பெற்று நாலரை வருட பேச்சிலர் ஆஃப் பிசியோதெரபி டிகிரி கோர்ஸில் சேர்ந்து தேர்வு பெற்று வெளிநாடுகளில் வேலை வாய்ப்பு பெற்றுவிடுகிறார்கள்.

எங்கள் புகழுக்கு மகுடமாக இந்த நர்ஸிங் ஸ்கூலும், பிசியோதெரபி கல்லூரியும் திகழ்கின்றன. பிசியோ தெரபி படிப்பின் முக்கியத்துவம் தற்போது அனைவரும் பயன் பெறும்படி முன்னேறி வருகிறது"

"உங்கள் எதிர்கால இலட்சியம் என்ன?"

"இப்போது நான்கு மாடி கட்டடத் தில் நல்லவிதமாக மருத்துவமனையை நற்பெயருடன் நடத்தி வருகிறோம். ஐந்தாவது மாடி கட்டி இருநூறு படுக்கைகளுடன் அறைகளை விரிவு படுத்தத் திட்டமிட்டிருக்கிறோம். எங்கள் மருத்துவமனையில் 'ஒப்பன் ஹார்ட் சர்ஜரி' செய்யவேண்டும் என்ற எண்ணமும் உண்டு. இந்த ஊரைச் சுற்றியுள்ள பத்து கிராமங்களைத் தத்தெடுத்து இலவச மருத்துவ சிகிச்சைகள், மருந்துகள் அளித்து வருவதைத் தொடர நினைத்திருக் கிறோம். நஸிர்ங் ஸ்கூல், பிசியோதெரபி கல்லூரி மூலம் வேலை வாய்ப்புகளைப் பெற்றுத் தர, தொடர்ந்து உழைப்போம்"

உயர் லட்சியத்தோடு செயல்படும் இந்த மருத்துவமனைக்கு உங்கள் வாழ்த்துகளை, ஆலோசனைகளைக் கூறி ஊக்குவிக்கலாமே? முகவரி: டாக்டர் கியாதுதீன், தலைவர், பயோனியர் மருத்துவமனை, மதுரை சாலை, இராமநாதபுரம் – 623 501. தொலைபேசி: 20879, 21317, 23317, 24317. Fax:04567-20302 E.Mail: Ashraff@vsnl.com

போட்டோ: கே.ஏ. ரமேஷ்

“ஒருத்தனைக் காவு கொடுத்துத்தான் இந்த ஊர் விளங்கவேணும்னு இருக்கு” இது உண்ணாமலைக் கிழவியின் புலம்பல்.

அந்தக் கிராமத்திலுள்ள மூதாட்டிகள் மத்தியானச் சாப்பாட்டிற்குப் பிறகு உண்ணாமலைக் கிழவி வீட்டுத் திண்ணையில் கூடி நல்லது பொல்லாதது எல்லாம் பேசுவார்கள்.

“நீ சொல்றது நெசம், உண்ணாமலை! போன மாசம்வரை இது ஊராவா இருந்துச்சு? ஆறு கல் தொலைவிலே பள்ளிக்கூடம் இருக்கு. ஆனா எந்தப் பிள்ளையாவது படிக்கப் போச்சா? படிச்ச பயலுகளாவது வேலை வெட்டி பாத்தானுங்களா? வெட்டிப் பேச்சு பேசிட்டு, பொண்டுக பின்னாலே சுத்திட்டுத் திரிஞ்சானுங்க. சீட்டுப் போட்டானுங்க. பொழுது சாஞ்சா குடிச்சிட்டு நாறினானுங்க. நம்ம கந்தசாமி யுத்தத்திலே செத்து அவன் உடம்பை சர்க்கார் இங்கே கொண்டாந்து செஞ்ச மரியாதைகளையும் அவன் குடும்பத்துக்கு செஞ்ச பண உதவிகளையும் பாத்தபிறகுதான் நம்ம ஆளுகளுக்கெல்லாம் புத்தி வந்திச்சு” இது மீனாட்சிக் கிழவி.

“அன்றைக்குச் சுத்துப் பத்துப் பத்து ஊர் ஜனமும் இங்கேதானே! ஊர் கொள்ளலையே! அந்தக் கூட்டத்தையும் கந்தசாமிக்கு நடந்த ராஜமரியாதையையும் பாத்த கழுதைக்குக்கூட நல்ல புத்தி வருமே!" இது காமாட்சிப் பாட்டி.

“அதைத்தாண்டி நானும் சொன்னேன். இப்போ பிள்ளைங்க எல்லாம் குளிச்சு முழுகி சோத்துச் சட்டியையும் புஸ்தகப் பையையும் தூக்கிட்டு அழகழகாப் பக்கத்து ஊருக்குப் படிக்கப் போவுதுக. படிச்சவுனுங்களே பல பேரு இராணுவத்திலே சேந்துட்டானுங்க. மிச்சப் பேரும் அவனவனாலே ஆன தொழிலைப் பண்றான். கலெக்டர் பையனும் நல்ல பிள்ளையாண்டான். கந்தசாமி பிறந்த மண்ணுன்னு நம்ம ஊருக்கு எல்லா நல்லதும் செய்றான். படிச்ச பயலுகளுக்குத் தொழில் செய்யப் பணஉதவி வாங்கித்தர்றான். எல்லாம் கந்தசாமியாலே ஏற்பட்ட நன்மை” என்று முடித்தாள் உண்ணாமலைக் கிழவி.

“சேதி கேட்டீங்களா?” என்று சொல்லியபடி தின வதந்திக் கிழவி அப்போது அங்கு வந்தாள். படிப்பறிவில்லாத அந்தக் கிராமப் பெண்களுக்கு அவள் சுடச்சுடப் புதிய செய்திகளைச் சொல்வதால் அவளுக்குத் 'தின வதந்திக் கிழவி' என்று பெயர் உண்டாகி அது நிலைத்தும் விட்டது. அவளுடைய இயற்பெயரை மக்கள் மறந்தும் போனார்கள்.

“இரண்டு சேதி. எதை முதல்லே சொல்ல?" என்று புதிர் போட்டாள் தின வதந்திக் கிழவி.

“வாய் ஒண்ணுதானே இருக்கு? ஒண்ணு ஒண்ணாச் சொல்லு.”



# கந்தசாமிக் கடவுள்

வலம்புரி சோமநாதன்

“நம்ம பத்து ஊர் ஜனமும் இந்த ஒரு மாசமா தங்களுக்கு பிறக்கிற குழந்தைகளை நம்ம கந்தசாமியை அடக்கம் செய்த இடத்திலே கொண்டு வந்து வச்சு, அவனைப்போல தங்கள் குழந்தைகளும் புகழ் அடையணும்னு வேண்டிகிட்டு அந்த மண்ணை எடுத்துக் குழந்தைங்க நெத்தியிலே பூசிட்டுப் போறாங்கள்ளே! அந்த இடத்திலே கந்தசாமிக்கு ஒரு கோயில் கட்டி நித்திய பூசை செய்றதுன்னு அவன் பெரிய பாட்டன் பரமசிவம்பிள்ளை முடிவு பண்ணி ஊர்ப் பெரியவங்ககிட்டே இப்பத்தான் சம்மதம் வாங்கியிருக்காரு!”

“நல்ல சேதி! கந்தசாமிதான் இனி நமக்குக் கண் கண்ட சாமி! அடுத்த சேதி என்ன?"

“கந்தசாமி சம்சாரத்துக்குச் சர்க்கார் 5 லட்ச ரூபாயும் மதுரையிலே ஒரு வீடும் கொடுத்தாங்கள்ளே, அதை அந்தப் பொண்ணு தனக்கு வேண்டான்னு சொல்லிடுச்சாம்!”

“ஐயையோ! அப்புறம்?”

“நம்ம பத்து ஊர்லேயும் பள்ளிக்கூடம் இல்லாமே பிள்ளைங்க ரொம்பத் தொலைவு தினமும் நடந்து படிக்கப் போகுதுங்கல்லே? அந்தக் கஷ்டம் நீங்கணும்னு நம்ம ஊர்லேயே அந்தப் பணத்தைக்கொண்டு கந்தசாமி பேர்லே ஒரு பள்ளிக்கூடத்தைக் கட்டுங்கன்னு சொல்லிச்சாம், கலெக்டரும் சரின்னுட்டாராம்.”

“புண்ணியவதி! புருஷன் நாட்டுக்குச் சேவை செய்தான். பொண்டாட்டி ஊருக்குச் சேவை செய்யறா!” என்று உண்ணாமலைக் கிழவி சொன்னபோது எல்லா மூதாட்டிகளின் கண்களிலும் நீர் நிறைந்தது.

கந்தசாமி கோயிலுக்கும் கந்தசாமி உயர்நிலைப் பள்ளிக்கும் கால்கோள் விழா நடந்தது. அமைச்சர்களும் இராணுவ உயரதிகாரிகளும் கலெக்டரும் கலந்துகொண்டு விழாவைச் சிறப்பித்தனர். விழா முடிந்து எல்லாரும் விடைபெற்ற பின்னரும் கலெக்டர் மட்டும் அங்கேயே தங்கி ஆனந்தரங்கம்பிள்ளையிடம் "உங்கள் பேரன் கந்தசாமியின் மனைவிக்கு நம் ஜனாதிபதி ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறார். அதை அவர்களிடம் நேரில் கொடுக்கவேண்டும் என்று எனக்கு ஆணை" என்றார்.

ஆனந்தரங்கம் பிள்ளையும் அவர் மகன் செல்வ விநாயகம்பிள்ளையும் கலெக்டரைத் தங்கள் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய், ஹாலில் உட்காரவைத்துவிட்டு, உள்ளேயிருந்து கந்தசாமியின் மனைவியை அழைத்துக் கொண்டு வந்தார்கள்.

வந்தவள் ஒரு பெண்ணா? இல்லை. அவள் ஓர் அழகுத் தேர். தூய வெள்ளை ஆடையில் அந்த அழகு மேலும் பிரகாசித்தது. கலெக்டர் அதிர்ந்து போனார். இத்தனை அழகும் பொருளற்றதாக ஆகிவிட்டதே என்று கலங்கினார். அதே சமயம் 'கந்தசாமி உண்மையாகவே ஒரு தேசபக்தன் தான். இல்லாவிடில் இப்படி ஓர் அழகுச் சிலையை விட்டுவிட்டு இராணுவத்திற்குப் போயிருப்பானா?' என்றும் எண்ணலானார்.

கந்தசாமியின் மனைவி சற்றுத் தொலைவில் நின்று கலெக்டருக்கு வணக்கம் செலுத்திவிட்டுத் தலை குனிந்தபடி நின்றிருந்தாள்.

கலெக்டர் மரியாதை தெரிந்தவர். எழுந்து நின்று அந்தப் பெண்ணுக்கு வணக்கம் செலுத்தி, "அம்மா! மேன்மை மிக்க நம் ஜனாதிபதி உங்களிடம் இந்தக் கடிதத்தைக் கொடுக்கும்படி எனக்கு ஆணையிட்டிருக்கிறார். பெற்றுக் கொள்ளவேண்டும். உள்ளே மூன்று கடிதங்கள் இருக்கின்றனவாம். மூன்று உறைகளிலும் வரிசையாக இலக்கமிட்டிருக்கிறதாம். எண் வரிசைப்படி மூன்று கடிதங்களையும் நீங்கள் படிக்கவேண்டும் என்பது ஜனாதிபதியின் விருப்பம்" என்றார்.

அந்தப் பெண், "என் கணவரின் பாட்டனார்தான் எங்கள் குடும்பத்திற்குப் பெரியவர்கள். அவர்களிடம் கடிதத்தைக் கொடுங்கள்" என்றார். கலெக்டரும் ஆனந்தரங்கம் பிள்ளையிடம் கடிதத்தைக் கொடுத்தார். அவர் அதை வாங்கிக்கொண்டு "தாமரை! ஜனாதிபதி உனக்கு எழுதிய கடிதம். நீ தனிமையில் இருந்து படிப்பதுதான் நல்லது" என்றார்.

"இல்லை ஐயா, நீங்கள் படிப்பதுதான் பொருத்தம். நம் குடும்ப உறுப்பினர்கள் அனைவர் முன்னிலையிலும் படிப்பது மேலும் பொருத்தம்" என்றாள் தாமரை.

ஆனந்தரங்கம்பிள்ளை, குடும்ப உறுப்பினர்கள் அனைவரையும் ஹாலுக்கு வரவழைத்தார். கலெக்டர் புறப்படத் தயாரானபோது அவரையும் இருக்கும்படி ஆனந்தரங்கம்பிள்ளை வேண்டிக்கொண்டார். பிறகு அவர் உறையைப் பிரித்து முதல் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினார். அது ஜனாதிபதி எழுதியது.

"புண்ணிய மகளே! உனக்கு எல்லா மேன்மைகளும் உண்டாகுக! உன் கணவர் மேஜர் கந்தசாமி போர் முனையில் இருந்தபோது உனக்கு ஒரு கடிதம் எழுதி, அதை எனக்கு ஒரு குறிப்புடன் அனுப்பியிருந்தார். அந்தக் குறிப்பில் அவர் போர் முனையில் இறக்க நேர்ந்தால், துக்க அனுசரிப்பிற்குச் சிறிது கால அவகாசம் கொடுத்தபிறகு அந்தக் கடிதத்தை உன்னிடம் சமர்ப்பிக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அத்துடன் உனக்கு அவர் எழுதியுள்ள கடிதத்தை, சமூக அக்கறை கருதி நானும் படிக்கவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டிருந்தார். அதனால் அதை நான் படித்தேன். மேஜர் கந்தசாமி ஒரு மாமனிதர். அவரை வணங்குகிறேன்.

அன்புடன்

ஜனாதிபதி

ஆனந்தரங்கம்பிள்ளையும் மற்றவர்களும் திகைப்பிலும் வியப்பிலும் ஆழ்ந்து போனார்கள். தாமரையின் நிலையை விவரிக்க வார்த்தைகள் இல்லை.

ஆனந்தரங்கம் பிள்ளை இரண்டாவது கடிதத்தைப் படித்தார். அது கந்தசாமி தாமரைக்கு எழுதியது.

"அன்பே தாமரை!

இந்தக் கடிதம் உனக்குக் கிடைக்கிறபோது நான் இறந்து சில நாள் ஆகியிருக்கும். நன்றியுள்ள நம் நாடும் மக்களும் போர்முனையில் நான் உயிர் துறந்ததற்காக என்னைப் போற்றிப் புகழ்வர். அந்தப் புகழில் உனக்கும் பங்குண்டு, ஆனால் அதற்காக நீ கொடுக்க இருக்கும் விலை என்ன? அது மட்டுமன்று, நாட்டுக்காக உயிரைத் துறந்ததோடு என் கடமை முடிந்ததா? என்னையே எல்லாமாக நம்பி வாழ்வை மேற்கொண்ட உனக்கு ஒரு நல்ல வருங்காலத்தை ஏற்படுத்தித் தரவேண்டாமா? இரண்டையும் நீளச் சிந்தித்தேன். அதன் விளைவே இந்தக் கடிதம்.

கணவனை இழந்த பெண்களுக்கு உலக இன்பங்களெல்லாம் விலக்கு. பூவும் பொட்டும் பகை. நகைகளும் நல்ல உடைகளும் தடை. பொது இடங்களில் முகமலர்ச்சியோடு தோன்ற உரிமை இல்லை. உற்சாகமாகப் பேசிக் களிக்கச் சுதந்தரம் இல்லை. அவர்கள் காலமெல்லாம் நான்கு சுவர்களுக்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டிய ஆயுட்கைதிகள். இதுதான் நம் சமுதாயத்தில் இன்றுள்ள நிலை. நானும் நீயும் கூடி மகிழ்ந்ததெல்லாம் பத்தே நாள்கள்தான். அந்தப் பத்துநாள் வாழ்வுக்காக உனக்கு இவ்வளவு பெரிய தண்டனையா? இது என்ன நியாயம்?



எண்ணிப் பத்தே நாள்கள் நாம் நடத்திய குடும்ப வாழ்வில் நான் உன்னிடம் கண்ட புதுமைகள் பல; கற்ற குடும்ப வாழ்வின் இலக்கணமும் அதிகம். சராசரிப் பெண்கள் நிறைந்த நம் சமுதாயத்தில் நீ ஒரு வித்தியாசமான பெண்!

ஆண்டவன் எல்லாருக்கும் அழகை அளிப்பதில்லை. உனக்கோ வாரிக் கொடுத்திருக்கிறான். அத்தனை அழகும் இனி உபயோகமற்றுப் போவதா? அழகிய சிலை பார்க்கப்படவேண்டாமா?

தேனினும் இனிய குரல் பலருக்கும் வாய்ப்பதில்லை. உனக்கு வாய்த்திருக்கிறது. அது ஊமையின் குரலாக மடியலாமா? நல்ல வீணை மீட்டப்படவேண்டாமா?

நீ கிராமத்துப் பெண்ணாக இருந்தாலும் அளந்து பேசினாய். அடுத்தவர் மனம் அறிந்து பேசினாய். அன்போடு பேசினாய். நல்லதையே பேசினாய். கணவனையும் குடும்பத்தையும் இன்ப உச்சிக்கும் புகழ் உச்சிக்கும் எடுத்துச் செல்ல ஒரு மனைவியிடம் விளங்கவேண்டிய அரிய குணமும் பண்புமல்லவா இது? இது என்னோடு முடிவதா? நல்ல நூல்களும் உள்ளத்தை உருக்கும் கவிதைகளும் வாசிப்பார் இல்லாமல் அழியலாமா?

இன்று சமூகத்தில் உள்ள ஒரு பெருங்குறை, குடும்ப அமைப்பை, சிற்றின்ப நுகர்ச்சிக்கும் உணவு தயாரிப்புக்கும் வம்ச விருத்திக்கும் என்ற அளவோடு மனிதர்கள்

நிறுத்திக்கொண்டதுதான். இதன் பயனாக நல்ல கணவர்களையும் நல்ல மனைவிகளையும் காணமுடிய வில்லை. நல்ல கணவர்கள் வாய்க்கப் பெறாத பெண்கள் நடைப்பிணங்களாக வாழ்கிறார்கள். நல்ல குழந்தைகளைப் பெற்று வளர்க்கும் விருப்பத்தையும் தகுதியையும் இழக்கிறார்கள். நல்ல மனைவிகள் அமையாத கணவர்களோ வாழ்க்கையில் வெறுப்புற்று யாருக்கும் பயன்படாத பிறவிகளாக அலைகிறார்கள்.

ஒரு நல்ல மனைவி மட்டும் ஒரு கணவனுக்கு வாய்த்தால் அவன் இல்லற இன்பங்களையும் நிறைவாக அனுபவிப்பான். இல்லற தர்மங்களையும் நிறைவாக ஆற்றுவான்.

ஒரு மனைவி இன்பத்தை வழங்கும் கருவி மட்டுமல்லள். கொண்ட கணவனை உயர்ந்தோனாக்கும் துணைவியும் கூட. ஒருகணவனை அந்த நிலைக்கு உயர்த்தும் திறனும் ஆற்றலும் உன்னிடம் நிறைய உண்டு. அவை யாவும் எனக்கு மட்டுமே பயன்பட்டனவாக இருந்து இப்போது உபயோகமற்றவை என்று ஆகிவிடக்கூடாது. உழவன் இறந்தான் என்பதற்காக நிலம் தரிசாகலாமா?

வெள்ளை உடையில் யாருக்கும் பயன்படாத ஒரு வாழ்க்கையை உதறு. இன்னோர் இளைஞனை மணந்து கொள். அவனை உயர்ந்தோனாக்கு. அதே சமயம் உனக்கு மறுக்கப்பட்ட அனைத்து இன்பங்களையும் அனுபவி.

'ஐயோ! மறுமணமா?' என்று பதறாதே. இன்பத்தை அனுபவிப்பது குற்றம் என்றும் அதைத் துறத்தலே இன்பம் என்றும் நம் மக்களிடம் தொன்று தொட்டு ஒரு தவறான கருத்து வேரூன்றி நிலைத்துவிட்டது. அதற்கு அடிமைப்பட்டு நம் மக்களும் வாழ்க்கையை இழந்து வாடுகின்றனர். பலவகையான இன்ப ஊற்றுகளைப் படைத்தவன் ஆண்டவன். அவற்றை நுகர்வதற்கென்று ஐம்புலன்களை நமக்குத் தந்தவனும் ஆண்டவன். ஆண்டவன் படைப்பு நிலையானது என்று சொல்ல முடியுமா? முறையற்ற இன்பம்தான் பிழையே தவிர முறையோடு உள்ள இன்பங்கள் அனைத்தும் அனுபவிக்கப்பட வேண்டியவையே. சொல்லப் போனால் அனுபவிக்காமலிருப்பதுதான் குற்றம்! ஆண்டவன் தந்த உயிரை அனுபவியாமல் தற்கொலை செய்து கொள்வது எப்படிப் பாபமோ, அதே போல ஆண்டவன் இன்ப அனுபவங்களுக்காகத் தந்த புலன்களையும் வாய்ப்பு களையும் உபயோகப்படுத்தாமல் விடுவதும் பாபம்! அது ஆண்டவனையே மறுப்பதாகும்.

நான் ஒருவன்தான் உனக்கு என்ற எண்ணத்திலிருந்து விடுபடு. கடவுள்தான் நம் எல்லாருக்கும். காரணம் இல்லாமல் காரியங்கள் நிகழா. கடவுளின் படைப்பு ரகசியம் இதுதான். கடவுள் என்னை எடுத்துக்கொள்கிறார் என்றால், என்னையும்விட மேலான ஒரு கணவரை அவர் உனக்குத் தர எண்ணுகிறார் என்றே பொருள்.

வாழ்க்கையில் இரண்டு கூறுகள் உண்டு. ஒன்று அதை நமக்கு உபயோகப்படுத்திக்கொள்வது; இன்னொன்று அதைப் பிறருக்கும் உபயோகமாக்குவது. மறுமணம் ஒன்றுதான் இந்த இரண்டு நோக்கங்களையும் பயனுள்ள முறையில் நிறைவேற்றும்.

வீட்டிலும் கைம்பெண்ணாக நீ அடங்கிக்கிடப்பது உன் அளவில் மட்டும் உள்ள துன்பமா? உன்னைப் பெற்று வளர்த்த உன் பெற்றோரை, உன்னைத் தன் கண்ணின் மணியாக ஏற்றுக் கொண்ட என் பெற்றோரை, நம் குடும்பத்தின் தெய்வம் என் பாட்டனாரை, நம் சுற்றத்தை—இப்படி எல்லாரையும் அந்தத் துன்பம் தாக்காது விடுமா? உனக்காக மற்றவர்களையும் துன்பத்தில் ஆழ்த்துவதற்கு உனக்கு ஏது உரிமை?

கைம்பெண்ணாகவே வாழ்வதென்று நீ முடிவு செய்தாலும் நம் இரு குடும்பங்களிலும் பெரியவர்கள் வாழும் வரைதானே உனக்குப் பாதுகாப்பும் ஆதரவும் உண்டு? அவர்கள் காலத்திற்குப் பிறகு உன்னைக் காப்பது யார்? உன் நிலை என்ன?

நாள்கள் செல்லச் செல்ல நீயுமே 'எங்கிருந்து வந்தான் இவன்? பத்துநாள் பழக்கத்தில் என்னைப் பட்டமரமாக்கிப் போய்விட்டானே' என்று என்னை நிந்திக்கக்கூடும். உன்னைக் காண்பவர்களும் 'இந்த அழகுச் சிலையை வாழாவெட்டியாக்கிவிட்டுப் போய்விட்டானே' என்று என்னைச் சபிப்பார்கள்.. அந்த நிந்தனையிலிருந்து என்னை விடுவிக்கவாவது உன் மறுமணம் உதவும்.

அதுமட்டுமன்று, நீ மறுமணம் செய்துகொண்டால் உன்னைப் பின்பற்றி, போர்முனையில் உயிர்த்தியாகம் செய்த மற்ற இராணுவ வீரர்களின் கைம்பெண் மனைவிகளும் மறுமணம் செய்து கொள்ளத் துணிவார்கள். அது நீ சமுதாயத்துக்குச் செய்யும் பெரிய கொடை!

மறுமணம் குலப்பெண்களுக்கு ஏற்றதன்று என்று நீ எண்ணலாம். அது தவறு. மனைவியை இழந்த கணவன் மறுமணம் செய்து கொள்வதில்லையா? அதை அங்கீகரிக்கும் சமூகம் பெண்ணின் மறுமணத்தை ஏன்அங்கீகரிக்காது? ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கு ஒரு நீதியா?

முடிவாக ஒன்று. பெண்ணின் வாழ்வை நிறைவு செய்வதும் பெருமைப்படுத்துவதும் எது? குழந்தை! தாய்மைதான் பெண்மையைத் தெய்வநிலைக்கு உயர்த்துகிறது. அந்தப் பேற்றை மறுமணம் ஒன்றைத்தவிர வேறு எதன்மூலம் நீ பெற முடியும்?

எனவே, புதிய சிந்தனைக்கு வா. புரட்சி செய். மறுமணம் செய்துகொள். உனக்குப் பிறக்கும் முதல் குழந்தை வேறு யாருமாக இருக்காது! நான்தான் அது!

வெளியில் இருந்து வந்தவனாக இல்லாது உன் உள்ளில்

மேகம் திரண்டு வானில் நடந்து
மின்னல் இடியுடன் மழை - புவி
தாகம் தணிந்து தளிர்கள் எழுந்து
தழையும் தாவரத் தழை!

தேனை எடுக்க கானம் படிக்கும்
தேனீ யதனின் கலை - மன
வீணை அதிர்ந்து நாதம் எழுப்பும்
விளையும் இன்பநிலை!

## மனிதம் வாழும் தினம்



கவிமாமணி
செ.சு.மலரடியான்

தேவன் உள்ளம் அன்பின் வெள்ளம்
தேடும் நெஞ்சின் வசம் - வந்து
மேவும் இன்பம் யாவும் அந்த
மன்னன் அருளின் நிசம்!

அன்பின் பாதை என்றும் தேவை
அகிம்சை காந்தி மனம் - இது
மன்றில் வாழும் தென்றல் கீதம்
மனிதம் வாழும் தினம்!

இருந்து வந்தவனாக நான் இருப்பது உன்னிடம் எனக்கு உள்ள உறவை மேலும் வலுப்படுத்தும் புனிதமாகவும் ஆக்கும்.

தாயே! வணக்கம்.

அன்புடன்

**கந்தசாமி**

கடிதத்தைப் படித்து முடிக்க ஆனந்தரங்கம்பிள்ளை பெரும் சிரமப்பட்டார். அடிக்கடி கண்களில் நீர் நிறைந்து கொண்டது. தொண்டை கட்டிக் கொண்டது. மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு ஒரு வழியாகப் படித்து முடித்தார்.

தாமரை 'கோ'வென்று அழுதாள். அவளைப் பார்த்து மற்றவர்களும் அழுதார்கள்.

ஆனந்தரங்கம் பிள்ளை தாமரையை ஆசுவாசப்படுத்தினார். பிறகு மூன்றாவது உறையைப் பிரித்தார். ஜனாதிபதி மீண்டும் எழுதியிருந்தார்.

''மகளே!

என்னைப் பார்ப்பதற்குப் பலமொழி அறிஞர்களும் வருவார்கள். அவர்களில் தமிழ்ச் சான்றோர் மட்டும் என்னைப் பார்க்கும்பொழுதெல்லாம் உங்கள் தமிழ்மொழியில் உள்ள திருக்குறளின் மேன்மையை விளக்கத் தவறமாட்டார்கள். சில குறள்களுக்கு விளக்கமும் சொல்லுவார்கள். அவற்றுள் என்னை மிகவும் கவர்ந்த குறள் 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்' என்பதுதான். அந்தக் குறளுக்கு அவர்கள் சொன்ன அர்த்தங்களெல்லாம் எனக்குப் பூரண திருப்தியைத் தரவில்லை. மேஜர் கந்தசாமி எழுதிய கடிதம்தான் அந்தக் குறளுக்குச் சரியான விளக்கமாக எனக்குப் பட்டது. உண்மையான அன்புகொண்ட ஒரு கணவன், தான் இறந்தபிறகு தன் மனைவி கைம்மை நிலை ஏற்று நான்கு சுவர்களுக்குள் அடைபட்டுக் கிடப்பதை விரும்புவானா?

மேஜர் கந்தசாமி உனக்கு எழுதிய கடிதத்தில் குறித்துள்ள கருத்துகள் சமுதாயத்திற்கு உகந்தவை என்று நான் கருதினால், மறுமணத்திற்கு இசையும்படி உனக்கு நான் ஆலோசனை வழங்கவேண்டுமென்று கந்தசாமி எனக்கு எழுதியுள்ள குறிப்பில் தெரிவித்திருந்தார்.

திருமணம், மறுமணம் இரண்டுமே மனிதர்களின் சொந்த வாழ்க்கை பற்றியது. அவற்றில் பிறருடைய வற்புறுத்தல்கள் இருக்கலாகாது. ஆனாலும் மரணத்தை எதிரில் வைத்துக்கொண்டு ஒருவர் எழுப்பிய வேண்டுகோளை நான் புறக்கணிப்பதற்கில்லை. எனவே நான் சொல்ல விரும்புவது, நிதானமாக யோசி. உன் மனம் ஒப்பினால் மறுமணம் செய்துகொள். சமுதாயத்திற்கு நீ செய்யும் பெருந் தொண்டாக அது அமையும். இராணுவ வீரர்கள் விட்டுச் சென்ற கைம்பெண்கள் பலருக்கும் நீ புதுப்பாதை அமைத்துக் கொடுத்ததாகவும் ஆகும்.

நீ மறுமணத்தை ஏற்றுக்கொண்டால், அந்த நிகழ்ச்சியில் மகிழ்வோடு கலந்துகொள்ளும் சுற்றத்தில் நானும் என் துணைவியாரும் முன் வரிசையில் இருப்போம்.

வாழ்க!

அன்புடன்

**ஜனாதிபதி**

ஆனந்தரங்கம்பிள்ளை படித்து முடித்ததும் ஐந்து நிமிடம் யாருமே பேசவில்லை. பிறகு ஆனந்தரங்கம்பிள்ளைமட்டும் ஆவேசம் வந்தவர்போல் பேசலானார்.

''கந்தசாமி கடிதத்தை ஒரு மனுஷன் எழுதினதாகவோ ஒரு புருஷன் எழுதினதாகவோ நாம் நினைக்கக்கூடாது. கந்தசாமி இப்போ கடவுளா இருக்கான். சுத்துப்பத்து பத்து கிராமங்களும் அவனைக் கடவுளா ஏத்துகிட்டு வழிபடுறாங்க. அதனாலே இது கடுதாசி இல்லை. கடவுளோட ஆணை. அதை நிறைவேத்துறது நம்ம பொறுப்பு"

ஆனந்தரங்கம் பிள்ளையின் பேச்சுக்கு ஊரே மறுப்பு சொல்லாதபோது அவருடைய குடும்பமா மறுப்பு சொல்லும்?

ஆறு மாதங்கள் கழித்து...

கந்தசாமி கோயில் கட்டி முடிந்து கும்பாபிஷேகம் நடந்து முடிந்த கையோடு அங்கு நடந்த முதல் நிகழ்ச்சி தாமரையின் மறுமணம்தான்! அந்த மறுமணத்திற்கு முக்கிய சாட்சிகள் ஜனாதிபதி தம்பதியும், கோயிலில் கொலு வீற்றிருந்த கந்தசாமிக் கடவுளும்தான்!

# என்னுயிர்க் கண்ணம்மா!

என்னுயிர்க் கண்ணம்மா - என்னை
வாட்டுவ தென்னம்மா?

பாட்டினை எழுதத் தாளினை எடுத்தால்
பளிச்செனச் சிரிக்கின்றாய் - உன்றன்
கூட்டினை வேண்டிக் கைகளை விரித்தால்
கனவென மறைகின்றாய் (என்)

நினைப்பினிற் கொள்ளை இன்பமே பொழிந்து
நெஞ்சினில் இனிக்கின்றாய் - அந்த
நினைப்பினிற் குளித்தே துவட்டிட அழைப்பேன்
நீயென்ன நினைக்கின்றாய்? (என்)

கண்ணா மூச்சி ஆட்டமே காட்டிக்
களைப்பினைத் தருகின்றாய் - என்றன்
எண்ணம் மூச்சில் இருப்பது நீயே
இனியேன் ஒளிகின்றாய்? (என்)

நெஞ்சச் சிலந்தி பின்னிடும் வலையில்
நினைப்பெலாம் சிக்குதடி! - அழியும்
நெஞ்சைக் காக்கப் பின்னலை நீக்க
நீவர வேண்டுமடி! (என்)

என்னடி உன்றன் நினைப்படி திறந்தே
இதயமே காட்டிடடி - உன்றன்
கண்ணடி பட்டுக் காலடி வீழ்ந்த
காயமே ஆற்றிடடி! (என்)

சொல்லடி உன்றன் வல்லடி நடப்பில்
சுருண்டவன் நானடியோ! - இங்கே
நில்லடி என்றன் நெஞ்சடி மண்ணில்
மலரெனப் பூத்திடடி! (என்)

டாக்டர் ச. சவகர்லால்

# காவேரிக் கரையிலே

காவேரிக் கரையிலே
காலமெல்லாம் காத்திருக்கும்
பாவேந்தன் எனைத்தேடி
பாவைநீயும் வாராயோ? (காவேரி)

ஆதிமந்தி ஆட்டனத்தி
ஆடிப்பாடி வந்த நதி!
சேதியிதைச் சொல்லுதற்குச்
சோலையெல்லாம் கடந்து வந்தேன்! (காவேரி)

அம்பிகா பதியோடு
அமரா வதிகூடி
செம்மையாய்க் காதலித்த
சிறந்தமண் இதுவன்றோ! (காவேரிக்)

பொங்கிவரும் கடல்போல
பௌர்ணமி நிலவுபோல
ஏங்கிவரும் என்முகத்தை
ஏறெடுத்தும் பாராயோ? (காவேரிக்)

உடலால் இரண்டு பட்டும்
உள்ளத்தா லொன்றானோம்!
கடலினில் ஆறு சேரக்
காதலால் ஒன்றாவோம்! (காவேரிக்)

காதலா லொன்றுபட்டுக்
களிப்பாக வாழ்ந்திடுவோம்!
ஆதலால் நீயுமிங்கு
ஆரணங்கே வந்திடுவாய்!! (காவேரிக்)

குடந்தை புகழேந்தி

# சீதாதேவியின் அருளால் சிறைக்கதவு திறந்தது!

ஸ்ரீ ஸ்ரீ கிருஷ்ணப் பிரேம் ஸ்வாமிகள்





ஐதராபாத் நவாப் தானிஷா திவான் அக்கண்ணாவை அவசரமாக அழைத்தார். "பத்ராசலம் தாலுகா தாசில்தார் கோபண்ணாவிடமிருந்து வரிப்பணம் வந்து சேரவில்லை. தாக்கீது அனுப்பி வைத்துக் காரணம் கேட்டால், வரிப்பணத்தைக் கோயில் கும்பாபிஷேகம் செய்ததில் செலவழித்துவிட்டதாகப் பதில் அனுப்பி வைத்திருக்கிறார். நமக்குச் சேர வேண்டிய வரிப்பணத்தை கோபண்ணா துஷ்பிரயோகம் செய்திருப்பதால் அவரைக் கைது செய்து கொண்டு வரலாமா? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் நவாப்.

திவான் அக்கண்ணாவிடம் நவாப் அபிப்பிராயம் கேட்காமலேயே அவரைக் கைது செய்ய உத்தர விட்டிருக்கலாம்.. திவானை அழைத்துக் கருத்துக் கேட்டதற்குக் காரணம், அவரது மருமகன் கோபண்ணா தான் பத்ராசலத்தில் தாசில்தாராக வேலை பார்த்து வந்தார்.

திவான் அக்கண்ணா நவாபிடம் சிபாரிசு செய்து தன் மருமகன் கோபண்ணாவிற்கு அந்த வேலையை வாங்கிக் கொடுத்தார். அதனால் தான் நவாப் பெருந்தன்மையுடன் திவான் அக்கண்ணாவிடம் "கோபண்ணாவைக் கைது செய்யலாமா?" என்று கேட்டார்.

ஐதராபாத் நிஜாம் முஸ்லிமாக இருந்தாலும் இந்து மதத்தைச் சார்ந்த அக்கண்ணாவைத் திவானாகப்

பணிபுரிய நியமனம் செய்திருந்தார். அவருக்கு திறமையான நேர்மையான திவான் என்ற நற்பெயர் இருந்தது.

இந்துக்களிடம் ஐதராபாத் நவாபிற்கு எத்தகைய ஈடுபாடு இருந்தது என்பதற்கு இது ஓர் உதாரணம். தன் மருமகன் கோபண்ணா வரிப்பணத்தைக் கஜானாவில் சேர்ப்பிக்காமல் பத்ராசலம் கோயில் புனருத்தாரணத் திற்காகச் செலவிட்டதைப் பொறுத்தருளுமாறு நவாபிடம் அவர் சொல்லவில்லை. அதற்குப் பதிலாக "உடனே, கோபண்ணாவைக் கைது செய்ய உத்தரவிடுங்கள். இதில் தயவு தாட்சண்யம் பார்ப்பதற்கு இடமில்லை" என்று பதிலளித்தார். அங்கே கோபண்ணா தன் உறவினர் என்ற பாசம் குறுக்கிடவில்லை. ஒரு நேர்மையான அரசாங்க அதிகாரி அப்படித்தான் இருக்கவேண்டும். இல்லை யென்றால் ஊழலுக்குத் துணைபுரிந்தவராகி விடுவார்.

கோபண்ணாவைக் கைது செய்து ஐதராபாத் சிறையில் அடைக்க உத்தரவாயிற்று. இராம பக்தரான கோபண்ணாவை, பத்ராசலம் மக்கள் "பக்த இராமதாஸ்" என்று அழைத்து வந்தார்கள். ஸ்ரீஇராமபிரானிடம் அளவுகடந்த பக்தி கொண்ட இராமதாஸரை நவாப்பின் காவலர்கள் கைது செய்துகொண்டு போனபோது அவருக்குப் பின்னாலேயே மக்கள் ஓடி வந்து கண்ணீர் உகுத்தார்கள்.

ஐதராபாத் சிறையில் அடைபட்ட இராமதாசர் அல்லும் பகலும் இராமபிரானின் திவ்யநாமத்தைச் சொல்லிக் கதறிக் கொண்டே இருந்தார். "இராமா! வரிப்பணத்தை எனக்காகவா செலவிட்டுக் கொண்டேன்? உனக்குத்தானே செலவிட்டேன்? நீ வீற்றிருந்த ஆலயம் சிதிலமடைந்து கிடந்ததைக் கண்டு அதைப் புதுப்பித்துக் கட்டி முடிக்கச் செய்தேனே! அதற்குத் தண்டனை இந்தக் கடுங்காவலா?" இப்படிச் சில வருஷங்கள் கண் உறங்காமல் ஆகாரம் உட்கொள்ளாமல் கதறிக் கொண்டே இருந்தார். "நான் அலறிக் கதறுவது உன் செவிகளில் விழவில்லையா?" என கண்களில் நீர் ததும்பக் கேட்டார்.

பத்ராசலம் ஆலயத்தில் இராமபிரானுக்கு அருகில் சர்வாலங்கார பூஷிதையாக வீற்றிருந்த சீதாதேவி தன் பர்த்தாவிடம் கேட்டாள். "உங்கள் பரம பக்தரான இராமதாஸர் சிறையில் அடைக்கப்பட்டுச் சித்ரவதைப் படுவதும் உங்கள் திவ்ய நாமத்தைச் சொல்லிக் கதறுவதும் உங்களுடைய செவியில் விழவில்லையா?"

"விழுகிறது!" என்றார் ஸ்ரீஇராமர்.

"ஒரு பக்தனின் கூக்குரல் உங்கள் செவிகளில் விழுந்தும்கூட பேசாமல் இருப்பது தர்மமா?" என்று மீண்டும் கணவர் ஸ்ரீஇராமச்சந்திர மூர்த்தியை மெல்ல அசைத்துக் கேட்டாள் சீதாதேவி. அதற்கும் பேசாமல் இருந்தார் இராமபிரான்.

சீதாபிராட்டியே மேலும் பேசினாள்: "இந்த ஆலயத்தில் நாம் ஏற்கெனவே எப்படி இருந்தோம் என்று உங்களுக்கு நினைவிருக்கிறதா? தீபம் கூட சரிவர எரியாமல் இருட்டில் நாம் இருவரும் இருக்கும் இடம் தெரியாமல் இருந்தோமே, ஞாபகம் இருக்கிறதா? அழுக்கேறி எண்ணெய்ப் பசையோடு மக்கிப் போன உடைகளுடன் நாம் இருந்தபோது அதைக் கண்டு பக்தன் இராமதாசர் நமது வஸ்திரங்களை எல்லாம் கழற்றி எறியச் செய்து பட்டாடைகளை உடுத்த வழி செய்தாரே, அதை மறந்து விட்டீர்களா?

"பட்டாடைகள் மட்டும்தானா? தங்க, வைர நகைகள், நவரத்தின கிரீடங்கள்! புதிதாக நிர்மாணிக்கப்பட்ட கோபுரங்கள்! பளிச்சிடும் வண்ண விளக்குகள்! பழைய பத்ராசலம் ஆலயம் தானா? என்று நாம் யோசிக்கிற அளவுக்கு இத்தகைய சிறப்புகளைச் செய்திருக்கும் உங்கள் பக்தன் இராமதாஸுக்குக் கிடைத்திருக்கும் வெகுமதி சிறைத்தண்டனையா? இராமதாஸரைச் சிறையிலிருந்து நீங்கள் விடுவிக்க கருணாகடாட்சம் புரிய வேண்டாமா?" வேதனை மேலிட வினவினாள் சீதாபிராட்டியார்.

அவ்வளவையும் கேட்டுக்கொண்ட இராமர் அர்த்தபுஷ்டியுடன் சிரித்தார். பிறகு பதில் அளித்தார். "கோபண்ணாவின் பக்தி ஆத்மார்த்தமானது; அளவில்லாதது. ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அவர் செய்த தர்மம் அதர்மம் மேலிட்டது. சர்க்காருக்குச் செலுத்தப்பட வேண்டிய வரிப்பணத்தை எடுத்து ஆலயக் கும்பாபிஷேகம் செய்யலாமா? நமக்கு ஆபரணங்கள், ஆடைகள் வாங்கிக் குவிக்கலாமா? அந்தப் பணத்தில் உற்சவாதிகள் நடத்தலாமா? அவர் செய்தது அதர்மமான காரியம்.

"இப்படி ஒரு பக்தன் ஊருக்கு ஒருவராகப் புறப்பட்டுத் தெய்வத் தொண்டு என்ற பெயரால் அரசாங்கப் பணத்தைத் துர்விநியோகம் செய்தால் அரசாங்கம் நடக்குமா? நாடு செழிக்குமா? கோபண்ணா செய்த காரியம் தவறானது.

"பத்ராசலம் கோயில் சிதிலமடைந்து கிடக்கும் செய்தியை, தாசில்தாரரான கோபண்ணா நவாப்பிடம் சொல்லியிருக்க வேண்டும். அதற்கு நிதியுதவி வழங்குமாறு மக்களின் கோரிக்கையுடன் நவாப்பைச் சந்தித்திருக்க வேண்டும். அல்லது பத்ராசலம் மக்களிடம் கோயில் திருப்பணிக்காகப் பணம் வசூல் செய்து அவர் இந்தத் திருப்பணிகளைச் செய்திருந்தால் பாராட்டப்பட வேண்டிய செயல். அதையெல்லாம் விட்டுவிட்டு சட்டத்திற்குப் புறம்பாக சர்க்காருக்குச் சேரவேண்டிய பணத்தைத் தன் இஷ்டப்படி செலவிட்டது குற்றமாகும். அந்தக் குற்றத்திற்குரிய தண்டனையைத் தான் கோபண்ணா அனுபவித்துக் கொண்டிருக்கிறார்."

"இப்படி பக்தர்கள் படும் துன்பங்களைத் துடைக்க நீங்கள் முன்வராமல் இருந்தால் எந்த பக்தன் தெய்வ பக்தியோடு இருப்பான்? எந்த பக்தன் ஆலயத் திருப்பணி செய்ய முன் வருவான்? 'கடவுளுக்குக் கண்ணில்லை'

என்று சொல்லி நம்மைத் தூற்றிக் கொண்டு போவான்!'' என்று எதிர்க்குரல் எழுப்பினாள் சீதாதேவி.

"அதர்ம வழியில் எந்த பக்தனும் தெய்வத் தொண்டு செய்வதை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். நவாப், கோபண்ணாவிற்குக் கொடுத்த தண்டனை நியாயமானது. ஆனால் அதிலிருந்து விடுபட வழி இருக்கிறது.'' என்றார் இராமபிரான்.

"அப்படியா? அதென்ன வழி?'' என்று கேட்டு சீதாபிராட்டி பரபரத்தாள்.

"சர்க்காருக்கு கோபண்ணா செலுத்த வேண்டிய வரிப்பணத்தை எப்படியாவது செலுத்தி விட்டால் அவர் விடுதலை செய்யப்படுவார்.''

"பாவம்! கோபண்ணா எப்படி அவ்வளவு பணத்தைத் திருப்பிக் கட்டமுடியும்?''

"முடியும்! அதற்கு மகாலட்சுமியாகிய உன்னுடைய கருணாகடாட்சம் தேவைப்படுகிறது. கோபண்ணாவின் விடுதலையை நீ விரும்பினால் கருணை செலுத்து, உன்னுடைய கருணாகடாட்சத்தினால் பணம் கொட்டுமே!''

இராமர் இப்படிச் சொல்லி முடித்ததும், சீதாதேவி பிரசன்னவதனத்துடன் தன் திருக்கரங்களை உயர்த்தி அசைத்தாள். எதிரில் கலகலவென்று தங்க மோகராக்கள் கொட்டின.

அருகிலிருந்த தம்பி லட்சுமணனை இராமர், "லட்சுமணா! புறப்படு!" என்றார். அதற்காகவே காத்திருப்பது போல லட்சுமணன் கீழே குவிந்திருந்த நாணயங்களை இரண்டு மூட்டைகளாகக் கட்டினார்.

ஆளுக்கொரு மூட்டையாக சிரஸில் சுமந்து கொண்டு மனித உருவில் மாறிக் கிளம்பினார்கள்.

"நாங்கள் பத்ராசலம் தாசில்தார் கோபண்ணாவின் ஏவலர்கள். என் பெயர் இராம்சிங், இவன் பெயர் லட்சுமண்சிங். அவர் சர்க்காருக்குச் செலுத்த வேண்டிய வரிப்பணத்தைக் கொண்டு வந்திருக்கிறோம்'' என்று சொல்லி நவாபின் அந்தப்புரக் கதவை நள்ளிரவில் தட்டினார்கள்.

அந்தப்புரக் கதவு மட்டுமன்றி, சீதாதேவியின் திருவருளினால் சிறைக்கதவும் திறந்து கொண்டது.

---

"ஸ்ரீஸ்ரீகிருஷ்ண ப்ரேமி சுவாமிகள் செய்த *"பக்த ராமதாசர்"* உபன்யாசத்திலிருந்து:

*தொகுப்பு: நவீனன்*

# மீராவின் பிறபு

லக்ஷ்மி ரமணன்

தசாவதாரங்களில் ஒன்று கிருஷ்ணாவதாரம் என்பதும், விஷ்ணுவின் அம்சம்தான் கிருஷ்ணன் என்பதும் நாம் அறிந்த விஷயங்கள். கண்ணன் பிறந்து வளர்ந்து லீலைகள் செய்த வடமதுரை, கோகுலம், பிருந்தாவனம் ஆகிய இடங்கள் அடங்கிய பகுதியான 'விரஜபூமி' (பிர்ஜ் பூமி) க்கு அடுத்துள்ள மாநிலம் இராஜஸ்தான் என்பதாலோ என்னவோ இங்கேயும் கிருஷ்ணன் கோயில்கள் நிறைய இருக்கின்றன. இராஜஸ்தானத்து பிரபல பிச்வாயி, கிஷன்கட், ஷேகாவதி ஓவியங்களிலும் இராதையும் கிருஷ்ணனும், இராஸலீலையும் மையக் கருத்தாக இருப்பதைக் காணமுடிகிறது.

கிருஷ்ணன் என்றதும் மீராவின் நினைவுதான் நமக்கு முதலில் வருகிறது. முன்னாள் மார்வாரின் ஆட்சிக்கு அடங்கிய சிற்றரசாக இருந்த மேர்த்தாவில், குர்க்கி என்னும் கிராமத்தில்தான் பக்த மீரா பிறந்தாளாம். இங்கே உள்ள 'சார்புஜ்' (கிருஷ்ணனை இங்கு இப்படித்தான் குறிப்பிடுகிறார்கள். நான்கு புஜங்களைக் கொண்டவன் என்பது இதன் பொருள்) கோயிலை மீராவின் கோயில் என்றுதான் அழைக்கிறார்கள். கோபுரம், மேற்கும்பம் எதுவுமின்றி சாதாரண வீட்டைப்போல் காட்சிதரும் இக்கோயில் மீராவின் தந்தை வழிப் பாட்டனார் ராவ் தூதாஜீ என்பவரால் கி.பி.1458இல் கட்டப்பட்டதாம்.

குழந்தைப் பிராயத்திலேயே பெற்றவர்களை இழந்த மீராவை எடுத்து வளர்த்தவரும் தூதாஜீதான். சிறுமியாக இருந்தபோது மீரா இந்தக் கோயிலுக்கு அடிக்கடி ஓடிவந்து கண்ணனின் தியானத்தில் லயித்துப் போய் வீற்றிருப்பாளாம். பிற்காலத்தில் மீராவின் கிருஷ்ணபக்திக்கு அஸ்திவாரமாய் அமைந்ததும் இதுதான் என்கிறார்கள்.

மூலஸ்தானத்தில் கறுப்புச் சலவைக் கல்லில் கிருஷ்ணன் நான்கு புயங்களுடன் சங்கு, சக்ர, கதா, பத்மத்துடன் காட்சி தருகிறார். மீராவின் 'மேரே தூகிரிதர கோபால' என்கிற பாடல் கண்ணனின் இந்தத் தோற்றத்தை உள்வாங்கிக் கொண்டு பிறந்ததாக இருக்கலாம். கிருஷ்ணனின் முகமோ குழந்தையின் சிரிப்புடன் கொள்ளை அழகுடன் மிளிருகிறது. வெளிப் பிராகாரத்தில் மீராவுக்கு வெண்பளிங்கில் சிலை எழுப்பியுள்ளதுடன் பின் சுவர் முழுவதும் பளிங்குப் பலகைகளில் மீரா புனைந்த பாடல்களை எழுத்தில் வடித்து வைத்துள்ளார்கள்.

அடுத்து மீராவின் புக்ககமான சித்தோருக்குப் போவோம். கோட்டையில் இருக்கும் கிருஷ்ணன் கோயிலில் விக்கிரகம் இல்லை. அட்டையாலான கட் அவுட் ஒன்றைத்



மீராவுக்கு போஜராஜன் கட்டிக் கொடுத்த கிருஷ்ணன் கோயில் (சித்தோர்)



ஜெகதீசர் கோயில் (உதய்பூர்)

தான் வைத்திருக்கிறார்கள். விசாரித்த போது முகலாய அரசர் அக்பரின் படைத்தலைவராக இருந்த ஆமெர் மன்னர் இராஜா மான்சிங், சித்தோரின் மீது படையெடுத்தபோது மீரா ஆராதித்த கிருஷ்ண விக்கிரகத்தைத் தன்னுடன் எடுத்துச் சென்று ஜெகத் சிரோன்மணி என்கிற பெயரில் ஆமெரில் கோயில் கட்டி, பிரதிஷ்டை செய்துவிட்டார் என்று சொன்னார்கள்.

ஜெகத் சிரோன்மணி கோயில்



மீராவின் பிரபுதான் இக்கோயிலில் இல்லையே தவிர, இதற்குச் சரித்திரம் இருக்கிறது. தாத்தா தூதாஜீயின் பராமரிப்பில் இருந்தபோதே மேர்த்தாவுக்கு வருகை தந்த சுவாமி இராய்தாஸ் (ரவிதாஸ் என்றும் குறிப்பிடுகிறார்கள்) என்கிற துறவியின் ஆசி பெற்று கிருஷ்ணப் பிரேமியானாள். மேவாரின் இராணாவின் மகன் போஜராஜனை மணந்த பிறகும், அவள் கண்ணனின் மீது கொண்ட பக்தி மாறவில்லை. அதைக்கண்டு அதிசயித்தவராய் மீராவின் 'கானா' (கிருஷ்ணன்) வுக்காக இந்தக் கோயிலை போஜராஜன் கட்டினாராம். நுழைவாயிலின் அருகில் ரவிதாசரின் பாதங்கள் பதிக்கப்பட்ட பாறையையும் நாம் காணமுடிகிறது.

ஏகலிங்கேஸ்வரரைக் குலதெய்வமாகக் கொண்டு மேவாரை ஆண்ட வீர சிவபக்தர்களான ராணாவின் வம்ச பரம்பரையினர் தாங்களும் கிருஷ்ண வழிபாட்டில் ஈடுபடத் தொடங்கியதற்கு அறிகுறியாகப் பிற்காலத்தில் மேவார் இராஜ்யத்திலேயே கிருஷ்ணன் கோயில்கள் பல தோன்றுவதற்கு வழிவகுத்தார்கள்.

இதை அடுத்துக் காணப்படும் 'கும்பசியாம்' கோயில் முதலில் விஷ்ணு கோயிலாக இருந்ததாம். மத்தியில் நடந்த படையெடுப்பின்போது மூலவர் பின்னப்படுத்தப்பட்டு கோயில் சிதைந்து போனதால் பின்னால் வந்த கும்ப ராணா கோயிலைப் புதுப்பித்து கிருஷ்ணனைப் பிரதிஷ்டை செய்தாராம். கிருஷ்ணனுக்கு இரண்டு பக்கங்களிலும் நிற்பது பலராமனும் சுபத்திரையும் என்கிறார்கள். இரண்டு கோயில்களுமே பதினைந்தாம் நூற்

றாண்டில் சிறந்து விளங்கிய கட்டுமான முறைக்கு எடுத்துக்காட்டாக, கம்பீர மாகத் திகழ்கின்றன.

உதய்பூரில் இருக்கும் ஜகதீசர் கோயிலும் பிரபலமானது. கி.பி.1651இல் மகாராணா முதலாம் ஜெகத்சிங் இதைக் கட்டுவித்தாராம். கிட்டத்தட்ட எழுபது படிகள் ஏறிச் செல்லவேண்டும். புன்னகையுடன் குழலூதும் கிருஷ்ண னும், இராதையும் தரிசனமளித்து ஏறிவந்த களைப்பைத் துரத்தியடிக் கிறார்கள்.

உதய்பூர் அருகிலேயே 'சார்புஜ்' என்கிற இடத்தில் கிருஷ்ணன் கோயில் உள்ளது. இங்கே கண்ணனை வேட னாகவும் படை வீரனாகவும் அலங்கரிக் கிறார்கள். இந்தக் கோயில் சற்றுத் தனிமையான வனாந்தரப் பிரதே சத்தில் இருப்பது இதன் காரணமாக இருக்கலாம். இந்தக் கோயிலோடு இணைத்துச் சொல்லப்படும் கதை நம் கவனத்தைக் கவருகிறது.

இங்கு வழிப்பறிக் கொள்ளைகளைச் சேர்ந்து கூட்டாக இணைந்து செய்து வந்த நான்கு கள்ளர்கள், தங்கள் வருமானத்தின் ஒரு பகுதியைக் கிருஷ்ணனுக்குக் கொடுப்பதாக நேர்ந்து கொண்டு தினமும் காலையில் தொழிலைத் தொடங்குவார்களாம். மாலையில் வீடு திரும்புமுன் தாங்கள் சொன்னபடியே கிருஷ்ணனுக்குச் சேரவேண்டிய தொகையை உண்டி யலில் சேர்த்துவிட்டுப் போவார்களாம். திருடர்களாக இருந்தாலும் நேர்மை யாக நடந்து கொண்டதை மெச்சி, கிருஷ்ண பகவான் அவர்கள் கனவில் தோன்றி தகாத செயலுக்குத் தன்னைக் கூட்டாளியாக்குவதைவிட பக்தியையும் அன்பையும் பரப்பும் பணியை மேற்கொள்ளும்படி உபதே சித்தபின் அவர்களும் அதன்படியே மனம் திருந்தி இந்தக் கோயிலைச் சீர்படுத்திக்கட்டி, புதுவாழ்வை மேற் கொண்டார்களாம். காலையிலும் மாலையிலும் குறிப்பிட்ட நேர அளவுக்கே கோயில் திறந்திருப்பதால் விசாரித்துக்கொண்டு போக வேண்டி யிருக்கிறது.


ஸ்ரீநாதர் கோயில் நுழைவாயில்

இராஜஸ்தானிலேயே மிகப் பிரசித்தமானதும் வருமானத்தில் திருப்பதிக்கு அடுத்தபடியானதாகவும் விளங்குவது நாதத்வாராவில் உள்ள

கும்பசியாம் கோயில்





பிச்வாயி ஓவியத்தில் ஸ்ரீநாதர்

கோப்பாக இன்றும் வழக்காற்றில் பின்பற்றப்படும் ஆராதனை விதிமுறைகளும் மிகவும் சுவாரஸ்யமானவை.

இங்குள்ள ஸ்ரீநாதரின் விக்கிரகம் வைஷ்ணவப் பெரியாரான வல்லபாச்சாரியாரால் பூஜிக்கப்பட்டு வந்த விக்கிரகமாம். வட மதுரையில் ஜதிபுரா என்கிற இடத்தில் புதருக்கருகில் புதையுண்டு போயிருந்த இந்த விக்கிரகத்தை, சத்து பாண்டே என்பவர் கண்டெடுத்துக் கொண்டு வந்தார். வல்லபாச்சாரியாரின் வழித்தோன்றல்கள் கோயில் கட்டி அதைப் பிரதிஷ்டை செய்து பூஜாவிதிகளையும், பத்ததிகளையும் எழுதி வைத்தார்களாம்.

முகலாய மன்னர் ஔரங்கசீப்பின் ஆட்சியில் நடந்த படையெடுப்புகளால் சிதைந்த கோயில்களைப் பற்றிக் கேள்விப்பட்டு ஸ்ரீநாதரையும் மற்ற பூஜைக்குரிய விக்கிரகங்களையும் எடுத்துக்கொண்டு இராஜஸ்தானத்தில் அலைந்து கொண்டிருந்தவர்களை மேவாருக்கு வரும்படி 1671இல் இராணா இராஜ்சிங் அழைத்தாராம். அவர்கள் மகிழ்ச்சியுடன் மேவாரின் எல்லைக்குள் நுழைந்தபோது ஓரிடத்தில் தேருடைய சக்கரங்கள் பூமியில்

**கோவிந்தஜீ கோயில்**



ஸ்ரீநாதரின் கோயில்தான்.

உதய்பூரிலிருந்து காங்க்ரோலி என்னும் இடத்துக்குச் செல்லும் வழியில் 48 கி.மீட்டர் தொலைவில் அமைந்துள்ள இக்கோயில் முற்றிலும் வித்தியாசமானது. 'ஸ்ரீநாதத்வாரா' என்றால் 'ஸ்ரீநாதரின் வாயில்' என்று பொருள்.

இக்கோயிலோடு இணைந்த வரலாறும் ஐதீகங்களும், கட்டுக்

புதைந்து போனதால், தேர் நகர மறுத்ததாம்.

ஸ்ரீநாதர் அந்த இடத்திலேயே நிலைத்திருக்க விரும்புவதாக முடிவு செய்த வல்லபாச்சாரியாரின் சிஷ்யர்கள் கோயிலை எழுப்பினார்களாம். இராணா இராஜ்சிங் சியத் என்கிற கிராமத்தைக் கோயிலுக்கு மானியமாகக் கொடுத்ததன்பேரில் அந்த இடமும் சுற்றுவட்டாரமும் வளர்ச்சி பெற்று ஸ்ரீநாதத்வாரா வாகியது.

நாம் வெளியிலிருந்து பார்த்தால் உள்ளே கோயில் இருப்பதே தெரியவில்லை. உயர மதில்களைக் கொண்ட சுற்றுச் சுவர்களுடன் நுழைவாயிலும் கொண்ட வீட்டைப்போல் தோற்றமளிக்கிறது.

உள்ளே நுழைந்ததும் கண்ணில் தென்படுவது 'மோதி மஹல்' என்கிற ஐந்தடுக்கு மாளிகை. இதிலும் அக்கம் பக்கத்திலும் கோயிலில் பணியாற்றுகிறவர்களுக்கான இருப்பிட வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன. நாதத் வாராவில் மட்டுமே சுமார் ஐநூறு பணியாளர்கள் இருக்கிறார்களாம். குஜராத்தில் இதன் கிளை அலுவலகங்களும் கோயில்களும் இருக்கின்றன.

இங்கிருந்து இன்னொரு நுழைவாயிலைக் கடந்து சென்றால் மூன்று நுழைவாயில்கள் கொண்ட முற்றத்தை அடையலாம். அங்கு அழிக்கம்பிகள் போட்ட பெரிய கூடம் முன்னால் இருப்பதைக் காணலாம். தரிசன நேரத்தில் மட்டுமே கூடத்தின் கதவுகள் திறக்கப்படுகின்றன.

அதிகாலையில் தொடங்கி மாலை ஐந்து மணிவரை விட்டு விட்டு எட்டு வகையான தரிசனங்களைக் காண மக்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். 'மங்களா' 'சிருங்கார்' 'கவால்' 'ராஜ் போக் உத்யாபன்' 'போக்' என்று வரிசையாக சயன தரிசனம் வரையில் நீடிக்கிறது. ராஜ்போக் தவிர எந்த தரிசனமும் அரைமணிக்கு மேல் நீடிப்பதில்லை. ஒவ்வொரு முறையும் ஸ்ரீநாதரை வெவ்வேறு விதமாக அலங்கரிக்கிறார்கள். அணிவிக்கும் நகைகளும், உடை அலங்காரமும் பின்னால் கட்டப்படும் பேஜ்வாய் திரையும் மாற்றப்படுகின்றன.

ஒருமுறை அணிவித்த உடையை ஸ்ரீநாதருக்கு மறுபடியும் அணிவிப்பதில்லை. நாள் முழுவதும் செய்ய வேண்டிய அலங்காரங்கள், பயன்படுத்த வேண்டிய நகைகள், தயாரிக்கும் நிவேதனங்கள் எல்லாவற்றையுமே ஒரு வருடம் முழுவதற்கும் கிரமமாக ஐநூறாண்டுகளுக்கு முன்பே எழுதி வைக்கப்பட்ட வரிசைக் கிரமத்தில்தான் இன்றும் கடைப்பிடிக்கிறார்கள்.

ஸ்ரீநாதருக்குத் தேவையான உடைகளைத் தைக்க ஏழு தையற்காரர்கள் இரவு பகலாக வேலை செய்கிறார்கள். ஒவ்வொரு முறையும் அலங்காரம் முடிந்ததும் தரிசன நேரத்தை ஒலி பெருக்கியின் மூலம் அறிவிக்கிறார்கள் கோயில் நிர்வாகத்தினர்.

ஸ்ரீநாதரின் விக்கிரகம் பலகை போன்ற பெரிய கல்லின்மீது செதுக்கப்பட்டிருப்பதால் ஆடை ஆபரணங்களைச் சிலையின்மீது ஒருவிதப் பிசினைப் பயன்படுத்தி ஒட்டுகிறார்களாம். இறைவனை அலங்கரிக்கும் உரிமை வல்லபாச்சாரியாரின் வழித்தோன்றல்களான பூசாரிகளுக்கு மட்டுமே உண்டு. சந்தனப் பொட்டும், மைதீட்டிய கண்களும், ஜரிகைக் குல்லாயும் இவர்களை மற்றவர்களிடமிருந்து வித்தியாசமானவர்களாய்க் காட்டுகின்றன.'முக்கியா' என்று இவர்கள் அழைக்கப்படுகிறார்கள்.

கண்ணனுக்கு இங்கே 'பால ரூபம்'. அதனால் நிவேதனத்துக்காகத் தயாராகும் உணவு வகைகளில் புளி, காரம், மசாலா வகைகளைச் சேர்ப்பதில்லை. பூரி உள்பட அத்தனை விதங்களும் சுத்த நெய்யில் சமைக்கப்படுகின்றன. நெய் மட்டுமே இந்தக் கோயிலில் ஆண்டுக்கு சுமார் முப்பத்தைந்து லட்சரூபாய்க்கு மேல் வாங்கப்படுகிறதாம். இங்கே தயாராகும் பிரசாதங்களில் பிஸ்தா, பாதாம், குங்குமப்பூ போன்ற அயிட்டங்கள் முக்கியத்துவம் வகிக்கின்றன. பிஸ்தா, பர்பி, சர்க்கரைப்பூரி போன்ற பிரசாதங்கள் விற்கப்படுகின்றன.

தினசரி சமையலில் கத்தரிக்காய், பரங்கிக்காய் கறியும், மோர்க்குழம்பும் நிச்சயம் இடம் பெறுகின்றன. ஸ்ரீநாதருக்கு இவை பிடித்த அயிட்டங்களாம்.

பிரத்யேக சேவார்த்தங்களை நடத்துகிறவர்களுக்கும் கோயில் சிப்பந்திகளுக்கும் தினசரி பிரசாதமாய் சாப்பாடு வழங்கப்படுகிறது. மிச்சமானதை ஐம்பது காசு, ஒரு ரூபாய் என ஏழைகளுக்கு விற்று விடுகிறார்களாம். ஒரு ரூபாய்க்குப் பசி அடங்குகிற வகையில் வயிறார ஒருவன் சாப்பிட முடியும் ஸ்ரீநாதரின் அருளால்.

சந்நிதிக்கு எதிராக உள்ள ஜன்னலுக்கருகில் மனோபீஷ்டம் நிறைவேற வேண்டும் என்று வேண்டிக் கொண்டு தேங்காயை வாங்கிக் கட்டுகிறார்கள். அதற்கான கட்டணம் மிகக்குறைவானது தான். வேண்டுதல் நிறைவேறியபின் தேங்காயை அவிழ்த்து விடலாம். கோயில் பிராகாரத்திலேயே வரிசையாய்க் காய்கறிகளை விற்பவர்கள் அமர்ந்திருப்பதைக் காணலாம். தெய்வத்துக்குச் செய்யும் சின்ன சேவார்த்தமாக கொஞ்சம் காய்கறிகளை வாங்கி இங்குள்ள சமையலறையில் சேர்ப்பவர்களும் உண்டு. இன்னும் சிலர் காய்கறிகளை நறுக்கித் தருகிறார்கள். அரிசி பொறுக்கிக் கொடுப்பது. வெற்றிலை பாக்கு வைத்து

பீடா தயாரித்துத் தருவது, பூமாலை தொடுத்துக் கொடுப்பது போன்ற இறைபணிகளில் பொருள் வசதியற்ற வர்கள் ஈடுபடுகிறார்கள். தங்களால் இயன்ற சேவையை இறைவனுக்குச் செய்தோம் என்று திருப்தி அடை கிறார்கள். திருப்பதி போல் குழந்தை களுக்கு முடியிறக்கவும் பல பக்தர்கள் இங்கே வருகிறார்கள்.

தீபாவளியன்றுதான் வட இந்தியக் காலண்டர்படி அவர்களுக்குப் புது வருடம் பிறக்கிறது. அன்று தரிசனத் துக்காக அண்டை மாநிலங்களிலிருந் தெல்லாம் மக்கள் வந்து லட்சக் கணக்கில் கூடுகிறார்கள். கோகு லாஷ்டமியும் தசராவும் சிறப்பான பண்டிகைகளே.

தரிசனங்களில் சிறப்பானதும் முக்கியமானதுமாக 'ராஜ்போக்' கருதப்படுகிறது. அந்தச் சமயத்தில் மட்டுமே கோயில் நாற்பத்தைந்து நிமிடங்களிலிருந்து ஒரு மணி நேரம் வரையில் திறந்திருக்கிறது. க்யூவரிசை ஒழுங்கை எல்லாம் இங்கே எதிர்பார்க்க முடியாது. கோயிலின் உள்வாயில்கள் திறக்கப்பட்டதும் மக்கள் மடை திறந் தால் பாய்ந்து வரும் அணைக்கட்டு வெள்ளம்போல் முண்டியடித்துக் கொண்டு உள்ளே நுழைகிறார்கள். கூடத்தில் நாடக அரங்கைப்போல் படிப்படியான உயரங்களில் நீண்ட ஸ்டூல்களைப் போட்டிருக்கிறார்கள். அதன் மேல் நின்று தரிசனம் செய்ய லாம்.

அத்தனை கூட்டத்திலும் இடிபாடு களுக்கு மத்தியிலும் ஸ்ரீநாதரின் அற்புத அழகு கண்களில் பதிந்து நம் மனசுக்குள் புகுந்து சிலிர்க்க வைக் கிறது. மேலே உயர்த்திய இடக்கையில் சின்னதாய் தாமரை மொட்டும், விரல் இடுக்கிலிருந்து வழியும் உத்தரீயமும், பின்னால் தொங்கும் ஜடைப் பின்னலுமாய் ஒரு தரிசனம். தூக்கிக் கட்டிய வேட்டியும் தலையில் சுற்றிய முண்டாசும், கையில் கோலுமாய் மாடுமேய்க்கும் சிறுவனைப் போல இன்னோர் அலங்காரம்.

பகட்டான ஆடை ஆபரணங் களுடன், ஜரிகை அங்கியும் இடுப்பில் செருகிய புல்லாங்குழலுடன் கையில் பிடித்த ஈட்டியும் கேடயமுமாய் ஒரு தரிசனம். அத்தனையும் கண்ணன்.... எத்தனை கண்ணன்! என்று ஒவ்வொரு முறையும் நாம் மலைத்துப் போகும் போது அந்தணர்கள் வேதம் முழங்க 'ஜே ஜே' என்று தீபாராதனை நடக்கிறது. ஸ்ரீநாதரின் தரிசனம் இனிய தென்றலில் மிதந்து செல்வதைப் போன்ற ஒரு சுகானுபவம்.

சந்நிதிக்கு நேர் மேல் உச்சியில் வேயப்பட்ட கூரையின்மீது மேடையில் சிவப்புநிறக் கலசமும், அதன் மீது பதிக்கப்பட்ட சுதர்சன சக்கரமும் தரிசிக்கப்பட வேண்டியவை. ஏறிச் செல்லப் படிக்கட்டுகள் உள்ளன. இந்தச் சுதர்சன சக்கரம் தான் இந்தக் கோயிலுக்கு, கோடிக் கணக்கில் வருமானத்தை ஆகர்ஷித்துக் கொடுக்கும் யந்திரம் எனப்படுகிறது. கலச மேடையின்மீது நான்கு பக்கங் களிலும் பதிக்கப்பட்ட புலியின் உருவங்கள் நான்கு வேதங்களைக் குறிக்குமாம்.

சுதர்சன சக்கரத்துக்கு அத்தர் பூஜை செய்வதாக வேண்டிக் கொள்ளு கிறவர்களும் உண்டு. அத்தரைத் துணியில் தோய்த்து சக்கரத்தின் மீது தடவி, நைவேத்தியம் செய்யும் உரிமை சத்து பாண்டேயின் வம்சத்தினருக்கு மட்டும்தான் உண்டாம்.

கலசத்துக்கு அருகில் மஞ்சள், ஆரஞ்சு, ரோஜா நிறம் போன்ற ஆறு வர்ணங்களில் பருத்தித் துணிக் கொடிகள் கம்புகளில் செருகப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. பட்டுத்துணிக் கொடி ஸ்ரீநாதர் கோயிலைக் குறிக்கு மாம். மற்ற கொடிகள் கோகுலம், கோவர்த்தனம், மதுரா, பிருந்தாவனம், துவாரகை, பூரி போன்ற ஆறு கிருஷ்ணக்ஷேத்திரங்களைக் குறிப் பிடுகிறதாம். ஸ்ரீநாதரின் கொடி அதிக நீளமாக இருப்பதால் இதன் பிரபலம் ஊர்ஜிதமாகிறது.

இந்தக் கொடிக் கம்புகளின் மீது காகம் உட்கார்ந்து அசுத்தப்படுத்தி விட்டால் கோயில் முழுவதையுமே தண்ணீர்விட்டுக் கழுவிவிட வேண்டு மாம். நைவேத்தியமும் புதியதாகத் தயாரிக்க வேண்டி வருமாம். இந்தச் சங்கடமான சம்பவம் நிகழ்ந்து விடாமல் தடுக்க, காக்கையை விரட்டியவாறு கொடிமரங்களுக்கருகிலேயே எப் போதும் நிற்கும் ஓர் ஆளைக் காணலாம். நேரப்படி டியூட்டி மாற்றிக்கொண்டு அதற்கான ஆட்கள் இந்தப் பணியைச் சிரத்தையுடன் செய்கிறார்கள்.

ஸ்ரீநாதருக்கு இருக்கும் நகைகளும் வெள்ளிப் பாத்திரங்களும் அளவிற்குள் அடங்காதது. இது தவிர மானியங் களாக வந்து குவியும் சொத்துகளும் ஏராளம். கோயிலுக்குச் சொந்தமான கோசாலையில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட பசுக்கள் உள்ளன. கோ சாலையிலிருந்து கிடைக்கும் பால் முழுவதும் கோயில் உபயோகத்துக்கே சரியாகிவிடுகிறதாம். குங்குமப்பூவும், பாதாமியும், பிஸ்தாவும் டன்கணக்கில் செலவாகின்றன என்கிறார் அரசு சார்பில் கோயிலின் அதிகாரியாக நியமிக்கப்பட்டுள்ள ஒருவர்.

"ஸ்ரீநாதருக்கு வரும் திருமண அழைப்புகளும், புத்தாண்டு வாழ்த்து களும், பிறந்தநாள், கிரகப்பிரவேசம், பிரம்மோபதேசம் போன்ற வைபவங் களுக்கான அழைப்பிதழ்களும் கணக் கில் அடங்கா. அவற்றில் அனைத் துக்குமே இயன்றவரையில் பதில்

## அழகு

**பூவை அமுதன்**



செவ்விதழின் புன்னகையில்
சிலிர்க்கும் நெஞ்சம்
சேல்விழியின் சுழற்சியிலே
சிந்தை தஞ்சம்
எவ்விதமாய் மொழிந்தாலும்
மழலை கொஞ்சும்
இளங்குழவி இதழ்நெளிவில்
இன்பம் மிஞ்சும்
ஒவ்வாத ஒப்பனையில்
அழகு துஞ்சும்
உருவான இயல்பெழிலில்
இல்லை வஞ்சம்
இவ்வையம் எழில்பரப்பி
இலங்கும் மஞ்சம்
இதயத்தில் உணர்விலையேல்
எதிலும் பஞ்சம்!
வளமான உள்ளந்தான்
வலிமை யாகும்
வரம்புக்கு மீறினவை
எல்லாம் வீணே
உளபோல இல்லாகிப்
போகும் எல்லாம்
உள்ளழகே தன்செயலால்
என்றும் வாழும்!
அளவாக அமைப்பாக
இருக்கும் யாவும்
அழகென்றே கவியுள்ளம்
வாழ்த்திப் போற்றும்!
களப் பொருத்தம் கவினாகும்:
கவிதை யாகும்
கற்பனையும் கிளர்ச்சிதரும்
அழகு தானே!

அனுப்பிக் கொண்டிருந்தோம். இப் போது முடிவதில்லை'' என்கிறார் அந்த அதிகாரி.

ஸ்ரீநாதரிடமிருந்து மனசை வேறு பக்கம் திருப்புவது கடினந்தான். அவரது தரிசனம் அத்தனை மன நிறைவைத் தருகிறது.

ஜெய்ப்பூரிலுள்ள 'சிட்டி பாலஸ்'ஸில் அந்தப்புறப் பகுதியில் 'கோவிந்த ஜீ' கோயில் உள்ளது. கோவிந்தனை 'ஜீ' சேர்த்து வெகு மரியாதையுடன் அழைக்கிறார்கள் இங்கு. இராதா கிருஷ்ணனாகத் திகழும் மூலவ மூர்த்தி அழகு சொட்டுகிறது. இவ் விக்ரகத்தை சவாய் ஜெய்சிங், ஔரங்கசீப்பின் படையெடுப்பிலிருந்து பாதுகாக்க, ரகசியமாய் பிருந்தாவனத்திலுள்ள துவாரகாதீசர் கோயிலிலிருந்து எடுத்துவந்து அரண்மனைக்குள் பிரதிஷ்டை செய்து 'கோவிந்த் ஜீ' என்று பெயரையும் மாற்றி நாமகரணம் செய்துவிட்டதாகச் சொல்லுகிறார்கள். அஷ்டமி அன்று அங்கே கூட்டம் நெரிகிறது. தினமுமே மாலையில் நடக்கும் ஊஞ்சல் சேவையைக் காண்பதற்கென அதிக அளவில் கூடுகிறார்கள். பக்தி பரவசத்துடன் நாமசங்கீர்த்தனம் செய்கிறார்கள்.

ஜெய்ப்பூரில் ஆமெர் கோட்டைக்கு அருகிலுள்ள 'ஜெகத் சிரோன்மணி' கோயில் புராதனமானது. இந்தக் கோயிலில் இருக்கும் இராதாகிருஷ்ண விக்கிரகம் தான், சித்தோர் கோட் டையில் மீராவுக்காக போஜராஜன் கட்டிய கோயிலிலிருந்து கொண்டுவரப் பட்டது (இராஜா மான்சிங்கால் என்று ஒரு வாதம் இருக்கிறது) இராஜா மான்சிங்கின் மகன் 'ஜெகத் சிங்' மங்கோலியப் படையெடுப்புக்காகச் சென்றவர் உயிருடன் திரும்பவில்லை யாம். மகனின் நினைவாக இந்தக் கோயிலைக் கட்டிய மான்சிங், மீராவின் பக்தியைப் பற்றிக் கேள்விப்பட்டு மனசுக்குள் பாராட்டிக் கொண்டிருந் தவர், அவள் துவாரகைக்குச் சென்ற பிறகுதான் சித்தோரின் மீது நிகழ்த் திய படையெடுப்பு சமயத்தில் விக்கிர கத்தைக் கொண்டு வந்து விட்டார் என்பது ஓர் அபிப்பிராயம்.

இதற்கான சரித்திர ஆதாரம் இல்லை என்று புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். அப்படிப் பார்த்தால் மீராவைப்பற்றிய குறிப்பு எதுவும் மேவாரின் சரித்திரத் திற்கு ஆதாரபூர்வமான 'வீர் வினோதில்' காணப்படவில்லை. ஆனால் பிகானீர் மியூசியத்தில் க்யூரேட்டராக இருந்து ஓய்வுபெற்ற 'சாமுவேல் லெபோவிட்ஸ்' என்கிற ஜெர்மானிய ஆராய்ச்சியாளர் மீராவைப் பற்றித் தனியாக எழுதியுள்ள புத்தகத்தில், 'சித்தோரின் மீது மான்சிங்கின் படையெடுப்பு மறுக்க முடியாத உண்மை. அதனால் அப் போது அவர் மீரா பூஜித்த விக்கிரகத்தை சித்தோர் கோட்டையி லிருந்து எடுத்து வந்திருக்கலாம் என்பதையும் மறுக்க முடியாது' என்று அபிப்பிராயப்படுகிறார்.

எது எப்படியானாலும் கோயில் மேவார் பாணியில் தோரண வாயி லுடன் கட்டப்பட்டிருப்பதை நாம் பார்க்க முடிகிறது. பின்புறத்தில் விஷ்ணுவும் முன்னால் குழலூதும் சின்னக் கண்ணனுமாக மூலவ மூர்த்தி காட்சி தருகிறார். கண்ணன், கிருஷ்ணன், ஸ்ரீநாதன், ஸ்ரீகாந்தன், கோவிந்தன், ஜெகதீசன், ஷ்யாம், கான்ஹா, முரளீதரன் என்று எந்தப் பெயரில் அழைத்தாலும் பக்தர்களைத் தன் கோயிலுக்கு ஈர்க்கிறான் என்று தான் சொல்ல வேண்டும்.

மீராவுக்கு மட்டும்தான் அவன் பிரபு என்பதில்லை. கண்ணனின் பாதார விந்தங்களில் நினைவை நிறுத்தி மனசைத் தொலைத்தவர்கள் அனை வருக்குமே அவன் பிரபுதான்! ০

# இரவில் தியானம்




சுவாமி கமலாத்மானந்தா

தியானம் எப்போதும் செய்யலாம். தியானம் செய்வதே விசேஷம். அதுவும் பிரம்ம முகூர்த்தம் எனப்படும் விடியற்காலையில் தியானம் செய்வது இன்னும் விசேஷம். இரவில் தியானம் செய்வது அதை விட விசேஷம்.

ஆன்மிக வாழ்வின் சுவையை அறிய விரும்புகிறவர்கள் இரவில் தியானம் செய்தால் அதை அறியலாம்.

வேதரிஷிகள் இரவும் பகலும் ஜபத்தில், தியானத்தில், பிரார்த்தனையில் ஆழ்ந்திருந்தனர்.

அவர்களுள் சிலர் சூரியன் உதித்ததும் அதிகாலையில் தங்கள் குடிலை விட்டு நீங்கித் தவம் புரிவதற்காகக் காடுகளுக்கோ, வனங்களுக்கோ, ஆற்றங்கரைகளுக்கோ செல்வதைத் தங்கள் அன்றாட வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

பகற்பொழுது முழுவதும் தியானத்திலேயே அவர்களுக்குக் கழியும். சூரியன் அஸ்தமிக்கும் சமயத்தில் தான் அவர்கள் தங்கள் குடில்களுக்குத் திரும்புவார்கள். திரும்பி வரும் வழியில் கிடைத்த கனிகள், உலர்ந்த சருகுகள், உதிர்ந்த கனிகளை உட்கொண்டு அவர்கள் பசியைத் தணித்துக் கொள்வார்கள். இரவு மட்டுமே அவர்கள் குடிலில் தங்குவார்கள். மீண்டும் பொழுது புலர்ந்ததும் அவர்கள் தாங்கள் வழக்கமாகத் தவம் புரியும் இடத்துக்குச் சென்று தவத்தில் ஆழ்ந்துவிடுவர். இவ்விதம் அவர்கள் பல காலம் செய்தார்கள். வாழ்நாள் முழுவதும் செய்தார்கள். அதன் பயனாக அவர்கள் பரம்பொருளை அனுபூதியில் உணர்ந்தார்கள். அனுபூதிமான்கள் ஆனார்கள், மகான்கள் ஆனார்கள், மனித வாழ்வில் பெறத்தக்க மிகப்பெரிய பேறாகிய கடவுள் நிலையை அடைந்தார்கள்.

பகவான் புத்தர் மெய்ப்பொருளை அடைய நாட்டம் கொண்டார். தவம் செய்ய முற்பட்டபோது அவர், "இந்த உடல் இங்கேயே வற்றினாலும் சரி, நிர்வாணமடையாமல் இங்கிருந்து எழுந்திருக்க மாட்டேன்" என்று உறுதியாகச் சங்கல்பம் செய்து கொண்டு தவத்தில் உட்கார்ந்து விட்டார். அவர் இயற்றிய அந்தக் கடுந்தவம் அவரை ஞானப்பேற்றுக்குத் தகுதி உடையவராக்கியது. அந்த நிலையை அடைவதற்கு முன்பு அவர் எத்தனையோ இரவுகள், எத்தனையோ பகல்கள் தியானத்திலேயே கரைந்து இருந்திருக்கிறார்.

இயேசு கிறிஸ்துவின் திருவுருவப் படங்களில் எல்லாம் அவரது முகத்தில் ஆழ்ந்த ஓர் அமைதி கொலு வீற்றிருப்பதைக் காணலாம்.

இயேசு கிறிஸ்து இரவு நேரத்தை நம்மைப் போலத் தூக்கத்தில் கழித்ததில்லை. அவருக்கு இரவு என்பது பிரார்த்தனைக்கே உரிய நேரமாக இருந்தது.

இயேசு கிறிஸ்து எப்போதும் இரவு நேரம் முழுவதையும் பிரார்த்தனையில் கழிப்பது வழக்கம். "இரவு முழுவதும் பிரார்த்தனையில் கழித்தவர், பகல் முழுவதும் நற்காரியங்களுக்காகச் செலவிட்டவர்" என்று இயேசு கிறிஸ்துவின் முழு வாழ்க்கையையும் சுருக்கமாகச் சொல்லிவிடலாம்.

இயேசு கிறிஸ்து ஒரு சமயம் 'கெத்சமனே' என்ற தோட்டத்தில் இருந்தார். அப்போது அவருடன் பேதுரு, யாகோப், யோவான் ஆகிய சீடர்கள் இருந்தனர்.

தம்முடைய அந்தச் சீடர்களிடம் இயேசு கிறிஸ்து, "எனக்காக ஓரிரவு விழித்திருந்து ஜபம் செய்யக் கூடாதா?" என்று கேட்டார்.

"எனக்காக ஓரிரவு விழித்திருந்து ஜபம் செய்யக் கூடாதா?" என்ற இயேசு கிறிஸ்துவின் இந்தச் சொற்கள், கிறிஸ்துவின் அடியார்கள் இரவில் ஜபம் செய்ய வேண்டும் என்பதே கிறிஸ்துவின் எண்ணம் என்பதைத் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் தெரிவிக்கிறது.

இஸ்லாம் என்ற சொல்லுக்கே 'முழு அமைதி' என்பது பொருள். இந்த மார்க்கத்தைத் தோற்றுவித்த நபிகள் பெருமானாரின் வாழ்க்கையில் முக்கியமாக நாம் கவனிக்க வேண்டியது ஒன்று உண்டு. அதாவது, இரவில்

## மனத்தில் பதிந்த சுவடுகள்

**சீனி வீரப்பன்**

காலையில் ஆதவன் கவலை இல்லாதவன்
இரவினில் சந்திரன் ஏக்கம் கொள்ளாதவன்
மாலை வரும் தென்றலுக்கு மயக்க மொன்றில்லை
மாந்தருக்கு மட்டுமேன் இத்தனை தொல்லை?
மனக்கவலை வந்தால் மகிழ்ச்சி செல்லும்
மனஉறுதி நிலைத்தால் மானுடம் வெல்லும்
தனக்கென்று கேட்டுத் தான் பெறாவிட்டாலும்
உனக்கென்று உள்ளது எப்போதும் கிட்டும்!
இலக்கைத் தொடும்வரை முயற்சி முக்கியம்
விளக்கைத் தூண்டினால் வெளிச்சம் நிச்சயம்
உழைப்பவர்க் கெல்லாம் உலகம் பணியும்
சளைத்தவர்க் கிங்கே சரித்திரம் இல்லை!
வலுப்பெற்ற சிந்தனைகள் வாழ்வுக்கு வேண்டும்
அலுப்புற்ற போதுமவை ஆறுதலைத் தூண்டும்
இமைப்பது முதலிங்கே இயக்கம் அனைத்தும்
அமைப்பின் படியே! அவனிட்ட வழியே!

## எண்ணரிய அதிசயங்கள்

**சி. விநாயகமூர்த்தி**

வியப்படைய வைக்கின்ற அதிச யங்கள்
வியனுலகில் ஏழென்று அன்று சொன்னார்.
இயற்கையிலும் செயற்கையிலும் அதிசயங்கள்
எண்ணித்தான் பார்க்கையிலே நிறைய உண்டு.

தொடும்போது காதல்தீ சுடுவ தில்லை.
விடும்போது வெப்பத்தை வெளிப்ப டுத்தும்
கடுகுக்குள் கடலேழு அடக்கி யுள்ள
குறளேடு விந்தையிலும் அரிய விந்தை.

ஒரு சொல்வில் வெவ்வேறு பொருள மைந்து
அமுதாக இனிக்கின்ற சிலேடை போல
ஒருகல்வில் பல்வேறு இசையெ முப்பும்
ஒப்பற்ற தூணுண்டு மதுரை தன்னில்.

ஆடையது உருவாகும் இனிய பாலில்.
அம்மாவென் றிளங்கன்று தமிழைப் பேசும்
ஏடறியாக் கிராமத்தில் இசைமு ழங்கும்
எண்ணரிய அதிசயங்கள் இன்னு முண்டு

தியானம் செய்வதை இவர் தமது வழக்கமாகக் கொண்டிருந்தார் என்பதுதான் அது.

இரவில் பெரும் பகுதியை நபிகள் பெருமானார் பிரார்த்தனையில்தான் கழித்திருக்கிறார்.

இரவு முழுவதும் நபிகள் பெருமானார் தொழுகையிலேயே இருப்பதைக் கண்ட அவரது மனைவி ஆயிஷா ஒரு சமயம், "நீங்கள்தாம் அல்லாவின் கிருபையைப் பூரணமாகப் பெற்றவர் ஆயிற்றே. அப்படி இருக்கும் போது நீங்கள் இவ்விதம் இரவெல்லாம் தொழுகையில் இருக்க வேண்டுமா?" என்று தம் கணவரிடம் கேட்டார்.

அதற்கு நபிகள் நாயகம், "நான் இறைவனுக்கு நன்றியுள்ள அடியவனாக இருக்க வேண்டாமா? அதனால்தான் நான் இரவெல்லாம் தொழுகை செய்கிறேன்" என்றார்.

இஸ்லாம் சமயம், வருடத்தில் ஒரு மாதம் முழுவதையும் தொழுகைக்கென்றே வகுத்திருக்கிறது. ரம்லான் மாதம் எனப்படும் அந்த மாதத்தின் முப்பது நாள் இரவிலும் ஒவ்வோர் இஸ்லாமியனும் தொழுகையிலேயே இருக்க வேண்டும் என்று இஸ்லாம் விதித்திருக்கிறது.

ஹிந்துக்கள் சிவராத்திரி முழுவதும் சிவசிந்தனையில் இருப்பது போலவே, இஸ்லாமியர்கள் ரம்லான் மாதத்தின் முப்பது நாள் இரவையும் இறைவனைக் குறித்த சிந்தனையிலேயே இருக்க வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது.

பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ணர் தட்சிணேசுவரத்தில் காளி கோயிலில் வாழ்ந்தார். அங்கே 'பஞ்சவடி' என்று அழைக்கப்பெற்ற மரங்கள் அடர்ந்த பகுதி இருக்கிறது. ஸ்ரீஇராமகிருஷ்ணர் அந்தப் பஞ்சவடியில் பல இரவுகள் ஜபம், தியானம், பிரார்த்தனை, இறைவனுக்காக அழுவது என்று கழித்திருக்கிறார்.

பிற்காலத்தில் உலகம் அவரை ஒரு பரமஹம்சராக அடையாளம் கண்டுகொண்டது. அப்போது அவரை ஆன்மிக தாகத்துடன் அணுகி அவருக்குச் சிலர் சீடர்களாக ஆனார்கள்.

ஸ்ரீஇராமகிருஷ்ணர் இளைஞர்களாகிய தமது சீடர்களை இரவில் தூங்குவதற்கு அனுமதிக்கமாட்டார். அவர்களை அவரவர் தகுதிக்கும் மனநிலைக்கும் ஏற்ப, இரவு நேரத்தில் தட்சிணேசுவரக் காளிகோவிலுக்கோ, தேவியின் சந்நிதிக்கு எதிரிலுள்ள நாட்மந்திருக்கோ, சிவன் கோயிலுக்கோ, ராதாகாந்தர் கோயிலுக்கோ, பஞ்சவடிக்கோ, வில்வ மரத்தடிக்கோ சென்று தியானம் பழகும்படி செய்வார். தமது சீடர்கள் இரவில் தியானம் செய்யத்தான் வேண்டும் என்பதில் ஸ்ரீஇராமகிருஷ்ணர் கண்டிப்புடனேயே இருந்திருக்கிறார்.

சீடர்களும் இரவைத் தியானத்தில் கழித்துவிட்டு, இரவின் பிற்பகுதியிலோ, பகலிலோ உறங்கி ஓய்வு கொண்டுள்ளனர். இத்தகைய பரமஹம்சரின் தவச் செல்வங்கள் ஒவ்வொருவரும் பிற்காலத்தில் பெரிய மகான்களாக விளங்கியதில் வியப்பில்லை அல்லவா?

ஸ்ரீஇராமகிருஷ்ணரின் சீடர்களுள் ஒருவர் சுவாமி பிரம்மானந்தர். அவர் இவ்விதம் கூறியுள்ளார் :-

''யோகிகள், போகிகள் (உலக போகங்களில் நாட்டமுடையவர்), ரோகிகள் (நோயாளிகள்) ஆகிய இந்த மூவகையினரும் இரவில் கண் விழித்திருப்பார்கள். நீங்களெல்லாம் யோகிகள்; இரவுப்பொழுதை ஒரு போதும் தூக்கத்தில் கழித்துவிடக் கூடாது என்று ஸ்ரீஇராமகிருஷ்ணர் அடிக்கடி கூறுவது வழக்கம்."

மேலும் பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ணர் உணவைப் பற்றி இவ்விதம் கூறியுள்ளார் :-

''பகற்பொழுதில் திருப்தியாகப் பகலுணவை உட்கொள். ஆனால் இரவில் உட்கொள்ளும் உணவு குறைவாகவும் இலேசாகவும் இருக்கட்டும்."

"உடலுக்கு உஷ்ணத்தையும், மனத்துக்குச் சஞ்சலத்தையும் எந்த உணவு கொடுக்காதோ, அந்த உணவைத்தான் சாதகன் உட்கொள்ளவேண்டும்."

இரவில் அதிகமாகச் சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொண்டால், உறங்குவதற்கு முன்போ, இரவு முழுவதுமோ, நடு இரவிலோ, விடியற்காலையிலோ, நன்றாகத் தியானம் செய்வதென்பது இயலாத காரியம்.

ஆதலால்தான், "சாதகன் இரவில் உட்கொள்ளும் உணவு லேசாக இருக்கவேண்டும்" என்கிறார் ஸ்ரீஇராம கிருஷ்ணர்.

மேலும் அவர், "உன் மூளையையும் வயிற்றையும் எப்போதும் குளிர்ச்சியாக வைத்திரு'' என்றும் சொல்வது வழக்கம்.

சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கையில் இரவில்

அவர் தியானம் செய்ததைப் பற்றிய பல குறிப்புகள் உள்ளன.

ஒரு நாள் இரவு, அப்போது நரேந்திரர் என்று அழைக்கப்பட்ட விவேகானந்தரும், ஸ்ரீஇராமகிருஷ்ண ரின் மற்றொரு சீடரான கிரீஷ் சந்திரகோஷ் என்பவரும் காசிப்பூர் தோட்டத்தில் தியானம் செய்துகொண்டிருந் தார்கள்.

கொசுத் தொல்லை காரணமாக கிரீஷ் சந்திரகோஷி னால் சரியாகத் தியானம் செய்ய முடியவில்லை. அவர், 'நம்மால்தான் கொசுத்தொல்லை காரணமாகச் சரியாகத் தியானம் செய்ய முடியவில்லை. நரேந்திரரின் நிலை என்ன? அவர் எப்படி தியானம் செய்கிறார் என்று பார்ப்போம்' என்ற எண்ணத்தில் கண்களைத் திறந்து பார்த்தார்.

நரேந்திரரைக் கறுப்புக் கம்பளியால் மூடியது போன்று கொசுக்கள் அடை அடையாய் மொய்த்திருந் தன. ஆனால் அதைச் சிறிதும் அறியாமலும், பொருட் படுத்தாமலும் நரேந்திரர் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருந்தார்.

பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ணரால் 'தியான சித்தன்' என்று பாராட்டப்பட்ட இத்தகைய நரேந்திரர் விவே கானந்தராக மலர்ந்ததில் வியப்பில்லை அல்லவா?

பகவான் ஸ்ரீஇராமகிருஷ்ணரின் சீடர்களில் ஒருவர் லாட்டு மகராஜ் அவரிடம் ஸ்ரீஇராமகிருஷ்ணர் இரவில் தியானம் செய்யும்படி கூறினார். தமது குரு கூறியதை அப்படியே பிடித்துக் கொண்டுவிட்டார் லாட்டு மகராஜ்.

ஸ்ரீஇராமகிருஷ்ணர் கூறியதிலிருந்து லாட்டு மகராஜ் இரவு முழுவதையும் தியானத்திற்கே பயன்படுத்தி வந்தார். இதை அவர் தமது வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்தார் என்பதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். இரவு முழுவதும் தியானத்திற்குப் பயன் படுத்திய அவர் பகலில் உறங்கி ஓய்வு கொள்வதைத் தம் வழக்கமாகக் கொண்டிருந்தார். இரவில் அவர் பழகிய ஜபமும் தியானமும் அவரை ஒரு மகானாகவும், ஞானியாகவும் மிகவும் மேலான நிலைக்கு உயர்த்தியது.

வடலூர் வள்ளலார் இரவில் இறையின்பத்தில் திளைப்பதைப் பெரிதும் விரும்பியவர். அவர் கூறுகிறார் :-

"நான் கண் உறங்க மாட்டேன், அப்படியே உறங்கி னாலும்கூட என் ஆன்ம நாயகனாகிய இறைவனோடு கலக்கும் கனவு கண்டு நான் மனம் மகிழ்வேன். இறைவன் என்னுடன் இணைந்து இரவு பகல் காணாமல் என்னை இன்பத்தில் ஆழ்த்துகிறார். மண் உறங்கும், மலை உறங்கும், அலைகடலும் உறங்கும், மாநிலத்திலுள்ள மற்ற எல்லாமும் உறங்கும். ஆனால் நான் உறங்க மாட்டேன். உறங்காமல் விழித்திருந்து இறைவனுடன் கூடி மகிழ்வேன்" என்கிறார் வள்ளலார். அவரது மேற்கூறிய கருத்தமைந்த பாடல் 'கண் உறங்கேன்' என்றே தொடங்குகிறது.

அருட்பாவிலுள்ள மற்றொரு பாடல் 'தூங்குக நீ என்கிறாய்' என்று தொடங்குகிறது. இந்தப் பாடலைத் தலைவி, தோழிக்குக் கூறுவதாக வள்ளலார் அமைத் துள்ளார். அதில் அவர், "என்னை நீ தூங்கு என்று சொல்கிறாய். நான் தூங்குவேனா? மாட்டேன். இரவு என்பது என் துரையாகிய இறைவன் வரும் நேரமா யிற்றே! இதில் எனக்குத் தூக்கம் வருமா? இங்கே நான் இறைவனின் வருகைக்காகத் தனியாக இருக்க வேண்டும். ஆதலால், என் தோழியே! என்னுடைய தூக்கத்தை எல்லாம் நான் உனக்கே தந்துவிடுகிறேன்; நீ வெளியில் சென்று தூங்கு. என் கண்மணி போன்ற இறைவன் என்னை நெருங்கிய உடனேயே நான் அவரோடு கலந்து ஒன்றாகிவிடுவேன்" என்கிறார்.

இந்தப் பாடலில் வள்ளலாராகிய ஜீவாத்மா, இறைவனாகிய பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து, கரைந்து களிப்புக் கொள்கிறது.

தூக்கம் எனும் கடைப்பயலே' என்றும் ஓர் அருட்பா பாடலைத் திருவருட்பிரகாச வள்ளலார் பாடியுள்ளார்.

அதில் அவர், "தூக்கம் என்ற கடைப்பயலே! சோம்பேறியே! நான் சொல்லும் இதைக் கேள்: நீ எனது உற்றார் உறவினர்களோடு அரை நாழிக்குள் இந்த இடத்தை விட்டுக் காலி செய்து பெரிய காட்டுக்குப் போய்விடு. நான் சொல்வதைக் கேட்காமல் நீ இங்கேயே இருந்தால் உன் தலை போய்விடும், ஜாக்கிரதை!" என்கிறார்.

மேற்கூறிய மூன்று பாடல்களிலும் இரவில் இறைவ னுடன் கலந்து இன்பமுற வள்ளலார் கொண்ட பேரார் வத்தையும், அந்த இன்பத்திற்குத் தடையாக உள்ள தூக்கத்தை அவர் வெறுத்ததையும் நன்கு அறிகிறோம்.

'பசித்திரு, தனித்திரு, விழித்திரு' என்ற தாரக மந்திரத்தைத் தந்தவர் வள்ளல் பெருமான். அத்தகைய அவர் விழித்திருந்து விமலனை நாடியது வியப்பில்லை அல்லவா?

மகாராஷ்டிராவில் வாழ்ந்த ஷீர்டி சாய்பாபாவும் இரவில் தியானம் செய்யும் வழக்கமுடையவர் என்பது குறிப்பிடத்தக்கது.



ரா. வேங்கடசாமி

ஜன்னல் வழியாக வந்த மார்கழி மாதத்துக் குளிர்காற்று உள் அறையில் படுத்திருந்த இராகவனை விழிக்கச் செய்தது. இவ்வளவு காலையில் ஜன்னலைத் திறந்தது யார்? இரவு அதை மூடிவிட்டுத்தானே படுத்தோம்? திறந்தது யாரென்று அவனுக்குத் தெரியும். இருந்தாலும் தனக்குத்தானே அவன் தினமும் கேட்டுக் கொள்ளும் கேள்வி இது...

நாலு வீட்டில் வேலைசெய்யும் வேலைக்காரிதான் இவ்வளவு அதிகாலையில் அவனை எழுப்பி விடும் கைங்கர்யத்தைச் செய்பவள்.

அவளுக்கு அந்த நேரத்தில் கதவைத் திறந்து விடும் பையனோ, இந்த நேரம் காப்பி வாங்கக் கடைக்குப் போயிருப்பான்.

நல்ல வேளையாக இந்த இரண்டு மூன்று நாள்களாக் இராகவனுக்கு ஆஸ்துமா தொந்தரவு இல்லை. ஆஸ்துமா நோயாளிகளுக்கு மிகவும் வேதனையான மாதமே மார்கழிதானே?

மெதுவாக எழுந்து, தயாராக இருந்த சுடுதண்ணீரில் தன்னைச் சுத்தப்படுத்திக் கொண்ட அவன், முன் ஹாலுக்கு வந்தபோது, பையன் பிளாஸ்கில் சூடாகக் காப்பியைக் கொண்டு வந்து கொடுத்தான். அது இனிய தேவாம்ருதமாக இருந்தது.

இதற்குள் வேலைக்காரி பாதி வேலைகளை முடித்து வைத்திருந்தாள்.

அவள் அவசரம் அவளுக்கு-பொதுவாகவே சம்பள நாளைத் தவிர அவள் இராகவனிடம் பேசுவதில்லை. இளம் வயதுக்காரி பேசிச் சிரித்துக் கொண்டு இருந்தாள் என்றால் அக்கம்பக்கத்தில் கேலி பேச மாட்டார்களா?

ஆனால் இதற்கெல்லாம் அப்பாற்பட்டவன் இராகவன் என்பது வெகு சிலருக்கே தெரியும்...

பையன் அன்றையப் பத்திரிகையைக் கொண்டு வந்து கொடுக்க, அதை நிதானமாகப் படிக்கத் தொடங்கினான். பையன் தன் வேலைகளை முடித்துக் கொண்டு மீண்டும் வெளியே போய், இவனுக்கு டிபன் வாங்கி வரும் வரை படிப்புதான்.

இன்று ஓர் இடைஞ்சல்..

“அண்ணா!” பையனின் குரல்

என்னவென்று கேட்காமல், பத்திரிகையிலிருந்து முகத்தை நிமிர்த்தினான் இராகவன்.

“இந்தக் கடிதம் நேற்றைய தபாலில் வந்தது. இரவு கொடுக்க மறந்துவிட்டேன்” என்று சொல்லிக்கொண்டே அவன் ஒரு கவரைக் கொண்டுவந்து இராகவன் கையில் கொடுத்தான்.

விலாசம் எழுதிய கை யாருடையது என்று அவனுக்குப் பார்த்த உடனே தெரிந்துவிட்டது.

பரிமளா எழுதியிருந்தாள்..

அவள், அவனது மனைவி!

இவ்வளவு நாள்களுக்குப் பிறகு அவள் ஏன் கடிதம் எழுதவேண்டும்?

எல்லாவற்றையும் மறந்துவிட்ட ஒரு சந்நியாசியாக அல்லவா இராகவன் காலம் தள்ளிக்கொண்டிருக்கிறான்?

கடிதத்தைப் பிரிக்காமலேயே தன் அருகில் அதை வைத்துக் கொண்டான்.

இனி பத்திரிகையில் எப்படி கவனம் செல்லும்?

வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் ஒரே தினத்தில் யாருக்காவது வருமா? இவனுக்கு வந்தது.

அதுவும் மிகவும் கொடூரமாக வந்தது. தனக்கு வேண்டியவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் அளவுக்கு இராகவனுக்கு யாருமே கிடையாது. பெற்றோரை இழந்த அவன் சொந்தக்காரர்கள் தயவில் படித்து, பட்டம் பெற்று ஒரு வேலையையும் தேடிக்கொண்டான். இறகுகள் முளைத்தவுடன் பறவை தனியாகக் கூடு தேடிக்கொள்ள வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டது.

இனி, தான்தான் இந்த உலகில், தனக்கு யாருமே கிடையாது என்று வெளியே வந்தவனுக்கு உதவ நண்பர்கள் இருந்தார்கள்.

ஒரு நல்ல கம்பெனியில் அவன் படித்த படிப்பிற்கு வேலையும் கிடைத்தது. வாழ்க்கையில் இதற்குமேல் என்ன வேண்டும் என்று காலந்தள்ளியவனை இதற்கு அப்பாலும் வாழ்க்கை இருக்கிறது. அது கிடைத்தால்தான் முழு வாழ்க்கை என்று அவனுக்கு கொஞ்சம் கொஞ்சமாக நண்பர்கள் புத்திமதி சொன்னார்கள்.

எட்ட இருந்து அவனை வளர்த்தவர்களும் இதையேதான் சொன்னார்கள்.

'உனக்குப் பின்னாலும் உன் குடும்பம் விளங்க வேண்டுமல்லவா? அதற்கு, கட்டாயம் உனக்கு ஒரு மனைவி தேவை' என்று ஒரே குரலில் எல்லாரும் சொன்னார்கள்.

ஒப்புக் கொண்டான்..

ஆனால் சமீபகாலமாக தன்னைப் பிடித்து ஆட்டிவரும் இந்த 'ஆஸ்துமா' திருமண வாழ்க்கைக்கு இடையூறாக இருக்குமா?

இப்படி ஒரு கவலை இராகவனுக்கு-

ஆஸ்துமா வியாதி ஆளைக் கொல்லும் வியாதியன்று. அவ்வப்போது வந்து போகும். இந்த வியாதியுடன் நூறு வயது வாழ்ந்தவர்களும் இருக்கிறார்கள் என்றொரு சமாதானம்!

இவனுக்காகவே பிறந்திருந்தாள் பரிமளா – ஏழைக் குடும்பம் தான். ஆசிரியை வேலைக்குப் படித்து வேலைக்கும் போய்க்கொண்டிருந்தாள். நல்ல உடல்வாகு. அழகிய முகம்.

இராகவன் பெண்ணைப் பார்த்து சம்மதம் சொல்லவே, உறவினர்களும் நண்பர்களும் ஒரு கோயிலில் திருமணத்தை எளிமையாகவும் அதே சமயத்தில் சிறப்பாகவும் நடத்தி முடித்தனர்.

இராகவன் வீடு வசதியாக இருந்ததால் 'முதல் இரவு'க்கு அங்கேயே ஏற்பாடாகியிருந்தது. கோயிலிலிருந்து நேராகப் பெண் வீட்டிற்குப் போய் பால், பழம் சாப்பிட்டுவிட்டு, ஓர் ஓட்டலில் ஏற்பாடு செய்து வைத்திருந்த விருந்திற்கும் போவது, என்று திட்டம்.

எல்லாருக்கும் அங்கே தான் சாப்பாடு – பெண்ணும் மாப்பிள்ளை மட்டும் ஒரு காரில்.. மற்றவர்கள் வேனிலும், வேறு வாகனங்களிலும் வந்தார்கள்.

பெண் வீட்டில் பால், பழம் சாப்பிட்டாயிற்று – ஓட்டலில் விருந்து கொடுப்பதைப் போலவே வரவேற்பையும் நடத்தி முடித்துவிடலாம் என்பதுதான் நண்பர்களும் உறவினர்களும் செய்திருந்த ஏற்பாடு – நிதானமாகவே மணமக்கள் தனிக் காரில் புறப்பட்டனர். அந்த நாளில் இராகவனுக்குக் கிடைத்த இன்பம் இதுதான்! துன்பம் வேறு ரூபத்தில் வந்தது.

மிகவும் மெதுவாகப் போன காரின்மீது, ஒரு லாரி அசுரத்தனமாக வந்து மோத, டிரைவரும் முன்னால் அமர்ந்திருந்த சிறுவனும் அதே இடத்தில் பிணமாக, பரிமளா வண்டியிலிருந்து தூக்கி எறியப்பட்டாள். இராகவனுக்கோ இடுப்பில் நல்ல அடி. ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான்..

உயிருக்கு ஆபத்தில்லையென்றாலும், இராகவன் பல நாள்கள் ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டியதாயிற்று. பரிமளா அவன் அருகில் இருந்து கவலையோடு கவனித்துக் கொண்டாள்.

வழக்கமாகப் பேச வேண்டியவர்கள் அனைவரும் பலவிதமாகப் பேசித் தீர்த்தார்கள். ஆனால் இந்த இருவரில் யாருடைய ஜாதகத்தில் கோளாறு என்றுதான் அவர்களால் தீர்மானமாகச் சொல்ல முடியவில்லை.

ஆஸ்பத்திரியை விட்டு இராகவன் வெளியேறும் போதுதான் டாக்டர் அவனிடம் அந்தப் பயங்கர உண்மையைச் சொன்னார். இனி இராகவன் ஆண்மை யில்லாத ஆண்மகன்! இந்தப் பயங்கர உண்மையை இராகவன் உடனே தன் மனைவியிடம் சொல்லிவிட வில்லை.

அவளுக்குத் தெரியாதவரை நல்லது என்றே நினைத்தான்.ஆனால்...

ஆஸ்பத்திரியில் அவனருகில் இருந்து பாடுபட்ட மாதவன் இந்த உண்மையை டாக்டரிடம் தெரிந்து கொண்டபின் முதல் வேலையாக பரிமளாவிடம் அதை மிகவும் ரகசியமாகச் சொல்லி வைத்தான்.

சொல்லி வைத்ததோடு, கொஞ்சம் அதிகமாகவே ஆறுதல் சொன்னான்.

இந்த வயதில் தனக்குத் திருமணமானதே பெரிதாக நினைத்த பரிமளா, இந்த அதிர்ச்சியை அமைதியாகவே தாங்கிக் கொண்டாள். அவளுக்கு, கணவன் என்ற ஓர் ஆள் தேவை!

இராகவன் எளிதில் சமாதானமடைந்துவிடக்கூடிய மனிதனா? இல்லையே...!

பிரம்மச்சாரியாகவே காலத்தை ஓட்டிவிடலாம் என்று நினைத்தவனுக்கு கட்டாயக் கால்கட்டு! இந்த விபத்திற்கு என்ன அர்த்தம்?

அவன் ஏற்கெனவே எடுத்த முடிவு சரிதான் என்று கடவுள் ஒப்புக்கொண்டு விட்டது போலத்தானே? இவன் இப்படி இருக்கலாம்.. மனைவி அப்படி இருக்க முடியுமா?

ஆசிரியையான அவள் மனத்தில் விகாரத்தை ஏற்படுத்த பத்திரிகைகள், டெலிவிஷன் நாடகங்கள்

இவற்றிற்கு மேலாக தொடர்ச்சியாக மாதவனின் வருகை— அவனது நெருக்கம்!

இராகவன் விரும்புகிறானோ இல்லையோ, அவன் தொடர்ந்து இங்கு வந்து கொண்டுதான் இருந்தான். கோயில் குளத்திற்கும் சினிமாவிற்கும் பரிமளாவிற்குத் துணையாகப் போகவும் செய்தான். தங்கள் வீட்டு வேலைகளையே சரிவரக் கவனிக்காத அக்கம் பக்கத்தார் மாதவனைப் பற்றியும் பரிமளாவைப் பற்றியும் பேசத் தொடங்கினார்கள். அந்தப் பேச்சை அவர்கள் ஒரு நாள் உண்மையாக்கி விட்டார்கள். ஊரைவிட்டு ஓடியதன் மூலம்..

இந்த இழப்பை இராகவன் எதிர்பார்த்தான். 'சுகம் தராத ஒரு கணவனைக் கட்டிக்கொண்டு அழ, பரிமளா என்ன புராணகாலப் பெண்ணா?'

கணவனை விட்டுக் காதலனுடன் ஓடிப்போன பெண்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டும் இருக்கிறான்... படித்தும் இருக்கிறான்.

தானே அந்த வரிசையில் ஒருவனாக நிற்கவேண்டியிருக்கும் என்பதை இராகவன் நினைத்துப் பார்க்கவே இல்லை. விரைவில் தன் மனத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டான். மாதவன் மாறுதல் வாங்கிக் கொண்டு வேறு ஊருக்குப் போய்விட்டான். முதலில் புறம் பேசியவர்கள் இப்போது அடங்கிவிட்டார்கள்.. எங்கும் நடக்காத விஷயமா இது?

இராகவனின் வாழ்க்கை ஒரு மாதிரியாக செட்டில் ஆகிவிட்டது. இதுதான் தனக்குக் கொடுத்த வாழ்க்கை என, அவனும் ஏற்றுக் கொண்டான். அநாதையாக வந்து நின்ற ஒரு பையனைத் தன்னுடன் வைத்துக்கொண்டு, அவனைப் படிக்க வைப்பதன் மூலம் தன் மனத்திற்கு நிம்மதி தேடிக்கொண்டான்.. உடல் இன்பத்தைத் தவிர மனைவி, கணவனுக்கு எவ்வளவோ விதத்தில் உதவலாமே?

அதற்கு இவன் கொடுத்து வைக்கவில்லை... தனக்கு இதில் ஒன்றில்தான் கவனம் என்று அவள் சொல்லி



யிருந்தால் இவன் என்ன வேண்டாம் என்றா சொல்லிவிடப்போகிறான்?

காதலனுக்கு மனைவியைக் கட்டிக் கொடுத்த நிகழ்ச்சிகள் நாட்டில் நடந்து கொண்டுதானே இருக்கின்றன? பரிமளாவைப் பற்றி நினைத்தால் அவன் மனம் அப்போதைக்கு சங்கடப்படும். சில நிமிடங்கள் தான்..பிறகு சரியாகிவிடும்.

இவ்வளவு நாள்களுக்குப் பிறகு அவள் கடிதம் எழுதியிருக்கிறாள்.

பத்திரிகையை முழுதுமாகப் படித்துவிட்டு கடிதத்தைக் கையில் எடுத்தான். பிரித்தான். அந்தக் கடிதம் சற்றே நீளமாக இருந்தது.

"அன்பான கணவருக்கு,

வணக்கம். நீங்கள் நலமாக இருப்பீர்கள் என்றே நினைக்கிறேன் – உங்களை விட்டுப் பிரிந்தவுடன், இனி நிம்மதியாக இருப்பேன் என்று நினைத்தவளுக்கு சில நாள்களே மகிழ்ச்சி தருவதாக இருந்தன.

கணவன் வேண்டாம். அன்பாகப் பேசி புருஷசுகம் தரும் ஓர் ஆண் தான் வேண்டும் என்று முடிவு செய்து இவருடன் மகிழ்வோடு வந்த எனக்கு ஏமாற்றம்தான் மிஞ்சியது.

முதலில் பல நாள்கள் என்னைத் தலையில்தான் சுமந்துகொண்டு இருந்தார்.

தனி வீடு.. நிம்மதியான வாழ்க்கை. இதுபோதும் எனக்கு என்று அற்ப சுகத்திற்காக, கட்டிய கணவனை மறந்து ஓடிவந்த எனக்கு. இவரின் எண்ணம் பல நாள்களுக்குப் பிறகே புரிந்தது.

என் உடல் வேண்டும் – நான் சம்பாதிக்கும் பணம் வேண்டும் என்னும் ரீதியில் நடந்துகொள்ளத் தொடங்கினார்.

போகப்போக எல்லாம் சரியாகிவிடும் என்று தவறாக நினைத்துக் கொண்ட நான் என்னையே சமாதானப் படுத்திக் கொண்டேன்.

ஏச்சுகளுக்கும், பேச்சுகளுக்கும் அதிகமாகக் கவலைப் பட்டதில்லை.

என் சக ஆசிரியைகளிடம் இதைப்பற்றி மெதுவாகப் பேச்சு கொடுத்தபோது–

"தாலி கட்டாத கணவன் என்றால் இதையெல்லாம் அனுபவித்துத் தான் தீரவேண்டும். உன்னைப் போன்றவர்களை நன்றாக வைத்துக் கொள்பவர்களும் உண்டு-அடித்துத் துன்புறுத்துபவர்களும் உண்டு" என்றார்கள்.

இந்தச் சமயத்தில் தான் 'இவரைத் திருமணம் செய்துகொள்ளாமல் இவருடன் வந்துவிட்டோமே' என்று எனக்கு உறைத்தது.

"பார்ப்பவர்கள் கேவலமாகப் பேசுகிறார்கள் – என் கழுத்தில் ஒரு தாலியைக் கட்டிவிடுங்களேன்" என்றேன்.

"உன் கழுத்தில் தான், ஏற்கெனவே ஒரு தாலி இருக்கிறதே, இரண்டாவது தாலி எதற்கு? மேலும் என் வீட்டில் எனக்குப் பெண் பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள்.. விரைவில் எனக்குத் திருமணம்" என்றார்.

தவறு என்னுடையதுதான்..!

முதல் தாலி கழுத்தில் இருக்கும்போது, அவரிடம் இன்னொரு தாலி கேட்பது எந்தவிதத்தில் நியாயம்? கணவன் கட்டிய தாலி கழுத்தில் இருக்கும்போது, இன்னோர் ஆணுடன் ஓடிவந்ததே தவறுதான்!

தவறு முழுக்க முழுக்க என்னுடையதுதான். திருமணத்திற்குப் பிறகு இப்படி ஒரு நிலைமையில் கணவனைவிட்டு ஓடுபவள் பெண்ணே அல்லள். என்னைப் போல ஒரு பெண் இந்தத் தவற்றைச் செய்யவே கூடாது – ஆதலால் எனது மனத்தை நான் பக்குவப்படுத்திக் கொண்டேன்.

நீங்கள் கட்டிய தாலியோடு... எப்படி வீட்டை விட்டுப் போனேனோ அதேபோல் திரும்பி வருகிறேன்..

நீங்கள் என்னை ஏற்றுக்கொள்வீர்கள் என்கிற நம்பிக்கை எனக்குண்டு.-

இப்போது என் மனத்தில் எந்தவிதமான சலனமும் இல்லை.

இப்படிக்கு,
**பரிமளா**

கடிதத்தைப் படித்து முடித்தபின் கீழே வைத்தான்.. போனவள்.. திரும்பி வருகிறேன் என்கிறாள்.. அவளை ஏற்றுக்கொள்வதா வேண்டாமா? பெயரளவில் அவள் மனைவியாக இருக்க முடியும்...! சிவப்பு விளக்குப் பெண்களுக்கு மறுவாழ்வு தருவதில்லையா? இந்தக் கற்பனை அவன் மனத்தில் ஓடியபோது...

சீ...சீ.. என்றது மனசாட்சி... இவள் ஒருவனை நம்பிப் போனாள்.. மீண்டும் வருகிறாள்...

கட்டிய தாலி கழுத்தில் இருக்கிறது... மனைவி என்கிற அதே அந்தஸ்தும் இருக்கிறது – அவள் இனி அவன் படுக்கையைப் பகிர்ந்துகொள்ளப் போவதில்லை.

இவனுக்கும் வீட்டை நிர்வகிக்க ஒரு பெண் தேவை. ஒரு நாளன்று.. பல நாள் யோசித்தான்.. திரும்ப வந்து இங்கே ஒரு பெண்ணாக அவள் வாழ்வதில் தவறே இல்லை.. தாலி கட்டிய பாவத்திற்காக இவன் அந்தப் பாரத்தைச் சுமந்து தான் ஆகவேண்டும்.

ஒரே வரியில் பதில் எழுதினான்..

"உடனே புறப்பட்டு வரவும்...இராகவன்" ●





## நாகராஜகுமார்

நீண்ட நாள்களுக்குப் பிறகு அதிசயமாக அன்று மழை பெய்து முடிந்திருந்தது. வெளியே போய் விட்டு வந்திருந்தேன். நனைந்து போயிருந்த ஈர உடைகளைப் பிழிந்து முன் அறையில் இருந்த கயிற்றில் உலர்த்திவிட்டு மின் விசிறியின் இயக்கத்தை வேக மாக்கினேன். மார்கழியின் மாலைப் பொழுது. வெற்றுடம்புடன் இருந்த தால் குளிர் மார்பைத் தழுவி சில்லிட வைத்தது. உள் அறைக்குச் சென்று மர பீரோவைத் திறந்து பனியனைத் தேடினேன். அங்கு கிடைக்காத தால், முன் அறைக்கு வந்தேன். மீண்டும் குளிர் காற்று வெற்றுட லைச் சில்லிட வைத்தது. மின்விசிறி யின் இயக்கத்தை நிறுத்திவிட்டு வெறும் தரையில் குத்துக்காலிட்டு அமர்ந்தபோதுதான் கண்ணில் பட்டது அந்தத் தும்பி.

அதன் இறக்கைகள் படபடக்க – நீண்ட பொன்னிற வாலுடன் உருண்ட தலையுடன் அறையை ஒரு வட்டம் அடித்தது. அறைக் கதவின் ஓரமாகச் சென்றது. உடனே தன் பயணப் பாதையை மாற்றிக் கொண்டு அறைக்குள்ளே வந்தது. மேலிருந்து சட்டென்று இறங்கியது. உட்கார்ந்திருந்த என் திசை நோக்கிப் பாய்ந்தது. நான் பார்த்துக் கொண்டிருந்தபோதே என் மீது படாமல் ஒதுங்கி மீண்டும் மேல் நோக்கிப் பறந்து வட்டமடித்துப் பறந்து கொண்டிருந்த வேளையில் – என் மனசு லேசாகி அதனுடனே சென்றபோது – காரணமே இல்லாமல் எனக்குள் ஒரு பயம் வந்தது. ஒளிர்ந்து கொண்டிருந்த டியூப் லைட்டின் அருகே என்னையும் அறியாமல் என் பார்வையைச் செலுத்தினேன்.

அங்கே குடியிருக்கும் பல்லியை நான் பார்க்காதது மிகப் பெரிய ஆறுதல்.

நகருக்குச் சற்றே தள்ளி புதிதாகக் கட்டி முடித்த வீடு என்னுடையது. அங்கொன்றும் இங்கொன்றுமாக வீடுகள். அடிக் கடி நடந்து வந்ததால் பாதையாகிப் போன இடத்தைத் தவிர, மற்ற இடங்களில் எல்லாம் புல்லும்,



சேறும், பூச்சிகளும் நிறைந் திருக்கும்.

மழை பெய்து ஓய்ந்தால் போதும். தவளைகளின் சங்கீதமும், இனம் தெரியாத பூச்சிகளின் படை யெடுப்பும் என் வீட்டை முற்றுகை யிடும்.

வீட்டிற்குள்ளிருக்கும் ஒளி விளக்கைத் தேடி ஓடி வரும் ஒரு பூச்சியை அடித்து வீழ்த்தி முடிக்கும் முன்பே அடுத்த பூச்சியின் ஆக்ரமிப்பு தொடரும். இப்படிப்பட்ட நேரங்களில் டியூப் லைட்டிற்கு அருகே இருக்கும் அந்தப் பல்லியின் கொட்டத்தையும் கொண்டாட்டத் தையும் கேட்கவே வேண்டாம். அங்கே உயிர்ப் பலிகள் தொடரும்!

முதன் முதலாக அந்தப் பல்லியை நான் பார்த்தபோது ஐந்து வயதுச் சிறுவனின் சுண்டு விரல் அளவில் ஈர்க்குச்சி வாலுடன் பரிதாபமாக நிற்கும். பக்கத்தில் வந்து அமரும் சின்னக் கொசுவைக் கூட சாப்பிடலாமா? வேண்டாமா? என்று யோசித்து நெருங்கும்.

ஆனால் இன்று வெள்ளை வெளேரென்று அரை அடி நீளத்தில் பருத்த வாலுடன், உப்பிய வயிற் றுடன், முக்கோண வடிவமான தலையில் கண்களைத் துருத்திக் கொண்டு பார்க்கும் பார்வையில் நானே பயந்து போயிருக்கிறேன்.

ஒருமுறை இரவு பத்து மணி யிருக்கும். பொத்தென்று சத்தம் கேட்டு, திடுக்கிட்டு எழுந்து அமர்ந்தேன். அடுத்து 'ஙொய்' என்று சத்தம். அவசரமாய்ப் போர் வையை உதறி விட்டு டியூப்லைட் சுவிட்சை அழுத்த – அறையில் படர்ந்த ஒளியில் என் படுக்கைக்கு ஒன்றே முக்கால் அங்குலத் தொலைவில் ஒரு பெரிய கரப்பான் பூச்சியைக் கவ்விக் கொண் டிருந்தது அந்தப் பல்லி.

கரப்பான் பூச்சியின் படபடப் புக்குச் சற்றும் மசியாமல் மிக அழகாக, லாகவமாக ஒரு வெற்றி வீரனின் பார்வையில் என்னைப் பார்த்துவிட்டு மெல்ல நகர்ந்தது அது.

சில நேரங்களில் டி.வி. பெட்டிக்குப் பின்னால் – என் பார்வைக்குத் தெரிகிற மாதிரி அதன் கீழ்த்தாடை தெரியும். பிறந்த குழந்தைகளின் உச்சந்தலையில் சின்னதாக ஓர் அதிர்வு தெரியுமே... அதுபோல அதன் கீழ்த்தாடைப் பகுதி அதிர்ந்து துடித்துக் கொண் டிருக்கும். பார்க்க அருவருப்பாய்த் தோன்றும். அதை மறந்து சில நொடிகளுக்குப் பிறகு பார்த்தால் பாம்பின் தலைப் பகுதியைப் போல் தெரியும்.

அருகில் சென்று அதை விரட்ட பயந்தபடி அந்த இடத்தை விட்டு நகர்ந்து விடுவேன்.

இன்று, இதையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக நினைவு படுத்திக் கொள்ளக் காரணமாக இருந்தது அந்தத் தும்பி. என் அறைக்குள் புது வரவான அந்தத் தும்பியைத் தன் வசப்படுத்திக் கொண்டு விழுங்க இரண்டு நொடிகள் போதும் அந்தப் பல்லிக்கு! பார்வை மீண்டும் டியூப் லைட்டின் அருகே சென்றது. அவ்விடத்தில் அந்தப் பல்லியில்லாதது சற்று ஆறுதலாகவே இருந்தது. ஆனால் அந்த ஆறுதல் நிரந்தரமானதில்லை என்பதும் எனக்குத் தெரியும்.

மீண்டும் அறையைச் சுற்றி என் பார்வையைச் செலுத்தினேன். தும்பியைத் தேடினேன். இல்லை என்று உணர்ந்தேன். அநேகமாய் என் அறையை விட்டுக் கிளம்பி யிருக்கும் என்று நினைத்தபடி டியூப் லைட்டின் அருகே மீண்டும் என் பார்வை பதிந்தபோது விளக்கின் பின் சட்டத்திலிருந்து மெல்ல எட்டிப் பார்த்தது பல்லி.

சுவர் ஓரமாய் நான் ஒதுங்கி யிருக்க – என் அசைவுக்குத் தன் பார்வையை என் மீது செலுத்தி – நிலைகுத்தி என்னையே பார்த்தது. மெல்ல நகர்ந்தேன். அறைக்குள் இருந்த குளிர் மாதக் காற்றில் இப்போது உஷ்ணம் கலந்திருப் பதைப் போன்ற உணர்வு வர – தும்பியின் ஆயுள் காலமும் நீட்டித்து விட்ட திருப்தியில் மின்விசிறியின் பட்டனை, சிரித்தபடி அழுத்தினேன்.

மின் விசிறியின் இறக்கையி லிருந்து, 'தட்' டென்று சின்ன ஓசை. திரும்பித் தரையைப் பார்த்தேன். தும்பி தரையில் தன்னுடைய ஒரு பக்க இறக்கைகளை இழந்து – நொடியில் இறந்து போய் விழுந்திருந்தது. சட்டென்று என் பார்வை சுவரிலிருந்த பல்லியின் மீது திரும்ப – அது என்னைப் பார்த்துச் சிரிப்பது போல் தோன்றியது. ●

# ஸ்ரீ இராஜகோபால விலாசம்

**வி**ண்ணகரம் என்றழைக்கப்படும் வைணவ திவ்யதேசங்கள் சோழ நாட்டில் இதுகாறும் ஆறு விண்ண கரங்கள்தான் என்று சொல்லப் படுகிறது. ஏழாவது விண்ணகரமாக விளங்கும் குலோத்துங்க விண்ணகரம் என்றழைக்கப்படும் ராஜமன்னார்குடி ஸ்ரீராஜகோபாலஸ்வாமி கோயிலை இதில் சேர்க்காமல் விட்டது தொன்று தொட்டு வரும் தவறாகும்.

பொதுவாக ஆழ்வார்கள் பாடலை யொட்டியே அந்தந்த விண்ணகரங்கள் பெயர் வைக்கப்படுகின்றன. பன்னி ரண்டு ஆழ்வார்களில் யாரேனும் ஒருவர், அந்தந்த விண்ணகரத்தில் உறையும் வைணவ தெய்வத்தைப்பற்றிப் பாடியிருப்பார்கள். இது மரபு.

*உன்னித்து மற்றொரு தெய்வம்*
*தொழார் அவனையல்லால்,*
*நும் இச்சை சொல்லி நும்தோள்*
*குலைக்கப்படும்.*
*மன்னப்படு மறைவாணனை*
*வன்துவராபதி*
*மன்னவன் ஏந்துமின ஏற்றுதலும்*
*தொழுது ஆகிடுமே*

(நான்காம் பத்து – ஆறாம் திருமொழியில் 10 ஆவது பாசுரம்)

நம்மாழ்வார் தம்மை நாயகியாக உணர்ந்து, அவ்வளவே உணர்வால் மாறி, வியோக சிருங்காரத்தில், வன் துவராபதி மன்னவன் ஸ்ரீராஜ கோபாலனை நினைந்து நினைந்து நெஞ்சுருகி வாடி நிற்கும் அவனைப் பார்த்து, ''இப்பெண் எம்பெருமானை யன்றி வேறு தெய்வத்தை வணங்க மாட்டாள். நீங்களோ உங்களுக்கு விருப்பமானவற்றைச் சொல்கிறீர்கள். எம்மான் துவாரகைக்கு அதிபதியாகிய கண்ணன் ஒருவனே. இவன் விரக நோய்க்கு மருந்தாவான். அவனைத் துதிக்கின்ற பொழுதிலேயே இவனால் வணங்கியபடியே ஆடுவாள். அதனால் உயிர் பிழைப்பாள் என்பது பொருள்.

பக்தியின் எல்லைக்கே போகும் ஆழ்வார்களோ, மற்றவர்களோ தன்னை நாயகியாகவே உணர்ந்து, பகவானை நாயகனாக நினைந்து உருகுவது ஒரு மரபு. கபீர்தாஸர்கூட ஸ்ரீராமனை நினைந்து இவ்வாறு பல பாடல்களைப் பாடியிருக்கிறார்.

ஆக குலோத்துங்க விண்ணகரம் என்று ராஜமன்னார்குடியை அழைப் பதில் தவறில்லை.

இனி இதன் சுருக்கமான வரலாற் றுப் பின்னணியைப் பார்ப்போம்.

செம்மங்குடி, சேந்தங்குடி என்று குடி என்ற பெயரால் பல ஊர்கள் திகழ்கின்றன.

மன்னார்குடி என்ற இந்தத் திருத் தலம் 200 ஆண்டுகள் வரை 'மன்னார் கோயில்' என்றே அழைக்கப்பட்டது. தெலுங்கு மொழியில் கோயில்

**வடுவூர் நாராயணன்**



மன்னார்குடி

என்பதற்கு 'குடி' என்று குறிப்பிடுவர். தஞ்சை நாயக்க மன்னர்களின் ஆட்சிக்குப்பிறகு 'மன்னார்கோயில்' மன்னார்குடி ஆனதாக ஆவணங்கள் சொல்கின்றன.

தமிழகத்தில் மன்னார்கோயில் மொத்தம் மூன்று. தென் ஆர்க்காடு மாவட்டத்தில் வீராணம் ஏரிக்கரையில் உள்ள காட்டு மன்னார்குடி. இதன் பழைய பெயரும் மன்னார்கோயிலாகும். பராந்தகசோழன் ஆட்சிகாலத்தில் (கி.பி.907–953) இதற்கு வீரநாராயண சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் வந்தது. இங்குள்ள பெருமாள் ரங்க மன்னார்.

நெல்லை மாவட்டத்தில் அம்பா சமுத்திரம் அருகே ஒரு மன்னார். கோயில் உண்டு. சேரமன்னன் ராஜசிங்கம் திருமாலுக்கு எடுத்த கோயிலே இராஜேந்திர சோழ விண்ணகரம். இங்குள்ள பெருமாளும் செப்புத் திருமேனியன். கையில் செண்டேந்திய கோலத்தில், ஒருபுறம் ஆண்டாளுடனும், மறுபுறம் கருடனு டனும் காட்சி தருகிறார்.

மூன்றாவதாக நமது மன்னார் கோயில். திருமால், துவாரகை மன்னனாக, கண்ணனாக, கையில் செண்டேந்தி, செண்டலங்காரனாக, பாமா ருக்மணியுடன் காட்சி தருவதால் இந்த ஊரும் மன்னார்கோயில் ஆயிற்று. மூன்று ஊர்களிலும் துவாரகை மன்னன் கையில் செண் டேந்திக் காணப்படுகிறார்கள். சிலர் செண்டு என்பதை (மூன்று வளைவு களைக் கொண்ட) சாட்டை என்று தவறாகக் கூறுவர்.

வீரநாராயணபுர சதுர்வேதி மங்கலம் காட்டுமன்னார்குடியாக மாறியதைப் போல, இந்த ஊரும் இராஜாதிராஜ சதுர்வேதி மங்கலம் என்ற பெயரைத் தவிர்த்து ராஜ மன்னார்குடியாயிற்று.

தஞ்சைப் பெரிய கோயிலைத் தோற்றுவித்த முதலாம் இராஜ ராஜசோழனின் பேரனும், கங்கை, கடாரம் போன்ற நாடுகளை வென்று, கங்கைகொண்ட சோழபுரத்தை உருவாக்கிய இராஜாதிராஜன் பெய ரால் இவ்வூர் அவனுடைய பெயரா லேயே உருவானது ஒரு பெருமை யாகும்.

இராஜாதிராஜ விண்ணகரம் இந்த இராஜகோபாலஸ்வாமி கோயிலின் மூலப்பெயராகும். இம்மன்னன் காலத் தில் செங்கற்கோயிலாக இருந்திருக்க வேண்டும். உதாரணத்திற்கு நாதன் கோயில் (திப்புராஜபுரம் அருகே) என்றழைக்கப்படும் திருநந்திபுர விண்ணகரம் கோயிலுக்கு வெளியே சற்றே தொலைவில் குந்தவ்வை நாச்சியாரின் திருமாளிகை ஒன்று பாழடைந்த நிலையில் செங்கற்களால் கட்டப் பெற்றதாகக் காணப்படுகிறது.

இந்தச் செங்கற்கோயிலை, குலோத்துங்க சோழன் கருங்கற்கள் கொண்டு திருப்பணி செய்து தனது பெயருடன் ஸ்ரீகுலோத்துங்க விண்ண கரம் எனப் பெயரும் இட்டுள்ளார் என்பதை அறியமுடிகிறது. கோபாலன் வழிபாடு இம்மன்னர்கள் காலத்தில் சிறப்பு பெற்றன என்பதே ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும்.

இராஜமன்னார்குடியான இத் திருக்கோயிலின், மூலவர் முன் தரிசனம் தரும் வன் துவராபதி மன்னனார் என்னும் இராஜகோபாலன், பாமா, ருக்மணி சிலைகள் செப்புத் திருமேனிகள்.

தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களில் அச்சுதப்ப நாயக்கர், அவருடைய மகன் ரகுநாத நாயக்கன், அவருடைய மகன் விஜயராகவ நாயக்கன், பின்னர் அவருடைய மகனுமான மன்னாருதேவன் போன்ற தஞ்சை நாயக்கர்கள், இக்கோயிலை 7 பிராகாரங்களுடன் மிகப் பரந்த அளவில் விரிவடையச் செய்து, மண்டபங்கள், திருக்குளங்கள் ஆகிய வற்றைத் தோற்றுவித்து, எழில்மிகு நகரமாகச் செய்ததை தஞ்சை நாயக்கர் காலத்து ஓலைச்சுவடிகள் விரிவாகக் கூறுகின்றன.

சாகித்ய ரத்னாகரம், ரகுநாத நாயக் காப்புதயம், மன்னாருதாச விலாசம், இராஜகோபால விலாசம், ஹேமாம்புஜ நாயகி சுயம்வரம், பிரகலாத சரித்திரம், பூதனாஹரம், காளீயமர்த்னம். விப்ரநாராயண சரித்திரம், கிருஷ்ண விலாசம் போன்ற தமிழ் சம்ஸ்கிருத நுல்கள் இக்கோயி லையும் இதனுள் உறையும் ஸ்ரீராஜ கோபாலனின் பெருமைகளையும் அக்காலத்தில் நடைபெற்றுவந்த இசை, நாட்டிய, நாடகங்கள் போன்றவற்றையும் தெளிவாகச் சொல்கின்றன.

மன்னர் அச்சுதப்ப நாயக்கர் காலத்தில், ஒரு மகத்தான பணியாக, இங்கே குறிப்பிடப்படவேண்டியது கருடஸ்தம்பம் என்னும் துவஜஸ்தம்பமே. மேலே 5 அடி × 5 அடி அளவுடைய பலகைக்கல் தலையுடன் 54 அடி உயரமுடைய இக்கருடஸ்தம்பம் வியப் பிற்குரியது. ஏனெனில் கருங்கற்களே இல்லாத இங்கு புதுக்கோட்டை குன்றாண்டார் கோயில் மலைப் பகுதிகளிலிருந்து இக்கல்லைக் கொணர்ந்து நிறுத்தியது மகத்தான சாதனையாகும். இக்கம்பத்தில் இராஜ கோபாலன், ஸ்ரீ ஆஞ்சநேயர் அச்சுதப்ப நாயக்கர், அவருடைய மனைவி மூர்த்தி யாம்பா ஆகியோரின் சிற்பங்கள் உள்ளன.

ரகுநாத நாயக்கன் சில கோபுரங் களையும், மண்டபங்களையும், கட்டி னான் என்பதற்குச் சான்றாக, இராஜகோபாலரின் கருவறைக்கு முன்னால் உள்ள மகாமண்டபத்தில் பல்வேறு தானங்களை அமைச்சர் கோவிந்த தீட்சிதருடன் இருந்து செய்த

# பொதுத் தொண்டு

தித்திக்கும் அத்தி யுள்ளே
　　செல்கின்ற 'கொசுக்கள்' எல்லாம்
அத்தியும் அழியும் போதே
　　அழிந்திடும்! ஆனால் வெப்பச்
சித்திரைக் கோடை தன்னில்
　　சிங்காரக் கவிதை பாடும்
முத்தான 'குயி'லே நந்தம்
　　முழுநெஞ்சில் நிலைத்து வாழும்!

காசொலிக் கீதம் கேட்டு.
　　கவர்ச்சிப்பட் டாடை பூண்டு.
வாசமாய் உண்டுறங்கி
　　மடிந்தவர் கணக்கில் கோடி!
தேசத்தை உயர்த்து தற்குச்
　　செருப்பாக உழைத்துத் தேய்ந்து
மாசற்ற தொண்டு செய்தோர்
　　மண்மீது 'கதிர்' போல் நின்றார்

உருவமே பெறா திருந்தும்
　　ஒப்பிலாத் 'தென்றல்' தன்னை
விரும்பியே தழுவு தற்கு
　　விழைகின்றோம்! ஆனால் செம்மை
உருவத்தில் பழுத்துத் தொங்கும்
　　உதவாத 'எட்டி' தன்னை
விரும்பியே தொடுவ தற்கும்
　　விழைபவர் உண்டா இங்கே?

மணக்கின்ற 'மல'ரோ பூத்து
　　வாழ்வதும் ஒருநாள்! ஆனால்
இணக்கமாய் மாத ராரின்
　　எழில்முடி ஏறி நிற்கும்!
நிணம், சதை, நரம்பெலும்பு
　　நீண்டநாள் நிலைப்ப தேது?
　　குணத்தாலே, பொதுத்
　　தொண்டாலே
　　குவலயம் நினைக்க
　　வாழ்வோம்!



**கவிவேந்தர்**

**கா.வேழவேந்தன்**

சிற்பங்களில், ஸ்வர்ண மேருதானம், கோதானம், துலாபார தானம், பூதானம் போன்றவற்றை அளிக்கும். காட்சிகள் கருவறைத் தூண்களின் அடிப்பாகத்தில் இன்றும் காணப்படு கின்றன.

தற்போது காணும் பெரிய கோயில் கோபுரங்கள் நான்கினையும் ஆயிரங் கால் மண்டபத்தையும், கிருஷ்ண தீர்த்தத்தையும், மற்றும் சில மண்டபங் களையும் அகழியையும் கோட்டை யையும் உருவாக்கியிருக்கிறான்.

திருமலை நம்பி தாத்தாச்சாரியார் பிற்காலத்தில் நாயக்க மன்னர்களுக்கு, (கோவிந்த தீக்ஷிதருக்குப் பின்னால்) திவானாக இருந்தவர். திருமங்கை ஆழ்வார், பெரியாழ்வார் போன்றவர் களுக்கு சிலைகளைச் செய்வித்தவர், விஜயராகவ நாயக்கர். சிலைகளின் பீடத்தில் அச்சிலைகளின் பெயர் களைக் குறிப்பிட்டு அருகே, "அச்சுத விஜயராகவ மன்னாருதாசன் சதா சேவை" என்று எழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். இதில் குமார தாத்தாச்சாரியாரின் சந்நிதி மட்டும் பல காரணங்களுக்காக வெளி உலகிற்குத் தெரியாமல் வைக்கப்பட்டிருக்கிறது.

இம்மன்னவன் காலத்தில்தான், இராஜகோபாலஸ்வாமிக்கு உரிய நிலங்களிலிருந்து மூன்று லட்சம் கலம் நெல்லும், முப்பதினாயிரம் பொற்காசு களும் குத்தகைகளாகக் கிடைத்தன என்பதை மன்னாருதாச விலாசம் என்னும் நூல் கூறுகிறது.

சௌராஷ்டிரத்தைச் சேர்ந்த ராஜ சேகரன் என்ற மன்னன் நன்றி மறந்த தன் பாவத்தைப் போக்கிக் கொள்ள இத்தலம் வந்து, பல நாள்கள் தங்கி தாயார் கோபுரம், மண்டபம், பிராகாரம் முதலியவற்றை அமைத்தான் என்றும் சொல்லப்படுகிறது.

மன்னார்குடி மதில் அழகு. கோயில் ஒரு பாதி, குளம் ஒரு பாதி. மறையோர் மிகுந்தது மன்னார்குடியே என்ற பழமொழிகள் இத்தலத்தின் சிறப்பிற் காக எழுந்தவையாகும்.

இக்கோயிலில் ஆடிப்பூரத்தேரை யும், பிரம்மோத்ஸவப் பெருமாள் தேரையும் இந்நகர் தேசிய மேல்நிலைப் பள்ளி மாணவர்கள் தொன்றுதொட்டு இழுத்து நிலைக்குக் கொண்டு வருவது ஒரு தனிச்சிறப்பாகும்.

ஸ்ரீமத் நிகமாந்த மஹாதேசிகனின் ஸ்ரீகோபாலவிம்சதியும், ஸ்ரீமணவாள மாமுனிகள் இங்கு வந்து பலநாள்கள் தங்கி இயற்றிய ஸ்ரீகமலாஸ்துதியும் புகழ் பெற்றவை.

கீர்த்தனைகளையும் இன்றும் இசை மேதைகள் பலர் பாடி வருகின்றனர்.

நாயக்க மன்னர்கள் காலத்தில் வாழ்ந்த க்ஷேத்திரக்ஞர் பதமாகிய 'பேகட' ராகத்தில் 'இன்னி விந்தறு குண்டெநா' ஸ்ரீமணவாள மாமுனிகள் இயற்றிய ஸ்ரீஇராஜகோபால மங்களத் தையும் தினமும் பாடி வருகின்றனர்.

*புகழும் நல் ஒருவன் எங்கோ...?*
*பொருளில் சீர்ப்பூமி எங்கோ?*
*திகழும் தாள் பாவை எங்கோ?*
*நிகழும் ஆகாசம் எங்கோ?*
*நின்சுடர் இரண்டும் எங்கோ?*
*கண்ணனைக் கூவு மாறே?*

என்ற நம்மாழ்வாரின் பாசுரத்துடன் ஸ்ரீஇராஜமன்னார்குடி வரலாற்றைச் சுருக்கமாக முடிக்கலாம். ●

# ஸ்ரீ ஆஞ்சனேயரின் அருள்பெற்ற அற்புத ஜோதிடர்

அண்மையில் ஒருநாள், சென்னை திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் ஆலயத்தின் எதிரேயுள்ள கிழக்குக் குளக்கரைத் தெருவில் 6ஆம் எண் வீட்டின் எதிரே கார்களும், இருசக்கர வாகனங்களும் ஏராளமாக வந்து நிற்க,

விவரத்தை விசாரித்ததில், குருப் பெயர்ச்சியை முன்னிட்டு, அங்கே ஒரு ஹோமம் நடைபெற்றுக் கொண்டிருக் கிறதென்பதையும், அதில் கலந்து கொள்ளவே அத்தனை கூட்டமும் அங்கே திரண்டதென்பதையும் புரிந்து கொள்ள முடிந்தது.

அதை நடத்தி வைத்தவர் ஸ்வாமி கண்ணன் பட்டாச்சாரியா என்ற பெயரில் ஆன்மிக, ஜோதிட உலகில் பெரும்புகழ் பெற்றுப் பிரபலமாக விளங்கும் ஜோதிடர். அவரைக் காண முன்னேற்பாட்டுடன் அவர் இல்லத் துக்குச் சென்றோம்.

வயதான முதியவர் ஒருவரைப் பார்க்கப்போகிறோம் என்று கற்பனை செய்துகொண்டு நுழைந்தோம். ஆனால் நாம் வியப்படைந்தோம். ஆம். அங்கே நாம் கண்டவர் 40 வயதுக்குள் மதிக்கத்தக்க நடுத்தர வயதினர்தான்.

மேஜை, நாற்காலியெல்லாம் எதுவு மில்லை. ஸ்வாமிகளும் தரையில் மான் தோல் ஆசனம் ஒன்றின் மீது வீற்றிருக்கிறார். மெலிந்த தேகம். ஆனால் மேதைமையைப் புலப்படுத்தும். ஆழ்ந்த நுண்ணிய பார்வையும்,, முகத்தில் அருள் ஒளியும் வீசுகின்றன.

சிறுவயதிலேயே ஆன்மிக நாட்டம் ஏற்பட்டு, திருவண்ணாமலை முதல் காசிவரை சென்று, கடும் தவங்களை யெல்லாம் செய்திருக்கிறார். யாருடைய பார்வையிலும் படாமல் காடுகளில் வாழ்ந்துவரும் பல சித்தர் பெரு மக்களையும் மற்றும் பெரும் மகான் களையும் சந்தித்திருக்கிறார்.

பல்வேறு திருக்கோயில்களின் கும்பாபிஷேகங்களை நடத்தி வைத் திருக்கிறார். மந்திர சாஸ்திரம், யந்திர சாஸ்திரம் போன்றவற்றையும் கற்று அதன் விளைவாகக் கிடைத்த தெய்வீக ஆற்றலால், இன்று பல்வேறு பிரச்னை களுக்காகத் தம்மை நாடி வருபவர் களுக்கெல்லாம் ஜோதிடம், எண் கணிதம், கைரேகை ஆகியவற்றின் மூலம் இவர் கூறும் பலன்கள் அப்படியே துல்லியமாகப் பலிக்கின்றன. மேலும் விருட்ச சாஸ்திரம் என்ற புதுமையான முறையில் பரிகாரங்களைக் கூறுபவர் இவர் ஒருவராகத்தான் இருக்கமுடியும்.

வீடுகள், கட்டடங்களில் உள்ள ஜாதக ரீதியான குறைபாடுகளைப் போக்க வாஸ்து சாஸ்திர முறைப் படியான பரிகார முறைகளையும் கூறி வருகிறார். நோய்கள் தீரவும், செல்வம் கொழிக்கவும், வியாபாரம் பெருகவும் தேவையான வழிபாட்டுக்குரிய யந் திரங்களையும் உருவாக்கித் தருகிறார்.

ஜோதிடப் பலன்கள் கூறுவதுடன் மட்டுமன்றி சிறந்த பல நூல்களைப் படைக்கும் நூலாசிரியராகவும் திகழ் கிறார். மிகுந்த சிரமப்பட்டு ஏட்டுச் சுவடிகளிலிருந்து எடுத்தெழுதி முதல் முறையாக நூல் வடிவில் வெளிவந்த இவரது படைப்பான 'வினை தீர்க்கும் விருட்ச சாஸ்திரம்' என்ற நூல் வாசகர்களின் பெரும் வரவேற்பைப் பெற்றது (காமதேனு பப்ளிகேஷன்ஸ் லிமிடெட் வெளியீடு) குறிப்பிடத் தக்கது. கிரக, தசாபுத்திகளின் பாதிப் பால் இன்னல்களுக்கு ஆளான வர்கள், தங்கள் இராசிக்குரிய மரம் என இந்நூலில் குறித்துள்ளபடி மரங்களை நட்டு தங்கள் வாழ்வில் இன்னல் நீங்கி இன்புற்றவர் பலராவர். இதுதவிர, அவ்வப்பொழுது இவர் எழுதும் சனிப் பெயர்ச்சி, குருப்பெயர்ச்சி பலன்கள், புத்தாண்டு பலன்கள் போன்ற நூல்களும், எண்களின் ஜாலங்கள் போன்ற பல ஜோதிட, நூல்களும் தமிழகத்தில் மட்டுமின்றி, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடு களிலும் பரவலாக மக்களால் சிறப்பாகப் பேசப்பட்டு வருகின்றன. தமிழகத்தில்



வெளியாகும் முக்கியமான, வார, மாத இதழ் சிலவற்றில் தொடர்ந்து ஜோதிடக் கட்டுரைகளையும் எழுதி வருகிறார்.

இந்த நடுத்தர வயதிலேயே இத் தனை சிறப்பான ஆற்றல்களும் இவரிடம் அமையக் காரணம் என்ன? அவரையே கேட்டோம். அழகாய்ப் பதில் சொன்னார்.

"எங்கள் பாட்டனார் காலத்தி லிருந்தே செய்யப்பட்டு வரும் ஸ்ரீயோக ஆஞ்சநேய சக்திபீட பூஜையை, தொடர்ந்து நானும் சிறப்பாக உபா சனை செய்து வருகிறேன். நான் சந்தித்த சித்தர் பெருமக்கள், மகான்கள் ஆகியோரின் அருளாசி களும், என் குருநாதரின் ஆசிர் வாதமும் தெய்விக அருளும் என் வாக்கில் குடியேறி, நாவில் நடமாடி என்னை வழிநடத்தி வருகின்றன. நான் வெறும் கருவியே. என் சொற்களும் செயல்களும் தெய்விக அருளேயன்றி வேறில்லை" என்று அடக்கமாகக் கூறினார். •

கு. சண்முகசுந்தரம்

# மேலட்டை விளக்கம்:

# கங்கை வந்தாள்



பாரத நாட்டிற்குப் பெருமை சேர்த்து, உலகத்தவரை வியக்க வைக்கும் சிற்ப சித்திர ஓவியங்களுள் குறிப்பிடத்தக்கவை அஜந்தா, எலிபெண்டா, எல்லோரா, வாதாபி, மாமல்லபுரம், காஞ்சி, கயிலாயநாதர், வைகுண்டப் பெருமான் ஆலய அமைப்பு, தஞ்சைப் பெருவுடையார் கோயில், கங்கை கொண்ட சோழபுரம், கிருஷ்ணபுரம் சிற்பங்களே

எல்லோரா குகைக் கோயில்கள் மிகவும் சிறப்புடையவை. குகைக்கோயில் என்பவை குடைவரைக் கோயில்களே. மலையையோ,பெரும் பாறைகளையோ குடைந்து கருவறை, முன்மண்டபம் நிறுவி அதிலே தூண்களை அமைப்பார்கள். அந்த மண்டபப் பக்கப் பாறைச் சுவர்களில் அற்புதச் சிற்பங்களைப் புடைச் சிற்பங்களாகப் படைத்திருப்பார்கள்.

பல்லவ அரசருள் பெருமையுடன் பேசப்படும் அரசர்கள் மகேந்திரன், மாமல்லன் என்றழைக்கப்படும் நரசிம்மன், இராசசிம்மன், நந்திவர்மன் ஆகியோர். இராஜசிம்மன் ஒன்றின் மேல் ஒன்று பாறைகளைப் பொருத்தமாக அடுக்கிக் கோயில்களைக் கட்டினான். கடற்கரைக் கோயிலையும், கயிலாயநாதர் கோயிலையும் கட்டினான். பனைமலைக் கோயிலையும் காஞ்சியிலுள்ள ஐராவதேச்வரர் கோயிலையும் அமைத்தான்.

பல்லவ அரசன் நந்திவர்மன் காலத்தில் சாளுக்கியர்கள் எப்போதும் பல்லவரிடம் அன்பாயிராமல் படையெடுக்கும் குணம் கொண்டவராயிருந்தனர் என்று வரலாறு கூறுகிறது. சாளுக்கியர்களின் போர்க் குணம் ஒரு கால கட்டத்தில் ஒடுங்கியது. இரண்டாம் கீர்த்திவர்மனுடன் சாளுக்கிய மரபு மறைந்து, இரட்டர்கள் தலைதூக்கினர். தந்திதுர்க்கன் என்ற அரசன் காலத்தில் காஞ்சியில் நந்திவர்மன் என்ற பல்லவ அரசன் ஆட்சிபுரிந்தான். தந்திதுர்க்கன் காஞ்சியிலுள்ள கலைச் செல்வங்களைப் பற்றிக் கேள்விப்பட்டான். காஞ்சிமீது படையெடுத்தான். அவனுக்கு வைரமேகன் என்ற பெயரும் உண்டு. பல்லவர்களின் தளபதி உதயசந்திரன்.. உதயசந்திரனைப் பற்றித் தமிழக வரலாற்றில் அதிகம் குறிப்பிடப்படவில்லை. சிறந்த போர்வீரன். போர் நுணுக்கங்களை அறிந்தவன். தந்திரங்களையும் அறிந்தவன். வைணவ சமய ஆழ்வார்களுள் ஒருவரான திருமங்கை மன்னன் அந்தக் காலத்தில் காஞ்சிபுரம் வந்திருக்கிறார்.

உதயசந்திரன் தன் புத்திக் கூர்மையால் வைரமேகன் மகள் ரேவாதேவியை நந்திவர்மனுக்கு மணம் முடித்துக் கொடுத்துப் பெரும்போர் ஏற்படாமல் செய்திருக்கிறான். அத்துடன் வைரமேகன் கண்டு வியப்படைந்த காஞ்சி கயிலாயநாதர் வரைபடத்தையும் கொடுத்திருக்கிறான். இவன் இரட்ட நாட்டை ஆண்ட காலம் கி.பி.725–758. (நான் எழுதிய 'உதயசந்திரன்' வரலாற்றுப் புதினத்தில் விவரம் காண்க.) வைரமேகன் அடைந்திருந்த காஞ்சிக் கயிலாயநாதர் ஆலய வரைபடத்தை மேலும் விரிவாக்கிக் கட்டப்பட்டதுதான் எல்லோரா. வைரமேகனுக்குப் பிறகு ஆட்சிபுரிந்த சிற்றப்பன் முதலாம் கிருஷ்ணன் இரட்ட நாட்டை ஆட்சிபுரியத் தொடங்கியபோதுதான் எல்லோரா குடைவரைக்கோயில் அமைக்கப்பட்டது.

ஓவியர் கோபுலுவும் திரு.சாவியும் எல்லோராவுக்குச் சென்றிருந்தனர். அங்குள்ள கங்காதேவியின் சிற்பத்தை ஓவியர் கோபுலு பார்த்திருக்கிறார். கங்காதேவியின் சிற்பம் மண்டபத்தின் வெளிப்புறத்தில் இரண்டு மண்டபங்கள் சேரும் மூலையில் (கூடுவாமூலை என்று சொல்வார்கள்) அமைக்கப்பட்டிருந்தது. ஒருநாள் பெரும் இடி, மின்னல்!. வானமே பொத்துக் கொண்டதுபோல் மழை பொழிந்தது. கங்காதேவி இருக்கும் சிலையின் மேற்புறத்திலிருந்து மழைநீர் அருவியாகப் பாய்ந்தது. சிற்பியின் கண்களுக்கு கங்காதேவியை வானின்று மண்ணுக்குக் குதித்து வருவதுபோல் தோன்றியது. அந்த அதிசயம் அவனுள் பெரும் குதூகலத்தை ஏற்படுத்தியிருக்கிறது. கலையின் பயனும், அவனால் வெற்றியும் ஏற்பட்டால் எந்தக் கலைஞன்தான் ஆனந்தக் கூத்தாடமாட்டான்? சிற்பி ஆனந்தக் கூத்தாடுகிறார். இராட்டிரகூட நாட்டு அரசி, கங்கையும் யமுனையும் அந்த அதிசய சிற்ப மண்டபத்தில் குதித்தோடி வருவதைக் கண்டு மகிழ்கிறாள்.

திரு. கோபுலுவும், சாவியும் சென்றபோது ஒருநாள் மாலைப் பொழுது. வானத்தில் கருமேகங்கள் சூழ்ந்து கொண்ட கணநேரத்தில் மழைபெய்கிறது. பலமாகப் பெய்கிறது. மழைத்தண்ணீர் பெருவெள்ளத்தைப் போல ஊற்றுகிறது. ஆகா; கங்கை பூமிக்கு இறங்கி வருவது போலிருக்கிறது என்று மகிழ்ந்திருக்கின்றனர்.

சிற்பி கண்ட அதே இன்பக் காட்சியை அவர்களும் காண்கிறார்கள் என்றே தோன்றுகிறது.

பல ஆண்டுகள் அந்தக் காட்சியை மனத்தில் 'சிறை' பிடித்து வைத்திருந்த ஓவியர் கோபுலு 1999 தீபாவளி மலரின் மேலட்டையில் வண்ண ஓவியமாக வரைந்துள்ளார்.

'கங்கா ஸ்நானம் ஆயிற்றா? என்று கேட்டு வாழ்த்துக் கூறிக்கொள்ளும் பழக்கமுடையவர்களுக்கு அமுதசுரபி தீபாவளிமலரில் கங்கைதேவியின் வருகையை வண்ண ஓவியமாக அளித்த திரு.கோபுலு அவர்களைப் பாராட்டுகிறோம். ஸ்ரீபெரும்புதூர் ஜீயர் சுவாமிகள் 'கலைமுகில்' என்ற பட்டத்தை 30.9.99 அன்று எம்.ஏ.சி.விருதளிக்கும் விழாவில் அளித்தார்கள். அந்தப் பட்டம் மிகப் பொருத்தமுடையது.

— விக்கிரமன்

# குமரகுருபரர் கற்பனையில் நிலவு

டாக்டர் ஆ. கந்தசாமி

கற்பனை:

கற்பனை என்னுஞ் சொல்லிற்கு மதுரைப் பேரகராதி பதினாறு பொருள்களைத் தருகிறது. தமிழ் லெக்சிகன் 'கல்' என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த தமிழ்ச்சொல் ஒருவகை யென்னுங் 'கல்பனா' என்னும் பகுதியடியாகப் பிறந்த வடசொல் மற்றொரு வகையென்றுங் கூறுகிறது. இலக்கியத் திறனாய்வாளர்கள் கற்பனை யென்னுஞ் சொல்லினை இல்லாததைச் சுட்டிச் சொல்லுதல், வருணனை என்ற பொருளில் இன்று வழங்குகின்றனர். பழந்தமிழிலக்கியங்களில் கற்பனை என்னுமிச்சொல் ஆளப்படவில்லை. திருமந்திரத்தில் தான் இச்சொல் முதன் முதலாக ஆளப்பட்டுள்ளது. அதுவும் இலக்கியப் பண்பு என்ற பொருளில் வழங்கப்படவில்லை. இச்சொல் புனைந்துரைத்தல் என்னும் பொருளில் சேக்கிழார் காலம் (கி.பி.12) முதற்கொண்டு வழங்கிவருவதாகக் காணக்கிடக் கிறது. ஆனால் இப்போது நாம் வழங்கும் கற்பனை என்ற பொருளில் புனைவு – புனைந்துரை கட்டியுரைத்தல். படைத்தல் போன்ற சொற்களைப் பழந்தமிழிலக்கியங்களில் காண்கிறோம்.

குமரகுருபரர்: பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த குமரகுருபரருடைய பிரபந்தங்களில், "காலத்தொடு கற்பனை கடந்த, கருவூலத்துப் பழம் பாடல்" "கற்பனை கழன்று நின்ற நின்பொற்கழல் இறைஞ்சுதும்" "கற்பனை கடந்த கடவுள்" "கற்பனை கழன்று நிற்றல் – எனக் கற்பனை என்ற சொல்லை இல்லாததைக் கட்டிச் சொல்லுதல் (புனைந்துரைத்தல்) என்னும் பொருளில் ஆண்டுள்ளார்.



அன்று முதல் இன்றுவரை நிலவின் கொள்ளையழகில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்துப் பாடாத கவிஞர்கள் இல்லை எனலாம். குமரகுருபரரும் நிலவை, திங்கள், பிறை, நிலவு, மதி, அம்புலி, வெண்சுடர்க் கடவுள் என்ற சொற்களால் பலவிடங்களில் குறிப்பிடுகின்றார். நிலவு பற்றிய கற்பனை இவர் பிரபந்தங்களில் சுமார் நாற்பத்தேழு இடங்களில் இடம்பெறுகின்றது.

**முழுநிலவு பற்றிய கற்பனை :**

குமரகுருபரர் விண்ணையும் மண்ணையும் மிக அருகருகே கற்பனையில் காண்கின்றார். திருவாரூரில் மாடத்தில் கட்டிய கொடிகள் வானுலகம் சென்று நிலவின் வயிற்றை உடைக்க, தன் வயிற்றைக் கீண்டு வருத்திய கொடிகளின் கொடுமையை உளங் கொள்ளாது அமுதம் பொழிந்து அக்கொடிகளின் வெப்பத்தை ஆற்றிய மதியின் செயல் அறிஞர் செயலைப் புலப்படுத்தியது என்கிறார் இன்னா செய்தார்க்கும் இனியவே செய்கின்ற சால்பினை எடுத்துரைக்கின்றார்.

*"வானிலா அமுதம் வழங்கிய கொடிகள்*
*வேனியற் பயின்ற வெப்பம தாற்றுபு*
*கொடிய ரெத்துணைக் கொடுமை செய்யினும்*
*மதியார் செய்திடும் உதவியை உணர்த்தும்"*

(சிதம்பர செய்யுட் கோவை: பாடல் – 59)

என, கற்பனையில் நீதியைக் கற்பிக்கும் நயம் பாராட்டத் தக்கது.

**வெண்ணிலா கூற்றுவன்:**

மற்றவர்களுக்கு அமுதக் கலசமாய்க் காட்சிதரும் நிலா, நேற்றுவரை குளிர்ந்த ஒளி நல்கிய வெண்ணிலா இன்று காதல் நோயால் வாடும் தலைவிக்குக் கூற்றுவனாகக் காட்சி தருகின்றது. கூற்றுவன் என்றால், அவனுக்கு வாகனமும் கையிலுள்ள பாசக் கயிறும் வேண்டுமே; புலவரின் கற்பனை விரிகிறது. இருளாகிய எருமையை ஊர்ந்து மதியாகிய இயமன் நிலவாகிய பாசக்கயிற்றை வீசுகின்றான் எனக் கற்பிக்கின்றார்.

*"கருகு கங்குற் கரும்பக டூர்ந்துவெண்*
*கலைமதிக் கொலைக் கூற்றம் கவர்ந்துயில்,*
*பருகு தற்குக் கரத்தால் விரிநிலாப்*
*பாசம்வீசி வளைத்ததிங் கென்செய்வேன்"*

(காசிக் கலம்பகம்: பாடல் – 77)

எனக் கூறும் கற்பனை, உருவகமாய் அணி செய்கிறது.

**புண்ணுக்குக் காரச் சீலைவைத்தல்:**

மன்மதன் கணை (அம்பு) தனபாரத்தில் உண்டாக்கிய புண்ணை ஆற்ற நிலவொளியாகிய காரச்சீலையை வைத்தாய். புண்ணுக்குக் காரச்சீலை வைத்தால் ஆறிவிடும். ஆனால் நீர் காரம் வைத்தும் பசும்புண் பசும்புண்ணாகவே உள்ளது எனத் தலைவி ஈசனை நோக்கிக் கூறுவதாக,

*"ஈரம் வைத்த இளமதி வெண்ணிலா*
*காரம் வைத்தென் கடம்பவ னேசனே"*

(மதுரைக் கலம்பகம்: பாடல் – 42)

எனக் கற்பிக்கின்றார்.

**நிலவின் களங்கத்திற்குக் காரணம்:**

அம்பு எய்வோர் முதலில் பிற இடங்களில் எய்திப் பழகுதல் வழக்கம். இதனை அறிந்த கவிஞர், நிலவின் களங்கத்திற்கு அழகான காரணத்தைக் கற்பிக்கின்றார். காமவேள் இப்பெண்மானை (தலைவி) மலரம்பால் எய்து ஆவியை அழிப்பதற்கு முன்னால் நிலவிலுள்ள கலைமானை இலக்காகக் கொண்டு அதன் முகத்தில் (நிலவு) அம்பை எய்திப் பலநாள் பழகினான். அப்போது, அதன் முகத்திலேற்பட்ட புண்கள்தாம் இப்போதும் களங்கம்போல் விளங்குகின்றது எனத் தற்குறிப்பேற்ற அணி அமைத்து,

*........."மாரன்*
*சிலைமுகக் கணைக்கெம் ஆவி செகுத்துண*
*வருத்தத் திங்கட்*
*கலைமுகம் போழ்ந்த காயங்களங்கமாய் விளங்கு*
*மாறே'*

(காசிக் கலம்பகம்: பாடல் – 42)

எனக் கற்பிக்கும் திறம் வியப்பைத் தருகிறது.

**வெண்ணிலா தேனிறால்: (தேனடை)**

கள்ளைக் குடித்த மகளிர் மயக்கத்தால் திங்களைத் தேனிறாலென்று (தேனடை என்று) கருதி அதனை விரும்புகின்றனர். கண்ணின் கடைவிழியைக் காதலியர் காட்டிவிட்டால் மண்ணில் குமரர்க்கு மாமலையும் சிறுகடுகல்லவா? உடனே, ஆடவர் அச்சந்திரனைத் தாவிப் பிடித்துப் பிழியத் தொடங்குகின்றனர். இதனை அறிந்த நிலவு, பெண்களின் முகத்துக்கு ஒப்பென்று (கவிஞர்கள்) கருதியதால் தனக்கேற்பட்ட தண்டனை போலும் எனக் கருதியது, 'நான் மகளிர் முகத்திற்கு ஒப்பென்று சொல்லவில்லையே' என்று சொல்லி விடுபட்டுச் சென்று மகிழ்ந்ததாம், என்ற கற்பனை வெறுங் கற்பனை ஆயினும்

# உனக்குள் இருக்குது உலகம்!



இதயகீதம் இராமானுஜம்

உனக்குள் இருக்குது உலகம் - இதை
உணர்ந்தால் வரும் வெற்றித் திலகம்
கணக்கை மறந்து நீ உழைத்தால்
காலம் வணக்கம் வந்து தினம் போடும்!

வியர்வை நதியிலே குளிக்கக் கற்றால்
விதி கூட நம்மிடையே ஒதுங்கிப் போகும்
விடுதலையின் பெருமையினை தேசம் கற்றால்
வீறு கொண்டு நம்பிக்கை தீபம் ஒளிரும்!

ஆன்மிகமும் அறிவியலும் கைகோத்து
ஆக்கத்தின் வழியினைக் காட்டும்போது
ஊக்கத்தை உள்வாங்கிப் பதிவு செய்தால்
உலகம் உன்பெயரைத் தனக்குள்ளே வரவு வைக்கும்!

ராமன் அவன் கண்களிலே கவிதை நூறு கண்டாள்
கண்கொண்டு பார்த்த அவள் நெஞ்சம் அதைத் தந்தாள்
கன் இமைக்கவில்லை அவள் மண் உலகை மறந்தாள்
ஏன் அவனைப் போலொருவன் இல்லை என வியந்தாள்
தெய்வமகன் நீ என்று கைவணங்கித் துதித்தாள்
வையகமே மலர்ந்ததென்று வாழ்த்துரைத்துப் புகழ்ந்தாள்.
பேரழகைக் கண்ட அவள் வாயடைத்து நின்றாள்
பெண்ணனவே பிறந்துவந்த பேறு என நினைத்தாள்
தன் உயிரைத் தந்தமகள் தனியாகத் தவித்தாள்
பாதிஉயிர் போனதென்றுப் பரிதவித்துப் பதைத்தாள்
கார்வண்ணன் கட்டழகைக் கண்ணாலே பருகினாள்
எழில்மன்னன் நினைவினிலே பெண்ணிலவு உருகினாள்
பொங்கிவரும் பூம்புனலோ நடை என்று ஏங்கினாள்
தலைவன் அவன் எழில் உருவை நெஞ்சமதில் தாங்கினாள்.

## சீதை கண்ட ராமன்



ரத்னாமாலா

வியப்பை ஏற்படுத்தி 'மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின் பலர் காணத் தோன்றல் மதி' என்ற (குறள் 1119) குறளோடு ஒப்பிட்டுச் சிந்திக்கச் செய்கிறது.

**பிறைநிலவு பற்றிய கற்பனை:**

முழுநிலவில் முகிழ்த்த கற்பனை போன்றே பிறைநிலவில் அரும்பிய கற்பனையும் நெஞ்சைப் பிணிக்கிறது.

**முழுநிலவு குறைநிலவானதற்குக் காரணம்: (நிலவுக்குச் சயரோகம் வந்துவிட்டது)**

மாடத்திலுள்ள கொடிகள் நிலவில் பட்டுத் தேய்க்கின்ற காரணத்தால் முழுநிலவு குறைமதியாயிற்று எனக் கூறும் கவிஞர், வேறொரு காரணத்தையும் கற்பிக்கிறார். முழுநிலவு நாளுக்குநாள் தேய்ந்து உடல் கூனி ஒளிகுன்றிப் போவது ஏன்? என்ற வினா கவிஞரின் உள்ளத்தில் எழுகிறது. உலகில் சயரோகம் கண்டவர்கள் நாளுக்குநாள் உடல் மெலிந்து பொலிவிழந்து வலிவிழந்து போவதைக கண்ட கவிஞருக்குக் காரணம் விளங்குகிறது. நிலவுக்குச் சயரோகம் கண்டுவிட்டது. அதனால்தான் நிலவு நாளுக்குநாள் குறைகிறது என்று, கூறுகிறார். "கயரோகமுடன் கறையுந் துடைத்திடக் கருதிடுதியேல்" (முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் அம்புலிப் பருவம் பா.5) முத்துக்குமரனைச் சரணடைக எனக் கூறும் கற்பனை புதுமையாய் இனிக்கிறது.

இறைவனை உணரவும் உணர்த்தவும் கற்பனையைப் பயன்படுத்திய குமரகுருபரர் வாழ்ந்த காலம் – புராணங்கள் பழமரபுக் கதைகள் என்னும் நிலையில் கற்பனை ஆட்சிமிக்குப் பெருகிய காலமாகும். கற்பனையானாலும் அது பொருள்களின் இயல்பைச் சார்ந்து அமைதல் வேண்டும் என்ற முற்கால நிலை மாறி பொருள்களின் இயல்பைச் சாராத மிகைக் கற்பனைகள் போற்றப் பெறும்நிலை இக்கால கட்டத்தில் நிலவியதை உணர முடிகிறது.

தமிழிலக்கிய வரலாற்றில் கம்பனுக்கு அடுத்து கற்பனைக் களஞ்சியமாய்த் திகழ்கிறார் குமரகுருபர். ●

# கர்னாடக இசையுலகில் ஒரு மகாராஜா



ரியக்குடி, செம்மங்குடி, முசிறி, முடிகொண்டான், சித்தூர், திருவீழிமிழலை, திருவாவடுதுறை என அவர்களது ஊரின் பெயராலேயே குறிப்பிடப் பட்டு புகழ் வாய்ந்து வந்த வித்வான்கள் அநேகர். அந்த வகையில் வந்தவர் மகாராஜபுரம் விசுவநாத ஐயர்.

அவர் மகன் சந்தானம் மகாராஜபுரத்தில் 'ராஜா' மட்டுமல்லர்; 'மகாராஜா' என்றும் இருப்பது போல், கர்னாடக இசையுலகில் ஓர் உன்னத ஸ்தானம் வகித்து, மகாராஜா வாகவே வாழ்ந்தவர். தம் சுய முயற்சியாலும், அயராத உழைப்பினாலும், பல சிறப்புகளையும் பெற்று, தனக்கென்று ஒரு ரசிகர்கள் கூட்டத்தை உருவாக்கிக் கொண்டு, கிடுகிடுவென்று புகழ் பெற்று, அரை நூற்றாண்டுக்கு மேலாக ஒரு பெரிய கர்னாடக இசைப்பாடகராக விளங்கியவர்.

இந்தியாவில் மட்டுமின்றி வெளிநாடுகளில் எங்கு சென்றாலும் நூற்றுக்கணக்கான ரசிகர்களை ஆகர் ஷித்துக் கொண்டு தமது 'விசிறி'களாக்கிக் கொண்டவர். இந்தியாவோ, மற்ற நாடுகளோ எந்தப் பகுதியாக இருந்தாலும் சரி, சந்தானத்தின் இசைக் கச்சேரிகளில், ரசிகர்கள் அலைமோதும் அளவுக்கு இசை ஞானம் பெற்றிருந்தார். அவரது புகழ் உச்சகட்டத்தை அடைந்தது. ஆனால் அவர் 1992இல் ஒரு கொடூரமான விபத்துக் குள்ளாகி திடீரென்று நம்மைவிட்டுப் பிரிந்தார்.

அவரது தந்தை விசுவநாத ஐயர் மியூசிக் அகாடமி (சங்கீத வித்வத் சபை) இசை மாநாட்டுக்குத் தலைமை வகித்து 'சங்கீத கலாநிதி' விருது பெற்றார். மகன் சந்தானம் 1989இல் 'சங்கீத கலாநிதி' விருது பெற்றார். ஒரே குடும்பத்தில் தந்தையும் மகனும் இந்த விருது பெற்ற பெருமை இந்தக் குடும்பத்துக்குத்தான் உண்டு.

கோயில் கச்சேரி, சபாக்கச்சேரி, கல்யாணக் கச்சேரி எதுவாக இருந்தாலும் சரி, சில ரசிகர்கள் (குறிப்பாக தனி ஆவர்த்தன சமயத்தில்) எழுந்து வெளியில் செல்வது போல் இல்லாமல், மங்களம் பாடி முடிக்கும் வரை எல்லாரும் இருக்கும்படியாக, கச்சேரியை ஜனரஞ்சகமாக நிகழ்த்தும் வல்லமை பெற்றவர் சந்தானம். ரசிகர்களை சுலபமாக ஆகர்ஷிக்கும் ஒருவித அலாதி 'சக்தி' அவரிடம் இருந்து வந்தது.

"சங்கீதபூபதி" பட்டம் பெற்ற ஒரே பாடகர் இவரது தந்தை மகாராஜபுரம் விசுவநாத ஐயர். இவரைப் போலவே குமாரன் சந்தானமும், கர்நாடக இசை வளர்ச்சிக்கு எவ்வளவோ பணிகளை ஆற்றியதுடன் தனக்கென்று ஒரு



நிரந்தரமான இடத்தைப் பிடித்து வைத்துக்கொண்டு பாடுவதில் அவருக்கு நிகர் அவரே என்ற அளவுக்கு இசை ஞானம் பெற்றிருந்தவர்.

தஞ்சாவூர் மாவட்டம், சிறுநாங்கூர் கிராமத்தில் 1928ஆம் ஆண்டு பிறந்து, கும்பகோணத்தில் பெற்றோ ருடன் வளர்ந்து வந்தார். சந்தானத்தின் குடும்பமே ஓர் இசைக் குடும்பமாகும். சத்குரு தியாகராஜ சுவாமிகளின் நேர்முக சிஷ்ய பரம்பரையின் ஆறாவது தலைமுறையைச் சேர்ந்தவர் சந்தானம். இளவயதிலேயே மெலட்டூர் சாமா தீட்சிதரிடமும் பிறகு தனது தந்தையிடமும் முறையாக இசை பயின்றதோடன்றி அவரது கச்சேரிகளிலும் சேர்ந்து பாடி வந்தார். விசுவநாத ஐயரிடம் தான் செம்மங்குடி சீனிவாச ஐயர் இசை பயின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

கும்பகோணம் டவுன் உயர்நிலைப்பள்ளியில் 1945இல் படிப்பை முடித்தார். 1948இல் பாடகர் டி.வி.சங்கர நாராயணனின் தந்தை டி.எஸ்.வேம்பு ஐயரின் திருமணத்தில் சந்தானம் கச்சேரி நிகழ்த்தினார்.

சந்தானம் 1948இல் தனது தந்தையுடன் கல்கத்தாவுக்குச் சென்றிருந்தார். சவுத் இந்தியன் மியூசிக் கிளப்பில் தந்தையின் கச்சேரி. "சந்தானம்! நீ பாடுறியாடா?" என்று கேட்டார். உடனே 'பாடறேன்'

என்.வி.ஆர். ஸ்வாமி

என்றார். அன்றைக்கு அப்பாவுக்கு வாசித்த அதே பக்கவாத்தியக்காரர்கள் – கோவிந்தசாமி நாயக்கர் வயலின்; ராமநாதபுரம் ஈஸ்வரன் – மிருதங்கம். மறுநாள் அதே மேடையில் நடந்த அந்தக் கச்சேரி தான் சந்தானத்தின் அரங்கேற்றமாகும். கச்சேரி முழு வெற்றி.

முதன் முதலில் சென்னை சங்கீத வித்வத் சபையில் (மியூசிக் அகாடமி) பாடும் வாய்ப்பு 1948இல் கிட்டியது. அந்த ஆண்டு இசை மகாநாட்டில் தந்தையுடன் சேர்ந்து பாடவே, அவரது இசைப்புலமை மேலும் பிரபலமாக வெளிப்படலாயிற்று. இந்தக் கச்சேரியில் பக்க வாத்தியங்கள் – லால்குடி ஜெயராமன் வயலின், வேலூர் இராமபத்திரன் மிருதங்கம். 1952இல் திருவையாறு தியாகராஜர் ஆராதனை விழாவில் கலந்து கொண்டு பாடும் வாய்ப்பு கிட்டியது. இவற்றைத் தொடர்ந்து நூற்றுக்கணக்கான கச்சேரிகள் அவரைத் தேடி வரவே, இசையுலகில் ஒரு பிரபல வித்வானாகப் பிரகாசிக்கத் தொடங்கினார்.

இலங்கையில் தன் தந்தையுடன் பின்பாட்டு பாடிக் கொண்டிருந்த சந்தானம் அவருடன் யாழ்ப்பாணத்திற்குச் சென்ற போது, தனிப்பட்டு நிற்பதற்கான முதல் வாய்ப்பைப் பெற்றார். பொன்னம்பலம் இராமநாதன் இசைக் கல்லூரியில் 1960 முதல் ஐந்தாண்டுகள் கல்லூரியில் துறைத் தலைவராகப் பணியாற்றினார். அந்தச் சமயத்தில் இலங்கையிலுள்ள பல இடங்களில் கச்சேரிகள் நிகழ்த்தவே அவரது புகழ் மேலும் அதிகமாயிற்று.

பாடல்களையெல்லாம் பக்தி நயத்தோடு அவர் பாடி வந்ததால், ரசிகர்கள் ஈடுபாட்டுடன் கேட்டு வந்தார்கள். இராக ஆலாபனையை விஸ்தாரமாக மட்டுமின்றி, விமரிசையாகவும் பாடக் கூடியவர்; ஸ்வரங்கள் பாடுவதில் கைதேர்ந்தவர்.

திருப்பதி தேவஸ்தானம் காஞ்சி காமகோடி பீடம் அமெரிக்காவிலுள்ள பிட்ஸ்பர்க், வெங்கடேஸ்வரர் கோயில் ஆகியவற்றின் ஆஸ்தான வித்துவானாக இருந்தார். இவர் பெற்றுள்ள எண்ணற்ற விருதுகளில் சில: சங்கீத நாடக அகாடமி விருது, பத்மஸ்ரீ விருது, கலைமாமணி ரிஷிகேஷ் யோக வேதாந்த பல்கலைக்கழகத்தின் 'சங்கீத சுதாகரா' சிருங்கேரி மடத்தின் 'கானகலாநிதி' காஞ்சி மடத்தின் சங்கீத சாகர அம்ருதவர்ஷி. இசைப் பேரறிஞர் (தமிழ் இசைச்சங்கம்) சங்கீத கலாநிதி (சென்னை சங்கீத வித்வத் சபை) ஆகியன.

தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றத்தின் பொதுக்குழு, செயற்குழு உறுப்பினராகவும், சங்கீத வித்வத் சபையின் ஆலோசகர் குழு (Experts' Committee) அங்கத்தினராகவும் இருந்தவர் சந்தானம்.

இந்தியா முழுவதும் மட்டுமின்றி அமெரிக்கா, சுவிட்சர்லாந்து, கனடா, இங்கிலாந்து, ஜெர்மனி, ஃபிரான்ஸ், மலேசியா உள்பட பல வெளிநாடுகளுக்குச் சென்று கச்சேரிகள் நிகழ்த்தி ரசிகர்களின் பேராதரவைப் பெற்றவர்.

சந்தானம் தனது தந்தையின் பெயரில் 1986இல் ஓர் அறக்கட்டளை உருவாக்கி சங்கீத உலகிற்குத் தொண்டாற்றி வந்தது குறிப்பிடத்தக்கது. வயது முதிர்ந்த கலைஞர்களைக் கௌரவிப்பதோடு, இளம் கலைஞர்களையும் உதவித் தொகையை நாடும் வித்தியார்த்திகளையும் ஊக்குவித்து அவர்களுக்கும் உதவும் வண்ணம் திட்டமிட்டு அந்த அறக்கட்டளையை நடத்தி வந்தார். அந்த அறக்கட்டளையின் பணிகள் மேலும் விரிவாக்கப்பட்டு நல்ல நோக்கங்களுடன் அவரது குமாரர்களால் நடத்தப்பட்டு வருவது பாராட்டப்பட வேண்டியதாகும்.

மகாராஜபுரம் சந்தானத்தின் இசைப்புலமை பற்றி, அவரைச் சிறு வயது முதல் அறிந்தவரும், இசை விமரிசகரும் சென்னை சங்கீத வித்வத் சபையின் முன்னாள் செயலருமான திரு.டி.எஸ். பார்த்தசாரதி அவர்களிடம் கேட்ட பொழுது அவர் கூறியது:

"மகாராஜபுரம் சந்தானத்தின் தந்தை விசுவநாத ஐயர் மனோதர்மம் எனப்படும் இசைக்கற்பனைச் செறிவிற்காகப் புகழ் பெற்றவர். ஓர் இராகத்தை ஒரு கச்சேரியில் பாடியது போல் மற்றொரு கச்சேரியில் பாடாமல், விதவிதமான புதிய கற்பனைகளுடன் ஆலாபனை செய்து வந்த அமரர் அவர். அவருடன் பல ஆண்டுகள் தம்புராவை மீட்டிக் கொண்டு உடன் பாடி வந்த சந்தானம் அவர்கள் தந்தையாரின் பாணியின் ரகசியத்தை முற்றிலும் அறிந்து கொண்டார். சுருதி சுத்தம், குழைவு, முகபாவம் முதலியவற்றை சாரீரத்தில் பேசுமாறு செய்யும் உத்தியை அப்படியே கையாண்டு, அதன் அடிப்படையில் தமக்கே உரிய ஒரு பாணியை வகுத்துக் கொண்டார். பிசிறின்றி ஒலிக்கும் அவருடைய துல்லியமான குரல் பல்லாயிரக்கணக்கான ரசிகர்களின் உள்ளத்தைக் கவர்ந்தது. அவருடைய பாணி, இசைஞானம் படைத்த பண்டிதர்களையும், சாதாரண ரசிகர்களையும், இளம் தலைமுறையினரையும் ஒருங்கே கவரத் தக்கதாக அமைந்திருந்தது. இந்த நூற்றாண்டில் அவருடைய இசையைக் கேட்க ரசிகர்கள் பல்லாயிரக்கணக்கில் திரண்டு வந்தது போல் வேறு யாருடைய கச்சேரியிலும் நான் கண்டதில்லை என்று என் சொந்த அனுபவத்திலிருந்து நான் கூறமுடியும்'.

சந்தானத்தின் வாழ்நாளிலேயே பல ஊர்களில் கச்சேரிகள் நிகழ்த்தி, பேரும் புகழும் பெற்று தனது குரு சந்தானத்தையும் பெருமையடையச் செய்தவர் அவரது சிஷ்யர் டாக்டர் ஆர்.கணேஷ்.

# வேதப் புதையல்



**2800** ஆண்டுகளாக — வேதங்கள் ஓதுவதை, பரப்புவதைத் தவிர வேறெந்தத் தொழிலும் அறியாத ஓர் அதிசயப் பரம்பரை ஒரு குக்கிராமத்தில் இன்றும் வசிக்கிறது.

அந்தக் குக்கிராமம் காஞ்சியிலிருந்து பதின்மூன்றாவது கிலோ மீட்டரில் உள்ள வட இலுப்பை.

அப்போது பெரிய குடிசையாயிருந்து, பிற்காலத்தில் நாட்டு ஓடு வேயப்பட்டு, இந்த நூற்றாண்டிலும் நாட்டு ஓடு போர்த்திக் கொண்டிருக்கும் வீடு, ஒரு பாகத்தில் குடும்பத்தையும், இன்னொரு பாகத்தில் கிடைத்தற்கரிய ஓலைச் சுவடிகளையும், மிகப்பழைய வேத, புராண, ஐதீக, சோதிட நூல்களையும் கொண்டு க்ளூவைவிட சற்றே பெரியதாய்க் குனிந்து செல்லும் பாணியில் உள்ளது.

இவ்வூரில் வெகு அபூர்வமாய் ஓரிரு மாடி வீடுகள். மற்றவை நாட்டு ஓட்டு வீடுகள், குடிசை வீடுகள், புழுதி பறக்கும் தெருக்களில் மக்கள் வேளாண்மையை விரும்பி ஏற்றிருக்கும் சுவடுகள் தெரிகின்றன.

2800 ஆண்டுகளுக்கு முன் இப்பரம்பரையின் முதல் மாமனிதர் — சேஷ சூரி மகாயாக்கிக சம்ராட் தீட்சித். பிரக்யாதி பெற்ற மேதை. திவான்.

இப்போதிருக்கும் மாமேதை —

காண்வ ஸ்ரீ ஜானகிராம தீட்சிதரின் மகனான பிரம்ம ஸ்ரீ இ. ஜே. குமாரஸ்வாமி தீட்சிதர். வேத விற்பன்னர். முனைவர்.

இந்தியப் பல்கலைக் கழகங்கள் அனைத்திலும் பட்டங்கள் பெற்ற இவர், கலிபோர்னியா, காமன்வெல்த், வாஷிங்டன், போலந்து, ஜெர்மனி போன்ற பல நாடுகளில் இயங்கும் பல்கலைக் கழகங்களிலிருந்தும் வேதரத்னம், வேதநிதி, வேத சுதாமணி, வேத வித்யாசார்யா, பாரதி பாரதா, பண்டித வார்யா போன்ற சுமார் 70க்கும் மேற்பட்ட பட்டங் களைப் பெற்றிருக்கிறார். அநேக மடங்களில் ஆஸ்தானப் பண்டித ரான இவர், வடமொழிக்குப் புது விளக்கம் தருகிறார்.

“வடம் என்றால் ஆலமரம். கொளுத்தும் வெயில் காலங்களில் ஆலமரத்தடியில் தங்கினால் குளிர்ச்சியாய் இருக்கும். நடுங்கும் குளிர் காலத்தில் தங்கினால் வெது வெதுப்பாயுமிருக்கும்...

“அது போன்றது வடமொழி; அதாவது சம்ஸ்கிருதம்....

“இப்போதும் ஜெர்மனியில் சம்ஸ்கிருதம் தேசிய மொழிகளில் ஒன்றாக இரண்டாம் இடத்தைப் பெற்றிருக்கிறது...”

இவ்வீட்டுத் திண்ணை அறையில்—

வேதாத்ரி மகரிஷி 21 நாள்கள் தங்கியிருந்து ‘ஏகாதச ருத்ர யந்த்ரம்’ எனும் சிவன் பற்றிய நூலை யாத்தார்.

*கருப்பையில் பிறவாதிருக்க*
*இலுப்பையூரை நினை மனதே*
*இலுப்பையூரானை நினை மனதே’*

என்று பாடிய இராமலிங்க அடிகளார் ‘பிரம்ம இரகசியம்’ அறிய இவ் வீட்டில் மூன்று நாள்கள் தங்கி யிருந்தார்.

ஸ்ரீயோகீஸ்வர யாக்ஞவல்கிய வித்யாஸதனம் காண்வ ஸ்ரீஜானகிராம், வேதக் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் நடத்தும் பிரம்ம ஸ்ரீ இ.ஜே. குமாரஸ்வாமி தீட்சிதர் ‘அருமறை நிறைந்த ஆறுகாடுகள்’ (ஷடாரண்ய மகாத்மியம்) ‘வங்கம் தந்த தங்கமனிதன்’, ஆத்திசூடி அமர்ந்த தேவனும் ஔவைப் பிராட்டியும், 800 ஆண்டுகளுக்கான ஜாதகக் கணிப்பு, நவக்கிரக ஆராய்ச்சி, வடமொழி இலக்கணம் போன்ற பல நூல்களைப் படைத்துள்ளார்.

தர்க்க சாஸ்திர ஆராய்ச்சியாளர். 7000 சோதிட நூல்களைப் படித்தவர். இந்திய சோதிடச் சங்கத் தலைவர்.

தென்னிந்தியாவிலேயே முதன் முதலில் —

சம்ஸ்கிருதம், வேதிக், இந்து கல்சர் போன்றவற்றிற்காகக் ‘குடியரசுத் தலைவர் விருது’ பெற்ற ஒரே ஒருவரான இவருக்கு நான்கு பிள்ளைகள்; ஐந்து பெண்கள்.

வேத நிதியான காண்வ சிந்தாமணி பிரம்மஸ்ரீ இ.ஜே. குமாரஸ்வாமி தீட்சிதர் ஒரு வேதப் புதையல்.

***நாராயணி***

